பாண்டுரங்க பரப்பிரமணே நமஹ:

# ஸ்ரீபக்தலீலாமிர்தம்.

இஃது

தஞ்சைமாநகரம்

ஸ்ரீ பகவத் பக்த சிரோமணியாகிய

ரா-ஸ்ரீ இராஜாராம் கோவிந்தராவ்
சூரியவம்சியவர்களால்
இயற்றியது.

திரிசுரபுரம்
தமிழ் தலைமைப்புலவராகிய மகாவித்துவான்

மகா-ரா-ஸ்ரீ தி. வி. கோவிந்தபிள்ளை
யவர்களால் பார்வையிடப்பட்டு

தஞ்சைமாநகர் தமிழ்தலைமைப்புலவராகிய
மகா-ரா-ஸ்ரீ மதுரைமுத்துபாத்தியாயர்
அவர்களால் ஒருவாறு பார்வையிடப்பட்டு

ஷை இரந்தகர்த்தாவின் சகோதரராகிய
ரா-ஸ்ரீ மாதுசாமிசூரியவம்சியவர்களது

தஞ்சை "திவாகர முத்திராட்சரசாலையில்"
பதிப்பிக்கப்பட்டது.

1888.

# முகவுரை.

மணிகளைக்கொழிக்கும் அலைகளையுடைய கடல்சூழ்ந்த பூதலத்தின்கண் பலவளங்களையும் பெருக்கவேண்டுமென்று கருதிமலையமா முனிவரன் கரமண்டலத்தில் மகிழ்வுடனமர்ந்து சையபருவதத்துத் தங்கியபோது தந்திமுகத்தோன் காகவடிவாகவந்து கவிழ்ப்பக்குதித்து அம்மலையிலுள்ள மணிகள் பொன்மணல் அகில் குங்குமம் சந்தனம் பாடலங்கொன்றை சுரை புன்னை யானைக்கொம்பு முதலிய பொருள்களையெல்லாம் வரன்றிக்கொண்டு குறவர்தங் குடியெலாங் குலைதரப்புகுந்து மயிற்றோகையாதி யவாரியக்குறிஞ்சி நிலத்தினைக்கடந்து பாலையிற்பரவி வேடர்தங் குலத்தோர் வில்லம்பு முதலாய்க் கைக்கொண்டு அந்நிலவெப்பத்தையகற்றி முல்லைநிலத்தில் முநீர்க்காய்ச் சென்று ஆயர்பாடி புக்கு கண்ணனைப்போல் ஆய்ச்சியர் ஆடைகளையும் வெண்ணெய்பால் தயிர்நெய்யையும் அடுக்கலோடபகரித்துக்கொண்டு மருதொடு குருந்து முதலிய மரமெலாம் பெயர்த்துக்கொண்டு நுரையொடும் இருகரைமோதி பொழுக்காற்பரித்து மருதவைப்படைந்து இருபாலுமுள்ள அநேகம் கால்வாய் வழி யொழுகி கடையர்தம்மனைக் கதவினின்முட்டி ஏரிகுளந் தடாக மோடை யெல்லாம் நிரப்பி வயல்தொறுமுலாவிவாழை பலா மா தெங்கு கமுகு கன்னல் முதலிய சோலையிற்சென்று தாய்முலைப்பால்கொடு சிசுக்களை வளர்க்குமாறுபோல் வளர்த்துப் பலனுறச்செய்தும் தன்னிடைமூழ்கினோர் சனனாந்தரங்களிற் செய்தபாவங்களனைத்தும் பரிதியைக்கண்ட பனிபோற்பறக்கச்செய்தும் ஈன்றதாய்போலின்பமொடு வளர்த்து தெய்வீகத் தன்மையிற் சிறந்த காவிரிநதி பாய்ந்தசோழ நன்னாட்டை ஆழமுமகலமுமுடைய அகழியினாலும் உயர்ச்சியுந்திண்மையுமுடைய இடமகன்ற மதிலினாலும் சூழப்பட்டு உயர்நிலையுள்ள நான்கு கோபுரமாகவிளங்கும் வாயில்களையுடைத்தாய் பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரர்களென்னும் நான்கு வர்ணத்தாருடைய அநேகம் மேனிலை மாடமாளிகைகள் நிரம்பிய வீதிகளும் பெரிய ராஜவீதியும் சமுத்திர கோஷம்போலொலிக்கின்ற அநேகம் கடைவீதிகளும் வேத பாடசாலை சாஸ்திர பாடசாலை தமிழ்ப்பாடசாலை தெலுங்கு பாடசாலை சங்கீத வித்தியாபாடசாலை நாடகசாலை சிலம்பசாலை அன்னசாலை இவைகள் ஒவ்வொரு வீதிகளிலும் பலவாகவும் ஒவ்வொரு வீதிகளிலும் பலவாக வதர் மடங்கள் சைவர் மடங்கள் பல புராணங்கள் பிரசங்கஞ் செய்யும் தானங்களும் தெருக்கள்தோறும் அன்னசத்திரங்களும் ஞானவான்கள் ஞானசாஸ்திர விசாரஞ் செய்யும் ஸ்தானங்களும் ஸ்ரீவேங்கடேசப்பெருமாள் ஸ்ரீலெட்சுமிநரசிங்கப்பெருமாள் ஆலயமுதல் அநேகம் விஷ்ணுவாலயங்களும் ஸ்ரீபிரகதீசர் கொங்கணேசர் ஆலயமுதல் அநேகம் சிவாலயங்களும் இவைகளுக்கு மத்தியில் இராஜாவின் அரண்மனையைச்சூழ்ந்த பரிசைகளோடுங்கூடிய உயர்ந்த மதிலும் எழுநிலை மாடமும் அநேக மாடிகளும் கூடகோபுரங்களும் ஆடரங்கும் செய்குன்றும் பந்தடிமேடைகளும் சிங்காரவனங்களும் செந்தாமரைத்தடாகங்களும் கொலுமண்டபம் சபாமண்டபம் முதல் அநந்த மண்டபங்களும், பொக்கிஷசாலை ஆயுதசாலை அஸ்வசாலை கஜசாலை ரதசாலை யாகசாலை வைத்தியசாலை முதலிய பல சாலைகளும், பலபண்டம் தானியாதிகள் நிறைந்திருக்கும் களஞ்சியங்களும் பசுக்கூட்டங்களுடைய தொழுவங்களும் பாளையங்

ளிருக்கும் பாசறைகளும் மற்றும் அநேக விச்சித்திர விநோதக்காட்சிகளும் சி வகங்கையாகிய உத்தம தீர்த்தமும் கோட்டைவெளியாகிய விஸ்தாரமான புற நகரில் மணிமுத்தா நதியையும் பராசர் க்ஷேத்திரத்தையும் கொண்டு கொடை முரசு படைமுரசு கலியாணமுரசு ஆகிய மும்முரசும் இரவு பகல் இடைவிடா து முழங்கும் படியாய் நித்திய மங்கள உற்சவத்துடன் அமராபதியினும் அள காபுரியினும் சிறந்ததென்னலகை யென்பதாய் பூமாதேவிக்கு வதனம்போலும் அவள் நெற்றித்திலதம்போலும் அவள் திருமங்கலியம் போலும் விளங்கும் தஞ் சைமாநகரத்தை மகாசாந்த சீலசௌமிய சாகர சத்துவகுணசம்பன்னரும் தீன தயாளரும் மன்னுயிர் யாவையும் தன்னுயிர்போற் காக்கின்ற ஜீவகாருண்ணியரும் ஸ்ரீமன். நாராயணனுடைய பாதபங்கயங்களில் தம்முடைய சித்தத்தை யீடு படுத்தினவரும் ஸ்ரீ ரெங்கநாயகருடைய பத்தியிற் சிறந்தவருமாகிய மன்னாரு நாயக்கர் அவர்கள் மனுநீதிமுறைப்படி செங்கோல் செலுத்திச்சிம்மாசனாதிபதி யாயரசாக்ஷிசெய்துகொண்டுவந்தார் இப்படிஇவரரசுசெலுத்திவருங்காலத்தில்) மாராட்டிரதேசமாகிய சாத்தாராவில் அரசாக்ஷி செலுத்திவந்த பூர்வ சிவாஜி ம கா ராஜாவின் கனிஷ்ட சகோதரராகிய ஏகோஜி மகா ராஜாரா மேஸ்வர யாத் தை செய்யப் பிரயாணப்பட்டு திரளான சேனைகளோடு வரும்போது ஷை சிவா ஜிமகாராஜாவின் பிரபலமான பங்குநாயக்கன் உத்தியோகம் பார்த்துவந்தசூரிய வமிசி மக்காஜி நாயக்கர் அவர்களும் யாத்திரைசெய்து வருவதாய்ப்பெரிய ரா ஜா வினிடத்தில் உத்திரவு பெற்றுக்கொண்டு தம்முடைய குடும்பசகிதமாக ஏ கோஜிராஜாஉடன்வந்தார் மார்க்கங்களிலுள்ளநாடுநகரங்கள் பலவற்றையுங்கட ந்து தஞ்சைமா நகரத்துக்கு வெளிநகராகிய விண்ணாற்றங் கரையருகில் வந்து பாளையத்துடன்முகாமிறங்கினார் தெங்கு கமுகு கன்னல் நெற்பயிர் வாழை பலா மா முதலியவை செழித்தோங்கி கற்பகச் சோலைசூழ்ந்த தேவநாட்டுக்கொப்பா யிருப்பவைகளையும் மாதளை கொய்யா நாரத்தை ரம்பா பந்தர் எலிமிச்சை முத லிய பழவகைகள் பழுத்திருப்பவைகளையும் மல்லிகை முல்லை யிருவாக்ஷி சண் பகம்மந்தாரை கொன்றை சுரை புன்னை முதலியவைகள் புட்பித்து மலர்ந்து திவ்வியவாசனை பரிமளிப்பதையும் குயில் கிளி நாகணவாய்ப்பட்சி வானம்பாடி முதலியபட்சிகள் பேசுகிற தொனியையும் விண்ணாற்றின் ஜலப்பிரவாகத்தை யும் ஏகோஜி மகாராஜாவின் கண்குளிரப் பார்த்து தேகம் ஆரோக்கியமடைந்து மனம்பரவசமாகி அவர் கொண்டிருந்த யாத்திரை யெண்ணத்தைமாற்றி இவ் வித நலங்களோடுங் கூடிய இத்தேசத்தை யாளவேண்டு மென்கிற பேரவாவை யுண்டாக்கி விட்டது அச்சமயம் இவர் விரும்பியபடி அனுபவிக்கும் பிரா லப்தம்இவருக்கிருந்தமையால் அரசாண்டுகொண்டிருந்த ஸ்ரீ ரெங்கநாயகருடை ய பாத பக்தி மறவாதவராகிய மகா ராஜா மன்னாரு நாயக்கரவர்கள் பரம பதம்அட்டையடைந்தார் ஏகோஜி மகாராஜாவுக்கு ஈஸ்வரகிருபை பூரணமாயி ருந்தபடியால் நாய்க்கரிருந்தரசு செலுத்திய சிம்மாசனத்தில் தாமெழுந்தருளி யிருந்து சோழதேசமுழுவதும் தம்முடைய செங்கோல் செலுத்தி அரசாண் டுவந்தார் அவர் கூடவந்த சூரியவமிசி மக்காஜிநாய்க்கர் அவர்கள் சாத்தாரா வில் சிவாஜி மகாராஜாவிடத்தில் இருந்ததுபோல ஏகோஜி மகாராஜாவிடத் திலும் அதிக கௌரதையாயும் செல்வாக்காயும் பிரீதியாயும் ராஜகாரியம் பார்த்துக்கொண்டுவந்தார். இவருக்கு புத்திரர்கள் சூரியவமிசிதேவாஜிநாய்க் கர் 1 சூரியவமிசி சில்லோஜிநாய்க்கர் 1 இந்த இருவர்களில் மூத்தவராகிய சூ ரியவமிசி தேவாஜிநாய்க்கருக்கு புத்திரர்கள் சூரியவமிசி மக்காஜிநாயக்கர் 1 சூரியவமிசி பீமாஜிநாயக்கர் 1 சூரியவமிசி பர்மாஜிநாயக்கர் 1 இந்த மூவர்க ளில் இரண்டாவது சூரியவமிசி பீமாஜிநாயக்கருக்குப் பிள்ளையில்லாமையால் இவருடைய மூத்தமகனாகிய சூரியவமிசி மக்காஜிநாயக்கர் இளையபாரியாளது

மூத்தகுமாரராகிய அப்பாராவ் சூரியவமிசியவர்களைத் தத்துபுத்திரனாகப் பெற்றுக்கொண்டார் இவருக்குப்புத்திரர்கள் அப்பண்ணராவ் சூரியவமிசி 1 பீமராவ்சூரியவமிசி 1 இந்த இருவர்களில் இளையவராகிய பீம்ராவ்சூரியவமிசிக்குப் பிள்ளையில்லாமையால் சகோதரன் எசுவந்தராவ் சூரியவமிசிக்குப் பேரனாகிய கோவிந்தராவ் சூரியவமிசியவர்களைத்தத்து புத்திரனாகப் பெற்றுக் கொண்டார்இவருக்கு ராஜாராம்சூரியவமிசியவர்கள் 1 கிருஷ்ணசாமி சூரியவமிசியவர்கள் 1 பீம்ராவ் சூரியவமிசியவர்கள் 1 மாதுசாமி சூரியவமிசியவர்கள் 1 இந்நால்வர்களில் மூத்தகுமாரராகிய ராஜாராம் சூரியவமிசியவர்களுக்குபபுத்திரர் அப்பண்ணராவ் சூரியவமிசி 1 இரண்டாவதாகிய கிருஷ்ணசாமி சூரியவமிசியவர்களுக்கு புத்திரர் கோவிந்தராவ் சூரியவமிசி 1 எசுவந்தராவ் சூரியவமிசி 1 மூன்றாவதாகிய பீம்ராவ் சூரியவமிசிக்கு ஆண்சந்ததியில்லை. நாலாவது மாதுசாமி சூரியவமிசியவர்களுக்கு ராமசந்திரராவ் சூரியவமிசி 1 லெட்சுமணராவ் சூரியவமிசி 1 ஷை கோவிந்தராவ் சூரியவமிசியவர்கள புத்திரர்கள் நால்வரில் மூத்தவராகிய ராஜாராம்சூரியவமிசியவர்கள் தஞ்சைமாநகரத்திலிருந்து கடைசியாக ராஜாங்கநடத்திய சிவாஜி மகாராஜாவிடத்தில் இவருடைய பிதாவாகிய கோவிந்தராவ்சூரியவமிசியவர்களும் பிரபல உத்தியோகத்திலிருந்தார் இவருமகாராஜா உசூரில் பிரபல உத்தியோகத்திலிருந்தார். அப்போதிவர் சிறுவயதாயிருந்தபோதிலும் வாழையடிவாழை யென்னும் வழக்குமொழிக்கிணங்கத் தம்முடைய வர்க்கத்து முன்னோர்கள் சித்த புருஷராளாயும் மகாயோகிகளாயும் ஞானிகளாயும் அஷ்டமாசித்திகளையுடையவர்களாயும் இருந்தவர்கள் சந்ததி வழியாகையினாலும் பிதாவாகிய கோவிந்தராவ் சூரியவம்சியவர்கள் சாந்தசீலரும் ஆத்ம விசாரஞானமுமுடையவராதலினாலும் இவரும் சத்துவகுணசம்பன்னராய் சாதுசங்கத்துடனும் பாகவதர்களுடனும் பழக்கமுடையவராயிருந்தார். ஸ்ரீலெட்சிமிநரசிம்ம மூர்த்தியினுடைய பக்தராய் சுவாமியோடு சாதாரணமாய் வார்த்தை பேசிக்கொண்டிருந்த ஸ்ரீரெங்கநாயகனே தஞ்சைநகர் வந்து அழைத்துக்கொண்டுபோன வருமாகிய பெத்ததாச சுவாமிகளுக்கு தங்கள் முன்னோர் தங்கள் கிரகத்தில் கட்டியிருந்த மடத்தை உன்னதமாயுயர்த்திக் கட்டி தினம் இரண்டுவேளை பூசையும் ஏகாதசிதோறும் பஜனையும் வருஷந்தோறும் பத்துநாளுற்சவமும் ஆயிரம்பேருக்குச் சமாராதனையுஞ் செய்து ஷை பெத்ததாசரவர்களிடத்தில் மிகுந்த சிரத்தாபக்தி விசுவாசமுடையவராய் நடந்துவந்தார். நாளாவிர்த்தியாய் பகவத்பக்தி விசேஷித்து வைணவசீலம் நிரம்பி தமிழ்வேதமாகிய திருவாய்மொழிப் பிரபந்தத் தார்ப்பரியங்களை முறைப்படிகேட்டு அவ்வனுஷ்டானராய் சதாஸ்ரீமன் நாராயணமந்திர செபதபமுடையவராயிருந்தார். இப்படியிருக்கும்போது ஒருநாள் இவர்சொப்பனத்தில் ஸ்ரீபண்டராபுரநாயகரான சர்வாந்தரியாமி சர்வபரிபூரணர் பக்தபரிபாலரான ஸ்ரீபாண்டுரெங்கன்துக்காராம் சுவாமிகளைப்போலே வந்து அப்பாராஜாராம் உன்னிடத்தில் ஒரு காரியார்த்தமாக வந்தேன் அது என்னவெனில் பக்தாள் சரித்திரமெல்லாம் பிராகிருதபாஷையிலிருக்கின்றது அது மாராட்டிரதேசத்துக்குரியது இது தமிழ்தேசமாகையால் தமிழில் அவைகளை மொழிபெயர்த்து பக்த புராணமாகச் செய்யத்தக்கவனீயேயாகையால் இதைச்சொல்லும் பொருட்டாகவே வந்தேன் நீ அவ்வண்ணஞ்செய்து இத்தமிழ்தேசத்திலுள்ள யாவருங் கேட்டு எம்பெருமானுடைய திருவடிக்காளாக்கி வையென்று சொல்லி மறைந்தருளினர். உடனேயிவர் விழித்துத் தேம்பிதேம்பி யழுதனர் உடனே சமீபத்திலிருந்த சகோதரர் [illegible]ராவ்சூரியவமிசியென்னென்று வினவத் தாங்கண்டசொப்பனத்தைத் தெரிவித்தார் அப்பால் தம்முடைய சாதகத்தைச் சோசியரைக்கொண்டு பார்த்தார் சோசியர்கள் கன்னியாலக்கின சாதகமாகையால் இப்போது செவ்வாய்திசை

இந்தச் செவ்வாயினுடைய புத்தி சமீபமாயிருக்கிறது இந்தச்செவ்வாய்புத்தியில் மாரணமென்றுளழுதியுங்கொடுத்தார்கள் அதைக்கேட்டசிலதினங்களுக்குப்பின் சில யோக்கியர்களைவைத்துக்கொண்டு தான்கண்டசொப்பனத்தையும் தன் சாதகத்திலுள்ள தனது மரண சமீபத்தையுஞ் சொல்லி ஷை பக்தர்களுடைய சரித்திரங்களிருக்கு மிடந்தேடி வரவழைக்கவும் அப்படி வரவழைப்பதைத்தமிழில் மொழிபெயர்க்கவுமே என்னுடைய ஆயுள்நாள் போராதுபோ லிருக்கிறது தவிர தமிழ் கொஞ்சம் வாசித்திருந்தபோதிலும் அதிகமாய்க்கவிசெய்தவழக்கமில்லைசெய்யத்தொடங்கினலும் நீண்டவருடக்கணக்கான நாட்செல்லுமேசுவாமி சொல்லிய சொப்பனத்துக்குயான் என்னசெய்வேன் என்றுயோசித்துக்கொண்டிருக்குந் தருணத்தில் இல்லஸ்தானத்தில் அவதாரசொரூபரா யெழுந்தருளியிருக்கின்ற வைகுண்டாசாரி சுவாமிகள்வந்துசேர்ந்தார் இச்சங்கதிகளையெல்லாம் அவர் விசாரித்தறிந்துகொண்டுதமக்குள் ஆலொசித்து அப்பா அவர்களைப்பார்த்துச் சொன்னதாவது எம்பெருமான் எனக்குப்பிரேரணம்பண்ணினபடிசொல்லுகிறேன் உமக்கு ஆயுட்காலம் சொற்பமென்றுபெருமான் கட்டளையை மறக்கவேண்டாம் இப்போதே ஆரம்பித்துக்கொள்ளும் எத்தனைவருடங்களில் இப்புராணம்நிறைவேறுமோஅதற்குமேல்சாதககாலம் உம்மிடத்தில்வருமேயல்லாது அதற்கிடையில்வராது இதற்கு ஆக்ஷேபனைகிடையாதென்று சொல்லினர் அம்மொழியை ஸ்ரீபாண்டுரெங்கன்கட்டளையாக உட்கொண்டு அறிவினிலுயர்ந்த அஜபால ராஜவமிசன் வசிஷ்ட கோத்திரன் வாமன சூத்திரன் மஞ்சள் துவஜன் மஞ்சள்காதியன் தாரக மந்திரன் சிம்ம முத்திரையோன் இலக்குமிதேவியன் அயோத்திநகரன் தூதவஸ்திரன் காண்ட சஸ்திரன் கிஃப்புப்பரியன் பொறையினில் மிகுந்தோன் கொடையினிற் சிறந்தோன் நடையினுலொழுங்கோன் வைணவசீலன் அன்பினுக்காலயன் ஆத்மவிசாரன் சர்ச்சனர்நேயன் சாதுசங்கத்தன் சூரியவமிசி ராஜாராம் அவர்கள் பிராகிருத பாஷையிலுள்ள பக்தர்களுடைய சரித்திரங்களை அநேகமிடங்களிலிருந்துவரவழைத்து ஆராய்ச்சிசெய்து அநேகம் பக்தர்களில்தம்முடைய சக்திக்கும்புத்திக்கும் ஒத்த எண்பத்திரண்டு பக்தர்களுடைய சரித்திரங்களைப்பொருள் வழுவாமல் தமிழில் மொழிபெயர்த்து. ஈஸ்வரனுடைய விபவம் அந்தர்யாமித்துவம் அர்ச்சாவதாரத்துவம் விபூதி முதலியவும் பிரமசரியன் கிரகஸ்தன் வானப்பிரஸ்தன் சன்னியாசியாகிய ஆசிரமங்களும் இல்லறம் துறவறமும் தர்மம் அர்த்தம் சிறுபான்மை காமம் மோக்ஷங்களும் பிரம க்ஷத்திரிய வைசியர் சூத்திரர்கள் ஒழுக்கமும் நவவிதபக்தியும் மேலும் உலகியல் நடைபலவற்றிற்கும் முன்னோர் நூல்களில் விதித்தவிதியும் விலக்குவிதியும் பெரும்பாலும்தழுவிச் செந்தமிழ் விருத்தச்செய்யுளாய் காப்பிய முறையுடைத்தாய் இலக்கணங்களுக்கெடுத்துக்காட்டு மோரிலக்கியமாய் பக்திக்கோராலயமாய் பக்தர்களுக்குப்பாக்யமாய் வாசிப்பவர்களுக்கு மாநிதியாய் உற்றுக்கேட்போர்க் குணமமுதாய் கற்றோர்க்குக் கழிமதுவாய் செந்தாமரைச் செல்விமணாளற்குத் திருமாலையாய் பிரமா விஷ்ணுருத்திரன்மாயை வியாசர்வான்மீகர் சுகர் பிரகலாதனர் ஆஞ்சனேயர் முதலிய தேவர்கள் ரிஷிகள் முதலானோரும் இக்கலியுகத்தில் சற்றேறக்குறைய சதுசுரா வருடங்களுக்குப்பின் மாராட்டிர இந்துஸ்தான் தேசங்களில் மானுடராக அவதரித்து ஸ்ரீபண்டரிநாதனுடைய பத்திசெய்து பேறுபெற்ற மரபும்முறையும் வழாமல் பண்டரிமான்மியந்தொடர்ந்தபுண்டலீகர்சரித்திரமுதல்துக்காராம் சுவாமி சரித்திர மீறாக எண்பத்திரண்டு பத்தர்கள் சரித்திரங்களையும் தமிழ்வேதமாகிய ஸ்ரீநாலாயிரப் பிரபந்தத்தைத்தழுவிய ஆறாயிரத்துச்சிலுவர்னம் செய்யுளாக பக்தலீலாமிருத மென்கிற பெயருடன் செய்தனர் இங்ஙனஞ் செய்தநூலை வைணவாகம முணர்ந்த வைணவரும் மாகாவித்துவானுமாகிய திரிசுரபுரம்

ா-ா-ஸ்ரீகோவிந்த பிள்ளையவர்களால் முழுவதும் பரிசீலனஞ் செய்வித்தபின்னர்த்தமது மனையிலுள்ள பெத்ததாசசுவாமிகள் சந்நிதியில கிரந்தம் தெலுங்கு பிராகிருதம் தமிழ் ஆகிய பாஷைகளிற்றேர்ந்த வித்துவான்களையும் கியானவான்களையும் பகவத்பக்தர்களான பிரபுக்களையும் கூழமச்செய்துதாமுந்தம்முடைய சகோதரர்களாகிய கிருஷ்ணசாமி சூரியவமிசி பீம்ராவ் சூரியவமிசி மாதுசாமிராவ் சூரியவமிசி இம்மூவரும் தமது புத்திரராகிய அப்பண்ணராவ் சூரியவமிசியவர்களும் நின்று வந்தவர்களுக்கெல்லாந் தக்க மரியாதைசெய்து இருத்தியபின்னர் முறைப்படி அரங்கேற்றுவித்து ஸ்ரீகிருஷ்ணபரமாத்துவுக்குமங்களாரதி செய்து பெத்ததாச சுவாமிகளுக்கும் ஆரதிசெய்தபின் கிரமப்படி வித்துவான்களுக்கெல்லாம் வஸ்திராலங்காரஞ்செய்வித்து அவர்களால் கொடுக்கப்பட்ட சாத்துக் கவிகளைப் பெற்றுக்கொண்டு யாவருக்கும் சந்தன பட்பதாம்பூலம் பிரசாதமுங்கொடுத்து சேவித்து ஆசீர்வாதம் பெற்றனுப்புவித்துச்சிலநாட்கழித்து தஞ்சைமாநகர மகா வித்துவானாகிய மதுரைமுத்துபாத்தியாயரைக்கொண்டு ஒருவாறு பார்வையிடச்செய்து பெத்ததாச சுவாமிகள் சந்நிதியில் ஷையுபாத்தியாயர் பிரசங்கஞ் செய்யவும் ராமுடு உபாத்தியாயர் வாசிக்கவும்செய்து பத்துமாதத்தில் பூரணமாக நிறைவேறியபின் அச்சிற்பதிப்பிக்க வேண்டுமென்று கருதி தமது கனிஷ்ட சகோதரராகிய மாதுசாமிசூரியவமிசியவர்களையும் தமது புத்திரர் அப்பண்ணராவ் சூரியவமிசியவர்களையும் சென்னபட்டணத்திற்கனுப்பி அச்சுப்பதிக்கவேண்டிய கருவிகளையெல்லாம் வரவழைத்து தமது பெத்ததாசசுவாமிகள் சந்நிதியில் அச்சுக்கூடம் ஏற்படுத்தி எண்பத்திரண்டு பத்தர்கள் சரித்திரங்களும் பதித்தாயினவுடன் பண்டரிநாதன் கருணைகூர்ந்து ஆச்சரியமான அற்புதமாய்த்தமது பரமபதநாட்டுக்கழைத்துக்கொண்டார் அப்போது முன்செவ்வாய்திசை செவ்வாய்புத்தியில் சாதகத்திற்சொல்லியமரணகாலந் தப்பி வைகுண்டாசாரிய சுவாமிகள் சொல்லியபடி மேல் ஏழுவருடமிருந்து ஷைபுராண நிறைவேறியபின் ராகுதிசை குருபுத்தியில் அடைந்தனர் இவ்விதமான அற்புதம்பொருந்திய இப்பத்தலீலாமிருத கிரந்தத்தை ஷையப்பா அவர்கள் சகோதரர்களாகிய கிருஷ்ணசாமிசூரியவமிசி யவர்களும் மாதுசாமிசூரியவம்சியவர்களும் புத்திரராகிய அப்பண்ராவ்சூரியவமிசியவர்களும் மிகுந்த சிரத்தாபத்தி விசுவாசத்தோடு பாக்கியாயிருந்த சாத்துக்கவிகளை அச்சிற்பதிப்பித்து அழகுள்ளதாகவும் பூசைசெய்தற்குயோக்கியமாகவும் புஸ்தகம் கட்டி நிறைவேற்றினார்கள். இந்தப்பத்தலீலாமிருதத்தைப் படித்தவர்களும் கேட்டவர்களும் பூசித்தவர்களும் ஸ்ரீபண்டாராபுரவாசரான தேவாதிதேவன் ஸ்ரீலெட்சுமிநாயகருடைய கிருபையால் இம்மையில் புத்திரபௌத்திரபாரம்பரையாய் அஷ்டைசூரிய சம்பன்னராய்வாழ்ந்து மறுமையில் பரமபதநாட்டில் எம்பெருமான் சந்நிதியில் நித்திய வாழ்வுற்றிருப்பார்கள்.

ஸ்ரீ மாதுசாமி சூரியவம்சியவர்கள் மொழிப்படி

தஞ்சைமகாவித்துவான்

**மகா-ா-ஸ்ரீ மதுரைமுத்துபாத்தியரவர்கள்**

இயற்றியதுமாநாகர்.

# ஸ்ரீ பக்தலீலாமிருத பக்தர்கள்.

## சரித்திர அட்டவணை.

## ஸ்ரீ பக்தலீலாமிருத பக்தர்கள்.

## சரித்திர அட்டவணை.

ஸ்ரீராமஜெயம்.

# சாத்துக்கவிகள்.

இயற்றமிழ் ஆசிரியராகிய

திரிசுரபுரம் மகாவித்துவான் மகா-ா-ா-ஸ்ரீ

## வீ. கோவிந்த பிள்ளை யவர்களா லியற்றிய

பெருங்கழிநெடில் விருத்தம்.

உலகமியாவு மணியுதரத் தொளிருந்தேவ னடிப்புணையா
　லுற்றபவ சாகரமதனை யுறுதியாக நீந்தியரு
ளிலகப்பணியும் பத்தர்களி னெழில்சேர் சரிதமனைத்து மன்பே
　யேற்றமாகத் தமிழ்க்கவியா லெங்கும் விளங்கப் பலவணியும்
பலசொற் சுவையும் பொருட்சுவையும் பார்த்துப் புலவருள மகிழப்
　பத்த லீலாவமிர்த மெனப்பகர்ந்தான் செல்வங் கல்வியொடுங்
குலவுந்தஞ்சை நகர்தனில்வாழ் குபேரனே யென்றறிஞருளங்
　குறிக்கு மிராஜாராம் சூரியவம்சி யெனுநற் குலத்தோனே.

குஞ்சரம் போற்பரச் மயங்குலையவெழு கோளரியாங்குலத்திராம
வெஞ்சரம்போற் றீவினைவே ரறுக்குஞ்சூ ரியகுலக்கோ விந்தராவின்
மஞ்சரம்போல் வளர்தஞ்சை மாநகரி லிரக்கமெல்லாம் வாய்ந்துவைகப்
பஞ்சரம்போல் விளங்குமிராஜாராம தாசனுரை பத்தர்சீரே. (க)

உலகமகிழ் மாராடர் மொழியுளதை நலத்தமிழாலுவந்து வாங்க
அலகில்புகழ்ப் பாண்டுரங்க னடியார்த மகிமையெல்லா மளந்துரைத்தான்
திலகன்ரவி குலநலன்றண் ணளித்தருமன் கொடைக்கன்னன் சிறந்ததஞ்சை
விலகருமுத் துணைவரொடு ராஜாரா மெனுநாமம்விளங்குவோனே. (உ)

முப்பொருட்கு முதல்வனெனத்துணைவரொரு மூவருக்கு முதல்வனாகி
எப்பொருட்கு மிறைவனென்னும் பாண்டுரங்கனடியார்க ளிசைகளாய
அப்பொருட்கு மகிழ்வுகொண்டு ராஜாராம் தமிழில்விளக் கினனன் னான்றன்
கைப்பொருட்கு மெய்ப்பொருட்குங் கரையில்லையெனும்வாழ்வு கவினத்தானே

எக்கனிக்கு மிக்கசுவைத் தெனவேத விமலரெல்லாம் இனிதுணக்கா
ரக்கனிக்கு மினிக்குமவ னடியார்தம் மகிமையமு தகிலந்துய்த்து
முக்கனிக்குங் கற்கண்டின் முதிர்சுவைக்கும் பாற்கடல முதுக்குங் கற்ப
கக்கனிக்கு மிக்கதென் ராஜாராம் தமிழில் விளங்கச்செய்தானே. (ச)

ஞானமனுட் டானமுணர் நலத்தன்பர் விலாசமென நவிற்று நன்னூல்
ஆனது பாண்டுரங்க னருளானது செந்தமிழில் விளங்கச் செய்தோர்ச்சி
மானச ராஜாராமர் சூரியகுலோத்தமநீ வாழ்கவாய்ந்துன்
ஞானவிலப் பழுத்ததமிழ்ச் சுவைமதுரந் தித்திக்க நாவலோர்க்கே. (ரு

வெண்பா

வைகுண்டாசாரி சுவாமிகளே மாலருளான்
மெய்குன்றுப் பத்தவிலாசகன்னூல்—செய்கென்று
சொன்னான் ராஜாராமன் சூரியகுலோத்தமன் சீர்
பன்னூரு நிற்கும்படி.

வெண்பா

நோக்கிற் சிறந்தமறை நூற்பொருளே யாமமுத
வாக்கிற் சிறந்த மதுரமுத்தே—தூக்கிலொளி
தோற்றவந்த பாநுகுலத் துங்கன்ராஜாராமன்
சாற்றவந்த பத்தவிலாசம்.

தஞ்சைமாநகரத்துத் தலைமைப் புலவராகிய

மகா-ள-ஸ்ரீ மகாவித்துவான் மதுரைமுத்துபாத்தியாயர்

அவர்களா லியற்றியது

நித்தமொரு பரப்த்தி நெறியொழுகிப் பரமபத நிலையம்பெற்ற
பத்தர் சரித்திரப் பயசுப்பல் கடலையறிவாய பருப்பதத்தால்
புத்ததுணை யெழக்கடைந்து தமிழ் விருத்தப்ப தலையிடைப் பொதுளச்செய்தே
இத்தரையோர் சிரவணவாய் புகட்டியுற்பன மறவஞ்ச மிழைத்திட்டானே
விரிதிரைசூழ்புடவி முழுதிருள கற்றுஞ் சத்தியின்றி மெலிவுபூண்ட
பரிதிகுலந்தனி லுதித்தும் பத்தவிஜயத் தொளிவைப் பரப்பிமாந்தர்
இருதயவஞ் ஞானவிரு ளொருக்காலு மணுகாம லியற்றிமேலாம்
அரிதிருத்தா ளொளிதெரித்த ராஜாராம் வன்மையிஃததி வியப்பே
உத்தவர்க்கு மர்ச்சுனர்க்கு மோதிய வாறொப்பின்றி யுயர்நாலாம்ப
தத்தவர்க் கானந்த சுகந்தரும் பாண்டுரங்கனிரு சரணிலுள்ளம்
வைத்தவர்க்கும் பத்தலீலா வமிர்தஞ் செவிவாயுண்பவர்க்கு முச்ச
கத்தவர்க்கும் ராஜாராம் தமிழ்க்கவியி லளித்துகந்தான்மாதோ
தேசாசாரங்கள் வழுவாதுயர்ந்தோ ராசாரஞ் சிறப்பமாயோன்
பூசாசாரம் தெரிந்து பத்தியினு லவன்றுளிற் புந்திகூர்ந்த
தாசாக்கள் நடந்தவற்புதச் செயலெல்லாந் திரட்டித் தமிழ்ப்பாவாக
ராஜாராம் நாவலவ னவின்ற பத்தலீலாமிர்த மது மாதோ
மதியுதவும் படித்தவர்க்கு நிதியுதவு முணர்ந்தவர்க்கு மாறன்பாத
கதியுதவு மன்பருக்குக் காட்சிபெறு ஞானியர்க்குக் கனவைகுண்டப்
பதியுதவுமிது படைத்த ராஜாராம் பாவலர்க்குப் பங்கயத்து
விதியுதவும் படைப்பின்றி நித்திய வாழ்வுற்றதொரு வியப்பதாமோ.

தஞ்சைமாநகரம் சதாவதானம்

மகா-ள-ஸ்ரீ சுப்பிரமணிய ஐயரவர்கள்

இயற்றியது.

சீர்பூத்த திணிமார் பிற்றினம் பூப்பச்செழுங்கமலச் செல்வமாதை
யோர்பூத்த வெனக்குத வவ்விடந் துயில்தற்கினியதென வெண்ணியாங்குப்
பார்பூத்த பாற்கடலிற் பவனமெனும் பஞ்சிசெறி பள்ளிமேவுங்
கார்பூத்த கடவு ளருட்கடன் மூழ்கிக் கதியடைந்தோர் காதைதம்மை. (க)

கோட்டானைக் காக்கை தொடக் குளிர்கொடுமெய் கூனிமதிகுகுதோறும்வெண்
கோட்டானைக் காக்கைக் காராழிநிகர் சுடரைவெயிற் கூடிக்காயக்
கோட்டானைக்காக்கை செயுமோர் கரியைவெங் கண்டு கொற்றங் கொள்ளோர்
கோட்டானைக் காக்கையது கொட்டவருமெழிற் பொன்னிகுலவுநாட்டில் (௨)

மேலுலக நாகர்களுங் கீழுலக நாகர்களு மேயநட்பாற்
சாலுறையாடிட வூன்று பொற்குழலைத் தன்மதிலாச் சார்ந்து நாப்ப
ணேலுறு தான்றடை யுறவான னுகியவக் குழற்பாங்கரிற் கீழ்நாட்டோர்
கோலுற முன்னகழ்ந்து வருவழியை யகழாக்கொண்டோர் கூர்தஞ்சைக்கண்.() .

உலகமெலா நிறைந்தபுற விருணீங்கக்கதிர் பரப்பியுதிக்குஞ் சோதி
இலகுகுலந்தனிலன்றுற் போன்றைய ரீமதலிய மூவிடையூறற்றுப்
பலகலை தேர்ந்தக விருளோ வுறவுதித்துப் புகழ்க்குடைக் கீழ்ப்பாலிரண்டாம்
அலகிலுயிர் யாவையுந்தன் னுயிரெனக் காத்திடுமிறைமை யடைந்தானே.()

கமலமிரண்டினி லுறையுமிரு மாதரு ளிரண்டுங் கலப்பக்கொண்டோன்
கமலமிரண்டுற நோக்குஞ் செயல் படைத்தவென விளங்குங் கண்ணன்செய்ய
கமலமிரண்டொரு கமலமிசைமலர்ந்த வெனச்சித்தாங் கண்ணன் செந்தாட்
கமல மிரண்டெஞ் ஞான்றுங் கனிவினொடு சுமக்குமனக் கமலத்தானே. (௬)

வையமிசை யாரேனும் பெருந்துயர் கொண்டி டலதனை மாற்றுமாற்றாற்
பொய்யுரையும் புகல்நாவான் வேதியர் களாசிபல புகன்றுநல்குஞ்
செய்யவெழிலக்கதையா லேற்பதுவுந் தெரிந்தகையான் சென்றுகொண்டோர்
கையுமறந்திடு கொடையானி ராஜாராமெனும் பெயர்கொள்காவலோனே.(எ)

கன்னலினின் சாறென்றே யக்காரஞ் சருக்கரை கற்கண்டாந் தன்மை
யென்னவொரு செந்தமிழிலியல் விருத்தவகையாற்றன் னிருகுலத்தில்
முன்னொருவன் கங்கைவரமுயன்றதுவுந்தன்பொருட்டான்முகுந்தன்தான்செய்
யின்னமுதும்பிறர்பொருட்டி திருதிறத்தும்பயப்ப தெனவிசைத்தான் மன்றே

தஞ்சை மகாராஜாஅவர்கள்மந்திரியாகிய

ஶ்ரீ-ஸ்ரீபெரியண்ணு வென்னும் பெயரினையுடைய

வேங்கடதாசர் அவர்களியற்றியது.

சொனக்களவுசெயும்பாவந்துலையும்வெண்ணெய்கவர்ந்தோன்பேர் சொல்லச்சா
[லச்
சினக்களுனும் பிழைபோம் பேய்முலைப்பா லுண்டவ னியற்கை செப்பநாளும்
உனற்கரிய குருதற்ப கப்பவம் போமாய்ச்சியர் ஜாரசனையுரைக்க
துனற்கரிய பிரமஹத்தி தொலையுமி ராவணற் கொன்றோன் சூரங்கூற. (௧)

வந்தவிண்ணோருறவர் பவந்தேனு பாலனந்தேர வாழ்வுபேறும்
பந்தவினைவிரவு கொடும்பஞ்ச மகாபாதகத்தின் பற்றுநீங்க
நந்தனெழிற் சுதனும நவிற்சர் சரிதையெல்லா நன்காராய்ந்து
சந்தமிகிராஜாரா மூலகிலுள்ளோ ரீடேறத் தமிழ்ச்செய்தானே. (௨)

## சாத்துக்கவிகள்.

வல்லம் மகாவித்துவான் மகா-ள-ஸ்ரீ

சரவண உபாத்தியாயரவர்கள் இயற்றியது.

வேதம் பசுவேயதன் பாலாகமம்
ஓதுஞ்சுவையே யேதுநாலாயிரம்
இமிழ்திரை யுலகிற் றமிழெனும்வேதம்
சொல்லியநெறியிற் புல்லிய நூற்றெட்டு
ஆனதொல்பதியிற்றுன்கிடந்திருந்தும்
நின்றநெறியைப் பண்டரிபுரத்தில்
வண்டமர்புரிகுழ லொண்டொடித் திருவுடன்
சேவைதந்தருளுங் காவனனடியார்
வடமொழியா லேதிடம் பெறவுரைத்த
பாடலைத்தமிழால் வீடுபெறவுரைத்தான்
முத்தமிழருமை முழுதுமேதெரிந்தோன்
கற்றவர்க்குதவுங் கருணையாளன்
வேதியர்ஆதுலர் விரும்பியதளிப்போன்
காதைகடெரிந்து கனம்பெறக்களிப்போன்
ஐந்தருநிகரா யருள்பெருமையினன்
சந்ததிமகிழத் தாரணிபுகழச்
சதுமறைநிபுணன் றரணியிற்குமிணன்
முதுதமிழ் தெரிந்தோன் முப்புரிமார்பன்
தள்ளரும்புகழே தனமெனப்பெற்ற
வள்ளனேர் சுமுகன் வரகுணசீலன்
செஞ்சொற்புலவர் சூழ்தஞ்சை மாநகரில்
மாயிருவிசும்பிற் பாயிருள்சீக்கும்
சூரியன்மரபிற் பாரினிற்றோன்றிய
தேசார்ச் சார்ந்த இராஜாராமே

தஞ்சைமாநகரம் மகாவித்துவான்

---

மதுரைமுத்து உபாத்தியாயர் சிஷ்ர் ள-ஸ்ரீ

---

கோவிந்தசாமி பிள்ளையவர்களியற்றிய

---

அறுசீர்கழி நெடிலாசிரியவிருத்தம்.

எண்ணரிய மறைமுடிவா யிலங்குகண்ணன் றிருவடியை யிதையத்தெண்ணி
நண்ணிமுத்தியடையாதா ரகத்திருளைப் போக்கவருநாளோ நந்தா
வண்ணமிகும் பிறப்பறுக்கும் வாளோ மாமயற்சேற்றைக் கடத்துங்கோலோ
மண்ணுலகோர்புகழ் ராஜாராம்செய் பக்தவிஜயமெனு மானூற்றோனே. (க)

சீர்மேவும் ராஜாரா மாராட்ரபாஷையதிற் சிறந்தமேலோர்
நீர்மேவு பத்தவிஜயஞ்சொலு மெலாந்திரட்டி நிமிர்தென்சொல்லால்
ஏர்மேவு குலச்செய்கை யெல்லோரும் மறியவிதைகடலாற் சூழ்ந்த
பார்மேவுமானிடர்க ளஞ்ஞானவிருளொருவப் பகர்ந்திட்டானே. (உ)

தஞ்சைமாநகரம் மகாவித்துவான்

மதுரைமுத்து உபாத்தியாயர் சிஷர்

ஈா-ஸ்ரீ முனிஷி கோதண்டராமபிள்ளையவர்கள்

இயற்றியது.

மைவண்ணனருளாலே வீடடைந்த வடியார்கண் மகிமையெல்லாஞ்
செய்வண்ண முறையறிந்து பலவிதமாஞ் சரிதமெலாந் திரட்டிவாரி
மெய்வண்ணம் விளங்கிடவே யியற்றமிழாற் கவியாக்கி மேலோர்யாரும்
உய்வண்ணம் பக்தியெனு மமிர்தரசக்கடமதனையுதவினனே. (க)

எல்லாருங்குலத்துதித்தோன் கோவிந்தசாமி தவமியற்ற வந்தோன்
பல்லாரும் பலகலைதேரொல்லாரும் பேரருள்சேர்பக்தி நீண்ட
நல்லாருங்கவிபாட வல்லாரும் புகழொடுசீர் நன்மைசேரக்
கல்லாருமெய்மறந்து வாழ்த்தெடுக்கும் ராஜாராம் கவிஞன்றனே. (உ)

அன்னபெரும் புகழடைந் தன்புருவான ராஜாராமமுதவாக்காற்
சொன்னமொழி வரைந்தகர மிகவாழி சுற்றமுஞ்சேர்த்தாரும் வாழி
மன்னுமனை வியரின் மருமக்கள் சுயமக்களவர்வர்க்கம் வாழி
வன்னமுள்ளநூலை நிதங்கேட்போரும் படிப்போரும் வாழி வாழி. (௩)

தஞ்சாவூர் வடக்குவீதி

எஸ் பி ஜி ஸ்கூல் தமிழுபாத்தியாயர்

மகா.ஈா.ஸ்ரீ ராமையாவஸ்தாதவர்கள்,

இயற்றியது.

கண்ணபிரான்றிருவருளாற் கதியடைந்த திருத்தொண்டர் காதைதன்னைத்
திண்ணமுறுஞ் சொன்னயமும் பொருணயமு நனிநிரம்பிச் சிறந்துதோன்ற
மண்ணுலகிற்கமுதிஃதேயென வெழிற் செந்தமிழ்ப் பாவால் வகுத்துரைத்தான்
றண்ணளிகூரிராஜாராமெனும் புலமைப் பரிதிகுலத் தனிகரோறே.

தஞ்சாவூர் வேங்கடதாசர் சீசராகிய.

மகா-ஈா-ஸ்ரீச.இரோஜிராவவர்களியற்றிய

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பார்வளரமூதாதை மாராட்ரபாஷையினிற் பலபிரபந்தம்
பேர்வளர வியற்றியுறப்புகழ்புனைந்தானென வுளத்துப்பெரிதுமெண்ணி
ஏர்வளரப்பத்த விஜயத்தினைச் செந்தமிழ்ப் பாவாயிசைத்தெஞ்ஞான்றும்
சீர்வளர ராஜாராமிகபரசாதனந் தன்வசஞ் செய்தான்மாதோ.

சாத்துக்கவிகள் முற்றிற்று.

ஸ்ரீராமஜெயம்.

திரிசிரபுரம் மாவித்துவான்
மகா-௱-ஸ்ரீ கோவிந்தபிள்ளையவர்கள் குமாரராகிய
மகாவித்துவான் மகா-௱-௱-ஸ்ரீ-முனிஷி நாராயணசாமிபிள்ளை
அவர்களா லியற்றிய.

ஆசிரியவிருத்தம் குளகம்.

# சிறப்புப்பாயிரம்.

சீர்கொண்ட உலகனைத்தும்படைத்த வொருநால்வதனச் செம்மல்முன்னர்ப்
பார்கொண்ட முதன்மையொடு பலவளமும் பைஞ்ஞீலும்பதியுஞ்சால
நேர்கொண்ட வரசியலு மமைச்சியலு நீர்மைபெற நிருமித்தான்ற
வர்கொண்ட பொன்னிநதி யணிநாடுவயனீடு மெழிற்சோணாடு. (௧)

அந்நாட்டிற் கற்பகத்தி னகமுடைய பொன்னாட்டை யகைத்தல்செய்தே
எந்நாட்டி லெத்தவரும் போற்றுபெத்ததாசர் பத்தியியற்றி யெட்டா
மின்னாட்டு முகில்வண்ண னன்னாட்டை யடைந்த பெருவியப்புமேய
மன்னாட்டுமெணிமாடக் கொடிமஞ்சை வருதெஞ்சை நகரம்வாய்ந்தோன். (௨)

கதிரியல்சூரிய வமிசன்கருடனியல் கனத்துவசன் கனிகன்னம்சன்
சதிரியல்நாவலர் தோத்ரன்சந்ததங் கோவிந்தனுறு தவச்சீர் புத்ரன்
எதிரியலொன்றில் லாதவெழில் வசிட்டகோத்ர னடவிருக்குங் காத்ரன்
முதிரியல்வாமன சூத்ரன்மூ தறிஞர்புகழ் பாத்ரன் முளரிநேத்ரன். (௩)

திக்கயத்தை முனிவின்ற வெக்கமுத்தமிக்குடைய திறற்களிற்றன்
மிக்கயத்தை யக்கனலிக் கறப்பசியவெனக் கனைக்குமிடற் பாய்மாவன்
அக்கயத்தைக் கிட்டியிட ரக்கயந்தீர்ந் துய்யவருளத்தன்பாத
இக்கயத்தைப் புணாமனத்தினிற் கினியதெனும் பத்திக்கிலக்கமானோன் (௪)

நறைதரு தார்வாகையணி ராஜாராமக்குரிசி லவலோனன்
கறைதரு மாராஷ்டிரத்தி லருமைபெறப் பெருமையுறுமான்றோர்சொன்ன
நிறைதருமஃ தெழில்வடவேங் கடங்குமரியுள்ளிட்ட நிலத்தோர்யாரும்
மறைதரலின் றெளிதுணர வளத்தமிழான் முன்னூலின் வழியேயாய்ந்து. (௫)

நித்தியமாம் பரவ்யூகநிலைகளொடு விபவநிலை நிறைந்தியாண்டுஞ்
சத்தியமா மந்தரியா மித்வநிலையர்ச் சாவதாரமாகித்
துத்தியமார் நிலைகளிடந் தோன்றுபத்திசெய்தின் பச்சுகமதெய்தி
முத்தியதை யடைந்தபத்தர் சீர்த்தியுடனற் புதங்கண் முதலவெல்லாம். (௬)

ஓவியத்திலுறுப்ப மைந்தவொப்பமென வொருங்கமைத் திங்குறுப்புவாய்ந்த
காவியத்துக் கற்பமைத்துக் கவினமைந்த விருத்தமதாற் கற்போர்நெஞ்சம்
மாவியப்பினிடை மூழ்கிச்சொற் சுவையும் பொருட்சுவையு மாந்திமாந்தி
நாவியக்கச்செவி கேட்கநாவிலக்கந் தரமுநன்கிலமையாதென்ன. (௭)

பத்தியெனும் பயிர்தழைக்க வந்தவொருவித்தென்னப் பரமன்வாழு
முத்திநிலை யிவர்தர வோரேணி யெனமுதல் வழிநூன்முதிர்ந்தமார்க்க
சித்திநிலை யென்னவொளிர் செங்கமலத் திருமாதின் புருஷகார
உத்திநிலை யெனவிசைத்துப் பத்தலீலாமிருதமென்றுதவினனே. (௮)

முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீ—உ—வே- திருமழிசை நல்லான்சக்கிரவர்த்தி சதாவதானம்
ஸ்ரீராகவாசார்ய சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளியது.

శ్లో॥ విద్వాంసఃకతివానసంతిభువనే యేషాంవశేభారతీ।
కింతేషామపివిస్మయోపజననీ, వాగ్రాజరామప్రభోః
యీనధ్యానపథంగతాపివిదుషాం చిత్తేస్థిరాయాంధృఢం
సంభేధంసముదంచయేద్వ్యగళితం వేదాంతరంకుర్వతి॥

శ్లో॥ కావ్యంపండితరాజరామరచితం తద్భక్తలీలామృతం।
సర్వైశ్లాఘతుమీహతేసభగవాన్ శ్రీమైన్సహస్రైర్హరిః
ద్రష్టుంవాంచతిసాదరంశతమఖో నేత్రైస్సహస్రైశ్చిరం
స్తోతుంప్రేరయతీహపన్నగపతిః జిహ్వాస్సహస్రద్వయీం॥

---

ஸ்ரீமத்தியாதி ஸ்ரீமான் - வைகுண்டாசார்ய சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளியது.

శ్లో॥ శ్రీమాన్ రామకృష్ణావాన్ సకలశుభకరంభక్తలీలామృతంసద్గ
ణ్యంపుణ్యంవరేణ్యం భవభయశమనంవక్తుకామోప్యనుక్త్వా
భూమాతంజానగర్యాం పునరపిభువనక్షేమలాభాయభూత్వా
రాజారామస్స్వవంశేతదతిబహుమతద్రావిడోక్త్యాజగాద॥
రామాద్రాజారామః శూరోనితరాంజిగాయజగతీయత్
షడరీనఘూనివచసా తదజేయాన్దివ్యభవ్యేన॥

---

மகா - ள - ள - ஸ்ரீ - தியாகி - கண்ணசாமிநாயுடு அவர்கள்.
இயற்றியது.

(శ్రీ)

సీ॥ శ్రీపెద్దదాసులు - స్థిరముగానెలకొన్న
శ్రీతంజపురిలోన - చెలువుగొన్న
మహారాష్ట్రజాతిలో - మాన్యతనొందిన
సూర్యవంశాంబుధి - సోముడైన
రాజరామాఖ్యుండు - రాజిల్లియాభగీ
రథునిపోలికభక్తి - రహింబరిత
మనెడిగంగనుదన - మహిమచెంపారంగ
దెచ్చెద్రావిడభాష - దేశమాగ

తే- గీ- మునసుబుధజనులెల్లను - ఘనుడటంచు
భాగడియాశీర్వదించంగ - భువిలోనిదియు
భక్తిలీలామృతంబని - బరగెలక్ష్మి
జలజనాభునియురమందు - వెలయుకరణి

క॥ మిన్నోటనిదనవారికై
మున్నాతడు దెచ్చెనితడు - ముదముతో శ్రీసం
పన్నుండుసకలజనులకు
నన్నా శ్రీభక్తిలీల - యమృతంబిచ్చెన్

ఉ॥ ఆసుధసాటిజెప్పదమటన్ననునల్లదిగొన్నవారికిన్
వాసిగ కామక్రోధముల - వధిఁలజేయును రాజరాముడ-
త్యాసతొనిచ్చినట్టియమృ - తంబిదిగొన్నను గన్న నైన శ్రీ-
వాసముగల్గుజేసిమది- వాంఛలుదీర్చుఁను నైహికంబునన్॥

క॥ ఘనుడీరాజారాముడు
అనయముశ్రీభక్తిలీల - అమృతంబిలలో
నైన లేక గుటికయజేసెను
యినకులసంభవుడేయహాహా - యేమందుచెలీ॥

V. V. K. Press No 213 Mint Street, Madras.

முத்தம்பாள்புரஞ் சத்திரம் மகாவித்துவான்

## மகா-ா-ஸ்ரீ வீராசாமி யுபாத்தியாயரவர்கள்

## இயற்றியது.

மோனகுருவான சதாசிவ பிர்ம்த்தின் முதற்சீடனுய்ப் பரமப்ரக்ஞைக்கொண்டஞானமணியாமயனுராவ்சூர்யவம்சி கற்பேரன்றவத்துதித்தவிராஜா ராமன் வானவரும் பணிந்தேத்தும் பண்டரீசன் மான்மியமாம் வங்கமொன்று வளைந்து தந்தான், ஏனுலகோர் பிறவாழி கடவார் காவா யிலையந்திருந்தும் பவத்தழுந்து மியல்போருண்டோ. (க)

வடகலையாம் பருங்கடலிற் குளித்துமுத்த மணிகளெனு மரிபத்தர் சரிதந் தன்னைத், திடமுடனு ராய்ந்தெடுத்துத் தமிழப்பாவென்னுஞ்செய்யநூலிற்கோர்த்துப் புனைதல் செய்தே, புடவியிசை யன்பராம ரசர்க்கீய்ந்து புகழ்மாலை யவர்கடரத் தானும் பூண்டான், சுடரவிரும் பரிதிகுல திலகனுன தோன்றலிரா ஜாராமச் சுமுகன்றுனே. (உ)

முத்திரமா மூலகமதில் மூவைந்தாறு முதிர்வன்ன லானுர்கள் பொருளொன்றீய்ந்தே, சித்திரமாங் கவிதைகளாற் பண்டரீசன் றிருவிளையாட்டனைத்தினையும் தெளியக்கூறிக், குத்திரந்தீர்த் திருபொருளு மெவர்க்கு மீய்ந்தே, கோவிந்தசாமியண்ணல்வரத்தில்வந்த புத்திரனு மிராஜாராம் வள்ளலானுன் புண்ணியரிலிவன்போலப் புவியிலுண்டோ. (௩)

தஞ்சாவூர் தாலுக்கா திருவாதி பிருக்கா

ஒரத்தூர் ா-ஸ்ரீ சுப்புமூவரயர் புத்திரராகிய

## நல்லமுத்தென்கிற ராமானுஜதாசர் இயற்றியது.

திருநிறைந்து வளர்தருபண்டரிபுரமாந் தெய்வத்
திருப்பதியின் மறைப்பொருளாய்ச் செழிக்கும் விட்டோபாவின்
அருணிறைந்த புகழ்பாடு மடியர்கடஞ்சரித
அலைகுலாம் பிராகிருத வமுதத்தண்கடலை
பொருணிறைதன் னியானவெற்பாற் கடைந்தெடுத்துத்தமிழிற்
பொருத்திய லீலாவமுதைப் பூவுலகோர்க் கீந்தான்
தெருணிறைந்த தஞ்சைநகர்த் தினகர வம்மிசத்திற்
றிகழ்தரு ராஜாராமச் செயபுலவரோதே.



ஸ்ரீ ரெக்மாயிசமேத ஸ்ரீ பாண்டுரெங்க பரப்பிர்ம்மணேநம:

# ஸ்ரீபக்தலீலாமிர்தம்.

## கடவுள்வாழ்த்து.

உலகம்பூத்த வொருமல ருந்தியான்
திலகமேற் றநுதற்றிருச் சேர்ந்தெழில்
மலரமாலை வனந்திகழ் மார்பினன்
சலசமாமலர்த்தாளுளஞ்சார்த்துவாம். (௧)

பத்தர்காதைப் பரப்பினைப் பாடுதற்
கொத்தஞான முதவி யருளுமே
நித்தன் பூவை நிறத்திரு மாலடி
கைத்தலங்கொள னுமன்கழல்களே. (௨)

மாணியாய் நிலம் வாங்கின வன்றொண்டர்
கோணிலாக்கதை கூறக் குழலிருள்
நீணிலாவி னிலாநிறத் தொண்கலை
வாணிதன்னை வணங்கி வழுத்துவாம், (௩)

மருத்து மாமகனாருள் வாய்ந்துசீர்
திருத்த வந்தருள் செய்யுஞ் சமர்த்தராம்
ஒருத்த ருத்தம வாரிய ரொண்கழல்
கருத்துங் கண்ணுங் கொண்டிக்கதை கூறுவாம். (௪)

### வணக்கம்.

இல்லாதவர்க்குத் தமரில்லை மற்றேது நாளும்
செல்லாதவர்க்கத் திறம்போல் வணக்கஞ் சிறக்கச்
சொல்லாதவர்க்கத் தொகைநூனகை தோற்றுவிக்கும்
கல்லாதவர்க்குக் கரையில்லை யென்கற்றுளோர்க்கே. (௫)

நன்னூலவர்க்கு நகைதோன்றுதற்கே நயந்திங்
கென்னூலியற்றப் படுநூலிதிலேது குற்றம்
சொன்னூலமை யாதரிபேர் சொலுந்தூய்மை யொன்று
தன்னூலலவோ நமனுங் கடைசார வஞ்சும். (௬)

### வருபொருளுரைத்தல்.

எனப்பண்டரியின் வரலாறுமங்கேய்ந்த கண்ணன்
தனக்கன்புறு தாசர்கடம் வரலாறும் ராமன்
மனத்தின்புற வாழ்த்துநர் தம்வரலாறு மற்றும்
துனத்தண்டமிழ்ச் செஞ்சொலி னுங்கவி சொல்லலுற்றேன். (௭)

### நூற்பயன்.

ஹரிநாம மகிமையைச் சற்றேனுந்தேரா
 வஜாமிளனொருவிதஞ் சொல் லியத னாலே
விரிசோதிப் பரமபத மேவலானான்
 விமலநாமந்தெரிந்து விடாமலோதித்
தெரிசித ரன்றனைத்தம் வசஞ்செய் துற்ற
 தேசிகர்தஞ்சரித்திரத்தைப் படிப் போர் கேட்போர்
பெரிதாக வவர்களிடத் தன்புசெய்வோர்
 பெறும்பலனை யினைத் தெனயாம் பேசலாமோ. (௮)

## நூல்

## புண்டலீகர் சரித்திரம்.

### உமாமஹேஸ்வரப் பிரசனோத் தரம்.

உலகம்வாழ்த்திய பதுமமா புராணத்தி லுமையாள்
புலம் விளங்குறப்புராந் தகன்புகன்றதைப் பொருந்த
நிலவு ஸ்ரீதரர் நிகழ்த்திய தொளிர்கயிலாயம்
குலவுசெம்மணி மண்டபத் துறைகின்ற கொலுவில். (௧)

மலைமடந்தை தன்கொழுநனை நோக்கிமண்ணுலகில்
நிலைநிரம்பிய பண்டரிபுரத்திடை நெடுமால்
தலைகலந்தரத் தான்றங்கு கின்றதெத் தகவால்
சிலைபசும் பொன்மாமலையி னுயருள் கென்றுசெப்ப. (௨)

மனைவிதன் முகநோக்கியக்கயிலையில் வாழ்வோன்
புனைபசுங்கொடியே திருவைகுந்தம் பொலிய
வனைசெழுந்துள வோனுறு போதவன் வந்தான்
எனைவரும்புக ழெழில்கனிவுறு மிந்திராணி. (௩)

கண்டுசேவித்துக் கண்ணனைக் கண்களிப்புறவே
மண்டுமன்பினிற் பற்பலதோத்திரம் வழங்கிக்
கொண்டுநின்றவன் பேரெழிற் கோலத்திற் குளித்து
விண்டுபொன்னடி வணங்கிநின் றொருமொழி விளம்பும். (௪)

நாதனுனதின் மடிமிசை நானிருப்பதற்குக்
காதன்மேவினன் றவிர்கிலன் கருணைசெய்தருள்வாய்
மாதயாநிதி யேயெனவழுத்தினள் வணங்க
ஸ்ரீதரன் சிறுநகை செய்துதெரிவை நீகேண்மோ. (௫)

மண்ணிடைப்புகுந் தறுபதி னாயிர வருஷம்
எண்ணிடத்தவஞ் செய்தனை யேற்கண்ண னென்ன
நண்ணிடப்பொழு திற்றுவாரகை நகர்தனிற்றன்
விண்ணிடைத்திக ழனைமடிமிசை வைப்பே னென்றான். (௬)

என்றுஸ்ரீதரன் கூறலுமிணை யடிவணங்கி
நன்றெனுச்சசி மண்ணிடை யோர்புற நணுகிக்
கன்றருந்தவம் வருஷமாறயுத முங்கழிய
நின்றியன்றபின் ராதையாய்க் கோகுல நேர்ந்தாள். (௭)

இளமையாம் பருவத்திடைக் கண்ணனோடி யன்று
வளமைசால்விளை யாட்டினிலுள மிகமகிழ்ந்து
நளமைநேர்பவன் கோகுலம்பிரிந்து நண்ணியபின்
உளமையாந்தனள் பிரிவினால் வருந்தின ளுடலம். (௮)

காலம்பற்பல கழிந்தபின் கண்ணனைக்கருதி
மூலம்பெற்றநல் வரம்வந்து செல்கெனமுடுக்க
நீலம்பற்றிய மேனியான் றுவாரகை நேர்ந்தான்
கோலம்பெற்ற வேறுருக்கொடு சென்றனள் கோயில். (௯)

பொன்னினாயகன் பொலிவுகண் டெதிர்நின்று போற்ற
மின்னினார்கன மேனியானுட னருள்விழிகொண்
டுன்னிநோக்கிமுன் னுருவகீத் துறுகின்ற ராதை
மன்னிவைகுற மடிமிசை யெடுத்து வைத்தனனே. (௰)

அதனைக்கண் டருக்குமணி தன்னகம் பொருளாகி
மதனைத்தந்தவன் மேலதிசினங்கொடு மயறீர்
புதனைத்தந்தவன் போலொளி முகங்கொளப் பொருமி
எதனைக்கொண்டு மாற்றிலளவ ணீங்கி னளினைவாய். (௰௧)

லோகதண்டமென் றலாக்குந்திண் டீரமாவனத்தில்
ஏகனாகிய கண்ணனை யிதையத்தி லிருத்திச்
சோகநீங்கிய தவஞ்செய்து துன்னினளாக
மேகநேர்நிறத் தானுருக்குமணியை விட்டு. (௰௨)

தரிக்கிலானவ ளெங்ஙனஞ் சார்ந்தன ளென்று
நெருக்கமாமர நீடியகாடெலா நேடிப்
பெருக்கமேவிய கோகுலம் வந்துமுன் பிடித்தான்
வருக்கமோட்டுகோ லேதண்டமாய்க்கரம் வயங்க. (௰௩)

சங்கமேகமண்டல மெனக்கொண்டு தன்கழுத்தில்
தொங்கலாக்குள வத்தொடு செவியிடைத் தூங்கும்
புங்கமேவுமுண் டலமுறத் துறவியாய்ப் போந்தான்
எங்கணுந்திரு வித்தின்டீ ரவனத்தை யெதிர்ந்தான். (௰௪)

வனந்தழைத்து மென்மலர் செறிவனப்பு மின்கனிகாய்
இனந்தழைத்து மென்மயில் குயிலெழிற் கிளிபூவை
மனந்தழைத் துறுசெவ்வியும் வாவியுமலர்மேல்
அனந்தழைத் துறுகவினுங் கண்டதிசயித்தாங்கே. (௰௫)

மலர்மடந்தை யெங்கினும் வைகுமென்று ளேமதித்துக்
குலவுமென் னுயிர்க்கோமளமே யெனக்கூவி
அலருஞ்சண்பகம் புன்னைவண்டி மிரசோகஞ் சேர்ந்
திலகுபைம்பொழி லிடத்தடைந் திணையிலா நங்கை. (௰௬)

நோற்றிருந்தது கண்டெதிர் வந்துறநோக்கிப்
போற்றுறுங்கமலாலய மேவியபொன்னே
சாற்றுமென்னுயி ரோயெனதகலத்தைத் தவிர்ந்து
வீற்றிருந்ததிங் கென்னெனே வெற்றுடம் பாக்கி. (௰௭

கோரமாவன மனிதரொன் பவாது குழுச்சஞ்
சாரமில்லதாகி யவிவணெவ்விதஞ் சார்ந்தாய்
நேரமின்மன மெங்ஙனந் துணிந்தது நீதான்
தீரமெய்தனி வந்ததென் னென்றனன் றேவி. (௰௮)

மாலைநோக்கிநீ யாரிவணென் செயவந்தாய்
கொலையேகொடென் றுரைசெயக் கோவலர் கொழுந்து
சேலையேய் விழியாயுனைத் தேடியேசேர்ந்தேன்
நூலையேயிடை நின்பதியானென நுவன்றான். (௰௯)

எண்ணிறேவிமா ரொன்பதிக் கவரைவிட்டென்பால்
நண்ணுகின்றில னெனத்துணி வுள்ளகான் றனியே
கண்ணுநற்றவம் புரிமருங் கென்கணவ னென்று
வண்ணமாறிவந் தாயுனைப்பார்த் துறமதித்தால். (௨௰)

வஞ்சனென்று தோற்றுகின்ற துனித்த மங்கையர்பால்
அஞ்சலின்றி நீ வருவது தகாத தாமதனால்
கொஞ்சமேனு நில்லேலிங்கே போவெனக்கூற
மஞ்சைசநேர் நிறத்தானுற மயங்கி னனிளையான். (௨௧)

தடியைத்தன் முழந்தாள் களிலிடுக்கினன்றாங்க
இடையிற்கை களைவைத்தனனு சிகாக்கிரத்தில்
யிடையக்கண் களினேக்கினன் றேவிமுன் விரும்பி
அடையிக்காலத்து நின்றன னவெனைத்தென்றால். (௨௨)

இருபத்தெண்டு வாபரயுகமள வினதென்று
கருதுகென்றன ன்பார்வதி கணவனை நோக்கிப்
பெருகுமின்பொடு பேசுக பின்னடந்ததனை
மருவுநாயக வென்றடி வணங்கினள்மன்னே. (௨௩

வேறு

அணிவளாமடந்தை கேட்கவ சுரதிண் டிரனென்போன்
திணியிருள் சீக்கும்வெய்யோன் றேர்மிசைச் செலவொ ட்டாமல்
பிணிவுறுத் துலகிலுள்ள பிராணிகடமைப் பீடித்தான்
தணிவருந்த வருந்தேவர் தாமுங்கண்டொன்று கூடி. (௨௪)

ஹரிசரணடையக் கண்ணற்கருள் சுரந்தவளா நோக்கிக்
கரியமேனியனுன் மல்லிகார்ச்சுன னுகத்தோன்றிப்
பரிவறப்புரிவனுங் கட்கெனப் பணித்தருளி னுன்முன்
தெரியஸ்ரீ சந்த்ரனென்றோர் நீதில்கோ னென்னை நோக்கி.

ரோதகுண்டத்தி னின்றே நெடுந்தவம் புரிந்தானுன்சேர்ந்
தாதர முனக்கேதென்ன வவன்றிரு மாலைப்போலும்
காதலன் வேண்டு மென்றான் கண்ணனே யுனக்கு நல்ல
மேதகு புதல்வனுவா னெனவரம் விரும்பித் தந்தேன். (௨௬)

அன்னவாறே செம்பொன்கோ னரசன்பா லவதரித்தான்
பின்னரும் புதல்வன் மல்லி கார்ச்சுனனெனும்பேர் பெற்றான்
துன்னினன் வேட்டையாடத் தொகுதிண்டீ ரவனஞ்சேர்ந்தான்
பன்னருந் திறலினுனைப் பார்த்தந்த வசுரவேந்தன். (௨௭)

யானுறும் வனத்தில் வேட்டையாட நீ வரலுமாமோ
நீனுணவினுக்கு நேர்வொயென வந்து செருச்செய் தேற்றாः
கானுழியீரைஞ்ஞூறுவற்சரகாலமாக
ஊனுகப்பொருதார் மற்றங்கொருவருக் கொருவர் தோலார். (௨௮)

இருவரும் பொருங்கால் மல்லி கார்ச்சுனனென்னே பன்னுள்
பொருவதிற்றோலான் மற்றீங்கிவனுயிர் போவதெங்ஙன்
ஒருவகை யெது செய்வோ மென்றோர்ந்து லோகதண்ட மென்று
கருதருங்கதை கைக்கொண்டு புடைத்துயிர் கவர்ந்து வீழ்த்தான். (௨௯)

உயிர் விடும் போதிலந்த வசுரன் ஸ்ரீ ஹரியென்றோதச்
செயிரிலா தொழுகு மல்லி கார்ச்சுனன் றெரிந்தன்னேன் முன்
வெயில்விரி பசும்பொன் மேனி மெய்யுருக் கொண்டு தோன்றி
அயிலுடையசுர நீ வேண்டிய வரமறைதி யென்றான். (௩௰)

செவ்விய மாலை நோக்கி நின்கதையால் யான் செத்தேன்
அவ்வகையாலே நீ கொள்கதையின் பேராக நாளும்
இவ்வனம் லோகதண்டமெனும் பெயரியல் வதாக்கித்
திவ்விய நகரு மொன்று செய்ததிற் சிறந்து நீயும். (௩௧)

வளர்தர வேண்டுங்கண்ட மாத்திரைப் பாபம் போக்கிக்
கிளர்தருபானு தீர்த்தங்கிடைத்திவண் விளங்கு கின்ற
தளவில் வன்கதையால் யான் மாய்ந்த தனிவேண்டப் பேரா
விளைவுறு தீர்த்த மொன்றுண்டாக்கி மற்றதன் பால்மேவ. (௩௨)

கதைதனை நிறுத்தல் வேண்டுங்கண்டு வந்தாடித் தீர்த்தம்
சிதைவறு கதையை யாலிங்கனஞ் செய்வோர் பவங்கடர
உதவுதியென்று வேண்டினன்றயித்தியனுதற்கு
மதனனை யளித்தோனந்த வரமெலா மினிது நல்கி. (௩௩)

தனது வைகுந்த மேவத்தயித்தி யன்றன்னை யுய்த்தான்
சொனவது முதலாய் லோகதண்டமென்னும்பேர் சூடி
வனம் விளங்குதலாய் வேண்டும் வகையெலா மமைந்து நாளும்.
கனமிகலாகி யாருங்களிப்புற விளங்கிற்றன்றே. (௩௪)

வேறு

பின்பு லோகதண்டமென்று பெயர் விளங்கு மன்னதில்
அன்புசான்ற சற்குணத்தினறிஞர் பாபரகிதராய்த்
துன்பு தீர நாரணன்றி யான மேவுசுகிர்தமோ
டின்பு கூரும் வாய்மையோ ரோருத்தர் ஜன்னு வென்பவர். (௩௫)

சதுமறைக்குலத்தர் சாத்ய கிப்பெயர்க்கொ டையலார்
வதுவை மேவி வளருவோர் தமக்கு மைந்தரின்றியே
அதிக காலமாய்த் தவஞ்செய் தருமையா யொர்மைந்தனங்
குதயமாக மனமகிழ்ந்து பெயர் விளக்கவுன்னியே. (௩௬)

புண்டலீகவொன்று பேர் புனைந்து நாளு மன்புதான்
மண்டவே வளர்த்து வந்து வருஷ மெண்ணிரண்டுதான்
கொண்டபோது வதுவையுங் குறித்தி யற்றினர்குலா
வுண்டமைந்தர் துஷ்டராயுடன்று தந்தை தாயரை. (௩௭)

பலவிதத்தினிந்தை செய்து பரிபவஞ் செய்தனுதினம்
விலைமகட்குண்மேவி நாளுமவள் விரும்பும் வேலைசெய்
தலைவு பெற்றுலாவ லாகவது தெரிந்து தந்தைதாய்
நிலை கெடத்திரிந்து நீ நடத்தனீதியன்றெனு. (௩௮)

இதமுரைக்க வஞ்சிடா தெதிர்ந்து நீவிரின்னமும்
சிதைவுறு திருத்திரோ வெனச்சினந்து செப்பொணு
மதமிகப்புடைத்து வைது மாறு கொண்டு மனைவியோ
டுதவலற்ற ளுர்ப்படுத்தி வேறிருந்துளாரரோ. (௩௯)

அவரநீதியைத் தெரிந்தகம் பொருது தந்தை தாய்
இவனை விட்டகன்று போயிறத்தனன் றெனவுனிக்
கவலை கொண்டிருக்கும் வேலைகாசி யாத்திரைச் செல்வோர்
உவணில் வந்திறங்கினர்க ளவரோடே கவுன்னினர். (௪0)

மன்னி மற்றையா ரொடேகினருடன் றொடர்ந்து சீர்
உன்னு மந்தலோக தண்டவள நகர்க்கண் வந்தனர்
பின்னும் யாத்திரைச் செல்வோர் களவர்களேகு பெற்றி கண்
டன்ன புண்டலீகர்தாமு மவரொடேக வெண்ணினர். (௬௧)

மனைவிதன்னைநோக்கி நீயும் வருக காசியாத்திரைக்
கனையகாசிதனில் விராவுமதிசயங்க ளேக்கலாம்
எனவிரண்டு குதிரையேறி யிருவருஞ் செல்வோருடன்
இளைவதின்றி யேகினர் பினேகு மவ்வழிக்கணே. (௬௨)

முன்னடந்து சென்றதந்தை தாயர் மூந்துருதுதாம்
மன்னுமூப்பி னல்வருந்தி வருதல்கண்டு மேதிலார்
என்னநோக்கி யேகின ரியம்புகாசி யருகதாய்த்
துன்னுகுக்கு டப்பெயர்த் தவத்தி யோகர் சூழலே. (௬௩)

வேறு.

ஆய சூழ லருகி லிறங்கினர்
மேயபோது விளம்பிய குக்குடத்
தூயயோகர் மகிமையைச் சொல்லுதற்
கேய நாவிரண் டாயிரன் வெள்குமே. (௬௪)

வேதனாதி விமலனொன் போரொலாஞ்
சாதுவாமவர் தம்மைத் துதித்தரோ
எதமெய்துறிற் றீர்வனொன் றூலவர்
மாதவத்தினை யாவர் வழுத்துவார். (௬௫)

அந்தக் குக்குட யோக ரருளிய
தந்தை தாயர்தஞ் சேவை தனைவிடா
தெந்த நாளு மியற்றி யவர்முனே
பந்தநீக்கும் புராணம் படிப்பரோ. (௬௬)

உணவி னித்திரை யிற்புரி வுற்றிடார்
தணவுறூர்கண மூந்தந்தை தாயரை
அணவு காசிகங் காநதி யன்னவர்
புணர்வினிற்பெரி தென்று புலன்கொளார். (௬௭)

எய்துந் தாய்தந்தை யிற்பெரி தானதோர்
தெய்வ மின்றெனச் சிந்தைசெய் வோர்வயின்
மையில் கங்கை யமுனைநல் வாணியாம்
தையலார் நள் ளிரவிடைச் சார்வரோ. (௬௮)

உலகி னோர்பவ நீக்கவுற் றூடலால்
அலகில் பாபமெல் லாந்தம் மகங்கொளீஇப்
புலமை யாம்வடி வப்புனை போகவே
உலவி யூழிய மோர்கணஞ் செய்தரோ. (௬௯)

தங்கடேச தயங்குரு வாய்ச்செல்வார்
அங்குநாளு மடைவுற மாதவிம்
பொங்குங் குக்குட யோகர் புகழினை
இங்கெனுனு மியம்ப வொணுதெனு. (௭௰)

பின்னுங்கூறுமின் முன்பிறை சூடிதான்
அன்னகுக்குட ராசிர மத்தெதிர்
மன்னுநல்லறச் சாலை மனையுடன்
துன்னுறும் புண்ட லீகரத் தாயர்பால். (ருக)

வந்துநோக்கி வளர்புகழ்க் காசிதான்
முந்த வெத்தனை தூர மொழிகென
அந்தயோக ரறிகிலன் காசியை
எந்தவாறுறு மோவென்றியம்பினர். (ருஉ)

இத்தலைச் சமீபத்தி லிருந்துநீர்
மெய்த்தகாசி விரும்பிக் காணிரெனில்
ஒத்த தம்பிறப் போர்பய னின்றெனச்
சித்தர்முன்பு சிரித்துத் திரும்பினர். (ருங)

வைகு சத்திரம் வந்துற வன்றிரா
வெய்து நாழிகை மூவைந் திடைப்புனற்
றெய்வமான தெரிவையர் மூவரும்
வெய்ய கோரப் புலையுரு மேவியே. (ருச)

குக்குடத் தவயோகர் குடிலிடைப்
புக்கபோது விழிபொருந் தாதெதிர்
நோக்க புண்டலி கர்க்கது தோன்றுறத்
தக்க தாயச்சத் தாங்கினர் பேயென (ருரு)

போன மூவரும் புக்கப் புலையுள
வானகுப்பைகள் சீத்தகல் வித்துப்பின்
தானம் யாவு மெழுகிக் கணத்தனில்
ஈனரூப மிகந்தெழில் மேவியே. (ருசா)

தேசதாக வெளிவரத் தேர்ந்தனர்
மூசுறும்பய மொய்த்தவ ரொன்னெனக்
கூசியாச்சரி யந்தம்முள் ளேகொடு
மாசநீர்புனல் மங்கையர் பால்வந்து. (ருஎ)

மலின ரூபங் கொடுமடம் புக்கநீர்
விலின்மிகுந்து வெளிவர லாயினீர்
அலினடைந்தனிர் யாரெனக் கேட்டனர்
துலியமங்கைய ரிற்கங்கை சொல்லுவாள். (ருஅ)

தொலைவில் பாபபதிதது ரான்மநீ
உலைவிலெம்முன் னுறத்தகு மோபுறம்
விலகடாவென வேவெகுண் டாளிவர்
குலவு கங்கைதன் பாதங் குறுகியே. (ருகூ)

இருகரங்களிற் பற்றியென் னன்னைநீ
மருவுமென்பவ மாற்றி யருள்கெனக்
கருணைமேவக் கலந்துரை யாடினர்
பொருவில் கங்கை யவர்க்குப் புகலுவாள். (சாய)

காலைவிட்டெழுகாணிப்பவர்தனில்
சாலவெவ்வினைதானிழைத்தற்றனை
ஏலுநீமுன்னரொண்ணில்பவந்தொறும்
சீலநல்வினைசெய்துளையாதலால். (௬௧)

இந்தக்குக்கு-டைரயெதிருற்றனை
அந்தப்புண்ணியத்தாலெமையுங்கண்டாய்
எந்தத்தோஷமுந்தீர்ந்தினிநீநலம்
முந்தப்பாவனத்தின்முதிர்வாயென. (௬௨)

கங்கையாணிவள்காளிந்திமற்றந்த
நங்கைவாணிமற்றெம்மைநயந்துதொட்
டங்கண்மூவுலகத்தவரும்பவ
பங்கநீங்கிபவித்திராகின்றார். (௬௩)

அவர்செய்பாவமனைத்தையும்யாங்கொளீஇப்
புவரழுக்குடம்பாகியிப்பற்றிலாத்
தவரினூழியஞ்செய்துதவிர்ந்துநன்
நவவுருக்கொடுநண்ணுதுநாளுமே. (௬௪)

நேரொம்பாவநிமிடத்திற்போக்குறுஞ்
சீரினோர்தகைசெப்பத்தகுந்தவர்
யாரொன்றுளனவும்புண்டலீகர்தாம்
பாரினின்றெழுந்திவ்வுரைபன்னினார். (௬௫)

உங்கள்பாவங்களுந்தெறும்புண்ணியம்
இங்குறைந்தவிவர்செய்ததேதென்றார்
கங்கைதாய்தந்தைகட்கிழைசேவையிற்
பொங்குகின்றதோர்புண்ணியம்வேறிலை. (௬௬)

கோடிபாகப்பலனுங்குவலயம்
நாடியாறுவலஞ்செயுநன்மையும்
ஈடில்காசியையீரிலக்கம்வலம்
கூடுநன்மையுமன்னையைகும்பிடல். (௬௭)

ஒன்றிலெய்தும்பிதாவையொருதரம்
நன்றிசேரவணங்கினன்ஞானமாம்
என்றுகூறிவ்விரண்டினிறைணன்
முன்றுலங்குவனெனபாமுதவரே. (௬௮)

என்றுகொண்டிவ்வருந்தவர்தந்தைதாய்
அன்றிவேறிலைத்தெய்வமென்றறப்பகல்
ஒன்றுசேவையுஞற்றுவர்நாடொறும்
தன்றனன்னையைத்தந்தையைநிந்திப்பான். (௬௯)

தீயொழுக்கத்திற்சேரும்புலையனும்
வாயுங்கற்பமுடிவினுமாய்வுறு
தேயுங்கோரநரகிடையெய்துவன்
மேயுமெத்தனைஜென்மம்விராவினும். (௭௰)

மாவியாதிகள்கொண்டுமெயதுரு
மேவுவானவனைக்கண்டோரும்மிகு
பாவகாரியராவரென்றுள்பயந்
தீர்வையோவெனவாகுலமாயினார். (எக)

கோதுதீர்நரஜன்மத்தைக்கொண்டுநான்
நீதுறுப்பயன்சேர்கிலென்வீண்செய்தேன்
காதுறும்பழிபாவங்கள்கைக்கொண்டேன்
யாதுசெய்வேனிதற்கெனவேங்கினார். (எஉ)

தந்தைதாய்பணிசெய்வதுந்தானொரீஇச்
சிந்தைநொந்துவருந்தச்செய்தேனன்றோ
இந்தவெவ்வினையெங்ஙனந்தீர்வெனென்
றந்தமாதரடிவிழுந்தேங்கினார். (எங)

ஏங்கல்கண்டுமனமிரங்கிக்கங்கை
நீங்கினோயினியேனுந்தெருண்டுளம்
ஓங்குதெய்வமுன்றந்தையுந்தாயுமென்
றீங்குமற்றவர்க்கேபணிசெய்தியேல். (எச)

பாவமும்பழியுங்கழியப்படும்
மூவகைப்புவனங்களுமொய்ப்புறும்
தாவரும்புகழ்ச்சக்கரக்கையனும்
தேவனின்னருளும்முனைச்சேருமால். (எரு)

என்றுகங்கையிருவரொடோதினள்
நன்றுநன்றெனநாடிநயத்துடன்
சென்றுகுக்குடர்பாதத்தைச்சேவித்துத்
துன்றுதாய்தந்தைதம்மைத்துருவினார். (எசு)

வேறு.—கண்டனர்பணிந்திருவரையுங்கற்கிமேற்
கொண்டனரேறமுன்குறித்தகாசிபோய்
அண்டினர்கயைபிரயாகையாதியா
மண்டினர்முழுகினர்மற்றையாரொடே. (எஎ)

அவர்செயுங்கருமங்களனைத்துஞ்செய்வித்துத்
தவரிதம்மனைவியுந்தாமுஞ்சோர்விலா
தவர்பணிசெய்துகொண்டேர்க்குமீண்டனர்
இவர்மனத்துடனகத்திருந்திகாளுமே. (எஅ)

எத்தருணத்தவர்க்கேதுவேண்டுமோ
அத்தருணத்தவர்க்களித்திராப்பகல்
சுத்தராங்குக்குடர்போலத்தூயராய்
வித்தரித்துறுபணிவிடைசெய்தாரரோ. (எகூ)

இப்படிச்சேவைசெய்திருக்குமுன்னுகத்
தொப்புறுவிருத்திரனும்பர்கோமகற்
கெப்பொழுதும்பகையியற்றிக்கொல்லுவான்
தப்புறுபாதலந்தன்னிற்சார்ந்தனன். (அ௰)

ஓரிடத்திருந்தருந்தவமுனூற்றினன்
சாரிடந்தெரிந்தந்தச்சதமகன்புகுந்
தாரியல்வச்சிராயுதத்தினலவன்
சீரியற்சென்னியைச்சேதித்தானரோ. (௮௧)

வெட்டியபோதந்தவிருத்திரன்சினந்
தொட்டியதவத்தையானுனூற்றுபோதினீ
கிட்டியென்றலையறச்செய்தகேட்டினல்
மட்டியல்செங்கலாய்மண்ணில்வீழ்கென்றான், (௮௨)

அவன்றருசாபத்தாலுந்தவிந்திரன்
சிவந்ததோர்கல்லதாய்விழுமுனஸ்ரீதரன்
உவந்துறத்தோத்திரம்பலவுமோதினன்
பவந்தெறுபங்கயபதத்தன்றோன்றியே. (௮௩)

புண்டரீகாசிரமத்திற்போந்தியான்
அண்டுகல்லாமுன்மேலடிவைத்துன்றனைப்
பண்டுருமேவவும்படைத்தென்பாதத்தில்
மண்டுறக்கிடக்கவும்வருப்புனென்றனன். (௮௪)

அன்னவாறன்றுதொட்டடர் திண்டிரத்தில்
துன்னினன்செங்கலாய்த்துன்னவவ்வனம
மன்னியதணிநகராகமற்றதில்
பன்னுபுண்டரீகக்ஷேமபவனமாயதே. (௮௫)

என்றதிற்றந்தைதாய்க்கிணங்குசேவைசெய்
தொன்றினர்பால்வரவுள்ளத்தெண்ணினன்
தன்றுணைத்தேவியைத்திருத்தச்சார்ந்தெதிர்
நின்றவன்வருமுருநிகழ்த்துவாமரோ. (௮௬)

(வேறு.)

தானுறைசெங்கமலமதேமகிமைமிக்கதென்றுநினைசதுமுகத்தோன்
ஆனுடன்செல்லடிக்கமலமகிமையறிந்தன்பர்களேகமையீடேற்ற
வானுதகந்தருசரணின்மிக்கபொருளிலையென்றுவேதவாக்கால்
தானுணாசெய்கின்றதெனத்திருவடியினுபுரங்கடமைத்தொனிக்க. (௮௭)

பலகயிற்றின்யசோதைகட்டிப்பார்த்தளவுபடாமருங்கின்படியாராயக்
குலவுமச்சுவினிமுதலாநாள்களெல்லாமொருசேரக்கூடிவந்து[கோத்துக்
விலகுமொளிவிளங்குறச்சூழ்ந்தனபோலப்பொன்னாணுாண்மினிரக்
கலகலெனவொலிசிலம்புகிண்கிணிகள்சிற்றிடையிற்கலந்திலங்க. (௮௮)

தந்தைதாய்வாக்யபரிபாலனம்செய்சேவையதுதனிற்சிறந்து
வந்தவெனைப்போலுலகிலெவரோனுமச்சேவைசெயவல்லாரோல்
அந்தலத்தாலவர்முன்னுகியளிப்பேனென்னும்விரதந்தோன்றச்
சந்தமிகுமிருகரத்துந்தான்பூண்டகங்கணங்கடயங்கிமின்ன. (௮௯)

காளியன்றன்பணாமுடியிற்காலூன்றித்துகைத்துவென்றகடுமைகண்டம்
மீளிகைக்குளாயினாலிராகுகேதுவைவெல்லலாமென்றெண்ணி
ஆளியுமாறான்சரணென்றலர்கதிருந்திங்களும்வந்தடைந்தாற்போலக்
கோளில்சங்குசக்கரங்கள்பங்கயச்செங்கரங்களிலேகுலாவித்தோன்ற.

பாடியிலும்பிருந்தைவனத்திலுங்கலந்துகளித்தனியின்பஞ்சிறக்கக்
கூடிமகிழ்ந்தேபிரியாக்கோபிகைகள்பிரிந்தவன்றன்கொள்கைதேர்ந்து
வாடிகிறத்திருப்பவட்குத்தெரியாமலனுதினமுமார்பிற்சார
நாடிநவமாமணியாய்மொய்த்தனபோனிறந்தாரகனிகுலாவ. (௯௧)

தம்மிலுமேலானதலந்தனிலிருக்கின்றேமென்னுந்தருக்குச்சார்ந்த
பம்மினஞ்சூழ்ந்திடையளவுக்கெட்டாமலவமானப்படுதனைநீக்கிச்
செம்மியுயர்ந்தோமுமவமானஞ்செய்துமெனவநேகந்திங்க
ளும்மிரவியுஞ்சேர்ந்தாற்போற்செவியிற்குண்டலங்களொளிர்ந்திலங்க.

செருகுமயிற்பீலியெனுங்கண்ணியெழின்மிகுந்திலங்கச்சேர்த்துச்செவ்வி
மருவுமயிர்முடிவயங்கச்சென்னியினீனிறங்கொண்டவண்டுபோலச்
சுருள்சுருளாய்மயிர்த்தொங்கன்மதிவகிர்போலிலங்குநுதற்றுவண்டு [மொய்ப்பப்
பெருகொளிவார்ந்தொளிர்மணிச்சுட்டியும்பட்டமும்பெரிதுபிறங்கித் [தோன்ற (௯௩)

மடங்கலெனவிடையென்னமழகளிறுதானென்னமணிவெற்பென்ன
நடந்தடிகளுறுஞ்சுவடெல்லாஞ்சங்குசக்கரங்கணண்ணித்தோன்றத்
திடந்தருமன்பொடுதந்தைதாய்தன்னைப்பூசிக்குஞ்செவ்விதன்னில்
படர்ந்தவெரிந்புறம்வந்துநின்றானைப்புண்டலிகர்பார்க்கமன்னோ. (௯௪)

தந்தைபதந்தொட்டிருந்தோர்கண்ணனதுபசுஞ்சோதிச்சாயறம்முன்
முந்துறலுந்தேர்ந்திதென்னேயெனவெண்ணிமுகந்திரும்பிமுகுந்தன்
வந்தருகினிற்பதுகண்டுயர்கங்கைவரமின்றேவாய்த்ததென்று [றானே.
சிந்தையுறமகிழ்ந்துதலைவணங்கியருகிற்கிடந்தசெங்கறன்னை. (௯௫)

எடுத்தெறிந்துமற்றிதன்மேற்சற்றுநிற்றியென்பணியானியற்றுகாறும்
அடுத்தகண்ணனேயென்றுகூறவரதுசேவைசெய்தங்கவரிருக்கக்
கடுத்ததும்புகண்டனுங்காணக்கண்ணனிந்திரனுங்கல்லின்மீதே
இடுப்பிலிருகரம்வைத்தங்கவர்செயயுஞ்சேவைகண்டேயினிதுநின்றான்.

புண்டலிகர்தாய்தந்தைசேவைசெய்துமுடிந்தபின்புபொன்னினுடை
மண்டியொளிரச்சுரபியோட்டுங்கோற்சானுநடுவைத்துற்றோன்பால்
அண்டியிடுசெங்கன்மேற்சமசரணமாகிநிற்குமழகுதன்னைக்
கண்டுறுசாஷ்டாங்கமாகப்பணிந்துபேரின்பக்கடலிலாழ்ந்தார். (௯௭)

பலபடிதோத்திரித்துநிற்கக்கருணைவாரிதிநோக்கிப்பத்தருன்போல்
உலகுதனிற்கண்டதில்லைபுண்டலிகாவேண்டுவரமுரைத்தியென்றான்
நலசலோசனச்சாமிமும்மூர்த்திவடிவமுநீதானேயாகி
நிலவுகின்றபடியாலுமூடரையுத்தரிக்கின்றநீர்மையாலும். (௯௮)

விட்டலநாமம்புனைக்தெப்போதுமிந்தப்படியாகமேவிநின்னைக்
கிட்டிவணங்கினரெல்லாப்பவந்தீர்ந்துபரிசுத்தர்களாகச்செய்து
மூட்டறுமென்பெயர்ச்சார்பாலித்தலம்பண்டரியென்றுமொழிவதாக்கி
மட்டிலிந்தத்தலச்சார்பாற்பாண்டுரங்கமாழ்நீவாய்த்தியின்னுமை (௬௯)

இத்தலத்திற்றீர்த்தங்களனைத்துக்குஞ்சிறந்ததாயொன்றியற்றி
அத்தகுதீர்த்தத்தாடினோர்புனிதராகவேயமைத்தியென்றார்
உத்தமநீவேண்டியவாறாகவெல்லாந்திரிபுவனத்துள்ளதீர்த்தம்
அத்தனையுமின்றாடிப்பகலினிலேவருமென்றுமமைவதாக. (௭)

என்றருளினன்கண்ணனுலகினுள்ளதீர்த்தமெல்லாமத்தியானத்
தொன்றுறுமாறுடோறுமத்தீர்த்தத்தெனவுணர்தியுமையேநான்முன்
துன்றுதிரிபுரதகனஞ்செய்ததிறன்மிகவருந்துதுன்பந்தீர
நன்றுறுபீமாசங்கரித்தலத்திற்றவம்புரிந்துநண்ணுங்காலே. (௭௧)

என்னுடம்பில்வேர்வையுண்டாகிப்பெருகிப்பீமாவென்னும்பேர்பூண்டு
துன்னுமதென்ஞானசக்திதனைக்கொண்டுபெருந்தமுனிதோன்றநேர்ந்
துன்னுபுண்டலீகரதுமனைவரையுமத்தலத்திலுறைவதாகி [த.
மன்னுறுபீமசேனபயிரவன்றாழுனிதனைத்தெரிந்துமனம்பொருனாய்.

கண்ணனிங்குவந்திருக்கசசற்றுமஞ்சாதிந்நதியிக்கடுமைகொண்டு
நண்ணறகுமோவென்றுதன்கரததின்கதையதனைநாடிவீசி
அண்ணியநன்னதியேநின்னமலையதன்கடுமையினையடக்கிமேவு
கெண்ணுறுமித்தலத்தென்றானப்படியேயூமையைப்போலிரைச்சலின்றி.

தனைக்கண்டோர்பவமெல்லாந்தகித்துக்கங்காநதிபோற்சார்ந்துநேர்கண்
ணனைத்துன்றியிடமாகச்சூழ்ந்துபிறைபோற்றெற்கினனுகிக்கீழ்த்திக்
கினைத்துன்றிப்போதலினாற்சந்திரபாகையென்றுபெயர்களத்தலாகி
முனைப்பொன்னல்வருசாபமதிமுழுகித்தீரானுதீர்த்தமுன்னே. (௭௪)

புண்டலிகரிடுகன்மேனின்றருளுங்கண்ணனடிப்போதைப்போற்றிக்
கண்டுயர்பாவனமாகலாமென்றுநாடோறுங்கருத்துட்கொண்டு
மண்டுகின்றதின்றுமதின்மூழ்கிவிட்டலனைக்கண்டமாத்திரத்தில்
அண்டுபலபவந்தொறுஞ்செய்பவமெல்லாந்தீர்ந்தவனுக்கடிமையாவார்.

(வேறு) தன்முனின்றகண்ணன்புண்டலீகர்முன்சார்வேன்
நின்முனேயெனச்சென்றபின்பிரிவுறநேரா
மன்முன்றாமரைமலர்வயின்வந்தருள்செல்வப்
பொன்முன்சென்றருளங்கிலேசிறிதியாம்புகல்வாம். (௭௬)

குழலுக்குத்தொலைவண்டுகள்மலர்வயிற்கூட
நிழல்செய்மெய்யின்மென்மைக்கஞ்சியுதுகிலாக்குழையோன்
உழையுறத்தனதன்னைவெம்பகையெனவோரான்
விழைவுறச்செய்துகொண்டதின்மெய்யிலனுனன். (௭௭)

விழிக்குத்தோற்றமான்மதிவயினடையகான்வெல்வேன்
இழிப்புறும படிக்கென்றதமுகத்தினுக்கிழிந்து
மழுக்கரத்தினென்பால்வரத்திருவுக்குமாறென்
றொழிப்புறாதுகொண்டதிற்பித்தனையினேனுலகில். (௱அ)

முறுவற்கோடியமுத்தூவெண்களிற்றிடைமுடுக
நறுமென்கொங்கைக்குத்தோற்றதிந்திரன்வயினனுகச்
செறியிரண்டையுந்திருவின்வெம்பகையெனத்தேறான்
உறவுகொண்டதாலுடம்பெலாந்தொளைபடலுற்றான். (௱௯)

வெருவிவெள்வளைமிடற்றிற்குப்பாற்கடன்மேவக்
கருணையங்கடற்கொல்கியகடல்கண்ணன்றன்னை
மருவமாப்பகையென்றெணான்கூடிவாழ்ந்ததனால்
உருவம்வாமனனாகிமண்ணிரந்தனனொருநாள். (௱௰)

நடைகண்டஞ்சியவன்னமென்னளினத்தைநண்ண
மிடைசிலம்படிக்கிழிந்ததுவிதிவயின்மேவி
யடையலோகமாதாப்பகையெனவறியாமல்
உடைமையாக்கலினொருதலைகழிந்திழிவுற்றான். (௱௰௧)

இனையராயுறினெவரவள்கருணைவேண்டாதார்
அனையள்செவ்வியுமவயவமுஞ்சொலற்காமோ
எனையராயினுமெழிற்கரசாயவிந்திரைதான்
புனைவுறுங்கலனுண்டெனச்சேடனேபுகல்வான். (௱௰௨)

எண்ணிநாப்பிளவாயினனாயிரமிரண்டாய்
மண்ணினைச்சுமப்பதுமந்தவடிவினாலன்றே
கண்ணினுக்கணிகலனுண்டோகலன்களுமுண்டென்
றுண்ணினைப்புறப்பற்பலபூண்களுமொளிர. (௱௰௩)

பிடிதொடர்ந்ததுகளிற்றினையெனநிகர்பேச
அடிதொடர்ந்துவந்தாள்விட்டலன்றனையண்மிக்
கடிதொடர்ந்தமுல்லையினகைகவினக்கற்பகத்தைக்
கொடிதொடர்ந்தெனநின்றனளிடவயிற்கூடி. (௱௰௪)

பதம்பெற்றோங்கியவிந்திரன்றச்சனைப்பார்த்து
மதம்பெற்றெய்துகைம்மலைமருப்பிறுத்தவனருளால்
கதம்பெற்றார்சுடராழிமேற்பண்டரிகவினும்
இதம்பெற்றார்வுறவதனதுமத்தியத்தினுக்கு. (௱௰௫)

பிந்துதீர்த்தமென்னும்பெயர்பெற்றதினடுவில்
முந்துகின்றதுதிரிகூடரூபமாய்மொழியத்
தந்துநின்றதிலர்த்தமாத்திராவெனத்தக்க
மைந்துறுந்தனிப்பீடத்திற்செங்கண்மேல்வயங்கும். (௱௰௬)

விட்டலன்றனக்கினியதோர்விமானமும்விளக்கிக்
கட்டமைந்தபொற்கோபுரமதின்முதற்கவினப்
பட்டணந்திகழ்வுறச்செய்தியென்றனன்பகர
உட்டதும்புமின்புற்றனன்கண்ணனூழியத்தில். (௱௰௭)

மதிலுங்கோபுரவாயிலும்விமானமுமற்றும்
புதியதிங்கிதுபோலெங்குமின்றெனப்புகல
நிதியுஞ்செம்மணியுங்கொண்டுரியமித்தானமரர்
பதியின்விஞ்சியபதியெனலாயிற்றப்படிமேல். (௱௰அ)

கண்ணமாநதிதனக்கும்வெண்பாலெனக்கருதும்
வண்ணமானகோதாவிரிநதிக்குமத்தியத்தில்
நண்ணுகின்றதுபண்டரிநகரதனுப்பண்
எண்ணரும்ஜயவிஜயர்காப்புறத்தளியிலங்கும். (௱௰௯)

முனிவர்வானவர்சாமிதன்சேவைக்குமுந்தி
இனிதினேர்சமயந்தனைநோக்கினரிருபபார்
துனியதும்புருநாரதர்கானஞ்செயதுறுவார்
கனிவின்வாத்தியமுழக்குவர்யக்ஷகாந்தருவர். (௱௨௰)

அரம்பைமேனகைதிலோத்தமையாதியரண்மித்
தரந்தரந்தினர்த்தனந்தாஞ்செய்துதழைப்பார்
நிரம்பநீள் *ககம்பத்தினேர்ந்தரிபஜனை
பரம்புமன்பொடுபரமபாகவதர்கள்பயில்வார். (௱௨௰௧)

எனவுமாபதிபார்வதிக்கிசைத்தனனிதனை
அனகரானவரறிந்தனர்தேறுவதன்றி
மனனடங்கிடாவாககிற்குமன்னதேமலர்க்கோ
கனகைதான்ரகுமாயியாய்மாலொடுகளிக்கும். (௱௨௰௨)

வேறு.—நீண்டுரங்கனைவாகுறுமாதுலனேவலினிமிர்கேசி
மாண்டுரங்கனைவாய்பிளந்தானைநன்மதிப்பதின்மரும்வாழ்த்தி
வேண்டுரங்கனைவிண்ணகத்தருந்தினம்வீழ்ந்துதோய்மதித்துண்டப்
பாண்டுரங்கனைப்பழமறைகளுந்தெரிந்துணர்தராப்படியானை. (௱௨௰௩)

(இதன்பொருள்.) நீண்டுரம்-பலத்தால் நீட்சியுள்ளனவாய், கல்-மலைகளுங் (கண்டு,) நை-மெலிவதற்கேதுவான, வாகு-தோள்களின், உறு-பொருந்தினவனுன மாதுலன்-அம்மானாகிய கஞ்சனுடைய, ஏவலின்-உத்தரவினாலே, நிமிர்-உயர்ந்துவந்த, கேசி-கேசியென்னும்பெயரையுடைய, மாண்-பெரிதாகிய, துரங்கனை-குதிரையுருவானவனுடைய, வாய்-வாயை, பிளந்தானை-பிளந்தவனும், நன்மதி-நல்லதறிந்த மெய்ஞ்ஞானிகளாகிய, பதின்மரும்-பத்தாழ்வார்களும், வாழ்த்தி-பல்லாண்டுசொல்லி, வேண்டு-பிரார்த்திக்கத்தக்க, ரங்கனை-ஸ்ரீரங்கநாதனும், விண்ணகத்தரும்-ஆகாசவாசிகளும், தினம்-எப்போதும், வீழ்ந்து-விரும்பி, தோய்-

* ககம்பம்—கருடகம்பம்.

முழுகத்தக்க, மதித்தண்டம்-சந்திரபாகையென்னும் நதியையுடைய, பாண்டுர ங்கனை-இத்திருநாமமுள்ளவனும், பழமறைகளும்-பழயவேதங்களும், தெரிந்து-மேன்மைதெரிந்தும், உணர்தரா-தெரியாமல் மயங்கத்தக்க, படியானை-ஸ்வரூப முள்ளவனும்,—ஐ-காரநான்கும் சாரியையிடைச்சொல்.

பண்டரிக்குழலூதினவனைக்கடற்படவரவணைமேறைப்
பண்டரிக்குநீசெங்கன்மேனில்லெனப்படிநின்றபுரமேதோ
பண்டரிக்குவிறுணைனவிசைத்தலிற்பழமறையெனப்பாடும்
பண்டரிக்குநேருளதெனச்சொல்வதெப்படியென்றப்படிமேவும். (௫௨௪)

(இ—ள்) பண்டு-முன்னாளில், அரிக்குழல்-பச்சைமூங்கிற் குழல்கொண்டு ஊதினவனை-ஊதினவனுமான (கண்ணனைநோக்கி,) (இவளவுமொருதொடர்)கடல்-திருப்பாற்கடலில், படம்-ஆயிரம் படங்களையுடைய, அரவணைமேல்-சர்ப்பசயனத்தின்மேல், நாப்பண்-நடுவே, தரிக்குநீ-தங்குகின்றநீ, செங்கன் மேல்-இற்றிரணிய செங்கலின்மேல், நில்லெண-நிற்கக்கடவை யென்ற, அப்படிநின்ற-அவ்வகையே நில்லாநிற்கிற, புரம்-நகரம், ஏதோ. இதுவல்லதெதுவுள்ளது. பண்டர்-பாடற்கிழ்மக்கள், இக்குவில்-கரும்புவில்லுக்குள்ள, நாணென-நாரியாகிய வண்டென்னும்படி, இசைத்தலில்-ஒலிப்பதனாலே. பழமறையென-கேட்டோர் பழையவேதகானமேயென்றுமதிக்க,பாடும்-அப்பண்டாகள்பாடிக்கொண்டிருக்கிற,பண்டரிக்கு-பண்டரிபுரத்துக்கு,நேருளதென-நிகராயிருப்பதுமொருபுரமுண்டென்று, சொல்வது-சொல்லத்தக்கது, எப்படியென்று-எந்தக் காரணத்தினலென்று, அப்படி-அந்தப்பண்டரிபுரமென்னுமூர், மேவும்-விளங்குதலாயிருக்கும். (படி-பூமி, ஊர்மேனின்றது,) "செல்வம் விரும்பினர். செல்லலடைந்தோர். அல்லல்கெடுத்தெனை-யன்புசெய்வோர்கள். நல்லதறிந்த மெய்ஞ்ஞானியிந்நால்வரும், வல்லதிலென்னை-வண்டகுதவத்தோர்," என்பது பகவற்கீதை. இதனலதிகாரிகள் நால்வருண்டென்று கொள்க. நாப்பண்மேல்-பாம்பினடுவிலென்று கொள்வதேயன்றிக்கடனுப்பணென்று கூட்டவுமாம்.

அங்குசந்திரணமதெனவருமதயானையினமுதன்னார்
வெங்குசந்திரமுறநடுக்கோளரிமெலிவுறல்வியப்பென்னத்
தங்குசந்திரமியமிகமணஞ்செறிதலைவரினினிதாடப்
பொங்குசந்திரபாகையென்றொருநதிபொலிதரும்புரத்தோர்சார். (௫௨௫)

(இ—ள்) அங்குசம்-தோட்டியை, திரணமதென-துரும்பெனநினைத்து, வரும்-பாகனுக்கடங்காமல்வருகிற, மதயானையின்-மதயானைபோல, அமுது-தேவரமுதத்தை, அன்னார்-ஒத்தபெண்களது, வெம்-விருப்பைத்தருகிற, குசம்-தனமானது, திரமுற-நிலைகொண்டிருக்க, நடு-இடையாகிய, கோளரி-சிங்கமானது, மெலிவுறல்-இளைத்தல், வியப்பென்ன-ஆச்சரியமென்னும்படி, தங்கு-மார்பிலே பூசுதலான, சந்து-சந்தனவாசம், ரமியமிக-பிரியம் மிகுதியாக, மணஞ்செறு-புணர்ச்சிசெய்கிற. தலைவரின்-நாயகர்போல, இனிது-சந்தோஷமாக, ஆட-புணர பொங்கு-பூரித்துவருகிற, சந்திரபாகையென்று-இப்பெயருள்ளதாய், ஒருநதி-ஒராறு, பொலிதரும்-நிறைவுபெற்றுவரும் புரத்து-அப்பண்டரிபுரத்துக்கு, ஓர்சார் ஒருபக்கத்தில் (நதி அமுதன்னார் முலைத்தடத்தைச் சந்தனமணஞ் செறிதலால்-நாயகன்போலினிதாடப்பொங்கி வருமென்றார்.) கவி. அது பகுதிப்பொருள் விகுதி.

மண்டலீகரைவரைப்புரந்தவனருள்வடிவினின்வடிவாமோர்
குண்டலீகரையில்லையென்னவுமொளிகுலவுறுமனைமார்பின்
வண்டலீகரைம்முகன்பிரமன்சதமகன்முதலமரேசர்
புண்டலீகரைப்போற்றொலிகேட்டெழுபுண்ணியர்புலிபோல்வார். (௱௨௬)

(இ—ள்) மண்டலீகர்-அரசர்களாகிய, ஐவரை-பாண்டவரை, புரந்தவன்-ரக்ஷித்தவனான (கண்ணன்,) அருள்வடிவின்-அனுக்கிரகிக்கத்தோன்றின பலவுருவங்கள்போலவே, நின்வடிவு-உன்னுருவமும், ஆம்-பலவாயிருக்கும், ஓர்குண்டலீ பலராமனேகரையில்லை (எந்நின்றயோனியுமாய்ப்பிறந்தாயென்பதனை) ளவில்லையாம் (நின்வடிவுகரையில்லையாமெனக்கூட்டுக.) என்னவும்என்றுவமிக்கவும் ஒளி-வெண்சோதி, குலவுறும்விளங்கிக்கொண்டிருக்கும், மனை (பண்டரிபுரத்து) வீடுகள், மார்பின்-மார்பிலே, வண்டலீகர்-ஈகவண்டல், சந்தனக்குழம்பு பூசின புருஷர்கள் (அம்மனைகளிலுள்ள புருஷர்கள்,) ஐம்முகன்-சிவனும், பிரமன்-வேதாவும், சதமகன்-இந்திரனும், முதல்-முதலான, அமரேசர்-முப்பத்து மூவரும், புண்டலீகரை-இப்பெயருள்ளவரை, போற்று-துதிசெய்கிற, ஒலிகேட்டு-சத்தங்கேட்டு, எழு-நித்திரை தெளிகின்ற பரிசுத்தர்களே, புலி போல்வார் "வீரத்தாற் புலிபோல்வரான மார்பின் வண்டலீகர் வடிவுமாமென உம்மைத்தொக்குநிற்றல் கொள்க." மனை-பலராமனுக்கொப்பிடவுமென்பதிலும்மைச் சிறப்பு. புண்டலீகரென எதுகைநோக்கி நீட்டிக்கிடக்கிறது.

உந்தியம்புயப்பொகுட்டொளிபொன்னுலகுடையவனொளிதேநீர்
உந்தியம்புயல்வீசலிற்பாற்கடலொளிவெள்ளிமனையாக
உந்தியம்புயர்கடன்மடுத்தோடுவதுடுபதித்துணிபாத
உந்தியம்புயமாணிக்கமதிலொளியுற்றசெவ்விதழ்போலும். (௱௨௭)

(இ—ள்) உந்தியம்புயப்பொகுட்டொளி-திருவுந்திக் கமலத்திலுள்ள கன்னிகையொளியே, பொன்னுலகு-சுவர்னமயமான தேவருலகமாகவும், உடையவனொளி-அப்பதுமநாபியையுடையவனொளியே, தேநீர்-தித்திப்புள்ளநீரை, உந்தி-சிதறுவதாகிய, அம்-அழகிதான, புயல்-மேகநிறமாகவும். வீசலில்-உடையவனொளிவீசுவதனாலேமேகம்நிறம்பெற்றதென்க. அப்படியே பொகுட்டொளிவீசுவதனாலே பொன்னுலகென்றும். பாற்கடலொளி போல்வன, வெள்ளிமனைகளாகவும், தீயம்பு-அக்கினிபாணத்தினாலேவெந்து, உயர்-நடக்கக்கரையாகியுயர்ந்த, கடல்மடுத்து-தென்கடலளவுங்கிழித்துக்கொண்டு, ஓடும்-பாய்வதான, உடுபதித்துணி-சந்திரபாகை, பாதவுந்திஅம்பு-உடையவன்பாதத்துள்ள கங்காஜலமேயாம், உய-எல்லாரும் உச்சீவிக்க, மாணிக்கமதிலொளி-ரத்னமயமான மதிலொளியானது, உற்ற-உந்தியம்புயத்திற்பொருந்தின, செவ்விதழ்-சிவந்த இதழ்களினொளியை, போலும்-ஒக்கும். "திருப்பாற்கடல் போலிருக்கின்றது வெள்ளைவீடுகளாற்பண்டரிபுரமென்பது கருத்து." வீசல்-எங்குங்கூட்டுக, "தேநீர்உந்தியம்புயத்துத்தேனை நீராகக்கொண்டு மேகம்வீசுமென்க." ஆகவே அங்கும்பெய்யுமேகநீர் தேன்போல்வதென்று கருத்து.

இதிலுமாபதிநினக்கிலின்றொன்றென்பதிற்றெரியெழின்மாடம்
எதிலுமாபதியெனத்தெளிவுறாகைத்தெழூவெள்ளிவெண்சோதி
அதிலுமாபதியழகிதன்றுணர்திரென்றமராருக்கறிவிக்கும்
மதிலுமாபதிமார்பினன்கோயிலுமாணிக்கமணிச்சோதி. (௱௨௮)

(இ—ள்) இதில்-இப்பண்டரிபுரத்தில், உமாபதி-சிவனே, நினக்கு-உனக்கு இல்இன்று-வீடில்லை, ஒன்றென்பதில்-வெள்ளிமலையொன்றுதானென்பதினு

லும், தெரி-இங்குப்பலவெள்ளிமலைகளிருப்பதனுலும் தெரிந்துகொள், ஏழில்-வெள்ளையழகு நிரம்பின, மாடம்-உபரிகைகள், எதிலுமா-எல்லாவற்றிலுமோ, பதி-உனக்கு வீடு, என-என்று: தெளிவுற-அந்தச்சிவன் விசுவசிக்க, நகைத்து-பிரகாசித்து, எழு-கிளர்கின்ற, வெள்ளிவெண்சோதி-வெள்ளிபோலும் வெண்ணிறச்சோதியாகிய, அதில்-அதனாலே, உம்-உங்களுடைய, மாபதி-பெரியநகர், அழகிதன்று-அழகுள்ளதன்று, உணர்திரென்று-தெரியுங்களென்று, அமரருக்கு-தேவர்களுக்கும், அறிவிக்கும்-சோதியாற்றெரியச்செய்யும் வீடுகள், மதிலும்-மாணிக்கமதிலும், மா-லக்ஷ்மி, பதி-தங்கின, மார்பினன்-மார்புள்ள பாண்டுரங்கன்; கோயிலும்-பெரியகோயிலும், மாணிக்கம்-ரத்நத்தினது, மணிச்சோதி-அழகியசோதியுள்ளனவாம். சிவனும், தேவரும் நாணச்சிரித்தென்பது தோன்றநகைத்தென்றார்-கவி-எதுவென்னும் வினாப்பெயரீண்டுப்பன்மைகுறிக்கின்றது.

இணைவிமானத்தைத்திங்களைநாட்குலமெனப்பிறந்தினிதைவர்
துணைவிமானத்தைக்காத்தவன்றேவருந்தொலைவுறத்தொனியாலே
உணைவிமானத்தையூதியென்றுயர்வறவுயர்நலந்தழைத்தோங்க
அணைவிமானத்தையருமறைச்சிரமென்பதன்றியொன்றறியேனே. (௩௨௯)

(இ—ள்) இணை-ஆகாயத்திலே சேர்கின்ற, விமானத்தை-உரோகணியையும், திங்களை-சந்திரனையும், நாள்-ஜன்மநக்ஷத்திரம், குலம்-வம்சம், என-என்ன, பிறந்து-அவதரித்து, இனிது-நன்றாக, ஐவர்துணைவி-திரௌபதியினது, மானத்தை-வெட்கத்தை, காத்தவன்-வராமற்றடுத்தவன், தேவரும்-அமரர் கூட்டமும், தொலைவுற-மூர்ச்சிக்கவும், தொனியாலே-சத்தத்தினாலே, உள்-அவர்களுள்ளத்தை, ஐவி-கலங்கவும்,மால்-பெரிதான, நத்தை-சங்கை, ஊதி-ஊதினவன் என்று, உயர்வு-தனக்குமேலோருயர்வு, அற-இல்லாமல், உயர்-உயர்கின்ற, நலம் ஆனந்தகுணம், தழைத்து-மிகுந்து, ஓங்க-வளர, அணை-நித்தியவாசஞ்செய்கிற விமானத்தை-நிலையிடத்தை, அரும்-கற்கவரிதான, மறைச்சிரம்-வேதமுடியே, என்பது-என்று சொல்வது, ஒன்றன்றி-ஒன்றேயல்லது, ஒன்று-வேறொன்று சொல்ல, அறியேன்-தெரிகிலேன்.

வரகுமாயிருவிசும்பெனவுயர்கதிமருவுறவழிகாட்டி
நரகுமாயியலறம்பொருளின்பங்கணணுகவும்விழைவேற்றி
விரகுமாயினவித்தகன்மாணின்பின்விரைவுறமிகுமாலேற்
றரகுமாயிபொற்கோயில்பண்டாரத்திலுளதுபண்டரியூரில். (௩௩௰)

(இ—ள்) வரகு-சிலாக்கியமான்பூமி அது சுவர்க்கலோகம், மாயிருவிசும்பு-மிகப்பெரிய ஆகாசம் அது பரமபதம், என-என்று, உயர்கதி-உயர்ந்த ஸ்தானமானவற்றை, மருவுற-தக்கபடிசேர, வழிகாட்டி-உபாயநெறியைக்காட்டி, நரகு-துன்பத்தை, மாய்-கெடுக்கத்தக்க, இயல்-இயற்கையுள்ள, அறம்பொருளின்பங்கள்-தர்மார்த்தகாமங்களை, நணுகவும்-அடையவும், விழைவு-ஆசையை, ஏற்றி-மிகச்செய்து, விரகும்-போதிக்கும் ஆசாரியனும், ஆன-தானேயான, வித்தகன்-சர்வஞ்ஞன், மாணின்பின்-ஒருமாயமாணின்பின்னே, விரைவுற-விரைந்துசெல்ல, மிகுமால்-மிக்கமோகத்தை, ஏற்று-உயர்த்துகின்ற, ரகுமாயி பொற்கோயில்-பொன்மயமானகோயில், பண்டாரத்தில்-எல்லார்க்கும்பொக்கிஷசாலைபோல், பண்டரியூரில்-பண்டரிபுரத்திலே, உளது-இருக்கின்றது.

வேறு.—அரியதிருவடியிலங்கைக்கரசனிடுஞ்சிறையிரண்டைந்திங்களங்கைச்
சரியதிருவடியங்காவகைதுந்தாந்திருவடியுந்தயங்கக்காலற்
குரியதிருவடிப்பிணிக்கமூவடிமுன்பிணியாமலூர்ந்துதோன்றப்
பெரியதிருவடிமுகப்பில்விளங்கவிடோபாவிளங்கும்பெரியகோயில் (௱௪௧)

(இ—ள்) அரிய-கிடைத்தற்கரிதான, திரு-மகதைஸ்வரியம், வடி-பெருகி யொழுகுகின்ற, இலங்கைக்கு-இலங்காபுரிக்கு, அரசன்-ராஜனுனராவணன், இடும்-வைத்ததான, சிறை-காவலில், இரண்டைந்திங்கள்-பத்துமாதமும், அங்கை-அழகியகைகளில், சரி-வளையல்கள், அதிர்-ஒலிக்கின்ற, உவள்-மார்பின்மத்தியிலிருக்கிற சீதாபிராட்டி, தியங்காவகை-கலங்காதபடி, அதாம்-அதனுகிய, திருவடியும்-சிறியதிருவடியான அனுமாரும், தயங்க-விளங்க, காலற்கு-யமனுக்கு, உரியது-பாத்தியமுள்ளதான, வடி-பாசத்தால், பிணிக்க-கட்டும்படி, மூவடி-முப்பர்சம் பொன்னிலமாதராசை, முன்-முந்தி, பிணியாமல்-சூழாதவகை, ஊர்ந்து-ஏறிவந்து, தோன்ற-பிரசந்நமாக, பெரியதிருவடி-கருடனும், முகப்பில்-முன்புறத்தில், விளங்க-தோன்றுதலாக, விடோபா-ஸ்ரீபாண்டுரங்கன்விளங்கும், தோன்றுவதாயிருக்கும்-பெரியகோயில்.

விட்டலன்றிப்பகலுமிளிர்விதுமுகன்சுந்தரவடிவன்விளம்பநாத்தெ
விட்டலன்பஞ்சவர்தூதுவிளம்புமவனுகப்புவியின்முன்னுதல்
விட்டலன்பின்றோன்றினவன்புண்டலிகவரதன்மிளிர்பாண்டுரங்க
விட்டலன்றன்றிருமேனிதழுவுகெனவெவர்கண்முனும்விளங்குங்கோயில். ()

(இ—ள்) விட்டு-விஷ்ணுவென்னு நாமமுள்ளவனும், அல்-இரவில்விளங்குவதை, அன்றி-அல்லாமல், பகலும்-பகற்காலத்திலும், மிளிர்-விளங்குகின்ற, விது-சந்திரன்போலும், முகன்-முகமுள்ளவனும், சுந்தரவடிவன்-புருஷலக்ஷணமுழுதுநிரம்பினவடிவுள்ளவனும், விளம்ப-துதிக்க, நா-நாவுக்கு, தெவிட்டலன்-தெவிட்டாதவனும், பஞ்சவர்-பாண்டவர்க்காக, தூது-சொன்னதைப்போய் விளம்புவன்-சொல்கின்றவனும், ஆக-தானேயாக, புவியில்-உலகத்தில், முன்னுதல்விட்டு-முன்னே பிறப்பதைவிட்டு, அலன்-அலாயுதனனபலராமனுக்கு, பின்-தம்பியாக, தோன்றினவன்-பிறந்தவனும், புண்டலீகவரதன்-இப்பெயருள்ளவனும், மிளிர்-செங்கன்மேல்விளங்குகின்றவனுமான, பாண்டுரங்க-விட்டலன்-இத்திருநாமமுள்ளவன், தன்-தனது, திருமேனி-திவ்வியசரீரத்தை, தழுவுகென-யாவரும் ஆலிங்கனஞ்செய்யுங்களென்று, எவர்கள்முனும்-எல்லாருக்குமுன்னே, விளங்கும்-விளங்குவதாயிருக்கும், கோயில்-பெரியகோயிலென்பது.

கோபுரந்தவமையமதிற்சோதனைசெய்தவிருமலர்க்கோயிலானும்
கோபுரந்தரனும்பயந்துகூசுமனங்குளிர்வதெனக்குளிரநோக்கிக்
கோபுரந்தங்குதலாகித்தினந்தினமுஞ்செழுங்கரங்கள்கூப்பவோங்கும்
கோபுரந்தன்னொளிவீசிக்குடிலமுகடளவுதெரிகொழும்பொற்கோயில், (௱௪௩)

(இ—ள்) கோ-பசுக்களை, புரந்த-பரிபாலிக்கிற, அமையமதில்-காலத்தில் சோதனைசெய்து-பரிக்ஷைபண்ணி, அவிரும்-விகசிப்பதான, மலர்க்கோயிலானும்-திருவுந்திப்பூவிலிருப்பவனும், கோ-தேவர்க்கரசனுகிய, புரந்தரனும்-இந்திரனும், பயந்து-அஞ்சி, கூசும்-கூசுவதாகிய, மனம்-உள்ளம், குளிர்வதென-இப்போதுகுளிர்வதுபோல, குளிர-கண்கள்குளிர, நோக்கி-பார்த்து, கோ-பெரியவான, புரம்-நகர்களிலே, தங்குதலாகி-இருந்துகொண்டு, தினந்தினமும்-நாடோறும்செழுங்கரங்கள்-செங்கைகள், கூப்ப-குவிக்க, ஓங்கும்-நீண்டிருப்பதான

கோடிரம்-கோபுரத்தாழ்வான், தன்ஒளி-தனதுகாந்தியை, விசி-ஜ்வலித்துக்கொண்டு, குடிலமுகடு-அண்டமுகட்டின், அளவு-அளவை, தெரி-தெரியச்செய்கிற, கொழும்-உயர்ந்தமாற்றுள்ள, பொற்கோயில்-பொன்மயமான பெரியகோயில், "அண்டமுகடெவ்வளவென்றால் பாண்டுரங்கன்கோபுரத்தளவென்று தெரியச்செய்யுமெனக்கொள்க."

மாணிக்கங்கரனிபம்பெறத்தந்துவாங்குபிர
மாணிக்கந்தரத்தினுநிலையிலையெனவைதோர்
மாணிக்கந்தரநிறவிடோபாநிறம்வயங்கும்
மாணிக்கந்தனிப்பொன்றுழாய்நிழலிடைவைக. (௱௩௪)

இ—ள்) மாண்-ரசமாட்சியுள்ள, இக்கு-கரும்புவில்லைக்கொண்ட, அம்-அழகிதான, கரன்-கையையுடையமன்மதன்: இபம்-இருளாகிய யானையை, பெற-பெற்று, விஜயஞ்செய்ய, தந்து-முன்னேகொடுத்து, பின்வாங்கு பின்னேயில்லாமற்செய்கிற, பிரமாணிக்கு அளவுள்ளசூரியனுக்கு. அந்தரத்திநும்-ஆகாயத்திலும், நிலையிலையென-நிற்பதற்கவகாசமில்லையென்று, வைது-இகழ்ந்து, ஓர்-ஒப்பில்லாத, மாணி-வாமனபிரமசாரியான, கந்தரநிறம்-மேகநிறமுள்ள, விடோபா-பாண்டுரங்கன், நிறம்-மார்பில், வயங்கும்-விளங்குவதாயிருக்கும், மாணிக்கம்-கவுத்துவமணி, தனி-ஒப்பில்லாத,பொன்-லக்ஷ்மிதேவி,துழாய்-துளசிமாலையினது, நிழலிடை-நிழலில், வைக-ஒதுங்கிவர்த்திக்க, விடோபாநிறத்தில் ஒரு மாணிக்கம்விளங்குமெனக்கொள்க.

மெச்சியந்தருபேரொலிவிரிப்பதைவினவி
நச்சியந்தரர்நணுகிநாடொறுந்துதிநவில்வார்
இச்சியந்தவழ்மேனியைத்தழுவுவதேசா
யுச்சியந்தனிப்பதவியென்றொருவிடோபாவை. (௱௩௫)

(இ—ள்) மெச்சு-புகழத்தக்க, இயம்-வாத்தியங்கள், தரு-வழங்குகின்ற, பேரொலி-பெரிய சத்தமானது, விரிப்பதை-பூசைவேளையென்று சொல்வதை, வினவி-கேட்டு, நச்சி-விரும்பி, அந்தரர்-ஆகாசவாசிகள், நணுகி-கிட்டிவந்து, நாடொறும்-தினந்தினம், துதி-தோத்திரங்களை, நவில்வார்-சொல்லுவார்கள்,இச்சி-யாரும்விரும்பத்தக்க, அம்-அழகு, தவழ்-ஒழுகுகின்ற, மேனியை-விடோபாதிருமேனியை, தழுவுவதே-ஆலிங்கனஞ் செய்வதே, சாயுச்சியம்-ஒன்றாகுகின்ற, தனி-ஒப்பில்லாத, பதவியென்று-நாலாம்பதவியென்று, ஒரு விடோபாவை, ஒப்பில்லாதபாண்டுரங்கனைத்து திநவில்வாரெனக்கூட்டுக,

வேனலம்பதிதனைத்தருவிட்டலன்மேவூர்த்
தேனலம்புறுபூந்தடஞ்சோலைதேங்கழனி
மானலந்தரத்திலையெனச்சுவைவளமலிந்து
பானலந்தரப்பாய்வதுசந்திரபாகை. (௱௩௬)

(இ—ள்) வேனலம்பதிதனை-வசந்தகாலத்தரசனாகியமன்மதனை, தரு-பெற்ற, விட்டலன்-பாண்டுரங்கன், மேவு-வாசஞ்செய்கிற, ஊர்-பண்டரிபுரத்தில், தேன்-வண்டுகள், அலம்புறு-சத்திக்கின்ற, பூந்தடம்-பூக்களையுடைய குளங்களையும், சோலை-உத்தியானவனங்களையும், தேம்-தேனும்பாய்கிற, கழனி-வயல்களையும், மானல்-ஒப்பாக்க, அந்தரத்து-மேலுலகங்களிலும், இலையென-இல்லையென்றுசொல்லுவதாக சுவைவளம்-ரசப்பெருக்கு, மலிந்து-மிகுந்து, பால்-பாலினது, நலம்-சுவையை, தர-தருவதாக, பாய்வது-எங்கும்பரவத்தக்கது சந்திரபாகை.

கரும்புஞ்சாலியுங்கரிபரிமறைவுறாஉங்கழனி
விரும்புஞ்சாலியுங்கற்பினர்மென்னகைமிளிர்புத்
தரும்புஞ்சாலியைமதுவெனத்தரும்புருடரிற்றேன்
சுரும்புஞ்சாலியவிதழுணும்பண்டரிச்சோலை. (௩௩எ)

(இ—ள்) கரும்பும்-கரும்புகளாலும், சாலியும்-நெற்களாலும், கரிபரி-யானையுங்குதிரையும், மறைவுறாஉம்-முழுகிப்போவதாயிருக்கும், கழனி-வயல்களிலுள்ள, விரும்புஞ்சாலியும்-அருந்ததியும வேண்டத்தக்க, கற்பினர்-கற்பு நிலையுள்ள பெண்களது, மெல்-மெல்லுகின்ற, நகை-பல்வரிசைகள் போல, மிளிர்-விளங்குகின்ற, புத்தரும்பும்-புது அரும்புகளும், சால்-மிடாவில், இயை-சேர்வதான மதுவென-தேன்போல, தரும்-வழங்குவனவாகும், புருடரில்-நாயகர்போல, தேன்-தேனை, சுரும்பும்-வண்டுகளும, சாலிய-மிகுதியாக, இதழ்-இதழினின்றும், உணும்-பருகும், பண்டரிச்சோலை-பண்டரிபுரத்துச்சோலைகளில், புருடாகள் பலவரிகளுள்ளுளதான அதரபானஞ்செய்வதுபோல வண்டுகளும் பூவரும்பினிதழில் வழிகிற தேனைப்பருகுமென்க.

கொள்ளுஞ்சோளமுங்கோதுமையும்வரகுந்தேம்
கள்ளும்வேரியுங்கன்னலுங்கந்தமுங்கனியும்
எள்ளுமேனலுஞ்சாமையுந்தோரையுமெவையும்
விள்ளும்பூவுறுதேனுமபால்வாசமேவீசும். (௩௩அ)

நூல்விராவியநுண்ணறிவினர்மனுநுவலும்
கோல்விராவியகுணத்தினர்குன்றுகைக்கொண்ட
மால்விராவியமனத்தினர்பண்டரிவாழ்வோா
போல்விராவியவெய்துவரிந்திரபுரியார். (௩௩௯)

மயிலுமபேடையுமாலெழில்கணடெனமகிழ்வாா
அயிலுந்தேனெனஹரிபெயரோதுவரதனுல்
பயிலுங்கார்ப்பருவந்தழைத்தோங்கவொன்பானுள்
வெயிலுமோர்தினமழையுமாய்ப்பண்டரிவிளங்கும். (௩௪0)

அருணம்பாயிதழாமபலின்வாய்விட்டலனையே
பொருணம்பாலெனக்கோயிலிற்போந்திசைபொருத்தும்
தருணந்தேருநர்பாடலுமாடலின்சதியும
வருணந்தேர்வதுதேர்வதில்லதில்வழுவாதோா. (௩௪௧)

வண்டுகொட்டிடவல்லதேழிசையவர்வாய்ச்சொல்
கண்டுகொட்டிடவல்லதாரமுதந்தணகதிரின்
துண்டுகொட்டிடவல்லதுசுரர்க்கமுதுதவி
உண்டுகொட்டிடவல்லவனொப்பில்பாண்டுரங்கன். (௩௪௨)

கடங்கவிட்டலனிருந்துவெண்கோடுகொள்கையன்
முடங்கவிட்டலன்கஞ்சனெஞ்சிற்புகமுனைவோர்
அடங்கவிட்டலன்முன்னலணுகியவமலன்
விடங்கவிட்டலன்சேவடிகாணரவிந்தம். (௩௪௩)

(இ—ள்) கடம்-மத்தத்தை, கவிழ்-சாய்க்கின்ற, தலையிருந்து-இடத்தினின்றும், வெண்கோடு-வெள்ளைக்கொம்பை, கொள்-பிடுங்குகின்ற, கையன்-கையையுடையவனும், முடங்கஇட்டு-வணங்கச்செய்து, அலன்-துன்பம், கஞ்சன்,

கஞ்சனுடைய, நெஞ்சில்-மனத்தில், புக-நுழைய, முனைவோர்-எதிர்ப்பவர்களை, அடங்கவிட்டு-அஞ்சவிடுத்து, அலன்-பலராமனுக்கு, முன்-மூத்தவன், அலனு கிய-அல்லன தம்பியெனலாகிய, அமலன்-பரிசுத்தனுமாகிய, விடங்கவிட்டல ன்-அழகியவிடோபாவினுடைய, சேவடி-சிவந்தபாதங்களே, காண்-எல்லாரும ன்னேபார்க்கத்தக்க, அரவிந்தம்-தாமரைமலர், கவிழ்தலென்பதை கவிட்டலெ ன்பது எதுகைநோக்கித்திரிதலுந்தோன்றலுமாகிய விகாரவகையுளடக்குக. மு டங்கஇட்டென்பது முனைவோர்களை வணங்கச்செய்து கஞ்சனெஞ்சிலலம்புக அஞ்சவித்தெனக்கூட்டுக.

முன்னினம்பரமார்த்தமென்றேவருமொழிய
மின்னினம்பரவியமணித்தேரிடைமேவி
மன்னினம்பரமாயையைப்பார்த்தனுல்மாய்த்தோன்
பொன்னினம்பரம்புகும்பண்டரிக்கணோர்புந்தி. (௱சச)

முந்தியங்கமலத்திருநாமத்தைமொழிந்த
தந்தியங்கமலத்துறுதத்தறத்தவிர்த்தோன்
இந்தியங்கமலத்தினதெனவெதிரிகலா
உந்தியங்கமலத்துறுமுவருயிர்வண்டு. (௱சரு)

(இ—ள்) முந்தி-முன்னே. அங்கு-அக்குளத்தினின்று, அமலம்-பரிசுத்தஞ் செய்கிற, திருநாமத்தை-மூலமென்னும் பெயரை, மொழிந்த-சொன்ன, தந்தி-யானையானது, அம்-அழகிதான, கமலத்து-நீரிலே, உறு-அடைவதான, தத்து-ஆபத்து, அற-தீர, தவிர்த்தோன்-போக்கினவனது, இந்து-சந்திரன், இயங்க-உதையமாகக்கண்டு, மலத்தினதென்று-இது நடுவே களங்கமுள்ளதென்று, எதிர்-அதற்குமுன்னே, இகலா-விரோதித்துமூடிக்கொள்ளாத, உந்தியங்கமலத்து-திருநாபிக்கமலத்திலே, உறும்-பதியும், உவர்-அங்கே சேவிக்கப்புக்கவர்களுடைய, உயிர்-உயிர்களாகிய, வண்டு-வண்டுகள்,

அதரபந்தமின்றலர்மலர்போன்முகமலராச்
சுதரபந்தமென்றுன்புறப்பெறுவசுதேவர்
இதரபந்தமெல்லாந்தெறுவித்தவனெழில்சேர்
உதரபந்தமுள்ளத்துணின்றுலாவுறுமுவர்க்கு. (௱சசு)

நம்பொன்பான்மணிநகையுறநாயகமணியும்
அம்பொனாரமுமணிமறுவுந்திகழ்ந்தமர்வா
கும்பொன்மாதருங்குலவியுமொளிதரவுடையான்
செம்பொன்மார்பமேயாட்கொளச்சேவைசெய்துறுவார். (௱சஎ)

விண்டகண்டனமென்மொழிப்பின்னைபொன்விபுலை
கொண்டகண்டனுஞ்குடம்பயில்கூத்தனெண்டிசையும்
மண்டகண்டமும்வாய்வழிச்செலும்வகைவாரி
யுண்டகண்டமேயுயக்கொளவுறுவர்பண்டரியோர். (௱சஅ)

கய்யவாயுறுசங்கமுந்திகிரியுங்கவின
ஐய்யவாய்விலுமிகல்சினத்தண்டொரந்தகமும்
துய்யவாயுயர்தோள்களுந்துலங்குறத்தொருவோன்
செய்யவாய்கண்டுளோர்சிந்தைகவர்வதுசெய்யும். (௱சகூ)

எண்கள்வானிலங்கெழின்மணிமேனிகொண்டியல்வான்
உண்கள்வாய்வழியோடுறவண்டுகளொருங்கே
பண்கள்பாடுறுபைம்பொழிற்பண்டரிப்பரமன்
கண்கள்மால்செயுங்கண்டவர்தங்கள்கண்களிக்க. (௱௫௰)

முகமுங்கொண்டபுன்முறுவலும்பொன்மணிமுடியும்
சகமும்வானமுந்தாவொளிதழைத்தகுண்டலமும்
நகமுநாணுறுதோள்வலயங்களுநாடி
அகமுங்கண்களுங்களிப்புறப்பண்டரியமர்ந்தான். (௱௫௧)

சுருங்குநுண்ணிடைப்பூங்களானசுந்தரியும்
வருங்குணுதிசுந்தரவடிவங்கண்டுமகிழ
மருங்குசேரிருகையுடன்மரகதமலைபோல்
ஒருங்குதோன்றநின்றனனுலகுயிரெலாமுய்வான். (௱௫௨)

வேறு:—பாண்டுரங்கனரசகோபாலன்மால்
பாண்டுரங்கனரசகோபாலன்மால்
ஈண்டுமேவலன்செம்புனலேற்றனன்
ஈண்டுமேவலன்செம்புனலேற்றனன். (௱௫௩)

(இ—ள்) பாண்டுரங்கன்-பாண்டுரங்கனென்றும், அரச கோபாலன்-ராஜகோபாலனென்றும், மால்-திருமாலென்றும், பாண்டுரம்-வெண்மையான, கனரசம்-மிகுந்தரசமுள்ளபாதகங்கையை, கோ-நெருப்புக்கண்ணை, பாலன்-நெற்றியிலுள்ளவன், மால்-மயக்கத்தினால், ஈண்டு-இவ்வுலகத்தில், மேவலன்-அடையாதவனாய், செம்புனல்-இரத்தத்தை, ஏற்றனன்-வாங்கிக்கொண்டு, ஈண்டு-கூடுகின்ற, மேவு-விரும்பத்தக்கவலன், வலப்புறத்தையுடையவனென்றும், செம்-செவ்வை, புல்-சேர்ந்த, நல்-நன்மைக்குணத்தை, ஏற்றனன்-பொருந்தினவனென்றும், இன்னும்செம்மை, புன்மை, நன்மை, ஆகியபண்பாகுபெயராய்ராஜசம், தாமசம், சாத்வீககுணங்களைப்பொருந்தியதிரிமூர்த்திசுருபரென்றும், கோபாலன், மால், ஈண்டு, பாண்டுரம், (கனரசத்தைவேண்டாதவனாய் இரத்தத்தைவேண்டினனெனக்கூட்டுக.) இது தமுவாத்தொடர்.

விட்டலன்ரகுமாயியைமேயினன்
விட்டலன்ரகுமாயியைமேயினன்
எட்டலன்றிருமேனினை வெய்தினன்
எட்டலன்றிருமேனினைவெய்தினன். (௱௫௪)

(இ—ள்) விட்டலன் ரகுமாயியை-ரகுமாயியைவிடாதவனாகி, மேயினன்-கூடியிருக்கின்றவனென்றும், விட்டலன்-விட்டலனென்றும், ரகு-ரகுவென்பவன் புகழை, மாய்-மறைக்கத்தக்க, இயை-குலசம்பந்தத்தை, இயைபு யென்பது—இயையெனக்கடைக்குறை. மேய்-ஆராய்ந்துகொள்கின்ற, ரகுவின்புகழைமாய்க்கின்றயியையைமேய்க்கின்ற வென்பதுபெயரெச்சவடுக்கு. இனன்- சூரியன், என்றால் குலகீர்த்தியாகிய வமுதத்தையுண்கின்றவனென்றும்- மேய்தல்-உண்ணுதல், எள்-இகழத்தக்க, தலன்-இடத்தை யுடையவனாகி, திருமேல்—இலக்ஷ்மியை, நினை-எண்ணுகின்ற, வெய்தினன்-கொடுமையையுடையவனுக்கு, எட்டலன்-கிட்டாதவனென்றும், அவன் சீதையைபிரிந்தகாலத்தில், திருமேனி திருவுடம்புக்கு, னைவு-இளைப்பை, எய்தினன்-அடைந்தவனென்றும், திருவை யென்பதற்கு-திருமேலென்றார். அது உருபுமயக்கம்,

பொன்னிறப்பண்டரீபுரப்புங்கவன்
பொன்னிறப்பண்டரீபுரப்புங்கவன்
என்னிறப்பும்பிறப்புமிறுப்பவன்
என்னிறப்பும்பிறப்புமிறுப்பவன். (௱௫௫)

(இ—ள்) பண்டு-முன்னொருகாலத்தில், பொன்-லக்ஷ்மிதேவியை, நிறம்-மார்பிற்கொண்ட, அரிபுரம்-நரசிங்கவடிவாகிய, புங்கவன்-உயர்ச்சியுள்ளவனென்றும், பொன்னிறம்-சுவர்ணமயமான, பண்டரீபுரம்-பண்டரீபுரத்தையுடைய, புங்கவன்-தேவனென்றும், என்-என்னுடைய, இறப்பும்-மரணத்தையும், பிறப்பு ஜனனத்தையும், இறுப்பவன்-போக்கத்தக்கவனென்றும், என்-யாதுகாரணத்தாலோ, இறப்பும்-போக்கும், பிறப்பும்-வரவும், இல்-இல்லாத, துப்பவன்-அகடிதகடனசாமர்த்திய முள்ளவனென்றும், என்றால்-பரமபதநிலையனென்கிறார்கவி.

நாமதேவரநண்புகலந்தவன்
நாமதேவரநண்புகலந்தவன்
வாமதேவன்வணங்கற்கரியவன்
வாமதேவன்வணங்கற்கரியவன். (௱௫௬)

(இ—ள்) நாமதேவர-நாமதேவருடைய, நண்புகலந்தவன்-சினேகங்கொண்டவனென்றும், நாம்-பின்புள்ள நாமும், அதேவர-அப்படியேவருவதாக, நண்பண்டரியினிற்கின்ற, புகல்-சரணுகதிக்கிடமான, அம்-அழகுமயமாகியலக்ஷ்மிக்கு, தவன்-நாயகனென்றும், வாமதேவன்-சிவனும், வணங்கற்கு-பெருமைகண்டுவணங்குதற்கு, அரியவன்-அருமையானவனென்றும், வாமம்-அழகுமிகுந்த, தேவன்-தேஜோமயனென்றும், என்றால்-புருஷோத்தமனென்றபடி, வணம்-திருமேனியினிறமானது, கல்-மலைபோலும், கரியவன்-கருமையானவனென்றும் என்றால்-கரியமலைபோலும் நிறத்தையுடையவனென்றபடி.

இடையிலேகரமெய்தவிலங்குவான்
இடையிலேகரமெய்தவிலங்குவான்
நடையிலேயனநாணுறுமங்கையான்
நடையிலேயனநாணுறுமங்கையான். (௱௫௭)

(இ—ள்) இடையிலே-நடுவிலே, கரமெய்த-இரண்டு கைகளும்பொருந்த, இலங்கு-விளங்குவதான, வானிடை-ஆகாயத்திலுள்ள, யிலேகர்-தேவர்களும், அம்மெய்-அந்த திவ்வியதிருமேனியை, தவில்-உள்ளத்தில் நீங்குதலில்லாத, அம்-அழகியதான, குவான்-ஜகநாதனென்றும் நடையில்-ஒழுங்கினையுடைய, எயன-அம்புபோல, நாண்-நாரியுடையவில்லும், உறும்-பொருந்துகின்ற, அங்கையான்-இரண்டு திருக்கைகளையுடையவனென்றும், நடையிலே-நடக்குமளவிலே, அனம்-அன்னபக்ஷியும், நாணுறும்-வெட்கத்தக்க, மங்கையான்-திருமங்கையுடையவனென்றும்,

கண்ணன்விண்ணவர்காதலிக்குங்கடல்
வண்ணனென்றிந்தமாநிலங்கைதொழு
தெண்ணநின்றவன்சீருமெழிலுமெவ்
வண்ணங்கூறில்விளங்கும்வழங்குமே. (௱௫௮)

(இ—ள்) கண்ணன்-ஆசிருதபவ்வியனென்றும், விண்ணவர்-வைணவர்களெல்லாம், காதலிக்கும்-கண்டுமயங்கத்தக்க, கடல்வண்ணனென்றும்-நீராழிவண்ணனென்றும், இந்தமாநிலங்கைதொழுதெண்ணநின்றவன்-சீரும்-எழிலும்-எவ்வண்ணம்-கூறில்-விளங்கும்-வழங்குமே. பாண்டுரெங்கன்றொடங்கி-ஐந்துபாட்டும்ஓரேதொடர்களகமெனவுங்கூறுப.

முற்றிற்று.

# ஜயதேவர் சரித்திரம்

வேதநா யகன்வியா சனைவி ரும்பியிப்
பூதலம் பிறந்தரி பத்தி பூத்துற
ஓதுக வென்றநு மூத்த மன்பதப்
போதினை யிறைஞ் சியேபோத னுற்றனர். (௧)

சிந்துசூழ் புவிஜய தேவென் றோதிட
இந்துதோய் பொழிற்சக நாதப் பாங்கரில்
திந்து பில் வனூரினிற் றீதில் பார்ப்பினம்
வந்துதோன் றினரந்த வாத ராயணர். (௨)

தனையரை நாடொறும் வளர்த்துத் தாய்பிதா
இனியவு பநயன மியற்றி யோதரும்
தனிகலை யனைத்துந்தா ளுகக் கற்றநன்
மனமரி பத்தியின் மருவி னாரரோ. (௩)

தாரகா கணந்தனிற் சசியுந் தானையில்
வீரனு முனிவரிற் சிவனும் விண்ணிடைச்
சூரனும் போலப்பூ சுரரி னந்தனிற்
சீரிய ராய்ச்சய தேவர் தோன்றினார். (௪)

பதுமமா கதையிதி ஹாசம் பண்ணிய
துதிபெறு ராதைதன் விலாசத் தொல்கதை
விதிசெய விமலகோ விந்த கீதமாய்ப்
புதுமையென் றியாவரும் புகழ்ந்து கற்றனர். (௫)

நாரணன் வாழ்ஜக நாத மாண்டோல்
ஆரண முணர்ந்தசாத் வீக வாதிபன்
ஓரணி நூலையுற் பத்தி யாக்கியத்
தாரணி யோர்க்குத்தான் சாற்ற வெண்ணினான். (௬)

அனையவ னறிஞரை யழைத்தி யான்சொலும்
பனுவலு மாஜய தேவர் பாடிய
இனியகீ தமுமிணை யாகு மாதலால்
உனியனை வோருமோ துகவென் னாலென. (௭)

அவ்வுரை கேட்டது மறிஞரோதுவார்
திவ்விய குணச்சய தேவர் நூலுடன்
செவ்விதன் றியானெனுஞ் செருக்கி னூற்செயும்
இவ்விய னூலினை யிணைத்துக் கூறுதல். (அ)

அன்றியு மென்கவி யாரு மாடுவீர்
ஒன்றவென் றுரைப்பதை யுன்னுங் காலையில்
என்றுமெய்ப் பொருளையும் வீதுவி லீக்கிடில்
குன்றுமப் பொருளிய லென்று கூறுவார். (௯)

நின்னுரை நின்கவி நினக்கு நேருறும்
பொன்னுறை நிறப்பரம் பொருளுக் கொவ்வுமோ
என்னது மேந்தலிவ் விரண்டு நூறனில்
பின்னைகோ னேற்பதே பெரிதென் றோதினன். (௰)

அக்குழு வுடனர சமல னாலயம்
புக்கியன் றிரவுமால் பொருந்த லாகிய
முக்கிய நூலுற முன்னர் மற்றது
பக்கலி னுறவெனப் பாழி மூடினர். (௰க)

மறுபகற் காலைநூல் வைத்த யாவரும்
திறமிகு கோயிலைத் திறகக வுண்மதில்
புறமுறு மன்கலை போங்தெ டுத்துவங்
தறநிதி நாதனை யறிஞ ரேத்தினார். (௰உ)

படியினை நோக்குபூ பதியை நோக்கியவ்
வடிகளி னூற்கெதிர் நூலொன் றுக்குதல்
சுடரின்முன் மின்மினி தோன்றல் போன்றதால்
கடவுணின் னூலினைக் கடிந்த தென்றனர். (௰௩)

குறையுரை கேட்டமன் கொதித்து ளேபுகுந்
திறைமுனின் றின்றுநின் னியல்பு குன்றின
மறையெலாம் பதிதபா வனனென் றோதிய
முறைகெட வோரமுன் முன்பு தோன்றலால். (௰௪)

ஆதவன் கதிர்நல மலதி னும்படும்
போதவிழ் பொய்கைதான் புலியுந் தேனுவும்
சீதநீ ருணத்தருஞ் சீர தென்னவே
நீதயை புரிவது நினக்கு நீதியே. (௰௫)

என்றுகொண் டியான்புரிந் ததையி கழ்ந்தனை
நன்றிது வெனச்சய தேவர் நல்கிய
ஒன்றினை மகிழ்ந்தனை யுனக்குத் தக்கதோ
என்றனி நாயக விதற்கென் செய்வதே. (௰௬)

ஆவியை விடுத்தென தகந்தை யானதை
நீவுந லேகல னொன்று நேர்தலும்
மாவியல் மார்பினன் வருந்த லென்றுதன்
தேவிய லொடுமுனந் திகழ்ந்து தோன்றியே. (௰௭)

அரசனா யினிற்சுலோ கங்க ளாறுநால்
விரசுற மாஜய தேவர் விண்டதிற்
புரைதபுத் தெழுதினன் புனித நான்முகன்
சிரமிசை யெழுதவுந் திருந்து கையினன். (௰அ)

வேறு:—அன்புக் கிரங்குஞ் சகாநாத னருளுக் கரச னகமகிழ்ந்து
துன்புற் றுறுவெஞ் சினந்தவிர்ந்து துளவோன் புகழைத் துதித்திருந்தான்
இன்புற் றிடச்செய் சகாநாதத் தெரிஹோ த்திரஞ்செ யொருமறையோன்
றன்பக் கவிலோர் கன்னியவ தரித்தா ளவள்சுந் தரங்கண்டு. (௰௯)

பதுமா வதியென் றியனாமம் பகர்ந்து வளக்கப் பருவம்விஞ்சி
அதிரூ பங்கொண டிலங்குகின்ற வவளைச்சகநா தன்றனக்கே
துதியோ டுதவ நிசசயித்துத் துணிந்தங் கிருக்கச் சுற்றத்தார்
விதுநேர் முகத்துப் பெண்ணழகும் விரும்பு குணமு மிகத்தெரிந்தார். (உ௰)

தெரிந்து வினவு முறவினர்க்குச் சகநா தனுக்கென் றெரிவைதன்னைப்
பொருந்த மணஞ்செய் வதையன்றிப் புறத்தோர்க் குதவே னெனமறுத்துப்
புரந்து மகளை வருநாளிற் புவியோர் போற்றுஞ் சகநாதன்
பரிந்து மறையோன் கனவில்வந்து பகர்வா னிகர்வான் ஜயதேவன். (உக)

ஆத லான்மற் றவன்றனக்குன் னருமைத் திருமா மகடன்னை
நீத முடனே மணம்புணர்த்து கெனவே நிமல னிகழ்த்துகின்ற
போதில் விழித்து மகிழ்ந்தெழுந்து புகன்ற ஜயதே வரைநாடி
மாது தனகுப பொருந்தினதை மதித்துத் துதித்து மணம்புணர்த்தான். (உஉ)

நிமலன் வடிவாம் ஜயதேவர் நிகழ்த்தும் பதுமா வதியுடனே
அமலன் ஜகநா தந்தனிலே ஹரிகீர்த் தனஞ்செய் தமர்ந்திருந்தார்
கமலங் கதிர்வேண் டுதல்போலக் கடவு ளடிவேண் டுறுகருத்தான்
விமலன் வடுவிற் ககனா விந்தன் வணிகன் மிகுபுகழான். (உங)

அவன்செய் வழிபா டதுநோக்கி யனக னிவனென் றகத்தமைத்துப்
பவஞ்செய் மயலைத் தவிர்த்தருளப் படுசீ ரிதநல் லுபதேசம்
நவஞ்செய் துறப்போ தித்தவன்செய் நலஞ்சேர் தொழும்பு நனிசிறப்பத்
தவஞ்செய் பவரிற் சிறந்திருந்தார் தையல் பதுமா வதிதலைவர் (உச)

குருசே வையிலே திரிகரணங் குளிர்ந்தன் பதின்மீக் கொளும்வணிகன்
ஒருநாள் ஜயதே வரைவணங்கி யுவந்தென் சதன முறல்வேண்டும்
திருநா யகனே யனையீர்நீ ரென்னச் சயதே வருஞ்சிறக்க
வருவே னெனத்தேர் மிசையேற்றி வந்தான் றனதூர் வளம்பொலிய (உரு)

வந்தா சனத்தின் மிசையிருத்தி வழங்கும் பதினா றுபசாரம்
தந்தா தரித்தங் கவரருளாற் சமத மாதி யான்மகுணம்
சிந்தா ததிகஞ் சிறந்தோங்கத் தினமும் ஹரிகீர்த் தனஞ்செய்து
முந்தா தரத்திற் சடமூடர் முழுதுந் தெளிந்து முயலுனில். (உசு)

திங்க ளளவு மவ்வூரிற் சிறந்த சீடன் பணிவிடைகொண்
டங்க னுறைந்து ஜயதேவ ரந்த வணிகன் றனைநோக்கிப்
பொங்கு புகழாய் ஜகநாதம் போக வேண்டு நாமினிநீ
இங்கணி ருக்க வென வெழுந்தார்க் கெல்லா வுபசா ரமும்புரிந்து. (உஎ)

ஞானந் தருகற் பகமேயின் னளின சரண மறவாத
மானம் வழங்கு கெனவவர்த மலர்க்கை தலைமேல் வைத்தருள
மேனன் கிவர்தக் கணைவிரும்பா ரென்றங் கவர்கா ணுவிதமாய்த்
தீானன் கமைத்துத்தேரேற்றித் தனியாள் கொடுத்துத் தடம்விடுத்தான். (உஅ)

வேறு.—அணியு மாலையுங் குருமனைக் கீந்தென தடிமைப்
பணிவு சொல்லுதி யென்றவ னேக்கியே பணிந்து
வணிக னேவலின் வந்தவ னெடுவழிக் கொண்டு
தணிவி னேன்பினர் தாம்வர மற்றவர் தம்மை. (உகூ)

வணங்கி யென்மனை வந்துள காரியம் வாய்ந்தின்
றிணங்க நல்விடை யீகென வந்தவ னிரப்பக்
குணங்க ளாலுயர் தேசிக ரவன்கொள்கை குறித்துப்
பிணங்கு கின்றதின் றேகெனத் தனிபெயர்ந் தனரே. (௩0)

கங்கை மாநதி காணவந் துறுபகங் கடுப்ப
வெங்க ணாரவர் தேரிரு புறத்தினும் விரவச்
சங்கை கூர்ந்திரு வரையுங்கண் டிவர்வரு தகுதி
பங்க மாகுமென் றறிந்தந்தச் சோரரைப் பார்த்து. (௩க)

தேரி லுள்ளன கொள்கெனத் தேரைவிட் டிறங்கிப்
பாரி லேதனி யேகுதல் பார்த்தொன்றும் பரியாச்
சோர ராவனர் செலவிடில் வணிகனிற் சொல்வார்
ஆர வாரம தாகுமென் றறிந்தன ரஞ்சார். (௩உ)

தொடர்ந்து சென்றவர் தமைக்கொலை செயமனந் துணியா
தடர்ந்து கால்கரஞ் சேதித்துத் தேரைக்கொண் டகன்றார்
படர்ந்த தோர்புதர் படுத்தன ரேகலும் பார்மேல்
நடந்த தேசிகர் கிடந்தனர் நன்னில நடுங்க. (௩௩)

அரிதன் றுமத்தை யிடைவிடா தனுபவித் தலினால்
பெரிது புண்படு மூலத்தை வெறுத்தனர் பிரிந்து
கரிய மாலுரு வந்தனை யுளந்தனிற் கண்டங்
குருதுயர் ஞானவா னந்தத்தி லிருந்தார். (௩௪)

அத்தி னந்தனிற் கிரவுஞ்ச வேந்தனவ் வனத்தில்
மொய்த்து வேட்டையின் முயன்றவன் பகல்செல முன்னி
மைத்த வல்லிருட் டங்கலிற் றேசிகர் வடிவம்
வைத்த மாகிதி யெனப்புத ரிடையொளி வயங்க. (௩௫)

கண்ட வேந்தனங் கணுகியே யாதெனக் காண
விண்டு தாசர்த மெய்விளக் கொடுமனம் வியந்து
கொண்ட நாமசங் கீர்த்தன முதத்தையுங் குறித்து
மண்டு கின்றபே ரன்பொடு வணங்கினன் வாழ்த்தி. (௩௬)

பொருந்து கால்கரம் புண்ணுறக் குறைந்ததும் புண்ணால்
வருந்து றுததுந் தெரிந்தடி கேளுமை வருந்தத்
தெரிந்து செய்தவ ரியாரெனத் தீவினை யென்னப்
பரிந்து மன்னவன் சிவிகைமேற் கொடுசென்றான் பதிக்கு. (௩எ)

கனக மாமணி யாசனத் திருத்திமுக் கரணம்
அனக மாயடி பூசித்து நேசித்து ஞான
தினக ராவெனச் சேவைசெய் தருள்பெற் றுத் திகழ்ந்து
பனக மீமிசைத் துயில்பரஞ் சுடர்துதி பயின்றான். (௩௮)

பரிச னங்களைப் பார்த்துநீ ரிவரடி பணிவிற்
றுரிசு றுதியற் றுமினென வாணையிற் றொடக்கிப்
பெரிது கொள்கையிற் பெற்றனம் பெருந்தன மென்று
கருதி யேவலின் முயன்றனர் மனங்குது கலித்து. (௩௯)

அன்ன வா றொழு குறுமந்த நாளிலவ் வரசன்
மன்னி மற்றவ ரடிகளை யன்பொடு வணங்கி
மின்னு றும்மடிப் பூசனை புரிவதை விட்டுப்
பின்னை யோர்பொரு ளிலையெனத் தெளிந்தயான் பின்னும். (௪௰)

அடிக ளுள்ளத்துக் கமைவது செய்வதென் றமைந்தேன்
படிவ தாகநீர் பணித்திரென் றின்னுரை பகர
மடிவி லன்புநீ மாலடி யாரடி வணங்கி
முடிவில் பூசனை புரிவதே வேண்டுமென் மூன்னம். (௪௧)

என்ற போதவ னெழுந்தவ ரடிகளை யிறைஞ்சி
நன்று நன்றென நாரண னடியரை நான்கண்
டொன்ற லெவ்வகை யவர்குறி யுரைத்திரென் றுரைக்க
வன்ற போதனர் மாலடி யார்குறி வகுப்பார். (௪௨)

குல்லை மாமணி தாமரை மணிகளங் கொண்டு
நல்ல கோபிசந் தனத்தொடு பன்னிரு நாமம்
வல்ல நன்னுத லாதிய தலத்திடை வரைந்தே
அல்லு நன்பக லும்மரி நாமங்க ளறைவார். (௪௩)

ஆய மாலடி யார்களைக் கண்டடி யண்மித்
தூய பூசனை புரிதியேற் கருதிநா யகற்கு
மேய பாற்கடற் செல்வியின் மேம்படு விருப்பம்
ஏய தாகுமென் றியம்பிட வேந்தலு மிசைந்து. (௪௪)

தேசி கோத்தமர் செப்பிய பணிசிரத் தேற்று
மாசி லன்னவர் சேவடி தலைமிசை வைத்துக்
காசில் சாதுசற் சனர்தரு சேவையைக் கண்டு
பூசை செய்வதே கடைப்பிடித் தனனிரு போதும். (௪௫)

அரசன் மாலடி யாரடிக் கன்பொடு பூசை
புரியு மற்புதம் பெருகலாற் காணிய புகுந்தார்
பெரிது பள்ளத்திற் பாயுநீ ரெனப்பெரும் பெருமை
அரிதன் னாமங்க ளனுதின மோதுசீ ரடிகள். (௪௬)

அடியர் பாற்பெரு கன்புறுத் தியலுய தேவர்
*படியை நேசித்துப் பூசித்துப் பார்த்திபன் பரவும்
நெடிய பூசையை நேர்ந்துகொண் டவன்பொரு ளிரப்ப
மிடித விர்ந்தனர் விண்டுபா லன்புசெய் விமலர். (௪௭)

---

* படி-குணம்.

வேறு—இன்னபரி சிங்குகிக முக்களவி யற்றித்
தின்னுபொருள் கொண்டவிரு சோரருமு ணர்ந்து
நன்னரர சன்பொருண மக்குதவ நாமும்
மன்னுதமெ னக்கபட வைாவாக னானுர். (௪அ)

கால்கரம றுத்துவிடு கையர்ஜய தேவர்
மால்கருணை பெற்றநகர் வைகலுண ராது
சேல்கருது கொக்குறுதி யானநிலை கொண்டங்
கேல்கைஜய மாலையுட னெய்தினர்வி ரைந்தே. (௪௯)

பற்றறுமெஞ் ஞானதவ பாவம்வெளி தோன்றக்
கொற்றவன தொள்ளொளிசெய் கோயிலினு ழைந்தார்
அற்றனகை காலொடரி யடீசனமி சைச்சீர்
உற்றவரி ருந்ததையு வப்பிலர்தெ ரிந்தார். (௫௰)

புல்லுளதெ னப்பசுபு குந்தவிட னிற்பாய்
கொல்புலியெ திர்ந்ததென வேகொடுமை கொள்ளா
நல்லவரை யஞ்சியொரு வர்க்கொருவர் நண்ணச்
செல்வதுத காதகுறி செய்தனர்தி கைத்தே. (௫௧)

அப்பொழுதி லக்கயவ ரைக்கமைய மைந்த
ஒப்புரவின் மெய்ப்பொருளு ணர்ந்தவரு ணர்ந்து
தப்புதலி லாதவுப சாரமிய லத்தாம்
வைப்பினிலி ழிந்தனர்வ ணங்கினர்முன் வந்தார். (௫௨)

அன்னவரை யன்பொடுத ழீஇயருகி னின்று
பன்னியதி யற்றுநல பண்பினரை நோக்கி
மன்னனிடை யுய்த்தவர்ம னத்திடைவி ரும்பிச்
சொன்னதுத ரப்பெரிது சொல்கெனவி டுத்தார். (௫௩)

ஏவல்புரி வோரவரி சைத்தபடி கொண்டு
காவலன்மு னுய்த்துவரு காரியமு ரைப்ப
மேவுசட வேடரைவி யந்தடிவ ணங்கி
ஆவலுட னேதுதிய நேகவகை சொல்லி. (௫௪)

அருக்கியமு தற்பலுப சாரமவை யாவும்
திருக்கறவி யற்றிவரு †தேனர்தமை நீவிர்
இருக்கமன முள்ளளவு மென்பதியி லென்னச்
செருக்கிவரு தீயரது செய்துறவ மைந்தார் (௫௫)

கோடுதலி லாவரசர் கோனினிதி யற்றும்
பீடுமுழு துங்கயவர் பெட்புறுதல் செய்யார்
ஆடுவதை செய்பவன கத்தறிகி லாது
நீடுவளர் கின்றசெய னேரென நினைத்தார். (௫௬)

வேந்தனுண ரும்படி நம் மெய்ம்மையைவி ளம்பிற்
சாந்தனுரை கொண்டுயிர்த டிந்திடுவன் மெய்யே
நாந்தகைவ தெங்ஙனென நாடினர்ப யத்தால்
நீந்தரிய துன்புகொடு நெஞ்சயர்த லானுர். (௫௭)

† தேனர்-திருடர்.

உண்பதுமு றங்குவது முட்டெளிவு மின்றி
நண்பகமி லாமலிவர் நாடொறும்வ ருந்தும்
பண்பதுதெ ரிந்தரசு பாலனைய சீலர்
திண்பதம்வ ணங்கியது செப்பவுளா செய்வார் (௫௮)

நாடொறும்வ ருந்திலவர் நண்ணுமிட நண்ணத்
தாடொழுது வேண்டுவன தந்துவிடை தந்து
காடொடுத லம்பலக டக்கவிடு தென்னப்
பீடொடுவ ணங்குபுபெ ருந்தகைபெ யர்ந்தான். (௫௯)

சென்றவர்க ளின்றினுரை செப்பியென தில்லில்
நன்றுறைதி ரோவெனலு நஞ்சனைய வஞ்சர்
நின்றனுப சாரமிக நீடியுள வேனும்
துன்றுவது ‡ தீபவதி தோறுமெம தெண்ணம். (௬௰)

ஆதலினெ மக்குவிடை நீயருள்வ தாயிற்
போதல்புரி வோமெனலு நன்றுபுரி தற்கும்
ஆதரம தேதுரைமி னென்றரச னன்போ
டோதவிரு தேர்நிறைவு றும்பொருளொ டுய்க்க. (௬௧)

வேண்டுமென லும்பதிவி ரைந்திருவ ருக்கும்
பூண்டுகில ளித்தவர்பொ ருந்தவிரு தேர்மேல்
ஈண்டுபொனி ரப்பினபி னேறுகென வேற்றித்
தூண்டுமவ ரோடடைமி னென்றரசு சொன்னான் (௬௨)

நல்லவிடை பெற்றிவர்ந யந்தஜய தேவர்
மெல்லடிவ ணங்கிவ்விடை யீகெனவி ளம்பச்
செல்லுதிரெ னத்திருடர் சென்றனர்செல் போதில்
வல்லபரி தூண்டுமவர் மற்றவரை நோக்கி. (௬௩)

எங்களர சன்பதியி லெய்தினர நேகர்
தங்களிலு மைப்புகழ்வு தந்துஜய தேவர்
துங்கவுப சாரநனி சூழ்வகையெ னென்ன
அங்கவரு மவ்வகைய வர்க்கறைய லானார். (௬௪)

துஷ்டகரு மாவெனுமோர் தோன்றல்பிர தானன்
இஷ்டனிவன் யாமுமர சேவல்வழி நிற்பேம்
நஷ்டநனி செய்ததனை நாடியர செம்மால்
கஷ்டமுற முன்றலைக டிந்திடுகெ வென்றான் (௬௫)

நாமதுசெ யாமலடி நன்கரம றுத்துப்
பூமருவு கானிலோர்பு தற்கணிடை யிட்டு
நோமதுசெ யச்சொலர சேவலுழை யாம
லேமனவி ரத்தியுட னெய்தினமிந் நாளில். (௬௬)

உம்பதியி லேவரவு யிர்க்குதவி செய்த
நம்பரென வேயெமைந யந்துறுசன் மானம்
பம்பநனி செய்தனனெ னப்பகர லோடும்
வெம்பவும சத்தியம லாதுளசொல் வேறே. (௬௭)

---

‡ தீப்வதி-ஆறு.

பொய்யுரைபொ ருதுபுவி பொள்ளெனவெ டிக்கக்
கையரிவர் தேரொடுக விழ்ந்தனர ழுந்த
வையம்விடு வோரவண்ம டிந்திடுத லின்றிப்
பையவய லெய்தினர்ப யந்தனர்ப தைத்தார். (௬அ)

வேறு:—யாது செய்துமெ னவுளத் தேங்கியித்
தீது நேர்ந்தது தெய்வத்தி றமன்றோ
நீதி மன்னன்மு னீதுங்கி கழ்த்திடப்
போது வோமெனப் போதலுற் றாரரோ. (௬௯)

வேந்த னுக்குவி ளம்பிடப் போனவர்
ஆய்ந்த கேள்விய நிஞர டிதொழு
தோய்ந்து நின்றுமா செய்தன ருற்றதைச்
சாந்த மூர்த்திகட் டோயந் ததும்பவே. (எ௦)

மாய னேகுந்தி மைந்தரைக் காத்தச
காய னேசத்ய பாமைக ளிக்குநன்
னேய னேயிந்த நீணில முண்டசெவ்
வாய னேயென மாழ்கினர் வாழ்த்தியே. (எக)

கஞ்ச னேமுத லானக ணக்கிலா
நஞ்சர் வானநன் னுடனே யச் செய்தென்
வஞ்சர் கீழுல கெய்தவ குப்பது
தஞ்ச மோமிகு தண்ணளி யென்பதோ. (எஉ)

மூல மென்றக ரிக்குமுன் னேமுந்திப்
பால னஞ்செய்ப டிபகை யாகிய
கோல வெங்கர வுக்குங்கொ டுத்தனே
சால நின்பதந் தக்கதென் றேகொலோ. (எ௩)

அப்ப டிக்குனக் கன்பனென் றியானுறத்
தப்பு றுத்தியென் றன்பகை யாயினோர்
மெய்ப்பு றுத்தால் வீடடை யச் செய்யா
திப்ப டிச்செய்வ தென்னையென் னையனே. (எ௪)

என்ன நைந்திவ ரிங்ஙன்வ ருந்துபோ
தன்ன லூர்தித னத்தனி ரங்கியே
தன்ன தானச குணவு ருக்கொடு
முன்ன ரெய்தினன் முன்னமுன் னெய்துவான், (எ௫)

மால்கண் காணமுன் வந்த வுடனிவர்
கால்க ரங்கள்க தித்துவ ளர்ந்தன
ஆல மன்னவ ரானதி ருடரும்
மேலு றும்பொன்வி மானமீ தேறியே. (எ௬)

வான கம்புக லாயினர் வையகப்
போன கன் ஜய தேவரைப் புல்லியிங்
கான நின்னுடை யன்புக்க ளவிலே
நான கங்களி தங்கின னன்றரோ. (எஎ)

என்னக் கூறிவின் னேகின னேகின
பின்னர்க் கண்டவ ரோடுபெ ருந்தகை
மன்னச் சான்றவர் தம்மைவ ணங்கியே
நன்னர்க் கால்கர நண்ணிய தெங்ஙனே. (௭௮)

செப்ப வேண்டுமெ னச்சய தேவரும்
தப்ப றப்புகன் றார்தந்த கவெலாம்
ஒப்பில் வேந்தனு வந்துபத் மாவதி
யிப்ப திக்கெய்த வேவினன் யானமே. (௭௯)

மன்ன னேவலின் வந்தசி விகைமேல்
அன்ன சேர்ப்பது மாவதி யன்பொடு
தன்ன தாருயிர் நாதனைத் தாடொழற்
கின்ன தேநல்ல நாளென வேறினாள். (௮௰)

வந்து நாதன்ம லரடிபோற்றுபோ
தந்த வேந்தன னுகிம னைவியோ
டுய்ந்தி டப்பணிந் துத்தமிக் கொண்மினே
எந்த நாளுநன் கேவலி யற்றென்றான். (௮௧)

அன்ன தாகென வன்பொட மைத்துத்தம்
பொன்னின் மாளிகை புக்குப்பொன் னுதனம்
மன்ன வைத்தும லரடி போற்றினாள்
சொன்ன வேந்தன்றொ டர்பெருந் தேவியே. (௮௨)

பொங்கு சிந்துகற் பும்மறை பூணிலே
கங்கை சாவித்தி ரிகாயத் திரியொளிர்
மங்க லஞ்செறி நாணென வைகினள்
மங்கை யர்களுட்பத் மாவதி மாதரோ. (௮௩)

வேந்தன் றேவிப ணிசெய்ய மேவுநாள்
போநதொரா தூதன்பு ரவலன் றேவியை
நேர்ந்துன் றம்பிசு ஞான*னி தனமாய்த்
தீர்ந்த னனென்று செப்பினன் றேறவே (௮௪)

செப்புஞ் சொல்லவன் றேவிசெ வியிலும்
உய்ப்ப தாகவு டன்கட்டை யேறுதற்
கொப்பி னாள்புறப் பட்டது ணர்ந்துளோர்
அற்பு தமமென்ற கங்குலை வாயினார். (௮௫)

மாழக லின்றிப்பத் மாவதி மாத்திரம்
சூழ்பொன் னுதனந் தோன்றின ளாகவே
மூழ்கு துன்பினர் முன்னியி தென்னெனத்
தாழ்வ தாய்ப்பது மாவதி தன்முனே. (௮௬)

நின்று மன்னவன் றேவிநி கழ்த்தினான்
நன்று மூன்றொடு நான்குப வத்திலும்
தன்று ணைப்பதி தன்னைத்த ழுவவே
துன்ற லற்புதந் தோன்றலை யோவெனா. (௮௭)

* நிதனம்—மரணம்.

ஆதவன்கண டங்குக திரென
நாதன் சாலைக வில்பொழு தேசெலா
மாத ராளிவள் மன்னுவ தென்றுகொல்
சீத மாயினி நீங்கழ்த் தென்றனள். (அஅ)

சொன்ன வந்தச்சு ஜாணன்ம னைவியோய்
மன்ன லானபின் மன்னவன் றேவியீ
தென்ன கண்டறி வேனென வெண்ணிமுன்
துன்னு மந்திரி பொய்சொலச் சூழ்வித்தாள். (அகூ)

தேர்ச்சி யின்றுணை வாசெய்கெ னச்செயும்
ஆய்ச்சி யான்ஜய தேவர ரசொடு
வாழ்ச்சி யாகிவ ளம்புகச் செய்தொரு
சூழ்ச்சி யாலிறந் தாரென்று சொல்லினன். (கூ0)

கற்பி னுயர் காதற்பத் மாவதி
பொற்பி னுதன்பு விகொலப் போனது
நிற்ப தானமெய் யோவென நீடுபோய்
உற்ப வித்தவ ளோமெனக் கூறினள். (கூக)

சாற்று முன்பது மாவதி தன்னுயிர்
மாற்றி னுள்கண்ட மன்னவன் றேவிமுன்
போற்று வோரொடு பொய்வினை யாட்டுநாள்
ஆற்ற லீவினை யாட்டென லாயதே. (கூஉ)

என்றி ரங்கின ளியாருமி ரங்கினர்
துன்று கோயிற்று யர்க்கடன் மூழ்கின
அன்று வேட்டைக்க டைந்தவ ரசனும்
சென்று ளோருந்தி கைத்துள்வந் தாரரோ. (கூ௩)

ஆவி தென்னென்ற ரசன்வி னவித்தன்
தேவி யாணிகழ் செய்கையை மந்திரி
நாவி னுணர்ந் தென்செய்வெ னுனெனக்
கூவி மன்னன்கு லைகுலைந் தேங்கினன். (கூச)

ஏங்கி யீதுசெய் தாளுயி ரீர்வெனேல்
ஓங்கு ம்பெண்கொலை யொல்லையி லென்னுயிர்
நீங்கு மாபுரி வேனென நீணகர்ப்
பாங்கி லங்கிப ஒங்குழி பண்ணவே. (கூரு)

மந்தி ரிக்குவ குத்துப்பத் மாவதி
அந்த மானத றிஜய தேவர்முன்
வந்து தாழ்ந்தும்ம னைவியென் னுயிர்
சிந்த லாகிய தென்றுதெ ரித்தனன். (கூசா)

வேத நாதன்வி ளங்குமு னத்திரேர்
மாத யாவொடு மன்னவ னைப்புலி
வீத லானதுன் னுலன்று மேவெனப்
போத லாயினர் தேவிபு றத்திலே. (கூஎ)

கண்டு கண்ணனைக் கண்ணினுள் ளேவரக்
கொண்டு தாளமும் வீணையுங் கைக்கொடு
பண்டு மன்சொன்ன பாட்டறு நான்கென
மண்டு மஷ்டப திகொண்டு வாழ்த்தினார் (கூஅ)

வாழ்த்தி ராஸ்தவி லாசத்தை மாலரி
கீர்த்த னத்தொடு சேரக்கி ளத்தலும்
தீர்த்த னாதி ருநெடு மால்செவிக்
கார்த்த தாகவு னுகின னன்பர்முன். (கூகூ)

புல்லி யஷ்டப தியைப்பு கலுவோர்
நல்ல தென்றாக வின்றுவி னவுவோர்
அல்லல் போகவ வரிடத் தல்லொடு
வல்ல நன்பக லுஞ்சென்று வவருவேன். (ரா)

என்றி யம்பிப்பத் மாவதி தானெழ
நன்று தன்னரு ளாட்டங்க ளாட்டவும்
துன்று வானவா பூமழை தூற்றிட
நின்றெ மூந்துதன் னுதனை நேர்கண்டார். (ராக)

வாழி கூறினவ னவரி யாவரும்
ஆழி நாதன டிபணிந் தேத்தினார்
சூழும் வேந்தன்றெ ருதியோ டன்பர்காற்
கீழ்வ ணங்கிக்கி யாதிகி ளத்தினன். (ராஉ)

ஜயதேவர் திருவடிகளேசரணம்.

ஆக சரித்திரம (உ) கரு செய்யுள் (உகூம).

---

முற்றிற்று.



# துளசிதாசர் சரித்திரம்.



பொன்னி னாயகன் புனிதவான் மீகனைப் பாப
வன்னிவையகத் துளததை யுதித்தரி பத்தி
தன்னி னாற்றுவை யென்றலுந் தாளிணைப் போதில்
சென்னி மண்ணுறத் தண்டனிட் டவனியிற் சென்றார் (க)

அத்தி னாபுரத் தமர்கனோ ஜாவெனும் பெயரின்
உத்த மக்குலத் தாத்துமா ராமனுக் குரிய
வித்த கச்சுத னாதலு மிகமகிழ்ந் தீன்றோர்
புத்தி ரன்றனைத் துளசிதா செனப்பெயர் புகன்றார். (உ)

ஆய மைந்தனை யன்புட னாடொறும் வளர்த்தேழ்
ஆய னந்தனி லுபநய னத்தினை யாற்றித்
தூய பன்னிரண் டாண்டினுட் டொழின்மறை யனைத்தும்
ஏய பின்மம தாயெனு மினைமண மிசைத்தார். (ங)

இளமை நீங்குறுத் தையலைப் பிரிவுறா தியன்றய்
வளமை மாநகர்க் கரசக பரனுரை வழிப்பட்
டெளிமை யின்றியெச் செல்வமு மியைந்தனு பவிப்பார்
துளிமை போலொலி தளத்திறை யொடுசுர நடந்தார். (ச)

மமதை மாதிடை மறுபகற் றாதவந் தடைந்தே
உமது தாயுமைக் காணுதற் குவந்தழை யெனயான்
றமது பாலடைந் தேனெனத் தையலு மாமிக்
கெமது தாயகம் போய்வரு வேனென வியம்பி. (ரு)

வணங்கி நல்விடை பெற்றனை யகத்திடை வந்தே
இணங்கி நல்லுரை யாடியங் கிருந்தன ளிருக்க
நிணங்கொள் வேலவ னுடன்சென்ற மமதைத னேயர்
மணங்கொ டேவியைக் கண்டில ரில்லிடை வந்து. (சு)

அன்னை தன்னையெங் கெனவினாய்த் தெரிந்தக மயர்ந்து
பின்னை யஞ்சிலர் மாமியூ ரிரவிடைப் பெயர்ந்து
மன்னும் வாயிலிற் கதவடைத் திருந்ததை மதித்துத்
துன்னு மேன்முகட் டிருந்திழி பாம்பினைத் தொட்டு. (எ)

கயிறெ னக்கொடு சதனமே லேறினர் கடுகிப்
பயிலு முன்றிலிற் பாய்தலு மொலிதனாற் பயந்து
துயிலொ ழிந்தனர் யாவருந் துணுக்கெனத் தோன்ற
மயிலி யற்றனி மமதையும் வெளிவந்து மாழ்கி. (அ)

ஆவி நாதநீ ரல்லெனுங் கடலிடை யழுந்தி
மேவி நீந்திய தெவ்வித மிதுவென விதியோ
நீவி ரேறிய தெத்திற நிகழுத்துக வென்னத்
தாவி நான்வர நீவிடு கயிற்றெனச் சாற்ற. (௯)

காட்டு வீரெனத் தொடர்ந்தவ ரொடுவந்து கண்டு
நீட்டு பாம்பெனத் தெரிந்திது தாம்பென நீர்கை
பூட்டு போதிலுங் கண்டிலீர் காமமென் புழுக்கம்
மூட்டு வெம்புகைப் படலையின் மூழ்கினீர் முழுதும். (௰)

இநதி ரன்றலை பத்தினன் காமத்தி லிழிந்து
நொந்தி ரங்கின தறிந்திலீர் வருகென நுழைந்து
நாதி ருச்சத னத்துளே தவிசிடையிருத்தி
மைந்தில் விஞ்சிய மமதையு மின்னுரை வழங்கும். (௰௧)

பெண்க ளாசையங் கடலிடை மூழ்கினர் பெரிதும்
கண்க லங்குவ ராகலிற் காகுத்தன் கழல்மேல்
எண்க லந்துநீர் பேரின்பக் கடலிடை யிறங்கி
உண்க நாமசங் கீர்த்தன முதந்தனை யுவந்து. (௰௨)

இனியொவ் வாதெனக் காமத்தை யிகழ்ந்தன ராக
வனிதை கூறலுந் துளசிதா சாமென மதித்துப்
புனித மால்சர ணங்களை யுளந்தனிற் பொதிந்து
தனிநி லாமுக மமதையைப் பார்த்திது சாற்றும். (௰௩)

நெருப்பில் வீழதரு குழவியைத் தாய்கண்டு நேர்ந்து
விருப்ப மோடகற் றுதலென நீயெனை விரும்பிக்
கருப்பு வின்மதன் கணையினூற் கவலுறு கருந்தைத்
திருப்பி னையதிற் றேவியுன் றன்னைநீ தெரிக்கில். (௰௪)

என்று கொண்டவ ரிணையடி மேல்விழுந் தெழுந்து
நன்று சொல்லினை யென்றுகொண் டாடியே நயந்து
நின்று நீ செய்த நன்றியை நேர்வது நிலத்தில்
ஒன்று மில்லெனத் துணிந்தக நீத்தன ருன்னி. (௰௫)

(வேறு) அவ்வயின கன்றகல்வ னத்தினிடை யண்மித்
திவ்வியப கீரதிந திப்புனல்செ றிந்து
வெவ்வியலொ ழிந்துறுவன் மீகனல வோநான்
இவ்வியலி னின்றனனெ னத்தெளிவ தெய்தி (௰௬)

ஈசனிய மித்தசெய லிவ்வுலகில் வந்து
பாசமிகு பெத்தர்வினை பாறும்வகை செய்ய
மாசறுதல் செய்திலன்ம யற்கடல்வி ழுந்தேன்.
சீசியிது தீரும்வகை செய்வெனென வெண்ணி. (௰௭)

நல்லுணவொ ழிந்துவரு *நாளடியெ ழுந்து
செல்லுநதி மூழ்கினர்தி னஞ்செய்கரு மங்கள்
வல்லையின்மு டித்துதிர்வ னச்சருக ருந்தி
யெல்லையில ருந்தவமி யற்றினரி ருந்தார். (௰௮)

---

*நாளடி—உதயகாலம்

இப்படிய ருந்தவமி யற்றுபவர் நாளும்
கைப்படுக மண்டலந னீர்கொடுகை கால்கள்
துப்புரவு செய்தொறும ரத்தடிசு ரக்கக்
குப்புறுதல் செய்வர்மிகு நீரதுகொ ணர்ந்தே (௰௯)

ராமனென வோதுதிரு நாமமற வாத
நேமர்வரு டங்கள்பனி ரண்டதுநி ரம்பத்
தூமரமு றைந்தகழு துண்டுமிகு தூநீர்
ஏமமுறு நாளிடையெ திர்ந்ததொரு போழ்தில் (௨௰)

கோரவுரு வோடுகைகு வித்துமைவி ரும்பி
நேரும்விழி காணவெதிர் நின்றனனு மக்கோர்
ஆர்வமுறு நல்வரம ளிக்கவென வப்போ
தேருறுத வத்தினரி யம்புவரெ திர்ந்தே. (௨௧)

பேசியநீ யாருனது பேரெனவென் முன்னே
நேசமொடு வந்ததெனி மித்தமுரை செய்கென்
றேசறுத வத்தினரி யம்பவெதிர் பேயுங்
கூசலற வேயெதிர்கு நிக்குமவர் முன்னே. (௨௨)

நானலகை யித்தருவில் நாள்பலவி ருந்தேன்
ஆனபல நாளெனினு மாறுகிலெ றேரி
பானமது செய்விதியில் பண்பதனி னாலே
மேனிதளர் தாகமிக வெம்பியுற லானேன் (௨௩)

அன்னதொரு தாகமுட னண்மியவெ னக்குப்
பன்னிருசம் வற்சரந னீர்பருகு பண்பு
துன்னிடவ ளித்தியத னாலருள்சு ரந்தேன்
நின்னினைவி னேரும்வர நேரவெதிர் நின்றேன் (௨௪)

என்றலகை யன்புடனி யம்புமவை யெல்லாம்
தன்றுணையின் மாதுளசி தாசர்வின வித்தாம்
ஒன்றுதவி லாதவுள முற்றிவணி தென்னே
நன்றுவண நாடவெதிர் நண்ணியது காகம் (௨௫)

எண்ணியது கற்பகமெ திர்ந்ததொரு கள்ளி
புண்ணியம்வி ரும்பவெதிர் புக்கதுகொல் பாவம்
உண்ணியநல் லாரமுத முன்னவெதி ருற்ற
நண்ணியக ளென்றுனைசெய் தன்மையவை போல (௨௬)

(வேறு) அச்சுதன்றனைநி னைந்தபொழு தோர லகைதான்
இச்சுரந்தனிலெ திர்ந்ததினி யென்செய் வனெனா
மெய்ச்சுறுந்துளசி தாசர்நினை வேலை தனிலே
கைச்சதென்னெனவெ திர்ந்தலகை நின்று கழறும் (௨௭)

நீயிகுந்தமதி மானெனநி னைந்தன னினித்
தோமிலென்றகவி னுக்குரிய துங்க வரமொன்
றூமிணங்கவுரை நார்கொடல வோவ ணியலும்
தாமிணங்குறுவ தன்னபடி தானெ னலுமே (௨௮)

நன்று நீயிவனெ னக்குதவ நண்ணி னையெனில்
மன்ற லார்துளவ ராமனெதிர் தோன்றும் வரமொன்
றன்றி வேறெதிலு மாதரமெ னக்கி லையென
நின்ற பேயடிபெ யர்ந்துபய நீடி யதரோ (௨௯)

தார மேவிலகி நீபுகல்சு வாமி தனைநின்
நேர தாகவிடு நின்மலனை நீதெ ரியவே
சோர்வி லாதுபுரி வேனெனலு மேதுளசிதா
சார்வ மோடவனை யாரெனவி னவி னரோ (௩௰)

வாயு மாமதலை யென்றலகை கூற வடுவின்
றேயு மாருதிம னெங்குறைவ திடான்வி னாவிலே
ஆயு மாறுபுக லென்னமுறை யேய றிவுறப்
பேயு நீதிலம்வி னவுறுபெ ருங்க தைமுனே (௩௰௧)

சிரவ ணஞ்செய்பவ ருக்குமுனம் வந்து சிரவணித்
துரமி குந்துசெலு வோர்பினரு வந்து செலலாய்ச்
சிரம்வ யங்குறுகு லாவொடுசி தைந்த கலையும்
கரமி லங்குதடி யுங்கவினு கோவ ணமுமே (௩௰௨)

கொண்டு மாருதிகு லாவுறுவர் வேதிய ரின்மூப்
பண்டு வோரெனவ றிந்திடுதி யென்ற கலவே
விண்டு தந்நிலையின் மேவினர்வி யந்து மறுநாள்
பண்டு போல்வினவ யாவரினு முந்து படர (௩௩)

நித்தி யக்கரும மியாவையுமு டித்து நிமலன்
பத்தி யிற்பயிலு வோர்முனம டைந்து பயில்போ
துதத மக்குணநன் மாருதியு ரைத்த படியே
வித்த கச்சபையின் மேவினரி ருந்த னரோ (௩௪)

அங்கு ரைத்திடுபு ராணநடை யன்றும் வினவித்
தங்கு மெய்த்தவர்செ லப்பினர்ச தாக திமகன்
எங்கு றச்செலுவ தோவவணி லேக விவர்பின்
பொங்கு வப்புடன டந்தனர்தொ டர்ந்து புனிதன் (௩௫)

பாத தாமரைகள் பற்றினர்ப ணிந்த ருள்செய்வாய்
நீத னேயெனலு நீயெனடி தீண்டன் முறையே
யோத காதெனவி ராமனடி யுன்னு கிறமெய்த்
தூத னின்னடிதொ டத்தகுமெ னத்தொ ழுலுமே (௩௰௬)

அத்த னித்தலையி னின்றவனு மான மலமா
நித்த னைப்புகழ்வன் மீகனிவ னென்று நினையா
மெத்த வுட்பிரிய மோடவண்வி யந்து தழுவி
யுத்த மக்குணவு னக்குறுவ தோது கெனவே (௩௰௭)

நீவி ரும்புறுமி ராமனது சேவை நிலையை
நான்வி ரும்பினனெ னத்துளசி தாசர் நவில
மாவி ரும்புநிற மாலைவிழி காணும் வகையிங்
கேவி ரும்பியவ னெய்தும்வகை செய்வ னினிதே (௩௮)

என்ப தாய்மறைவ தாகியவி ராம னிருதாள்
முன்ப தாகிமிகு வந்தனைபு ரிந்து முதலே
நின்ப தாதரவன் மீகிநினை நோக்க நெடிதாம்
அன்ப தாயினன வற்கருள னின்க டனரோ (௩௯)

என்ன மாருதியி சைத்திடவி ராமன் வினவி
நன்ன ராகவென வானரந டந்து டன்வரத்
தன்ன தாகியச ராசனமு டன்று ளசிதா
சுன்ன லாகவவ ராசிரம முற்ற னனரோ (௪0)

வந்து தந்நிலைவ ழிச்செல*வ விந்தன் வனைவிற்
குந்தும் வானரர்கு ழுக்கொடுசெல் கின்ற னனென்று
முந்து வந்தனைபு ரிந்திடுத லின்றி முயலப்
பிந்து மாருதிய வன்பரிடை வந்து பெரிதே (௪௧)

உன்னி ராமனைபு வந்துதரி சித்த னைகொலோ
வென்ன வானரரோ டேகினவ விந்த னையலால்
அன்ன ராகவனை டைந்திலனெ னப்புக லலும்
துன்னு தேறுவையொ ராடென நினைத்த துணிவே (௪௨)

ஆன தென்றனும னேதனும யோத்தி நகரான்
கோன்ம கன்ஜனகி காதலனெ டுங்கொ டுமரம்
தான்வி ளங்குகர னென்றுமுனி சாற்றி னபடிக்
கேன டைந்திலனி னித்தனகி லக்குவ னொடே (௪௩)

நினைவுந் தொடர யானையுற லின்று தெளியப்
போத ... புரிந்தருளு பொங்கு புகழின்
மேத ... னேயெனவி ளம்பி னர்முனே
நாதன் வந்ததறி யாமனவி கின்ற வரரோ (௪௪)

துளசி தாசரிது சொல்பொழுதில் வாயு சுதனிற
குளம னோரதமு ருற்றுவனி ராக வனென்றத்
தெளிவு செய்துமறை வாயுறையுள் சென்று நினைவிற்
களவி ராகவனை யன்பொடுது தித்த னரரோ (௪௫)

ஆர ணந்தெளிவு ருவமல வாதி யெனமுன்
வார ணந்தெளிய வந்தவவ தார மாயெலாம
பார ணஞ்செய்பவ வெங்குநிறை கின்ற பரம
கார ணங்கதுவ லாணவவெ னக்க ருதவே (௪௬)

இன்ற நேகவித மாயெனைநி னைந்த னையெவன்
நன்று மாருதிந வின்றிடுகெ னச்ச னகிதோள்
துன்றி ராகவனெ திர்ந்ததுதெ ரிந்து தொழுது
நின்று நின்வடிவு காணநினை கின்ற வன்முனே (௪௭)

ஐயு ருதறிய நீயடைதல் வேண்டு மெனவங்
கைகள் சென்னிமிசை கூப்பவுணர் கண்ண னுமம
மெய்ய னுப்விரவ மேவல்கலி கால மலவோ
எய்தொ ணாதெனவி யம்பவனு மன்பு கலுமே (௪௮)

---

*அவிந்தன்—துருக்கன்.

நின்ன தேவனை டைந்தநிம லன்றெ ரிவதாய்
உன்ன தாயவுரு வந்தெளிவு றுத்தி டுவதால்
என்ன தாழ்வுவரு மென்னநெடி யோனி சைவுகூர்ந்
தன்ன தாகவென வத்துளசி தாச ரகமே (௪௯)

தம்பி யுஞ்சனகி யுந்தொடர்வு றத்த னுவினோ
டன்பின் மேவுமுன டைந்தனும னத்து ளசிதா
சின்பு கூரவுன தெண்ணமுடி வாகு மெனவும்
தம்பி ராநெதிரில் வந்துநிலை தந்த ருளினன். (௫௰)

வண்ட லம்புநறு மாலைமுடி யுந்தி கழ்வுறும்
குண்ட லங்களொடு செம்பொனுடை யுங்கு லவுகோ
தண்ட முங்கரிய கோலவடி வுந்த கவுறக்
கண்ட வன்பினர்க ளித்தடிப ணிந்த வுடனே. (௫௧)

ராக வன்பணியு நல்லவரை நன்கு தழுவ
லாக மாருதிய வன்பினரை நோக்கி யமலன்
போக மால்சரித முன்புபுகல் புந்தி யதனால்
ஏக நாதன்வர வெய்தினையி னிப்பு வியிலே. (௫௨)

மோன மெய்த்தவமெய் தாமையினி முன்பு புகலும்
சான விக்ரும னன்சரித மேதருமதால்
ஞான மிக்குறந வின்றுறுதி யென்றுநளினைக்
கான சிற்பரனை நோக்கிமிகு மன்பினறைவான். (௫௩)

தசர தன்புதல்வ நீயினிதி சைந்தருதகவால்
நிசமெ யன்பினர்த மக்கருள்செய் கென்ன நெடியோன்
வசையி லன்பர்தலை யிற்கையினை வைத்தருளிநன்
கிசைவு றும்படியி யற்றிமறை வெய்தி னனரோ. (௫௪)

(வேறு) அமல னேவலி னனுமன் சொன்னதே
விமல ரானமெய் யன்பர் மேற்கொடு
நிமல மானகா சிக்க ணேநிலாய்க்
கமல நாபன்மெய்க் கதைதொ டங்கியே. (௫௫)

ராம நாமமே நவின்றி யாவரும்
நேம மேபுரிந் துறநி ரப்பிநீள்
வாம நன்கழன் மறப்ப தின்றியே
தாமி ருந்தனர் துளசி தாசரோ. (௫௬)

இவர்த மன்புகண் டிணையில் காசிவாழ்
பவர்ம டம்புரிந் ததனி லேபயின்
றவரி ருந்திட வமைவு செய்துமற்
றெவரும் வந்துணற் கிசைவு செய்தனர். (௫௭)

பொன்னின் வெள்ளியிற் புரிந்து பாத்திரம்
துன்ன வும்பிற வுந்தொ குத்துமற்
றன்ன சாலையி லளவி லாருடன்
மன்னி யுண்டிருந் தனர்நன் மாதவர். (௫௮)

இப்ப டிக்கிவ ரெய்து நாளிலே
ஒப்பின் மெய்ப்புக ழுலகெ லாம்பரந்
தப்ப திக்குளே யவர்ம டத்தினுக்
குய்ப்பர் வேண்டுவ வுலப்பி லாதன. (௫௯)

வானு ளேவருங் கால மற்றதிற்
றானு றுதவத் தன்மை போலவே
ஞான மாதவர் மடத்தி னண்ணினும்
ஆன தின்றெனா வமைத லாகவே. (௬௰)

மறைநல் வேதியர் வரவும் போகவும்
குறைவி லாதரி பஜனை கொள்ளவும்
நிறைய வுண்பவு நிமிர்த லான்மடத்
திறையு மூடுத லிலையெவ் வாயிலும். (௬௧)

கொள்ளு வோரிலாக் குறைய தொன்றுமே
உள்ள தாயுற வொருதி னந்தனில்
கள்ள ரானவ ரிருவர் கங்குலின்
மெள்ள வெய்தியுள் ளிரவ லாகியே. (௬௨)

யாவருந்துயில் போதிலெவ்வள
வாவ லோவதற் களவு சால்பொருள்
மேவ வேகொடு மேவ வாயிலிற்
காவல் வீரரோ ரிருவர் கண்டனர். (௬௩)

கண்ட வீரரைக் கண்டு கள்வரிங்
குண்டு காவலென் றுணர்ந்து வேறொரு
மண்டு வாயிலிற் புகம டங்கிட
விண்ட வில்லுடை வீரா தோன்றினர். (௬௪)

இங்கு முள்ளது காவ லென்றுமற்
றங்கு மானமற றெங்கு மாய்வுறீ இக்
கங்கு லுங்கழி வாகக் காவல்செய்
துங்க வீரர்தந் தடையிற் சோர்ந்தனர் (௬௫)

உள்ளு ளேயிருந் துறுவ வேலைநாம்
கொள்வ தானகே யூர குண்டலம்
விள்வி லாமுடி விளங்கு வில்லுடன்
எள்ளில் வீரரிங் கெய்த னேக்கிலேம். (௬௬)

என்று பேசியங் கிருந்து பின்வெளி
துன்று போதுமுன் சொன்ன வீரர்தம்
வென்றி வில்லினீள் விசிக மேவிடற்
கொன்ற லானதை யுணர்ந்து மீண்டனர். (௬௭)

கொண்டு போகமுன் கொண்ட யாவையும்
பண்டு றைந்தவப் பாங்க ரஞ்சிவைத்
துண்டு போவதற் கிடமென் றுன்னியே
விண்டு வந்தனர் வெளியில் வீரர்முன். (௬௮)

வெறிது வந்தபோ தினும்வி டாதவர்
தெறுதல் கண்டுபின் றிருமபி யுள்ளுறீஇச்
சிறிது மேருதற் கிடனில் செய்வதே
தறிகி லோமென வயரும் போதிலே. (௬௯)

விடித லாகவே விதியின் யாவரும்
நெடிதெ ழுந்திட நிமல னைத்தொழூஉ
தடிக ளார்த்திசெய் தயல்வ ரப்புகும்
கொடியர் கணடுதாள் குறுகி வீழ்ந்தனர். (௭௰)

வீழ்ந்தி யாஞ்செய்தீ வினைபொ றுக்கெனத்
தாழ்ந்த நீவிரியார் சலிப்ப தென்னென
வாழ்ந்த மாதவர் வினவ மற்றவா
சூழ்ந்த செய்தியைச் சொல்ல லாயினர் (௭௧)

திருட வந்தயாந் திருடிச் செல்பொழு
திருவா யில்லிஞெ டெந்த வாயிலும்
தருவ தின்றியே தடுப்ப ராயினர்
வெருவி யிங்ஙனே யிருந்து விம்மினேம (௭௨)

ஈது தானிகழ செய்கை யென்றிடச
சாதுவாகிய துளசி தாசர்தம்
தீதில் சீடரெல் லாருஞ் சேர்வுற
நீதி யோடழைத் திதுரி கழ்த்துவார் (௭௩)

போவ தும்பொருள் புகுவ துஞ்செய்வார்
யாவ ருந்தடை யின்றி யிங்ஙனே
மேவு றுஞ்செயற் கெதிர்வி ரோதமாய்க
காவல் செய்துளார் யார்க டைச்கநேனே. (௭௪)

எனவி னுவமற் றினிது தாசரா
யினர்சு வாமிதம் மிருப தங்களும்
நினைய வாயிலிற் காவ னின்றிடப்
புனைகி லோமெனப் புகன்ற போதிலே. (௭௫)

பொய்யில் குண்டலம்பு னைகி ரீடமொண்
செய்ய வம்பரந் திகழ்வி லோடுகார்
மெய்யி னுரினு மீள்கி லாதது
கையர் கூறினர் கடைக்கண் காண்கென. (௭௬)

நான்கு வாயிலு நவின்ற வீரர்முன்
றோன்ற லாதமை கண்டு சூழ்தரச்
சான்ற மாதவர் வியந்து தாசரோ
டேன்ற தென்னென விரங்க லாயினர். (௭௭)

களவுசெய்தன ரென்று கைவிலோ
டிளவ லும்வர வெய்து வாயெனில்
அளவில் வெண்ணெய்முன் னமுது செய்தனை
களவி லென்றுனைக் கருதல் கூடுமோ. (௭௮)

மேவுத முந்தொட மயல்க நின்றநின்
பாத பங்கயம் பட்ட நோகடைப்
போதல் செய்தநின் பொன்ன டிக்கியான்
ஏது செய்வதிங் கெதிர்கைம் மாறரோ. (௭௯)

எனவி யம்பியங் கிருந்த சோரர்மேற்
சினவல் செய்வது சிறிதுமின்றிநும்
மனம்வி ரும்பிய மாடு கொண்டுநாண்
புனைவ தின்றிநீர் போகவென்றனர் (௮௰)

சாது சஜ்ஜனர் தலைவரேயும்மால்
ஆதி யம்பர ஞான சோதியை ந
நீது செய்து வந் திருட ரானயாம்
கோதி லாதுகண் கொண்டு கண்டனம் (௮௧)

பரிச வேதிதான் படுமி டந்தொறும்
துரிசில் பொன்னதாய்த் துலக்கு கின்றதும்
இரவி தோன்றுமு னிருள்வி லங்கலும்
சரிய தாகநுந் தாள்கள் மேவலால். (௮௨)

எங்கடவினை யியலஞ் ஞானமா
டிங்கு நீங்கினே மினியுஞ் சேவடிப்
பங்க யந்தொழும் பரிசு செய்வதே
எங்கள் வேண்டுதலெனா வின்றனர் (௮௩)

பணிதல் கண்டுநீர் பரம னைப்பெறுந்
தணிவில் புண்ணியர் தான மைந்துளீர்
அணிது நும்முட னணுக லாவதே
துணிவெ னக்கெனச் சொலியி ருத்தினர். (௮௪)

வேறு) இன்ன வாறிவ ரொழுகுநா ளொருபக லிடையே
மன்னு மாமட வாயிலோர் மறையவன் வந்து
நன்னர் ஜானகி ராமவென் றொருமொழி நவின்று
முன்ன ரோர்பிர மக்கொலை முடித்துளே னெனக்கு. (௮௫)

உளகொ லோபிர சாதமென் றேவின வுற்ற
அளவெள பாசனஞ் செய்துகிருஷ் ணார்ப்பண மாக்கிக்
கிளர்வ தாகிய போஜனஞ் செய்யுமுன் கேட்டார்
துளசி தாசருஞ் சூழ்ந்தவே தியருமச் சொல்லை. (௮௬)

கேட்ட யாவருந் துணுக்கெனத் திகைத்தனர் கெழும
வேட்ட ருந்திலர் துளசிதா சரும்வெளி வந்து
நீட்டு கைகொடு தழுவினர் நெடுங்கரம் பற்றிக்
கூட்டி வந்தந்தப் பந்தியி லிருத்தினர் குறித்தார். (௮௭)

அந்தணாளநீ ஜானகி ராமவென் றதனால்
வெந்த துன்பிர மஹத்திமுன் னாகிய வினைகள்
இந்த வேதிய ருடனமு தருந்துக வென்ன
முந்த வேதிய ரியாவருந் தடுத்திது மொழிந்தார். (௮௮)

வினைக டர்ந்ததெவ் விதத்தென மறைந்தொரு வேடன்
பனகந் தீண்டலாற் பாய்கணை தவறிடப் பகந்தான்.
புனிவ ரப்பினி லிராமலே போயின தென்ன
நினைவி லாயமல நிகழ்ந்திவிண் ணேறின னெனலால். (௮௯)

இந்த வேதியற் கிருவினை தீர்ந்திட வியற்றும்
அந்த ராமநா மம்பெரி தெனச்சொல வவர்கள்
முந்த லாகிய கதையிங்கு மொழிவது முடியா
துந்த லாவதே காட்சியிற் காட்டிடி லுண்பேம். (௯௰)

என்ற வேதியர் யாரையு நோக்கி நீரெவ்வா
றென்று வீரெனக் கைலநா யகனுறை கோயில்
முன்றி லுள்ளகல் விடையிவன் முன்னிட்ட மூரல்
நன்று கொள்ளுமே லவனொடுண் போமென நவின்றார். (௯௧)

அவரு ரைத்தசொற் கேட்டலுந் துளசிதா சாமென்
றிவர்மு னிட்டசோற் றினையொரு பாத்திரத் தேந்திச்
சிவனி ருக்குங்கோ யிலுக்குவா ரீரென்று சென்று
நவமி குத்தகங் காதரா விசுவநா தாநீ. (௯௨)

அமரர்க் காகமுன் னருந்தின நஞ்சின தழலை
விமல ராமநா மத்தினாற் றணித்தனை மெய்யேல்
கமல நாபன்பேர் கழறினேன் செயும்பிர மஹத்தி
நிமல மாகவே தீர்ந்ததற் கிவ்விடை நேரே. (௯௩)

இந்த வன்னத்தை யுண்டிடச் செய்கென வேத்த
அந்தக் கன்னந்தி வாலசைத் தெழுந்துகா தாட்டி.
முந்த நின்றவர் முகமெலா நோக்கியே முனைந்து
தந்த வன்னத்தைப் புசித்தது சுவாசமுந் தழைக்க. (௯௪)

உண்ட நந்திகன் னந்தியாய் முன்னென வுறையக்
கண்ட வேதிய ரியாவருங் களித்தரி தாசர்
கொண்ட பத்தியின் பெருமையைக் குறிக்கொணா தென்று
வண்ட போதனர் துளசிதா செனமிக மதித்து. (௯௫)

தாள்ப ணிந்துமா ஜயஜய வென்றுகூத் தாடி
நீள்வ சுந்தரை யளந்தவ னாமத்தை நினைந்து
வாள்கொ டாரகா கணத்திடை மதியென வயங்கத்
தோள்கொள் யாழினர் துளசிதா சரைநனி சூழ்ந்தார். (௯௬)

சூழ்ந்து நீடுதி சொல்லிமற் றவரொடு தொடர்ந்து
வாழ்ந்த மாமடம் வந்துதீ வினையினால் மறுக்கத்
தாழ்ந்த வேதிய னுடனமு துண்டுசஞ் சலமின்
றாழ்ந்த நாமகீர்த் தனக்கட லாடின ரம்மா. (௯௭)

வார ணாசியி லுள்ளவர் யாவரு மகிழ்ந்து
நார ணாவெனு நாமகீர்த் தனங்களை நவின்று
பூர ணாநந்தம் பெருகியே பொங்குறு நாளில்
சீர ணாந்துறு ஜயத்துபா லன்றிறல் வணிகன். (௯௮)

(வேறு) காலம்வந் தேயவன் கழியக் கற்பினால்
மேலருந் ததிநிகர் மனைவி விம்மினாள்.
சாலவுந் தெளிவொடு தனது நாதனோ
டேலுற வராநதி தீரத் தெய்தவே. (௬௬)

மூளரி மேன் மேலுற மூட்டி யன்னதில்
இளகின கருத்தளா யிறங்க வேகுவாள்
அளவில ரொருவரும் வழியி லன்புடைத்
துளசிதா சுறுமடந் தோன்றக் கண்டனள். (௱)

கண்டதி லுறைபவர் கழற்கண் வந்தொரு
தண்டநிட் டேகுறச் சமைந்து தாசர்பாற்
பெண்டனி வந்தரி பேர்நி னைத்துறும்
தொண்டரை வணங்கவத் துளசி தாசரும். (௱௧)

கண்விழித் தடிவணங் குற்ற கன்னிபால்
உண்மகிழ்ந் தஷ்டபுத் திரருண் டாகிநீ
மண்மிசை வாழ்கென வாழ்த்த மற்றவள்
விண்ணவ ரேபதி வீந்த தெண்ணியே. (௱௨)

உடனிறந் திடுவதை யுன்னி வந்தயான்
திடம்படு முமதுசே வடியைச் சீர்பெறு
மடந்தனில் வணங்கினேன் றனக்கு மைந்தர்கள்
அடைந்திட வாழ்த்தினீ ரதுபொய் யாகுமோ. (௱௩)

தெரிகிலே னெனவவள் செப்பக் கேட்டவர்
அரிவையே யுன்செய லறிகி லாதியான்
புரிவுட னுரைத்தன னதுபொய் செய்கிலான்
விரிபுகழ் ஸ்ரீஹரி யெனவி ளம்பினார். (௱௪)

தீங்கறு சொற்செவி கேட்டுத் திதில்சாட்
டாங்கம தாப்பினுந் தாழ்ந்து மற்றவள்
ஓங்கெரி வளரிடத் துறும்பி ரேதத்தின்
பாங்குவந் தனள்பதி யெழக்கண் பார்த்தனள். (௱௫)

கூடவந் தவர்களுங் குவிந்து கண்டுடன்
நீடுறு களிப்புடன் வியக்க நேரிழை
பீடுறு கணவன்கை பிடித்துக் கொண்டுசீர்
ஆடக மடம்புகுந் தளவி லின்பொடே. (௱௬)

இருவருந் துளசிதா செனுமெய் யன்பர்தம்
திருவடி வணங்கமற் றவரும் ஸ்ரீஹரி
கிருபைசெய் தனனெனக் கிளத்தி வாழ்த்தினர்
பொருவரு மிருவரு மனைக்கட் போயினார். (௱௭)

போனபின் றுளசிதா சென்னும் பொய்யிலா
ஞானமெய் யன்பினர் நவின்ற வாசகம்
தானது மெய்யெனத் தனைய ரெண்மரை
ஊனமில் லாதுபெற் றுவந்து வாழ்ந்தனர். (௱௮)

செத்தவன் பிழைத்தெழச் செய்த வாசிசால்
உத்தமர் பெருமையவ் வூரெ லாந்தெரிந்
தெத்தலந் தனிலுள திதனை யொப்பதென்
றத்தலம் பெருங்களி துளும்ப லாயிற்றே (௱௯)

அணுகுகள் ளரும்வெளி யாய மைந்ததும
நணுகுகின் னந்திசோ றுண்ட நன்மையும
பிணமெழுந் துறவநுள் பெரிது செய்ததும
தணிவிலிவ் வைணவர் தம்ம தாணையே (௱௰)

ஆனதந் தினபுரி யாளு மக்பராங்
கோனுணர்ந் திடச்சிலர் கூறக் கேட்டவன்
றுனுடை மந்திரி தன்னைக் கூவியவ்
வானவை யவாதமை யுரச்செய் கென்றனன் (௱௰௧)

கேட்டமந்திரியுநன் றென்று கேடிலார்
மாட்டுறச் சிவிகைதேர் வழுவை யாதிய
கூட்டியக் காசியைக் குறித்துச் சென்றவா
ஈட்டுறு தவத்தின்மா மடத்தி லெய்தினன (௱௰௨)

எய்தின மந்திரி யிணையின் மாதவர்
செய்யசெந் திருவடி வணங்கிச் சோத்திசோர்
ஐயநும் பெருமையை யறிந்தெம் மன்னவன்
வையமீ திவர்ந்தவண் வருதல் வேண்டினன் (௱௰௩)

ஆதலா லருள்புரிந் தடைய வேண்டுமென்
றோதலு மாதவ ருவப்பு றுதெமக்
கேதுவேண் டுவதவ ணெய்தற் காயினும்
போதுறில் வைணவம் புரிய லாமென (௱௰௪)

எண்ணிநன் றெனவவ னேற்றுந் தேரின்மேல்
நண்ணியத் தினபுரி நயக்கச் சென்றுமுன்
அண்ணல்வந் தடிதொழு தழைத்துப் போகப்போய்க
கண்ணிய வரியணை கவின வைகினர் (௱௰௫)

வைகின துளசிதா சருக்கு மாண்புறு
செய்கைசோ டசம்வழு வாது செய்துதன்
கைகளின் வணங்கியுந் துதித்துங் காதலின்
நைகுத லொழியவோ ருரைந விற்றுவான் (௱௰௬)

ஐயரே நீர்செயு மற்பு தங்களை
வையகம் புகழ்வது கேட்டு மற்றொரு
தெய்வமின் றெனவுமை மதித்துஞ் செய்கையை
மெய்யுறக் காண்பது வேண்டி னேனரோ (௱௰௭)

என்றவன் றனக்குநே ரிராம நாமமே
ஒன்றல பலசெயு மென்ன வோதிய
நன்றெழி லிராமனைக் காண நாட்டுதிர்
இன்றெனி லுமைவிடே னென்ன வோதினன (௱௰௮)

ஓதியங் குழையளை யழைத்திங் குற்றுறை
மாதவர் தமைவிட ராக மற்றென்று
மீதிய விருக்கையை மேவி னன்பின்பு
சாதுசற் சனர்செயுந் தகைவி ளம்புவாம் (௱௰௯)

(வேறு) சஞ்சீவி கொண்டு தருமாருதி தன்னை யுன்னும்
நெஞ்சோ டிருந்து துதிக்கின்ற நன்னேயர் முன்னே
பைஞ்சோதி வீசு நிறமா லடிபற்றி நின்ற
மஞ்சாடு திண்டோள் வயமா ருதிவந்து நின்றார். (௱௨௰)

நின்றாரை நோக்கித் தொழுதைய நின்னேய மில்லான்
நன்றான நாதன் றனைக்காட்டு கென்றென்னை நாடித்
துன்றா தரமின் றுரைசெய்த னன்சூழ்ந்த துன்பம்
இன்றே தவிர்த்தி யெனநன் றெனவெய்தி னாரே. (௱௨௧)

தம்மா டணைந்து தனிமா ருதிதம்ம தான
வெம்மா படையை நினைக்கத் தெறுவீர முள்ள
அம்மா வயவர் பதினா யிரரக் கணத்தே
மொய்ம்மா தெரிந்தும் மியல்காட் டுதிர்முந்தி யென்றார். (௱௨௨)

சொல்லப் பொழுதே தொகைவா னரர்தொந்தொ மென்று
வல்லைக் கிளர்ந்து பொழின்மா மரம்வேரின் வாங்கிப்
புல்லப் பொலிந்த நெடுமாட மேற்போக விட்டுக்
கல்லிற் செறிந்த மனைமா கடல்காண விட்டார். (௱௨௩)

நகர்வாழ் ஜனங்க ளடிவாரி மேனூடு கின்ற
முகின்மே லெறிந்து மகவேஉக் கனைமோதி வீசித்
துகின்மே விலாம லுடன்மூ டுறுந்துன்பு தோற்ற
நகில்கா ணலானா ரரசன் புணர்நங்கை மார்கள். (௱௨௪)

அரசன் மனைக்குட் கடுஞ்சூறை கொண்டாட யெங்கும்.
விரசும் படிசோ ரரைவீசி நீள்வீதி தோறும்
வரைபைந் தருவால் வழியின் றெனமாற்றி நிற்கும்
தரையெங் கணுநாய் நரிமேவி டுந்தன்மை செய்யும். (௱௨௫)

உறக்குங் கடிக்கு முறுக்குஞ் சிரத்துற் றுதைக்கும்
கறக்குஞ் சிறுநீர் முகத்திற் கழுத்திற் சுருக்கும்
சிறக்குந் தனிவா லதியாற் செவியைச் சிதைக்கும்
இறக்கும் படிவா னரஞ்செய் வதையெண்ணலாமோ. (௱௨௬)

இவ்வாறு கோவென் றுறுகூக் குரலெங்கும் விஞ்சி
மைவாய் நெடுங்கண் மடமா தருமைந்த ரும்போந்
தெவ்வா றுநாங்கள் பிழைப்போ மெனவேந்தன் முன்னே
செவ்வாய் திறந்து புலம்பிப் புகுஞ்செய்கை சொன்னார். (௱௨௭)

அவர்சொல் லுமுன்னே நெடுவா னரமங்கும் வந்து
கவர்செய் கைகண்டு கலங்கிப் புரங்காக்கும் வேந்தன்
நிவர்தீக் கிளர்ந்து புகுமூ ழிகொனேர்ந்த தென்று
துவர்வாய்க் கருங்கண் ணினர்சோர் வொடி ரங்குமெல்லை. (௱௨௮)

அழைத்துக் கொடுவென் றவனே முதலான தேர்ச்சிக்
குழைச்சென் றறுவோ ரரசே யிவணுற்ற சாதுக்
கிழைக்குந் தவருற் குரங்குப் படையெங்ஙும் வந்து
தழைத்திங் ஙனுகைப் படுக்கின் றனதாங்கொ லென்றூர். (௱௨௯)

இவ்வூர் தலைகீ ழுறச்செய்வதற்கில்லை யையம்
ஒவ்வாது காசி யுறைவோரை யிங்குய்த்த தென்று
நைவாய் மெலிந்து நனிடஞ்சி நன்னுவு லர்ந்து
மெய்வாய் தவத்தோர் தமைவேண் டிடவேந்தன் வந்தான். (௱௩௰)

ஹரியன்ப ரைவர்க் கொருதேவி யோடம்ப ரீடர்
பரியும் படிசெய் தவமான முன்பட்டு நைந்த
துரியோ தனனுந் துருவாச னும்போற் றுளங்கிப்
பெரியோ ரடிக்கீழ்ப் பணிந்தே புகழ்பேசி யுய்வான் (௱௩௧)

திருமா லடியீ ரடியேன் செயுந்தீங்கு தீர்க்க
வருவா னரரைப் பொறைசெய் தினிமாற்றல் வேண்டும்
விரைவா யெனச்சா னகிரா மனைவேண்ட லானீ
தெரிவா கராமன் படைமுன் னுறச்சேர்ந்த தென்றூர். (௱௩௨)

அதுகேட் டவேந்த னுமைரா மனென்றன்பு செய்யா
திதுவாய்ப் பதானேன் பிழைதீர்த் தருள்கென்ன வேண்டித்
துதியோ டுபோதத் துணைபற் றினன்சோர்தல்கண்டு
வதிவானரங்கள் மறைவா கெனவாழ்த்தல் செய்தார் (௱௩௩)

வாழ்த்தத் தெரிந்து மறைவா யினவா னரங்கள்
பார்த்துப் பணிந்து பயபக்தி செய்வேந்த னோடு
சூழ்த்தந் நகர்வாழ் ஜனமூ டரைத்தொண்ட ராக்கிச்
சேர்த்தோர் வருட மதிற்றங் கினர்தீங்கி லாமல் (௱௩௪)

(வேறு) பின்னருச் சனிமா நகரிடைச் சென்றூர் பேசுமந் நகரிலோர் வணிகன்
மன்னுறு தனவா னாகிய சௌதாகிரிக்கொரு மகளதி ரூபந்
துன்னின ளாகி வளருநா ளனையுந் தந்தையுந் தோன்றிய மகட்கு
நன்னய வரனைத் தேடியே தரற்கு நல்லினத் தவருட னுசாவி (௱௩௫)

அம்மக ளுருவை யொருபடத் தெழுதி யதைத்தகுந் தவரிடங் கொடுத்து
நம்மது குலத்துக் கேற்றவோர் புருட னவிலுமெத் தேசத்தி லுறினும்
நும்மன மிசையிற் கொடுவரு கென்று நுவன்றவர் தமையனுப் பினனச்
செம்மையோர் பலவாந் தேயங்க ளாறு திங்களுந் தேடினர் திரிந்தும் (௱௩௬)

தக்கநற் கொழுநன் கிடைத்திடா தவரெந் தனவணி கனுக்கொரு மகளோர்
மிக்கவ ளாகப் பிறந்ததா லெமக்கு மிகுதுயர் மேவிய தென்று
புக்கனர் பரண பூரிடை யங்குப் பொருந்துசௌ தாகிரி தனக்கு
மக்களா னவரி லொருகணில்லாத மகனொடோர் மகளும்வாய்த் திருக்க (௱௩௭)

மணமகன் றேடி வந்தவ ரந்த வணிகன்வீ டடைந்தவன் மக்கள்
குணமுநல் லழகும் பார்த்தவ னேக்கக் கொடுவரும் படத்தினைக் கொடுக்க
வணமிகு படத்தை நோக்கிமற் றதனில் வரைந்தபெண் ணழகினை மதித்தே
அணவுமென் மகனுக் கொருகணின் றவனுக் களிப்பனே வென்னமற் றவர்கள்,

உமதுபெண் ணினுக்காணுடைதனை யுடுத்தவ் வூர்புகக் கொண்டுபோ யாங்கே
தமரெலாங் களிக்க வவனுஞ்சம் மதித்துத் தருமணம் புரிந்திடும் போதில்
அமருமா ணொடுபெ ணடர்ந்திடுங் கூட்டத் தங்கொரு வருந்தெரி வுறாதுங்
குமரனுற் றாலி புனைந்திடச் செய்து மெனவவன் சம்மதங்கொண்டு. (௱௩௯)

மகடனை மகனு மெனவலங் கரித்து மருவுதஞ் சுற்றத்தா ருடனே
திகழுமுச் சனிமா நகரிடைச் செல்லச் சேர்ந்தவர் தமக்குநல் வசதி
தகவுறத் தரலு மவரெலா மங்குச் சார்ந்தினி திருந்திட வழைத்துப்
புகழ்வுற வந்தோர் மணமகன் றன்னைப் பொருந்துசௌ தாகிரி தனக்கு (௱௪௰)

தெரிவுறக்காட்ட வேடமாப்பிள்ளையைச் செவ்வையாய் நோக்கின னுயென்
அரியநன் மகளுக்கமைந்தவன் றக்கோ னுமென வனைவரு மகிழ்ந்து
புரியுநன் முழுத்தம் பொருந்துற நோக்கிப் பொலிமணந் தனக்குவேண் டுவன
வரிசையி னமைத்துத் தாலிபூண் பதற்கு மங்கல ஹோரைவந் தெய்த (௱௪௧)

பலவகை வாத்தியங்களு முழங்கப் பாவைமார் வாழ்த்திசை பாட
நலமறை யவருஞ் சுற்றமு மூரி னன்கமைந் துளருமங் கெய்தி
இலகுற நெருங்கி யிருக்குமவ் வேளை யெய்துமாப் பிள்ளைதனை யீன்றோன்
குலவொரு கண்ணின் மகன்றனுற் றாலி குழுவிடைப் புனைதல்கூ டாமல் ()

என்செய்வோமெனவாளாவிருந்தனனங்கியைந்தவேடங்கொண் மாப்பிள்ளையால்
பொன்செய்தாலியினைப் புனைவுறச் செய்தார் புனைந்தபின்செய்வன வெல்லாம்
மின்செயச்செய்து மணமுடிந் ததன்பின் விழைவுறு மங்கல நானம்
நன்செயச் செயுங்கால் வேடமாப்பிள்ளை நல்கினே னமதுகோட் பாடு (௱௪௩)

வெளிப்படு மென்று பயந்தென்மைந் தனுக்கு மெய்யனு கூலமா யில்லை
களிப்புறு நான மின்றுகூ டாது கங்குல்போய்ப் பின்செய லாகுந்
தெளித்தென வெலாரு நன்றென விருக்கத் தெரிந்துவந் தவரெலாந் தெரியா
தொளித்தன ரேகப் பெண்மனை யோர்க ளுற்றமாப் பிள்ளமனை யோரை. (௱௪௪)

கண்டில ராகி மாப்பிள்ளை மனையோர் கரந்துசெல் லுதற்குக்கா ரணமென் [குத்
கொண்டெனவெண்ணியொன்றுந்தோன்றிலராய்க்கொடுவந்தவேடமாப்பிள்ளைக்
தண்டுத லின்றி நானஞ்செய் வதற்காய்த் தரித்துள வாடையா பரணம்
விண்டுறச்செயுங்காற்பெண்ணெனத்தெரிந்துவேர்கினர்பெண்மனையோர்கள்.

மிகுதுய ராகி யௌவனப் பெண்ணாய் மேவிநீ யிருக்கவுன் றன்னைத்
தருமண மகனு யியற்றிட நீயுஞ் சம்மதித் திங்குவந் தெம்மை
நகுமவ மானஞ் செய்திடத் தகுமோ நலமிலீ யெனவவர் வெறுத்துத்
தொகுமனை யோரும் வைதன ரடித்துத் துன்புறச் செய்துவெள் ளிடையே. ()

கொடுவந்து கழுதை மேலுற வேற்றிக் கோனக ரதனைச்சூழ் வந்து
நெடுமனைக் கழுவி லேற்றிடத் துணிந்து நிருபன்ற னாணைமேற் கொண்டு
கடுகினர் வரும்போ தப்பெணென் றந்தை கலங்கவிவ் வாறுசெய் தனனே
நடுநிலைக் கடவு ளேயென வழுது நைந்துகொண் டேவரும் போது. (௱௪௭)

அவ்வழி தன்னிற் றுளசிதா சரவ ரணைவுறக் கண்டிவ ளவனாச்
செவ்விசேர் பாக வதனெனத் தெரிந்து சேவடி சேர்ந்துநான் வணங்கில்
வெவ்விய லனைத்து நீக்குவா னென்று விரைந்தவ ணிறங்கிமற் றவர்தந்
திவ்விய பதுமச் சேவடி வணங்கத் திகழுமாப் பிள்ளையெனத் தெரிந்து. (௱௪௮)

நீயுநின் மனைவி யொடுசுக மாக நெடும்பகல் வாழ்கென வாழ்த்த
மேயவள் கூட வந்தவ ரெல்லா மிகுநகை செய்யமா தாசர்
ஏயவ ரெல்லா மென்னகை செய்தா ரெனவவ ளையயான் பெண்ணே
ஆயவ ளென்று தன்வர லாறெல் லாமவர்க் குரைசெய்தா ளாகி. (௩௪௯)

ஐயரே யென்னை யளித்திட வேண்டு மென்றடி வணங்கின ளாகப்
பொய்யிலா ரிதுவென் புதுமையென் றெண்ணிப் புரையிலா விட்டல னுன்னை
மெய்யதா நான்சொல் விதிப்படி செய்வா னஞ்சிடே லெனவவர் விளம்பத்
தையலா ளுகித் தயங்குதல் கண்டோர் தனித்தனி யதிசயங் கொண்டார். ()

இவ்விதப் புதுமை யந்நக ரரச னிருசெவிக் கமுதெனக் கேட்டுச்
செவ்விது தாசர் செயலென வந்து திருவடி வணங்கினன் புகழ்ந்தான்
அவ்வித மான மணமகன் றன்னை யழைத்தனன் கொண்டுபோய் மனையில்
நவ்விசோ விழியா டன்னைமுன் போல நன்மண முடித்தபி னல்லோர். (௩௫௧)

(வேறு) அக்கோ மகன்செய் வழிபாடு பெற்றன்பி னோடு
மெய்க்கோ குலத்துற் றியமுனை நதிமேவி மூழ்கித்
திக்கோர் புகழத் திகழ்கண் ணனைச்சேவை செய்து
தக்கோர் புகழும் பிருந்தா வனந்தன்னில் வந்து. (௩௫௨)

வளர்சார்ங் கபாணி தனைக்கண்டு வந்தித்தொர் மாத
வளவுங் குறைந்து மதுராபுரத் தின்க ணண்மி
இளர்நீர் யமுனை படிந்தங்கு றுங்கேச வன்றாட்
டளமா மலரைத் தலைமேற்கொ டுதங்க லானார். (௩௫௩)

யுகநான்கி னுஞ்சா லடியார் புகழோதி நின்ற
தகவாற் பிரிய ரெனுந்தாசர் தங்கில்லில் வந்து
மிகநீர் நயந்து செயும்புத்த கம்வேண்டு மென்ன
அகமே நினைந்தா ரிவர்சீ ரதிலான தின்மை. (௩௫௪)

மதுவொ ன்றியசீர்த் துளவோன் றெரியாமல் வந்தே
அதுவும் புரிந்த துளதென் றமைவாக வைத்தான்
புதிதோர் னுளதாய்ப் புனைபுத் தகங்கொண்டு போந்து
துதிநின் றியலா லயத்துற் றதுசொல்லி முற்றி. (௩௫௫)

ஈரானே தெரிந்திங் கெழுதாத தைநாடி ராமன்
தானே யெழுதுந் தகைபார்மி னின்றென்று சாற்ற
ஆனு வியல்பிற் பெரியோ ரதையாய்ந்து கண்டு
மேனு முரைப்ப துளதோ வெனமெய்ச் சுகின்றார். (௩௫௬)

ராமன் னெழுதத் தகுஞ்சீர்பெறுநாதர் தம்மை
ஏமுன் னுறுவோ ரிவர்சீர் புனைந்தேத்து கிற்போர்
பூமன்னி வாழ்வா ரரிக்கன் புறுபுந்தி மேவித்
தாமின் புறுவா ரழியாப் பதஞ்சார்குவாரே. (௩௫௭)

துளசிதாசர் திருவடிகளேசரணம்.

ஆகச் சரித்திரம் (௩) க்குச் செய்யுள் (௩௨௯).

---

முற்றிற்று.

# நாமதேவர் சரித்திரம்



மாமகள்கோ னுத்தவரை யுஞ்சுகரை யும்பார்த்து மண்ட லத்தி
லேமகராய்ப் பிறக்கவெனப் பாலாழி நாதனே யெம்மைக் கர்ப்பத்
தாமளவா கப்புரியா தயோனியிற்றோன் றுவதாக வருள்க வென்று
காமருவு துதிசொலக்கு ணநிதியு மற்றவரை நந்த ராக்கி. (க)

கிளிஞ்சிலகத் தமைத்துமுகில் கங்கையிலும் பீமையிலுங் கிளர்வ தாகத்
துளிகளுடன் விழப்பெய்ய நியமித்தான் பீமநதி தோன்றி மேன்மேல்
வளர்பெருக்கி லேமிதந்து கிளிஞ்சில்வர வதனுள்ளே வாழ்மெய் யன்பர்
தளர்வறவிட் டலநாமந் தனைத்துதித்துக் கொண்டின்பந் தழைப்ப தானார். (உ)

ஞானநலங் களியுயர்ந்து பண்டரியிற் குணையியெனு நங்கை யோடு
தானமருந் தாமாஜிச் செட்டிதினம் பீமநதி தன்னி லாடி
ஆனஹரி விட்டலனைச் சேவித்து வருநியதி யதுமா றாமல்
ஊனமற வொருநாளிற் கற்பிலுயர் மனைவிதனைத் தொன்று சொல்வாள். (ந)

உயிர்த்துணைவீர் நமக்குமக வுண்டாக விட்டலனுக் கோதிப் போற்றி
அயிர்ப்பறநீர் பெறுகவென மூப்பின்மிகுந் துளகாலத் தரிவை யேநின்
வயிற்றுறுமோ மகவுனக்கு நல்லறிவின் றெனப்புகல மனைவி நோக்கி
இயற்றயன்கன் றொடுகோளை யரைமறைக்கச் செய்கன்று யியல்வ தானென், ()

பெருமையைநீ ரறியாது பேசுகின்றீ ரென்றுரைத்த பின்று மாஜி
திருமணவா ளன்பாற்போய்க் கோயிலிடை நின்கருத்தைச் செப்பு கின்றேன்
அருளுவனேற் பெருகென்று கோயிலுக்குப் போயமல னடிசே வித்துப்
பொருவரியா யென்மனைவி கருத்தைநிறை வேற்றுகெனப் போற்றி நின்றார். ()

அக்கணத்தே துயில்வரச்செய் தவர்கனவிற் பீமநதி யதிற்கி ளிஞ்சில்
புக்குறுசே யினைநாளைப் போந்தெடுத்துக் கொள்கவென் று பூமி நாதன்
தக்குறச்சொல் பொழுதுணர்ந்து மனைவந்து மனைவிக்கு ச்சாற்றி யன்பின்
மிக்கவர்பின் னொருதயத் தெழுந்து சென்று மூழ்கினபின் மிதக்கக் கண்டார். ()

மிதந்தகிளிஞ் சிலையெடுத்து வந்துதிறந் ததைநோக்க விளங்குஞ் சேயை
இதநதருநீம் பாலுதவற் கியாருளரென் றெண்ணிமனை யிடத்தின் மேவிச்
சுதன்றனைநீ கொள்கென்ன மனைவிக்குக் கொங்கைநனி சுரந்து தீம்பால்
உதைந்தொழுக வாங்கிமுலை யூட்டினுள் பெருமகிழ்ச்சி யுள்ளத் தோங்க. (எ)

சேய்பெறுக் காலத்திற் சிறுவனைத்தந் ததற்குதவத் தீம்பா லூர்தந்
தாயவவர் மகிழ்விற்கோ ரளவுண்டோ வமலனரு ளளவே யாக
மேயதிரு மதலைக்கு நீராட்டி விட்டலன்றன் னும மேவ
ஏயபடி நாமதேவெனப்பெயர்வைத் தாய்புவியெல் லாமீ டேற. (அ)

நாடோறுந் தாய்தந்தை யன்பின்வளர்ப் பதனாலே நாளுமோங்கிப்
பீடுறுங் காலத்தி லொருநாட்சந் தைக்கினிய பிதாத்தா னேக
ஈடேறு மகன்றன்னை நோக்கியன்னை பிரசாத மிதனைக் கோயில்
ஊடேறி விட்டலனுக் குவப்பாக நிவேதித்திங்குறுக வென்றாள். (கூ)

பிரசாதந் தனையேந்திக் கோயிலிற்போய் விமலனுக்குப் பெருநீ ராட்டித்
தரமான வுடையுடுத்தித் தொடைசூட்டிப் பலகலனுந் தயங்கச் சார்த்தி
வரதூப தீபந்தந் துபசார வகையனைத்தும் வழங்கி நாமர்
திரமாக வணங்கியிந்தப் பிரசாதங் கொள்கவென்று திருந்தச் சொன்னார். (௰)

நாதனருந் தாததுகண் டென்பிதாக் கொணர்வதனை நாளு முன்பாய்
நீதவிர்ந்தா யின்றுபுசிப் பதையெனது பிதாச்சந்தை நிலைக்குப் போந்தார்
ஆதலினு ஞன்கொணர்ந்தே னென்பாலே தோகுறைநீ யருந்தா துற்றாய்
ஏதுசெய்வே னென்றயர்ந்தார்விக்கிரகமுண்பதென்றேயெண்ணங் கொள்வார்.

இவ்வகைசொல் லியுமருந்தா திருப்பதனைக் கண்டடிகே ளின்று நீமுன்
செய்வகைசெய் யாதிருந்தா யென்றன்னை பாற்சென்று செப்பு வேனேல் [ன்
அவ்வகைக்கென்குறைசெய்தாயென்றென்னையடிப்பாள்மற்றதற்கென்செய்வே
எவ்வகையான்பிழைசெயினும்பொறுத்திதனையுண்கவெனவிரங்கிச்சொன்னார்.

சொன்னதுகேட் டுளமிரங்கி யழுகண்ணீர் துடைத்துமுகச் சோர்வு நீக்கித்
தன்னதிரு கரங்கொண்டு தழுவவவர் பிரசாதந் தனைமுன் வைக்க
மன்னுபெரு மானுமுள மகிழ்ந்துண்டிங் குண்டதனை மற்றோ ருக்குப்
பன்னலென நாமதே வடிவணங்கித் தாமுறையும பதிக்குச் சென்றார். (௰௩)

வந்தமகன் றனையன்னை பிரசாதம் யார்க்குதவி வந்தா யென்னச்
சிந்தைமகிழ்ந் தமுதுசெய்தார் திருமாலென் றுரைத்திடலுஞ் சேயை நன்றுன்
றந்தைவந்த பின்பறிது மென்றிருந்து தாமாஜி வந்த பின்பு
முந்துநடந் தனையுரைக்க வியப்புற்றுச் சோதிக்க முயல்வு கொண்டார். (௰௪)

நாமதே வரைநோக்கித் தாமாஜி நேற்றுண்ட நாத னின்றும்
தாமமுது செய்வதைநீ காட்டென்று பிரசாதந் தனைக்கைக் கொண்டு
நேமமொடு கோயிலுக்குள் ளேசென்றங் கயனின்று நிவேதி யென்ன
மாமணிவண் ணனுக்குபசா ரங்களெல்லாம் புரிந்துதுதி வாய்ப்பச் சொல்லி. ()

உண்டருள வேண்டுமென்று கைகூப்ப விட்டலனு முவர்துன் றந்தை
கண்டுகொள வெளியாகே னெனநாம தேவர்பின்னுங் கைகள் கூப்பி
விண்டுநீ யோகபட னெனதுபிதா வுக்குனுரு விளங்கக் காட்டிக்
கொண்டுவரு பிரசாதங் கொண்டிலையேல் விடேனுன்னைக் கொள்வா யென்றார்

பாண்டுரங்க னதுகேட்டு மகிழ்ந்துநகை கொண்டுமிகு பரிவுபூண்டு
வேண்டுபடி யுண்டருளி விடைகொடுக்கத் தாமாஜி வியந்து காதல்
நீண்டுநீ மகனுத லாலேநா னிமலனெதிர் நிற்கக் கண்டேன் [ர்
ஈண்டுதம்வாவென்றழைத்துக்கொண்டுமனையேகியில்லாட்கெல்லாஞ்சொன்னா

குணுயிபதி தனைநோக்கி யிவனைநாந் தேவனெனக் கொள்வ தன்றி
ஒணுதுமக னெனக்கொள்வ தயோக்கியிற்றேன் றியதினு லுண்மை யன்பன்
பணமுடிசேர் பாம்பமளிப் பரமனுக்கென் றனுதினமும் பணிமாறுமல்
அணுவிவருங் காலத்தின் மகனுக்கு மணஞ்செயுநா ளாயதென்று. (௰அ)

சடங்கனைத்துந் தகச்செய்து மணஞ்செய்த பின்புமகன் றனக்கோர் மைந்
விடங்கமிகத் தோன்றுதலு மகிழ்ந்தீசவு ளஞ்செய்ய வேண்டு நாளில்
மடங்கல்வடி வாயினன் வரிசைகொண்டு வரத்தெரிந்து மகன்மைந் தற்குத்
திடங்கொள்பெய ரிடுகெனநா ராயணனென் றேநாமஞ் சிறக்க வென்றான். ()

பின்புமரு மகளைமக ளொடுசேர்த்து வைத்துவிதி பெருகச் செய்து
முன்பனரு ளுடையணிகள் முதலியன தரிப்பித்து முகுந்தன் செல்வ
அன்புசெய்து வருநாளிற் குணாயிமகன் றனைநோக்கி யைய யாங்கள்
துன்புறுமூப் படைந்துற்றோ மிரவுபக னீஹரியைத் துதிப்ப தாகி. (௨௰)

ஆகமறந் தனுதினமும் விட்டலனைப் பற்றிக்கொண் டமைவதானால்
வாகுடனே குடும்பரக்ஷையாகுவதெப் படியவண வத்து ளோர்கள்
நாகரிக ராயுலகிற் குடும்பரக்ஷை செய்துகொண்டே நாத னாம
யோகமுறு கின்றனரவ் வாறன்றி நீவேறா யுறுகின் றாயே. (௨௧)

நாங்களுமுன் மனைவிமக ளொடுநாளு நல்குரவி னலிதனோக்கிப்
பாங்குளரெல் லாருநகைக் கின்றனரே யென்செய்வோம் பகரா யென்னத்
தீங்கறுமெய் யன்பினருக் கனுதாபம் பிறந்துதிருக் கோயில் சென்றங் [ய்
கோங்குமுதல்வனைப்பணிந்துபாண்டுரங்காவெனைக்குடும்பத்துறவேன் செய்தா

உனக்கிரக்க மில்லையோ வெமதுதுய ரறிந்திலையோ வென்ன வோதி
மனக்கலக்க மாய்க்கண்ணீர் வடித்துநின்றார் தமைநோக்கி மலராள் கேள்வன்
நினக்கின்று துன்பமுற நியமித்த தாரென்று நெடுங்கண் ணீரை
வனக்கையினாற் றுடைத்தினிது மார்பினோ டுறவணைக்க வகுக்க லானார். (௨௩)

(வேறு) மறைபுக ழொருவநின் மலரடி மறவா
துறைவுறு மெனதுள முறுதுய ருறவே
குறைபுகல் கிறதனை குறைகில னைதநின்
நிறையருள் கொடுகளை வுறநினை கெனவே. (௨௪)

அன்பினர் மொழிவதை யமலனும் வினவி
என்புடை யமருதி யினியுனை யடையா
துன்புறு பவவினை யெனவடி தொழுதே
இன்புட னிவணுற வினிதென வுறுவோர். (௨௫)

களிமிகு தெளிவொடு கருணைநன் னிதிதன்
அளிமிக வமலநி னருள்வடி வெனதுள்
ஒளிர்தர வருளுவ தொடுபெயர் புகலத்
தெளிவருள் பவமெவை செறியினு மெனலும். (௨௬)

அடியனை யருள்பவ னலர்மக டனைநீ
நெடிதுண ரிவனது நிலைதனை யெனவே
முடிவறு மகிழ்வொடு முகிழ்நகை புரியாக்
கடிமனை யுளசெயல் கழறுக வெனவே (௨௭)

மடியொடு மனைவிபொன் வளரிட நெடுவான்
நெடிதுடை யவகிழி துகினெகிழ் மனைவி
இடிமனை யுடையவே னியல்பறி கிலையோ
நொடிகென வருள்குவை யெனநுவ றரவே. (௨௮)

எனுமடி யவர்மொழி யினிதென வினவிப்
பினுநகை புரிவொடு பெரிதிவ னுறுகால்
அனையொடு மனைவித மகவயி னழலா
வினைவினை வுறுவது வெகுளியின் மிகவே. (௨௯)

நோமியல் புரிமிடி நுழைவதி னுகர்தற்
காமியை விலையுன தகவயி னதனைப்
போமியல் புரிபுதல் வனுமிலை யெனவே
மாமியை மருமகள் வசைபல புகல்வாள். (௩௰)

துகிலிலை யுணவிலை சுகமிலை யாமிவ்
வகைபட வேமனை வந்தன னெனவும்
தகுதியி லரிபெயர் தானவில் வதிலென்
றுகுவிழி நீருட னுரைதரு பொழுதே. (௩௧)

பண்டரி புரவிறை பரிவுட னகையுட்
கொண்டுயர் ககபதி குறைவறு விடையாய்
மண்டனில் வரமிசை மலிதன நிறையத்
தொண்டர்த மனையது துருவினன் வருவான் (௩௨)

கேசவ வணிகனெ னக்கிளர் பெயர்கொண்
டாசறு தெருவிடை யடைகுநர் தமையெங்
கேசக ளுமண திடமென வினவப்
போசன மிலன்மனை புதியவர் புகுதல். (௩௩)

நன்றென வுறவினர் நகைதர நாமர்க்
கொன்றுத லறிவற வுவர்மனை யதனைத்
துன்றிட வருமவ னெதிர்தனு குநரைப்
பின்றையும் வினவின னவர்மனை பெறவே. (௩௪)

எங்கென வினவின னெதிரவ ணியல்வோர்
பைங்குலை மிகுவன படர்வுறு கொடிதாழ்
அங்கென விடைதனை விளைவினி லனுகென்
றெங்கணு முறைபவ னெய்தினன் மனைவாய். (௩௫)

வந்தவ னில்லிடை வதிபவர் யார்நீர்
தந்திடு கதவிசு தகுபுதி யவன்யான்
முந்துறு வீரென முதுவர்க ளிலைநீ
பிந்துக வெனவிடை யுதவினள் பினையும். (௩௬)

அயலவ ளொடுதின மரிபெயர் புகல்வார்
பயிலுவ ரெனிலவர் பசிதவி ரெனவில்
இயலறி கிலர்பதி யெளிதினின் மொழிவார்
அயில்பொரு ளெவையுள வகவயி னடைவார். (௩௭)

வறுமையின் வகைதெரி கிலர்சொலும் வகையும்.
அறிகிலர் நவிகுவ ரெமையென வறையும்
குறிதெரி ஹரியெதிர் குறுகுதி யெனவும்
அறைகுவ ரெவரொனு மவளறி வுறவே. (௩௮)

யானொரு நாமன துறவின னவனுக்
கானது கொடுமனை யணுகின னெனவும்
தானது பெறும்வகை தவிசது கொடுவர்
தூனமி லிதிலினி துறைகென வுற்றுன் (௩௯)

புதியவ னெனவுரை பொழுதுள மகிழாள்
இதுதன மெனுமிடை யுதவின டவிசென்
றதிநகை கொடுலக ரலனென தன்பன்
நிதிநசை யிலனரி பஜனையி னிமிர்வான். (சுய)

ஆதலி னவனைநீ நலிதர லவன்மா
டூதுகொள் செலவுறி லினுமுத வுவனின்
நாதனை டுரைநய னணுகின னெனவென்
றோதலு மாதிவ ளுரைநனி புரிவாள். (சுக)

ஐயநி னகமுனி வுறமுன ரறையும்
வெய்துரை பொறுமைசெய் வெகுளலை யினிநிங்
கெய்தினை யமுதுசெய் தேகென விறைவன்
செய்தில னமுதவ னில்பொழு தினிலே. (சுஉ)

(வேறு) என்று நாயக னங்குநின் றினிதெழுந் தருளிக்
குன்று போலுயர் கோபுர நிலைவளர் கோயில்
சென்று மாமலர்த் திருவொடு புரிசெயல் செப்பி
நன்று றைந்திட நாமதே வின்மனை நல்லாள். (சுங)

இங்கு நீடுறு மகிழ்வுகொண் டென்றிருக் கணவர்
பங்க யாசனி நாயக னிடத்துறு பக்தி
பொங்க நாடொறும் புரிந்தது பலித்ததிப் பொழுதென்
றங்கை கூப்பிமற் றப்பொதி தனையவிழ்த் ததிலே (சுச)

சிலபொன் கைக்கொடு செறிநிரை யாவணஞ் சென்று
பலவும் வேண்டுவ வணிகனிற் பெற்றுத்தன் பதிக்கு
நலம தாகவந் தறுசுவைப் போனக நன்காக்
குலவ வேயமைத் துறவெளிச் சென்றதோர் குணுயி. (சரு)

மைந்த னன்புக்கு மலர்மக ளுயகன் மகிழ்ந்து
விந்தை செய்துறு விளைவறி யாடனி விரைந்தே
அந்த நாளுண வினுக்கமை வனசில வாய்ந்து
வந்து றும்பொழு தேகினை வுற்றனள் மகனை. (சுசு)

ஈட்டு கின்றிலை பொருளென முனிந்ததை யெண்ணி
வாட்ட மீக்கொடு சென்றவன் கோயிலில் வதிவான்
நாட்டு மிப்பொழு தெனக்கொடு நாயகன் கோயில்
காட்டு கோபுரத் திடைவந்து கண்டுகை குவித்து. (சுஎ)

வாயி லூடுசெல் வுழியவள் வரவறி மாயன்
நேய மைந்தனைத் தனதுபின் புறமுற நிறுவி
மேய போதுவந் தவளது தெரிந்துசீர் விமலா
ஏய நின்வயி னன்புமிக் கென்மக னென்றும். (சுஅ)

குடும்ப வாழ்க்கையை யிகந்துநின் கோயிலே குறுகி
இடும்பை யென்பது தெரிந்தில னியல்வுற விங்கே
நெடும்பல் காலமு நின்னையே பற்றின னின்றால்
படும்ப டர்க்கியா மாற்றலம் வறுமையிற் பட்டு. (சுகூ)

தளர்வு கூர்தர விங்ஙனம் புரிவது தகவோ
அளவி லன்பொடு வளர்த்ததிவ் வாறுற வன்றே
கிளர்வ தாயெமைக் காப்பது கருதியே கெழும
உளவு றூலெங்கள் குடிகெட லாகுமோ வுரைப்பாய். (௫௰)

நின்னை நம்பினர் நேயர்பா னிபெறு நினைவே
உன்ன தாயுறு கின்றதோர் பருக்கைகொய் யவலோ
டின்ன பெற்றுநீ தருவது பேரின்ப மென்றால்
என்ன யான்றர வுளமிடி யல்லதொன் றின்றே. (௫௧)

மண்ணி ரந்தனை யுளவறிந் தனைதிரு மார்பா
அண்ணன் மாபலி வீடணன் னெனன்பவ ராலே
எண்ணி நீயெவ ரிடத்தினும் பெறுவதே யிசைந்தாய்
வண்மை யுன்வயி னெங்ஙன முளதென வைப்பாம். (௫௨)

சேட னாலுநின் செய்வினை செப்புதற் கெளிதோ
நீட நானுனைத் தேவென நினைந்துநிற் பதனால்
ஆட லாகிய தெய்வநன் னிலையுள தன்றேல்
வாடன் மேவுதி யெனைக்கண்ட வுடனென்றன் மகனே. (௫௩)

உனது பின்புறந் தனிலொளித் தனையிஃ துவப்போ
அனக செப்புதி யென்னனு மமலனங் கறைவான்
கனகை கொண்டுநின் மகன்றனை நான்கெட நயவேன்
வனமரக்கனி பழுத்திடில் விழுவது வம்போ. (௫௪)

அன்ன தேயெனச் சகத்தெனுந் தருவதா யமைந்த
என்ன தாகிய தாளினைக் கீழ்விழு மிவனை
நின்ன தோர்மக னென்னுதி யவனது நிமித்தம்
சொன்ன நானுமோர் நாமரு பத்தொடு துலங்கி (௫௫)

நாம தேவனென் பால்வர னுறுகின னயப்புற்
றாம தன்றென நீவிலக் குவதிங னடாது
நிம கன்றனைக் கூஉய்ச்செல நினைவுறி லெனக்கு
வேம கம்பெரி தென்றிடக் குறையின் விளம்பும். (௫௬)

உழுது நன்னிலத் திடும்பயி ருழவனை யுரப்பி
வழுவு றுதிறை கொள்புர வலனென மாயா
பழுதி லாதுநான் வளர்த்தமைந் தனைப்பரி வின்றி
எழுது கின்றனை நின்பொரு ளெனவிஃ தியலோ. (௫௭)

என்ற போதவட் கிரங்கியத் தயாநிதி யேழாய்
நின்றனக்குநேர் யாருளர் நீபுரி தவமோ
ஒன்ற னுமிங் கோதரி தொப்பிடின் மலர்மேல்
நின்ற நான்முக னிடத்துநா ரதமுனி நேராய். (௫௮)

ஆத ரத்தினஞ் சனைவயி னனுமனு த்தானு
பாதனுக்கொரு துருவனைத் திரிமுனி பயந்த
மாதத் தாத்திரே யர்முத லோர்களை மான
நீதத் தோர்மகன் றன்னைநீ பெற்றனை நினைக்கில். (௫௯)

ஏனவி ருவிய குழையிமா மாயனே யெனக்குத்
தனைய னாமனின் றுள்விடா னாயினுந் தாயாம்
எனையு மென்குடும் பத்தையும் பாலன மியற்றப்
புனைவு செய்துமற் றவனையென் பால்வர ப்புரிதி. (௬௰)

என்று வேண்டுதற் செம்பிரான் மனமிசை வின்றி
மன்றன் மாமல ராண்முத லியமனை வியரை
நன்று நோக்கிநீ ரேனுமிக் குழையியை நயந்து
சென்று சேர்கநின் மனைக்கெனச் செப்புதி ரென்றான். (௬௧)

நாத னுரைத் தருளிய படிசொல நயந்த
மாத ரார்தமை நோக்கிநுங் கேள்வனை மறையும்
ஏத நீங்கிய தீனத யாளனென் றிசைத்துப்
போத நீடிய தீனரோம் வயினின்றிப் போமோ. (௬௨)

நலிவு மிக்கயா மகன்றனை வளர்த்துநன் னலத்திற்
பொலிவு பெற்றுறு வோமிவ னாலெனப் பொருந்த
மெலிவு றுத்தியிவ் விட்டலன் றனின்மயல் விளைத்துக்
கலியு றச்செய னிவிருங் காண்டிரே கண்ணால் (௬௩)

இரக்க மில்லைகொ னுங்களுக் கும்ஜகத் தெங்கும்
பரக்க வுண்டுதெய் வங்களை வேதனம் பற்றிப்
புரக்க மற்றிந்த விட்டலன் போற்புதல் வனைப்பின்
கரக்க வில்லறப் பயனறச் செயலெங்குங் காணோம். (௬௪)

ஆத லால்விட்ட லன்றிருத் தேவிமீ ரருளிக்
காத னாயகன் றனக்குளம் வரநனி கண்டு
தீது தீரவென் புதல்வனை விடும்படி செய்ம்மின்
போது கேளெனப் புதல்வனை நோக்கினள் புகல்வாள். (௬௫)

உலக மோகன னாய்ச்சமு சாரத்தை யொழிக்க
இலகு கின்றவன் பாலென்னை யிடைவிடா திருத்தல்
குலவு நங்குடி மிடியிடைப் படுவது குறியாய்
பலவென் சொல்லிநீ வருகிலை யேலிவர் பார்க்க. (௬௬)

வலிந்து னைப்பற்றி யீர்த்தியான் போகுதல் வழுவேன்
நலிந்தி டற்குமு னெழுகென நாதனை நோக்கிப்
பொலிந்தி ருத்தியான் புகல்வதற் கொன்றுநீ புகலாய்
மெலிந்தி டெங்குடி கேடனே யென்பது வினவி. (௬௭)

பாண்டு ரங்கனுன் மகன்றனை யழைத்துங்கள் பதிக்கு
வேண்டு காரியஞ் செயக்கொடு போதென்னை வெறுக்கேல்
ஈண்டு கென்னநா மனையழைத் தவள்வயி னீந்தான்
ஆண்டு நாமனைக் கைக்கொடு போமவ ளறைவாள். (௬௮)

நாம னீயிந்தப் பண்டரி நாதனை நயந்து
ஏம வாழ்க்கையை யிகழ்ந்தனை யிங்ஙனஞ் செயவோ
யாம்வ ளர்த்ததுன் றனையென நாமதே வெதுவும்
தாமு ரைத்திடா தமலனைப் பிரிதலாற் றளர்ந்து. (௬௯)

அழுது டன்வரக் கூஉய்க்கொடு போயக மடைந்தாள்
பழுதி னமதே வகத்துத்தன் பன்னியா லமைந்த
வழுவில் போனக வகைகளும் பாத்திர வகையும்
தழுவு செல்வமுங் கண்டனர் தியங்கினர் சலித்து. (௭௰)

அன்னை யிவ்வள மாயின வெப்படிக் கமைந்த
வென்ன மற்றவள் யானறி யேனென வெதிர்ந்து
பன்னி யானரா ஜாயிதன் பதிதனைப் பார்த்து
நன்ன யத்துநீ ராடிநீர் வருகென நவில (௭௧)

கேட்டு நாமதே விவள்வெறுப் பின்றியே கிளத்தி
நாட்டு கின்றதற் புதமென நாரியை நோக்கி
ஈட்டு செல்வமிங் கெவ்வணத் தியைந்ததென் றியம்ப
நீட்டு செல்வத்தை வெறுத்திகழ் வாரென நினைந்து (௭௨)

மாறு கூறில ளிருக்கமற் றதுதெரி ஜனுயி
கூறு கின்றன ளையநின் வயினன்பு கொண்டு
தேறு கேசவ செட்டியென் போன்பொருள் செறித்து
வீறு மோர்பொதி கொண்டுவந் தனனின்று விரும்பி, (௭௩)

கொண்டு வந்தவன் றனைநின்றன் மனையவள் குறித்து
மண்டு மிப்பொதி யேதெனக் கேட்டலும் வணிகன்
கண்டு போன்மொழி யாயுன்றன் கணவனென் கருத்துக்
கண்டு காதல னுதலி னவன்மிடி யகல. (௭௪)

பொதிநி ரம்பிய பொருள்கொடு வந்தனன் பொருந்தும்
இதுவெ லாஞ்செல வானபின் பின்னரு மீவேன்
வதுவை மென்குழ லாயினிக் கணவனை வருத்தேல்
அதிக வன்புட னிருத்தியென் றிப்பொழு தகன்றான். (௭௫)

என்று நாடொறுந் தனக்கினி தாழிய மியற்றித்
துன்று கின்றவள் சொல்வது கேட்டகந் தூயோர்
நன்று நன்றிது செய்தவ னிறையென நயந்து
குன்றின் வீழ்தரு மருவியிற் கண்கணீர் குழும. (௭௬)

வருந்தி யிப்பொரு ளாலெனை மயக்கவோ மாயா
திருந்தி லேன்பொருட் டிங்ஙனஞ் செய்வதுன் செயலோ
பருந்தி லேறிய பண்ணவ பரமபா வனசீர்
பொருந்து சீதர புவிமக ளுயக புனித. (௭௭)

யாக மேசெய்துந் தவம்பல வியற்றியும் யாணர்
யோக மேசெய்து முனைப்பெறு கிற்கில ருழல்வார்
ஆக பொன்றர நீவரற் கெத்தவ மயர்ந்தேன்
மாக வைகுந்த நினையன்றி வேறொன்று மதியேன். (௭௮)

ஆகி நிற்கநீ செய்தது தகுதியன் றென்று
யூகி யாய்ப்பொரு ளனைத்தும்வை திகர்பெற வுதவிச்
சோகியாநிற்க வரும்பிணி தொலைந்தவர் போல
ஏகி யுள்ளகத் தமுதுசெய் தினிதிருந் தனரே (௭௯)

(வேறு) இப்படி சியற்றிய விவர்முன் போலவே
ஒப்பறு விட்டல னுற்ற கோயிலிற்
றப்பறச் சார்ந்தவன் றன்னை நாடொறுஞ்
செப்புறு பஜனைசெய் திருக்கு நாளிலே. (அய)

விட்டல னொருதின மவரை மெய்விருப்
புட்டர வழைத்துநா மாவு ரைப்பகேள்.
சுட்டிய பொருளெலாந் தோய்ந்து நின்றுளேன்
றிட்டமோ டென்பது தெளிதி யல்லையோ. (அக)

ஆதலா லென்னிடத் தன்பு செய்தல்போல்
நீதமா யுயிர்தொறு நேசம் வைந்தியென்
றோதனு மன்பர்கீ யுரைக்க வேண்டலேன்
மாதயா வுளமுயிர் தோறும் வாய்ந்தென்றூ. (அஉ)

அன்னவர் கருத்துல கறியச் செய்வதை
யுன்னிய நாதனங் கோர்து வாதசி
மன்னிய பொழுதுயாத் திரையின் வாய்த்துளார்
நன்னரு ண்டிடும்வயி னுயிற் றேன்றியே. (அந)

சோறிட வேண்டியே சுலவு காலையில்
மாறு கொண டடித்தவர் வெருட்ட மற்றொரு
வீறுளோன் கட்டமு தெடுத்து மேற்செலச
சீறியே யடித்ததைத திரும்பக் கொண்டனன். (அச)

மற்றுநீ ராடுவோர் மடியைத் தீண்டலுரு
செறறவர் கரியராய் தீண்டிற் றீங்கிலே
இற்றிதற் கெனப்பல ரானு மெற்றுண்டு
சுற்றியங் கொருபுறஞ் சோர்ந்து நிற்கவே. (அரு)

யாத்திரை துன்னுவோ ரிதனைக் கண்டியாம
வாய்த்தசோ றிடுதுமேல் வருநம் மோடெனுத்
தீத்திரள் விழியுகச் சினந்து ரப்பலுங்
காத்ததிங் கெவர்க்குநற் கருணையின்றெனு (அசா)

தன்னகத் தன்புளோர் தங்க கத்துவந்
தன்னவர் மிசையுமப் பத்தை வாய்க்கொடு
பன்னரும் புரத்துளோர் பலருங் காணவே
துன்னிவெள் ளிடைவரத் தொடர்த லுற்றனர். (அஎ)

நெய்யிலா தப்பத்தை நீயுண் ணற்கயான்
கையிலே கொடுவருங் கலத்து நெய்யிலே
பையவே துவைத்தியான் றருவன் பைப்பயத்
செய்தியா லமுதுவிக் காமற் செல்லவே. (அஅ)

என்றவர் முடுவல்பா லெய்த மற்றது
நின்றிடத் தோய்த்திவர் நிரம்ப வூட்டலு
மென்றதுண்டிடக்கண்டு வியந்து வேறுளார்
நன்றநா மனைப்பித்து நண்ணிற் றென்றனர். (அகூ)

ஜீவகா ருணியத்திற் றிறம்புகின் றில
ஞவலா னுமன்பே ரறிஞ னென்னவுந்
தாவிலர் சிலர்சொலுந் தருணந் தன்னிலே
மேவுநா யருக்கொடு விளங்கு ஸ்ரீதரன். (௬௰)

நகைசெயக் கண்டுநீ நாயு ருக்கொடோ
தகைதர வந்தனை சௌரி யென்னவே
வகைதெரி யன்பரை நோக்கி மாதவன்
மிகைதவி ரெனையெந்த விதங்கண் டாயென்றான். (௬௧)

(வேறு) கோபா லாவுனை யுணர்ந்து கொண்டவி
சோபா கேசரர் சொன்ன லத்தினு
லேபா வந்தெரி வெய்தி னேனென
மாபா மார்பன் மகிழ்ந்து போயினான். (௬௨)

சின்னாள் பின்செல வாக வேமலர்
மின்னா ளுயகன் மேவெ காதசி
நன்னா ளுண்டிட நாம தேவரைச்
சொன்னான் வாவென வன்பு துன்னியே. (௬௩)

அவ்வா றோதிய வமல னுக்கிவ
ரௌவா தாலரி தினமு ணற்கெனச்
செவ்வே நீயரி சேர்தி னந்தனைத்
தவ்வா தெப்துற வோத காதென. (௬௪)

உன்னாய் முன்னரு ருக்குமாங்கத
னன்னா னேகிக ரம்ப ரீடனில்
நின்னா லேயியல் கிற்கு நீரல
நன்னா ளென்னலு நாம ரோதுவார். (௬௫)

கோவே நின்னருள் கொண்டு முற்றுத
லோவே னென்றுமெ னச்சொல் வோர்தமை
மாவே றும்மணி மார்ப னாகிய
தேவே சோதனை செய்ய வெண்ணியே. (௬௬)

மூப்பால் விஞ்சிமு திர்ந்த வேதிய
னாப்போய் நாமரை யன்ன மீகென
வாய்ப்பா காதரி மன்னு மித்தினம்
நாய்ப்பா னன்னமெ னச்சொ லிப்பினே. (௬௭)

கந்தங் காய்கனி காத லிப்பிரேல்
நந்தும் வெம்பசி தீர நல்குவேன்
அந்தண் ணீரென வன்ன மில்லையேல்
சிந்து மென்னுயி ரென்று செப்பியே. (௬௮)

நாமா நீபுவி கண்ணு யிர்க்கெலா
மாமா றன்புசெய் யன்ப னென்னவே
பூமீ தோர்புக லப்பொ ருந்தினேன்
நமா ரோதனி யாய மோவென. (௬௯)

மறையோ னத்திவ ராது கொள்கென
இறையோய் விண்டுவி னன்ப ரில்வரல்
முறையோ வெங்கொலை மூந்திடாதெனத்
தறைமேல் வீழ்ந்துயிர் சாதல் மெய்யென. (௱)

செத்தா னின்னொடு சாத றிண்ணம்யான்
அத்தா வென்னுமு றாவி போயினான்
முத்தா பந்தெற மூந்தி னோர்தெரிந்
துய்த்தார் சந்திர பாகை யொண்கரை. (௱௧)

பலருங் கூடினர் பார்த்து நாமநீ
நலவ னென்றுபேர் நண்ணி யன்னமீ
திலனென் றிப்பழி யெய்தி னாயெனச்
சொலவுங் கேட்டெது வுஞ்சொ லாதரோ. (௱௨)

தகனஞ் செய்திடத் தக்க விந்தனம்
புகவெய் துஞ்சவத் தோடு பொன்றிட
அகமுன் கொண்டத னோடு ணைந்தெரி
நகநன் கிட்டனர் நாம தேவரே. (௱௩)

அதுகண் டேருளோர் யாரும் யாருமிங்
கிதுசெய் யாரென வெய்த வற்புதங்
கதுவும் வெங்கனற் கட்கி டந்தமா
முதுமண் வேதியன் முந்தெ ழுந்தரோ (௱௪)

சங்கு சக்கரந் தங்கு கைகளும்
பொங்கு குண்டலம் பொலிகி ரீடமேர்
தங்கு மானன மூந்த யங்குபொன்
பொங்கு மம்பர மும்பொ ருந்தவே. (௱௫)

தோன்றி யன்பரைத் தொட்டெ டுத்துனைப்
போன்று ளோரிலைப் புவன மூன்றிலு
மென்ற நாமதே வினைம கிழ்ந்துசீர்
சான்ற மாலரு டந்து போயினான். (௱௬)

(வேறு) அன்புருக் குமணி தன்னை யகமகிழ்ந் தினிதினோக்கிப்
பின்பொரு தினத்திற் பாண்டு ரங்கமால் பேசு கின்றான்
என்பொடு சரீர மெல்லா மெனக்குநோ வுறுத லாலே
நின்புது மலர்க்கை யாலே நீபிடி யென்னக் கேட்டு. (௱௭)

அலர்மக ளுத னேநின் னுகநோ வுறுதற் கென்னே
உலகிடைப் புரிந்த செய்கை யுரைத்தரு ளென்ன லோடு
மிலகுறு பொன்னே நாம னியல் மனைக் கெய்தி னார்கள்
தலமெலாம் புகழ நின்ற சாதுசற் சனர்களாக. (௱௮)

அன்னவர் தமக்கெ லாம்யா னவிர்கலை தோய்த்துத் தந்து
மன்னவர் பானஞ் செய்ய வார்புனல் முகந்து தந்தும்
பன்னு மூழியங்க ளெல்லாம் பலபல புரிந்துந் தாசிக்
கென்னமா வரைத்துத் தந்து மென்னுடம் பயர்த லானேன். (௱௯)

என்னமால் புகலக் கேட்ட விந்திரை நகைத்து நாதன்
றன்னைமெல் லணைமேற் சாயச் சார்த்தித்தன் மலர்க்கை தன்னால்
நன்னரா யுறப்பிடித்து நலஞ்செய்தா ளாகவோர்நாள்
மன்னினர் பஜனை செய்ய மாதவன் கோயிற் கன்பர். (௱௰)

தமக்கொரு துணையு மின்றித் தமியராய்ப் பாடக் கண்டு
கமைப்புறு தவர்பி னின்று காகுத்தன் றாளங் கொட்டு
மமைப்பது கண்ட தொண்ட ரனைவரு மின்பத் தாழ்ந்தார்
இமைப்பறு தேவ ரெல்லா மினிதுபூ மாரி பெய்தார். (௱௰௧)

பின்னரும் பாண்டு ரங்கன் பெரிதக மகிழ்வு கொண்டு
தன்னரைக் கியன்ற தாம்பீ தாம்பர மவிழ்ந்து வீழ
உன்னகில் லாதங் காட வுற்றனன் ஞான தேவர்
நன்னரங் கதனைக் கண்டு நாதனைப் புகழ்ந்து நின்று. (௱௰௨)

செங்கையைப் பற்றி யெல்லாந் தெரிபரந் தாமா சீர்சால்
பங்கயக் கண்ண தேகம் பற்றபி மான மின்றி
இங்கயர் கின்ற செய்கை யென்னென வினவ நாதன்
அங்கவர் தம்மை நோக்கி யகமகிழ்ந் தினிது சொல்வான். (௱௰௩)

பற்றொன்று மில்லே னுமன் பஜனையா லவச மானேன்
இற்றைநா ளென்ன ஞான தேவரம் பரத்தை யேந்திச்
சுற்றிட விடையி லங்குத் தோன்றினர் கபீர தாசர்
மற்றவர் தமையெ லாருந் தழுவினர் மகிழ்வு கூர்ந்து. (௱௰௪)

அவ்வையிற் கையி லேயா லாத்தியை யேந்தி வந்தாள்
நவ்வியை வென்ற நோக்கி னளினையங் கதனை நாமர்
செவ்வையி னேந்தி நாதன் றிருமுகந் தோன்றச் சூழ்ந்தார்
வவ்விய பாண்டு ரங்கன் மகிழ்ந்தொன்று புகல்வ தானன். (௱௰௫)

ஞானதே வேயின் றிங்கு நவில்கின்ற பஜனை நன்றே
ஆனதென் றுரைத்த போதி லமலநீ தாளங் கொட்டித்
தானினி தாட அற்றூற் றனியின்பந் தானெய் தாதோ
யானினிப் புகல்வ தென்னோ வென்றனர் ஞான தேவர். (௱௰௬)

நாதனு மகிழ்ந்து வந்த நல்லவர் தமக்கெல் லாந்தன்
ஓதனந் தரப்பெற் றியாரு மோங்கிய வுவகை கொண்டு
ஸ்ரீதர முகுந்த தேவ தேவவென் றினிது போற்றிப்
போதல்செய் தனர சோதை புதல்வனை மறப்பி லாதார். (௱௰௭)

நாமதேவர் திருவடிகளே சரணம்.

ஆகச் சரித்திரம் (௩) க்குச் செய்யுள் (௫௪௩).

---

முற்றிற்று.

# நாமதேவர் சரித்திரம்.

நாமதேவவொரு தொழிலு மின்றியரி நாமமோதினரிருந்துழித்
தாமமேவியகு ணாயிமற்றது தனைத்தெரிந்து மகனோநமக்
கேமமேவிவர வீட்டவின்றியுறி லெவ்விதத்திலினி யில்லறம்
சேமமெய்துமென நிதியலாதுதொழில் செய்வதெப்படி யெனச்சொனார். (க)

அதுவினாவியகு ணாயிபண்டரிய டைந்து கொஞ்சமுமி ரங்குறு
இதய மேவிமலி தாணியங்கொடு சமைத்தொர் வேளையனை யுதரமே
நிதமு முண்டுமிகு பொருள் பெறீஇ யதனைநெடியவட்டி கொளநேர்ந்ததால்
மிதமிலாதபொரு ணாடுலோபிதா தாவெனும்பெயரை மேவினேன். (உ)

பாலடைந்தெனது குமரனோர்பயனு மின்றியேயுலவு பண்பினேன்
ஏலநன்குதொழி லெய்துறப் பொருள்க ளில்லையீடுமிலை யாதலிவ்
வேலையொண்பொருளோ ராயிரந்தனி விராகன்வேண்டுமென விட்டலன்
சாலவங்கவ னுளத்தின்மேவிநிதி தரமயக்கவவ னன்றெனா. (உ)

ஆறுமாதவள வுக்கொர்சீட்டெழுதி வாங்கிநன்னிதி யளித்திடப்
பேறுமேவிமனை யெய்திநாமமொடு பேசினாணிதிகொ ணர்ந்ததைக்
கூறியேயநிதி கொண்டுவாணிப நடாத்தியூதியமி கக்கொளீஇ
மாறிலில்லற நடத்துகென்றவர்கை நிதியெலாமுற வழங்கினாள். (ச)

அந்தநன்னிதிய டைந்தநாமர்சில வந்தணாளருட னாய்வுறு
எந்தவாணிபமி யற்றினும்வருவ தேதமல்லதிலை யேயெனச்
சிந்தைசெய்துசமா ராதனைத்தொழில தேயிகப்பர பலந்தரும்
வந்தநன்கிதனின் மேலதின்றென மகிழ்ந்துகாசிநகர் மன்னினார். (ரு)

கங்கைமாநதி பரந்துலாவிவரு கரையிலங்கொரு மடத்தினில்
தங்கிநீடுமன தானமித்திரனொளி சாயுமாலைவரையாற்றிமேல்
கங்குறூறுமரி நாமகீர்த்தனை கனிந்துசெய்துவரு காலையில்
எங்குமிச்செயறெ ரிந்துபூசுரர்கள் மனைவிமக்களுட னெய்தினார். (சு)

எண்டிசைப்புறனு நாமதேவர்புக ழெய்தியெங்குநிறை வுற்றதால்
பண்டரிப்புரியி லுள்ளவேதியர்கள் பலருமாவலுட னேகுழூஉக்
கொண்டுநல்லுணவு முண்டுதக்கணைகைக் கொண்டுமீடுமென வேகலைக்
கண்டுதாதாசாவ்க் காரன்கேட்கவவர் கழறவோர்ந்துகவை யுற்றனன். (எ)

தீனரானநாம தேவருக்கிவிதச் செய்கைசெய்யவேது வாயென
தானகாணமது வாய்த்துதென்றதிக வாத்திரத்துடன்வி ரைந்துபோய்
மானகாசியைய டைந்துதொக்கபல வறுமையோர்மகிழ வீதலும்
போனகந்தரலு நோக்கியேக்கமொடு புந்திநொந்துடல் புழுங்கியே. (அ)

உண்மையாகவிவர் வர்த்தகத்தொழிலு னாற்றுவாரென நினைத்தியான்
தண்மையாவுதவு கடனதானதன முழுதும்வாரியிவன் சார்வுறு
வண்மையாளர்களு நாணமேவுறவ ழங்குகின்றனரெ னோமனத்
தின்மையோபொருள்கை யெய்துறுவினியென்செய்வதென்றுளம் வருந்தியே

கடனுக்கீடுபெறு மானதாகவொரு காணிபூமியிலை வீடிலை
உடைமையில்லைதரு தற்கியைந் தவுறன் முறைய ரில்லையிதனோடுமென்
குடியழிந்ததென வெண்ணமுற்றயர்தல் கண்டுநாமர்துயர் கொண்டுவெந்
தடியின்மீதுமுடி சூடிநின்றுமிக வாவலோடுதுதி செய்தனர். (௰)

வேறு

துதிசெய் காலையவண்வந்து சூழ்ந்த மறையோர் களைநோக்கி
மதியீர் சமாராதனைக்குரிய வள்ளலிவர்தம் மலர்க்கரத்தால்
விதியாய்க் கிருஷ்ணாற் பணமென்று விடுநீ ரேற்றுப் புசிப்பீர்நற்
றதியில்வந்தா ரிவர்தகமை சாற்றுந் தரமதலவன்றே. (௰௧)

என்னப்புகழ்ந்து சங்கற்ப மிசைத்து நீர்வார்த் தருளுமென்று
சொன்னமொழிவர்த் தகன்றனது சுருதிபுகலுந் துணுக்கெறிந்து
முன்னமுனிந்து நின்றிந்த மோசஞ்செயவர்த் தகத்துக்கென்
றென்னைமயக்கிக் கடன்வாங்கி யிங்கப்பொருளைக் கொடுபோந்து. (௰௨)

பல்லாயிரவர் தமக்கன்னம் படைக்கநேர்ந்த படுபாவி
எல்லாப்பொருளுங் கவர்ந்தென்னை யேழையாக்கு வித்ததன்றிப்
பல்லோரறியத் தத்தஜலம் வார்க்கும் படியும் பகர்ந்தனையே
கல்லோமரமோ வுன்னெஞ்சங் கள்வனுனைப்போற் கண்டிலனே. (௰௩)

மீட்டு நின்னைக் கடன்கேளா மார்க்கஞ் செய்யவேண்டி யென்னைக்
கேட்டசூது முழுதுணர்ந்தென் கேழொன்றில்லாக் குடிகேடா
நீட்டமாக வளர்தருவி னீங்கி நெடுநாளா யுலர்ந்த
காட்டம் பூத்தல் காணினுமென் கரநீர்வார்த்தல் காணாயே (௰௪)

என்று வணிக னியம்பியபோ துதகம் வார்த்தற் கிங்கிவரை
யன்றி யானோ வதிகார முடையே னல்லே னாதலினால்
இன்றிங் கிவர்பா லேற்றுண்ணு மென்னாற் றடையொன் றிலையென்று
நன்றி நாமருரைசெய்ய வுணர்ந்தார் தொக்க நான்மறையோர். (௰௫)

தரும வணிகப் பெருமானே தாங்க முடியாப் பசியனலை
ஒருமை மனமா யாற்றுதலுக் குமது கருணை புரியு மென்பார்
பெருமை பெருக வுண்பவரைத் தடுத்தல் பெரிய பிழைய தென்பார்
கரும மனைத்து நீங்குறுமெங் கரத்தி னீர்வார்த் தருளுமென்பார். (௰௬)

பல்கா வதங்கள் கடந்துபெரும் பசியோடடைந்தே மன்னமின்னே
நல்காயென்னில் ரவுரவமா நரகிற் சேரச் சபிப்ப மென்பார்
ஒல்கா வீயாவுலோபநின்னை யுன்றாய் சுமந்தென் பயந்த தென்பார்
அல்கா நிந்தை பலபலவா யறையக் கேட்டங் காகுலித்து. (௰௭)

அந்தோ பொருளுக்கழிவு வருமெனவோர் தேவராலயம்பு
குந்ததில்லை யரைக்காசுங் கொடுத்ததில்லை பிட்சை பெற்ற
தந்தைதாயர் சிரார்த்தமுநான் றந்ததில்லை யிதுவரையும்
இந்த நாமதேவரால் மறையோர் பழிக்கற் கிடமானேன். (௰௮)

தாழை யடிநீர் வார்க்கி னன்னீர் தலையிற்றாங்கித் தருமதுபோல்
ஏழை யானோர் வர்த்தகஞ்செய் தெய்து மிலாபு மதனாலென்
பேழைக் குறைவு தீருமெனும் போரா சையினாற் கடனாக
மாழை கொடுத்தேன் கான்லிற்பெய் மழைபோலானே னெனவிரங்கி. (௰௯)

மறையோர் குழுவோ வகல்வதிலை வாய்நிந்தனையோ வொழிவதிலை
உறையோ தனம்போ யுண்பதில்லை யுதகம் விடேனேல் விடுவதில்லை
சிறைபோ லென்னைச் சூழ்ந்த விவர்புசித்தா லென்னைச் சேர்வதென்ன
குறையென் றொருசூழ் தனக்குள்ளே கொண்டுவணிகன் கூறலுற்றான். (உ௰)

வேறு

வாருமந்தண ரேயென்மேற்பழி கூறுகின்றன மாறவே
நீரம் வார்க்குவ னேனு மென்னலு நேர்ந்தனர் கடல் சூழ்தரு
பாரு மம்பரமுந்தருங் கரி பலனு நட்டமு நாமரைச்
சேருமெற்கிலை யென்று வார்த்தனனேற்ற வையர் சிரித்தனர். (உ௧)

நாமர் நன்குப சாரமுஞ்செய நான் மறைக்குழுவுண்ட பின்
காமர் சந்தன புட்பமும்மடைக் காயுந்தக்கணை யுங்கொடுத்
தாமிகன் பின்வணங்கவாசி வழங்கியாரும கன்றபின்
தீமிகுந்தெரி கின்றநெஞ்சொடு வணிகனங்கிது செய்தனன். (உ௨)

கடனினேதர வேண்டும் வேறொரு காரியம்புரி தற்குனை
விடனலாதிலை யென்பை யேலுயிர் விடுவனிட்சயமாகவென்
றடமாதாயுரை செய்த போழ்தினிலன்பா காளியன் முடி மிசை
நடனமாடிய கருணை கூர்தரு நளினை நாதனை யுன்னுவார். (உ௩)

ஆதிமூலபராபரா சருவாதரா ஜகரட்சகா
சோதிரூப வரூப நிட்கள் சுதசத்துவதற்பரா
வேதகீத விஞ்ஞேயமாதவவி மலவச்சுத கேசவா
சீதசாகர மீது கண்வளர் தேவதேவகி நந்தனா. (உ௪)

கண்ணகண் மணியாக நின்றொளிர் காரணாகரு மாமுகில்
வண்ணவம்புஜ நாபகுஞ்சர வரதபுட்பதிவாகனா
தண்ணருந் துளவார நவநிதசார சோரசிகாமணி
எண்ணுதற்கரு நாமரூப மிலாதெலா நிறை யெந்தையே. (உ௫)

கல்வினுங்கடு நெஞ்சமும் வடகனலையுஞ்சுடு கோபமும்
கோல்லும் வாணிகர் வார்த்தையும் பகைகொண்டு செய் பிடிவாதமும்
சொல்ல வாய்வரவில்லை செட்டி செய்துயர மாற்றுவை தொறுவர்க்காய்க்
கல்லெடுத்து முன்மழை தடுத்தருள் கண்ணனே கடல் வண்ணனே. (உ௬)

என்ன நாமர்துதித்த போழ்தவரிதய மீமிசையிலகுறும்
அன்ன வூர்தியினத்தனற் புதவர்ச்ச நல்லுரு வாயெதிர்
துன்னியன்பவ வணிகனிங்குறு தோய மூழ்கிடினி ரணமக்
கன்னனீங்குறும் வகைசெய்வே னெனக்கருணை யோடொ கழறினன். உ௭

# ஸ்ரீபக்தலீலாமிர்தம்.

ஞான நோக்கொடு நோக்கியவ்வுரை நன்குணர்ந்தருணமதே
வானவுத்தமர் மானதப்பணி யாற்ற வண்ணல் மறைந்தனன்
மானவத்தன வணிகரேதிருவர நதிப்புனன் மூழ்கியிங்
கேகலத்தொடு வருதிர் நுங்கடன் யாவுமிக்கண மீகுவேன். (உ௮)

என்று நாமருரைத்த சொற்செவி யெய்த நீரிடை யென்றனைக்
கொன்று தீர்த்திட வெண்ணியோ கொலைபாதகா கபடாமொழிந்
தன்று நீகடன் வாங்கினையறி வுற்றனன் முழுகேனென
நின்றுவாது செய்வர்த்தகன்றனை நெடிது வாழ்த்தி வழுத்துவார். (உ௯)

ஐயநின்னிகர் புகழ்படைத்தவரகில மீதெவருளரொருல்
செய்யுமிவ்வன தான நின்னது செய்த வப்பலவூதியம்
எய்தும் வர்த்தக மிதனின் மிக்கனவிலையுகாந்தமு மோய்விலாப்
பெய்யு மாரியிற்செலவு செய்யினும் பெருகுமல்லது குறைபடா. (௩௰)

வேறு

கோதறு குணத்தவா குலித்தனீக்கவென்
றூதரத்தோடி வரரையக் கேட்டனன்
ஏதுதந்திர மொழியியம்பினும் விடேன்
வாதிடாதென் கடன்வழங்கு மென்றனன். (௩௧)

அன்ன தேற்பகீரதியதனின் மூழ்கி நீர்
துன்னு நும்மிாண முந்தொலையச் செய்குவன்
என்னலு நாமரோ யென்னைக்கங்கை நீர்
தன்னிடை யழுத்தியே சதியியற்றவோ. (௩௨)

எண்ணி நீர்கடன் கொடாதிருக்கு மெத்தனம்
பண்ணினீர் மூழ்கலேன் பணத்தை யீம்மெனா
தண்ணகத் தோடினேஸ் நானஞ்செய்து நீர்
நண்ணுவீரென நனி நாமர் கூறினார். (௩௩)

மறையவர் மரபினில் வந்த வர்த்தகன்
நிறைபுனலரைவரை நின்று மூழ்கலும்
நறைகமழ் துளவணி நாதன் மாயையால்
அறைதரு பாதல மதிலடைந்தனன் (௩௪)

நவமணி மண்டப மதனினுப்புனோர்
உவமை யிலரியணையும்பர் பல்வகைப்
பவவிருள கற்றுறு பரிதி போலவெம்
உவணகேதனன்றுருக்கரசி லுற்றனன். (௩௫)

மாதவர் வானவர் நாரதாதிய
சாது சற்சனரெலா மிலேச்சர் தன்மையாய்
மோதமா யெம்பிரான் முன்ன ரொண்ணிலா
ஆதரத்துடனிரா யாயிருந்தனர். (௩௬)

வருக்கைமாதேங்குமாதளை செவ்வாழையைந்
தருக்கள் கற்பகவல்லி சாதஞ்சண்பகம்
மருக்கமழ் மல்லிகை முல்லை கத்திகை
திருக்குடி யிருந்தெனச் சிறந்திலங்குமால். (௩௭)

கிள்ளை கேகயஞ் சாதகங்கபோத நாகணவாய்ப்
பிள்ளை கோகிலங்க பிஞ்சலம் பிங்கலை யன்றில்
வெள்ளை யன்னமூர்க்குருவிச கோர மீன்குத்தி
கொள்ளை கொண்டவண் பாடலு மாடலுங்குறையா. (௩௮)

காலமொன்றினுங் காண்கிலாவற்புதக்காட்சி
சாலவெங்கணும் விளங்கலுந் தமனியவுலகம்
போலிலங்கலுங் கண்டனன் மெய்புளகிக்கக்
கோலமண்டபத்தி யாவரு நோக்கினர் கூவி. (௩௯)

ஈங்குவந்தவா றெவனென வினவலும் வணிகன்
சாங்கமாய் வரலாறவை முழுவதுஞ் சாற்ற
ஓங்குமெங்கள் வேந்துண்பதற்கழை யெனவுரைத்தார்
பாங்கிருந்தெ மோடருந்திடற் கெய்தெனப் பகர்ந்து. (௪௰)

கொழுத்தவூன் சமங்கூட்டிய முலைமுகை யூரல்
முழுத்த நெய்யினில மைந்தனசெய்கை நன்முறைய
பழுத்தமுக்கனி பாலுளவாவெனப் பரிந்து
வழுத்தவாணிகன் பதறினன் றிகைத்தனன் மயங்கி. (௪௧)

தனமும்போயின சாதியும்பிரஷ்ட மாவதற்காம்
இனமுமாயின துருக்கரோடுண்ண வீர்க்கின்றார்
அனமுண்கேனெனில் யாவினை செய்வர்கொலென்று
மனங்கலங்கி மேனாமதேவனை நெஞ்சின்மதித்து. (௪௨)

இங்கு காப்பதற்கொருவரு மெனக்குறவில்லை
அங்குமக்கு நான் கடன் கொடுத்தாதிய மடையத்
தங்கினே னிவண்டுருக்கரோ சாதமும் படைத்துப்
பங்கதாயுண வீர்க்கின்றார் பாவியேன்றன்னை. (௪௩)

உம்மை யல்லது காக்கு நரில்லென வோதச்
செம்மை சேர்குண நாமதேவருமிது தெரிந்தங்
கம்மை போல வந்தெய்தியாகு லித்திடலருளோ
டிம்மையே பிறவாத வீடுதவுமிவ்விறைவன். (௪௪)

பாண்டுரங்கனம் பதிதபாவனனுண்மையாக
வேண்டுரங்களினிடை விடாதிருப்பவன் மற்றோர்
யாண்டு நீங்குறாச்சாது சற்சனரிவர் தம்மோ
டீண்டிருந்து நீருண் பதிற்பேறு வேறின்றே. (௪௫)

# ஸ்ரீபக்தலீலாமிர்தம்.

பிரமராதி தேவர்க்கரிதாம் பிரசாதம்
இரமதாஞ்ச மாராதனைச் செய்கையாலுமக்குக்
கரமதா நெலிக்கனி யெனக்கிடைத்ததை விலக்கில்
வரமதேயி தன்மேலிலையுண்கென வருத்தார். (௪௬)

வேறு

பெயர்வானவர் பேசிய தியாவுமுணர்ந்
தயர்வேதிய வாணிகனங் கறைவான்
மயல் கூர்தரு மோகன மந்திரமே
பயில்வீரதனுல் வசியம் பணினீர் (௪௭)

கடனென்று பெருங்கன கங்கொடுவெண்
மடலொன்று வரைந்தெனை வைக்கெனவீந்
திடனென்றனதான மதீந்து பொருள்
கெடநேர்ந்தனை கீழ்நிலம் வீழ்த்தினையே. (௪௮)

வீழ்த்திப்புறமான மிலேச்சரொடு
சூழ்த்துய்த்திடு மாமொழி கூறினையே
வாழ்த்தற்குறு மென்மரபும் முழுதும்
தாழ்த்தக்கரு துற்றனீர் தக்கனவோ. (௪௯)

சொல்லைத்தடை செய்கலிர் சூழ்தருமிவ்
எல்லைக்கணிலாம லெனைக்கொடுபோய்
தொல்லைப்புவி சேர்ப்பிர்துடர்ந் தினியான்
இல்லைக்கடன் கேட்பதிதுண்மையதே. (௫௦)

எனைவீடடையும் படிசெய்குவிரேல்
புனையும்புகழ் புண்ணியமும்மையென
இனையுமனனேடு மிரங்கிமிக
நினைகின்ற வனீரறி நேர்மையராய். (௫௧)

குறையொன்றடையாதுமை மெய்ம்மைகுல்
மறையோருடனுண்ண மயங்கல்நம
திறையோனருள் செய்வனினித்தகையாய்
பொறைகூறொன நாமர்புகன்றனரோ. (௫௨)

அடமாய்மொழி யீரரியாடகியென்
னிடமீந்திடி லுண்டிசெய் தெய்துவலென்
றுடனேதவுவந்துதவிப் பதமாக்
கிடநாலெருமுட்டையு மீந்தனரோ. (௫௩)

அறநன்குடை யீர்யவனர்த்தலனிற்
புறனுக்குமெனப் புகல்வர்த்தகனே
உறநம்விழி மூடுறு மென்றளவில்
திறமாகவு மூடுதல்செய்தனனே (௫௪)

வேறு.

# நாமதேவர் சரித்திரம்.

மூடியபோழ்து பண்டரிபுரத்து முந்துறுசந்திரபாகை
நீடியநதியினனைந்தவத்திரத்தினீ ரொழுகுற வெழுந்தனனாங்
காடியமறையோர் தொகுதியும் பஜனை யாதரத்தொடு புரிபவருங்
கூடிவிட்டலனைத் துதித்தலும் வணிகன் குறிக்கொடு கண்டனன்கூறும். (௫௫)

வாரணவாசிக்கங்கையங் கரைக்கண்வதிந்தயான் சந்திரபாகை
சேர்தரற்கிஃது சொற்பனமென்னச் சிந்தனை செய்வனேனுணற்குக்
கூர்தரநாமர்கொடுத்தபல் சாமக்கிரயங்களிருக்கின்ற குறிக்கில்
பேரதிசயமீதென்றவர்தகையைப் பேணியக்கரைவருகாலை, (௫௬)

வத்திரமதனில் முடியெரு முட்டைகளை மட்டுமவிழ்த்து வீழ்தருமா
றத்திருநதியிலுதறியே நனைந்தவாடையோடில் விடையடையப்
பத்தினிகண்டு நாமருக்கீந்தபணமெலாம் வாங்கி வந்தனிரோ
இத்தனை நாணீடித்தகாரணம தென்னென வர்த்தகனியம்பும். (௫௭)

என்னுயிர் பிழைத்து வந்ததே பெரிதென்றிசைத்து மேவீர வஸ்திரங்கள்
தன்னையேபிழியும் போழ்தெரு முட்டையொன்ற திற்றங்குற னோக்க
மின்னிடுதங்கமாய் விளங்குவதைக்கண்டு மெய்புளகித மடைந்து
நன்னலநிறைந்த நாமரிவ்வுலக நரரலர மரரோயாமால். (௫௮)

விட்டலனாமர் பொருட்டெனக் களித்தமிகு தனங்களை யெலாநதியில்
இட்டனனெனது விதியிலுள்ளன போலியைந்தனவென வுளம்வருந்தி
நிட்டுரமாக நாமரை நாயேனிந்தை செய்தவையெலாம் பொறுத்துன்
மட்டவிழ்கமலபதங்களை நாளும்வழுத்துற வருள்செய்வாயென்று. (௫௯)

அல்லுநன்பகலு மச்சுதவிடல அடியவர் சகாயவென்கின்ற
சொல்லுமேழை யருக்கீதலு முரியதொழில தாயுவந்து வாழ்ந்தனனால்
நல்லுணர் வுடையோரனை வரும்புகழு நாமராண்டை யனைவணங்கிப்
பல்வகையுயிர் கட்குயிரதாய் விளங்கும் பதிதபாவன பரந்தாமா. (௬௰)

காண்பொருள் காண்பான் காட்சியுங் கடந்துகருதுவோர்கருத்தினுக் கெட்டாச்
சேண்படு பரமசின்மயானந்த தேஜோமயத் திருவாழ்வே
வீண்படுவினை யேற்காக நீதாழ்ந்த மிலேச்சவேடங்கொடு போந்தாய்
தூண்படு மரியேபிரகலாதனர் முன்றூயர் போற்பே யணுகுவனே. (௬௧)

என்றடியிறைஞ்சு நாமரையண்ண லிருகையாலெடுத்து மார்புடனே
ஒன்றுறத்தழுவி யுச்சிமோந்தன் பினுவப்புறு மொழிபலபுகன்று
நன்றிசேர்பண்டரா புரமதனினா மரோடடைந்தனர் வானோர்
அன்றுபூமாரி அன்பர்தம் மீதுமையன்மீதும் பொழிந்தனரால். (௬௨)

நாமதேவமல சரித்திரமதனை நாவினான வின்றவர்கேட்போர்
நேமமாய்ப் புத்தகத்தினைவைத்து நித்தியம் பூசனைபுரிந்தோர்
பூமியிற்றர்ம்மார்த் தத்தொடுகாமம் பொருந்திநற் புகழினையடைந்து
காமனைப்பயந்தோன் கழலிணையடைந்தெக் காலமுநித்திய வாழியரோ. (௬௩)

முற்றிற்று.

# கபீர்தாசர் சரித்திரம்.

——:0:——

பேசுறு கங்கையி லேமுசில் பெய்ய
ரசனை மைக்கவி ழிந்ரகி ளிஞ்சில்
வீசுதி ரைப்புனன் மேவிமி தக்க
மாசில யோனிவ திந்தவ ராகி. (௧)

நல்லத வச்சுக ராமநன் ஞைமஞ்
சொல்வது விட்டிலர் சோர்விறி யானம்
புல்லினர் மேவுறு போதுநெய் நூல்கொண்
டொல்லெனெ லிப்புன லூடிழி வுற்று (௨)

தோமறு மாறுது வைத்தத மால
மோமிகி ளிஞ்சிலை முன்வர நோக்கி
ஆமதி ழிந்தத னைக்கொடு வந்து
வாமநெ டுங்கரை வைத்துவ கிாந்தே. (௩)

ஏரலி டைத்திகழ் வெய்துறு சேயை
ஆர்வமி கத்தன தங்கையி லோதிச்
சாரமு யற்சியி லாதுத னம்பெற்
றேரின்ம கிழ்ந்தக முற்றனை னன்றே. (௪)

உற்றது ருக்கனு யிர்த்துளை விக்குக்
கற்றிலை கொள்பவர் கட்பக ரோர்கன்
டற்றும கன்பெற லாயின தென்று
சொற்றிட மற்றவள் கொங்கைசு ரந்தே. (௫)

நேசமு டன்கொடு பானிறை யத்நந்
தீசனை யெண்ணியெ டுிற்கொள்க பீர
தாசரெ னும்பெயர் தந்துவ ளர்த்தார்
மாசறு தன்பதி மாமசிழ் வெய்த. (௬)

வாமம கன்வளர் வாகியி ராம
நாமம்வி டாதுந வின்றுறல் கண்டு
தோமறு காசியு ளோர்கடு ருக்கத்
தீமத னுக்கின சேய்வர வற்றே. (௭)

என்றுது ருக்கனி யன்றத வத்தை
நன்றும தித்தனர் நாளும்வ ளர்ந்து
நின்றுசி றந்தநெ டும்புதல் வர்க்கு
மன்றல்பு ரிந்தும கிழ்ந்தன ரீன்றோர். (௮)

பின்புமண ங்கொள்க பீரர்ப வஞ்சத்
தின்பில ராகியி ராமநன் ஞைமத்
தன்பின ரானத றிந்தவ விந்தர்
துன்பொடி கழ்ந்தனர் சொல்லுத லானார். (௯)

வாழைவ னந்தனில் 'வந்தொரி' லந்தை
தாழ்வற நின்றுத ழைப்பது போலக்
கேழ்கிளர் நங்குல னிற்கிளர் கின்றான்
வீழ்புனன் மீதுமி தந்தவ னென்றே. (௰)

ஹரிபஜ னந்தனி லன்புமி குந்து
புரிதரு கின்றக பீரர்பு ணர்ப்பைத்
தெரிதரு தாய்மக னேதொழில் செய்யா
துரியநி லைப்பிலை யாகியு றைந்தால். (௰௧)

இல்லற வாழ்வினி யெங்ஙன டக்குந்
சொல்லுதி யென்றுதொ குந்தறி தொட்டு
வல்லையி னெய்யென மற்றது கேளார்
நல்லநி யானந லத்திலி ருந்தார். (௰௨)

மன்னிய தன்னைம றந்தன ருற்ற
அந்நிலை கண்டவ ளன்னவர் தம்மைத்
துன்னியு ரப்பியெ னேதுரு மம்போ
உன்னினை வற்றனை யுற்றனை யென்றாள். (௰௩)

என்றவள் கோபமி குத்தினி யெற்றற்
கொன்றுவ ளென்றக மஞ்சியு ணர்ந்து
நன்றென வோர்முழ நண்ணிட செய்து
முன்றனி நின்றமு யற்சியின் மூழ்க. (௰௪)

கண்டவர் கொண்டக ருத்திடை நின்ற
விண்டுநெய் யாதிவன் மேவுறி லன்னை
மண்டுவெள் கோபமெ னத்தறி மன்னி
உண்டுநெய் கின்றதெ னக்கனி வூறி. (௰௫)

தாய்மகிழ் கொண்டிட நெய்வது தன்னில்
மேயின னன்பர்வி ழித்துநெய் கிற்கில்
ஓய்வுறு வானெறி கிற்கிலு ளூற்றும்
ஆயநெய் தற்றொழி லானபி னன்பர் (௰௬)

தாய்வயி னெய்தது தன்னைம டித்துப்
போயுத வுற்றிடு போதும கிழ்ந்து
நீயித னைக்கொடு நீடுக டைக்கண்
மேயினை விற்றிவண் மேவுதி யென்றாள் (௰௭)

நன்றென வாவண வீதிந டந்து
சென்றொரு பால்விலை செய்திட வுற்றோர்
நின்றநி யானநி லைப்பினு டம்பை
அன்றும றந்தன ராகிய மர்ந்தார். (௰௮)

கலைகொள வந்தவர் கண்டிது மிக்க
விலைபெறு மென்றுவி லங்கின ராக
அலரிப டும்பொழு தாகிய பின்றை
பலரும கன்றனர் பக்தரு ணர்ந்தார். (௰௯)

ஆங்கய லெங்கும னாவினர் நோக்கி
வாங்குந ரிங்கொரு வருமிலை யென்று
ஈங்கிது விற்றிலை யென்றனை கோபத்
தோங்குவ னென்றனு ருற்றனர் மாதோ. (௨௰)

சற்றவ ணின்றுச லித்தொரு பாழ்வீ
டுற்றது கண்டதி லெய்தியு றைந்தார்
மற்றவ ருள்ளம றிந்திட மாயன்
முற்றிய வேதிய னுயவண் முந்த. (௨௧)

உடலந டுக்குட் றுற்றவ ரைத்தொட்
டடலரி தாசனி னன்பினெ னக்குப்
படர்குளிர் தீர்கலை தாபரி வோடென்
றிடவிலை செய்வதை யிருதுணி செய்து. (௨௨)

ஒருதுணி யியவு டன்கொடு சென்றேன்
மருவிய பக்கிரி மாவடி வுற்றுத்
திருகவும் வந்தரி சிந்தனை செய்வோர்
அருகினி னின்றித றைந்தன னன்றே. (௨௩)

நிற்குண னுனகு தாகினை யின்றிச்
சொற்கணி ராமவெ னச்சொலு கிற்போய்
நிற்குரை செய்வதெ னியருளொ ற்கோர்
நற்கலை யென்னந லன்பர்ந வின்றார். (௨௪)

நீருரை செய்யுநி ராமய னேகாண்
சீரரி யென்றுதெ ருண்டுரை செய்து
சாரொரு துண்டது தன்னையு மீந்தார்
பார்மக னுயக னன்புப யின்றார். (௨௫)

பக்கிரி யானப ரம்பரன் மற்றோர்
எக்கிய வேதிய னாகியவ் வன்ப
ருக்கனை தன்வயி றுற்றுன்ம கன்றான்
விற்கல னுடைவெ றுஞ்சத னத்தே. (௨௬)

மேவியி ராமனெ னும்பெயர் வீடா
நாவின வின்றுறை கின்றன னங்காய்
நீவிலை செய்கெனு மாடையை நேர்ந்த
மாவிர தப்படி மர்க்கருள் செய்தான். (௨௭)

என்பது கேட்டவ னெய்திய போது
வன்புறு தண்டம்வ குப்பனெ னத்தாய்
நின்புடை யெய்துவ னேவவ னேரான்
துன்புசெய் தேள்வெளி துன்னுவ தன்றே. (௨௮

னென்பினர் நீயடை வாயெல்
நீதரு மைந்தனை நேர்வகை செய்வேன்
வாதனி யென்றுரை மாமறை யோன்பின்
னேதனி வந்தவ னெய்துமி டத்தே. (௨௯)

நிமிர்குல வேதிய னின்வெளி நிற்கத்
தமியுள டைந்துறு தனையனை நோக்கிக்
கமிவில செய்கலை யெங்கது காட்டுத்
*திமிரிடை யெனிவ னெய்துதல் செய்தாய். (௩௰)

எனவினை சொல்லவி ருந்தவர் கேட்டு
மனமிக வஞ்சினர் மாறுரை கூறு
அனகரை நோக்கிய வன்னையெ னேடா
வினவுவ தற்குவி ளம்பலை யென்றாள். (௩௧)

அப்பொழு தில்வெளி நின்றவ னம்மே.
இப்படி யன்பினி யம்பிலி யப்பான்
ஒப்புரை தண்டமு ளுற்றிடு முண்மை
செப்புவ னென்றுரை செய்தது கேட்டாள். (௩௨)

கோலது தேடுமு னேயொரு கோல்கொண்
டேலவ டித்திடு கென்றுகை யீந்தாள்
சாலமு னிந்தவர் தம்மைய டித்தாள்
மூலம றைப்பொருள் முதுகடி பட்டு. (௩௩)

வேதனை சாலவி ளைந்தத னாலே
நீதனை யன்றனை நீடுசி னத்து
மோதுத லென்முது கிற்படு கின்ற
ஆதலின் விடுவிடு கெனவும றைந்தான், (௩௪)

விண்டுரை செய்வது கேட்டும்வி டாதே
மண்டிய றைந்திட வந்துமு னின்றான்
அண்டிய ஜானகி யோடுவி லங்கைக்
கொண்டுவி டாளடி யென்றுகு றித்தே (௩௫)

ஜானகி ராமனெ ழுந்து தன்னை
ஞானக பீரர்தெ ரிந்துந யந்து
தேனகு பூநிகர் சேவடி வீழ
யான்மகி ழன்பவி டேனுனை யென்றான். (௩௬)

தாயும கிழ்ந்துச ரோருக நாபன்
சேயபொ லன்கழல் சேர்ந்துவ ணங்க
மாயவ னிந்தம கற்பெற லாலே
நீயுறு பாக்கிய நிகரிலை யென்றே. (௩௭)

மறைவுற மகனைய ணைத்தனள் மார்பில்
நிறைவுறு செல்வதி ருலொளிர் நேமிக்
கிறைவனை நோக்குவ தாயிலு ளென்னுக்
குறைவறு செல்வனைக் கூய்க்கொடு போனாள். (௩௮)

(வேறு) போனபின்பு முன்போலப்புதல்வனைக்காயாதரிதன்பஜனைபோற்றித்
தானுமினி திருக்கவன்பர் மனைவியவயிற் கருப்பமுற்றுத் தனையன் றன்னை
யீனமகிழ் வோடுகமால் தாசரெனும் பெயரியம்பி யிவர்ந்து போற்ற
ஞானநல னிசிறந்து மகன்வளர்ந்தே யாண்டுசெல நவிலு கின்றார் (௩௯)

*திமிரம்—திமிர்-என அம் விகுதி குன்றியது.

தந்தைதனை நோக்கியைய தனித்துவா ரகைகாணத் தமியேற் காசை
முந்துறுத லாலெனக்கு விடைகொடுக்க வெனவினவு மொழியைக்கேட்டு
மைந்தவுனக் கிவ்வயதிற் கோபாலன் றிருப்பதியில் வாஞ்சை வாய்ந்த
தெந்தநல்ல தவப்பயனோ வெனமகிழ்ந்து கபீரர்விடை யீந்தாரன்றே. (௬௦)

விடைபெற்ற திருமைந்தர் தாதையிரு தாள்வணங்கி மேவும் போதில்
நடைபெற்ற வழிகளெல்லாம் ராமநா மம்பெரிது நவின்று செல்ல
இடைபெற்ற வூர்கடோறு மிருப்பவர்கள் கீர்த்தனங்கேட் டின்பு கூரத்
தொடைபெற்ற துளவணியுந் திருமால்வாழ் துவாரகைப்போய்த் துன்னினரே.

கோமதியா நதிகண்டு வணங்கியதின் மூழ்கியன்பிற் கோபி சார்த்தி
ராமவெனு நாமமதை நாநவிலச் சபமாலை நளிர்கை க்கொண்டு
தாமரைநா பனையுள்ளந் தனினிறுவிக் கோயிலிடைச் சார்ந்து கண்டு
நேமமெடுநற் துதிபயின்று நான்குதிங்க ளவ்வூரி னிலவினாரே. (௬௨)

பின்புகண்ணன் கோயிலிற்போ யடிவணங்கி நின்னுருவம் பிரியா தென்று
மன்புசெய வமைத்தியென வேண்டினாசிந் திரகூட மடைய வாங்கே
இன்புறுவிட் டுனுதாச ரெதிரேவந் திவரையினி தேந்தித் தாழ்ந்து
தன்பவனங் கொடுபோந்து பாரபூ சனைபுரிந்து தகவு பேசி. (௬௩)

போசனஞ்செய் வித்தன்றி ராத்திரியி லரிபசனை புரியக் கேட்டு
நேசமுட னெல்லோரு மிக்குழந்தை செயல்புதுமை நெடிதென் றோத
மாசறுவிட் டுனுதாசர் மகிழ்ந்திவர்க்கெவ் வளவுபொருள் வழங்கி னாலுந்
தேசுறுமோவென்றோர் மாணிக்கங் கொடுவந்து திருமுன் வைத்து- (௬௪)

இந்தமணி யிரவுதனி லிருளகற்றுங் கொடுபோமி னென்று கூற
வந்தகமால் தாசரதை வேண்டாரென் பிதாவென்று மறுத்துஞ் சொல்வார்
தந்தமணி யுங்கல்லுஞ் சரிதானெங் களுக்குமறை யவர்தங் கட்கு
முந்துதனம் வேந்தனுக்கு மணிமிடியி னோக்கன்ன மொழியுந் தாசு (௬௫)

வித்தையா ளருக்குணவி யாத்திரைசெய் வோர்க்களிக்க வேண்டுங் கண்டீர்
சுத்தனவ னவரேதும் வேண்டாரென் றருள்கூரந்து சொல்லக் கேட்டு
மெத்தமகிழ் வுடனெழுந்து விட்டுனுதா சர்வணங்கி விருப்பு றுதார்
வத்திரத்தி லவர்தெரியா வகைமணியை முடிந்துவைத்தார் மகிமை நோக்கி. ()

பின்னரங்கு நின்றுகமால் விடைபெற்றுந் தம்மூர்க்குப் பெயர்ந்து தாதை
தன்னடியை வணங்கிநிற்கக் கபீரதா சவர்கலையிற் றங்கு கின்ற
நன்னர்முடி தனைநோக்கி யவிழ்த்துமணி யைக்கண்டு நல்கி னோர்யா
ரென்னவெனக் குத்தெரியா தேமுடிந்தார் விட்டுனுதா சென்று சொன்னார். ()

சொன்னதுகேட் டுக்கபீர் தாசரனு தாபமிகத் துன்பு கூர்ந்தங்
கின்னலுட னழுவதுகேட் டகத்துமனை யாள்வெளிவந் திதுவென் னென்று
மன்னுமவர் பதம்பிடிந்து வினவவவர் நங்குலத்துக் கீனம்வாய்ந்த
தென்னவெனிற் கமாலரிநா மத்தைவிற்று மணிகொணர்ந்தா னென்று கூற.

அதுகேட்ட கமாலதா சுடனேயவ் விடநீங்கி யகன்று தந்தோர்
பதிசேர்ந்தங் கவர்கையின் மணிகொடுத்துத் திரும்பவுந்தன் பதிக்கு வந்து
*பிதுமாதாக் களைவணங்கித் தாமுன்போய்ச் சரித்தவிடம் பிறந்த வெல்லாம்
இதமாக வுரைத்தருளக் கேட்டபிதாப் பெருமகிழ்ச்சி யெய்தினரே. (௬௯)

---

*பிது—பிதா.

திருமைந்தன் றனைத்தழுவக் கமாலருந்தன் பிதாவடியைச் சேவித் தேத்தி
அரிபசனஞ் செய்துவந்தா ராயிருக்கத் தீர்த்தவா சிகளாய் மூவர்
ஒருநாளத் தமித்தபின்பு மனைக்குவரக் கபீரர்கமா லுவந்து கண்டு
வருவோரை வணங்கியா தனத்திருத்த வந்தவரு மகிழ்ந் திருந்தார். (௫௰)

சனகாதி களைப்பார்த்து ஸ்ரீரமணன் சந்தோஷித் ததுபோ லன்பு
கனமாகக் கபீர்தமது மனைவிதனை விரைந்து கூஉய்க்கண்டாய் மூவர்
மனைசார்ந்துண் ணாதிருத்தல் கூடாதா லமுதருந்தி மகிழச் செய்தி
எனமாத ரிவ்வேளை யனமிலதே யயல்வீட்டு மிலையென் பாளே. (௫௧)

விலைகொடுத்த வாங்கவுமோர் காசுமின்றே யெனமகனை விரைந்து கூவி
அலைவுறுந்திக் களவுசெய வொருகடையின் சுவர்துளைத்தங் கதனுட் போக்க
நிலைபெறுத்து கமால்வேண்டு வனகொண்டு மற்றெவையு மேடாராகிப்
புலைநிகர்த்துத் திருடல்புரை யெனவணிகற் குணர்த்திப்பின் போக வேண்டி.

சொலிவிரைந்து வெளியில்வரத் தொடர்ந்தவன்காலைப்பிடிக்கத்துளைப்புறத்தே
நலிவுகொண்டு நின்றபிதாந் தனைநோக்கிக் கொணர்ந்தவற்றை நல்கிச் செட்டி
வலிமிகுந்து கொண்டதனு லெனதுதலை யரிந்துகொடு மனைபோ கென்ன
மெலிவதின்றித் தலையரிந்து கொடுகபீர் மனைதனைக்கு விரைந்து வந்து. (௫௨)

உணவுதரு பொருள்மூட்டை தனைமனைவி கையிலளித்தங் குளதறு கூற
அணவுமனை யாள்மகனை யிழந்ததற்கு மிரங்கிமனை யடைந்தோ ருக்குங்
குணமொடமு தருத்திப்பின் றுயில்விக்கத் துயின்றுநீர் குடையக் காலை
தணவினரிங் கங்குசெட்டி கூவென்னக் கேட்டுவந்து சார்ந்தோ ரெல்லாம். ()

அடையாளந் தெரியாமற் றலையரிந்து போந்திருட ரடுத்த வுன்னைத்
தடியாதும் பொருளெல்லாங் கொள்ளாதும் போனதுநின் றவமே யென்ன
விடிவாக வேந்தனிடம் வணிகன்போய் நடந்தசெயல் விளம்ப வேந்தன்
புடைசார நின்றவரைத் திருடரைநீர் கழுவேற்றப் போமி னென்றான். (௫௫)

தலையிலாச் சவந்தனையுங் கழுவேற்றி னரசன் பணித வாமல்
அலையுலாம் புனலாடி யவர்வந்து விடைகொண்டே யகலும் போது
உலைவிலா மனக்கபீர் மனைவியொடு போந்துமிக வுபச ரித்து
நிலைநலோ ரொடுநகரின் புறத்துவந்து கழுவில்முண்ட நிற்கக் கண்டு. (௫௬)

தீர்த்தவா சிகள்முண்டந் தனைக்கழுவி லேற்றுவரோ தேயத் தென்று
பார்த்துவியந் துறவவரைச் சவந்தனது கைகுவித்துப் பணியப் பார்த்து [ன்ன
நேர்த்தெவரும் வியந்துநிற்கச் சவம்வணங்கும் புதுமையென்னே நிகழ்ந்தது கெ
ஆர்த்தவறி வினர்கேட்கக் கபீரும்மை வணங்குதலா லரிகருத் தாசன். (௫௭)

இவனாக வேண்டுமென வெண்ணுகின்றே னெனவவரு மெழிலி வண்ணப்
பவநாசன் றாசனிவன் யாரென்னக் கபீரரெல்லாம் பரிந்து சொன்னார்
அவர்வேண்டா வெமையருத்த மகனுயிர்விட் டானேவென்ற றைய நல்லீர்
எவனேனு மரிதாச ரின்பொருட்டுக் கொலையுண்டா லினிதே யென்றார். (௫௮)

மூவருங்க பீர்மனைவி தனைநோக்கி மகன்றலையென் முன்னே கொண்டு
வாவறிது மெனமனைக்குப் போய்த்தலையைக் கொடுவந்து வணங்கி யீய
ஆவலுட னேதலைமேற் றண்டத்தை வைத்துடன்மே லமைவு செய்து
மேவுகெனத் தடவுதலுந் தலைபொருந்த மகன்றூங்கி விழித்தாற் போல. (௫௯)

உயிர்மேவிக் கழுவைவிட்டுக் கீழிழிந்து மூவரையு முவந்து போற்றி
இயலோடு வணங்கிநிற்க வூரிலுள்ளோர் யாவருங்கண் டிறும்பூ தெய்திப்
புயல்மேனிப் பெருமான்ற னடியார்க ளடிவணங்கிப் புகழ்ந்து போற்றச்
செயிர்தீர்ந்தோர்விடைபெற்றுச்சென்றபின்புகபீர்மனையைச்சேர்ந்துவாழ்ந்தார்

(வேறு) அப்படியி ருந்தவரோர் நாள்பஜனை செய்துபெரி தாவணவழி
இற்புகுத வோர்வனிதை கற்றிரிகை யாலரிசி யிற்பு ரியுமா
உற்பவநி னைந்தழமு னுற்றவர்க ளோனெனவு ரைப்பதி லர்பால்
நிப்படநி ரஞ்சனரெ திர்ந்துவின வப்புரையி னெஞ்சினர் சொல்வார். (௬௧)

திரிகையரை பட்டரிசி சிந்துவது போற்பிறவி செய்தி கிரியால்
அருகியரை பட்டுயிர முங்குகிற தயெனவ ழக்க ருதினேன்
பெரியதவ ரேயெனமு னைக்கணரி சிக்குநிகர் பெற்று றுவர்காண்
மருவரித னுமமுறை வைணவரெ னச்சொலம கிழ்ந்த னரரோ. (௬௨)

பின்பொருவ ருக்கொருவர் வந்தனமு டன்றழுவு பெற்றி யினராய்
அன்பொடுக பீரர்மனை வந்தரித னுமமுறை யாசை யின்மிகும்
இன்பொடுப்ர பந்தகவி யெண்ணிலவி யற்றியரு ளீச னினைவே
மன்பவம கற்றுமென ஞானநலம் விஞ்சினர்வ ரும்ப கலிலே. (௬௩)

(வேறு) தேசிகோத் தமரால் ஞானந் திகழ்வுற வேண்டு மென்று
மாசறு மிராமா னந்தர் மனைவயின் வந்து கண்டு
காசறு மெதிகட் கெல்லாங் கடவுள்போல் விளங்கு கின்ற
நேசரே யெனக்கு ஞான நிலைதனை யுபதே சித்து. (௬௪)

புரந்தருள் கென்னப் பாதம் போற்றினர் வணங்கி நிற்க
நிரந்தரம் பொருந்து ஞான நிலையினர் கபீரை நோக்கித்
தரந்தபு மவிந்த ரென்னுஞ் சாதியோர் தமக்கு ஞானந்
திரந்தரு மறையோர் போதஞ் செய்வது தகுதி யன்றால். (௬௫)

என்னவே ராமா நந்த ரிசைப்பது கேட்டுத் தாசர்
மன்னுமுக் கரண சுத்தி வாய்ந்தியா னும்மால் ஞானந்
துன்னிட வேண்டி வந்தேன் சுரந்தருள் கென்று கூற
அன்னது கேட்டி ராமா நந்தரா காதென் றோத. (௬௬)

யாதுநாஞ் செய்வ தென்று மனைக்குவந் திருந்து தாசர்
சாதுவா மிராமா நந்தர் தாண்முடி தாங்கு தற்கு
மோதுசீ ரிராம நாம முரைத்திடக் கேட்ப தற்குந்
தீதுதீ ருபாய நாடித் தீர்த்தமற் றவரா டற்கு (௬௭)

வருவழிக் குழிய கழ்ந்து மற்றதி லிருக்க வன்னோர்
பரிதிதோன் றுதற்கு முன்னே படர்பொழு தடிக பீரர்
திருமுடி தீண்ட யாவர் சிரத்திலோ படலா யிற்று
மருவுமென் காலென் றஞ்சி வருந்தியே யிராமா வென்றார். (௬௮)

என்னமெய்க் குருவே யுந்தா ளென்றலை படவும் பெற்றேன்
மன்னுசீ ரிராமா வென்றும் வாக்கிசைத் திடவும் பெற்றேன்
நன்னயத் தெனக்கீ டேற்ற நண்ணிய தெனவா னந்தத்
துன்னியக் குழியி னின்று மெழுந்தனர் துதிக்கக் கண்டார். (௬௯)

இத்துருக் கனுக்கு நேய மிசைவுற மனத்துக் கெய்துஞ்
சுத்தநன் றென்று பின்னுந் துயரிவன் றனக்குச் செய்து
மெய்த்திறந் தெரித்தல் வேண்டு மெனவொன்றும் விளம்பா ராகித்
தத்துநீ ராடச் சென்றார் கபீரர்தம் மனைக்குச் சார்ந்தார். (எ௰)

தாசர்பி னிரர்மா நந்தர் தாசனென் றமைத்த பாடல்
ஆசறு கீர்த்த னங்க ளாகமற் றெங்கு மோதி
நேசமோ டுலவு கின்ற நிலைகண் டிராமா நந்தர்
கூசலின் றவர்சி ரத்திற் பாதுகை கொண்டு மோதி. (எக)

நானுப தேசஞ் செய்யா திருக்கநீ யனியென் குருசன்
றனென வமைத்துப் பாடல் சாற்றிடத் தகுமோ வென்ன
ஊனமில் கபீர ருந்தா னுற்றதுந் தலையி லுண்டு
மேனவி லிராம நாமம் விளம்பிய ததுவு முண்டு. (எஉ)

மற்றுமிங் குமது பாத மரவடி யெவருங் காண
எற்றல்போ லென்சி ரத்தி லேற்றிய திலையோ வென்று
சொற்றனர் சிரத்தி னின்றுஞ் சோரிசோர் வுறவ ணங்க
முற்றவுண் மகிழ்ந்து தாசர் முடிமிசைத் திருக்கை வைத்து. (எங)

உன்னைப்போல் ஞான பக்தி யுள்ளவ ரெவரு மில்லை
என்னநற் செவியிற் கிருஷ்ண நாமத்தை யிசையக் கூறித்
துன்னினர் மனைக்கி ராமா நந்தராந் துறவி பின்பு
மன்னினர் கபீரர் தாம்வாழ் மனைக்குமா மகிழ்ச்சி கூர்ந்து. (எச)

சிலநலோர் துதிக்கத் தீயோர் சிறுவனைக் கொன்ற தீயோன்
நலவரி நாமந் தன்னை நவில்கின்று னல்லோன் போல
வலநல வேடங் கொண்டு வாழ்தல்வஞ் சகமே யென்று
பலபல விகழ்வு கூறிப் பழித்தவ மானம் பண்ண. (எரு)

நினைத்தொரு நான்கு திக்கு நிறைந்தசா துக்க ளெல்லாந்
தனித்தனி வந்தோர் நாளிற் றலைப்பெய்து புசிப்ப தாயென்
மனைக்குநீர் வருக வென்று கபீரரே வரைந்த தாக
இனித்தபத் திரங்க ளெங்கு மெழுதிவிட் டிருப்ப தானார். (எசா)

பத்திர மெங்குஞ் செல்லப் பார்த்தசா துக்க ளெல்லாம்
அத்தின மதனி லேவந் தடுத்தனர் கபீரர் கண்டு
மொய்த்துநல் லோர்க ளெல்லா மொருவழி முயங்கற் கொத்த
தெத்திற நலனோ வென்னா வினிதுபே ரின்பங் கொண்டு. (எஎ)

ஒவ்வொரு வரையுஞ் சேவித் துகந்துறு தோத்தி ரங்கள்
செய்வது செய்யப் பூமேற் றிருமகள் கொழுந னிங்கு
மெய்வகை யெனவந் தோர்க்கு விருந்திடா திருக்கி னிந்தை
வவ்வுறு மெனக்க பீரர் வடிவுகொண் டடைந்து மாதோ. (எஅ)

ஒருவருக் கொருவ னாகி யூழியம் பலவுஞ் செய்து
திருவமு தருத்தும் போது சேர்ந்ததி யவர்கள் கண்டு
மருவிய பலக பீரர் வயங்குவ தென்னே யென்று
கருதின ரதிச யிக்கக் களிப்புடன் மூன்று நாளும். (எகூ)

நலவுப சாரம் பெற்று நனிமகிழ் சிறக்கச் செய்து
பொலனணி யாடை தந்து பொருந்துதோத் திரங்கள் செய்யச்
செலவிடை கொண்டு போனார் திருத்துசீ தரனும் போனன்
பலபடி யிகழ்ந்த தீயோ ரனைவரும் பயந்து வந்து. (அ0)

மெய்யன்ப ரடியிற் றாழ்ந்து விளம்புவார் கபீர ரேநஞ்
செய்யநன் மனந்தே றாமந் செய்பிழை பொறுத்தி ரென்னத்
துய்யதோத் திரங்கள் செய்து தொழுதுபோ யினர்க பீரும்
பெய்யுமா முகிலன் னானை நினைத்திது பேச லுற்றார். (அக)

எனையவ மானஞ் செய்ய வெண்ணினோர் நாண வந்த
அனைவரு மகிழ்ச்சி கூர வமைத்தனை யாயி லுன்றன்
நினைவருங் கருணை தன்னை யென்னென்று நிகழ்த்து கிற்பேன்
வினைதெறக் கழல்கால் பூண்ட விமலனே யென்று வாழ்த்தி. (அஉ)

வேறு) அன்பினரி ருந்துசில நாள்கழிவ தான
பின்புதிரு மால்புரம டைந்துபுகழ் பேசி
இன்புதரு சேதுசெல வெண்ணிவிட லன்றன்
முன்புவிடை பெற்றுவழி முந்தினர்ந டந்தார். (அந)

வருவழியோ ரூர்தனில்வ திந்திரவு தன்னில்
அரிபசனை செய்ததைய றிந்தனரெ லாரும்
பெரிதும கிழ்வுற்றனர்பி றங்கொருஜி வாவு
மருவுதத்து வாவுமவண் வந்தனர்ம கிழ்ந்து. (அச)

ஞானநலம் விஞ்சியந லோரரித ருமை
பானரிவ ரென்றடிப ணிந்துதுதி பன்னி
மோனவுப தேசமருள் செய்கெனமொ ழிந்தார்
ஆனவிரு வோர்நினைவ றிந்துவரு மன்பர். (அரு)

மற்றவர்சி ரத்தினிடை வைத்தனர்க ரத்தை
உற்றவுப தேசமுமு ணர்த்தியருள் செய்து
நற்றிவரு சேதுமுதல் நண்ணுதல னண்ணிப்
பெற்றுவளர் காசிநக ருற்றனர்பெ யர்ந்தே (அசு)

மெய்யருப தேசவுரை மேவுமறை யோரரங்
தையன்மிகு தம்பிதமை யன்றமையி கழ்ந்தார்
நொய்யதொர விந்தனைய டைந்தனர்று ழைந்தென்
றய்யநக ருள்ளமறை யோர்பலரு மொன்றாய். (அஎ)

இகழ்வதையெ ணாதிருவ ரும்பெறுத லான
மகன்மகட மக்குமரு கன்மருகி வாயா
தகமிகவ ருந்திவளர் காசியைய டைந்து
தகவுறுக பீரரைவ ணங்கினர்த ளர்ந்தே. (அஅ)

ஐயவெம தூரினுறை யந்தணர்க ளெல்லாந்
துய்வுமை யுற்றடிதொ ழற்கிசைகி லாது
நையவுரை செய்தெமைந லிந்தனர்க ளென்ன
மெய்யறிக பீரவரை நோக்கிவிடை சொல்வார். (அகூ)

நின்மகனை நின்றன்மக னுக்குநெறி யாக
என்னுரைவ ழாமணமி யற்றுபுமி னென்னச்
சொன்னபடி செய்வதுது ணிந்துதம தூரை
மன்னினர்மு கூர்த்தமிட மறையவரெ லோரும். (கூ0)

மற்றவர கத்தினிடை வந்துதெரி நீவிர்
முற்றமுறை தீர்மிருக மூந்துசெய லிற்செய்
பெற்றிநல னன்றெனவி ரைந்துநனி பேசி
உற்றபுரை தீர்வதையு ளுற்றியுற வாகி. (கூக)

குருவெனவ விந்தனைய டைந்ததுகு றித்தால்
திருமகன்ம ணுளன்மகிழ் செய்கிலனெ னக்கொண்
டுருகுமன னேயமுட னுத்றமக னுக்குக்
கருதுமக டந்துமக ளுக்குரிய காந்தன். (கூஉ)

எய்துவகை யும்புரிய விவ்விருவ ரும்போய்
மெய்யறிக பீரடிவ ணங்கினர்வி ளம்பத்
துய்யரும கிழ்ந்தனர்து தித்தடிப ணிந்து
பொய்யிலிரு வோருநகர் புக்கனரு றைந்தார். (கூஙு)

துளவமணி யோடொருது வாதசநன் றுமம்
வளர்வடிவ ராயமரும் வைணவரொ ருங்கே
தளர்வில்ப திறையிரர்த யங்குமொரு காசி
வளநகர டைந்திவணில் வந்தநமர் கட்கு. (கூச)

உணவருளு முத்தமநல் வைணவர்க ளுண்டோ
அணவுறிவு ரைத்திரென வாய்வுறுதல் கண்டோர்
இணர்துளவி னுனடியி றைஞ்சுமொர்து ருக்கன்
புணர்வதுள தென்றுபுக லக்கடிது போனர். (கூரு)

நீமையில்க பீரர்செவி சேரவொரு சீதா
ராமவெனு நல்லுரைந வின்றிடவி றுவி
மாமனையி லுற்றவரெ முந்துவெளி வந்து
தேசமிலரை நோக்கினர்து தித்தனர்ப ணிந்தார். (கூசா)

பணிகுநரை வந்தவர்கள் பார்த்தனரெ மக்கிங்
குணவிடுக வென்னநல தென்றுறுக பீரர்
அணுகவிவ ணென்றவரை யவ்வயின கன்று
வணிகருல னோர்துளசி தாசனிடை வந்து. (கூஎ)

அணுகென்மனை வந்தபதி னுயிரர்த மக்கும்
வணிகர்தில காவுளம கிழ்ந்தினித ளித்தி
உணவெனிலு னக்குநல னூஉங்குவரு மென்னப்
புணர்வதறி யாவணிக னென்றுபுகல் கிற்பான். (கூஅ)

நீவினவு கின்றபடி நேர்வுறிலெ னக்குன்
றேவியையோர் நாளிரவு சேர்வகைசெய் கிற்பா
யோவெனவ ளிப்பனென வோதிடமு ரைத்தார்
நாவிலரி நாமமதை நாளுநவில் கிற்போர். (கூகூ)

சொல்லுதிட னுக்கிசைவு கொண்டுவரு தொண்டர்
நல்லுணவு செய்யும்வகை யாவுநனி நல்கப்
புல்லுநர்த மக்குதவி நன்மகிழ்பொ ருத்திச்
செல்லும்வகை தம்மனைவி யார்க்கினிது செப்பி. (௱)

ஓரிரவு நீவணிக னுக்குமகிழ் செய்யச்
சாருதல்வி ரும்பியல வோவுணவு தந்தான்
நேரிலரி தாசர்பெற லாதலது நேரப்
பேருதியெ னக்கொடுபெ யர்ந்தினிது சென்றார். (௱க)

சென்றவணி கன்புடைசெ றிந்தவன்ம னத்துக்
கொன்றும்வகை யின்றிரவு முற்றமுறு கென்ன
நன்றெனந வின்றவணி கன்கடையி னண்ண
அன்றவர்பு கன்றபடி யண்மியதில் *வங்கன். (௱உ)

அகமகிழ்வு றும்பொழுதி லந்தநக ரெல்லாந்
தகவுபுரி யுந்தலைவ னுகிமலர் தங்கு
மகள்கொழுநன் வந்துவணி கன்றனைவெ ருட்டி
மிகவிலைவ ணக்கியெதிர் நின்றிதுவி ளம்பும். (௱௩)

தனமதமி குத்தபுலை யாவெனது தங்கை
உனையணைய வெண்ணினைய தாலினியொ ரம்பால்
நினதுதலை கொய்வெனென நேர்பொழுது செட்டி
மனமதுது ளங்கிமிக வந்தடிப ணிந்து. (௱௪)

என்பிழைபொ றுத்தெனுயி ருக்கபய மீந்தால்
அன்புகொள வென்பொருளனைத்துமினி நீவேன்
என்பதைவி னவியினி யின்னபுரி வாயேல்
துன்புறவு னைத்தலைது மிப்பெனென வோதி (௱௫)

கற்பின்மிகு கின்றவிவர் கான்மிசைவி ழுந்தே
அற்புபுரி யன்னவர்த மக்குமென வன்னான்
சிற்பரன வின்றபடி தேவியைவ ணங்கி
எற்பிழைபொ றுத்தருள்க வென்றுதுதி செய்தான். (௱௬)

அன்பன்மனை யாரையினி தவ்வயினி ருந்தும்
இன்பொடுகொ ணர்ந்துமனை யிற்புகவி டுத்துப்
பொன்பொருவி னயகன்ம றைந்துவெளி போதப்
பின்பறிக பீரர்மனை யாரொடிது பேசும். (௱௭)

என்னுரைக டந்திரவி லேயவணி ராது
துன்னினையி தென்னெனவு டன்றொழுது சொல்வார்
மன்னுநகர் துன்றொரதி காரியவண் வந்து
சொன்னவணி கன்றனைய டர்ந்தெதிர்தொ டர்ந்து. (௱௮)

இங்கெனைவி டுத்தினிதி னேகினனெ னப்பூ
மங்கையனை யார்சொலம கிழ்ந்திலர்மு னிந்து
தங்குமதி காரியிடை தாம்விரவி நின்று
கங்குறுயில் கின்றவவ னைக்கடி தெழுப்பி. (௱௯)

*வங்கன்—சண்டாளன்.

என்னிதுபு ரிந்தனையெ னத்தொழுது நின்றே
இன்னவகை யேதுமறி யேனெனவி சைத்தான்
சொன்னதிட வாய்மையினு ணர்ந்திதுதொ குத்தோன்
மன்னுபுகழ் ராமனென வெண்ணிவணி கன்பால். (௱௰)

வந்துவணி காபுகலு மாமறைக ளாலு
முந்துதவ யோகமுயல் மோனர்செய லாலும்
இந்திரன்மு தற்பலவி மைப்பிலாக ளாலு
மைந்துமறி தற்கரிய நாயகனை யன்றோ. (௱௰௧)

ஊரினதி காரியென வுன்னியுனை நின்றாய்
நேரிரவி லென்றிவர்நி கழ்த்தவுணர் செட்டி
பேரறிவி னீருமது பேரருளி னாலே
யாருமறி யாதபொரு ளென்வயின டைந்த. (௱௰௨)

உம்மதரு ளாலெனவு ரைத்தடிவ ணங்கி
வெம்மையனு தாபமுள மேவியரி நாமஞ்
செம்மையுட னோதினனி ருக்குமனை சேர்ந்து
நன்மைசெய்க பீரரியை நாடினரி ருந்தார். (௱௰௩)

கபீர்தாசர் திருவடிகளே சரணம்.

ஆகச் சரித்திரம் ௫-க்கு செய்யுள் ௬௱௯௰.

---

முற்றிற்று.



# கியான தேவர் சரித்திரம்.

-:0:-

கங்கைநதிக் கரையிலாப் காவெனுமூ ரிற்குலக ருணிக ராகிப்
பொங்குவிண்டு பக்தரொனுங் கோவிந்த பண்டிதரோர் புருடர் வாழ்ந்தார்
அங்கவர்பத் தினிபதிவி ரதாசிரோ மணியாநி ருபாயி யார்க்குத்
தங்குவெகு நாளாகப் புத்திரனில் லாதாசை தழைத்துப் பின்பு. (க)

தேவருளால் ஞானபக்தி திருந்துமொரு வடிவாகிச் சேய்பி றக்க
ஆவலுட னக்குழந்தை யைப்பார்த்துத் தாய்தந்தை யளவி லின்பு
மேவிவிடோ பாவென்னும் பெயர்வைத்து மூபநயன விதியுஞ் செய்தார்
தாவிலந்தப் பிள்ளைபல கலைகளுங்கற் றறிவில்மிக்க சான்றோ ராகி. (உ)

தீர்த்தமா டக்கருதித் தாய்தந்தை யிடத்துவிடை சேரப் பெற்று
நேர்த்தவரை வணங்கியவ்வூர் விட்டரிதன் னுமத்தை நினைந்து சொல்லிப்
போய்த்துவா ராவதிக்கட் பொங்குறுகோ மதிமூழ்கிப் பொருந்து கண்ணன்
வாய்த்துளகோ யிற்புகுந்து வணங்கியவ்வூர் விட்டுமச்ச வடிவாய் முன்னே. ()

சங்கவசு ரன்றனக்கு வீடுதந்த மாலிடத்துச் சார்ந்து காதல்
பொங்கவணங் கித்தரும புரிகண்டு மூலமா தவம்போய்க் கண்ணன்
தங்குறுபா லுகாதீர்த்தஞ் சோமனு தங்கால யவனன் றன்னை
மங்குறச்செய் மருங்குகண்டு தவளபுரி யடைந்தின்ன மார்க்கத் தெல்லாம்.(ச)

உள்ளதீர்த் தங்களெல்லாம் படிந்தளகா வதியென்னு மூரைச் சேர்ந்து
தெள்ளியசக் கரதீர்த்தஞ் சேர்ந்தாடித் தீரத்திற் றிருமா றன்னை
எள்ளிலருச் சனைசெய்தங் கிருக்கும்போ தவ்வூர்வா ழிருபி றப்பின்
விள்ளுசித்தோ பண்டிதரவ் விடோபாவைக் கண்டெங்கு மேவுற் றென்றும். ()

பேரெதென் றும்வினவப் பிரமசாரி யாப்காமூர் பெயர்வி ருத்தா
சாரிகளுக் குப்பிறந்த விடோபாயா னித்திசையிற் றடினி யாட
நேர்வுறுவே னென்றுசொல்லச் சித்தோபண் டிதர்சுதின நேர்ந்த தென்று
போரமகிழ்ந் தெம்மனைக்குப் புகவேண்டு மென்றுமிகப் புகழ்ந்து கொண்டு (சு)

வந்தாறு சுவைச்சோறுண் பித்துப்பின் றுயில்வதிய விரண்டு பேரும்
சிந்தாகு லந்தீரச் சித்தோபண் டிதர்கனவிற் பாண்டு ரங்கன்
நந்தாத பிரமசாரிக் குன்மகளை மணஞ்செய்து நல்கு கென்ன
முந்தாத ரத்துடனே யன்னவருக் கதுதெரிய மொழிந்தார் கேட்டு. (எ)

பிரமசாரி யெனக்கந்தப் பாண்டுரங்க னிவ்விதத்தைப் பேசொ ணுதோ
திரமுறவெ னச்சித்தோ பண்டிதரின் றிங்கிருத்தல் செய்கவென்னத்
தரமிகுபண் டரிநாத னன்றிரவில் விடோபாதன் கனவிற் சார்ந்து
நிரவுறவே மணத்தியவள் வயிற்றிடையோர் நால்வர்நல்லோர் நேர்வா ரென்று.

சொன்னதுகேட் டுடன்விழித்துச் சித்தோபண் டிதருக்குத் தோன்றச் சொல்ல
நன்னரவர் புரோகிதரை யழைத்துநல்ல முகூர்த்தம்வைத்து மகளை நல்கிப்
பின்னரொரு நான்குநாள் கழித்தபின்பு சித்தோபண் டிதரைப் பேணித்
துன்னுமிது கடகமதி யாதலாற் பண்டரிபோய்த் தொழுதல் வேண்டும். (௯)

என்றுசொல்ல நின்மனைவி யுடன்செல்க வெனமாம னியம்பக் கூட்டி
நன்றுமதி பாகாவில் வந்தாடிப் பண்டரிவாழ் நாதன் கோயிற்
சென்றுவலஞ் செய்துகரு டத்தம்பஞ் சேவித்துத் திருமால் பாதம்
நின்றும்வி ழுந்துந்தொழுது நிற்கவங்குச் சித்தோபண் டிதரு நேர்ந்தார். (௰)

வந்தவரை வணங்கியான் சேதுசென்று வரவேண்டு மெனவு ரைக்க
முந்துமவர் மனங்கண்டு நன்றுபோய் வருகவென மொழிந்து தாம்வாழ்
தந்தவள காபுரிபோய்ச் சார்ந்தனர்வி டோபாபண் டரிநா தன்பால்
உந்தவிடை பெற்றுஸ்ரீ சைலமல்லி கார்ச்சுனமே முதலா வூர்கள். (௰௧)

பலவும்போய்க் கண்டுசே துவுமாடிப் பின்னளகா பதியை மேவி
நிலவியமா மனைவணங்கி நாலுநாள் கழிந்தபின்பு நிகழ்த்து கின்றார்
நலமிகவென் றந்தைதாய் தமைக்காண வேண்டும்விடை நல்கு கென்ன
இலகுசித்தோ பண்டிதர்யா னுங்காண வேண்டுமெழு கென்றெ ழுந்து. (௰௨)

தம்பதிக ளுடனுப்காம் வந்துதாய் தந்தையர்க்குத் தண்டஞ் செய்து
நம்பெருமான் விடைப்படியே மணமாயிற் றென்றுளது நவிலக்கேட்டே
இன்பமிகுந் தார்பின்பு மகளைமரு மகனைவிடுத் திருக்கு மூர்க்கு
நம்புசித்தோ பண்டிதர்சென் றூர்பின்பு தாய்தந்தை மரண நண்ண. (௰௩)

வருந்தாமல் விடோபாத்தன் குடும்பத்தில் மனமின்றி வைகலோர்ந்து
பெருந்தாழ்வு கொடுபோந்தார் சித்தோபண் டிதர்மருகற் கிதங்கள் பேசிப்
பொருந்தாது குடும்பத்திற் பொருளுந்தே டாதிருக்கிற் புகலில் வாழ்க்கை
திருந்தாதெம் மூர்க்குவரு கென்றழைத்துக் கொடுபோந்து சேர்ந்தி ருந்தார். ()

அவ்வூரி லரிபசனஞ் செய்துகொண்டு மாடிமதி யெகாத சிக்குத்
தவ்வாதாண் டுகடோறும் விட்டலனைச் சேவித்துத் தங்கு நாளில்
வெவ்வாளி யனையவிழி மனைவியைப்பார்த் தெனக்குமிக வெறுப்புச் சார்வ
திவ்வாழ்விற் காசிபோய்ச் சன்னியா சம்பெறமற் றெனக்கு வேண்டும். (௰௫)

நீவிடைநல் குதியென்ன நேரிழையார் மறுமொழிதா னேரா தேபோய்த்
தாவில்தந்தை தனக்கோதச் சித்தோபண் டிதர்மகளைத் தானும் பார்த்து
மேவியபுத் திரனில்லார் சன்னியா சம்பெறுதல் விதியன் றென்னைத்
தேவிவிடை தராதிருக்கக் கங்கைபோய் வருதுமெனச் செப்பிப் போனார். (௰௬)

வலைவழுவு மான்போலத் திருவேணி சங்கம்போய் வருபிர யாகை
அலைதருபுஷ் கரதீர்த்தத் தாடிவிண்டு பத்தர்சொல்லும் புராணங் கேட்டு
நிலையில்சமு சாரந்தான் ஜனனமர ணத்தைநல்கு நெறிமற் றென்று
மலைவில்சீர் பாதர்தமைச் சற்பாவத் துடன்வணங்கி வருமெ னக்கு. (௰௭)

துறவிலிச்சை யுளவதனைத் தரல்வேண்டு மெனவவருந் துணைவி மக்கள்
உறவினருண் டோவென்ன நானொருவ னேயென்ன வுற்ற தீக்ஷை
பெறவருளிச் சன்னியா சத்துவைத்தார் சீபாதர் பின்வி டோபா
அறமிகுகா சியில்நான்கா மாச்சிரமம் பெற்றிருப்ப தறிந்து மன்னோ (௰௮

சித்தோபண் டிதர்பிள்ளை பெறுதவர்க்குத் துறவருளல் சிறந்த தன்றென்
றத்தாலே துயரடைய மனைவியுங்கேட் டுத்துன்ப மடைந்து தேறிக்
கொத்தார்பைந் துணரரச மரஞ்சூழ்தல் தினவிரதங் கொண்டு மேவி
எத்தாலுந் தடையின்றி வருநாளிற் கணவனுக்குத் துறவன் றீந்தார் (௰கூ)

ஒருநாளவ் வரசடியி லிருக்கவிடோ பாமனைவி யுற்றுப் போற்ற
வரநான்கு மகப்பெறுதி யெனவுதவக் குறுநகையம் மங்கை கொண்டாள்
திரமோது ஸ்ரீபாதர் சிரிப்பதென்னே நங்காய்நீ செப்பு கென்னத்
தரமேவு மணம்புரிந்த புருடனின்றி மகப்பெறவுந் தகுமோ வென்றாள். (௨௰)

உன்கணவ னெங்கேயென் றவர்கேட்கச் சமுசார வுறவு நீத்து
நன்குதுற வினராஞர் பிள்ளையான் பெறுவதெங்ங னவிலு கென்ன
மன்குருவும் பிள்ளையில்லார் துறவுபெற லோபாவம் வழங்கி னோர்க்கும்
*தன்குதெறும் பாவமே யென்றடையா ளங்கேட்டுத் தாந்தெ ரிந்து. (௨க)

மிகவருந்தி நங்காயுன் றந்தைதனைக் கொணர்கவென்ன விரைந்து சென்று
தகவுரைக்க வவர்வந்து தண்டனிட ஸ்ரீபாதர் சாற்று கின்றார்
மகளையொரு வாகனத்தி லேற்றிநீ காசிநகர் வருக வென்ன
முகமனொடு துறவினரைக் கூய்க்கொண்டுமனமகிழ்ந்துமுடுகிப் போனார். (௨௨)

போனபின்பு ஸ்ரீபாதர் சைதன்னிய னென்றுபெயர் புனைந்த சீடர்
ஆனனத்தை நோக்கியுனக் கில்லாளுண் டோவின்றே வறைதி யென்ன
ஞானகுரு வடிவணங்கி விடோபாவுள் ளதுகூற நல்ல தென்ன
ஊனமிலா மனைவியுடன் போய்வாழ்க வூரிலென வுடனே சென்று. (௨௩)

கூடியபின் னூரிலுள்ளோர் துறவுகொண்டோ னில்வாழ்க்கை கொள்ள லாமோ
நாடிலிது பிழையென்று பழிகூறத் திருமாறன் றுமங் கூறி
வீடில்விடோ பாவிருக்க வேதியரெல் லாம்விலக்கி விடவு நீங்கி
நாடிவனத் திற்குடிசை யியற்றியதி லேயிருந்தார் நாரி யோடு. (௨௪)

இரவுபக லிராமநா மம்புகன்று தினமுமிரந் தீரா றுண்டு
தரமருவு பாகவதங் கீதைமுத லியகேட்டுத் தங்கிப் பின்பு
திரமருவு மும்மகனு மொருபெண்ணும் பிறக்கவவ ரிற்சி றப்பு
விரவுசதா சிவனென முன்மகற்கு நிவர்த்தியென விதித்து நாமம் (௨௫)

விண்டிரண்டாம் பிள்ளைக்கு ஞானதே வென்றுபெயர் மேவச் செய்து
மண்டுமூன் றாம்பிள்ளை பிரமனுக்குச் சோபான ரெனமா நாமம்
கொண்டுநான் காம்பிள்ளை மாயைக்கு முத்தாயி யெனக்கு றித்தார்
பண்டுவிடோ பாவென்று பெயர்கொண்டு துறவறத்தும் பயின்று ளோரே. ()

அவகுலத்திற் பிறந்தமக்க ளானனமும் பார்க்கலா காதென் றியாரும்
எவமுரைக்கப் பிள்ளைகளும் வளர்ந்துவர வத்யயன மிசைக்குங் காலம்
நவமடுக்க மனைவிபுரு டனைநோக்கி யுபநயன நடத்த வேண்டுந்
தவமகிழ்ந ரேயென்னச் சைதன்னியர் மறையவர்க டமைவ ரித்து. (௨௭)

யானிழைத்த பிழைபொறுத்துப் பிராய்ச்சித்த நூல்வழியே யியற்று கென்று
ஞானமிகு வேதியரை வணங்கவங்கு முதற்பிள்ளை நலோரே யுங்கள்
ஆனனங்கள் கண்டபோ தேபுனித மாயினே மாத லாலே
ஊனமற வறுவருக்கும் பிராய்ச்சித்த முனூற்றுகென வுரைத்து நிற்க. (௨அ)

*தன்கு—களிப்பு.

உடம்பைநீ ருக்குவதை யன்றிவே றொன்றுமிலை யுபாய மென்று
திடங்கொள்கலை வேதியர்தேர்ந் துரைசெய்ய வனுதாபஞ் செறிந்து நோக்கிச்
சடங்குசொலு மறையவரை வணங்கியே திரும்பிப்பா ராமற் சார்ந்தே
இடங்கொள்வனத் திற்புகுந்தார் தனியாகிச் சைதனிய ரென்ப மாதோ. (உகூ)

போனவரைக் கண்டவர்க ளனுதாபக் கனல்சுடலே போதும்வேறே
*ஆனல்சுட வேண்டுவதின் றென்றார்க ணிவர்த்திதே வணுகி நின்று
ஞானமிகு வேதியரே யெமக்குநீர் விதிப்பதனை நவிலு கென்ன
ஊனமறை யோரேறும் மூர்க்குப்போ யுமக்குள்ள வுறவோ ராலே. (௩௰)

குலமுறையைத் தெரிந்தெழுதி வருகென்ன ஞானதே வரைக்கு றித்து
நலமலியு நிவர்த்திதே நமதுகுல நமக்குநன் றாய்த் தோன்றும் போது
சொலவெவரைக் கேட்கின்ற தெனச்சீவ முத்தபதந் தோன்றி னாலும்
வலமருவு சுதர்மத்தை விடலாகா தெனஞான தேவ குத்தார். (௩க)

சாதிதன்னு லொன்றுமில்லை பத்தியன்றி யரிபாதஞ் சார மாட்டார்
நீதிதெரிவ சிட்டர்முத லினர்பிறபபின் வகையென்ன நினைந்து பார்க்கில்
ஈதியலுங் குலத்தினனுய்க் கடவுளிடத் தன்புளனேற் றீங்கின் றென்று
ஓதினநூ லில்லையோ வென்றுசோ பானரித முரைத்து நின்றார். (௩உ)

மறையவரங் கவர்பிறப்பின் வகையெழுதித் தந்துதண்டம் வருக்கா ராக
நிறையுமறி வினர்கோதா விரிநதியி னீராடி நீங்கி யப்பாற்
குறைவறுசீர்ப் பிரமபுரங் குறுகியதில் வேதியரைக் கூட்டிவைத்துப்
பொறையுடையீ ரெனவணங்கிப் பத்திரமுந் தந்துளதும் புகன்று நின்றார். ()

அங்கவரும் பிராய்ச்சித்த மில்லையென வதிற்சில்லோ ரலர்மே லான
மங்கைபதி யிடத்தன்பு வாய்ந்துளதே லதுபோது மாறு வேண்டாம்
உங்கடமக் கெனநாங்க ளுணர்ந்தபடி யேயுரைத்தீ ருறவீ ரென்னப்
பங்கமில்லாக் குணத்தினிரால் ஞானதே வெனப்பெயரும் படைத்து ளீரே. ()

என்றுசிலர் சொல்லும்போ தங்கொருவ னீர்ப்பொதிகொ ளிக்க டாவுக்
கொன்றுபெயர் ஞானனென்றுற் பயனென்னை யெனஞான தேவுணர்ந்து
நன்றுசொன்னு யானுமது வுஞ்சரியே யெனநவில நனிமு னிந்து
துன்றுமவ னதற்குற்ற துனக்குறுமோ வென்வைது தொடரு மென்றார். (௩௫)

அதுகாண்பே னெனத்தடிகொண் டெற்றினனக் கடாவதனை யந்த வெற்றல்
முதுஞான தேவர்முது கிற்பட்டுத் தடித்ததனை முனைவர் நோக்கிச்
சதுர்வேத நின்னைப்போற் சாற்றுமோ கடாவென்ன ஞான தேவர்
இதுகால மேகாண்டீ ரெனவெழுந்து கடாத்தலையி லெழிற்கை வைத்து. (௩௬)

வேதமொழி கெனவருள வியாசரைப்போ லதுநான்கு வேதஞ் சொல்ல
ஏதமிலா மறையவர்க ளெல்லாருங் கண்டுவியப் பெய்திப் பூமேற்
போதன்முத லினர்புரிதற் கரியசெயல் புரிகுதலாற் பொருந்துமின்னோர்
ஓதில்நர ரல்லரவ தாரிகளே யிவர்க்கெவர்தா முஞற்றல் செய்வார். (௩௭)

தண்டமெனப் பொருளாசை தங்கியநா மறையோராய்ச் சனித்த தன்றி
மண்டுநல்ல வொழுக்கமிலேம் பத்தியிலேம் பரிசுத்த மனமு மில்லேம்
கண்டவிவ ரைப்போலு மறையோரின் றிவர்தம்மைக் கருதி யீன்றோர்
அண்டுமென்ன தவத்தினரோ வெனப்புகழ விவர்களுமங் கவரை யேத்தி. ()

*ஆனல்—அனல்—நீட்டல்விகாரம்.

எல்லாரும் பெருமையே யெனவவ்வூ ரினரெல்லா மிவரோ சால
நல்லோர்க ளரிதாச ரென்றுகொண்டா ரதுபுகன்ற நால்வ ரும்போய்
வல்லானோர் மறையவன்ற னகத்திறங்கிப் புர்ராணசிர வணமுஞ் செய்து
சல்லாப விநோதவரி பசனைவினைய்ப் பகலிரவுந் தங்கு நாளில் (ருகூ)

மற்றிவர்தங் ககமுடைய மறையவற்குப் பிதுர்த்திதிதான் வந்த தென்று
சுற்றமுள மறையவரை யுணக்கூவ வவர் துறவி சுதரைக் கூட்டி
உற்றநின்பால் வருகிலோ முணற்கென்ன விழிவுரைக்க வுதனைக் கேட்டு
முற்றுமறை யோன்றிகைத்து மோனமாய் வீட்டிருந்து முன்னு கின்றான். ()

தனைநோக்கி ஞானதே வென்னேநீ சலித்திருக்கை சாற்று கென்ன
எனையீன்றோன் றிதியின்று மறையவரிங் குணவெய்தா திகழ்ந்தா ரென்ன
அனையவனை யறுசுவைப்போ னகமமைத்தி பிதிரரே யடைந்துண் பாரென்
றினையசொல வவன்வியந்து நீராடல் முதல்புரிந்தங் கியைவு செய்தான் (சக)

கதலியிலை யிடத்திலே யறுசுவைப்போ னகம்படைத்துக் கைதொட் டுண்ணப்
பிதுரரெங்கே யெனவினவ ஞானதே வக்கதையை யிலைமேற் பெய்ய
எதிர்தருமப் பிதுர்க்கடமக் கர்க்கியபாத் தியமுநலா மெல்லாந் தந்து
சதுருடனு சனந்தந்து வத்திரபூ டணத்துடன்றக் கணையுந் தந்தான். (சஉ)

ஆபதீ பத்துடனே பிதுருருவ சனுர்த்தனவா சுதேவ மூர்த்திக்
கேபிரிய தாமென்று சொன்னவுட னமுதுசெட்டார் பிதுர்க்க ளெல்லாம்
மாபனவ னதுகண்டு வியப்புடனு னர்தமுற்றான் மற்றவ் வூர்வாழ்
பாபமில்வே தியரெல்லாஞ் சாளரத்து மிறப்பிடத்தும் பதுங்கிப் பார்த்தார் ()

அவர்பார்க்கப் பிதுர்க்களெல்லாம் போசனஞ்செய் தானவுடன் ஞானதேவர்
பவநீத்தி ரேகுகென மறைந்தார்க ளதுகண்ட பார்ப்பா ரெல்லாம்
நவமீதே பிதுரர்வரச் செயுந்திறத்தை நாடுங்கா னரரே யல்லர்
உவமையிலா மும்மூர்த்தி யொடுமாயை யேயிவர்க ளுண்மை யென்று (சச)

இங்கிவர்தம் மகிமையறி யாதேநாங் குலமதத்தா லிகழ்ந்தோம் வீணே
நன்கிதல வெனப்போனார் பகடுமறைக் கருத்தெவரு மறிய நாளுஞ்
சங்கையறச் சொல்வதனை ஞானதே வுணர்ந்துவியா சமுனி சாற்றுஞ்
சிங்கலிலா முறைதவறு மெனப்பகட்டை நோக்கமுன்போற் றிகழ்ந்த தன்றே.

(வேறு) தமக்கிதஞ் செய்து நின்ற சதுர்மறை யவனைப் போற்றி
எமக்கினி விடைநல் கென்ன விசைவுகொண் டவ்வூர் நீங்கி
அமைப்பரும் பெருமை பூண்ட மகாலய மென்னு மவ்வூர்
கமைப்பெருந் தவத்து நால்வர் கடுகினர் வந்து கூடி. (சசு)

பிரவரா வென்னுந் தீர்த்தம் பெரிதுவந் தாடி யங்கே
பரவுத லான போது பற்றறு ஞான தேவர்
திரமுலாங் கீதை தன்னை யாவருந் தெரிவ தாகத்
தரமுள வியாக்கி யானஞ் சமைக்கச்சோ பான தேவர். (சஎ)

யாவரு மறியப் போதித் திருந்தன ரிருக்கு நாளில்
மூவரு மிவர்க டன்மை கைனியர் வேந்தன் முன்னிப்
பாவரு நீர்சு வானு பவத்தினை மேவ வேண்டுந்
தாவற வெனவுங் கேட்டு நால்வருந் தாளில் வீழ்ந்து. (சஅ)

நாதனே யெமக்குநீரே ஞானசற் குருநான் ருயிப்
போதுப தேசஞ் செய்க வென்னனும் பொருந்து சிலர்
மேதகு முபதே சஞ்செய் திடவிவர் மேவிப் பின்பு
சாதுசற் குருவே சொல்லச் சமைத்தனர் ஞான தேவர் (சுசு)

(வேறு) தமதுசுவா னுபவமா மமிர்தானு பவமெனுஞ்சாத் திரத்தைப் பின்பு
நமவென்று மாளசா தேவியா லயத்திலரி நாமஞ் சொல்லிக்
கமவறிவோர் நடந்துசென்றோ ராலயத்தி னருகிறந்த கரும்ப கட்டைச்
சமமுறவே சமாதிசெய்ய மைசோபா வெனும்பெயர்தான் றங்கிற் றென்றும்.

(வேறு) முத்தா யிமொழிப் படிமுன் னிவர்வாழ்
அத்தா னமதா மளகா புரியைப்
பத்தா தரமோ டெயின் றனரால்
நத்தார் கரனு மாவின் றவரே (ருக)

அவ்வூ ரினர்யா வருமங் கவர்தம்
மெய்வா சகமும் புரிமே தகவும்
செவ்வே வினவிக் களிசேர்ந் தவராய்த்
தவ்வா தெதிர்வந் துதழீ இனரே (ரு௨)

தழுவுற் றிவர்தம் மினமக் குளதோம்
வழுவுற் றிடுமென் றுமகிழ்ந் துறையப்
பழுதுற் றவிசோ பனெனும் பனவன்
கெழுமுற் றிலன்வே றுகிளத் துவனே. (ருங)

துறவுற் றவனுக் கிவரோ சுதராய்
முறைதப் பினர்தம் முகமுந் துறலோ
அறமெய்ப் பிழையா லிதடா தெனக்
குறைசொற் றனனு யிரகோ டியரோ. (ருச)

ஒருநா ளினிவர்த் தியெனும் பெரியோர்
திருநே ரினையா ளொடுசெப் புவரால்
அருமா மதுரச் சுவைபப் பழுணத்
தருவா யெனவே தருதற் கிசைவாள். (ருரு)

மாவே முதலா யவெலாம் வருவித்
தேவே வவியற் றுறுமோ டுகொளப்
போவாள் குயவன் மனைபோம் வழியில்
மேவா தவிசோ பனுமே வினனே. (ருசு)

கண்டே யெதிரெய் துகருத் திலளாய்
விண்டே யொருபா லுறமே வுதலும்
பண்டே பழிகூ றுவிசோ பனெனே
அண்டா தெதிரே யயலா யினதே (ருஎ)

நீயெங் ககல்வா யதுநே ருதியென்
றேயங் கவனே திடவிக் குயவன்
வாய்நன் கடைசுட் டிடவல் லகலம்
ஈயென் றுகொளற் கிவணெய் தினனே. (ருஅ)

என்றுனையெனக் குழுனெய் தினதால்
நன்று சுதறும் புனலா டிடநான்
சென்று லலதொன் றுசெயற் கிலதென்
றென்று முனிவோ டுரையா டினனே. (௫௯)

இனியென் முனரெய் தல்செயா யெனவே
நனியங் கைகொடெற் றிநடந் துழுனே
வனையுங் குயவன் மனைவந் திவளுக்
கெனையன் றியடுங் கலமீ குதியேல். (௬௦)

உன்னைக் கடிதா கவொறுப் பலெனப்
பன்னப் பரிவுற் றிவளும் படரா
மன்னத் தனியோ டுவழுங் குகெனப்
பின்னக் குயவன் பெறவீ கலனே. (௬௧)

ஈயா தமையால் மனையெய் திமிக
ஆயா சமதா யழவப் பொழுது
பாயா றுபடிந் தறுஞா னபரர்
மேயா ரவண்வந் துவினு வினரே. (௬௨)

என்னீ யழுவெய் தியகா ரணமென்
றன்னோர் தெரியச சொலுமா யிழைதான்
மன்னு தரமற் றவிசோ பன்வலிந்
தின்னு புரிவுற் றதையன் றியினும் (௬௩)

அப்பஞ் சுடவோ டளியா தபடி
செப்புங் குயவன் செயவுஞ் செய்தனன்
தப்பின் றெனவோ தினள்சா ளரவாய்
மெய்ப்பொன் றிவிசோ பன்வினு விடவே. (௬௪)

அவனன னதுசெய தலசுபா வமதற
கெவமென் னையெனச் சொலினு னபரர்
தவனன் சுடலா கியசட் டியெனக்
கவனந் தருதம் முதுகே கனல. (௬௫)

உதரக் கனலைப் புறமுய்த் தவராய்
இதனிற் சுடுவா யினிதப் பமென
விதனக் கொடிசுட் டுகிரப் பிவிராய்
அதனைத் தனதண் ணருடன் மிசைவாள். (௬௬)

செய்யுஞ் செயலத் தனையுந் தெரிவான்
மெய்யொன் றுவிசோ பன்வியந் திதெனே
வையந் தனிலிங் கிவர்மா னிடரோ
ஐய மிலைமுத் தொழிலா ரவரே. (௬௭)

இத்தன் மையரா யினரிங் கிவரைச்
சித்தந் தெரியா துநிகைத் துளயான்
நித்தம் பலநிந் தைநவின் றனனே
எத்தன் மையினிற் பிழைதீர் வனெனு. (௬௮)

எண்ணிக் கடிதிங் கிவரைச் சரணம்
பண்ணப் புகுவே னெனவே பதிவாய்
நண்ணத் தெரிஞா னநலக் கடவுள்
உண்ணக் கலனைப் புறமுய்த் தனரே. (சுக)

அதுகண் டவிசோ பன்வலிந் தவருண்
பதுகைப் பிடிபற் றிமிசைந் திடலுங்
கதுவுஞ் செயல்கண் டெருந் தெனநீ
இதுவுண் டனைகே சரியே கெனவே. (எ0)

அங்கன் னதுகூ றவுணர்ந் தவனுந்
தங்கும் மவர்தா ளில்விழுந் துபணிந்
திங்கென் மயல்போ கவிசைத் தருள்வாய்
நன்கொன் றியஞா னசிகா மணியே. (எக)

என்னப் பரிபக் குவமெய் தியவன்
துன்னத் தெரிஞா னசுகோ தயரும்
பன்னத் தருமென் றுபதே சபலன்
றன்னைப் பெறுவித் தனர்தம் மருளால். (எஉ)

(வேறு) இப்படி யிருக்குங் காலத் தினையிலா ஞான தேவர்
ஒப்பில்பண் டரியின் மேவி யுகந்தருள் பாண்டு ரங்கன்
றப்பிலாச் சேவை செய்து தாழ்ந்தபி னுமதேவர்
வைப்பதா மனைக்கு நேரே வரும்பொழு தெதிர்ந்த நாமர் (எங)

கரகம லங்கள் கூப்பிக் காண்மிசை வணங்கி நின்று
தரணியி லெவரை யுந்தாழ்த் தரிக்கவந் தவத ரித்துத்
திரமிகு கின்ற ஞான தேவரே யுமது பாத
தரிசனை கிடைக்க யாஞ்செய் தவமென்ன தவம தாமோ (எச)

என்றனர் புகழக் கேட்டங் கெதிர்வந்த ஞான தேவர்
நன்றுமை நேர்வார் யாரே ஞானத்தாற் சிவன் முத்தி
ஒன்றிய தெனினும் பூவி னுள்ளதீர்த் தங்க ளெல்லாஞ்
சென்றதி லாடி நல்ல க்ஷேத்திரங் காணல் வேண்டும். (எரு)

ஆதலா லும்மோ டேக வமைந்துநான் வந்த திந்தக்
காதலை நீரே தீர்க்கக் கடவதென் றினிது கூற
ஏதமி லுமதேவர் யானென தடீன மல்லேன்
கோதறு பாண்டு ரங்க னதீனத்திற் குலவு கிற்பேன். (எசு)

என்பது கேட்ட ஞான தேவர்நன் றெழிலி வண்ணன்
தன்புடைச் சார்ந்து கேட்கத் தரிலின்று கொள்வே னென்று
அன்பரைக் கூய்க்கொண் டேகி யடைந்தனர் கோயின் மேவிப்
பொன்புகழ் கொழுநன் பாதம் போற்றினர் வணங்கிச் சொல்வார் (எஎ)

அமலனே கமல லோச னபுய லாழி வண்ண
கமலநா பாநின் சேவை கண்டுகொண் டிருக்கு நாம
நிமலரைத் தீர்த்த மாடு நெடுந்தல மெல்லாஞ் சென்று
விமலமாய் வருக வென்றே டெனருள் விடையென் றோத. (எஅ)

கேட்டலும் பாண்டு ரங்கன் கிளர்ந்தெழு ஞான தேவே
வாட்டமி ஞமன் றீர்த்த மருவகற் றலங்க ளான
ஈட்டமெல் லாநா னேயென் றிருக்கின்றா னவனை யுன்பால்
கூட்டிநா னனுப்ப வெண்ணங் கூடிடா தென்செய் கேனே. (௭௯)

ஆயினுந் தீர்த்த மாடற் கவசர முனக்கென் னென்ன
மாயவ னுரைக்கக் கேட்டு வழுவிலா ஞான தேவர்
நீயருள் செய்த நாமர் நிமலரா யிருத்த லாலே
மேயவ ரோடு கூட விருப்புமிக் குளதெ னக்கு. (௮௰)

அன்றியுந் தீர்த்த மாடற் காவலு முளது நாமர்
ஒன்றற வருள்செய் கென்ன வொப்பிலாப் பாண்டு ரங்கன்
நன்றுபொன் னினைவிட்டாலு நாமனை விடுத்தற் கொல்லேன்
நின்றநின் வேண்டு கோளை நிரப்பவும் வேண்ட லாலே. (௮௧)

எனைவிட வேறே யாரு மில்லாத நாம தேவன்
றனைவிடா துடன்கொண் டேகித் தாபின்ன ரென்று கூறி
வினையறு நாம தேவே விடாதெனை யுணர்விற் கொண்டு
வனைபல தீர்த்த மாடி வருகென விடைவ குத்து. (௮௨)

நாமதே வங்கை பற்றி ஞானதே வங்கை தந்தான்
தாமரைக் கண்க ளெல்லாந் ததும்பநீர் பெருகி வாரப்
போமவர்க் கிரங்கி யுள்ளம் பொருமினன் புலம்பி னைந்தான்
ஏமுறு ஞான தேவ ரீசனை வணங்கிப் போற்றி. (௮௩)

சந்திர பாகை யென்னுந் தடநதி சார்ந்து மூழ்கி
வந்துபுண் டலிகர் தம்மை யிருவரும் வணங்கி வாழ்த்த
மைந்துறு நாமர் தம்மை வழிவிடக் கூட வந்த
செந்திரு மகடன் கோமான் றிரும்பினன் கோயில் சேர்ந்தான். (௮௪)

சேர்ந்தவன் கால்க ளெல்லாஞ் செந்துகள் படிந்த மேனி
வார்ந்துறு கண்க ணீரின் மயங்கிட வதனக் கஞ்சம்
சோர்ந்துறு வதனைக் கண்டு துலங்குசெம் பூமேற் கோதை
நேர்ந்திது வென்னே யென்னே நிமலசொல் கெனவி னாவி. (௮௫)

பாததா மரைவி ளக்கப் பாண்டுரங் கன்சொல் கின்றான்
தீதறு குணத்தி னாவி வேறிலை யெனச்சேர்ந் துற்ற
ஏதமில் நாம தேவன் பிரிவெனும் விசிக மென்னைக்
காதலான் மிகவு நொந்து களைத்துளே னென்று கூற. (௮௬)

நாமனா மாரி வேண்டி நலங்கிய பயிரிற் சோர்ந்து
பூமிசை விழுந்து தொண்டர் பொலிவிலா திருத்தல் செய்யா
மாமலர் விழியி னானைத் தேற்றிட மயங்கித் தொண்டர்
தாமவ னுறக்கூய்ச் சொன்னா டாமரை மலர்மேற் செல்வி (௮௭)

நாதனைத் தேற்றச் சொன்ன நலந்தெரிந் தன்ப ரெல்லாம்
சீதள வுபசா ரங்கள் செய்திட்டுத் தேறா நின்ற
மாதவன் றன்னை நோக்கி மாயவா வுனக்கிச் சோர்வு
போதரற் கென்ன வேது புகலுதி யென்று கேட்க. (௮௮)

உதித்தநாட் டொடங்கி யென்னை யொழிவிலன் சேவை செய்து
மதித்துள வன்பி ஞலே பிணித்தனன் மருவு நாமன்
விதித்துள தீர்த்த மாட மேவிஞன் பசிதா கங்கள்
எதிர்த்துள பொழுதேன் செய்வா னெனத்தளர் கின்றே னென்றான். (அசு)

இன்னண மடியார் தேற்ற விருந்தனன் பாண்டு ரங்கன்
நன்னல ஞான தேவ ருடன்செலு நாமதேவர்
பின்னுற நோக்கி நோக்கித் தாய்தனைப் பிரிந்தபிள்ளை
என்னநெக் குருகிப் போற்றி யென்குல தேவே கோவே. (கூ0)

என்னுயிர்க் கிறையே யின்ப ருபமே யெனைப் பிரிந்து
துன்னுகின் றனையோ வென்று சோர்வொடு ஞான தேவர்
பொன்னடிக் கமலந் தாழ்ந்து புனிதமெய்ப் போத மூர்த்தி
நன்னலப் பாண்டு ரங்கன் பிரிவுதா னென்ன லாலே. (கூக)

உயிரெனக் குறுத லாகா துடனந்தப் பாண்டு ரங்கன்
செயிரில்பொற் சேவை தன்னைச் சேவிக்க வேண்டு நீரே
மயர்வறக் காட்டு கென்ன மாயனை மனத்தி னுள்ளே
உயர்வுறக் கொள்வ தல்லா லுளன்கொலோ விங்க னென்றார். (கூஉ)

சாதகப் பறவை மேக தாரையை வேண்டல் போல
நாதனைச் சகுணத் தன்றி நாடலே னென்று நாமர்
ஓதலு ஞான தேவ ருலககா ரணனை வேண்டித்
தீதற வசித்துக் கொண்ட திறலுளீ ரெனக்கன் ஞனே. (கூங)

வசியஞ்செய் வதற்குத் தக்க சாதன மார்க்கந் தன்னை
விசிதமா யுரைசெய் கென்று வேண்டலு நாம தேவர்
சுசிபெறு கற்ப கம்போ யுலோபனைத் தொடர்ந்து வேண்டும்
இசைவென வென்னைக் கேட்டீ ரெனினும்யா னறிந்த மட்டும். (கூச)

உரைசெயக் கேளு மென்ன வுரைக்கின்றார் தனது தேக
வரையிலே வெறுப்பு மற்றச் சரீரங்க ளினில்வி ருப்பும்
புரையறக் கொண்டு நானென் னகந்தையை முழுதும் போக்கித்
தரையிடை யிருந்துஞ் சேராத் தகையனுய்த் திருமா லன்பு. (கூரு)

தொடர்தலே சுத்த மான பசனையத் தொடர்ச்சி யின்றிப்
படர்தலிற் பயனென் ஞரும் பருந்துவா கனன்றன் பாடல்
அடைவுடன் கேட்ட லேசி ரவணமா மவனை நெஞ்சிற்
றிடமுற வமைத்த லேநன் மனனமாந் திருமா லன்றி. (கூசா)

வேறிலை தெய்வ மென்று விரும்பலே தெளிவா நாமம்
கூறுத லொடுபொற் பாதங் கூடலே பேரா நந்தம்
தேறிய விவற்றை யன்றிச் செப்புவ தெல்லாம் பந்தம்
மாறறு ஞான தேவே யென்றடி வணங்கிச் சொன்னார். (கூஎ)

அமுதமென் மாரி போல வவர்சொன்ன வதெலாங் கேட்டுத்
திமிரறு ஞான தேவர் திரிபுவ னங்க ளுள்ளும்
நிமிரரி பத்தி யுள்ளோர் நாமரை நிகர்வ ரில்லை
நமரெனு நாமர் பத்தி நாதனே யறிய வல்லான். (கூஅ)

என்பன பலவும் பேசி யிருவருந் தீர்த்தந் தோறும்
அன்புட னுடு வாரா யத்தின புரியில் வந்த
பின்பரி நாமந் தன்னைப் பேசியே நாம தேவர்
முன்புறக் கண்டோ ரெல்லா மொய்த்தனர் பசனை செய்ய. (கூகூ)

அதுதெரிந் தவ்வூ ராளு மரசனு மவிர்தன் வந்து
கதுவின னென்னே பாடல் கழறெனக் கேட்க நாமர்
மதுவிரி துளப மாலே வாழ்த்துகின் றேனென் றோத
வதையுறு பசுவுக் காவி வரப்புரிந் தனையே யானல். (ள)

நீயரி பசனஞ் செய்த னிசமல தாயி னுன்னை
மாய்வுறு வகையான் செய்வேன் வலிர்தெனு வவிர்தன் கூறி
ஏய்வுறப் பிழைக்கச் செய்தற் கெத்தனை செல்லு நாள்கள்
ஆய்வொடு புகன்று பின்ன ரத்தொழில் புரிக வென்ன. (ளக)

வினவினர் நம்போ லாது விட்டலன் விரைந்துற் றுலும்
தினஞ்சில செல்லு மென்னச் சிந்தைசெய் தவிர்தன் றேற
நனைவிரி தாரோ யுய்ய நாலுநாள் வேண்டு மென்றார்
கனைகழல் வேந்தன் கேட்டுக் கடிமனை யதனுட் சென்றான். (ளஉ)

நரபதி யகன்ற பின்னர் நாமதே வரியை யெண்ணிப்
பரமபா வனகா ருண்ணிய பக்தபா லனப வித்ர
முரகரி முகுந்த மாய முளரிசேர் நாப மாசுந்
தரசநார்த் தனவை குண்ட சௌரிசற் சனத யாள. (ளங)

விடல பாண்டு ரங்க பூமேன் மின்மகிழ் கொழுந வேரி
மடல்விரி துளப வென்று வாழ்த்தினர் நாலு நாளும்
தொடையின்மே லிறந்து போன சுரபிதன் றலையைக் கொண்டு
படர்படு கின்ற வெல்லாந் தெரிந்தனன் பாண்டு ரங்கன். (ளச)

நாலுநாட் பகலி ராவு நயந்துள நாம தேவர்
வாலிய மனத்திற் றேன்றி வருந்தலே பசுவுக் காவி
ஏலவுண் டாகி நிற்ப தெழுந்துபா ரென்று பத்த
பாலனன் பிழைக்கச் செய்த படிகண்டு பரனைப் பார்த்து. (ளரு)

நீயிந்த நாலு நாளாய் நினைவின்றி யெனைம றந்து
போயினை யென்றே வென்னப் புரவலன் றனக்குப் போதே
மாய்வுறு பசுவுக் காவி வரச்செய்வே னெனச்சொல் லாமல்
ஏயினை நாலு நாளென் றியம்பிய வதுபொய் யாமல். (ளசு)

வந்துளே னினியிவ் வாறு வருந்தலே சங்கற் பத்தால்
சந்தத முனத தீனஞ் சார்ந்துள வென்மேற் றப்பு
நிந்தனை சொலவோ ணுது நீமகிழ் கென்று கூறி
இந்திரை கொழுந னேக வெதிர்நின்ற பசுவைப் பார்த்தார் (ளஎ)

எவ்வகை பசுவுக் காவி யீவரென் றவ்வூ ரார்கள்
கைவகை யொழிந்து சொன்ன நரபதிக் குணர்த்த வன்னுன்
கொய்வகை யாற்றுண் டான கோவுயிர் பெறுவ துண்டோ
மெய்வகை காண்போ மென்ன வியந்தனன் விரைந்து வந்தான். (ளஅ)

உயிர்பெற்ற பசுவைக் கண்டோ கோ விவர் தெய்வ மென்னுச்
செயிரில்பொற் சரணந் தாழ்ந்தான் றிரண்டுளோ ரூரா ரோடு
மயலறு நாம தேவர் மாண்புகழ் மிகக்கொண்டாட
நயமிக வரிநா மத்தை நவின்றுகொண் டிருந்தார் பின்னர். (௱௯)

அத்தின புரியை நீங்கி யங்கங்கும ரிநா மத்தைப்
பைத்தபல் பாடை யாலும் பகர்ந்தனர் பாடிக் கொண்டு
சுத்ததீர்த் தங்க ளாடிச் சுரநதி துனிந்தி ராமன்
மெய்த்தகீர்த் தனங்கள் பாடும் விசுவநா தனையும் வேண்டி. (௱௰)

இங்கவளோர் நான்கு காறுஞ் சிறந்தன ரிருக்க வவ்வூர்
தங்குறு கபீரர் வீட்டிற் றனியொரு நாளி ராவில்
அங்கரி தாசர் சேர வவர்க்கன்ன மிடற்கு வேண்டி
நங்கையார் கபீரர் பாரி நண்ணினர் நள்ளி ராவில். (௱௰௧)

ஆவண மெல்லா மின்றி யங்கொரு வணிகன் மட்டு
மேவர விருக்கக் கண்டு மேவிய வரிதன் றாசர்க்
கேய்வன தருதி பின்ன ரீகுவன் விலையென் றோத
நீவளர் காம நீக்க நினைதியே னோர்வே னென்றான். (௱௰௨)

கேட்டவர் மலர்மேன் மங்கை கேள்வனன் குளனென் றெண்ணிக்
கோட்டமில் மனத்தி னோடு குறித்தவ னினைவுக் கேற்ப
நாட்டநல் லுறுதி கூறி வேண்டுவ நல்கப் பெற்று
வீட்டுளோ ரடுதற் கீந்து மீளுவர் பதியை நோக்கி. (௱௰௩)

பின்விலை தருவ னென்று பேசுதல் மறுத்து நீயென்
பொன்விலைக் காக நேர்தி புணர்ச்சியென் பதற்கு நேர்ந்து
முன்விலை யீயா தெல்லாம் வாங்கிட முந்திற் றுதல்
மன்விலைக் காக வேக விடைதரு கெனவ ணங்க. (௱௰௪)

தாசர்நீ யரிதன் றாசர் தம்பொருட் டிவ்வா றெய்த்த
நேசமென் சொல்கே னென்று மகிழ்ந்தனர் நிசியி ராவில்
வீசுறு துளிக ளுள்ளே யுனைக்கொண்டு விடுப்பல் யானே
பேசின வணிகன் றன்பா லென்றனர் பெயர்ந்தார் கொண்டு. (௱௰௫)

தோண்மிசை யினரை நோக்கித் தொண்டருக் குதவி செய்த
மாண்வணி கன்ற னுள்ள மகிழ்வுசெய் தடைதி யென்ன
நீண்மறு கடைந்து செட்டி கடையிடை நிறுவி மீண்டார்
காண்வர விரும்பி நின்ற வணிகன்கண் காண வந்தார். (௱௰௬)

வந்துள கபீர தாசர் மனைவியை வணிகன் கண்டு
முந்துமைப் படியே வந்தா யளறுகால் முகந்தி டாமல்
எந்தவண் ணத்தா லென்று மகிழ்ந்தனன் வினவ வேழைச்
சந்தவார் குழலார் நீசெய் யுதவிக்குத் தளிர்த்தென் னுதர். (௱௰௭)

புயமிசைச் சுமந்து கொண்டு போந்தனர் விடுத்தா ரென்ன
நயமிகு செட்டி யோகோ நன்றுநன் றெனவி யந்து
பயமிகுந் தனுத பித்துப் பரிந்தனன் பற்பல் யோனி
வயமதாய்ப் பிறந்த லைந்து மனிதனு யுதித்தும் வீணே. (௱௰௮)

காமத்தி லழுந்திச் சான்ற கபீரர்த மனைவி யார்க்கு
நோமத்தை யிழைத்தே னந்தோ நுவலரும் பாவி யானேன்
யாமத்தில் வந்த வன்னை தெய்வமே யாகு மென்று
தோமத்தைப் பொறுத்தி தாயே யென்றடி தொழுது வீழ்ந்தான். (௱மகூ)

அன்னைநீ கபீர தாச ரடிமிசை யென்னை வீழ்த்தி
நன்னய வபய நல்க நவிலுதி கொடுபோ யென்று
பின்னரும் வணங்கச் செய்கை பிழையென வுள்ளம்பேர்ந்து
மன்னனு தபித்த போதே பவமெலா மாய்ந்து தீர்ந்த. (௱உ௰)

ஆயினுங் கபீர தாச ரன்புறச் செய்வே னென்று
கூயினர் செட்டி தானுங் குடும்பவன் மயலை நீங்கிப்
போயினன் கூட வில்லம் புகுந்துதா சனைப்ப ணிந்து
மேயின பிழைக ளெல்லாம் பொருத்தருள் விளக்க வென்றான். (௱உக)

தொண்டரும் வணிக னுள்ளந் தெரிந்தனர் தழுவித் தூய
புண்டரீ கக்கை தன்னைத் தலைமிசைப் பொருத்தி நேயம்
கொண்டருள் செய்தார் செட்டி யரிபசனத்திற் கூர்ந்தான்
அண்டிய வன்று தொட்டு நாமதே வனைத்துங் கேட்டார். (௱உஉ)

ஒருகபீ ருண்மை யெல்லா ஞானதே வுணர வோதி
இருவருமவரிருக்கு மில்லிடை வரலு மன்பு
பெருகுறவெதிரே வந்து வணங்கினர் பெரிது போற்றித்
தருதவி சிடையி ருந்து சாற்றுவர் ஞான தேவர். (௱உ௩)

மிகநெடும் பாவ மெல்லாம் விந்திட வுலகத் துள்ளோ
சுகரொடுத் தவர்க ணீவீர் தோன்றினீ ரன்றோ வென்ன
அகமகிழ் கபீரு நாம தேவரு மடிவ ணங்கப்
புகழ்மிகு ஞான தேவர் கபீரரைப் பொருந்த நோக்கி. (௱உச)

புண்டலீ கருக்கு நேயம் பூண்டொரு பாண்டு ரங்கன்
பண்டரி புரத்திற் செங்கன் மிசையடி பதித்து நிற்றல்
கண்டுநீர் வருக வோர்கா லென்றலுங் கபீர தாசர்
விண்டதேன் மதியி லேகா தசித்தின மேவு வேன்யான். (௱உரு)

(வேறு) என்றுக பீரரு மினிதிது கூறிட விருவோருஞ்
சென்றுக யாபிர யாகையி லாடினர் சீராமன்
துன்றிட யோத்திம துரையொடு கோகுல முந்துன்றி
நன்றுறு வாரகை நண்ணினர் மீளுறு நாடன்னில். (௱உசு)

மாமிகு செல்வநி றைந்துவ ளர்ந்துள மார்வாடர்
தாமுறை தேயம டைந்துள போதுறு தாகத்தா
லேமிக வாடின ரிருவரு மோர்கிணி றிற்சென்று
காமுறு நீருண வழியிடை யாதுக ளைக்கின்றார். (௱உஎ)

ஞானந லோர்வரு நாமரை நோக்கினர் நவில்கின்றார்
நானறி வேன்லகி மாவதி னீருண நன்றென்று
மேனவி லுங்கிணற் றூடிழி வுற்றயம் வெய்துண்டு
பானமு வந்துண நீரறி கின்றிலிர் பண்டென்றார். (௱உஅ)

நன்றென நாமர்ந யந்தனர் பண்டரி நாதன்முன்
ஒன்றாக ருத்துட ஞேமது சூதன வோராமா
என்றுமெ னக்கரு ளீசவி ரைந்திவ ணெய்தூற்று
நின்றவெ னக்குறு தாகம தைத்தெறு நீயென்றார். (௱உகூ)

அப்படி நாமர கத்துதி ஊத்துள வப்போது
மெய்ப்புறு பண்டரி நாதன்ம லர்த்திரு மேனூட்டம்
வைப்புறல் செய்துமி னேயொரு நாமனை வாயாமல்
எய்ப்புற லாயின வின்றுது டித்ததி டந்தோரே. (௱௩௰)

என்னவ னுக்கவ ணெய்தின வோவென விடருற்று
மன்னின நாமர்வ ருந்தினர் தாகம தாலன்று
சொன்னசொன் மாறுமு னேயெரி வுற்றெதிர் தோன்றுமுன்
நன்னரு மம்புனல் பொங்கிவ ழிந்தன நாமர்க்கே. (௱௩௧)

வழிபுன லுண்டுமெ கிழ்ந்துள நாமர்தம் வதனங்கண்
டொழியுறு கின்றில னுசமவிட லங்கொளு முஞ்சிர்மை
முழுதல கும்பெறு மென்றுபு கழ்ந்தனர் முதுஞானர்
பொழுதினி மிர்ந்துவ ழிந்துள நீர்பொலி வாயின்றும். (௱௩௨)

நாமர்பொ ருட்டுறு நீர்குடை யத்தனு ணன்மாதம்
தாமதி லெய்துவர் தாரணி யோரது தனைவிட்டு
மாமதி யோரொடு நாமரு மற்றும்வ திந்துள்ள
தோமறு நீர்தொறு மாடினர் வதரிதொ டர்ந்துற்று. (௱௩௩)

பின்சுக நாதம டைந்தனர் கண்ணபி ரானைக்கண்
டின்சுக வாரிது ளைந்தன ரெங்குமெ திர்ந்தாடி
முன்சிறை செய்துள சேதுவ டைந்தனர் மூழ்கிப்பின்
மன்சிவ ராவிடை நாகந லீசனில் வந்தெய்தி. (௱௩௪)

அரிபச னஞ்செய யாவரும் வந்தன ரானந்தம்
புரிபொழு தத்தின பூசனை செய்மறை யோர்போர்து
தெரிவழி யின்றிநி றைந்துள ராகிய சீர்கண்டு
பரிவுற லாகியு ரப்பினர் மற்றவர் பாங்கேக. (௱௩௫)

அன்னவர் சொற்செவி கொண்டில ராயரி நாமத்தைப்
பன்னலு மங்கவர் சூத்திரர் நீயிர்ப ரந்துற்று
மன்னுறு கூக்குரல் செய்வத டாதெமை மண்டுற்றுத்
துன்னினர் தீண்டினிர் போமினெ னப்பல வுஞ்சொன்னார். (௱௩௬)

கோயிலி லேதொட லாலொரு தீதிலை கொள்கென்று
வாயிலு ளோர்சொல மறையவர்நாமர்முன் வந்தெய்தி
நீயிர்பி னேசெலு மென்றுநி கழ்த்திட நின்றாரோ.
டாயினர் பின்புற நின்றரி நாமம தேசொல்ல. (௱௩௭)

இன்புட னுடினர் யாவரு முவணணி ருக்கின்ற
ஒன்பதி லக்கப தாகையி ழிந்தன வோர்மாயன்
அன்புறு மேலுல குற்றவை யோடிவ ரானந்தப்
பொன்புனை மார்பனை மெம்புகழ் போற்றுத லைக்கண்டு. (௱௩௮)

பூமழை பெய்தனர் வானவர் கண்டவர் பொற்பெய்த
நாமரெ னக்கொரு நாதனி சைந்துள நாளெல்லாந்
தீமறு வேதமு ழுதருள் செய்து சிறப்பின்றி
ஈமநா டேசன்மு னின்றுபி னெய்தவி சைத்தென்னே. (௱௩௯)

பாடவி டுத்தன னென்றுப ரிந்தனர் பண்பாக
நாடரி நன்குந யப்புற வவ்விடை நாகேசன்
பீடமர் கோயின்மு கம்பிற சேயுறு பெட்போடு
நீடவெ திர்ந்துதி ரும்பின னாமர்மு னேராக. (௱௪௰)

குடதிசை யாகிவி ளங்கின சந்நிதி கோயிற்குள்
நடநவி னாமரை நன்குவி யந்துந வச்செய்கை
தொடர்வுறல் கண்டுதொ ழுருள சற்சனர் சூழ்வுற்றுத்
திடமுட னேபுகழ் கின்றன ராசைதி டுக்கென்ன. (௱௪௧)

மடமையி னான்விழை கின்றன யாவும்வ குக்கின்றான்
விடலரும் விட்டல னெனமகிழ் வாய்வி டியுங்காறுந்
திடமுடனேனெடு மாலைநெ டுந்துதி செய்துற்றார்
விடிபொழு தீசனை வழிபடு வேதியர் வெளிவந்தார். (௱௪௨)

வந்தவர் சூரியன் மேன்முக மாகவும் வருவானோ
நந்துயி லின்மைம யக்குவ தோமதி நாமர்க்காய்
மந்திர மேதிரி வாகிய தோவென மாலுற்று
முந்துறு நாலுதி சைக்கணு மேவுற முகம்வைத்தார். (௱௪௩)

மின்மய வொன்பதி லக்கநெ டுங்கொடி மேற்றோன்றி
இன்மைய வாயின கண்டுவி யந்துமு னெல்லோரும்
நன்மைய நாமரை நான்முக னாலுந யந்தோதுந்
தன்மைய தன்றென வஞ்சிய னாரடி தாழ்வுற்றே. (௱௪௪)

யாங்கள்பி ழைத்தவெ லாங்கமை செய்கென வேநாமர்
பாங்கின வர்க்குப சாரந லம்பல வுஞ்செய்தே
ஓங்கிய வந்தன முஞ்செய்து பின்விடை யுங்கொண்டார்
நீங்கறு நாகந னாதனை வேண்டினர் சென்றாரே. (௱

தாயைநி னைந்துறு கன்றென வேயிரு வோர்தாமும்
மேயினர் பண்டரி கோபுர மேன்முடி மேவக்கண்
டேயவன் வந்தனை செய்தொரு கோயின்மு னேயெய்தி
மாயனை யேபுகழ் செய்துத மாகம நந்தங்கே. (௱௪௬)

விழுமொரு நாமனை ஞானந லோர்தெளி மேவத்தாம்
தழுவின ராயரி தன்னிட மேகொடு தாம்வந்தார்
நழுவலி லாதந லன்புமி குந்துந யந்தேற
வழுவறு நாமர்வ ணங்கினர் பண்டரி மாறன்னை. (௱௪௭)

பண்டரி நாதனை முந்தெதிர் வந்துறு பரிவோடே
தொண்டரை நன்றுத ழீஇன னாமர்தொ ழுந்தோறும்
புண்டரி கம்பொரு வும்பத மீதுபொ ழிந்தார்கண்
மண்டிய நீரோடு நின்பிரி வினிவர வையாதி. (௱௪௮)

என்றவ ரைத்திரு மால்பிரி வுற்றனை யிதுகாறும்
இன்றிர வும்பக லுந்துயி லெற்கரு ரேசாலத்
துன்றிய துன்னையெ திர்ந்தபி னஃதுதொ லைந்துற்ற
நன்றினி நாமவே னைப்பிரி யாதிவ ணென்னென்றான். (௩சகூ)

தன்கள மீதுத யங்கிய தண்டுள வந்தன்னை
நன்கவர் தோளில ணிந்தவர் கண்ணின னீர்மாற்றி
மின்கவி னுங்கைக ளாலவர் மேனியின் மேனீவி
மன்கரு ணாய னத்தருள் மேன்மிக வைத்தான். (௩ருo)

வீறுநி வர்த்திர லோர்பின ரோடுவி சோபாவும்
கூடிய பண்டரி நாதன்வி ளங்குறு கோயிற்குள்
தேறிய நாமரி டம்புரி செய்கைதெ ரிந்தாதி
மாறனை யேத்தினர் நாமரை வந்தும தித்தாரே. (௩ருக)

ஆகிய காலையு ருக்கும ணித்திரு வாலாத்தி
வாகுட னேகொடு வந்துசு ழற்றினள் நாமர்க்கு
நாகர்பொ ழிந்தனர் பூமழை நன்மைந வின்றார்மைம்
மேகநி றத்தின னுமரை நோக்கிவி ளம்புற்றான் (௩ருஉ)

ஆடினை தீர்த்தம தற்கிறு வாகிய் தைச்செய்ய
நாடுதி யென்றனு நாமரு நன்றென நாதன்றான்
ஏடுறு தாமரை யாளிட நாமரை யின்பாகப்
பீடுட னேகொடு சென்றவ ளோடிது பேசுற்றான். (௩ருங)

நாமனி யற்றிய யாத்திரை நல்விர தந்தன்னை
ஏமுற முற்றிட னன்றென விந்திரை யெங்கோனே
தூமன னாகியெ லாமற விட்டுனை யேசூழ்ந்து
காமுறு வோனெது செய்குவ னீயது காவென்றே. (௩ருச)

மாமறை வேதியர் வந்துண வேசொலி மற்றெல்லாம்
ஆமள வாகவ மைத்தியெ னத்திரு மாலானோன்
நாமர டிப்பொடி நண்ணிட முன்னவர் நன்றாகப்
போமதி யற்றியொர் வேதிய னைப்பினர் போகின்றான். (௩ருரு)

சந்திர பாகைநெ டுங்கரை மீதுத யங்குற்ற
மந்திர வேதியர் தம்புடை வந்துவ ணங்குற்றான்
அந்தநல் வேதிய ரென்னென நாமர்க ணன்புள்ளேன்
வந்தவ னந்தனி யானென வந்தது ரைக்கின்றான். (௩ருசு)

இந்தந னுமனி யற்றுறு போசன மெல்லோரும்
வந்துண வேண்டுமெ னச்சொல வம்மறை யோர்யாரும்
முந்துவ மென்னமு குந்தன டைந்தனன் மொய்கோயில்
இந்திரை கண்டனள் சித்திக ளெட்டையு மேய்கென்றாள். (௩ருஎ)

வந்துள சித்திக ளெட்டும்வ ணங்கிவ ழாதொன்று
தந்தன யாவும மைந்தன பின்புந னுமர்க்கு
முந்தின மங்கள நானமு டிந்தபின் மொழிகின்ற
மந்திர மோதினர் வரிசைவ ழங்கினர் மலர்மின்னார். (௩ருஅ)

பூடண மாடைசு கந்தமு டன்புனை பூவோடு
சூடுதல் செய்தனன் மால்பொறி நாமர்து லங்கக்கண்
டாடின திட்டிக ழிந்திட வேயரு ளாலாத்தி
நீடவெ டுத்தலு நாமர்த மைத்தழீஇ நின்றுன்மால். (௱௫௯)

ஞானந லோரொடு நால்வரு மற்றுள நல்லோரும்
தீனத யாநிதி செய்வகை கண்டுசி றந்தோங்க
லானந ஞமரை நும்மென யாருள ரரிபத்தர்
ஊனமி லீரென வோதிமி கப்புகழ் வுற்றுரே (௱௬௰)

வேதிய ஞகிய மால்பினர் வேதிய ரெல்லாருஞ்
சேர்தர லாகவ ழைத்தொளிர் கின்றசெ ழும்பீடத்
தாதர வாகநி றுத்திய லங்கிர்த மாகச்சேர்
பாதம்வி ளக்கியோர் பூசனை யுந்தனி பாலித்து. (௱௬௧)

பதமுறு நீர்பரு கிப்பொலன் மிக்கொளிர் பட்டாலே
இதமுட னன்குது டைத்துந லாசன மேறச்செய்
ததிமது ரஞ்செறி முக்கனி சர்க்கரை யப்பஞ்சேர்
விதவித வர்க்கமி கச்சுவை யின்கறி மேன்மேலும் (௱௬௨)

நெய்தயிர் பானிமி ரச்செறி போனக நிறைவெல்லாம்
கைதவி ராதுப டைத்தவ ருண்பது கண்டார்வம்
பெய்தர நாமர்சங் கற்பச லந்தனி பெய்யச்செய்
தைதவர் யாவரு மமுதுசெய் திடும்வகை யைச்செய்தான். (௱௬௩)

அந்தணர் யாவரு மமுதுசெய் தானபி னவர்கட்குச்
சந்தன கந்தசு கந்தவி தத்தொடு தாம்பூலத்
தெந்தவி தங்களு முதவிய பின்னவ ரெல்லோரு.
முந்தம ரச்செய்து நீவிர்கள் காணநும் முன்னேயான். (௱௬௪)

அமுதுசெய் துதவுவ றக்கணை யென்றுபி னலர்மங்கை
தமியுத வோதன மிசையவி ருந்தொரு தன்னுமன்
நிமிர்சுவை யோதன முடனுண வெங்கென நேடித்தான்
அமர்திரு வாயிலில் வந்தவ சந்தனை யறிவுற்றே. (௱௬௫)

தூக்கினன் வந்திடு தவிசிடை யேயவர் தொகவைத்து
நீக்கவி ளைப்பினை யவரது கண்டழ நெடுமாலும்
போக்கறு வீரமு துண்கென நன்குபு கன்றுனுய்
ஆக்கிய நல்லமு தூட்டினன் வாயிடை யப்போது (௱௬௬)

என்னெரு நாமநீ யேனழு கின்றனை யென்றுனை
நன்னய மாகவ வன்பத மேற்றலை நண்ணச்செய்
தன்னபொ லன்கழல் பற்றியெ ஞதநின் னருளென்றுந்
துன்னுபி றப்பிடை தோறும மைக்கதொ டர்ந்தென்றுர் (௱௬௭)

மாலது கேட்டும கிழ்ந்துனை யென்றுமறக் கேனென்
றேலவு ரைத்தமு தூட்டிட நாமரு மின்பானுர்
சாலமி சைந்தக லத்திடை யமுதொரு தானுண்டான்
கோலவி ருந்தபி ராமணர் கண்டிது கூறுற்றுர் (௱௬௮)

சூத்திர னுண்டக லத்திடை வேதிய னுஞ்சோறு
வாய்த்திட வுண்பது வுந்தக வோவிவன் மறையோனே
ஈத்துள சோறினி துண்டிழி வுற்றனம் யாமின்று
நேர்த்துள தோஷநி வர்த்தியெ னையென நினைவுற்றார் (௫௬௯)

மிச்சினு கர்ந்தபி ராமனொரு நாமமறை மேவக்கொண்
டச்சுத னுமமு ரைத்தமர் வேதிய ரருகுற்று
மெய்ச்சவர் காலிடை யிட்டுள தக்கணை மேன்மேலும்
வைச்சினி நீவுழி யென்முகம் வாட்டம்வ குக்கென்றான் (௫௭௰)

வேதிய னாகிய நீயொரு சூத்திரன் மிச்சிற்குச்
சாதக னாயின தென்னையி ழிந்தனி தருகின்ற
ஓதன முண்டவெ மக்கற நீர்வகை யுண்டோவென்
றேதம டைந்தன மென்றனர் வேதிய ரெல்லோரும் (௫௭௧)

பொய்கள வோடுபொ ருந்திய கட்குடி புன்காமம்
செய்கொலை செய்பவன் யாரெனி னுந்திரு மானமம்
பெய்தரு வாயின னேலவன் மிச்சில்கள் பெரிதன்றோ
எய்துவ தென்றினி துண்டன னென்றன னெனமமான் (௫௭௨)

வேதியர் செய்கையெ லாமற விட்டொரு மால்நாமம்
ஓதுவ னேலவன் மிச்சிலை யுண்பது வோர்ந்தம்
தீர்ந்து செய்தனை நீர்வகை சந்திர பாகைக்குப்
போதுக வென்றனர் வேதியர் மாலரி புகல்கின்றான் (௫௭௩)

சித்தந லஞ்செறி சுத்தம தாகித் திகழ்வைரா
கத்தொடு சற்சங் கத்[illegible] கூடிக் கவிஞர்மால்
பத்தியி னுமம் பகர்வுறின் முன்சேர் பவமெல்லாம்
மொய்த்துள தீதெல் லாமற மூழ்கு முதனுனம் (௫௭௪)

ஆதலி னீரே யறிஞர்கள் சொல்லு மவையெல்லாந்
தீதற யானே செய்யவ குக்குந் திறனென்னாப்
போதுக வென்று நாமர்கை பற்றிப் போதந்தான்
வேதியர் சொன்ன வகைநதி மூழ்கி யிதிசெய்தான் (௫௭௫)

பின்னரை பீதாம் பரமது டுத்திப் பெரிதார்வந்
துன்னவை வர்க்குத் தானம ளித்தான் சொனவாறே
நன்னரெ னக்குச் சுத்தம்வி ளங்க நனிசெய்தீர்
என்னவ ணங்கி நல்விடை பெற்று னினிதாக (௫௭௬)

அன்பரு டன்கோ யிற்குள டைந்தங் கவரோடும்
இன்பொட ருந்திப் பின்னிடை யன்பர்க் கினிதிந்தான்
முன்பொரு நார தன்கர வீணை முறைசாலப்
பொன்பத மீதிற் கும்பிடல் செய்து புகழ்கின்றான். (௫௭௭)

அன்னவ னுக்குத் தன்கள மாலை யதைநல்கித்
தன்னக லத்துப் பொன்மணி மேவத் தழுவுற்றான்
முன்னிய பாமை தன்னிடம் வீணை முனிமேவத்
தணங்கித் தவிசிலி ருத்திச் சொலுகின்றாள். (௫௭௮)

ஆவ்வவ ரெந்தச் சாதிய ரேனு மதுதேரா
இவ்விட லன்றன தன்பர்க ளெச்சிற் கேக்குற்றுச்
செய்வகை நன்றோ செப்புதி யென்னத் திகழ்வீணை
வவ்விய கையோன் பாமையை நோக்கி வகைசொல்வான். (ராஎகூ)

கோமள மின்னே நின்றிரு மாணிர்க் குணனுகி
நாமமு மின்றி நல்லுரு வின்றி நவையின்றிப்
பூமியி னுள்ளோ ருய்வகை ரூபம் பொலிவுற்றே
ஆமனு யிர்க்கன் பெய்திட விவ்வா றயர்கின்றுன். (ராஅய)

ஆகலி னன்னு னுக்கொரு தோடமு மடைவுண்டோ
நீகரு தென்றே போயின பின்பந் நெடுமால்பால்
பாகன சொற்பொன் னெச்சில ருந்தல் படிதானே
யோகமு றென்ன மாயன தற்கங் குரைசெய்வான். (ராஅக)

தந்தையு டன்றாய் குருமனை மக்க டமரெல்லா
நிந்தையி லன்பா லல்லது வேறோர் நிலையில்லை
செந்திரு வேயங் கவர்கள்பொ ருட்டே செறிகின்றேன்
மைந்துற வென்சீர் வரவவி தறியார் மகியாரே. (ராஅஉ)

இகபரம் வேண்டா ரெனையல தன்ப ரிதனாலே
அகமகிழ் வுற்றே யவர்பெயர் சொல்வே னதுவன்றித்
தகவவ ருருவுஞ் சிந்தனை செய்வே னவர்சாற்றச்
தொகுபணி யுஞ்செய் வேனிது வேயென் றுணிவென்றான். (ராஅங)

(வேறு) இப்படித் திருமால் பொன்னோ டியம்புறு பொழுதிற் பானு
தப்பற வுதய மாகச் சார்ந்தனர் தொண்டரெல்லாம்
பொற்புறு கோயிற் குள்ளே புகுந்தரி பசனை செய்து
சிற்பரன் பதம்வ ணங்கத் திருநெடு மாலுங் கண்டு. (ராஅச)

அன்னவர் தமைப்பக் கத்தே யமர்தரச் செய்து பொன்னே
நென்னல்யான் ரோஷந் திர்க்க நிற்புழி நேர்ந்து கொண்டேன்
நன்னயத் தின்று மன்ன நான்மறை யவருக் கெல்லாம்
இன்னமு திடுவே னென்ன வாதலா லியற்றல் வேண்டும். (ராஅரு)

என்றவன் றன்னை நோக்கி யிந்திரை யிசைந்து சொல்ல
நன்றென மறையோர் தம்பா னணுகிவே தியரே நீவிர்
இன்றுமுண் பதற்கு நேர்வீ ரென்னவு மறையோ ரெல்லாம்
துன்றுது மென்றார் நாதன் கோயில்போய்த் துன்னி னனே. (ராஅசா)

அந்தணர் தீர்த்தமாடி யடைந்தனர் கோயிற் கப்போ
திந்திரை கொழுநன் பார்ப்பா னெனச்சென்று தொழுது கூட்டி
வந்துபொற் பீடத் தேற்றி மலரடி கழுவு நீர்கொண்
டுய்ந்தன னென்று கூறி முறைமுறை யுபச ரித்தான். (ராஅஎ)

அறுசுவைக் கறியோ டின்சோ றடைவுட னமுது செய்ய
மறுவறச் செய்துண் போது மாலரி நாமந் தன்னைப்
பெறுமொரு பிடிசோற் றுக்கும் பேசுக வெனவு மன்னோர்
உறுதொறுஞ் சொல்லி யுண்டா ருண்டபின் சுத்தஞ் செய்து. (ராஅஅ)

சந்தன கந்தத் தோடு தாம்பூல முதல பெற்று
விந்தையோ டிருக்க நாதன் வேதியர் தம்மை நோக்கி
அந்தணீர் சுதின மின்று மானதா லுமைச்சே வித்தேன்
உய்ந்தனென் பேரா நந்தக் கடலிடை முழுகி யுற்றேன். (௱அகூ)

ஆதலா லடிய ரோடிங் கியானுனு மளவு நீவிர்
ஏதமின் றிருக்க வேண்டு மென்றடி யார்க ளுக்குப்
பாதபூ சனைகள் செய்யப் பரிந்தனர் கண்ட நாமர்
நாதனே யெமைப்பூ சித்த னல்லதோ வென்ன நக்கான். (௱கூ௰)

எனக்குமை யன்றி வேறே பெருமையின் றெனவி யம்ப
மனக்களிப் புற்றுத் தொண்டர் மருவியுண் பொழுது மாயோன்
வனக்கரத் தூட்ட வெச்சில் தெறித்திட மடியின் மாற்றி
உனற்கரு மடிய ரெல்லா முணப்பினு மூட்டி னனே. (௱கூக)

சிலர்க்குப சரித்த லெச்சில் தெறித்திடிற் றுடைத்தல் செய்து
பலர்க்குமங் குபசரிக்கும் பரமனைப் பார்த்துப் பார்ப்பார்
நலத்தகு சயிட்டி கத்தை நண்ணுவோன் றானு மல்லன்
வெலத்தகு தவவி ராக மேவினோன் றானு மல்லன். (௱கூஉ)

மறையவன் றானு மல்ல னெனச்சிலர் வகுக்கச் சில்லோர்
நிறைபரம் பொருளே யாகி நேர்தரு விட்டோ பாத்தான்
குறைவிலா வடியர்க் காகக் கொண்டுநன் மனித வேடம்
முறைமுறை தொண்டு செய்து முயல்கின்ற விவன்மற் றென்ன. (௱கூ௩

பகர்கின்ற வதனைக் கேட்டுப் பண்டரி நாதன் மிக்க
நகைகொண்டு மிளிர்கி ரீட நலங்கொள்கு ண்டலங்க ளன்கு
புகர்கொண்ட தோள்க ளைந்து பொருபடை பொன் பூண்மார்பு
முகமின்னப் பொன்னி றுடை முயங்குறப் பொலிந்துநின்றான். (௱கூச

நின்றவவ் வடிவை நோக்கி நிறைமறை யவரோ டன்பர்
துன்றிய மகிழ்ச்சி கூர்ந்து தொழுதுகூத் தாடலானார்
அன்றரி யவரை நோக்கி யகிலபிர பஞ்சமாயை
வென்றுதே காபி மானம் விடுத்தெனை யேய டைந்தார். (௱கூரு

அன்பெனுங் கயிற்றிற் கட்ட லானநா னவர தீனம்
என்பதை யன்றி வேறே யிலையென மறையோ ரெல்லாம்
பன்பல வேத மெல்லாம் பதிதபா வனனென் றுன்னை
இன்புட னுரைப்ப தெங்க ளிடத்தின்று விளங்கிற் றென்றார். (௱கூசா

பரமபா வனவின் றுன்னைப் பார்த்தது போல நேகம்
தரமுட லெடுத்த போதுந் தயங்கயாம் பார்த்தல் வேண்டும்
திரமுற நினது நாமஞ் செப்பவும் வேண்டு மிந்த
வரமருள் கென்ற வந்த மறையவர் தம்மை நோக்கி. (௱கூஎ

சிரித்தருள் செய்தன் னுரைச் சேர்த்துமார் பழுந்தப் புல்லித்
திருத்திய ஞானதேவர் சேவடி யடைந்து நீவிர்
பரித்திர் மெய்ஞ் ஞான மென்று பகர்ந்தனன் பகரக் கேட்டோர்
விரித்தது புரிது மென்று வணங்கினர் மீண்டு மீண்டும். (௱கூஅ

ஞானதே வேநீ ரிந்த நான்மறை யவர்கட் கெல்லாம்
ஊனமி லுபதே சஞ்செய் தருளுக வெனவு ரைத்தான்
சானகி ரமணன் ஞான தேவருந் தாள்வ ணங்கி
ஈனமில் சொரூப சாக்ஷாத் காரத்தை யெல்லோ ருக்கும். (௱௯௯)

இதவுப தேச மாக வியம்பினர் தலைமேற் கைவைத்
துதவிய பொழுதெல் லோரு முற்றன ரக்ஷ யத்தை
நிதமரி பசனை செய்து நிருமலன் றனைச்சே வித்து
நுதலிய தடைநீ ரென்று நுவன்றனர் ஞானதேவர். (௨௱)

சிறிதுநாட் சென்ற பின்பு சீர்கொள்விட் டலன்பாற் சென்று
நெறிதரு மவன்றன் பாத நேர்நின்று வணங்கித் தேவா
அறிவுற வெனக்குத் தஞ்ச மாகநற் சமாதி நல்கென்
றுறிதிகொ டுரைப்பக் கேட்டங் குணர்ந்துவிட் டலன்சொல் வானால் (௨௱௧)

எனக்கரும் பிராண னாகி யிருக்கின்ற ஞான தேவா
உனக்குவேண் டியதை யானே யுதவுகின் றேனென் றோதி
மனக்கித மாக மிக்க மங்கல சுபதினத்தில்.
தனைத்தொழுந் தாச ரெல்லாஞ் சார்ந்திட வரவ ழைத்து. (௨௱௨)

கீர்த்தனம் பலவும் பாடக் கிளர்திரு விழாவுண் டாக்கிச்
சீர்த்தநல் லுண்டி யாதி செயுஞ்சிறப் பெல்லாஞ் செய்து
தீர்த்தரா கியசா துக்கள் சேர்வுறீஇ ஞான தேவர்ப்
போர்த்தினி தாகச் சூழ்ந்து போந்திடத் தானும் போந்து. (௨௱௩)

இந்திரா யணிக்கூ லத்தி லியலளிந் தியெனு மூரில்
வந்துசித் தேசு ரன்றன் வளர்திருக் கோயின் மாடு
பைந்துண ராரஜாநு பாதவத் தடியி னின்று
செந்திரு நாதன் யார்க்குந் தெரிவுறச் செப்பு கின்றான். (௨௱௪)

கார்த்திகைத் திங்கண் மேவுங் கண்ணப க்ஷத்தி லோங்குஞ்
சீர்த்திசே ரன்றி னத்திற் சேர்வன்யான் வருடந் தோறும்
தீர்த்தமா மிங்கென் றோதத் தெரிந்துள சனக ராதி
மூர்த்தியா முனிவ ரோடு முந்தரி தாசர் சூழ்ந்து. (௨௱௫)

ஹரிதிரு நாம கோஷ மார்த்திட வாத்தி யங்கள்
புரிவுற முழங்கத் தேவர் பூமழை பொழியக் கண்ணன்
திரிபிலா துணர்ந்த ஞான தேவர்க்குச் சமாதி தந்து
பரிவினு ளங் குற்றுப் பண்டரி புரத்தைச் சார்ந்தான் (௨௱௬)

சிற்சில நாள்க ளங்குச் சென்றபி னாமதேவர்
பொற்புறு ஞான தேவர் பொருந்தரும் பிரிவி னாலே
அற்பக லனுத பித்தா ராகிய செயலைத் தேர்ந்து
விற்பொரு விமானத்தேறி மேவினர் ஞான தேவர். (௨௱௭)

வந்துவிட் டலனை நேரே வணங்கிப்பின் னாமதேவர்
முந்ததி சயிப்பக் கண்டு மொழிந்தவர் மனவ ருத்தம்
பிந்துறப் புரிந்தங் காறு பெறுமதி யிருந்து போந்தார்
அந்தமில் லவரைத் தியானிப் பவர்களுக் கருள்செய் துற்றார். (௨௱௮)

இவ்வித நிவிர்த்தி தேவர்க் கினிதுதிரி யம்ப கத்துஞ்
செவ்விய வியற்சோ பான தேவர்க்குத் தகுதி யாக
ஒவ்வுசம் வச்ச ரத்து மூவந்திடச் சமாதி தந்தான்
திவ்விய நலஞ்செய் பாண்டு ரங்கனுந் தீர்த்தன் மாதோ. (உ௱௬)

ஞானதேவர் திருவடிகளேசரணம்.

ஆக சரித்திரம் ௬-க்கு செய்யுள் அ௱௩௰௬.

முற்றிற்று.



# கூர்மதாசர்சரித்திரம்.

சூரியன்றனித் தேர்விடு தொன்மையர்
நேரில் மாலரி நாமநி னைப்பினர்
ஏரி லேய்பிர திட்டான மென்பதோர்
ஊரில் வேதியர் சாதியி லுற்றனர். (௧)

ஏர்கொள் கால்களி லாமற் பிறந்தவர்
கூர்ம தாசரெ னப்பெயர் கொண்டிடச்
சார்வ தாகியத் தாய்தந்தை தம்வயிற்
சீர்சி றந்திடச் செல்வர் வளர்ந்தனர். (௨)

சீர்த்த தானவவ் வூரிற் சிறந்தரி
கீர்த்த னங்கள் கிளத்துகின் றோர்வயின்
ஊர்த்த டைந்தன ருத்தம நாமத்தி
லார்த்த வன்பின ராகி யனுதினம். (௩)

கேட்டு வந்தனர் கேட்பதிற் பண்டரி
நாட்டு மான்மிய முந்நவில் வோர்களால்
ஈட்டு மின்பத் தமுந்தி யிருகரம்
கூட்டிக் கும்பிட்டுக் கூறத் தொடங்கினார். (௪)

தொடர்வின் விட்டலன் மெய்ப்புகழ் சொல்லுவீர்
முடவன் பண்டரி போக முடியுமோ
கடவ தென்னெனக் காருத்தன் குருசர்கள்
திடமெ லாமுளேம் யாங்கள்செல் கின்றிலம் (௫)

நீசெ லற்கெங்ங னேருமென் றேநகை
தெசு றப்புரிந் தாரது தேர்ந்தவர்
மாச றுத்தொளிர் மாதவன் பண்டரி
நேச மிக்கது நேர்வதின் றேயெனு. (௬)

அனுத பித்தங் ககன்றனர் சின்னெறி
நனிந கழ்ந்துந லந்திகழ் மாருதி
சினக ரத்துத் தெறும்பசி தாகத்தால்
மனமி ளைத்துவ ருந்திவி ழுந்தனர். (௭)

சிவ ரட்சக னேதிகழ் பண்டரி
மேவு முத்தம னேயினி வேறிலர்
காவல் செய்பவர் நீகளை கண்ணதாய்
ஆவல் கொண்டெனை யாண்டிட வேண்டுமே. (௮)

என்று தோத்திரஞ் செய்தன ரோத்தலும்
நன்று பண்டரி நாதன யந்தனன்
ஒன்று வேதியனுகியங் குற்றனன்
நின்று நீரொங்கு நேருதி ரொன்றனன். (௯)

பண்ட ரிக்குப் படரும் கருத்துளேன்
அண்டி னேனென வன்னவர் கூறலும்
கொண்டல் வண்ணனுங் கூடி னதுதுணை
மண்டெ னக்கென மாமகிழ் கொண்டனன். (௰)

எய்துங் காலில னுகிய வென்றுணை
நொய்து மற்று நுமக்கிய லாததே
ஐது நும்பெய ரேதுரை யீரென
வெய்தில் விட்டல னென்பெய ரென்றனன். (௰௧)

இன்னும் பண்டரி யிற்கடை வைத்துளேன்
துன்னு கின்றன னங்குத் தொடர்ந்துமை
நன்னர் மெல்ல நடப்பவன் யானென
மன்னு கூரும தாசர் மகிழ்ந்தனர். (௰௨)

அட்டுப் போனக மன்பினீ ருண்டிட
இட்டுப் பண்டரி யெய்து மளவுநான்
முட்டில் லாமலி யற்றி முயங்கிடம்
கிட்டு வேன்முந்தி யென்று கிளத்தினன் (௰௩)

அன்றி ராவவ ரோடு மமர்ந்துகீழ்
என்று தோன்றுமு னேயெழுந் தேகுநீர்
துன்றி டும்வழி யீதெனச் சொல்லியே
சென்று சேரச்செய் தேமறை வாயினன் (௰௪)

தாசர் தாமுந் தவழ்ந்தொரு தங்கிடம்
தேசு றுங்கதிர் பாடுறச் சென்றனர்
நேச ஞானநி மலனு மவ்விடத்
தேசி றந்துவந் தின்னமு தூட்டினான். (௰௫)

வாவி சேரி வசதியில் லாவிடம்
மேவி லங்கவர் மேவவு மைத்துடன்
தாவி லாமதி நான்கு தவழ்ந்தவர்
ஆவ லோடு லகுளை யண்மினர். (௰௬)

அன்று கார்த்திகை யான தசமியாய்
நன்று நாளை யேகாதசி நண்ணிடச்
சென்று சேருவர் செல்லுவோர் பண்டரி
என்றி யான்செல்வ தென்றுளத் தேங்கினர். (௰௭)

கண்ணனே முகில் போலுங் கருநிற
வண்ணனே பொன் மகிழுங் கொழுநனே
எண்ண னேரு மிறைய வனேயுனை
நண்ண கிற்கில னுளையு நானரோ. (௰௮)

என்செய் கேனென் றிருகரங் கூப்பியே
முன்செ றிந்தவர் தம்முன் மொழிந்தனர்
பொன்சி றந்த புகர்நிறத் தெம்பிரான்
தன்சி லம்படி காணுந்தகவிலேன் (௰௯)

ஆத லாலிவ் வறுதன் மிசைத்தயை
மாத வன்செய்திங் கேனும்வந் தன்புடன்
தீதில் சேவை தரும்படி செப்புவீர்
போது வீரென நன்றென்று போயினர் (௨௰)

ஞான தேவர் முதலிய நால்வரோ
டான நாமரு மந்தவி சோபரும்
கான மோடரி நாமங் கழறியே
ஏனை யன்பர்க ளோடினிதாடினர் (௨௧)

பாண்டு ரங்க னவர்தமைப் பார்த்தருள்
ஈண்ட வேயெனக் கின்னுயி ராமிந்த
மாண்ட ஞானநன் மாதவர் முன்னவர்
பூண்ட தானவி ராகப் பொருப்ப்ரோ (௨௨)

ஆன்ம போதக ராயருள் கின்றசோ
பான தேவர்வி சோபர்பண் பாகிய
ஞான யோகிய ரானநல் லன்பரோ
ஊன மில்லவ ரென்னவு ணர்த்தினன் (௨௩)

எனது நாமஞ்சொல் வோர்களி லேமிகு
கனமு லாவிய காரண நாமர்க்கு
நனிநல் லன்புட னும நவில்வதால்
இனிது நாமதே வென்னத் தகுமென (௨௪)

அவனை மார்போட ணைத்துக்கொண் டானந்தம்
இவரு போது லகுளை யிருந்துமா
தவனன் ளுமத்தை சாற்றிக்கொண் டேமிக
நவநல் லன்பர்கள் நண்ணினர் கோயிற்கே (உரு)

வந்து மாதவன் பாதம்வ ணங்கினார்
சிந்தை யன்புமி கச்சிறந் தேத்தினார்
முந்து கூர்மர் மொழிந்ததை யெம்பிரான்
விந்தை கூர விளம்பினர் வேண்டினார் (உசு)

வினவி மாதவன் மிக்க விரைவுடன்
தனது பானின்ற தண்ணளி நாமனை
அனக ஞானநல் லோனைமிக் கன்பொடு
நனிவி ரும்பினன் நோக்கி நவில்கின்றான் (உஎ)

கூர்ம தாசன் குறித்தெனைக் காணவே
ஆர்வ மிக்குள ளுதலி னீவிரும்
வாரு மென்றுட னேகொடு மன்னினன்
சாரு நாமர் தமைவிளை யாடவே (உஅ)

எண்ணி யவ்வழி யவ்விரு வோரையுங்
கண்ணி யொன்று கழறுகின் றான்மறை
நண்ணி நாளு நடங்கிளர் கின்றதாள்
மண்ணின் மீது வரவலி தாகவே. (உகூ)

மிக்க தாக விரும்பினன் யான்புனல்
புக்க துண்டு வருமள வும்புகுந்
திக்கடைக்க ணிருத்தி ரெனச்சொலித்
தொக்க தோர்கொடிப் பாதையிற் றுன்னினான் (௩0)

சாவந் தியாமேள தாச ரரிபெயர்
ஓவதின்றி யுரைத்துக்கண் மூடியே
மேவு மெய்யவ சத்தொடு மேவிய
ஆவ யிற்சென் றவரை யுணர்த்தினான் (௩க)

அவர்வி ழித்தனர் நோக்கின ரையன்றன்
நவவி சித்திர நண்ணிய மேனியை
உவமை யற்றநி யென்னுழை யும்வரத்
தவமி ழைத்ததென் னேவென்று சாற்றினார் (௩உ)

தழுவித் தாள்களிற் றாழ்ந்துமெய் யன்பினில்
முழுகி நின்ற வவர்முக நோக்கியே
அழிவி லோருரை யச்சுதன் கூறுவான்
வழுவி லீர்நான் வருவழி தன்னிலே (௩௩)

இருவர் சோர ரெனைத்தொடர் கின்றனர்
வெருவி யுன்வயின் மேவின னீயெனைக்
கரவு செய்கெனக் கண்ணிச் சிறிதுபோ
திரவி தன்னையெங் கேயொளிக் கின்றதே (௩௪)

அண்டம் யாவும் வயிற்றி னடக்கிய
கொண்ட லேயுனை யெங்குக் கொடுசென்று
கண்டி டாவகை செய்வது காணென
விண்டு ஞானம் விளம்பலிப் போதெனே (௫௫)

விரைவி லென்னை மறைத்தியென் றேவிளம்
புரைவி னுவி யுசாவின ருள்ளத்தைப்
புரைத புத்துப் பொதிவதல் லாலொரு
தரையி லேயென்று தன்றனி மார்பையே. (௫௬)

போழ்ந்த போது புகுந்தனன் மார்பிலே
வாழ்ந்தி ருக்க வயங்கு கொடிகளாற்
சூழ்ந்து சுற்றித் தொடுத்திருந் தார்வயின்
ஆழ்ந்தி ருந்தவ னங்கறை கின்றனன் (௫௭)

மெள்ள விந்தநல் வேளையி லேசெய்த
எள்ளி லாவுப காரத்துக் கென்செய்வேன்
வள்ள லேயொர்கை மாறிலை மற்றென்றுன்
உள்ளமேவிய வொண்பொருளானவன். (௫௮)

ஆரவெங்கு மமர்ந்துமென் னுவிக்கா
தாரமான தயாநிதியேயெனை
நேரநின்றதற்கேதுநிரப்புவென்
சேரவென்று தியானித்திருந்தனர். (௫௯)

அங்கிருந்தவரான நன்னுமர்தாம்
எங்குப்போயின னெம்பெருமானெனுத்
தங்குகின்றிலர் சார்ந்தவன் வந்திலன்
பொங்குகின்ற நெடும்பொழுதாயிற்றே (௬௰)

என்றுமற்றவனெய்தடி நோக்கியே
சென்றிச்சாவந்தியாமேளர்சேரிடம்
நன்றுதாழ்ந்திங்கு நண்ணியநாதனை
ஒன்றிக்கண்டதுண்டோவென்றுரைசெய்தார் (௬௧)

மோனமொன்று மொழிந்திலராயுற
லானபோதிவர் மார்பிலமர்ந்தனன்
பானம்வேண்டும் பரமன்றனையிவர்
தான்விழுங்கிய தெப்படித்தானெனு (௬௨)

காணுைது கரந்தனையாயினி
யாணரிப்பொழுதேயுயிர் மாய்வன்யான்
மாணவந்தெனைக்காவெனமாதவன்
எணகத்துளே னெவ்வகை யெய்துவேன். (௬௩)

என்றுமெள்ள விசைப்பதுகேட்டனர்
கன்றிமெத்தக்கதறியழுதனர்
துன்றியுள்ளுறை சோதிதனைக்கொண்டு
நின்றதாசரை நோக்கிநிகழ்த்துவான். (௬௪)

என்னைக்கண்டிலனுகி யிந்நாமன்முன்
மன்னப்பட்டனன்றுன் பத்தில் வைத்தநீர்
நன்னர்க் காட்டுதிர் நாமன்றனக்கெனே
என்னக்கேட்டவர் நாமர்க்கிசைக்கின்ருர். (௪௫)

வருந்தன்மின்னென மாலுக்குநாமர்க்கும்
பொருந்துதண்ணளியுமன்பும் பொங்குதல்
தெரிந்துமற்றவர் தேறவவிழ்த்தனர்
வரிந்திருந்த கொடிகளை மால்வந்தான். (௪௬)

கண்டுநாமர் கனிந்துகழல்பற்றிக்
கொண்டு நின்றனர் தம்மைத்தழீ இக்கொடு
தொண்டர் கண்ணீர் துடைத்துத்திருத்திஞன்
அண்டிடந்தந்த வன்னவரோடுபின். (௪௭)

ஞானதேவரு நாமருஞ்சேரவே
ஆனகூரும தாசரகத்துறத்
தானிணைந்து தழீ இக்கொடுசார்ந்தனன்
மேனிகழ்ந்தலகுளை விமலனே. (௪௮)

சார்ந்தசேதியைக் கூருமதாசரும்
நேர்ந்துகண்டு நெடிதுபணிந்தன்பு
கூர்ந்துதோத்திரஞ் சொல்லிக்கொண்டாடிஞர்
ஆர்ந்த நான்குகையாலுமணைத்தனன். (௪௯)

யாது நல்வரம்வேண்டு மெனச்சொல
மாதவன்றனை நோக்கிமகிழ்ந்திவண்
நீ தயங்கி நிலாவுகநாடோறும்
காதலோடெனக்கட்டுரை செய்தனர். (௫௰)

பாண்டுரங்கனு நன்றெனப்பாங்குடன்
ஆண்டும்பண்டரி யாகவமர்ந்தனன்
வேண்டுநண்டு விரிச்சிகமாமதி
ஈண்டுகின்ற வெகாதசிதன்னிலே. (௫௧)

லகுளைதன்னினு நல்லன்பர்யாவரும்
மிகுவிருப்புடன் வேண்டிவிமலனைத்
தொகுதிகூடித் தொழுது துதிசெய்வார்
தகுவதாகத் தனிநடஞ் செய்தரோ. (௫௨)

கூர்மதாசர்திருவடிக்ளேசரணம்

ஆகசரித்திரம் (௭) க்குச் செய்யுள் (௮௬௧)

முற்றிற்று

# ராகாகும்பார் சரித்திரம்

வியிராக சிரோன்மணியாய் வருராகா கும்பார்தாம்
செயிர்திருங் குசராத்தி தேசத்திற் சேர்குயவர்
பயில்வாழ்க்கைத் துணையான பாங்காபா யிமனைவி
உயிர்போலு மகள்வங்கா வுடனேபண் டரிவாழ்வார். (க)

நவபாண்டஞ் செய்துவிற்று நண்ணுவதால் சீவிப்பார்
உவமையிலா வரிநாம மோதிவெகு நாள்வாழ்ந்தார்
தவநேயத் தொடுவாழ்வு சார்ந்தவொரு நாடனிலே
அவர்புரிந்த பச்சைமட்பாண் டங்காய வதுதனிலே (உ)

ஓர்பூனை மூன்றுகுட்டி யீன்றதனுள் ளேவைத்து
நேர்பாலங் கிரவுபக னேயமுற்று நேர்ந்தளித்துச்
சார்போதி விரைக்காகத் தான்பிரிந்த காலத்தில்
ஆர்சாலைச் சுடும்பாண்டத் தொடுகூட்டி யழவிட்டார். (ந)

குட்டியிருப் பதுதெரியாக் குயவரழல் மூட்டிவிடக்
கிட்டியது தாய்ப்பூனை குட்டிச்சால் கிடையாமல்
மட்டறுதுன் பத்துடனே வலிந்தழுது கத்துதருன்
சுட்டிடுசூளையிலிருந்த குட்டிசெவி களிற்றொடர. (ச)

கேட்டவையுங் கத்தவது கேட்டிதுவுங் கத்தவங்ஙன்
மாட்டியரா காதெரிந்து வயிற்றுமுகத் திலுமோதி
நீட்டுதுய ரொடுமனைவி முகநோக்கி நேயமிக
நாட்டுகுட்டி யிருப்பதனை நான்றெரியா தேயிட்டேன். (ரு)

சூளையின்மட் சாலதிலே யிருந்துகுட்டி படுதுயரும்
கோளையுணர் மார்ச்சாலத் தாய்புணருங் கொடுந்துயரும்
வேளையருள் பாண்டுரெங்கன் விலகவருள் செயவேண்டும்
வாளையிலேய் கண்மடவா யெனவருந்தி மயங்கினர். (சு)

எரிந்துறுசூ ளையைச்சூழ்ந்து வரும்பூனை யிசைகேட்டும்
பரிந்துவிழும் பதிதுயரைப் பார்த்தும்பாங் காபாயி
கரிந்துவிழுங் கொடிபோலக் கதறியழு துடன்வீழ்ந்தார்
தெரிந்தருளப் பாண்டுரெங்கன் றிருவடியை நினைந்தழுதார். (எ)

பண்டரிநா தாபக்த பாலனருக் மணிரமணா
அண்டியபாண் டவரரக்கு மாளிகையி லவியாதும்
தொண்டர்பிர கலாதரெரி துளைந்துமடி யாதுமருள்
புண்டரிக நயனத்தாய் பூனைக்குட்டி களைக்காப்பாய் (அ)

காப்பாயே யினியிந்தக் கடுந்தொழிலாஞ் சுடுந்தொழிலை
நீப்பாவே னெடுமாலே யெனவேண்டி நெடுங்கண்ணீர்
வாய்ப்பாக மனைவியொடு புரண்டுமெண்ணில் வருந்தியரி
பேர்ப்பாடல் புரிந்திருக்க விரண்டுநாள் பின்னிட்டு. (௯)

மூன்றுநாள் நெருப்பாறி முடிந்தபின்பு குட்டிகளும்
தோன்றுதுள் ளிருந்துகத்தச் சூழ்ந்துறுபூ னையுங்கத்தச்
சான்றுறு மனைவியருஞ் சார்ந்தோடித் தாம்பார்க்கக்
கூன்றூழி வேவாதொன் றிருந்தகுட்டி களைக்கொண்டு (௰)

கண்டுமிகு களிகூர்ந்து மூன்றுநாள் பால்காணு
தண்டுகுட்டி களைநோக்கி யனுதபித்துப்பாண்டுரங்கன்
மண்டுதயை புரிந்ததனை மனத்துணர்ந்து தாமிகவுங்
கொண்டகொடுந் துயர்கடிந்தா ரவைகண்டு கொண்டோரார் (௰௧)

இருவர் பத்தி தனை வியந்தா ரித் தொழிலை விடுவெனென்று
திருமகணு யகனறிய வேண்டியதாற் றீர்துமென
மருவியவத் தொழில் விடுத்து மறையவர்க்கெல் லாமளித்துத்
தருவிறகு காட்டில் விழுந் தவை திரட்டித் தாங்கொண்டு (௰௨)

விற்றதிதி களுக்கீந்து மிகுந்த வற்றைத் தாமுண்டும்
நற்றுறுபண் டரிவாழு நாதனது திருநாமம்
சொற்றுறுகுப் பையிற் கிடக்குங் கிழிந்ததுணி களையெடுத்து
முற்றுறமூ டுவர்மானந் தெரிவதனை மூதுரார் (௰௩)

பார்த்து லகத்தவர் தெய்வம் பரவிமகன் பொருள்வேண்டல்
தீர்த்திவர்கள் வேறேயோர் சிவனுக்காத் தொழில் மறுத்துக்
கூர்த்தசெய னன்றென்று குறித்துமிகக் கொண்டாடச்
சீர்த்தவொரு நாள் வங்கா வீமநதிக் கரை சேர்ந்தாள் (௰௪)

அப்புனலி லுமதே வருள் புதல்வி யாடை தனைத்
தப்பினளங் கிருக் கவங்காத் தான் மூழ்கிப் பூசைசெயத்
துப்புடன்மற் றவள் துவைக்குந் துளிதெறித்து மேற்றாவ
இப்படி நீ தப்புவது மியல்போ சொல் லெனவவளும் (௰௫)

பாண்டுரங்கன் றனைவேண்டிக் காமியத்திற் பரிவுகொண்டு
வேண்டுகுலத் தொழி லதனை விடுத்து நெறி தப்பியலைந்
தீண்டுகுயச் சாதிகட்கு மேற்குமோ பூசையென
ஆண்டுவங்கா வுனது தந்தை யழுதுவிட்ட லன்றன்றோ (௰௬)

செத்தபசுத் தனை யெழுப்பச் செய்ததுகா மியமலவோ
உய்த்துரைத்தி யெனவொருவர்க் கொருவர் மிக வாதாடி
மெத்தமுனிந் தவரவர்தம் வீடடைந்தார் நாமருந்தம்
சித்தமகிழ் கோயினின்று திருமனைமே வியபின்பு (௰௭)

ராகாகும் பார்பயந்த நற்புதல்வி யுமை மிகவும்
ஆகாத தூஷணைக ளறைந்தனளென் றவளுரைக்க
வாகான நாமதே வருஞ் சிறிதி யோசித்து
மாகாள முகிலனை யான் வளர் கோயில் மீண்டுவந்து (௰௮)

நாதா நின் னடியரெனும் ராகாகும் பாருன்பால்
தீதான காமியரோ சிறந்துளநிட் காமியரோ
யாதான தவர் கருத்தை யறைதியெனப் பாண்டுரங்கன்
மேதாவி யானவவன் விழைவறுநிட் காமியனே (௧௯)

எனநகைத்துப் புகன்றருள வெம்பிரா னவர் பெருமை
தனையெனக்குக் காட்டுகெனத் தானுருக்கு மணியுடனே
வினவியநா மனையழைத்துக் கொடுபோந்தான், விறகிடும்
வனமதனி னடுப்பகலில் வந்துரா காகும்பார் (௨௰)

மண்ணிலுயிர் மாயாமல் மற்றவர்தந் தேவியொடு
நண்ணுவதுந் தனிவிறகு நாடுவது நனிதெரியக்
கண்ணிவந்த நாமருக்குக் காட்டவவ ரும்மிவளைப்
பண்ணுகசோ தனையென்னப் பதுமைகர கங்கணத்தை (௨௧)

ஒருபுறத்தில் கிடத்தியதன் மேலுலர்ந்த விறகதனை
மருவவைத்துத் தூரத்தே மறைந்திருக்க ராகாவுந்
தருவிறகு தனைத்தேடி வரும்போது தாங்கண்டார்
வெருவிமிகத் தூரத்தே விலகிநிற்க வேண்டுவார் (௨௨)

விறகுடனே கங்கணத்தை மேவியதம் மனையவளுக்
கறிவுறுத்த வேதோதீ தாயிற்றென்றவர் வெருவி
அறவிலகி யப்புறத்தே யகல்வதுகண் டந்நாமர்
நறவொழுகு துளவினனை நன்றுபணிந் துரைசெய்வார் (௨௩)

கருணைவழி வுறுகண்ணா காருத்தா நினதடியை
மருவுறுரா காகும்பார் மன்றநிச பத்தியுளோர்
அருளுதிநின் சகுணவடிவதைக்காண வெனவேண்டத்
திருமருவு மணிமார்பன் சிரித்தொன்று செப்புகின்றான் (௨௪)

நானிந்த ராகாகும் பார் நடக்கை தனைச்சொன்ன
தானதுவோ வில்லையோ வறைதியின்ன முங்காண
மானநினை வுளதோசொல் லெனவவருக்க மற்றையவர்
ஊனமிலா ராகாவுக் கொருவருநே ரின்றெனவே (௨௫)

ஓவறுசீ ருருக்குமணி யொடுநாம ரொடுகூடி
மூவரும்ரா காகும்பார் முன் வந்தங் கிருவருக்குந்
தாவிலருள் செய்து நிற்கத் தாள்பணிந்து சேவித்தார்
ஆவலுடன் ராகாகும் பார் மனைவி யுடனடைந்தே (௨௬)

ராகாகும்பார் திருவடிகளேசரணம்

ஆக சரித்திரம் அ-க்கு செய்யுள் ௬௱௰௭

முற்றிற்று.

# கோராகும்பார் சரித்திரம்.

சீர்திக ழூரி லெல்லாஞ் சிறந்துள தேர டோகி
ஊர்தனிற் கோரா கும்பா ரொருவரில் வாழ்க்கை மேவி
நேர்தர வுண்ணும் போது நிலையொடு நடக்கும் போதுஞ்
சார்தர விருக்கும் போதுந் தனித்தவ ரொழுமப் போதும் (௧)

பிரபஞ்ச விவகா ரங்கள் பேணுறு பொழுதும் பாண்டம்
திரமுறச் செய்யும் போதுஞ் சிரமந்தீர் பொழுதுந் தம்முன்
விரவுறப் பாண்டு ரங்க விமலனை யிடைவி டாமல்
பரிவுடன் றியானஞ் செய்து பசனையுஞ் செய்து வாழ்ந்தார் (௨)

ஒருபக லிவர்க்கு முன்னே யூர்தரு சேயை விட்டுப்
பருகுநீர் கொண்டு மேவப் பாரியார் போக வன்னார்
மருவுமுற் றத்திற் சேர்த்து மண்மிதிப் பதனுட் சேர
வருமொரு சேயை நாமம் வழுத்திமெய் மறந்தா ராகி (௩)

படருமண் ணோடு சேர்த்து மிதித்தவர் பரிந்து நிற்கக்
குடமுடன் வந்த பாரி குழவியைக் காண்கி லாராய்த்
திடமுட னரிநா மத்தைச் செப்பினர் தியானந் தன்னால்
அடையுமா னந்த பாட்ப ராயவ சத்த ராகி (௪)

மண்டனை மிதித்து நிற்கும் வல்லவர் தம்மை நோக்கிக்
கொண்டபாற் குயங்கள் பொங்கக் குழவியெங் கேயென் றேங்கி
மண்டின குருதி யோடு மண்ணோடு மிதிக்கப் பட்ட
துண்டமா முடலுங் கண்டு துணுக்கென மார்பில் மோதி (௫)

புவியின்மே லலறி வீழ்ந்து புறண்டழு தாகு ழந்தாய்
அவிதர லாயி ஞயோ ஐயயோ கொஞ்ச மேனுங்
குவிநினை வின்றிச் சேர்த்துக் குழவியை மிதித்துக் கொன்றீர்
இவிடம்விட் டெங்கே னும்போ யிறந்துநீர் படுதி ரென்றார் (௬)

மனைவியார் கடின வார்த்தை வழங்குதல் கேட்டுச் சற்றே
நினைவுவந் தெனதுள் ளத்தே நிலைத்தவை குந்த நாதன்
றனைவிகா தஞ்செய் தேநி தவிர்த்தனை யன்றோ வென்று
சினமிகத் தண்டங் கொண்டு தேவியார் தமைய டிக்க (௭)

அருகுறும் போதி லென்னை யழகிய விடலஞணை
மருவுறத் தீண்டல் செய்யா திருக்கநீ ரென்ற வார்த்தை
வெருவுறத் திடக்கேட் டாங்கே விளைவிலர் பொறுத்தி ருந்தார்
தெரிவுற லாகி யூரார் திரண்டனர் வந்து கண்டார் (௮)

சேற்றிலே குழந்தை சாவச் செய்ததென் வந்து பார்த்தோம்
கூற்றெனக் கோரா கும்பார் குழவியைக் கொல்வ தான
மாற்றரு வெறியெவ் வாறு வந்ததோ வென்பார் சில்லோர்
தோற்றின னுனக்கு நன்றே [illegible]தியெனச் சொல்வார் சில்லோர் (௯)

அரிநினை வாயி லேது மறிவின்றிச் செயுமோ வென்பார்
தெரிவுறு சில்லோ ரொன்ப திவையெலாஞ் செவியி லேறார்
விரிமுகச் சீய நோக்கி வெறுத்தநாய் குரைத்தல் கேளாப்
பரிசெனக் கோரா கும்பார் பாண்டுரங் கனைச்சிந் தித்து (௰)

பசனைசெய் திருக்க மற்றை நாளந்தப் பாரி யாரோ
நிசமுற மனத்தி லுன்னி நேசமெய்ப் பதிக்குநேரோ
வசையுறப் பேச லான வார்த்தையை மகிழ் நருக்கு
நசையுறத் தாள்வி ளக்கப் புனல்கொடு நண்ண வந்தார் (௰௧)

கண்டகோ ராகும் பார்பின் னிகழ்ந்தன கருதி மின்னே
பண்டரிநாதனாணை பகர்ந்தனை தொடக்கூ டாதென்
றுண்டது விருக்கத் தீண்ட லுறுவதோ வெனக்க டுத்தார்
அண்டிய மனைவி யாரு மகவின்மே லாசை யாலே (௰௨)

மற்றொரு மணஞ்செய் தேனும் பதிக்குநன் மகனுண் டாகப்
பெற்றுறத் தந்தை தாய்வாழ் பெருமனைக் கேகி யன்னார்
நற்றுற வணங்கித் தன்னை நாதனார் மறுத்து நின்ற
பெற்றியால் பிள்ளை வேண்டிப் பின்னவட் டருகவென்றார் (௰௩)

நன்றென வவரு நேர்ந்து நல்லநாள் கருதிப்பின்னை
மன்றலர் குழலி னாளை மணஞ்செய்து கொடுக்கும் போது
நின்றகோ ராகும் பாரோ நீரிந்த மூத்தா ளான
பொன்றளிர் மேனி யாளைப் போலிவ ளையும் போற்ற (௰௪)

வேண்டுமென் றுறவி னோர்கள் விருப்புற வழங்கப் பின்பு
பூண்டகோ ராகும் பார்முன் போற்றிய விரதம்போற்றித்
தீண்டிலர் இளையார் தம்மைத் தேர்ந்திளை யவரக் காட்டு
மூண்டது நினக்கெவ் வாறோ வெனக்கதே முடிந்த தென்றார் (௰௫)

பின்னவ ருரைப்பக்கேட்ட பெரியவ ரவளைத் தேற்றி
அன்னரந் நாளி னொரு நடுநிசி நாதர்தூங்கு
மன்னிய வணையிற் சார வந்திரு புறத்துந் தூங்கத்
துன்னினர் தாமுங் கூடத் துயில்பவர் கைகளேக்கி (௰௬)

இருவரு மிரண்டு மார்பு மேற்றின ரிருக்க வன்னார்
திருவிழி மலர்ந்து நோக்கித் தீர்ந்ததே விரதந் தீண்டி
யரிவையர் தம்மை யென்னா வருவருத் துயில்வா ளாலே
ஒருகையைத் துணித்து மற்றை யொருகையை வாள்வா யூன்றி (௰௭)

துணித்தன ரிருக்கக் கண்ட தோகைய ரிருவர் தாமும்
மணத்தது சேய்வேட் டன்றோ வாய்ந்தது கைபோ தற்கோ
புணர்ப்பதிங் கினியென் னேயென் றலறினர் புலம்பி நை[illegible]
கணித்துநங் குடும்ப மெங்ங னடக்குமென் றழுதல் கண்டு (௰௮)

அன்பரை யாதரிப்போ னாகியபாண்டு ரங்கன்
இன்பொடு துணைசெய்வானா யிருக்கமற் றென்[illegible]
துன்புறு கின்ற தென்று துணைசெய்விட் [illegible]
என்பதா மமிர்தந் துய்த்தா லெவ்வகைப் பிணிபு[illegible] (௰௯)

என்றவர் தம்மைத் தேற்றி யிணையிலாக் கோரா கும்பார்
நன்றரி பஜனை கூறி நண்ணுநா ளாடி மாதந்
துன்றெகா தசியிற் பாண்டு ரங்கனைத் தொடர்ந்து சேவை
மன்றவா னந்தங் கொண்டு மனைவிய ரோடு வந்தார் (உ0)

சந்திர பாகை யென்னுந் தடநதி தன்னி லாடி
முந்து புண்டலிகர் தம்மைத் தொழுதனர் முழுதும் வாழ்த்திச்
சுந்தர விமல னுறைந் துலங்குபண் டரியைச் சூழ்ந்து
வந்துறு கோயில் மேவி மாதவன் றனைச்சே வித்து (உக)

தழுவினர் தொழுது நிற்கத் தவலறு நாமதேவர்
குழுவொடு தாளம் வீணை மிருதங்க முதல கூட
வெழுமொலி யோடு கையி லுவணநன் கொடியை யேந்தி
நழுவலில் பாண்டு ரங்க னுமகீர்த் தனங்கள் பாடி (உஉ)

ஆடின ரதனைக் கண்டு தாமுந்த மங்கைத் தாளம்
போடுத லொடுசே வித்தல் பொருந்தமுன் கரங்க ளின்றி
வாடின ரரிநா மத்தை வழுத்தினர் நாணிக் கைகள்
மூடினர் நினைவு கண்டு முகுந்தனும் பாண்டு ரங்கன் (உ௩)

முன்புள படிக்குக் கைகள் முளைத்திட வருளிச் செய்ய
அன்பொடு கைகள் கொட்டிப் பாடினர் தொழுதா ராடி
இன்புறு தலையெல் லோருந் தெரிந்தனர் வியந்து நோக்கி
மன்பர வசத்த ராகி மருவுகோ ராகும் பாரை (உ௪)

தொண்டரிற் பெரிய ரென்று தோத்திரம் பலவுஞ்சொல்லி
மண்டினர் கண்டு மூத்த மனைவியார்மலர்க்கை கூப்பிப்
பண்டரி நாதா பத்த பாலன பதும நாபா
தண்டுள வணிந்த தாமோ தரவெனத் தொழுதுவாழ்த்தி (உ௫)

கைவர வன்பருக்குக் கருணைசெய் கமலக் கண்ணா
மைவரு மேனி மாயா மகவின்றி வருந்து கின்றேம்
நைவது தெரிந்தி லாயோ நங்கண்மேற் கருணை யின்றோ
சைவலம் பொருவுங் கூந்தற் றுமரைக் கிழத்தி நேயா (உ௬)

என்றுளத் தழுங்க லோர்ந்தா னிந்திரை கொழுந னுங்கு
நன்றருள் புரியப் பிள்ளை நகழ்ந்துமுன் வருதல் கண்டு
பொன்றின பிள்ளை யென்னே பிழைத்தது புதுமை யென்னத்
துன்றின தாய்கண் டோடித் துணைமலர்க் கரத்தி னேந்தி (உ௭)

மார்பிடை யணைத்துமேன்மேல் மகிழ்வுகொள்பொழுது மாயோன்
சீர்பெறத் தோன்றிக் கோரா கும்பாரைத் தெரிய நோக்கி
வார்குழ லிருவ ரோடு மகிழ்ந்தணை தின்று தொட்டுச்
சார்தால் வேண்டு மென்று தகையறப் புணர்வு தந்தான் (உ௮)

அன்னதோர் புதுமை யெல்லா மறிந்தசி ரன்பர் யாரும்
பன்னுதோத் திரங்கள் செய்து பணிந்தனர் பாடி யாடி
மன்னினர் மங்க ளார்த்தி மகிழ்ந்தனர் புரிந்து வாழ்த்தித்
துன்னுறக் கோரா கும்பார் தொண்டரை நோக்கிச் சொல்வார் (உ௯)

அன்பர்நீ ரெல்லாருஞ்சேர்ந் தடியனே னகத்து மேவி
இன்புறு கருணை செய்ய வேண்டுமென் றிரந்து வேண்டத்
துன்புறு தொண்ட ரெல்லா நன்றெனத் தொடர்ந்து போந்து
முன்பவ ரிருக்கு மில்லின் முயங்கினர் கோரா கும்பார் (௩௰)

பாத பூசனையே யாதிப் பண்பெலாம் பண்ணித் தக்க
வாதனங் கொடுத்தெல் லோர்க்கு மமைந்தபி னறுசு வைத்தா
மோதன மருத்தி மற்று முளவுப சார மெல்லாந்
நீதற வியற்றி யாவுந் தீர்ந்தபின் ஞான தேவர் (௩௧)

நீரிவ ணுய்த்தல் செய்ய நிரம்பின ரான பாண்டத்
தோர்தரல் வேண்டுஞ் சுட்ட துஞ்சுடா ததுமென் றேத
நேர்தரக் கோரா கும்பா ரெழுந்துகை நிலத்தண் டத்தால்
ஓரொரு வரையுங்கொட்ட வுரைத்தில ரிருப்ப நாமர் (௩௨)

தலையிலுந் தட்ட வந்த போதவ ரைத்த டுத்த
நிலையிலே பச்சைப் பாண்ட மிவரென நின்று ரைக்கச்
சிலையிலேய் புருவ முக்தா பாயியுஞ் செப்பு கின்றார்
உலையிலீ ருமக்கெவ் வாறு தோற்றிய துண்மை யென்று (௩௩)

மிகவும்வல் லீரென் றேத வினவினர் தாமெல் லோரு
நகைசெய நாம தேவர் நாணின ரெழுந்து நாதன்
அகமகிழ் கோயின் மேவி யலர் மகள்கேள்வன் றன்னை
முகமலர் பொலியக் கண்டு கண்கணீர் மொய்ப்ப நின்று (௩௪)

எனக்கவ மான மின்று நேரிட்ட விதனால் மிக்க
மனத்துய ரடைந்த தென்ன மாதவன் றழுவிக் கொண்டே
உனக்கியா ரேது செய்தா ருற்றதென் னுரைத்தி யென்னத்
தனக்குநே ரிட்ட தன்மை சாற்றுவார் நாம தேவர் (௩௫)

இன்றுநின் கோரா கும்பா ரெங்களைக் கூய்ச்சென் றில்லில்
நன்றுண வளித்தி யார்க்குநன்குற வமைத்துத் தண்டந்
தன்றிருக் கரத்தா லேந்தித் தலைதொறும் புடைக்க யாரும்
ஒன்றையு முரைக்கா துற்றா ரோங்கின ரென்கம் மீது (௩௬)

அதுகண்டு வீமங் கொண்டே யங்கையாற் றடுக்கத் தாசர்
இதுபச்சைப் பாண்ட மென்ன யாவரு நகைக்க லுற்றார்
விதுமுக முக்தா பாயி மிக்கெனைப் பகிடி செய்தார்
கதுமென வெழுந்து நின்பாற் கழறிட வந்தே னென்றார் (௩௭)

திருமக ணாதன் கேட்டுச் சிரித்துநீ யுபதே சத்தைக்
குருவையிற் பெறாத பெற்றி குறித்தன்பர் குழாத்து ணேர்ந்து
தெரிதரக் கோரா கும்பார் செப்பிய துண்மை யென்னப்
பரிவுறு நாம தேவர் பகவருவான் றொடங்கி னாரே (௩௮)

பண்டரி நாதா வென்றன் பரிபவ மெல்லா நின்பால்
விண்டது மாறித் தேற வேண்டியான் வந்த தற்குத்
தொண்டரைப் போல நீயுஞ் சொல்லுத றகுமா வென்று
கண்டனி னீர்த தும்பக் கழறின ராகப் பின்மால் (௩௯)

என்னுயிர்க் குயிரா யுன்னை யெண்ணியா னிருக்க வென்மீ
துன்னரு முதாசி னச்சொல் லுரைப்பது தக்க தன்று
நின்னது துவித பாவ நீங்கிட வாசான் றன்பால்
மன்னிய வருளைப் பெற்று மற்றெனை யடைதல் வேண்டும் (௬0)

என்னலுங் கேட்ட நாம ரீசனே குருவை நாடித்
துன்றுறு பொருணீ நீயே தொலைவிலா தென்பா லென்று
மன்னயா னுன்னைக் காண மறுவிலா வுபதே சத்தைப்
பன்னிடக் குருவை நாடிற் பயனென்னை யென்று ரைத்தார் (௬௧)

அவ்வுரை கேட்ட நாத னன்பரை நோக்கி நாமா
இவ்வுல கத்து முன்யா னிராமன்கண் ணனுகத் தோன்றி
வவ்விய ஞான ரூப வசிட்டர்சாந் தீபர் தம்மை
எவ்வமில் சரண டைந்தே யேற்றன னுண்ம ஞானம் (௬௨)

ஆதலா னீயிப் போதே யன்னது பெறுவா யாகிற்
சாதுசற் சனர்ம திப்புந் தத்துவ வழியுந் தோன்றும்
போதுதி யென்ன நாமர்பொன்னடி வணங்கி யெந்தக்
கோதிலாக் குருவைச் சார்வ தென்னலுங் கொண்டல் வண்ணன் (௬௩)

நளிர்நாரச் சடில நாகைநாதர்வாழ் கோயிறன்னில்
கிளர்ஞான வுருவி சோபா கேசர னொன்போ ரங்கண்
வளர்வாரிற் சரண்பு கென்ன மால்பிரி வுன்னி யுள்ளத்
தளர்வோடு நடந்து கோயில் சார்ந்தனர் நாம தேவர் (௬௪)

சினகரம் புகவி சோபா செருப்புக்கா லிலிங்கமீது
நனியுற வைத்து றங்க நாடினர் திகைத்தெ னக்கென்
றநகனின் றெடுத்து ரைத்த வாரியன் போலுன் மத்தன்
கனவிலுங் காணே னென்று கருதிமுன் சென்று நின்று (௬௫)

ஐயநுஞ் சீர்த்தி கேட்டிங் கணுகயா னடாத செய்கை
வெய்யரும் பொருத தாமும் விபரீத வொழுக்கத் தாலே
தூய்யதுஞ் ஞான மெல்லாந் தோன்றின தெனக்கென் றேத
மெய்யரு மடடா வென்னே தவறிக்கால் வீழ்ந்த தென்றும் (௬௬)

என்னுடல் மிக்க சோர்வுற் றிருப்பதா லவய வங்கள்
இன்னமோ ரிடத்தில் வைக்க வெடுப்பதற் கில்லை வன்மை
மின்னுறை நிறமா லன்ப மேவிய விலிங்க மீதில்
மன்னிய காலைத் தூக்கி மற்றொரு பால்வைத் தீரோல் (௬௭)

பொங்குப கார மாக வுறுமெனப் பொற்றா ளுமர்
அங்கையாற் றூங்கிப் பாங்கர் வைக்கவவ் விடத்தும் லிங்கம்
தங்குத னோக்கி மற்றோர் தானத்து வைக்க வங்கும்
லிங்கமாய்த் தோன்றப் பாத நிலைகொள வைப்பதற்கு (௬௮)

எள்ளள விடமு மின்றி யெங்கணு மிலிங்க மாக
ஒள்ளிய பதங்க டம்மீ தேனுமுன் றிடுவோ மென்று
மெள்ளத்த னங்க நோக்க விளங்கின விலிங்க மாக
வுள்ளத்து மிகவி யந்தங் கோய்வுறு வாளா நோக்கி (௬௯)

நெடும்பொழு தென்கா ளுங்கி நின்றதா லெனக்கு மிக்க
விடும்பையா யுளதென் காலை யிடுக வெற் றிடத்தி லென்னத்
தொடும்பத மேந்தி நாமர் தொழுது மெய்ஞ் ஞான வீச
தடம்பதந் தொடுமெ னக்குத் தாவர சங்க மெல்லாம் (௬௰)

சிவமய மாகத் தோற்று கின்றதாற் சிறந்த பாதம்
எவணுற வைப்பே னைய வென்றுநற் றுதிப யின்றார்
பவமறு ஞான வாசான் பதம்விடு மெனவெ ழுந்து
நவமல ரபயக் கையை நாமர்தந் தலையில் வைத்து (௬௧)

காதில்ஞா னமு தம்பு கட்டலுந் திருநி றத்தின்
ஆதிநா யகனு முள்ளத் தமர்தர வணைக டந்த
கோதிலா னந்த வாரி குளித்தன ரசவ மாகித்
தீதிலாக் குருவைப் போற்றித் தெளிந்தனர் பின்போர் நாளில் (௬௨)

பண்டரி புரத்துச் சென்று பாண்டுரெங் கனுக்கு முன்பு
தொண்டரோ டரிநா மத்தைச் சொல்லுநா மரைச்சீர் பொற்றாள்
புண்டரீ கத்துக் கங்கை பெற்றவன் புல்லி முன்னர்
இண்டவை யவரை நோக்கி யினியிந்த நாமர் தம்மை (௬௩)

சுடாதகிப் பாண்ட மென்னச் சொல்விரோ வெனவி ளைவ
விடாதரி கீர்த்த னங்கள் விளம்பிய தாச ரெல்லாம்
அடாதினிப் பகர லென்ற வடையும்யார்க்கேனு மென்றுங்
கெடாதபே ரின்ப நல்குங் கிளரடி தொழுதுற் றாரோ (௬௪)

கோராகும்பார்திருவடிகளேசரணம்.

ஆகசரித்திரம் (௯) க்குச் செய்யுள் (௯௭௧)

முற்றிற்று.

# பரிசாபாகவதர் சரித்திரம்.

பண்டரியி லேவாழ்வோர் பரிசாபா கவதர்மலர்ப்
புண்டரிகை யானரகு மாயியன்பர் பொருந்திமிக
மண்டியவன் பினுக்குருக்கு மணிதேவி முன்வந்து
கொண்டவரு ணிறைந்தவிழி கொடுபார்த்து மற்றவரை. (க)

உதரமுற வணைத்துமத லாயுனக்கென் வேண்டுமெனப்
பதுமமக டனைநோக்கிப் பரிசாபா கவதரன்னே
இதமிகவென் குடும்பத்தி னிடறின்றி யெப்போதும்
துதியுனையே புரிந்தடியேன் றொழுதிருத்த லேவேண்டும். (உ)

அருள்செய்க வெனப்பதுமை யக்கணத்தோர் பரிசக்கல்
ஒருநீகொள் கெனக்கருணை யுடனுதவி யிதுதினமுந்
தருமிரும்பெல் லாங்கனகந் தானுக்குந் தகப்போற்றி
வருகவென வருள்செய்ய வணங்கிமகிழ் வொடுவாங்கி. (ங)

வந்துமனை யார்கமல சாமகிழ வவர்கரத்திற்
றந்துசெயும் வகையுரைப்பத் தடவுமிரும் பதுபொன்னாய்
முந்துறுத லான்மகிழ்வின் மூழ்கினரை நோக்கியிதைச்
சிந்துதல்செ யாய்பிறர்தஞ் செவியிலெனத் தெரிவுசெய்து. (ச)

மனைவியொடு மகிழ்ந்துருக்கு மணிதேவி தனைவாழ்த்தி
இனைவுசெயுங் கலிநீங்கி யெல்லோர்க்கு முன்போல
அனையருற வொருநாளங் கவர்மனைவி கமலசா
வினைதெறுசந் திரபாகை நீர்முகந்து மீளுங்கால். (ரு)

நாமதே வரதுமனை ராசாயி யெதிர்வருவார்
தாமவரை நோக்கியன்பு சார்கமல சாமின்னே
ஆமதுகொண் டேதிரும்பு மளவுமிங்கே நிற்கவென
மாமதுரச் சொல்லினவணிறுத்திமழை முகந்துவந்தார். (சு)

மிடியில்வருந் துறுகின்ற ராசாயிவிரைவறிந்தே
அடியில்வருந் தியகமல சாவன்பு மிகநோக்கிப்
படியிலெனக் கன்புமிக்க பாவாயுன் வளமதனை
நொடியிலுற மகிழ்வெனென நுவலுதற்கு மிகநாண. (எ)

கண்டுகம லசாவென்பார் ராசாயி கலந்தநட்புக்
கொண்டுறுவோ ரிடத்துவெட்கங் கூடாது மிகமகிழ்வு
மண்டுறவுள் ளதுவழங்க வேண்டுமென வுளநாணம்
விண்டுடனே ராசாயி விளம்புகின்ற தென்னென்னில். (அ)

என்கணவர் நாண்மான மிகந்துகுடும் பங்காப்பத்
தன்கணொரு நினைவுமின்றித் தரித்திரத்தாற் றளர்வுபடும்
புன்கணொன்றுந் தோன்றாமற் புகழ்பாண்டு ரங்கனடி
யின்கணன்பு தனின்மூழ்கி யேதுமறி யாதவராய். (கூ)

அன்னமுடன் வத்திரம்வேண் டாராகி யரிபசனை
நன்னயங்கொண் டேதிரிவோர் நடக்கைதனைக் கமலசா
என்னவகை யுரைசெய்வே னெனவுரைத்த ராசாயி
தன்னருமை முகநோக்கித் தயைமிகுந்து சாற்றுகின்றார். (௰)

உனதுபதி பசிக்கின்ற வுத்தமனு யோங்கொருவன்
றனதுமனத் தருள்கொண்டு தந்திலனே மிடிதீரக்
கனகமது வெனவில்லை யெனக்கழறக் கமலசா
அனவிமலன் றனைப்பசித்தென் னுவதுமற் றென்கணவர். (௰௧)

தாயான ரகுமாயி தனைப்பணிந்து வாழ்த்துவதற்
காயார்க்குங் கிடைக்கரிய பரிசக்கல் லதையருளி
நோயான மிடிதீர்த்தா னுவல்பசனை யைக்கேட்டும்
காயாத தருவினுக்குப் புனல்வார்க்கக் கடவதேன். (௰௨)

என்றுரைக்க ராசாயி யெழிற்கமல சாமின்னே
நன்றுமக்குத் தந்தகல்லை நான்பார்க்க வேண்டுமென
இன்றுனக்குக் காட்டுகின்றே னெனதகம்வா வெனப்பேசிச்
சென்றுதம தில்லடைந்தார் தெரிவதற்கு ராசாயி. (௰௩)

கமலசா மனைவந்து காட்டுகென வக்கல்லை
விமலமனத் தொடுகொட்டி வீட்டிற்குக் கொடுபோயுன்
னமலமனை தனிலுள்ள வயங்களிலே பரிசித்து
நிமலமுறு பொன்கொண்டு நீக்குதியுன் மிடியென்று. (௰௪)

தந்திதனை யெவர்களுக்குஞ் சாற்றுதென் வயினாக
வந்துகொடு வெனப்போக்க மற்றவரும் வாங்கிவந்து
சொந்தமனை தனிலிரும்புசோதித்துக் கிடையாமற்
றந்தொழில்செய் கத்தரிகை யூசிகளிற் றொன்றடவி. (௰௫)

பொன்னாக்கி யதுகொண்டு போனகஞ்செய் துறுபொழுது
நன்னும தேவர்வந்து நாயகிசெய் நலந்தெரிந்து
பன்னாளு மில்லாதபடியேதிங் கெனவினவ
மின்னார்மெய் யுரைக்கிலிவர் வெகுள்வாரொன் றுறவெருவி- (௰௬)

நிகழ்ந்தபடி தனையறிந்தெ னித்தமுநீ ரமுதுண்டு
புகழ்ந்திரும்பண் டரிநாதன் பொன்னடியை யெனவுரைக்க
மகிழ்ந்தருளா தேநாமர் மற்றதனை யுள்ளபடி
திகழ்ந்துரையா யெனிலுண்ணேன் செப்புகெனத் தேவியரும். (௰௭)

வேறு.

உள்ள வாறுரை செய்யநன் குத்தமர்
எள்ள லில்பரி சக்கல்லை யீதியான்
கள்ள மின்றதைக் காணவென் றோதலும்
தள்ள வஞ்சினர் தந்தனர் காணவே (௰௮)

குலவு நாமர்கைக் கொண்டுகண் டன்னதை
நிலவு பாகை நெடுநதி நீத்தத்தே
விலக லாக விடுத்துவிட் டுக்களைத்
தலமி ருந்தரி தன்புகழ் பாடி னார் (௰௯

அதுகண் டஞ்சிரா சாயியை யன்னது
கதுமெ னக்கரந் தந்த கமலசா
விதுப குப்பில் விடக்கொடுத் தாயிது
வெதுக டுப்பதென் றெய்திக்க டுக்கவே (உ0)

கூட்டி வந்து கொழு நரிருப்பிடங்
காட்டி யப்பரி சாபா கவதருங்
கேட்டி தெப்படிச் செய்யக் கிடைத்திதொன்
றூட்டி நின்றன ரன்றுரா சாயியே (உக)

அன்ன காலை யளித்த கமலசா
முன்ன நேர்படு வார்முக நோக்கியீ
தென்ன யான்முன ரீந்ததை யீகலா
துன்னு மாநதி வீசியிங் குற்றதே (உஉ)

என்று கூற வெதிர்ந்தவ ரிற்சிலர்
அன்று சேரரி தாசருக் காசையுந்
துன்று கல்லுஞ் சரியெனச் சொற்றனர்
நின்ற சிற்சிலர் நீதியன் றென்றனர் (உரு)

ஒருவர் தம்பொரு ளைப்புன லுய்ப்பதோ
தரும நீதியென் பார்சிலர் தந்தைதப்
பெருகு மாநதி பெய்திலர் வஞ்சனை
மருவி யுற்றன சொன்பர்சின் மாக்களே (உச)

அங்கு றும்பரி சாபா கவதர்தாந்
தங்கு நாமனை நோக்கித் தருவதோ
எங்கள் செல்வமெ னுங்கலைக் கைக்கொடே
யிங்கி ருப்பதென் றின்னமுஞ் சொல்லுவார் (உரு)

நீர்நி ராசையி னின்றவ சொன்றிந்த
ஊர்க ளியாவு முரைக்க வரியடி
யார்கள் போலமைந் திப்படிச் செய்திடில்
நேர்வ தோவுமைச் சற்சனர் நீர்மையே. (உசா)

எனலு நாம ரிவர்முக நோக்கிக்கோ
கனகை தன்னடி காதல ரோகன்னும்
மனம்வி ரும்பின் மடுவினி டைக்கிடப்
பனபல் லாயிரம் பாய்ந்துகொள் கென்றனர் (உஎ)

கேட்ட யாவருங் கேழ்கிள ராற்றிலே
கூட்ட மாகக் குவிந்தகல் யாவையுந்
தேட்ட மாம்பரி சக்கலைச் சேர்ந்தவோ
நாட்டு கென்ன நகைத்துரைத் தார்களே. (உஅ)

வினவு நாம ரொழுந்து வியனதிப்
புனலின் மூழ்கிப் பொருந்திய கற்களைக்
கனம தாயிரு கைக்கொடு வந்துநும்
அனக மானக லாய்ந்துகொள் கென்றனர் (உகூ)

கண்டு தம்மது கற்றெரி யாமற்பொன்
தொண்ட லூசி பலகொடு சோதிக்க
அண்டு கன்முழு தும்பரி சக்கலாய்
விண்டு தாசர்கை மேவிச் சிறந்தவே (௬௰)

அன்ன கண்டவர் யாரு மதிசயந்
துன்ன நின்று தொழுது துதித்தினர்
பொன்ன தாசர் புகழுரி தாசனை
நன்ன ரோத்தி நயந்துசொல் கின்றனர் (௬௧)

அச்சு தன்றனக் கன்பனொன் றுயநும
மெச்சு மெய்மை பொதிந்துறு மேன்மையி
னிச்ச யந்தெரி கின்றிலெ னேரிலீர்
இச்சை கொண்டல ரோந்திழை தன்னையே (௬௨)

போற்றி யோர்பரி சக்கல் பொருந்தினேன்
ஏற்றி லேனும் மருளை யினிதெனு
மாற்றி யாசையை மற்றவர் பொற்பதந்
தேற்ற மாகி வணங்கினர் சென்னியால் (௬௩)

இதம தாமுப தேச மெனக்கு நீ
ருதவ வேண்டுமென் றோதிட நாமர்தாம்
முதல்கொ ணர்ந்தவக் கற்கண் முழுவதுஞ்
சிதறி யாற்றிடைச் செங்கரஞ் சென்னிமேல் (௬௪)

வைத்து நல்லுப தேசம் வழங்கிட
உய்த்த நாமருக் கோரடி யானென
மெய்த்த ஞானம் விளங்கிச் சிறந்தனர்
பைத்த சீர்ப்பரி சாபா கவதரோ (௬௫)

பரிசாபாகவதர்திருவடிகளேசரணம்.

ஆகசரித்திரம் (௰) க்குச் செய்யுள் (௬௬எ)

முற்றிற்று

# ஜகமித்திரர் சரித்திரம்.

பரளி யென்னுமூர் தனிற்சக மித்திரர் பார்ப்பார்
வரகு லத்தவ தரித்தவர் வைணவ ராகி
யிரவு கொண்டுதா னியங்களைச் சேகரித் தென்றுந்
தரம தாங்குடும் பரட்சகஞ் செய்வது தனிலே (க)

பொருள்வி ருப்பறு புண்ணிய ராகியே பொருந்து
மிருவ.கைப்பற்று மில்லவ ராயரி நாமங்
கருதி யேத்துதல் கடைப்பிடித் துறுகின்ற காலை
மருவுமூரிலுள் ளாரிவர் மான்மியந் தெரிந்து (உ)

இவரிம் மானிடத் தன்மைய ரல்லரொத் தேவர்
அவத ரித்தன ரோ வெனப் புகழ்ந்தன ராகத்
தவந லத்தினர் தமைச்சிலர் சாதுசற் சனரோ
இவரொ னப்பொரற் கெய்தினர் கற்றன வியம்பி (ங)

வருத்தி மானபங் கஞ்செய்து மதைமதி யாராய்த்
திருத்து ஞானவை ராகங்க டிகழ்சிறப் புடனே
யிருத்தல் கண்டறி வில்லவர் தாம்பொறு ரிவர்தம்
கருத்த ழிந்திடச் செய்வதற் குன்னினர் கறுவி. (ச)

வருமொர் நாட்சக மித்திரர் மனங்கலங் காமற்
றிருவி ளையகன் றனைப்புகழ் செய்கையிற் றிருந்தி
மருவு மில்லிடைக் குடும்பங்க ளொடுதுயில் வதிந்தார்
கருது தீயவ ரவர்மனை யிட்டனர் கடுந்தீ. (ரு)

மடுத்த தீச்சிகை பரப்பியின் முழுவது மாய்ப்பப்
படுத்து றங்கின தாசர்கண் விழித்ததைப் பார்த்தே
அடுத்த தீயவிப் பதற்கொரு வகையுமின் றாகித்
தொடுத்த தண்டுழாய்ப் பண்டரி நாதனைத் துதித்தார். (சா)

தீனர் தங்களுக் காபத்தைக் காத்தருள் செய்யும்
ஞான நாயகா நினையன்றித் துணையில்லை நாடிற்
றானெ னுஞ்சக மித்திரர் துன்பத்தைத் தவிர்க்க
ஏன மாகிமண் ணெடுத்தவன் சக்கர மேந்தி. (எ)

வந்து றங்குகின் றார்தமைத் தீவருத் தாமல்
முந்து சக்கரத் தாற்றடுத் தானிரா முழுதும்
அந்த வீடெரி கின்றதீச் சிகையொளி யதுகண்
டெந்த வீட்டி லுள் ளாருமங் கெழுந்தனர் வந்தார். (அ)

கண்டை யோசக மித்திரர் குடும்பம்வெங் கனறூன்
மண்ட மூழ்கினர் மடிந்தன ரென்றுவாய் குழறிக்
கொண்ட லைந்துகூ கூவெனக் கங்குலுங் குறைந்து
சண்ட வெங்கதிர் தோன்றிடத் தீயெரி தணிந்த. (கூ)

உள்ளு றங்கின குடும்பமும் விழித்தன ருணர்ந்து
வெள்ள மேற்றயி லரிதிரு நாமத்தை வேண்டக்
கள்ள மில்லவ ரியாவருங் கேட்டனர் கருதி
மெள்ள வந்துளே நோக்கினர் வெந்திடா திருத்தல். (ம)

அதிச யித்தன ரரக்குமா ளிகைதனி லவர்
முதிர்நெ ருப்பிடை வெந்திடா தருள்செய்த முறையே
இதுவும் பண்டரி நாதன தின்னருளென்று
துதிசெய் தாரரி தன்னொடுந் தொண்டரைத் தொழுது. (௱க)

பின்னர் யாவருங் கூடின ரிவரது பெருமைக்
கென்ன தாமள வென்பதா யிவர்தமக் கியைந்த
நன்ன ராகிய குடும்பநாங் காப்பதே நலனென்
றுன்ன லாகிய வயித்திய நாதன்றன் னுழையில். (௱உ)

சிலநி லந்தரு வோமென்று தாசரிற் சேர்ந்து
பலரு மீவது பகர்ந்திடத் தாசரும் பகர்வார்
உலகெ லாந்தனக் குள்ளதோர் குடும்பமா யுள்ளோன்
இலகி யேயுறு பொழுதெனக் கொருகுறை யில்லை. (மங)

என்று பந்தமில் லாவெனைப் பந்தத்து ளிசைக்க
நின்று கூறுதி ரெனவவர் யாவரு நெடிது
நன்று நன்றென வலிந்தவர் நாமத்தை நவின்று
துன்று சாதனஞ் செய்தொரூர் தந்தனர் தொகுத்து. (மச)

தாங்க ளேயந்த நிலத்தினிற் பயிர்செய்து தரற்கும்
பாங்க ராயின ரப்படி யேசில பருவ
நீங்க லானபி னிருபனு னியமிக்க நேர்ந்தான்
ஆங்கு நீடதி காரியா யறிவிலா வலிந்தன். (மரு)

வந்தெ லாம்விசா ரித்தவன் வயித்திய நாதன்
சொந்த மாநிலத் தூர்சக மித்திரர் தொடக்கத்
தெந்த வாவியைந் ததுவென வரசனுக் கிசையத்
தந்த தாகமுன் றந்தவர் தமையெலாந் தடுக்க. (மசு)

அவரெ லாமுந்தி யாஞ்சக மித்திர ரான
தவர்த மக்குத வியதரு மந்தனைத் தடுத்துப்
புவனி வேந்தன தாக்குதல் பொருத்தமன் றென்ன
உவன டங்கிடா துலோபமே செய்திட லுற்றான். (மஎ)

பின்னு யச்சக மித்திரர் பெருமையைக் கேட்டுத்
துன்னி னுனவ ரில்லினைச் சோதிக்கத் தொடங்கி
என்ன நீர்சக மித்திர ரோபகை யிலையோ
மன்னு மிச்சகம் பகையிலை யுமக்கெனின் மாதோ. (மஅ)

எனது புத்திரிக் கிசைந்தது மணமதற் கேற்ப
அனக தெய்வபூ சனைசெய்ய வேண்டுமற் றதற்குச்
சினமு லாவிய வொருபுலி வேண்டுநீர் சேர்ப்பீ
ரெனவி சைத்தன னன்றெனத் தாசரு மெழுந்தார் (மகு)

காடு சென்றன ரொருபுடை யிருந்தனர் கவிஞ
ரீடு பண்டரி நாதனை நினைந்தனர் நெடிது
பீடு சேர்திரு நாமங்கள் பற்பல பேசிக்
கூடு வாய்புலி யுருக்கொடின் றெனவுளங் குறித்தார் (உ௦)

பத்த ருக்கருள் பாண்டுரங் கன்னர்தப் படியே
சித்தி ரப்படி வப்புலி யாய்முனஞ் சேர்ந்து
மெய்த்த வச்சக மித்திரர் கண்டுளம் வியப்ப
எத்த லத்தினில் யாருமை நவிந்தவ ரியம்பில் (உக)

கொன்று தின்றிடு வேனெனக் குவலய நண்பர்
நன்று வெம்புலி யாய்வரு கின்றவென் னுதா
துன்று நின்னையல் லாதெனக் கொருதுணை யுண்டோ
என்று தோத்திரம் பற்பல வியம்பின ரினிதே (உஉ)

கஞ்ச நாபவெம் மூரினி லோரதி காரி
எஞ்சி லாததன் மகள்மணத் தினுக்கிசை வாக
விஞ்சு தேவதா பூசைக்குப் புலியொன்று வேண்டுஞ்
செஞ்செ வேகொடு வருகென வெனக்குறா செய்தான் (உங)

ஆத லாலிவ ணெய்திநின் றனையழைத் தேன்யான்
காதலோடுநீ வருகெனக் கண்ணபி ரானை
நீத மாகவுத் தரியத்தைக் கழுத்தினி னிரப்பிப்
போதலாயின ரீர்த்துறை கின்றவூர் புகுந்தார். (உச)

காசி னிக்கெலா மித்திரர்வேங்கைகைக் கொண்டு
நேச மாய்வரக் கண்டவர் யாவரு நில்லார்
பாய்சி னப்புலி கண்டெதிர் நிற்பரோ பயந்து
வாசலிற்கத வடைத்தன ரூர்க்குள்வா ராமல். (உரு

உலக மித்திரர் தமக்கு மித்திரரொன வுள்ளார்
பலரு நீடிய மரங்களி லெறியே பார்த்துச்
சலச லோசனன் முசயே நீர்புலி தன்னல்
கொலையி யற்றவோ வருகின்றீ ரென்றனர் குறித்து (உசு)

அஞ்சு றீர்புலி யன்றுபாண் டுரங்கனே யாகும்
விஞ்சி நீடதி காரிக்கு மெய்க்கொள வேண்டி
இஞ்சு வந்தன னெனவதைக் கேட்டவ ரோகி
நஞ்சு நேர்துருக் கனுக்குரைத் தனரவ னடுங்கி (உஎ)

தன்ம னைக்கத வடைத்துறச் சார்ந்தவத் தாசர்
நன்ம திற்கத வடைத்திருப் பதுதனை நாடி
முன்ம யக்குறப் புலிவடி வாய்வந்த முதல்வன்
பொன்ம ணிக்கரத் தறைந்துபோம் வழிதரப் புகுந்தார் (உஅ)

துட்டன் வாழ்மனை வாசன்முன் சார்ந்தந்தத் துருக்கன்
கட்ட மைந்தன கதவையுஞ் சார்த்துறல் கண்டென்
னிட்ட னேமுன்ன நீசொன்ன படிக்கியா னின்றே
எட்ட ரும்புலி தனைக்கொடு வந்தன னெனுமுன் (உகூ)

கொண்டு வந்தவெம் புலிகுமு றிடுங்குரல் கொண்டு
மிண்டு வாலடித் தார்த்திடக் கேட்டவன் வெருவிப்
பெண்டு பிள்ளைக ளோடமு வவன்கொள்பெண் டாட்டி
அண்டு நீமிகு வயதுசென் ருயத ஞலே (௬௰

வெளிச்செல் வாயெனில் யாம்பிழைப் பேமென விளம்ப
ஒளித்த துஷ்டனங் கதற்குடன் படாதழ வுள்ளே
களித்த வூரினர் கேட்டற நகைத்திடக் கலங்கி
அளித்திர் நீரென வுலகநண் பரையஞ்ச லித்து (௬௧

அவனி மித்திரர் நீரென்ப தறிந்திலே னுகித்
தவறு செய்தன னென்றந்தத் துருக்கனுஞ் சாற்றப்
புவன மித்திரர் தமக்கருள் சுரந்துமீப் பொங்கி
உவமை யற்றவப் புலியைக்கொண் டேர்கடந் தற்ருர். (௬௨

கான்பு குந்தொரு தனியிடங் காண்டலுங் கண்ணன்
நான்கு தோளொடு சகுணரு பங்கொடு நன்கு
தோன்ற வேசக மித்திரர் பொன்னடி தொழலுந்
தேன்ற ருந்துழா யவன்றமு வினனருள் செய்தான் (௬௩

ஜகமித்திரர் திருவடிகளேசரணம்

ஆக சரித்திரம் ௰க-க்கு செய்யுள் (௲௬௱)

முற்றிற்று.



# ஜோகாபரமானந்தர் சரித்திரம்

வாகாகிய பாரசி யென்னுமூர் வந்த
ஜோகாபர மானந்த பக்தரோர் சோர்வு
மாகாதரி நாமசங் கீர்த்தன மான
பாகார்தரு நாவினர் தோமறு பண்பார். (௧)

சரியாவிர வேகொடு தஞ்சமு சார
பரிபாலனஞ் செய்பவ ராய்ப்பல நாளும்
அரிதாளிணைக் கெண்ணிரண் டாமுப சார
மரியாதைகொள் பூசையி லேதும்வ ழாமல். (௨)

இனிதாயியற் றிப்பின்ன ரோரெழு நூறு
கனிவாகிய வந்தனை செய்துபின் கண்ணன்
உனவோதிய கீதையி லோர்சுலோ கத்தை
நனியோதிய பின்புவந் துண்பரந் நல்லார். (௩)

இவ்வாறிவ ரெய்துவ திற்பிச கெய்தில்
ஒவ்வாருண வத்தின மேயுப வாசஞ்
செய்வார்மனை யிற்குடி யானவர் சில்லோர்
நைவாறிட வேயிறங் குற்றவந் நாளில். (௪)

மழைபெய்தத னலவர் வாசல்சே றாகிக்
குழைவெய்திடக் கும்பிடுங் கொள்கைகுன் றாராய்த்
தழைவெய்திய சக்கரக் கையனைத் தம்முள்
விழைவெய்துறக் கொண்டுநின் றார்புகழ் வேண்டி. (௫)

அரிதன்பத தாசர்செய் யுஞ்செயல் யாவுந்
தெரிதந்தன ரக்குடி யானவர் தேர்ந்து
மருள்விண்டிடு மாதவ ரோயிவ ரென்ன
ஒருவன்கடி தோடின னவண முற்றான். (௬)

கொண்டானொரு பொன்னுடை கொண்டுவந் தன்பர்
கண்டாமுறக் காட்டிநீர் கைக்கொள்க வென்றான்
தண்டாமரைக் கண்ணவன் றாசர்வேண் டாராய்
விண்டார்விலை மிக்குள திக்கலை வேறே. (௭)

பழைதாகிய துண்டெனி லீகெனப் பார்த்து
விழைவேமிகக் கொண்டவர் தம்மிடை மீதே
அழகாயுற வேயுடுத் தேகின னப்பால்
மழைபோனிறத் தான்றனைத் தாள்மற வாதார். (௮)

வேறு

அருமைசெய் திவரை யன்று னரைதனி லுடுத்துப் போன
பெருமையை நினைந்து பீதாம் பரத்தினைப் பெரிது பேணி
மருவுமக் கலையிற் சேறு வாய்த்திடிற் பழுதா மென்று
தருகலை தொங்கு ருமற் றம்மிடை யுடுத்திக் கொண்டு. (க)

மருவுதே காபி மான மாற்றிமுன் வணங்கல் போலத்
திருமகள் கொழுநன் றன்னைத் தேர்ந்துரும் பிடுதல் செய்யார்
கருதிய கலைமேல் மிக்க காதலின் வணங்க லாலே
பருதிமேல் பாலிற் சார்ந்தும் பணிவது முடிவுருமல் (ல)

மனத்துளே வருத்தங் கொண்டு மாலடி பணியுங் காலங்
கனத்ததிக் கலையா லன்றோ வென்றகங் கருதி யிந்த
அனர்த்தமா மபரா தந்தீர் வதற்கிந்த யாக்கை தன்னைச்
சினத்தவா ளாலீர்ப் போமோ தீயிடை யமிழ்த்து வோமோ (லக)

எனப்பல நினைந்து ஞம லேகின ரில்லம் விட்டு
மனக்கிசை வான வேறோ ரிடஞ்சென்று மருவும் போது
கனத்ததோர் நுகத்தைப் பூண்டு காளைக ளிரண்டு கொண்டு
சினத்துட ஞேட்டிச் சென்றான் செறுவினை யுழுதற்காக (லஉ)

ஓட்டியே செல்லு கின்ற வுழவனை நோக்கியன்பர்
ஈட்டிய துயரத்தோடு காளைக ளிரண்டுங் கொண்டோய்
கேட்டியுன் னிரண்டுமாடுங் கிளத்துமென் றனக்குத்தந்து
நீட்டிய விலைகொள் பீதாம் பரந்தனை நீகொள்கென்றார் (லங)

மற்றவ னுகந்துகொண்டு மாடுக ளிரண்டுந் தந்தான்
குற்றமி லன்பர்பாசங் கொண்டென்கா லிரண்டுங்கட்டி
உற்றதோர் நுகத்தி லேர்க்காற் கொப்புற மிருந்தபாசஞ்
சுற்றுறப் பிணித்து மாட்டைத் துரந்துபோ கென்னச் சொன்னர் (லச)

செயற்கருஞ் செயலிதென்று தேர்ந்திடா ஞதலாலே
மயற்செயுங் கலையைக்கொண்டு மாதவர் சொன்னவாறே
இயற்றினன் போக மற்றை யெருது களிரண்டுமீர்த்துப்
பெயர்த்தன கல்லு முள்ளும் பெருகின விடங்களெல்லாம் (லரு)

நரம்புட னெலும்பு நிற்க நண்ணிய தசைக டேய்ந்து
குரம்பையில் வழியச்செந்நீர்க் கோலமா யன்பரின்று
நிரம்பப சாரந்தீர நேர்ந்தது நன்றே யென்றார்
வரம்பறு துன்பநேர்ந்தும் வருத்தமெள் ளளவுமின்றி (லசு)

அரி திருநாமந் தன்னை யறைவது குறைபடாராய்ப்
பெரிதமை பட்டுச்சீவன் பெயர்வுறு மளவதானர்
கரிதுயர் காத்த கண்ணன் கருணைகொண் டோடிவந்தே
எருதுக டமைநிறுத்தி யிசைத்தகட் டவிழ்த்துவிட்டு (லஎ)

அன்பர்த முடல மெல்லா மங்கையாற் றடவுமுன்னே
துன்பங்க ளெல்லாந்தீர்ந்து தோன்றிட வடிவ நன்றாய்
முன்புநின் றவரைநோக்கி மூதறிவினரோ நீர்தாம்
என்புறத் தேயச்செய்தி ரேதுமோர் பிழையின்றாக (லஅ)

என்னடி யார்களுண்ப தெனக்குநல் லவியதாகும்
அன்னவர் பேசுகின்ற வவையெலாந் துதியேயாகும்
முன்னுகைத் தொழில்க ளெல்லா முத்திரை கொண்டதாகு
மன்னவர் நடப்பதென்னை வலஞ்செய்த லாகுமின்னும் (௰௯)

அவர்துயில் வதுதானென்னை யன்புடன் வணங்கலாகும்
எவமறக் களிப்பவெல்லா மெனதின்ப வடிவமாகும்
நவமுற வென்று கொண்டு நானும்மை நோக்கிநிற்கத்
தவலரும் பரமானந்த தாசரே நீரொன்செய்தீர் (௨௰)

இப்படி யாகச்சொல்லி யெதிர்நின்ற பாண்டு ரெங்கன்
மெய்ப்படி வத்தைநோக்கி விரைமல ரடியில் வீழ்ந்தும்
ஒப்பறு துதிகள் செய்து முவமையில் லானேயின்று
தப்பறக் கருணைசெய்க வென்னலுஞ் சார்ங்கபாணி (௨௧)

நன்றென வருளிக்கோயி னண்ணிநல் லன்பர்க் கெல்லாம்
ஒன்றிய பரமாநந்த ருஞற்றிய செய்கை கூற
நின்றுணர் ஞானதேவர் நின்னடி யார்கள்செய்கை
என்றும்யா ராலுஞ் சொல்லற் கெளிதலவெனத் துதித்தார். (௨௨)

ஜோகாபரமானந்தர் திருவடிகளே சரணம்.

ஆகசரித்திரம் ௰௨-க்கு செய்யுள் ௬௱௰௨.

முற்றிற்று.



# நரஹரிபக்தர் சரித்திரம்

கலிவிருத்தம்.

பரமன்வாழ் பண்டரிப் பதியி லேயொரு
நரகரி யெனும்பெயர் நண்ணு பொற்கொல்லன்
அரனெனு மல்லிகார்ச் சுனனை யன்புறு
திரமிகப் பூசனை செய்து வைகுவான். (க)

குடநடன் கோயிலுக் கணித்து மேவியும்
கடையுறு கோயிலின் மார்க்க நண்ணியும்
படவர வமளியான் றன்னைப் பார்த்திடான்
அடமுட னுறைகுவா னொரு நாளிலே (உ)

மிருதன முளனொரு வணிகன் விண்ணவர்
தொகுதனம் போலொளிர் துளவ மாலையான்
நகுதருங் கோயிலில் வந்து நாதனை
நெகுதரு முளத்தன்பு நிரம்பப் பூசித்து (ங)

தோத்திரம் பலபல செய்து தூயனும்
தாத்திரி நாதவோர் தனைய னல்குதி
சீர்த்திற மிகவெனக் கென்று செப்பியத்
தீர்த்தனை வணங்கித்தன் மனைக்குச் சென்றனன். (ச)

சென்றபின் சிலபகல் கழியச் சீதரன்
நன்றரு ளாலொரு நந்தன் தோன்றினன்
ஒன்றிய வுவகைமிக் கோங்க லுற்றவன்
மின்றிகழ் மார்பின னருளை வேண்டியே. (ரு)

நவமணி பொதியரை ஞாண்செய் திந்திரை
தவனிடைச் சாத்திடத் தழைக்கு முள்ளத்தான்
அவனிநா யகனுறை கோயி லண்மினன்
எவமிலன் புடன்றொழு தேத்தி நின்றனன். (சு)

அர்ச்சகர் தம்மை நோக்கி யாரிவ் வூரிலே
சர்ச்சனன் பொன்னரை ஞாண்செய் தக்கவன்
மெய்ச்சரி தன்னிடை மேவச் சாத்தற்கு
நிச்சயஞ் சொலுமென வவர்நி கழ்த்துவார். (எ)

இச்சின கரத்தரு கிருக்கின் றானொரு
மெய்ச்சுபொற் கொல்லன்மற் றவனில் வேறிலர்
நச்சின படிசெயற் கென்ன நன்றெனக்
கச்சமில் பொருள்வணி கன்வந் தெய்தினன். (அ)

கம்மியன் றனைக்கண்டு கமலை கேள்வற்கு
ரம்மிய மணியரை ஞாண்செய் கென்னலும்
விம்மிய தனத்திரு விரும்பு மார்பினன்
அம்மிய விடையளா வறிந்து வாவென்றான். (கூ)

வணிகனவ் வளவெடுத் துதவ மற்றவன்
மணியளை ஞாண்செய்து வழங்க வாங்கிவந்
தணிதிகழ் விமலனை யருச்சித் தேத்தினன்
பணிவுட னிடையிட விறைபற் றுமலே (௰)

இருப்பது கண்டுமீண் டெய்திக் கம்மியன்
விருப்புறச் சொலிச்சரி செய்ய வேண்டினன்
சரிப்படுத் தித்தரக் கொண்டு சார்ந்திடை
தரிப்புற நீண்டது தனைக்கொண் டேகினான். (௰௧)

நீண்டது குறைசெய்து நேர்க வென்றனன்
ஆண்டதைக் கம்மிய னன்னவா செய்து
பூண்டுகொ ணெனத்தர வந்து பூட்டினான்
மீண்டது குறைவுற விம்மி மீண்டனன். (௰௨)

நீட்டுறிற் குறைவுறுங் குறைக்கி னீள்வுறும்
பூட்டுறத் தக்கதா காது போவது
வேட்டிடு விமலற்கு விருப்ப மில்லையோ
ஈட்டுமென் பிழையினோ யாதினோவெனா. (௰௩)

மீளவும் வந்துகம் மியனை வேண்டி நீ
கோளிடை யளவது குறிக்க வாவென
நீள்சடை நிமலனை யன்றி நேருறேன்
வாளர வமளியான் மாட்டென் றேகினான். (௰௪)

ஓதலும் வணிகன்மிக் குறுக ணெய்தியே
நீதயை செய்தென்ற னியம முற்றுதி
மாதக வுனக்குறு மென்று வாழ்த்திநீ
போதரு கெனக்கொடு கோயில் போந்தனன் (௰௫)

வந்தகம் மியன்விழி மறைய வாடையாற்
பந்தனை செய்துகொண் டளவு பார்ப்புற
முந்தினன் வணிகன்கை பிடித்து முந்தலும்
நொந்தனர் கண்டவர் நுவல்வ தாயினார். (௰௬)

உயர்பரஞ் சோதியை யுற்று நோக்கிட
நயனங்க ளாயிர நாங்கள் வேண்டுவேம்
இயலிவன் கண்மறைத் தேக லென்னையோ
செயலெனத் தீவிழி தெறிப்பச் செப்புவார். (௰௭)

கற்பகம் போனிமிர் கமலக் கண்ணனார்
பொற்பிவன் கட்புலம் பொருந்துறுததோ
சிற்பர வடிவுகண் சேர்வ தேயன்று
பற்பல சொலியென்ன பயனென் றேசினார். (௰௮)

ஆகவந் தமலனா ரங்கந் தீண்டலும்
வேகவெம் புலியதள் வேழத் தோல்செறி
பூகநீள் சடைநுதல் பொருந்து தீவிழி
மாகவெம் மழுத்துடி மான்வி ளங்கவே. (௰௯)

துணுக்கெனக் கண்களைத் திறந்து தோன்றிய
இணர்த்துள வணியலு மிடையிற் கைகளும்
திணர்த்தசெங் கல்லிலே திகழுந் தாளுடன்
மணித்திரு மேனிமால் வடிவுங் கண்டனன். (௨௰)

காண்டலு மூடினன் கண்கள் முன்புபோல்
நீண்டசெஞ் சடையவ னிலைய தாகவே
தீண்டிய கைகட்குத் தெரியப் பட்டது
மீண்டுதன் கண்களை விழித்து நோக்கினான். (௨௧)

பச்சைமா மலைநிகர் பசும்பொற் சோதியை
அச்சுத னாகநின் றருளு மையனை
மெய்ச்சிவ வடிவமாம் விழிகள் மூடினால்
நச்சியே திறக்கினா ரணனி தென்னையே. (௨௨)

என்றுற மயங்கினா னெதிர வஞ்சினான்
தன்றுணைக் கண்கணீர் ததும்ப நோக்கினான்
மன்றலஞ் செழுஞ்சரண் வணங்கி வாழ்த்தினான்
ஒன்றல பலதுதி யுருகு முள்ளத்தான். (௨௩)

நின்னில்வே றேசிவ னெனநி னைக்கநின்
றன்னில்வே றிலையெனச் சமைத னன்றரோ
என்னிலா மையமின் றேத விர்ந்தது
பொன்னிலா வியநிறப் பூமி கேள்வனே. (௨௪)

சிவனுரு நின்னுளே செறியச் செய்தியேல்
புவனமேல் லாமுன துந்தி பூத்ததே
தவறிலை தவறிலை யென்று தாழ்ந்தனன்
அவன்முக நோக்கியீ தமலன் கூறுவான். (௨௫)

வேற்றுமை கொள்ளலை சிவன்வே றேயெனத்
தோற்றுமென் னிடத்துநீ தொழுஞ்ச தாசிவன்
சாற்றுமென் சொற்படி தயங்கக் கண்டுநீ
போற்றுகென் றுரைசெயப் பொருந்த நோக்கினான். (௨௬)

தலைமிசைச் சிவகுறி தயங்கக் கண்டனன்
நிலமிசை வீழ்ந்தடி நெடிது தாழ்ந்தனன்
அலைமிசைத் துயின்றவ னடியை யன்றுதொட்
டுலைமிசை யுருகுபொன் னொத்துப் பற்றினான். (௨௭)

பற்றிநின் றான்றனைப் பழிப்பி னாமர்செய்
துற்றபோ னகவமு துண்கிற் பாரொடும்
இற்றைநீ யும்வரு கெனலு மெய்தினான்
கற்றையஞ் சடைமுடிக் கண்ணு ளானொடும். (௨௮)

அடியரோ டிருவரு மமுதுண் டார்ந்தபின்
சடிலவான் பிறையவன் றமனி யக்கோலன்
படியைநேர் கண்டுநீ பதும நாபன்றன்
குடியடி யவரொடு குழுமி வாழ்வதே. (௨௯)

எனக்கிசை வெனவினு யவனு மின்றுதொட்
டுனக்கிசை வேயெனக் குறுதி யாமென
மனக்கிசை நரகரி தாச வாழ்கெனக்
கனக்கிசை வணனடி யார கன்றனர். (௩௰)

நரஹரி பக்தர் திருவடிகளே சரணம்.

ஆக சரித்திரம் ௰௩-க்கு செய்யுள் ௩அ௰உ.

முற்றிற்று.





# ஜனுபாயி சரித்திரம்.



எழுசீராசிரிய விருத்தம்.

கார்த்திகை யேகா தசித்தின மெவருங் கருதுசீர்ப் பண்டரி புரத்தில்
யாத்திரைக் காரர் பலரவண் வந்தா ரதிலொரு கன்னிகை யீன்ற
தாய்த்தரு தந்தை யொடுவந்து கண்டு சவுரிவாழ் பண்டரி மகிமை
ஏத்தினள் மகிழ்ந்து தந்தைதாய் தம்மை யின்பொடு நோக்கின ளிசைப்பாள் (௧)

நானிவி டத்தி னிரந்தர வாச னனிசெய வேண்டினே னுங்கள்
பானினை வில்லே னுடன்வரு கில்லே னென்றவள் பகர்வதைக் கேட்டு
மானினை யிவளுக் கிச்சிறு வயதில் வந்ததென் னென்றவர் வியந்து
மீனிகர் விழியா டனைத்தனி விடற்கு மிகமனம் வருந்தினர் மீண்டும். (௨)

பலவிதத் தழைத்து முடன்படா தரியின் பாததா மரைநறை பருகி
நலமிகக் களித்துப் பொருந்துநிச் சயத்தை நன்றறிந் திருவரு நயந்து
மலர்மகள் கொழுநன் கோயிலில் விடுத்து வந்தனர் தங்களூர் பின்பு
நிலமளந் தவனைச் சேவிக்கக் கோயி னேர்ந்தனர் நாமதே வென்போர். (௩)

பாண்டரங் கனைக்காண் பவரவ ணுலவு பாவையைக் கண்டவள் மீது
வேண்டுறு கருணை பிறந்துநீ தனியாய் விரும்புதாய் தந்தையை யின்றி
ஈண்டுவந் தனையா ருன்பெய ரென்னை யியம்பெனச் சனுயிதா னென்பேர்
தாண்டுறு தரங்கக் கடனிறத் தவனே தந்தைர குமாயிதான் றாயே. (௪)

எனக்குவே றொருவ ரின்றென விங்ங னிருக்கின்றே னென்பது கேட்டு
மனத்திடைத் தயைமிக் கெய்திய நாமர் மற்றந்தச் சிறுமையை வருக
எனக்கொடில் லேகிக் குனயியை நோக்கி யிச்சிறு மியின்வர லாறு
தனைத்தெரி வித்து மற்றிவள் கண்ணன் றாசியா கியவொரு கூனி. (௫)

கலியுகத் துதித்துப் பண்டரி புரத்துக் கருணைமா முமத்திற் களித்து
மலிதரு மனத்தா ளென்னலுங் குணுயி வளர்த்தனள் மருவியன் புற்று
மெலிவற வளர்ந்து பெரியவ ளாக வேறுளோர் யாரைநீ யென்றால்
குவிசிசேய் பாக னடிபுகழ் நாமர் குடியடித் தாசியா னென்பாள்

இப்படி நாம தேவர்தம் மனையி லியன்றவூ ழியம்பல செய்து
மைப்படி மேனி மாயனை நாமர் வாழ்த்தல்கேட் டௌமகிழ் வாவாள்
அப்படி யாக வொருதினத் திரவி லைந்துநா ழிகையள வதிலே
மெய்ப்படி நாமர் முதலினர் துயில மேவின காற்றொடு மழையே

மழைதெறுங் காற்றான் மாடம்வேய் கூரை மாய்ந்தன பலபடி யாகத்
தழைதுழாய் மார்பன் றன்பொரு ளாகிச் சக்கரத் தாற்றடைசெய்தான்
விழைதரு நாமர் முதலினர் துயரா விதம்பின்பு தானவண் மேவிக்
குழைசுவ ரொடுத்துக் கூரையும் வேய்ந்து கொண்டுறு போதிலே நாமர் (அ)

விழித்தனர் வெளியே வந்துமுன் கண்டார் விமலபீ தாம்பரம் விளங்கச்
செழித்தகே யூர குண்டல மகுடந் திகழ்திரு மேனியைப் பணிந்தார்
வழுத்துசீ ரடியைப் பற்றிநா தாநீ மற்றிந்த விரவில்வந் தென்னை
இழைத்துள தென்னத் தொண்டரைக் காப்போ னியம்புவா னெறிமழைக்காற்

உன்னது குடிசை யழிந்தது போகா துறச்செவ்வை செய்தன னீநின் [றால்
றன்னது குடும்ப வியற்கையை விட்டென் றனைச்சரண் புகுதலா லின்னே
என்னது சுமையா யிதுசெயே னாகி லெனையுனை யீன்றவள் வைவாள்
மன்னது தனைநீ யறிதியே யெனுமுன் வந்தனள் குணுயிமால் வடிவை (௯)

கண்டடி வணங்கிப் புகழ்ந்தன ளாகக் கலந்துமூ வருமனை புகுந்து
கொண்டுறை போது ஜனுபாயிவந்து கொண்டல்வண் ணன்பதம் வருடி
மண்டுப சாரம் புரிந்தன ளிருக்க மாலடி வணங்கியே நாமர்
தொண்டுகொண் டவனே யெம்முட னமுதுசெய்கென வேண்டினர் சொன்னார்

நாயக னிசைந்து கோவிந்தன் விட்டலன் நாரணன் மகாதேவ னென்போர்
ஆயபிள் ளைகளு நாமருங் குணுயி யன்னையு மனைவியு மாகப்
பாயவோர் கலத்தி லமுதுணும் போது பார்த்தனள் ஜனுபாயி மனத்தில்
மேயதோர் வருத்தங் கொண்டுபண் டரிவாள் விமலனை யெனைவிடுத் தனையே

இழிவுநீ செய்வ தியல்புனக் காமோ வெனைப்பர தேசியென் றென்ன
வழுவில்சீர் விடல ஞமரை நோக்கி மற்றெனக் கருத்துமிவ் வமுது
கழியநன் கிலதென் றுரைத்தலு நாமர் கருதினர் ஜனுயியு முன்னா
தொழிவதே யென்ன வதுதனை லுணவிங் குருசியா யிலதுனக் கென்றார் (௰௧)

எனலுமுன் பவன்கேட் டெழிற்கர முதறி யெழக்கண்ட ராஜாயி நாதன்
றனதுகை கால்கள் சுத்திசெய் தனள்பின் சாமியோர் பாயன்மீ திருந்தான்
பினரனை குணுயி ஜனுயியை யழைத்துப் பெறுகென மிச்சிலைத் தந்தான்
அனகமா மிதுதான் பிரமருத் திரர்க்கு மகப்படா வமுதெனக் கொண்டாள். ( )

கொண்டவ டனது குடிசிடை வைத்துக் கோகன கத்தவள் கொழுநா
அண்டிய வெனதில் வருகென வேண்ட வன்புள நாமரோ டாங்கு
மண்டுறத் துயிலு மாதவன் விழித்து வந்தந்தச் சனுயியை மடந்தாய்
உண்டிடும் போது நீயிலா ததினு லுண்டிலே னிரம்பவிப் போது (௰௩)

ப்சியுள தன்ன மெனக்கிடு கென்னப் பாண்டுரெங் காபவ நாசா
நிசியிடைக் குனயி தந்தனள் மிச்சி னினக்கது தக்கதோ வென்று
கசிவுறு மனத்துச் சனயிதான் சொல்லக் கண்ணனன் றதையிடு கென்ன
வசியறு ஜனயி யிடவவ னுடனே மாதவ னுண்டுள மகிழ்ந்தான் (௰௬)

பின்புகை கால்கள் சுத்திசெய் தங்குப் பேசிய விருவருந் துயில
வன்புறு குனயி விழித்தனள் வெளியே வந்துதன் புதல்வனைக் கூவி
அன்புள நீயு நானுந்தூங் கினபின் பகிலகா ரணனிந்தச் சனயி
தன்புடை வந்து மிச்சிலை யுண்டு சயனங் கொண் டனனங்கே யென்றாள் (௰௭)

நாமதே வன்ற யெவருளந் தூய்மை நணுகிய தோவங்கு நணுகக்
காமனார் தாதைக் கிலையொரு கால நியதிதான் கருதிய போதே
போமதே செய்கை மிச்சிலுண் பதுமோர் பொருளன்ற இயற்கையே யென்ப
தாமது கேட்டுத் துயில்செயும் விமலன் சாமமொன் றுறவிடி யற்கே (௰௮)

எழுந்திரு ஜனயி கிரிகையிற் றூசி யெலாந்துடைத் துன்வர வினையான்
விழைந்தினி திருக்கின் றேனென விழியாள் விழித்திட வெடுத்தினி திருத்திச்
செழுந்தனிக் கரத்தா லவடலை மயிரைச் சிக்கறத் திருத்திமுன் றனைக்
கொழுந்தினைத் தலைமேற் றந்துதா னேயோர் கூடையி லரிசியைக்கொணர்ந்து

நானரைக் கின்றேன் மாவையிங் குனது நன்கையால் முளைதொட்டுக்கொண்டு
தேனெனப் பாடு கென்னலும் ஜனயி தீண்டின ளன்பினிற் சிறந்து
ஞானதே வாதி யடியர்பால் விமல னல்லருள் செய்தினி தாடத்
தானெலா மோவி யபங்கமாங் கவியாற் சாற்றிடக் கேட்டனன் செளரி (௨௰)

தலைதுளக் குடனே பரவச னகிச் சார்ங்கவிற் கையன்மா வரைக்கும்
நிலைதெரி குனயி ஜனயிபால் வந்து கின்வயி னரிசியே தரைக்கச்
சொலையெனப் பேசா திருப்பது கண்டு சுளித்துவேத் திரங்கரங் கொண்டே
அலைவுற வடித்தாள் யாருடன் பேசி யமர்ந்தனை யிங்ஙனே யென்று (௨௧)

சினத்தின ளடிதான் சீதரன் முடிமேற் சேர்தலு நான்விடோ பாவிம்
மனத்திலன் புடைய ஜனயிபால் வந்தேன் மாவரைத் திடற்கெனை யடியேஸ்
எனத்திரு நாத னமதே வறிந்தே யீன்றதாய் தன்முகநோக்கி
வனத்துழாய் மார்ப னென்றுநீ யறியாய் வருகெனக் குனயியு மயங்கி (௨௨)

நாணின ளுலக நாதனை யடித்தே னேயென கலிவொடு மனத்திற்
கோணின ளாகி ஜனயிதா னரியைக் குறித்தன டன்வசங் கொண்டாள்
ஏணிலை யெனக்கென் றிருத்தலும் ஜனயி யெம்பிரா னிடத்துறு மன்பாம்
ஆணியைத் தொட்டு விராகமாந் திரிகை யரைத்தனள் சஞ்சித வரிசி (௨௩)

அவ்வியத் தத்தில் வியத்தமா யரைத்த வந்தமா வினைத்தையும் வாரிச்
செவ்விய கூடை நிரப்பிவைத் தன்பின் றிருவின யகன்றுயில் செய்ய
வவ்விய ஜனயி விடியுமு னெழுந்து மாதவன் றனைத்துயி லெழுப்பி
இவ்விடைவிடுத்துன்கோயில்சே ராம விருத்தியேற் கலகமா மென்றான் (௨௪)

என்றலுந் துயின்றோன் விடிந்ததோ வென்ன வெழுந்துநித் திரைமயக் கத்தால்
தன்றனிப் பீதாம் பரத்தையும் பதக்கந் தன்னையுங் கிடத்தியச் சனயிக்
கொன்றிய கந்தை யுடுத்தித்தன் கோயி லுட்புகுந் துறைந்தனன் விடிந்த
பின்னரையர்ச் சகர்தாம் வந்துபொற் கோயிற் பிறங்கிய கதவினைத் திறந்தார். ()

கந்தையைப் போர்த்துச் செங்கண்மே னின்ற கருணையங் கண்ணனைக் கண்டார்
எந்தையே பீதாம் பரமெவர்க் கீந்தா யெங்ஙனே தேடினுய் கந்தை
நிந்தையி லுனது மேனிக்குக் கந்தை நேர்வதோ வென்றதை நெகிழ்த்து
விந்தைசேர் பதக்கந் தன்னையு மார்பிற் கண்டிலர் வெருண்டனர் வியந்தார். ( )

மூடின படியே கதவுதா னிருக்க முந்தின தெவ்வழி யென்பார்
கூடினும் போவ தியாரக மென்பார் கொண்டவிக் கந்தைதா னமர்
தேடின தாசி தன்னது போலத் தெரிகின்ற தறிகுவ மென்று
நேடினர் நாம தேவரிற் புகுந்து நின்றதோர் ஜனுயியைக் கண்டார் (உஎ)

நின்னிடைக் கண்ணன்வந்தாதா லிங்கேநேர்ந்ததுபொன்னுடையெனக்கொண்
டுன்னிடை யவன்றன் பதக்கமு முளதா முதவுதி யென்னலும் ஜனுயி
என்னிடைக் கிடையா தென்னலு நீதா னெப்படி யன்னவ னிங்கே
துன்னிடச் செய்தா யென்றவ டுகிலைச் சோதிக்கப் பதக்கந்தோன்றியதே (உஅ)

கண்டவர் வெருட்டுங் காலையி லூரார் கலந்தனர் நாமர்தம் மனையோ
பண்டைய தன்று நேற்றுறு காற்றிற் பறந்தன கூரைக ளெல்லாம்
கொண்டநம் மனையோ புதுக்கில மிதுவோ கூரிருள் விடியுமுன் புதிதாய்
அண்டிய தென்னே யதிசய நாமர்க் கமைத்தவன் கண்ணனே யாமால். (உகூ)

என்பது கேட்டோர் கண்ணனே யருளி னீகல னுறுபெரு மாடம்
நன்பொரு ளென்பார் சிற்சிலர் செல்வ நனிதரிற் செருக்குமிக் காகி
அன்பில ராவா ராதலா லுதவா னமலனென் றுணாப்பவ ராக
முன்புசோ தித்துக் கொண்டவர் ஜனுயி மோசஞ்செய் பவளென முனிந்தார் ( )

இங்கிவள் சாமித் துரோகியா தலினு லேற்றுதுங் கழுவினி லென்றே
அங்கவ ளைக்கொண் டம்புலிப் பாகைக் கணுகலுஞ் சனுயிதா னமலா
செங்கண்மே னின்ற சீதரா வடியேன் செய்ததெ னிங்ஙனே செயற்கென்
றங்கைக டலைமேல் வைத்தனள் புலம்ப வநாதர க்ஷகனரு ளாலே (௩க)

கழுமர நீராய்க் கரைந்தது ஜனுயி கண்கலக் கந்தனைக் கரைப்பான்
வழுவில னோடி வந்தனன் கண்ட மகிதலத் தோரெலா மகிழ்ந்து
குழுவினர் புகழச் சனுயியைப் பிடித்தோர் கோதிலாய் நின்பொருட் டமலன்
தழுவிவ னோடி வந்தத னுனீ தன்னியை யெனவிடுத் தகன்றார். (௩உ

விடுத்தபின் ஜனுயி வீட்டில்வந் தமர்ந்து விமலனை முன்புபோல் வேண்டித்
தொடுத்தன ளபங்கக் கவிகள்செய் நாளிற் றுளவணி தோளினுன் மைக்கூ
டடுத்தெழு துங்கோல் காயிதங் கொண்டங் கவள்சொலு வனவெலா மெழுத
மடுத்தனன் கோயி லிருக்கநேர் வந்தார் மாறிலா ஞானதே வருமே (௩௩)

ஞானதே வரைக்கண் டெழுதிட வுள்ள நாணிமை முதலெலா மறைத்துத்
தானமர் போதுகண்டவர் வணங்கிச் சாற்றுவார் தேவகி தனயா
ஊனமின் றேகாந் தத்திருந் தென்னை யெழுதினை யுரைக்கென நாதன்
றானரு ளுடனே ஜனுயித னபங்கக் கவியெழு தினனெனச் சாற்ற. (௩௪)

கேட்டலுஞ் சிரித்து ஞானதே வமலா கிளத்திய ஜனுயிநின் புகழே
நாட்டல்செய் கின்று ளதுபிற ராலே நயந்திடத் தக்கது நீயே
தீட்டல்செய் வதுதான் சிறந்ததன் றென்னச் சீதரன் ஜனுயிதான் செப்பல்
வேட்டன னினிதா யிருத்தலா னுனே யெழுதவும் விரும்பினே னென்முன். ( )

முன்புபோ லெழுது கின்றவன் ஞான தேவர்த முகத்தினை நோக்கி
நன்கிது தன்னை மறைத்தது கமல நான்முகற் குந்தெரி யாது
நின்புலந் தோன்றிற் றெவ்வித மென்ன நிமலனை ஞானதே வென்போர்
அன்புட னோக்கி யையநின் பெருமை யடியருக் கெளிதுதா னென்றார். (௩௬)

வினவிய விட்டலன் சிரித்துற ஞான தேவரவ் விமலனை நோக்கி
அனகநீ வருக நாமனைக் காண வென்னலு மமலனும் விரும்பிப்
பினருணர் ஞான தேவர்தங் கையைப் பிடித்துட னமதே வமரும்
மனைபுகுந் திடலு நாமதே வெதிர்ந்து மார்புறத் தழுவினர் மகிழ்ந்தார். (௩௭)

ஆசனத் திருவர் தம்மையு மிருத்த வப்பொழு தன்பரொல் லோரும்
நேசமுற் றடைய வவர்கள்யாவரையு நிமலனுந்தழுவின ரிருத்தி
மாசறு நாம தேவரை நோக்கி மாலடி யார்களைக் காணக்
கூசமில் லாமல் ஜனாயியை யிங்கே கொடுவரு கென்றனன் கூற. (௩௮)

அடியவர் கேட்டுத் தாய்க்குரை செய்ய வவள்மரு மகட்குரை செய்யக்
கடிதிரா ஜாயி வெளியிலே சாண மிதித்துறு ஜனாயிக்குக் கழறப்
படிறறு ஜனாயி கால்கரஞ் சுத்தி பண்ணினள் விரைந்துவந் தங்கே
நெடிதம ரன்பர் குழாத்திடை யிருந்த நிமலனைக்கண் டடிபணிந்தாள். (௩௯)

நின்றவப் போது ஞானதே வென்போர் நிறைகுண நாமரை நோக்கி
இன்றுள தான வதிசயங் கேளீ ரெம்பிரான் ஜனாயிபா டுவதை
நன்றினி தெழுதிக் கொண்டுறு வதனை நான்கண்டு வந்தன னென்ன
மன்றலந் துளவோ னனெழு துவதால் வந்ததோர் குறையென்னை யென்றான்.

பின்னரு மெனக்கு ஜனாயிசொல் வதெலாம் பெரியதோ ரின்பத்தைத் தரலால்
நன்னரங் கெழுத லாயின னதனை நவிலுவோர் கேட்பவர் தம்மேல்
முன்னரன் புடையே னாகிப்பின் றருவேன் மோக்கமு மெனவவன் மொழியத்
தன்னரு கிருந்த தொண்டரொல் லோருந் தனித்தனி சிரித்தனர் மாதோ. (௪௧)

ஜனாயியை நோக்கி ஞானதே வென்போர் தங்குமிந் நாமதே வென்போர்
முனாளிர ணியற்கு மைந்தனாய்ப் பின்பு முரணிய வாலிக்கு மகனாய்ப்
பினாளிலுத் தவராய்ப் பாண்டுரங் கனுக்குப் பெரிதன்ப ராயினர் நீதான்
இனாளென வுரைத்தி விமலனுக் கன்பா யிருத்தலின் காரண மென்றார். (௪௨)

பத்தவ தாரஞ் செய்தவனான பரமனர்ச் சாவதா ரத்தும்
உத்தம னாகி யுறைதலால் யானு முடனுடன் றோன்றிவந் துற்றேன்
இத்தனை தானென் றியம்பலு ஞான தேவென்போ ரின்பொடு கேட்டு
மெய்த்துள மகிழ்ந்தார் பின்புபாண் டுரங்கன் மெய்யடி யவர்க்குரை செய்வான்

நீவிரொல் லோரும் பாடுமெய்க் கவிக ணிலைபெற வெழுதுகி றதற்கு
மாவிர குள்ளோர் தம்மையான் வகுப்பேன் வழுவிலா ஞானதே வியம்பும்
பாவினைச் சச்சி தானந்தர் நிவர்த்தி பாட்டினைச் சோபான தேவர்
மேவிய முக்தா பாயிதன் கவியை ஞானதே வெழுதவும் விதித்து. (௪௪)

பரமவா னந்தர் பாடலை விசோபா கேசரர் சாவந்தியாமா
ளரகவி சிவாகு ரவர்கூர்ம தாசர் நன்கவி யாவையுஞ் சுதேவர்
அரமிய சோகா மேளர்தந் தொடர்பை யனந்தபட் டராகவு நாமர்
வரமிகு தூக்கும் ஜனாயிதன் யாப்பும் வரைகுவன் யானென வகுத்தான். (௪௫)

அங்குள ரான வன்பரொல் லோரும் ஐயினையைப் புகழ்ந்தன ராகப்
பொங்கிய வுவகை கொண்டுள நாம ரன்பரைப்பூசனைபுரிந்து
மங்களஞ் சொல்லப் பாண்டுரங் கனுக்கு மாதவன் கோயிலுக் கெழுந்து
தங்கின னூருக்கு மணிக்கிவை யுரைக்கத் தாசர்தந் தமதிடஞ் சார்ந்தார். (௯௬)

ஐனாபாயி திருவடிகளே சரணம்.

ஆக கதை ௧௪-க்கு செய்யுள் ௲௨௰௮.

முற்றிற்று.



# மச்சேந்திரநாதர் சரித்திரம்.

சங்கரனொரு நாள்பாற் சாகரதீ ரத்தில்
மங்கையொடினி துற்று மகிழ்தருகிற ராமன்
தங்கருணரு வத்தைத் தனதுளமுற வைத்துப்
பங்கமிலவ ருமம்பகர்தருமவ னானான். (௧)

அதுதெரிபவ ளான வம்பிகைபதி யான
விதுவணிமுடி யானை வேண்டினளுனை மிக்க
தெதுவுளதொரு தெய்வ மெனவினவலு மன்னான்
கதுமெனரகு ராமன் காரணமுறை செய்வான். (௨)

பிரமனைமுத லாகப் பேசிமையவ ரோடே
அரனெனவுள யானு மாவதுமவ னாலே
திரனிலையித னாலே சீஹரிதிரு நாமம்
பரவுவெனவ னீலப் படிவமுமுளம் வைப்பேன் (௩)

என்றதுவின வுற்ற விம்மலைமக டேர்ந்து
நன்றது னகத்தி னண்ணியுமிது காறும்
ஒன்றதுதெரி யாம லுறைவதுதக வாமோ
இன்றதுமொழி கிற்பா யெனவிரசித வெற்பான். (௪)

பணிவுடனெதிர் நிற்கும் பார்வதிதலை மேற்கை
அணிவுடனுப தேச மறைதருகிற போது
துணிவுறுநினை வின்றிச் சோர்துயிலது மேவ
மணிதருகடல் மீனின் வயின்மகவும் மென்றே. (௫)

சிவனருளுப தேசஞ் செவிகொடுவினை யுற்று
நவநரவுரு வாகி நண்ணியவது கண்டு
திவமிகவுறு மச்சேந் திரனெனுமொரு நாமம்
பவனிலகுற நல்கிப் பார்வதியொடு போனான். (௬)

அம்மகவுட னேயீ சானனதரு ளாலே
செம்மைகொள்வை ராக சீலமென்மேலாகி
வெம்மயலது வின்றி மேவரிதிரு நாமம்
தம்மணிநா வோதத் தனிதிரி தரலானார் (௭)

தாய்வயிறது விட்டுத்தாம் வருகிற போதே
மேயினஹம் சோஹம் விடுகிலரத னாலே
ஓய்வருதிரி காலமும்முணர்தரு சக்தி
ஆயினர்யா ராலு மரிவருநிலை யுற்றார் (௮)

அகலிடமுள தீர்த்தம் யாவையுமே மூழ்குந்
தகவுறுநினை வோடு தாம்வருமூர் தோறும்
நுகர்தரலிர வூணுய் நோன்பது செயல் காடாய்
மிகவயதீ ராறு மேவினர்வரு நாளில். (௯)

ஒருதினமோ ரூரிலோர்தனவணி கன்வாழ்
தருமனைமுன நின்று சாற்றினரா லக்கென்
றருமைகொ ளொலி கேளா வம்மனையுளா கிற்பாள்
இருகரநிறை பிச்சை யேந்தின ளெதிர்வந்தாள். (௧0)

வந்தவளெதிர் நிற்கு மாதவர் தமைநோக்கி
அந்தமிலுப சாரத் தஞ்சலிபல செய்து
நிந்தையிலுரு வத்தீர் நீரிவண்வரு மாயான்
எந்தநல்வினை செய்தே னென்றுருகின ளன்பால். (௧௧)

அன்புறவெதிர் நின்றீ ராதலி னடியேற்கோர்
துன்பிலமக வில்லை யெனுமொருதுய ரன்றி
நன்பொருளுணர் கிற்கு நற்றவமுதி யோரே
இன்புடனருள் செய்வீ ரென்றரிசியை யிட்டாள். (௧௨)

அன்றவளுரை செய்யு மன்புறுமொழி கேளா
மன்னினதவ யோகர் மற்றவள்முக நோக்கி
நின்னிடமக வுண்டா நீயிது பெறுகென்று
நன்னிற முளநீறு நல்கினருரை செய்வார். (௧௩)

நீயிதையுண் பாயே னின்வயி னெடுமோறன்
தூயநலம் சத்தாற் றோன்றுவன்மக வென்றே
ஆயவரகல் வுற்றா ரானபி னம்மாது
போயயல் மனையாளைப் புகவகம்வரு வித்தாள் (௧௪)

வருமவடனை நோக்கி மானனவிழி யாளே
ஒருதுறவின ரிங்கே யுற்றனர்பெறு பிச்சை
தருதல்செய்தவர் தம்மைச்சந் ததியருள் கென்றேன்
அருளினர்திரு நீற்றை யயில்கெனவவர் போனார் (௧௫)

நானுணங்கினே னின்றே னவிலுங்கினிலே வென்ன
மீனுறழ்விழி யன்னாள் வேண்டலைதிரு நீறு
தானுணவுத விப்பின் றம்வசம்வரல் செய்வோ
ரானுணர்வது மாறி ணூர்பலரறி யென்றாள். (௰௬)

அவளுரைகொடு தீயி லன்னதை யிட்டாள்பின்
நவமுடனொரு மூன்று நண்ணின வாண்டாக
உவமையின்மச் சேந்த்ர நாதருமுவ னுற்றார்
இவள்மனையிலும் வந்தே இடுகென வெதிர் நின்றார். (௰௭)

மற்றவளிடு பிச்சை வாங்கினர்முக நோக்கி
அற்றையினிலே வுண்டா யரிவைநின்மக னெங்கே
இற்றையெனெதிர் காட்டு கென்றனரவ ளஞ்சிச்
சொற்றருகில னின்றா ளுள்ளது சொல்கென்றார். (௰௮)

மாதவரோ நீற்றால் வஞ்சனே யுளதென்றே
ஓதயன்மனே யாளா லுளவடுப் புறுதீயில்
மேதகுதிரு நீற்றை யிட்டனன்வெகு ளன்மின்
ஏதமிதென வென்றா ளெதிர்துறவினர் சொல்வார். (௰௯)

நீறிடுபலி யெங்கே நீயிடுமிட மென்ன
மாறிலள்பனி ரண்டு வருடமுமிடு சாம்பர்
வீறொருகுழி யுண்டென் றக்குழியிடை மேவ
ஆறினர்தமை யுய்த்தா ளன்னவரவ ணின்றே (௨௰)

அதிர்தரவா லக்கென் றாரதுவின வுற்று
முதிர்குழியிடை நின்று முந்தினதா தேசென்
றெதிரொலிகுரு சாமி யென்பதொடது கேளாப்
பொதிரதிசய ராகிப் பொங்கினரு ருள்ளார் (௨௧)

அவ்வயின்மச் சேந்தர ரானவர்வணி கன்றன்
செவ்வியமனே யாட்குச் செப்பினராட் கூட்டி
இவ்வயினுறு குப்பை யெடுமெனவெடுப் பிக்கத்
தீவ்வியவுரு வோடு சேயுறுவது கண்டார் (௨௨)

பன்னிருவய துள்ள படிவமொடொரு யோகு
மன்னினர்படி மீது வைகுதலில ராக
முன்னுறுவது கண்டு முற்றியதவ யோகர்
சென்னியின்மிசை யத்தஞ் சேர்த்தினர்நிலைதீர (௨௩)

அக்குழியிடை யுற்றோ ரப்பொழுதெழ லுற்றுத்
தக்கவரிரு தாளிற் றாழ்தலுநா மந்தான்
தொக்கதொர்பலி நின்றுந் தோன்றினரத னாலே
மிக்கதொர்கோ ரக்க ரென்றனர்வினே தீர்ந்தார் (௨௪)

வேறு.

குழியினின் றும் வெளியில்வந்த கோரக்க நாதர்தமைக் கூட்டிக்கொண்டு
பழியிகந்த முனிவர்செல்லப் பார்த்ததன வணிகன்றன் பாரிதன்னே
மொழிகடந்தின் னனசெய்தா யெனவெறுக்கப் பெரியதவ மோனர்கண்டு
விழியினருள் சுரந்துமக்கு மகனுண்டா மெனவாழ்த்தி மேவி னாரோ (௨௫)

போம்பொழுது கோரக்கர் மச்சேந்திரர் தமைப்பணிந்து பொருந்தெனக்குத்
தாம்பதுமக் கரமெனது தலைவைத்துத் தாரகமந் திரத்தைச்சாற்றி
மேம்படுத்து கெனவேண்ட மச்சேந்தர நாதருடன் விளம்ப கில்லார்
ஓம்புகுரு சேவைசெய்தாற் பின்புதெரிந் துபதேச முறுதி யென்றார் (உ௬)

நன்றென்று கோரக்கர் நவில்குருவின் றாள்வணங்கி நடந்து கூடச்
சென்றங்கோர் நகரத்தின் புறத்திருந்து பிச்சைகொண்டு சேர்கோ ரக்கா
என்றந்த மொழிகேட்டுக் கோரக்கர் மனைகடொறு மிரந்து சென்று
மூன்றுன்று பிராமணபோ ஜனமனைமு னுலக்கு மொழிந்து நின்றார் (உ௭)

அம்மனைவாழ் பார்ப்பினியச் சொற்கேட்டு வடைபோளி யதிர சம்பை
விம்மநிறைத் தலுங்கொண்டு மேவிவெளிப் புறத்திலுறு விமல ருக்குத்
தம்மனதன் புடன்கொடுக்கத் தாமுண்டு சந்தோஷந் தழைப்ப தாகி
இம்மதுர வடையெனக்கு ருசியாகி யிருத்தலா லினமும் வேண்டும். (உ௮)

நாளைக்குங் கொணர்கவெனக் கோரக்க ரப்படியே நகருட் சென்றிவ்
வேளைக்குந் தரல்வேண்டு நேற்றளித்த வடையென்று வினவக்கேட்டு
வாளைக்கு நிகர்விழியா ளின்றேது தானியநீ வாங்கு கென்னக்
காளைக்கு நிகர்சிறுவர் குருவுக்கு வேண்டுமெது கடிதீ கென்றார் (உ௯)

அதுகிடையா தெதுவேண்டு மாயினும்யான் றருவலென வன்னாள் கூற
எதுவளித்தா லும்வேண்டே னீகலையேற் போகிலனென் றிவருங் கூற
மதுமலர்சூழ் குழலினவள் மாதவவே டங்கொண்டு வருகின் றோருக்
கிதுதெரியா தோவிலதிங் கெங்கிருந்து வருமென்றே யிகன்றுசொல்வாள் (௩0)

உன்கண்ணைக் குருவினவிற் றருவாயோ தரத்தக்க துளதேல் யானும்
நின்கண்வடை தரத்தக்க திப்போதென் றுரைசெய்ய நிமலர் கேட்டு
நன்கணென்றைப் பறித்தவர்க்கு நல்குவதை யுனக்கீவே னென்று நல்கப்
புன்கணுடன் பயந்தவளு மவர்விழிவார் செந்நீரைப் போக்கிநின்றாள். (௩௧)

தயைசாந்தி வைராகந் தாங்கிநின்ற கோரக்கர் தம்மு னின்று
பயநீளும் பார்ப்பனியை யஞ்சேனீ வடைசெய்து பரிந்தீ கென்னும்
நயமான மொழிகேட்டு விரைவினெய்யிற்செய்ததனை நல்கலோடும்[ட்டார். (௩௨)
துயர்தீர்தி யென்றுரைத்தோர் கரத்தாற்போம் விழிமறைத்துச் சோரார் மீண்

வந்துகுரு வடிவணங்கி வடைபுசித்தி ரெனமுன்பு வைக்கக்கண்டங்
கெந்தவிதத் தாலுனது கண்போன தெனவுள்ள தியம்ப லோடும்
இந்தநெடுந் தீரமரி தெனக்குமற்றைக் கண்ணுதவு கெனக்கோ ரக்கர்
அந்தவிழி யையும்பறித்து முன்வைக்க மச்சேந்தர ரதிச யித்தார் (௩௩)

உடனேநல் லன்பனென வுகந்தவரைத் தடவிவிழி யுடைய ராக்கித்
திடமேவு மான்மஞா னந்தன்னை யுபதேசஞ் செய்து ணுண்டார்
மடமேவு மயலிகந்த கோரக்கர் தமக்குமிச்சில் வாய்ப்ப நல்கித்
தடமேவு சீடனுனைப் போலெனக்குக் கிடைப்பரிது ஜகத்தி லென்றார் (௩௪)

கோரக்கர் சாம்பவரத் துவயர் பிர பாவர் கைனி யர் நிவர்த்தர்
போரப்பொங் கியஞான தேவர்விசோ பாநாமர் புகல்ஜ ஞயி
ஓரொத்த விவர்களொரு வருக்கொருவ ருபதேசஞ் செய்யப்பெற்று
நேரொத்த வான்மஞானம் புவியிற் பரம்பரையாய் நிலவிற் றம்மா (௩௫)

மச்சேந்திரநாதர் திருவடிகளே சரணம்.
ஆக சரித்திரம் ௰௫-க்கு செய்யுள் ௩௱௬௰௩.
முற்றிற்று.

# கோபிசந்தராஜன் சரித்திரம்



உத்தரகண் டத்துளே கௌடபங் கா லென்னு மிராச்சி யத்துள்
சித்திரகாஞ் சனபுரிக்கோ ரரசனுந் திரிலோக சந்த னென்னும்
அத்தகுசீ ரரசன்மிக வும்பிரதா பசாலியா யாண்டு வந்தான்
சத்திய னுகியவிவன்றன் பட்டமனை யாளழகு தனிற்சி றந்தே. (௧)

நற்குணநற் செய்கைகள்யா வும்பொருந்தி னவளாமை னுவ திக்கு
மிக்குளரு பலாவணிய மிகுந்தமகன் கோபிசந்தன் மேவு நாளில்
தக்கவவன் பிதாவான திரிலோக சந்தென்போன் சாத லாக
பிற்குழந்தை யாகியகோ பிசந்தனர சாளுங்கா லத்தின் மாதோ. (௨)

ஆயிரத்தோ டிருநூறு மனைவிகளை விவாகஞ்செய் தமர்ந்தும் போகம்
தோய்தலுக்கோ ராயிரத்தோ டறுநூறு தோகையர்நா டகசா லைக்கண்
மேயிருக்க வைத்திராப் பகற்சகல விபவமுடன் விடயா னந்தம்
தேய்தலின்றி யனுபவித்து வந்தான்று யாமைனு வதிசீர் சான்ற. (௩)

பதிவியோ கத்தினன் மிகுந்தவயி ராகமுற்றோர் பகன்மேன் மாடம்
அதிலேறி யுதாசீன மாய்நான்கு திக்கிலும்பார்த் தமரும் போது
நிதிமேவு மந்நகரத் திற்சகல சித்திகளு நிறைவு நேர்ந்த
விதிமேவு மாசாபா சங்கள்கன விலுநினையா வான்ம ஞானி. (௪)

ஆகியரி தன்னையிடை விடாமற்றியா னித்திடுவ ராயும் பிச்சை
வாகொடெடுத் துண்பவரா யும்விகார சீலமுள வராயுஞ் சால
யூகமிகு தயைசாத்து விகமுடைய ஜாலந்த ரர்க னற்றற்
கேகியா ரணியத்திற் சென்றுலர்ந்து கிடக்கும்விற குகளெ டுத்து. (௫)

கட்டாகக் கட்டித்தந் தலையேற்றி வழிநோக்கிக் கடுகும் போது
கிட்டாத விவர்தேக நிழற்பூமி யிற்கிளரா திந்த னங்கம்
ஒட்டாதோர் முழத்துக்கு மேல்விறகு கட்டுவரு முதனைநோக்கி
எட்டாத வாச்சரிய மிதுவென்னை யென்றுதிகைத் திந்த மாது (௬)

இவரோமா னிடரல்ல ரிறையவனே யெனநினைந்திங் கிவனொ னக்குப்
பவரோகந் தீர்த்தருள்வா ரெனத்துணிந்து மானவெட்கம் பலவு நீத்தே
அவர்தாளே சரணெனவேண் டியதென்றங் கவர்மேவு மடத்தை நோக்கித்
தவர்பாதந் தனக்குபசா ரம்புரிய வேண்டுவன தருவித் தேக. (௭)

ஆராய்ந்து தாதியரோ டம்மடத்திற் சதானந்த ராகிச் சீமந்
நாராய ணன்பதத்திற் சித்தம்வைத்துத் தங்குகின்ற நல்லோர் முன்பு
சீராகச் சிரமீது கரங்குவித்துப் போய்வணங்கிச் சீரி யோரே
நேராக வுபதேச நல்கியெனைக் காத்திரொன்று நின்று வேண்ட. (௮)

வினவுமவர் நானெளியேன் கண்டவிட மெலாந்திரிவே னீயோ வேந்தற்
கனையுனது பெருமைக்குத் தக்கவரா யாய்ந்திதோ பதேசம் பெற்றால்
நனிநலமா யிருக்குமென வும்மின்மிக்கோ ரின்றென்று நான்ம தித்துப்
புனிதமுள்ளவுமைச்சரணம் புகுந்தவெனக் குபதேசம் புரிக வென்றார். (௯)

அதற்கவடன் றிரிகரண சுத்திகண்டா னந்தங்கொண் டருக ழைத்தங்
கிதத்தொடுதங் காஞ்சிரம்வைத் திணையிலுப தேசத்தை யினிது நல்க
மதர்க்கும்விழி யவட்குடனே மமதையகன் றிறையவனை மனத்திற் கண்டு
கதத்தைவிட்டுக் குருநாதன் றனைவணங்கி யானந்தங் கதித்து நின்றாள். (௰)

விடையுதவ மனைமேவி யவகாச நேரிட்ட வேளை யெல்லாந்
தடையறத்தன் குருநாத னருகில்வந்தான் மாநுபவந் தனைப்பே சிக்கொண்
டடையுமனை புகுந்துள்ளம் பரிசுத்த மாயரியை யானந் தத்தோ
டிடையறத்தேர்ந் திருக்குநாள் சிலகழிய மகன்செய்கை யியம்பு கிற்பாம். (௰௧)

வேறு

மைந்த னான மகிபதி யோர்தினஞ்
சந்தமேவித் தனக்குப் பிரியையாய்
முந்த லாமனை யாண்முக நோக்குற
வந்த னன்வந்த போது மகிழ்வுடன். (௰௨)

சயன மேவித்தாம் பூலங் கொடுத்தெனக்
கியைவ தாகிய வென்பிராண நாதனே
மயல்செ யான்சொலும் வார்த்தையைக் கேட்டினித்
தயைசெய் வீரெனச் சாற்றுகின் றாளரோ. (௰௩)

உமது தாய்க்குப தேசம் வகுத்துமன்
கமைவு செய்தவ டன்வச மாக்கிய
விமலன் போல்பவன் பாற்றின மேவலால்
நமர்களுக்குப் பழிப்பு நணுகின. (௰௪)

என்ன வேயவ் விறைவனுக் குச்சினந்
துன்ன லாகிநீ சொல்வதைக் காலையில்
இன்ன தென்றறி வேனென் றிராச்செல
மன்ன வைக்குவந் தோன்மந்தி ரிதனை. (௰௫)

நோக்கி யிங்கொரு நோன்பினர் பற்பலு
ளாய்க்கி ளர்ந்துசா லந்தர ரென்னும்பேர்
வாய்க்கின் றோர்தமை நான்கண்டு வந்திக்கப்
போய்க்கொ ணுவெனப் போக்கினன் போயினான். (௰௬)

பரிச னங்க ளுடன்சென்று பண்புளோர்த்
தரிச னஞ்செய்து தாழ்ந்துமை யெம்மிறை
துரிசி லாது தொழற்கழைத் தானென
கரிசி லார்நடந் தேகவக் காவலன். (௰௭)

எதிரொ ழுந்துவந் தன்பினி றைஞ்சித்தன்
அதிர வைக்கழைத் தாசனந் தந்ததிற்
றுதிசெய் தேத்தியின் றைத்தினந் துன்னிநீர்
முதிய ரோயென்று நன்குமொ ழிந்தனன். (௰௮)

அன்றி ராவவ ரன்னவன் சொற்படி
துன்றி னார்துயி லக்கண்டு தோன்றருன்
வென்றி வீரரின் மேவுங்கி ணற்றிடைச்
சென்றி வன்றனைச் சீக்கிரம் வீழ்த்தியே (௰௯)

மீதி லத்தியின் மூடித்தூர் மின்னென
நீதி யின்றிவி ழுத்திநி ரப்பினூர்
கோதி லாதவர் கூவத்து ணீரின்மேல்
தீதி லாதுதி யானத்தி ருந்தனர் (உ0)

உதயமாயின பின்மயி னுவதி
சிதைவி லாததந் தேசிக னைத்துரீஇ.
இதய நொந்துநீ ரின்றிம யங்குமீன்
அதையு மன்னையில் லாதம கவும்போல் (உக)

தத்த ளித்துத்த யங்கிப் புலம்பியென்
உத்த மக்குரு வெங்கணுற் றுர்கொலோ
எத்தி சைச்சென்று காண்பெனென் றேங்கியூண்
நித்தி லைக்கொள்வ தின்றி நினைப்பிலாள் (உஉ)

ஆயி ருக்கச்சால ந்தரர் சீடரில்
நேயமிக்கசா னேபாவென் போர்பவ
நோய றுத்தெழு நூற்றுவர் தம்முடன்
தூய விப்புவி முற்றுந் துருவுற (உ௩)

இங்கு வேந்தனொ ருதினத் தின்பொடு
தங்கு முன்றிலி னோரந்த யங்கொளி
பொங்கு மாசனத் திற்பொலி வாயுற
அங்கு மாத ரமைத்தத யிலத்தால் (உ௪)

தலையிற் றேய்த்துடம் பெங்குந் தடவமீ
துலவக் காலுற வீசவு லாசமாய்
இலகு றத்திரி வோமொழில் கண்டுகோன்
கலவைச் சேறு கமழக் களித்தனன் (உ௫)

என்னைப் போல்பவ ரொங்குள ரின்றெனத்
தன்னைத் தான்மதித் துற்றது கண்டனள்
மின்னைப் போலுமைனுவதி மேனிலை
மன்னச் சாளர வாயுறீஇக் கீழரோ (உ௬)

இனைய பேரழ குள்ளவென் மைந்தனே
வினையி னுலெமன் கைவச மேவுவான்
எனநி னைந்தழு தாளிரு கண்ணினீர்
அனையன் மேல்விழ யார்தெளித் தாரெனு (உ௭)

மீது பார்த்தன்னை மிக்கழு தற்கிவண்
யாது கார ணமென்னலு முன்பிதா
தீது தீருன்னி லுஞ்செவ்வி யோர்திறம்
பாது காலன்கைப் பட்டனர் போல்வே. (உ௮)

வாயுஞ் செல்வ மனைவிம காருடன்
ஏயுங் காமத் தழுந்தியி ருப்பதில்
நீயுங் காலன்கை நேரிடு வாயெனு
நோயி ...மன நொந்தழு தேனெனு (உ௯)

தோன்றும் யாவுந் தொலைவதன் றிந்நிலைத்
தேன்ற தொன்றுமின் றுண்டென்ப துண்டெனில்
ஆன்ற நீசொல் லெனவவ ளாசைநோய்
ஈன்ற தாகக் கிளர்குரு நாதனை. (௯௰)

சரண டைந்துன் சரீர மமரமாந்
திரம தாகநீ செய்கென வப்படிக்
குரமு ளோரெவ ரோதுகெ னச்சாலந்
தரர்செய் வாரவர் தம்மையான் கண்டிலேன். (௯௧)

பனிரண் டாண்டள வாகநீ பார்ப்பதற்
கினிதின் றென்றழு கின்றதைக் கண்டு கோரன்
தனின டந்ததைத் தேர்ந்தொன்றுஞ் சாற்றிடா
துனிவெந் நீரின் முழுகியூ ணுண்டனன். (௯௨)

உண்ட பின்னது தாபத்துடன் முன்னே
கொண்ட வோர்மனை யாள்சொலக் கோபத்தீ
மண்டக் கூவலின் மாய்த்தன னிந்நகர்
அண்டத் தேசிக னையென் றழுங்கினான். (௯௩)

வேறு

எழு நூறுநற் சீடரோ டெழுந்து கானோபா
தாழ்வில் புண்ணியத் தலங்களுங் கங்கையுஞ் சார்ந்து
வாழ்வு சேர்நக ரங்களும் வளங்கொணா டுகளும்
சூழ்தல் செய்துதே சிகனைத்தாந் துருவின ரெங்கும். (௯௪)

தெரிகி லார்சென்று பரததே சந்தனைச் சேர
வரமச் சேந்திரர் தமைத்துரு விவந்துகோ ரக்கர்
நிருபர் சேருமந் நகரிடைச் சென்றுகா னோபா
உரம்வி ராவுறத் தழுவினர் மகிழ்வொடங் குறுங்கால் (௯௫)

வந்த கோரக்கர் நோக்கிமற் றவர்தனைக் கோபி
சந்த னுங்குரு நாதனைக் கிணற்றிடைத் தள்ளி
முந்த லாயது பன்னிரண் டாண்டதை முன்னா
திந்த மேதினி யெலாந்திரிந் தென்பய னென்றார். (௯௬)

குருவி ருப்பிடந் தெரிந்தின்பு கொண்டுகா னோபா
மருவு கோரக்க ரோமலை யாளத்தி லும்மால்
பரவு தேசிகர் பெண்மயல் கொண்டுபா லனைப்பெற்
றொருவு றுதிருப் பதையுண ராதெமை யிகழ்ந்தீர். (௯௭)

எனவி னோதமா யிருவரும் பேசின ரெழுந்தார்
அனகராங்குரு நாதர்பா லடையக்கா னோபா
புனித சீடரோ டனையகாஞ் சனபுரிப் பொழில்வாய்
இனிது சென்றிருந் தனர்மயி னாவதிக் கிசைக்க. (௯௮)

ஒருவ னைச்செல விட்டன ரவனுட னேசென்
றருண்மி குந்தமை னாவதி தனைக்கண்டா தேசு
பரிவு டன்சொலிப் பைம்பொழி லிறங்குகா னோபா
வருத லைச்சொல்லக் கேட்டு மைனாவதி மகிழ்ந்தாள் (௯௯)

தேசி கோத்தமர் தமைநினைந் தழுவது தெரிந்து
மாசி லாதநீர் கவலுறேன் மகிமையின் மிகுந்து
காசி லாதஜா லந்தரர்க் காண்பிரோழ் தினத்தென்.
றேசி லார்சொல வின்பமிக் கெழுந்தனர் முகன்பால் (௪௰)

சென்று நித்திரை செய்பவன் றெளிவுறத் தேற்றி
இன்று நங்குரு நாதர் தஞ்சீடர்கா னேபா
துன்று சோலையி லிறங்கியுற் றூரவர் துணைத்தாள்
நன்று கண்டுநீ சரண்புகி னவையெலாந் தீர்வாய் (௪௧)

அவர்த முள்ளமோ வெண்ணெயின் மென்மய தாகித்
திவளுஞ் சந்திரன் றன்னிலுஞ் சீதளந் தங்கும்
நவையி னின்மல றொன்றுநா னவில்வதை நம்பில்
உவமை யில்பத முறுதியென் றுரைத்ததை யுணர்ந்தான் (௪௨)

நானி தம்பெற நவின்றதை நழுவுறே னெனத்தாய்
ஊன மில்பதம் வணங்கின னுடனவை யுற்றான்
ஆனமந்திரி யுடன்சது ரங்கத்தோ டடைந்து
தேன லம்புநீம் பொழிலுறு கின்றகா னேபா (௪௩)

இருப தத்தினு மன்பினோ டிறைஞ்சின னேத்தப்
பெருமி தத்தநீ யாரென வினவக்கோ பிசந்தென்
றுரைசெ யத்தெரிந் துடன்றுகள் ளிற்கமு தென்றும்
கரப முற்றிடக் கற்கியென் றுங்கழ றுதல்போல் (௪௪)

உனக்குப் பேரொவ ரிட்டன ரயோக்கியா நீதி
மனக்கொ வாவிவே கங்கெட்ட நீமனை யாள்சொற்
றனக்கி சைந்திடச் சற்குரு நாதனைக் கிணற்றில்
சினத்தொ டாழ்த்தினை தினையள வுஞ்சிந்தி யாமல் (௪௫)

பருதி சந்திர ருளவள வும்படர் நரகம்
தருகி ருத்தியஞ் செய்தனை யெனக்கோபி சந்தன்
வெருவிக் கால்கர நடுங்கியான் செயுமிகு பிழையை
ஒருவி யாள்கென வேண்டினன் வணங்கின னுடனே. (௪௬)

அந்த வேலைமை நாவதி யெதிர்வந்தா தேசு
வந்த கானிபா தனக்குரைத் திடவவர் மகிழ
நந்த னைப்பிடித் தவர்கர நல்கிமற் றிவனும்
மைந்த னேயிவன் பிழைபொறுத் தாள்கென வணங்க. (௪௭)

கானி பாவது கேட்டுளங் கனிந்தன ராக
ஞான மிக்கவ ரோயெங்க ணகரம்வந் தபயந்
தான ளித்திடு கெனவவ ரனைவருஞ் சார்ந்தங்
கான வாசனத் திருத்தினர் கோபிசந் தனன்பின் (௪௮)

பாத பூசனை செய்துபோ ஜனம்பரிந் தளித்துச்
சீத சந்தனம் புட்பதாம் பூலமுஞ் செவ்வே
ஈதல் செய்தனன் கானிபா விறைவனை நோக்கி
கோதி றுதலா யெந்தக்கூ வத்திடை வீழ்த்தாய் (௪௯)

மெய்சொல் கென்னலு மவனிந்தக் கிணற்றிற்றான் வீழ்த்தேன்
செய்கை தேர்ந்திலேன் றனக்கருள் செய்கெனச் செப்ப
உய்வை யஞ்சிடே விரும்பிலுஞ் செம்பிலு முயர்ந்த
மய்யில் வெள்ளியி லும்பொன்னி லுந்தகு வடிவம் (௫௰)

உன்னை யொப்பதாய்த் தனித்தனி செய்கென வுரைக்க
மன்ன னப்படிச் செய்வித்துக் கூவத்தில் வந்து
துன்னி லத்திலை யெடுப்பித்தான் றுகளறு நாதர்
மின்னு சந்திரன் போலங்கு விளங்கினர் யாரும். (௫௧)

கண்டு கண்களித் தனரதி சயித்தன ராக
அண்டு கானிபா சாலந்த ரரையுளத் தமைத்துக்
கொண்டுஞ் சீடனு கியவெனுற் கொடுத்திடு மபயம்
பண்டு பெற்றன னாகிய பார்த்திபன் றன்னை (௫௨)

நீர்சி னந்துடன் சபிப்பிரோ லங்நெடுஞ் சாபஞ்
சார்கி லாதிவன் மேலிவ னுருவதாய்ச் சமைத்த
சீர்கொ ளும்பிர திமைகண்மேற் சேர்தரல்வேண்டும்
பேர்பெ றுந்தமா லருள்வர மிவன் பெறச் செய்க. (௫௩)

வேறு

எனவுளந் தனிலே வேண்டி யினிதுகோ பிசந்தன் றன்னைப்
பினுமுக நோக்கி லோகப் பிரதிமை யினையக் கூவந்
தனுமரு குறநீ நின்று சுவாமிக்கா தேசு சொல்லென்
றினிதுரை தரவவ் வண்ண மிறையுரைத் திடக்கூ வத்துள். (௫௪)

உறுங்குரு நீயா ரோது கெனலும் யான் கோபி சந்தன்
மறுவிலீ ரெனநீ சாம்ப ராகென வழுத்தச் சாபம்
பெறுகிலா னாகி லோகப் பிரதிமை சாம்பராகி
வறிதுற மற்ற மூன்று மாய்ந்தன வந்த வண்ணம் (௫௫)

கானிபா வரசை யந்தக் கயத்தரு குறநி றுத்தி
மானிநீ குருவுக் காதே சுரைபய மிலாம லென்ன
நானினித் தனியாய் நின்று நவிலிலென் னாமோவென்று
தானின லடைந்து நீரோ கதியென்றா தேசு சாற்ற. (௫௬)

கேணியி லிருந்தோ ராய்ந்து கேட்டு நீ யாரென் றோத
மாணொளி ரடிய னேன்மை னுவதி மைந்த னென்னப்
பேணு நீ யமர மாகப் பெறுகெனக் கேட்டோர் யாரும்
பாணிகள் புடைத்தா னந்த பரவச மாகினார்கள் (௫௭)

உடனவர் தம்மை மேலே யெழச்செய வெழுந்து ளோரை
மடனறு மந்த மைனு வதியவர் தாளைப்பற்றிக்
கடலெனக் கண்ணீர் வாரக் கழுவினாள் பாத பூசை
யிடமுறப் புரியக் கோபி சந்தனும் வணக்கஞ் செய்து (௫௮)

மந்திரி களைப்பார்த் தென்றன் மைந்தனுக் கரசு வாய்க்கத்
தந்திடு கென்று ஜாலந் தரர்தமை நோக்கிச்சாமி
நுந்தம துசம்ப்ர தாய நோன்பெனக் கருளு கென்ன
முந்தவே யமர மாக மொழிந்தனெ னதனைப் பெற்றே (௫௯)

அரசிய னடாத்திப் போக மனுபவித் திருந்த லோவி
விரகுறு விராகங் கொண்டு வீணுடற் கிலேச மென்கொல்
தரணியில் விராகங் கோட றனிலுநஞ் சருந்த லாமம்
பரமதி லுலாவ லாமேழ் பரவையு நீந்த லாமால் (௬௰)

யாவையுஞ் செய்ய லாமிவ் விராகமோ கடின மென்னத்
தாவிலக் கோபீ சந்தன் சற்குரு சரணந் தாழ்ந்து
மேவிது காறு நான்கொள் விடயவா னந்தஞ்சாலுந்
தேவரீ ராணைக் கேற்கச் சேர்த்தருள் செய்ய வேண்டும் (௬௧)

எனலுஞ்செய் வனசெய் தைய ரிருக்கச் சோ ளிகையை யேந்தி
மனைதொறும் பிச்சை யேற்று வருமவர் தமதில் லாள்பால்
இனைவிரீஇ யாலக் கன்னே யென்னலு மதைவி ளுவித்
துனைவுடன் வெளியின் மேவித் துணைவனை நோக்கி யச்சோ. (௬௨)

நாதரோ யடாத கொண்டு நடந்திரொன் றற்சில் கோது
நேர்தரல் குறித்தி யாவு நீத்திவ ணேரிட் டீரிப்
பூதலத் தினிலிக் கோல மெவர்கண்டு பொறுப்ப ரொன்று
ஆதர முடனன் னூர்தா ளடைந்தன ளலறி நைந்தே (௬௩)

புவிதனிற் புரண்டு மோதிப் புலம்பலை நோக்கி வேந்தன்
றவிரழு கிறதை யென்று சவிப்பதை யெவர்க்கும் போக்கிக்
குவிமன முறுதன் றாய்பாற் குறுகிக்கும் பிட்டு நிற்க.
அவிதலி லன்னை யன்பி னணைத்தன ளுச்சி மோந்தாள் (௬௪)

அன்னையே யுன்கை யாற்பா லனமிடு கெனவிட் டாளாய்
நன்னரங் கமுது செய்யு நந்தனன் றன்னை நோக்கி
என்னையே யென்னை யேயென் னுதரத்தி லுதித்த நீதான்
துன்னிய விராக முற்றுன் றொல்குல மெலாமீ டேற்ற (௬௫)

பெரியப தவியைப் பெற்ற பேற்றினைப் பார்த்தெ னுள்ளம்
மருவிய மகிழ்விற் குண்டோ வரம்பென வாழ்த்தி மைந்தா
திரிதரு தலங்க ளெல்லாஞ் சென்றொரு பனிரண் டாண்டுக்
கொருதரம் யான்காண் டற்கிங் குறுதியென் றுரைக்க வுண்டோர். (௬௬)

அன்னைத னடியிற் றாழ்ந்தங் கவள்விடை பெற்று நீங்கி
நன்னதி பலவு மாடி நலதலங் களும்போய்க் கண்டு
பன்னருந் திவிய தேசம் பலவும் பார்த்தினிது சென்று
மன்னுபத் திராவ திக்கண் வதியுந்தந் தங்கை யாக (௬௭)

வயங்குசம் பாவ திக்கா மனைசென்று லக்கென் றோதி
நயந்துனும் பிச்சை கேட்க நாடிமற் றவடன் றாசி
வியந்து வந்தவளைப் பார்த்து மீண்டுசெம் பாவ திக்குள்
அயர்ந்திடப் பிச்சை கேட்டிங் கடைந்தவர் கோபி சந்தர். (௬௮)

போலவென் விழிக்குத் தோற்று கிறதிது புதுமை யம்மே
சீலமிக் கவளை வந்து தெரிந்திட வேண்டு மென்னச்
சாலவுந் திடுக்கிட் டங்குச் சார்ந்துதன் றமைய னென்றே
ஏலநன் குணர்ந்தி யாக்கை யிடியுற்ற மரம்போல் வீழ்ந்தாள். (௬௯)

ஆகியங் கழுது தேம்பி யரற்றின ளண்ண ரோநீர்
பாகியல் கிளவி யார்பற் பலாரம் பையனைப் போல்வார்
வாகுசா ளளகை போன்ற வளநகர் வாசவன்வாழ்
போகநன் மனையொன் பானன் னிதிகண்மற் றிவையெ லாம்போய். (எ௦)

வறிதிந்தக் கோல மாக வரற்குக்கா ரணமே தென்ன
நெறிசெய்சற் குருக டாக்ஷ நியமம்பெற் றதின்பின் செவ்வே
செறிவுசெய் பதும நாபன் றிருவடித் தியான மல்லால்
வெறிதொன்றும் வேண்டே னுகி வெளிவந்தே னயர்வு றேனீ. (எக)

என்றுதந் தங்கைக் கோதி யிருநிலத் துள்ள தீர்த்தம்
சென்றன ராகியெங்குந் திரிந்துபன் னிரண்டாண் டாக
நன்றுதன் றுய்பான் மேவி நளினமெல் லடிசே விக்கத்
துன்றனை தழுவித் தீம்பாற் சோறிட வுண்டு சென்றார். (எஉ)

மங்கையர்க் கரசாம் பிரோமளா வென்பா ளாண்மலை யாளமச் சேந்திரர்
அங்குறக் கண்டா ளவரழ குள்ளத் தழுந்தின ளாகமற் றவரும்
பொங்குற மயங்கி யிருவரும் விடய போகசா கரத்தினுண் மூழ்கி
இங்கித மாக வனுபவித் திருக்க விவளுக்கோ ராண்மகன் பிறக்க (எங)

அம்மக னுக்கு நாமமீ னுதை னுகமச் சேந்திர நாத
ரும்மிக வாஞ்சை யுற்றுமா யாசம் பந்தத்து ளுறப்பிணிப் புற்றார்
ரம்மிய மான பிரோமளா முகத்தை நோக்கிநான் றீர்த்தமா டவந்துன்
விம்முகா மத்தி மிகமிகச் சிக்கி வீழ்ந்துனைப் பிரியமாட் டாமல். (எச)

மேவிய வென்னை யழைத்துமீ ளுதற்கு மேவுவான் கோரக்க நாதன்
ஆவலோ டவனே வெனதுமா ணுக்க னென்றறைந் திடவவள் கேட்டுத்
தாவுதன் மனத்தில் வருத்தமாய் வெளியிற் சார்ந்துமந் திரிகளை நோக்கி
வீவிலென் னகரைச் சுற்றிலுங் கொலையா ளிகடமை மேவுற விதித்தே (எரு)

எவ்விதத் துறவோ ராயினும் வந்தாற் றலைதுமித் திடுமென வேவ
அவ்விதத் தவருங் காவல்செய் தனரோ யாகவா சான்றனைத் தேடி
செவ்விதின் வருகோ ரக்கரோர் வீட்டிற் சென்றுநின் றலக்கென் றோத
நவ்விநேர் விழியாள் வெளிவந்தங் கவரை நோக்கின ளவிலுகின் றனளே (எசு)

அன்னவ ரழகு மிளமையுந் தேசு மனைத்துங்கண் டிரக்கமேற் கொண்டே
இந்நக ரத்துட் புகுந்திட வேண்டா மேனெனி விதிலர சாளும்
நன்னலப் பிரோம ளாவெனு நங்கை நண்ணுறுந் துறவினர் தம்மை
துன்னுமே வலராற் கொலைசெயத் துணிந்தாளெனவவர் துணுக்கமுற் றுளத்தே

எப்படி நமது குருவினைக் காண்ப தென்றெணி யொருமர நிழலில்
அப்புடை யிருக்கத் துயரொடு வேட தாரிக ளடைந்தன ராக
தப்பிலகோ ரக்கர் நோக்கிநீர் துயரஞ் சார்ந்திவண் வந்ததென்னென்ன
ஒப்பிலிந் நகராள் பவரிடஞ் சென்றெம் முடைநட னங்களைத் தெரித்தால் (எஅ)

வேண்டிய பரிசு கிடைக்குமற் றதற்கு மிருதங்கி நோயின ளுனன்
ஈண்டிவண் செய்வ தென்னென வெண்ணி யின்னலுற் றேனெனுவிசைக்க
ஆண்டது புரிதற் கியாம்வரு கின்றே மழைத்துநீர் சென்மினென் றறைந்தார்
மீண்டது கேட்டோர் மிகவிருப் புற்று மேவுமந் நகர்வயிற்சென்றார் (எகூ)

மச்சேந்தி ரரும்பி ரோமளா வுஞ்சேர்ந் தொருதனி யாசனம் வதிய
அச்சேர்வு நோக்கி யவர்கண்முன் வேட மணிவுட னடக்கோ ரக்கர்
கைச்சேர்வி னன்மத் தளங்கொட்டத் தன்னைக் கண்டிடா திருந்தது கண்டு
பொச்சாப்பி லாதோர் தெரிவுறத் தமது சீடன் வந்தானென்று பொருந்த (௮௰)

மத்தளத் தொனியாற் றெரித்தன ரதுபி ரோமளா மனந்துணுக் குற்றுக்
கைத்தல நெரித்து வினவிமச் சேந்தி ரர்தமைக் கறங் குமத் தளத்து
தித்தநல் லிசையைக் கேண்மெனக் கேட்டுச் சீடனென் றறிந்தன ளொழுந்து
சித்தமொத் தணைத்து மகிழ்வொடு முகமன் றெளிவொடு பேசின ரிருக்க (௮௧)

வேடதா ரிகட்கு வேண்டிய வுதவி விடுத்தபின் றனதுநா யகரைச்
சீடனாய் வந்தோ ரழைத்துடன் செல்வா னெனத்திகைத் தன்னபா னங்க
ளுடுரு தல்லும் பகலுநைந் திருக்க நண்ணுகோ ரக்கர் சற்குருவின்
நீடுநல் லமயம் பார்த்தொரு தினத்தி னீவிரென் னுடன்வரு கென்றார் (௮௨)

நேயநா யகியை நீங்கமாட் டாதார் நீர்வளம் பொருந்துமின் னகர்போல்
தூயதா யுடற்கு முயிர்க்குமின் பஞ்செய் தொன்னக ரெங்கணுங் கிடையா
தாயதா லுஞ்சே யவன்மிகப் பிரிய னாகலா லும்மிவ ணீங்க
வாயகில் லாம விருக்கிறே னீவா வென்பதும் வழுவுறன் மாட்டேன். (௮௩)

யாதுசெய் கேனென் றழுங்குசற் குருவி னின்னலைக் கண்டுகோ ரக்கர்
ஏதுசெய் வோமென் றெண்ணினர் சின்னா ளிருக்கவங் கொருதினத் திரவில்
மாதுடன் சயனித் திருக்குமச் சேந்த்ர ரருகுறு மகவுமெல் லணையின்
மீதுநீர் மலத்தை வீழ்த்திட வறிந்து விரைந்துகோ ரக்கரைக் கூவி. (௮௪)

இக்குழந் தையைநீ கழுவிவா வெனலு மெடுத்துப்போ யுதயகா லத்தில்
மொக்குணீ ராற்றி லலம்பிக்கன் மீது மோதின ருடம்பெலாஞ் சிதற
மிக்குநன் னுகத் துவைத்துவந் துலர வெயிலிடை யிடமச்சேந் திரர்தாம்
புக்குமீ னருதை னெங்கென வினவப்புனலிடைத் துவைத்து வெய்யிலிலே (௮௫)

உலரவைத் தேனென் றுரைத்தலுஞ் சுதனை யுளுற்றினன் கொலைசெனத் துய
அலறிவாஞ் சையினன் மூர்ச்சித்து மண்மே லழுந்துற விழுந்தன ரப்போ [ரால்
திலகிய பிரோம ளாவயிற் றிலுமார் பிலுமுகத் திலுந்தலை யினிலுங்
குலவுற வறைந்து கொண்டுகோ வென்று கொதித்தழு துறப்புரண்டனளால் ( )

தெளிந்துறு மயக்கந் தேசிகர் தமது சீடரை நோக்கியென் சேயை
விளிந்திடச் செய்தா யிதுநினக் கழகோ மீனருந் தனையிது பொழுது
குளிர்ந்தியா னேக்க வரவழைத் திடாயேல் கோதினற் சீடனீ யலனென்
றளிந்திடப் புகலு முன்னொரு நூற்றெட் டாயமீ னருதன யியல (௮௭)

செய்தன ரதனைக் கண்டபி ரோம ளாமிக வதிசயஞ் சிறந்து
பொய்தவி ரவரை நோக்கியென் வயிற்றிற் பிறந்தபுத் திரனின்னானென்று
மெய்தெரி விக்க வேண்டிய தென்று வினவலு மறைந்துநூற் றேழ்சேய்
எய்தின தொருசேய் தனையவள் கையி லிவனுன்சேய் கொள்கென வீந்தார். ( )

பின்குரு நாதர் தமைத்தொழு தையே பெயர்கிலா திவ்விடை வெகுநாள்
இன்புட னிருந்தீ ரிப்பொழு தென்னோ டினிதுவம் மெனவிரைந் தியம்ப
அன்புறு மச்சேந் திரரிவ னுடனா னணுகுறு துறிலிவ னின்னும்
என்புரி குவரோ வென்றுளத் தெண்ணி யெதிர்பிரோ மளாமுக நோக்கி (௮௯)

போய்வரு கிறெனென் றோதலும் பிரேம ளாமிகு போகத்தி லிச்சை
யாயவர் தம்மை நிறுத்தல்செய் வேனே லாம்விப ரீதமென் றேவென்
றேய்வுறு போது வழிச்செல வுக்கென் செய்வனென் றோர்தங்கப் பாளம்
தூயவர் சோளி தனிலிட்டுச் சீடர் தெரிவுறா தணைந்துகண் டளித்தாள். (கூ௰)

உம்மைநா னினிமே லென்றுகாண் பேனென் றுய்த்திடச் சீடரோ டிணைந்து
செம்மைசேர் நகர்விட் டோரர ணியத்திற் செலும்பொழு தொருவருஞ்செல்லா
வெம்மைசே ரிடத்திற் சீடனை நோக்கி வெறுவலுண் டோவிவண் களரால்
இம்மைநீ யோது கென்னலுஞ் சீடரி யாவையுந் துறந்துள வுமக்கு. (கூக)

யாதொரு பொருளு மிலாதுறச் சோரர் பயமெங்ஙன் வருமெனவியம்பிக்
கோதறு தடாகக் கரைவயிற் குறுகிக் கோரக்க ரிடத்திற்கைச் சோளி
தீதறக் கொடுத்துச் சென்றனர் சௌச விதிசெயச் சீடரப் போது
நிதிசேர் நமது தேசிகர் தமக்கு நெடும்பயம் வருதற்கே தெதென்று. (கூஉ)

சோளியைப் பரிசோ தித்திட வதனுட் சுடர்தங்கப் பாளத்தைக் கண்டு
நீளிய விதனு னல்லவோ வென்று நினைத்தந்தத் தடாகத்தி லெறிந்து
பாளமெவ் வளவோ வவ்வள வாகப் படுங்கற்கள் பையுளே நிறைக்கத்
தாளொடு கைகள லம்பினர் வந்து தமதுசோ ளியைப்புயந் தரித்தே. (கூ௩)

இருவருங் கூடி வழிநடந் தேக வெதிரொரு வனத்தினைக் கண்டு
வெருவுறு சீடர் தம்முக நோக்கி மேவுமிவ் வழியிடைச் சோரர்
தருபய முண்டோ வென்னலுஞ் சீடர் தவிர்ந்தது பின்னரோ யென்றார்
குருவதை வினவி யென்னிவ ணிங்ஙன் கூறின னெனவதி சயித்து. (கூ௪)

தனது சோ ளிகையைப் பார்த்ததிற் றங்குந் தங்கப்பா ளத்தினைக் காணு
தினமிகு கற்களிருந்தது கண்டா ரவையெலா மெறிந்துகோ ரக்கா
எனதுபி ரியனு யகிவழிச் செலவுக் கீந்தபொ னெறிந்துகற் செறித்தாய்
கனரிது நன்றா யிருக்கிற தலகி ஞடிலா ரியற்குறு சீடர். (கூரு)

உடல்பொரு ளாவி யுதவுவ ரதைவிட் டென்வயி னுறுபொரு ளனைத்துங்
கெடவியற் றினைநீ யாதலா லெனக்குக் கிளருநற் சீடனே யல்லை
படரெனக் கடியச் சீடர்செல் வழியில் பறம்பினைப் பார்த்ததிற் சிறுநீர்
விடமலை முழுதுங் கனகம தாக மேவுமா ரியர்தமை நோக்கி. (கூசா)

தமக்குவேண் டியபொன் கொள்கென வாசான் றங்கமா கியமலை தனைப்பார்த்
தமைப்பரு மாயை யாலறி வழிந்தே னெனத்தெளிந் தாய்ந்துகோ ரக்கா
இமைப்பிலர்க் கமுத மீந்தமா லேநீ யென்பதை மறந்தன னெனநீர்
உமைக்கொரு பாக ரவதரித் தெனக்கு மான்மிய மோங்குவ தாக (கூஎ)

உலகினர் மாயை யாலுறப் பிணிப்புற் றலைவபோ லபிநயம் புரிந்த
நலகுரு நாத ரல்லவா வென்று நயந்துகொண் டாடிநன் கிறைஞ்சத்
தலமெலாம் வணங்கத் தக்கவர் சிரித்துத் தமனிய மலைதனை முன்போல்
இலகுறப் புரிந்தங் கிருவரும் வந்து புட்கர தீர்த்தத்தை யெதிர (கூஅ)

கானிபா வுடன்ஜா லந்தரர் வந்து கண்டுநன் காலிங்க னஞ்செய்
தானபின் பிவர்கண் முகமனன் கியம்பி யானந்தக் கடலிலாழ்ந் தனராய்த்
தேனென வரிதன் குணவனு பவத்தைத் தெவிட்டிடா தியம்பினர் சிலநாள்
போனபி னன்பி னொருவருக் கொருவர் விடைபெற் றிப் போந்தனரம்மா (கூகூ)

இத்திரத் திவரைத் தியானிப்போர் தமக்கு மிவர்புகழ் வினவுவோர் தமக்குஞ்
சித்திக ளவையுஞ் சித்தித்து மகிழ்வு சிறப்பமெஞ் ஞானமுஞ் சிறந்து
நித்திய நிலைபெற் றுயர்வற வுயர்ந்த நிமலநா ராயணன் பதமாம்
முத்தியு மெளிதிற பெற்றுநல் வாழ்வு முயல்வின ராகிவீற் றிருப்பார். (௱)

கோபிசந்தராஜன் திருவடிகளே சரணம்.

ஆகசரித்திரம் (௰௬) க்கு செய்யுள் (௲௨௬௯).



முற்றிற்று.

# சாங்கதேவர்சரித்திரம்

ஒருதின ஞானந லுத்தமர் விமலன்
மருவுறு கோயிலில் வந்துவ ணங்கித்
திருமக ளுயக செல்லுவ னளகா
புரியிடை யருள்கென வருள்கொடு போனார். (௧)

அரவணி பவனெனு மங்குறு சித்தே
சுரனிடை மேவினர் சுதரிச னத்தான்
வரவுரு வானவர் வந்தது சாங்கர்
தெரிவுற லாயினர் செய்கைதெ ரிப்பாம். (௨)

அயனொரு தினமுதல் யாமம தற்குள்
நயமக பதிபதி னால்வர்பி றந்து
மயறரு கருமவ சத்தின ராகிப்
பயமிகு சிறையடை பட்டனர் முன்னே. (௩)

முந்தின நாரத முனிவரை யன்னார்
வந்தனை புரிதலு மகிழ்வொடு கண்டு
நந்தலி லரிதிரு நாமந வின்று
சிந்தையின் மகிழ்வுசி றக்கவி ருந்தார். (௪)

உறைபதி னால்வரி லொன்றிய சாங்கர்
சிறையிடை நாள்பல செல்லவி ருந்தோர்
மறைதெரி நாரதர் மாமுக நோக்கி
இறைசிறை தீரவெ னக்கரு ளென்றார். (௫)

என்றதை நாரத ரினிதுதெ ரிந்து
நன்றது வானந கர்க்கணு றுதால்
நின்றது பண்டரி நிலவுல கத்தில்
சென்றது சேருதி தீவினை தீரும். (௬)

பண்டரி யென்பது பாரிடை நீள்வை
குண்டமெ னத்தகு கோநக ரங்கே
புண்டலி கர்க்கருள் பொங்கரி செங்கற்
கண்டன தாளுற விடைகர முறவே. (௭)

நிற்பது தன்னைநெ டுந்தல மேவுஞ்
சற்சனர் கண்டடி தாழ்வுற லாகப்
பொற்புறு பஜனைபு ரிந்துற லாலே
அற்புட னீயவ ணடைதரல் வேண்டும். (௮)

என்பது வினவியி சைந்துள சாங்கர்
துன்புள யாக்கைது றந்தவ ணேக
அன்பினு பாயம றைந்தருள் கென்று
மன்பெறு நாரத முனியைவ ணங்க. (௯)

மற்றவர் துவாதச வக்கர மறையைச்
சொற்றன ரன்னது சொற்றிட வன்றே
பற்றற லாயினர் பண்டுள தேகம்
உற்றுள ஜானவி யொழுகொரு தீரம். (௰)

உளவொரு கிழமறை யவனிலு தித்தார்
அளவறு மகிழ்வின ராயனை தந்தை
இளமைகொ ளெட்டெனு விசைதரும் யாண்டில்
வளவுப நயனம கிழ்ந்தனர் செய்தார். (௰க)

அன்னதொர் மகனெவி டஞ்செல லாக
உன்னினு மேகவு ரம்பொலி வுற்றும்
பன்னின படிவச னங்கள்ப வித்தும்
முன்னிய சித்திகள் யாவுமு டைந்தும். (௰உ)

எழிரு வித்தையு மியலறு பத்திற்
சூழொரு நாலுள தொகையுறு கலையும்
ஊழினு ணர்ந்தனர் யோகம தெட்டும்
வாழ்வுற வாயுள்வ ளர்த்துவ திந்தார். (௰௩)

ஈரெழு நூறுவ ருடபரி யந்தம்
சாருற யமவச மாதற விர்ந்தார்
நேருறு வார்த்திக நிலையடை யாமற்
பேருல கிற்பிர தாபமி குந்தார். (௰௪)

கானதே சத்தொர்ம டிக்கரை தன்னில்
ஆனம டத்தில்வ சிப்பது மாகி
ஊனமி லாதகோ தாவிரி யுற்றும்
நானமி யற்றுவர் நாடொறு மம்மா. (௰௫)

ஏழிரு நூறுள சீடர்களெய்திச்
சூழுற யோகுதொ டர்ந்தன ராகி
வாழ்வுறு வோரெனில் வல்லவ ரில்லை
ஆழ்கடல் சூழுல கத்தென லானார் (௰௬)

அன்னத றிந்தச ரீரியு ணண்மை
தன்னைய டக்குறு தத்துவ ஞானி
மன்னிய சீரள காபுரி வந்து
துன்னினர் பாலருள் சூழுதி யென்ன. (௰௭)

வினவிய சாங்கர்வி நோதமி தென்று
சொனவவ ருக்கொரு சூழ்கடி தத்தை
முனமெழு தித்தெரி வோமென முன்னிப்
பினமொழு தாதுபி றழ்ந்தன ரொன்ப. (௰௮)

ஆசிபு கன்றெழு தும்படி யானல்
தேசிக னுயவர் சேர்தற காது
மாசறு தேவரீ ரொன்றுவ ரைந்தால்
ஆசுறு நான்முநி யோனென லாலே. (௰௯)

என்றுவெ றுங்கடி தத்தினை யீந்து
சென்றவ ருக்கிது சேர்த்துதி யென்று
ஒன்றிய சீடனொ ருத்தனை யுய்த்தார்
நன்றென வான்வழி நண்ணின னன்னோன். (௨௰)

பண்டரி நாதனை யுன்னுவோர் பக்கல்
அண்டின னீயுமு னறிஞரு ணர்ந்து
கொண்டிது சாங்கர்கொ டுத்தது வன்றோ
வண்டவ வென்றிட வாமென வைத்தான். (௨௧)

ஊனமி லார்கடி தத்தையு டைத்துத்
தானதெ ழுத்தில தன்மைதெ ரிந்தே
ஈனமி லாவய தேழிரு நூறும்
போனது வெறுமையி தென்றது போலும். (௨௨)

இத்தனை வயதுக ழிந்தின முஞ்சீர்
உத்தம ஞானமு ணர்ந்திலை யென்று
சுத்தசை தன்னிய சொரூபம தெங்கும்
ஒத்தது பெரியது சிறியது முதே. (௨௩)

இளையது மூத்தது வெம்பதி லாது
கிளர்பொருண் மாயைகி டைத்தச ரீரத்
துளதினி யேனுமு ணர்ந்துகொ ளென்று
வளமுட னெழுதிவ ழங்கினர் மாதோ. (௨௪)

வாங்கின சீடனெ ழுந்துடன் வந்து
சாங்கரி டத்தது தந்திட வாசித்
தாங்கதி னுட்பொருள் யாவுமு ணர்ந்து
நீங்கின நாள்வெறி தாய்நெடி தென்றே. (௨௫)

ஈதெழு தினவரி வீசனை யின்றே
ஆதர மொடுதரி சித்திடுவாமென்
றேதமி யற்றுவி யாக்கிர மேறித்
தீதியல் பாம்புசெ லுத்திட வந்தார். (௨௬)

வருவது சுவர்மிசை வைகின ரோர்ந்து
தெருவழி யேசுவர் செல்கென வேவி
மருவுறு சாங்கரை யெதிர்கொள வந்தார்
கருதின ரெதிர்வரல் கண்டுகெ ளித்தார். (௨௭)

உயிரில தேறின ருறுமவர் முன்னே
உயிருள தேறின ருறமிக நாணிச்
செயிரறு மன்புசெ ழிக்கவி ழிந்து
செயிரறு மறிவரு டேசிக ரொன்றே. (௨௮)

நெடிதுப ணிந்துமு னின்றனர் நீரோ
படியைய ளந்துறு பண்டரி நாதன்
அடியெனை யாள்கென வாலமி ழற்கீழ்
முடிவறு தேசிக மூர்த்தியு முந்தி. (௨௯)

இருவரு மொருமன மெய்திய பின்பு
மருவிய சாங்கனை வாழ்த்திநன் ஞானம்
அருளினர் ஞானந லாரிய ரிந்தத்
தருவடி நின்றவர் சார்குவர் மோக்கம். (௯௰)

என்றனர் சாங்கனை யில்லிடை மேவச்
சென்றனர் மங்கள தீர்த்தமதாடி
அன்றவர் தங்கை நிர்வாணம தாக
ஒன்றது கண்டனர் சாங்கரொ ளிந்தார். (௯௧)

மேயின சாங்கருண் மேவுத லின்றிப்
போயின ராயுறு போதறி முக்தா
பாயிமெய்ஞ் ஞானப ரந்தனை யுற்றும்
ஆயிலே சுத்தந லறிவென வன்பர். (௯௨)

உமதறி விப்படி யுறுமென வறியேன்
றமமக ருயென வந்தடி தாழ்ந்து
நமவென ஞானந லாரியர் நன்காய்
அமர்தர வாழ்த்தினர் சாங்கனை யம்மா. (௯௩)

சாங்கரு மற்றவர் சாற்றிய படியே
தீங்கறு ஞான மிகுந்து சிறப்ப
நீங்கறு முடலபி மானநெ கிழ்ந்தே
ஓங்கரி நாமமு ழைப்பவு வந்தார். (௯௪)

வேறு

ஞான தேவரன் றிரவுற வரிதிரு நாமம்
ஆன கீர்த்தனஞ் செயத்தொடங் கினரதி லறைவார்
ஈன மேவுமிக் கலியுகத் தினிலெவர் களுக்கும்
தீன ரக்ஷக ஞமமோ துறுமொரு செயலே. (௯௫)

அன்றி வேறிலைத் தவமெனப் பாகவ தத்தில்
நன்று சொல்லினர் சுகரத ஹரிநாமம்
ஒன்ற வோதுறு மவரடி களிலுள வாகும்
துன்ற வோதிய நால்வகை முத்தியுந் துலங்க. (௯௬)

நாம மோதுறு மவரடி ரேணுவி னலத்தால்
தோம கன்றமூ வுலகமு முய்வுறுஞ் சொலுமிம்
மாம டந்தைமார் பினன்றிரு நாமத்தின் மகிமை
யாம றைந்துமுற் றுறுங்கொலோ வென்றுத யத்தில். (௯௭)

விட்ட லன்றனக் காரதி செய்துமே வுறுவோர்க்
கிட்ட மாம்பிர சாதமு மருளின ரினிதாய்
மட்டி லன்புள சாங்கனை நோக்கிமா தவனை
முட்டில் பண்டரி போய்த்தரி சியுமென மொழிந்தார். (௯௮)

சென்று கண்டவர் தமையெலாம் பாவனஞ் செய்யும்
மன்ற லந்துள வோனுரு பண்டரி வாழ்க்கை
நன்று நன்றென நால்வர்க்கும் வந்தனை நவின்றார்
ஒன்ற நல்விடை பெற்றனர் சாங்கரங் குடனே. (௯௯)

தாளம் வீணைமத் தளமுத லியவெலாந் தயங்க
நீள வாமன ஞமங்கள் வாய்தொறு நிரம்ப
ஆள ராணவருடன்பயின் ஞானந்தா வேச
கோள ராய்நடந் தார்திருப் பண்டரி குறித்து (சஎ)

கோபுரங்கண்டு கும்பிட்டுப் பரவசங் கொண்டு
மாபு ரந்தழு வலும்வணங் கலுநடித் தலுமாய்
மீபு ரந்தர நகரிதின் வேறிலை வம்மின்
ஓபு ரஞ்செல வென்றன ரொருவருக் கொருவர் (௫௧)

இவ்வி தத்தின ராய்நகர் சென்றவ ணிருக்கும்
செவ்வி பெற்றசா துக்களைக் கண்டுசே வித்து
மெய்வி திர்ப்புடன் றழுவினர் விதித்துண்ட மேவித்
தெய்வி கப்புனல் படிந்துபுண் டலிகனைச் சேர்ந்து. (௫௨)

கண்டு பூசித்து நகர்வலம் வந்துகை குவித்துக்
கொண்டு கோபுர வாயிலிற் படிந்து கும்பிட்டு
மண்டு மன்பொடு கருடகம் பத்தடி வணங்கித்
தொண்டு கொண்டபாண் டுரங்கனைக் கண்டடி தொழுவான். (௫௩)

கோயிலுட் சென்று மகிழ்வுடன் றழுவிக் கும்பிட்டுத்
தாயி லன்புள தயாநிதி தன்னைநேர் கண்டு
வாயி லேதுதி வரப்பர வசக்கண்ணீர் மல்கி
ஆயில்வேதமு மளவுறு வமலன்பா லன்பால் (௫௪)

வழுத்தி ஞர்பல வகைபெறுந் தோத்திரம் வாழ்த்திப்
பழுத்த பொன்னலர் மேன்மங்கை சத்திய பாமை
முழுத்த சீர்பெறு மாருதி கோயிற் கண்முந்தி
அழுத்து மன்பொடு கண்டுதோத் திரத்தொடஞ் சலித்தார் (௫௫)

போற்று றுஞ்சபா மண்டபம் போந்துகீர்த் தனங்கள்
சாற்றி நின்றுபின் சாங்கரச் சந்திரபாகை
ஆற்ற கன்கரைப் புறத்திலோர் மருங்கினி தமர்ந்து
நோற்றி ருந்தனர் தீர்த்தமா விட்டலனை நோக்க (௫௬)

உணவு நித்திரை யொழிந்து மூந் நாளள வுற்றார்
மணநி ரம்பு பைந் துளவினன் றனைமற வாமல்
அணவு மன்பினர் திடவயி ராக்கிய மறிந்தான்
வணநெ டுங்கடல் போல்பவ னடுநிசி வந்தான் (௫௭)

தனது மெய்வடி வத்தொடு தோன்றலுஞ் சாங்கர்
மனநி ரம்புறு மன்புட னெழுந்து வந் தித்துக்
கனமி குந்துதி சொல்லினர் பற்றவுங் கண்ணன்
அனகர் கைத்தலம் பற்றின னற்றிறுட் சென்றான் (௫௮)

மணிம யத்தொரு மண்டபங் கண்டமற் றதனுள்
அணிமி குத்தசிங் காதனத் தகிலகா ரணனும்
துணிம றைப்பொருள் பொன்புவி நேிபாற் றுலங்க
நணியி ருப்பதும் கண்டுசந் நிதியினை நண்ணி. (௫௯)

புண்ட லீகரு நித்தரு முத்தரும் பொலியக்
கண்டு மிக்கதோ ரானந்த மேவினர் கனிந்து
தண்டு ழாய்முகில் சந்நிதி முன்புசாஷ்டாங்க
தெண்ட னிட்டெழுந் தாடினர் பாடினர் சீர்த்தி (௫௰)

பரவ சங்கொண்டு கண்களி லானந்த பாஷ்பம்
தரமு னிற்கின்ற சாங்கதே வரைத்தனி நோக்கிப்
பிரம னைப்பெறு கண்ணனுன் செங்கண்மேற் பெரிது
வரம ளித்துளேன் யாவர்க்கும் பேரின்பம் வாய்ப்ப. (௫௧)

தீர்த்த மாகியும் க்ஷேத்திர மாகியுந் தெரியா
மூர்த்தி யாயுறை கின்றனன் முன்னுக முயலுன்
சீர்த்த பத்தியின் சீலத்தை மகிழ்ந்தனெ னுனக்கு
நேர்த்த நல்வரம் வேண்டுகென் றுனரு ணிரம்பி (௫௨)

என்ன முன்னின்ற சாங்கர்தே வாதிதே வேசீ
நன்ன லந்தெரி யாவெனக் கருள்வதுன் னளிநம்
அன்னபொற்சர ணத்தியா னத்தினை யன்றிப்
பின்ன லொன்றுமின் றெனவுரைத் தாரன்பு பெருகி (௫௩)

நன்ற தாகுக வென்றன னந்தர்கோ னந்தன்
என்ற கண்ணனை யிறைஞ்சினர் வெளியில்வந் தேகிச்
சென்று கோயிலிற் பாண்டுரங் கனைத்தெரி சித்து
மன்ற லார்திரு நாரண புரம்வந்து வசித்தார் (௫௪)

வேறு.

அங்குறு நாளி லோர்நா ளவர்தியா னஞ்செய் போதில்
செங்கண்மே னிலவுந் தேவன் றிகழ்ந்தனன் சாங்கர் நோக்கிப்
பைங்கழல் வணங்கிப் போற்றப் பரமனும் மகிழ்ந்து நீ போய்ப்
பொங்கிநீர் நிரம்பு கோதா விரிக்கரை பொருந்தி நாளும் (௫௫)

கேசவமூர்த்தியாகக் கிளர்ந்தசா ளக்கி ராம
பூசனை புரிந்து வாழ்தி யெனவது பொருந்த நல்கி
மாசறு சோதி செல்ல மற்றவர் மகிழ்ந்து பெற்றுக்
காசவிர் திரைநீர்க் கோதா விரிநதிக் கரையைச்சார்ந்தார் (௫௬)

புண்ணிய தம்ப மென்று பொருந்துமோ ரூரில் யாரும்
நண்ணுற மடங்கோ டித்து நல்குசா ளக்கி ராமம
கண்ணுறப் பதிட்டை செய்து கனிந்தன்பு நிரம்பிப் பூசை
பண்ணின ராகி நாளும் பயின்றனர் சிட ரோடு (௫௭)

பரமனைப் பாட யங்குப் பயிலுநா ளினிற்கல் யாண
புரமதிற் றனவா னேகிப் பொருந்துசங் கரனென் றோத
விரவுமோர் பார்ப்பான் விந்தான் விதனை யாயி னமை ணூட்டி
இருதுவா யினனென் றன்று யிரங்கின ளழுது சோர்ந்தாள் (௫௮)

உளதனம் யாவுந் தான தருமங்க ளுஞற்றி மைந்தன்
கிளரொளும் பெய்த்துப் போய்ப்பா கீரதி விதைற் கெண்ணிக்
களர்வுறு மருகி போபி காசியாத் திரைக்குச் சார்வாள்
வளர்புகழ்ச் சாங்க தேவர் வசிக்குமூர் வந்தி றுத்தாள். (௫௯)

# சாங்கதேவர் சரித்திரம்.

வந்தவள் சாங்க தேவர் மகிமைகள் கேட்டன்றோ ரைச்
சிந்தையிற் காண வெண்ணி மருகியுந் தானுஞ் சென்று
முந்து தான் வணங்கச் சாங்கர் மொழிந்தன ராசி பின்னா
அந்தமில் மருகி தானு மவரடி பணிந்து நின்றாள் (௯௰)

சுரிகுழ னிறைவு கண்டு சுமங்கலி யிவளென் றெண்ணி
அரியநன் மகனுண் டாக வுனக்கென வாசி சொன்னார்
பெரியசோ ணக்காள் கேட்டுப் பிள்ளையும் விதவைக் குண்டோ
தெரிவைமற் றிவளை வேட்டோ னனதொரு சிறுவன் செத்தான். (௯௧)

யாமிரு வருமன் றென்ற னெலும்பினைக் கங்கை சோக்கப்
போமிடை நுமைச்சே வித்துப் போவது கருதி வந்தோம்
சாமிமற் றிவளுக் காசி சாற்றிய துண்மைத் தாமோ
நோமிது வெனக்கண் ணீர்விட் டழுதன ளுவன்று நின்றாள் (௯௨)

நின்றவ டன்னை நோக்கி நிறைபுகழ்ச் சாங்க தேவர்
ஒன்றுமென் னுரைபொய் யாதுன் மருகிக்குப் புதல்வனுண்டாய்
நன்றுநுங் குலம்வி ளங்கு நாளுமென் றங்க முன்ப
துன்றுறப் புரிந்தவ் வங்கந் தோய்வுறத் தீர்த்தம் பெய்து. (௯௩)

அத்திதோய்ந் துறுநீர்த் தத்தை யளகத்தாள் பருகச் செய்தார்
வித்ததாய் மருகி கர்ப்பம் விளங்குற வயிறு வாய்த்துப
பத்துமா தமுஞ்சென் றீன்றாள் பாலனைச் சாங்க தேவர்
புத்திரன் றனக்கீ ரைந்து பகல் செலப் புனிதஞ் செய்து. (௯௪)

விட்டல னென்னு நாமம் விளங்குறப் புரிந்தா ரூரார்
மட்டறு மிகழ்வு செய்து வரமைந்தன் றனக்கைந் தாண்டு
கிட்டலு முபவீ தஞ்செய் கிறதற்கு நிச்ச யித்தா
தட்டறு பாண்டு ரங்கன் சந்நிதிக் கழைத்துச் சென்றார். (௯௫)

சென்றனர் பாண்டு ரங்கன் சேவைசெய் தான பின்பு
நன்றதா முகூர்த்தந் தேர்ந்து நான்மறை யோரைக் கூவ
அன்றவர் மகன்றன் பூரு வோத்தர மறிந்திச் செய்கைக்
கொன்றல மென்னச் சாங்க ருந்தியங் கமலத் தோனால். (௯௬)

இம்மகன் பிறந்தா னாத லாலிதைக் குறித்து நீவிர்
நும்மன மிசைந்து போதல் செயுமென நுவன்று வேண்டச்
செம்மலர் மகள்கோ மான்றன் செயலினாற் பிறந்த தானால்
கைம்மைதன் மகன்செய் கைக்கு வருவனோ காணவென்றார். (௯௭)

வருவன்விட் டலனென் றோதி மதித்துண்ட திரத் தெய்திப்
பெருகமு தாதி யாவு மமைத்திரு பிறப்போர் மேவக்
கருதினார் கூவப் பார்ப்பார் கண்ணன்வந் தனனோ வென்றார்
திருவரன் வந்தா னென்றார் செப்பிய தறிவோ மென்று (௯௮)

மேவினர் கோயி னோக்க விட்டலன் றனைக்கா ணாமல்
மாவியப் படைந்து போந்தார் மதித்துண்டக் கரையி னோக்கக்
கூவிய மறையோர் வந்தா ரெனச்சதுர்ப் புஜங்கு லாவத்
தாவிலின் னமுது பெய்யச் சார்ந்தகண் ணனைக்கண் டார்கள். (௯௯)

வியந்தன ரின்பு கூர்ந்து மேவுசாங் கரைப்பு கழ்ந்து
நயந்துசெய் வினைமு டித்து நல்லமு துண்டு சென்றார்
உயர்ந்தநற் குணத்துச் சாங்கர் மூவரோ டுலகம் பூத்தோன்
இயைந்தகோ யிலிற்போய்ச் சேவித் தேத்தினர் விடையும் பெற்றார் (எ0)

மீண்டுதா முறையு மூர்க்கு மேவின ரிருக்கத் தேர்ந்தார்
ஆண்டுளோர் யாரும் போற்ற வம்மக னணிவி வாகம்
பூண்டுறப் புரிந்து சின்னாள் போனபின் மகன்மே லன்பு
காண்டுற வருள்பு ரிந்து சொற்றனர் விரத மாக (எக)

கடகங்கார்த் திகையென் றோது மதிதொறுங் ககனந் தீண்டும்
தடமதில் சூழ்வ தான பண்டரி சார்ந்து நின்ற
நடநட மகிழ்வோன் றன்னைக் கும்பிட்டு வருக வென்று
திடமுற வுரைத்துச் சென்றார் துவாரகை சீடரோடு (எ௨)

வேறு

வருவழி தனிற்றா ரூரிலே வாழும் யாதவ பண்டிதர் மகிழ்ந்தார்
அருண்மிகு சாங்கர் வருகிறா ரெனக்கேட் டவர்தமை யெதிர்கொளச் சென்று
திருவடி பணிந்தங் கவரருள் பெற்றுத் திகழ்வயி ராக்கிய ஞானம்
பெருகின ராகி ஹரிதிரு நாமம் பேணின ரவருடன் செல்ல (எ௩)

முயன்றன ரதுதேர்ந் தெழுமதிச் சூலின் முதிர்ந்தமற் றவர்மகிழ் துணைவி
நயந்தெரி கணவ ருறவினர் தமைக்கு நணுகுறா துடன்பினர் நடந்தாள்
வியந்துபண் டிதருஞ் சாங்கர்பின் றொடர்ந்து விரைவுறச் சூலின னடையில்
அயர்ந்துபின் செலுங்கான் மதிநிறை வாயிற் றணிமகி ரதத்தினருகில். (எ௪)

உறுபிர மார ணியத்தினில் வயாக்கொண் டுளேவுற லாயின ளந்தோ
பெறுமமை யத்தென் கணவரோ சாங்கர் பின்றொடர்ந் தேகின ரிங்கே
மறுகுமென் றனக்கோர் துணையிலை குருவாய் மன்னிய சாங்கரோ துணையாய்ச்
சிறுமியென் வருத்தந் தீர்த்தல்செய்யாரோ வெனச்சொலித் தேம்பின ளழுதாள்

அக்கணத் துற்றான் றுவரையிற் கண்ண னரிவைதன் னுருக்கொடு தோன்ற
மைக்கணம் மடந்தை நோக்கியெங் கிருந்து வருகிறாயம்மா வென்னச்
சக்கர பாணி நின்வயா நீக்கச் சாங்கரிங் கனுப்பின ரொன்பேர்
தக்கதிருவஞ் சாபாயி யென்றந்தவடவி தன்னிலோ ரூரமைத் தன்னே (எ௬)

அமைத்தவூ ரதிலோர்மனைவர மெள்ள வழைத்தவ டனைப்புக விருத்திச்
சமைத்துப சார மெளிதினிற் றனையன் றனைப்பெறச் செய்துதாய் சேய்க்கோர்
குமைப்பதின் றாக வுபசரித் தினிதோர் மதிவரை கூடியங்கிருக்க
நமைப்புரந் தருள்வோன் றுவரையைச் சாங்கர் நண்ணினர்கோமதி நதியில் (எஎ)

மும்மதியளவும் வழியுள தீர்த்த முயன்றினி தாடிய முறைபோல்.
அம்மணி நீரி லாடினர் கண்ண னமர்திருக் கோயிலுட் சென்று
கைம்மலர் முகிழ்த்தட் டாங்கம தாகக் கனிவொடு வணங்கியக் கண்ணன்
தம்மனத் தமையக் கருதினர் தோன்றாத் தகுதிகண் டவன்செய லறிந்தார் (எஅ)

மாதனு - கென்றா னந்தனைப் பெறச்செய் காரிய நண்ணிற்றே யென்று
வேதனை மிகுந்து மகப்பெறுவித்த வீட்டகத் திற்றனி விரைந்து
போதரல் செய்தங் கம்மனைவாசற் குப்பைபோக் குறுஞ்செயல் பொருந்தும்
மாதவனான மாதினைக்கண்டார் மற்றவள் வந்து கும்பிட்டாள். (எகூ)

கண்ணன்மா யையிறைற் கும்பிடுமவளைக் கண்ணனென் றறிவுறார் சதனத்
துண்ணணி மகனைப் பெற்றுறு மவளை யுனக்குநற் றுணையதா யுற்ற
வண்ணமே கலையா ளெங்கென வாசல் வைகுவோ டானென வகுத்தாள்
துண்ணென வந்து நோக்கலுங் காணார் சோர்ந்துநின் றனரது போதில் (அ௰)

பெற்றவள் பிள்ளை தனைக்கொடு வந்து சாங்கர்பா தத்திடைப் பெய்து
நற்றவர் தம்மை வணங்கிமுன் றனக்கு நடந்தது நவின்றுதே சிகரோ
பற்றது வாய்நீ ரனுப்பின கிர்ஷ்ணா பாயிவந் துபசரித் ததுவும் [ல்லி
சொற்றனள் கேட்டுன் புண்ணியங் கண்ணன் றுணைசெய்தா னென்றிதஞ் சொ

மகனொடு தாயை யழைத்துடன் கொண்டு வழியெலாங் கண்ணனை நினைந்து
தகவுசேர் துவரை சார்ந்துகோ யிலிற்போய் ஜநார்த்தனன் றனைத்தரி சித்து
நிகழர விந்த லோசனா தீன தயாநிதி யேதிருமாலே
நிகழுமுன் செய்கை களையெவ ரறிவார் நீணிலத்தென்றுதோத் திரித்தார் ( )

பண்டித ரிடத்தின் மனைவியுஞ் சேயும் பயிலவொப் புவித்திவ ளிடத்தில்
மண்டுமன் பொடுநீர் வாழ்ந்தரி பஜனை வழுத்துதல் செய்துநா ளாளும்
அண்டுறும் பிள்ளை யாதியுன் குலத்தா ரனைவரு மரிக்கன் பராகித்
தொண்டுசெய் திருப்பா ரென்றினி தாசி சொல்லியூர்க் கனுப்பினர் மாதோ. ( )

வேறு.

திங்களோர் நான்கவ ணிருந்து சீதரன்
பங்கயப் பதங்களைப் பணிந்து சீடரோ
டங்கணின் றினிதுமுன் னமர்ந்து வைகிடம்
தங்கல்செய் தமர்ந்தனர் சாங்க தேவரோ. (அச)

அவிந்தனும் பேதரி யாளும் வேந்தனால்
எவஞ்செய வரிசிவா லயங்கள் யாவையும்
துவந்தனை யாய்மறை யோருந் துன்புறப்
பவந்தெறு விட்டலன் பரிவு கொண்டனன். (அரு)

சாங்கரைப் பேதரி நகரிற் சார்கெனப்
பாங்குற நல்விடை பகர்ந்து போக்கினான்
நீங்கருஞ் சீடர்க ணிறையச் சென்றனர்
ஓங்கரி கீர்த்தன முனாற்றிக் கொண்டரோ. (அசு)

தாரியிற் சங்கமர் தலைவ னாகியும்
ஆரிய னமல்ய கார்சு னன்பெரும்
சீரிய தன்குரு வருளிற் சிற்சில
காரியமா னமாந் திரியங் கற்றுளோன் (அஎ)

ஆதன மொன்றும்பெற் றதில்வந் தோர்தமக்
கீதல்செய் திருத்திமற் றதிலி ருந்துழி
மீதுறீஇத் தலைகிழக் காக வீழ்ந்தபின்
ஓதுறச் சிரித்தவ மானஞ் செய்குவான். (அஅ)

சீடரோ டிப்படிச் செய்யு மன்னவன்
தோடலர் துளவினான் றொண்டர் தம்பெரும்
பீடறிந் துளம்பொறா னாகிப் பேணுந்தன்
மாடமை நாய்க்கவர் பெயரை வைத்தனன் (அகூ)

ஆயவ னுறுட · · ·றிந்து சாங்கர்தாம்
தீயவன் றீமையைத் தீர்க்க வெண்ணினார்
போயவன் மடத்திடைப் புகுதக் கண்டவன்
மேயநன் னயத்தொடா சனத்தின் மேவென்றான் (௯௰)

ஆசனத் தின்செய லறிந்து நோக்கலும்
தேசனல் பட்டது தீர்ந்து போயிற்றால்
மாசடை மனத்தினன் கண்டு மாழ்கிறேன்
பேசலன் வாய்நனி பயந்து பேசுவான். (௯௧)

இத்தவி சான்மிகு மகிமை யேற்றயான்
அத்தநும் மகிமையை யறிவு றாதுசெய்
கைத்தவென் பிழைதனைக் கமைசெய் தாள்கெனச்
சித்தர்தஞ் சேவடி சேவித் தானரோ (௯௨)

கண்டஜங் கமர்சுன கனுக்கு வைத்தபேர்
கொண்டதால் விளைவதென் கொலோவென் றஞ்சியே
அண்டருஞ் சிறையிடை யதனை வைத்தனர்
ஒண்டவ ருடனய லேகி யுற்றனர் (௯௩)

அஞ்சுநூ றளவின ரான ஜங்கமர்
விஞ்சுறு சுவையமு தமைத்து வேண்டிடத்
துஞ்சுறப் போனக முணத்தொ டங்குபோ
தெஞ்சுற லின்றிப்பூ ணிலிங்கங் கைக்கொள்வார். (௯௪)

பொதிவற நோக்கினர் போர்த்து றந்தணி
அதினுறு மிலிங்கமின் றகச் சாங்கரைத்
துதிசெயா தியற்றிய தோமி லாயதென்
றெதிர்செலீஇச் சாங்கருக் கியன்ற தோதினர். (௯௫)

பற்பல முகமனும் பகர்ந்து மற்றவர்
பொற்பதம் பணிந்துசெய் பிழைபொ றுத்தெங்கள்
சிற்பரக் குறிவரச் செய்ய மென்றனர்
சொற்படி கேட்டெகிர் சொல்லு கின்றனர். (௯௬)

நீயிர்சேர் நாய்தனை நிரம்பப் பட்டினி
யாயிற வறையிடை யடைத்து வைத்ததால்
மேயின பசிகொடு விழுங்கிற் றென்றனர்
நாயிது பரியமோ நவில்வ துண்மையேல். (௯௭)

குறைமுக வாய்ச்சிவக் குறியெ லாம்வர
விறைவினிற் றருகென வெளிக்கொண் டக்கனைப்
புறைதவிர் வோர்வயிற் பொருந்த வுய்த்தனர்
இறையென விழுங்கிய விலிங்கம் யாவையும். (௯௮)

அக்கநீ கக்கென வருட்கொண் டோதநாய்
கக்கவைஞ் ஞூறிலிங் கங்க ளும்விழத்
தொக்கவை கண்டனர் வியப்புத் தோன்றிமே
தக்கயோ கத்தினிச் சாங்க தேவர்தாள். (௯௯)

பணிந்தெழுந் தும்பெரு மகிமைப் பண்பினை
அணிந்துரைத் திடவெவ ரால டங்கும்யாம்
துணிந்துடைக் கருவங்க டுடைத்துச் சூதெல்லாம்
தணிந்துமைச் சரண்புகத் தக்க வாசெய்தீர். (௱)

ஆதலா லெம்மையீ டேற்றற் கச்சுதன்
போதரல் செய்தன னென்று புந்தியில்
காதல்கொண் டனமெனக் கழறு வோர்தமைத்
தீதற நோக்கினர் செப்பு கின்றனர். (௱க)

முன்புபோற் றீமைகண் முயல்கி லாதிறைக்
கன்புசெய் தரியடி யாரைப் பூசித்துத்
துன்புதீர்ந் திருமெனச் சொல்லிப் பேதரி
என்புரஞ் சேர்ந்தனர் யாவ ரோடுமே. (௱உ)

வேறு.

நானம் புரிந்து புரிபூ சையுநன்கு செய்தோர்
தானங் குலாவி யரிகீர்த் தனந்தாஞ்செய் காலை
ஆனந்த மேவி யவனுள் ளவர்கேட் டிருக்க
ஊனந் தவிர்ந்து திருமா லடிக்குண்மை யன்போன். (௱௩)

ஹரிதா சருக்கு மிகுமன் பினனந்த ராஜன்.
பெரிதா தரிக்க வுறும்வே தியன்பேர்வி லன்பர்
புரிகீர்த்த னங்கள் விருப்புற் றனன்பொங்கு மன்பாய்
விரிதா சருக்குப் பிரசாத மெய்யன்பர் நல்கி. (௱௪)

விடைநல்க லாக வரும்வே தியன்மேவு சாங்கர்
புடைவந் திறைஞ்சி யெமையாட் கொளப்போந்த சாமி
மிடையிந்த வூரி னரசன் மிகுதுவ்ஷ்டன் வெய்யோன்
இடையொன்று வேத ரரிகோ வயினிற்று வேசி. (௱௫)

ஆறுன் மனைவி விடப்பாம்பி னுலாவி தீர்ந்து
போறு ளதறல் வருகின் றிலன்போன தின்றேல்
தானுள் புவிமீ தரிகீர்த் தனஞ்சாற்ற லூற்றல்
நோனு னவனைக் கடிவான் மிகநோ விழைப்பான். (௱௬)

திருமால் புகழ்கீ ருரைத்திங் குறுஞ்செய்தி கேட்டால்
வருவான் வருத்த வெனச்சாங்க ரவ்வார்த்தை கேட்டுப்
பொருபாம் பின்மாண்டா ளெழச்செய் குவன்போந்து வேந்தற்
கொருவாய்மை கூறு கெனச்சொல் லினருள் ளிரங்கி. (௱௭)

உடன்வே தியனன் றெனவோடி மன்னற் குரைத்தான்
திடனே யெனிற்கூ வுதியிங் கெனவேந்து செப்பப்
படநா கணைப்பள் ளியன்றொண்டர் தம்பக்கன் மேவி
அடன்மே வியகோன் வரச்சொன் னதையாங் குரைத்தான் (௱௮)

குழுவும்பல் சீட ரொடுமால் பெயர்கூறி வந்தார்
வழுவின்று சாங்கர் வரல்கண் டெதிர்வந்து மன்னன்
பழுகின் றழைத்தோர் தவிசே றுறும்பாங்கு செய்து
முழுதும் புகழ்ந்து விடங்கீர்க்க மூந்தார் றுளோரால் (௱௯)

செய்யுந் திறங்கள் பலசெய்து மென்றேவி யாளுள்
உய்யுந் திறமொன் றிலளா லுதரங் கிழித்துப்
பெய்யுந் திரமா மணப்பைந் துகள்பெய்து வைத்தேன்
னையுந் திரங்கொண் டுளனென்கு நாளாக நானே (௱௰)

நாளைக் கழனைக் கொடுநண்ணி மசீதில் வைக்கும்
கோளைக் கருதித் துணிவுற் றுளங்கொண் டிருக்கும்
வேளைக் கெதிர்மே வினிர்சாமி நீர்வெவ் விடங்கொண்
டாளைப் பிழைப்பித்திடினும்மை யொப்பாவ ராரோ (௱௰௧)

என்றோத லுஞ்சாங்க தேவோர் துளசித் தளத்தை
நன்றே யழன்மே லிடுகென் றவன்கையி னல்கக்
குன்றே புரைதோ ளவனன் றெனக்கொண்டு ளேகித்
தன்றேவி தன்மே லிடமற் றவடா னெழுந்தாள் (௱௰௨)

எழுந்தா ளிடவார வாரித்திடவேந்தல் கண்டு
செழுந்தா மரைபோன் முகந்தே சுறவார்த்தை செப்ப
அழுந்தா தரத்தோ டவள்பே சலளாகி யார்க்கக்
கொழுந்தா ரரச னிதுவென் னெனக்கூசி யஞ்சி (௱௰௩)

வெளிவந்து சாங்க ரிடையென் மனைவிக்கி துவி
தெளிவந்து முன்னை நினைவின்றி யென்னே சிலம்பிக்
களிவந் திலாமை யறுகின் றனள்கண்ண னன்பால்
ஒளிவந்த சீரி னிறுவீ ரெனவோதி நின்றான் (௱௰௪)

அவன்சொன் னதுகேட்டு நீபோ யுனதன்பி னுளை
எவன்செய் வதுநா னுனக்கென்று கூறன் னவள்யாவ தேனும்
நவன்செய் திடச்செப் புறிலொப் புறுகென்று நாளும்
தவன்செய் துயர்ந்தோர் மயக்கந்தெறச் சாற்றினரோ (௱௰௫)

நன்றென் றிசைந்து மனையாள் வயினண்ணி யோத
இன்றென்னை யுய்யப் புரிந்தோர் வயின்யானு நீயும்
சென்றின்பு கூரச் சரணு கதிசெய்து வேண்டி
நின்றின்னு மன்னு றெதுவேண் டினு நேர்தல் வேண்டும். (௱௰௬)

இவைசெய் திலேயேற் பிழையே னெனவேந்த னீசொன்
னவைசெய்வ லென்றன் னவளோ டவர்சார்பின் மேவி
எவைசொல் லினினும் பணியே புரிவேமெ னுத்தி
நவைகொய் தவர்தாள் பணிந்தேத்தி முனண்ணி நின்றான் (௱௰௭)

உன்னுலு முன்னை யுறுவோ ரினுமூரி லெங்கும்
மன்னு லயங்கண் மறைவே தியர்வைகு கோக்கள்
இன்னு வுறும லரிதா சனையேத்தி யன்பு
பன்னுளு மேவி யரசா ளுதிபண்பொ டென்றார். (௱௰௮)

குருசாமி சொல்லு வதுகேட் டுளங்கொண்டு நன்றென்
றுருகா தரத்தி னுடிமந் திரிக்குண்மை யாகத்
திருகாது சாமி யுரைசொற் படிசெய்தி யென்று
தருகா தலிக்குண் மகிழ்வாக வுந்தா னமைந்தான். (௱௰௯)

அன்றே யவிந்த னடங்கப் புரிந்தங்கு நின்று
நன்றே தொடர்ந்து வருசீ டர்களோடு நாடிக்
குன்றே புரைகோ புரப்பண் டரிக்கோயின் மேவி
நின்றே பணிந்தார் பணிவிட் டலன்றன்னை நேர்ந்து. (௱௨௰)

வேறு.

பாண்டு ரங்கா விட்டோ பாதீ னதயாளா
ஈண்டு நான்ச மாதியடைதற் கிசைவானேன்
வேண்டு மதனுக் கெந்தத் தலநீ விழைகின்றாய்
தூண்டு கென்று கேட்க விமலன் சொலுகின்றான். (௱௨௧)

நீதங் கும்புண் ணியதம் பத்தி னிலேகொண்டே
பேதந் தீர்ச மாதி யடையப் பெறுகென்று
ஏதந்தீரா ஷாட சுத்தத் திதியென்னப்
போதம் மேகா தசிதோ றும்போ துறுகின்றேன். (௱௨௨)

என்றே வரமும் விடையு நல்க விசைவாகி
நன்றேய் பரமன் றன்னோ டலர்மே னங்கைக்கு
நின்றே துதிசெய் தடைவே கும்பிட் டெறநேரோ.
குன்றே புரைசற் குணர்புண் டலிகர்க் கும்பிட்டு. (௱௨௩)

ஆனந் தக்கண் ணீரோ டவ்வூர் வலம்வந்து
தானந் தக்க தென்புண் ணியதம் பஞ்சேர்ந்து
மோனங் கைக்கொண் டுறுச மாதி முறைமேவற்
கூனம் பற்றா துறுமூர்த் தம்பார்த் திடன்மேவ. (௱௨௪)

தம்புத் திரரின் முன்னா னங்கே சவனோடு
பின்புற் றவனா கியவிட் டலனும் வரல்பேணி
முன்புற் றவனுக் காறக் கரமந்திர முன்ன
இன்புற் றருளியான்ச மாதி யுறலாலே (௱௨௫)

என்பூசனையா தியசம் பிரதா யத்தெய்தி
மன்பூ தலமேல் வருகார்த் திகைமா தந்தோறும்
பொன்பூ மகள்கேள் வன்பண் டரிபோய்ப் பொலிவாக
அன்பூ டுருகப் பணிவுற் றினிதிங் கடைவாயே. (௱௨௬)

வேறு

என்றுதம சீடருக்கும் யாவருக்கு மதிநலங்க ளிசையச் சொல்லித்
துன்றுசக மிரட்டியறு நூற்றொடிரு பத்தேழிற் றோன்றுமாண்டாய்
நன்றுறுகு ரோதனவா ணித்திங்கட் சுத்தசத்த மியினா யிற்றின்
அன்றனைவோ ருங்குழுமி அரிநாமம் புகலவர சடியிற் சாங்கர் (௱௨௭)

பதுமவா தனத்திருக்க யாவரும்வந் தனைசெய்து பல்லாறேத்தக்
கதுமெனமற் றவரவர்க்கா சீர்வதித்து விட்டலனைக் கருதக்கண்ணன்
எதிரில்வந்தங் கவராவி யாவருங்கா ணத்தனக்கு ளேகமாக்கித் [ரும். (௱௨௮)
துதிகளெல்லோ ருஞ்சொல்ல மறைந்தனன்பின் கண்டுநின்ற தொண்டர் யா

ஜயஜயா காரஞ்செய் தரிநாமங் களைப்புகழ்ந்து சமாதிபூசை
இயல்வொடுசெய் தவரவர்தம் மிருப்பிடஞ்சென் றூர்பின்ன ரீராறுண்டு
பெயர்வுறத்தம் மிளையகுமா ரனுக்கன்போ டெதிர்தோன்றிப் பெறற்குறுத
உயர்வுறுநல் லுபதேச முதவிவிட்ட லன்றனக்கு ளூற்றூர்சாங்கர். (ரஉசு)

சாங்கதேவர் திருவடிகளே சரணம்.

ஆகசரித்திரம் ௳சு-க்கு செய்யுள் ருாகூ௫

முற்றிற்று.

# சோகாமேளர்சரித்திரம்

உலகவை குந்தமா யுற்றபண் டரியிலே
இலகுபஞ் சமகுலத் திற்பிறந் தார்நலம்
விலகலின் றுறுசொகா மேளரொன் பார்தினம்
நிலவுதூண் டத்திலே நெடிதுவந் தாடுவார். (௧)

அரிதிரு நாமமே அமுதபா னமதெனப்
பெரிதுகொண் டாடியப் பெருகுமூர் சூழ்வதாய்
மருவுதண் டுளவினன் வளர்பெருங் கோயின்முன்
கருதிவந் தனைசெய்வார் கணிதமில் லாதரோ· (௨)

ஆனபின் றங்குடும் பத்தைர க்ஷணைசெயற்
கூனமின் றுறுவர்பின் பொருதினந் தன்னிலே
ஞானசஞ் சீவியாய் நவில்விடோ பாவின்முன்
போனவன் பரையெதிர்ந் தனர்சிலோர் புகலுவார். (௩)

கோயிலுட் புகுதலுங் கொண்டலைக் காணவும்
நீயியைந் தவனலாய் நெடிதுகும் பிடுதலுண்
டாயினென் வருமகத் தாயவூண் விழையுமோர்
நாயினென் பார்தமை நனிபணிந் துரைசெய்வார். (௪)

சினகரம் புகுதவுந் தேவனைக் காணவும்
எனதுபுன் குலமொவா தாயினு மிரவிதான்
உனரும்யோ சனையிலக் கத்திலுற் றுலுநீர்
வனசமா மலர்செவே மலர்கிலா தொழியுமோ. (௫)

சந்திர னளவிரட் டித்ததிற் றங்கினும்
உந்துநே மிப்புளுக் கிரைதரா தொழிவனோ
அந்தநீ திப்படிக் கடியெனுக் கச்சுதன்
தந்திடா தொழிவனோ தனதுசே வடியையே. (௬)

தூரநின் றிடுவதென் குலமுடைத் தொன்மையே
ஏரதன் றெனவிழித் திடுதலா விலைபயன்
பேர்திரொன் றவர்தமைப் பிரிவுகொண் டினிதுதஞ்
சார்விடந் துன்னி னாரரிபதந் தவிர்கிலார். (௭)

அன்றிரா விமலன்வந் தவரையன் பொடுவரு
கென்றுகோ யிலினகத் தெய்தவைத் திரவெலாம்
நன்றுபே சினனுனை நான்விடே னாமனோ
டின்றுமுண் பொழுதுநின் னினைவினெய் தினனென (௮)

அதுவினாய் நீயநா தரையளித் தருள்வதே
கதுவுமுன் செயலெனக் கழல்பணிந் தினிதினார்
வதுவிடிந் திடுமுனே வருமவர்ச் சகர்தெரிந்
திதுவெனோ புதுமையிங் கியலுவோ ரெவரொனா. (௯)

இறைநினைத் துறுவனோ புலையனிங் கேயென
அறைசெவித் துளைபுகப் பினுமடுத் துறவினாய்
உறைவரப்பு லையனே யெனமதித் துறுவனோ
மறைமுதற் றலனிடத் தெனமனத் தளர்வொடே. (௰)

அகமுளாய் வெளியில்வா வெனவழைத் தவனைநேர்
புகநிறுத் தகமுறத் தருவதோ புலையனே
தகவினீ சென்றதைத் தகைமையே சாற்றென
மிகநயத் துறல்செய்தான் விமலனா னென்செய்கேன். (௰௧)

என்றுரைப் பவனையிவ் வூனைவிட் டேகு நீ
நின்றிடிற் றண்டமே நேருமென் றுரைசெயச்
சென்றுதம் மனையுடன் றிங்களம் பாகையா
றொன்றுமக் கரையிலோர் குடிசைசெய் துற்றனர். (௰௨)

நாடொறும் பாண்டுரங் கனைவிடார் நாமர்போற்
பாடுகின் றவரொரு பகலினிம் பத்தரு
வூடுனும் பொழுதுருக் குமணிநா யகவெனே
கூடுகின் றிலையென்முன் கோபமோ வெனுமுனே. (௰௩)

விடலிலா ருடன ளாய விட்டல னமுதுணக்
கடவனா யமர்தரக் கண்டுசோ காமேளர்
உடன்மிகப் புளகமுற் றுருகியுட் களியின் மூழ்
இடவடுத் தனரவண் கேடிலர்ச் சகரோ. (௰௪)

அந்தவே ளையிலிடுந் துணைவியை யமலனுக்
இந்தநற் றயிரைநீ யிடுகெனத் துணைவியார்
சிந்துபோ தவளவுஞ் சிந்திமற் றதுதெரித்
துந்துசீ ரமலனா டையின்மிகுந் துற்றதே. (௰௫)

நாதனார் துகிலனைந் திடல்செய்தா னன்றதோ
பேதையே யென்றுகோ பித்திடும் பொழுதிலே
மீதுலாங் கொடியுமெச் சத்தைமேல் விடவுணர்ந்
தேதுநீ யுஞ்செய்தா யிறைவன்மே லென்றனர் (௰௬)

ஒட்டினார் கொடியைமற் றதையுணர்ந் தர்ச்சகர்
காட்டில்வந் துண்பனோ கண்ணனின் னோடனை
நாட்டிநீ நகுதியோ நன்றெனக் கவுண்மீசை
நீட்டியங் கையி னானிறைவுறத் தாக்கியே. (௰௭)

குளிரநீ ராடிமால் கோயிலிற் சென்றுகா
ணளவின்மா லாடையெல் லாந்ததி யாகவும்
மிளிர்தரக் கவுள்கள்வீங் குற்றதும் விழிகள்சேந்
தொளிர்வதுங் கண்டுதுண் ணெனவுசா வினரோ (௰௮)

தாம்வரும் பொழுதுவேப் பந்தருக் கீழ்நிகழ்ந்
தாமதிங் குற்றதென் றகம்வெரீஇ யையனே
மாமகிழ்ந் துற்றசீர் மார்பனோ புலையரும்
யாமுமொப் பேயுனக் கென்பதோர்கிலமரோ (௰௯)

பிழைபொறுத் தருள்கெனப் பெரிதுகொண் டாடிமா
லுழைவிடுத் தோடிவந் துற்றதா சனைமிகும்
விழைவுடன் கண்டுநீ விமலனன் பதனிலே.
தழைவதா யுனதுவ சஞ்செய்தா யறிகிலேம் (உ0)

ஆதலா னீயெம்மே லருள்செய்தங் கவனிடம்
போதுவா யெனவழைத் தங்குளே புகவிடக்
காதலோ டமலனைக் கண்டுசோ காமேளர்
கோதுறு தனையமுன் குறியெலாம் போயவே (உக)

அந்தவா றுனதங் கனைவருந் தெரிவதாய்
வந்துகொண் டாடினர் வருசோகா மேளரும்
எந்துமோர் தடையிலா தன்றுதொட் டென்றுமே
மூந்துவா ராயினர் முதல்வனார் கோயிலே (உஉ)

சோகாமேளர் திருவடிகளேசரணம்

ஆகசரித்திரம் ௭௲-க்கு செய்யுள் ௬உ௱உ0.

முற்றிற்று.

கபீர்தாசர்சீடராகிய

# பத்மநாபவேதியர்சரித்திரம்

காசிப்பதி தனிலோர்வணி கன்செல்வநி றைந்தோன்
மாசற்றவ னுக்கைந்துநன் மகவுந்திரு மானும்
தேசிற்பொலி மனையாள்குண வதியுமனே சேரக்
காசற்றுறு முறவோர்பலர் கவினத்திகழ் நாளில் (க)

குட்டப்பிணி யுடன்மேயது குழைபுண்மி கலாகி
முட்டக்கிரு மிகள்புண்டொறு மொய்த்துத்துயர் செய்யக்
கிட்டத்தகு மவர்கிட்டில ராகக்கெடு நாற்றம்
எட்டப்படு துன்பத்திடை யெய்த்தான்வெகு காலம் (உ

நற்செய்கைகள் பலவும்புரி நல்லோன்மிக நல்லோர்
இச்சைப்படி பலநல்லற மெல்லாமியை வித்தும்
மெய்ச்சப்படு பரிகாரநல் விதமொப்பன செய்தும்
எச்சப்பட லிலவாகிய தெதுசெய்யினு நோயே (௩)

பிணியாற்றல ஞானுறு பெரியோர்தமை யழையாத்
தணியாதுறு நோய்சானவி தனிலென்னைவி டற்கே
துணிவாயினி துடனேகொடு தொலைமின்னென வேண்ட
எணியாங்கவ ரொல்லாமினி யென்செய்குவ தென்றே (௪)

இசைவின்படி செய்யாவிடி லெய்தும்பழி யெனவே
நசைதுன்றின ரெல்லோர்களு நனிதுன்றின ராகி
அசைவின்றினி தவனைக்கொடு வருஜானவி யருகே
மிசையொண்கரை யிடைவந்தனர் விடவேதுணி வுற்றார் (௫)

அப்போதினி லதுகண்டவர் யாருங்குழு வாகத்
துய்ப்போரரி பெயராயப தமநாபனொன் மறையோர்
ஒப்போவறு நீராடிட வுற்றாரது கண்டே
இப்போதிவ ணெய்துங்குழு வேதென்றயல் வந்தார். (௬)

கையிற்சப மணியுந்திகழ் களனிற்குலை வடமு
மெய்யிற்றிரு நாமம்பனி ரண்டுந்தனி மின்னப்
பொய்யற்றுறு நாவச்சுத ஞமம்பல புகல
மையற்றவ ரிங்கேகுழு வாய்ப்பேதென வருத்தார். (௭)

ஐயாவிவன்வணிகன்மிக வறமேநனி புரிவான்
மெய்யார்வினை நோய்தீர்கலன் விளிவானதி யிடையே
உய்யாவென லால்வந்தன னுறவோடென வுரைத்தார்
பொய்யாதவ ரதுகேட்டனர் புகழ்வார்வரு மறையோர் (௮)

மானுதன ஜன்மம்பல வகையும்புக வின்றி
ஆனுய்நர ஜன்மம்பெற லரிதன்னது பெற்றும்
வீணய்நதி யிடைவீழ்ந்துயிர் விட்டானர கெய்துங்
கோணுதின நோய்போக்கிட வலதுண்டது குறிக்கில் (௯)

காரப்புய லனையானது ராமவெனு நாமம்
ஈரக்கர முக்காற்சொலி லுடனேபிணி யெல்லாந்
தீரத்தகு நீவீரிது செப்புங்கடி தென்ன
ஆரத்தனை பேருஞ்சொல வவனுஞ்சொலு மளவே (௰)

புண்ணும்படி வசியுந்தவர் புரமோடெழில் வணிகன்
நண்ணும்படி யானுன்வரு நரரும்வினை தீர்ந்தார்
விண்ணும்படி யும்போற்றுறு விமலன்றிரு நாமம்
எண்ணும்படி யுரைசெய்தவரி ருதாள்மிசை வீழ்ந்தார் (௰௧)

விழுந்தேபல துதிசெய்தனர் விசுவோத்தர னஞ்செய்
கொழுந்தே மறைக் குலத்துக்கொரு கோவேயெங்க டேவே
செழுந்தேசுற வினைதீர்த்தருள் செய்தோயெனப் புகழ்ந்தே
எழுந்தேகினர் காசிப்பதி யெல்லோர்களு மின்பாய் (௰௨)

அவரிற்சிலர் மறைவேதியர்க் கருள்செய்தக பீரர்
பவனத்திடை வந்தேயவர் பாதங்கள்ப ணிந்து
நவமிக்குள வுமையண்டின நற்சீடர்மென் மேலுந்
தவமிக்கவ ரிரண்டக்கரந் தன்றற்பிணி தீர்த்தார் (௰௩)

முக்காற்சொலச் செய்திங்ஙகர் முழுதும்மது வேசொற்
றெக்காலமு மிருக்கும்படி யிசைவித்தன ரொன்ன
அக்காலையி லதுகேட்டருள மைகின்றக பீரர்
மிக்காகிய விரண்டக்கர விழுச்சீர் சொல லுற்றார். (௰௪)

சதகோடியெ னுளராமன சரிதந்தனே மூன்று
விதமாகிய வுலகங்களு முயன்றேநனிவிரும்ப
அதுமேவுறப் பகுத்தீந்திட வதில்விஞ்சு மோர்சுலோகம்
பதினாறிரு மேவக்கரம் பகுத்தீந்ததில் விஞ்சும். (௰௫)

ஈரக்கர மாரனார்தமக் கென்றேகொடு விடத்தால்
சாரப்படு நோய்தீர்ந்தன ரதனாற்றனி ராமப்
பேரொப்பதொர் பேர்வேறிலை யதையோர்தரம் பேசில்
தீரப்படும் வினையாவையு முக்காற்சொலல் சிறப்பே. (௰௬)

அவ்வேதிய னப்பேரின தருமைப்பெரு மைகளைச்
செவ்வேயறி யானென்பது செவிவாய்த்திட வந்தார்
மெய்வேதியர் தந்தேசிகர் மென்கான்மிசை வீழ்ந்து
எவ்வேலையுந் துதித்தேசுகத் திருந்தார்பெரி தென்றும். (௰௭)

பத்மநாப வேதியர் திருவடிகளே சரணம்.

ஆக சரித்திரம் ௰அ-க்கு செய்யுள் ௲உ௱௬௰௭.

முற்றிற்று.

# ரோகிதாசர்சரித்திரம்

சரும வேலைபுரி சக்கிலி யர்க்குள்
ஒருவர் யாவரிலு முத்தம ரோர்தில்
மருவு றுஞ்சம தமாதிகு ணங்கள்
பெருகு வோர்வைண வத்ததி பெட்பார். (க)

பரார்த மக்குபக ரித்தருள் பண்பார்
நரஹ ரிக்கினிய நல்லுயிர் போல்வார்
விரவு யிர்க்கருள்வி ளைப்பவர் மாலைப்
பரவு சற்ஜனர்ப தம்பணி நேயர். (உ)

யாத்தி ரைக்கணுறு வோர்களை யண்மித்
தோத்தி ரித்துபச ரிப்பவர் சில்லோர்
சேர்த்தி டத்தமுப தேசம் வகுத்தங்
கேத்தி டப்பெரிது மின்புறு சீலர். (௩)

நாளும் வைகறையெ ழுந்து நயந்து
மூளும் வெம்பசித ணிந்தபின் முந்தி
நீளு நீர்முழுகி நேயமொ டென்றும்
ஆளு நாயகனை யர்ச்சனை செய்வார். (௪)

கலியு கத்தில்மிகு காய்பசி யுற்றால்
மெலிவு றுத்திமன மெய்யுணர் வெய்தா
தலைவு றப்புரிபு மாதலி னுண்டே
பொலிவு றப்புரிவர் பூசையி னன்னோர் (௫)

நாமம் ரோகியென நாட்டவர் கூறத்
தாமி யன்றவர் தனித்தொரு நாளில்
தோம றும்புனறு ருத்திநி ரப்பி
ஆம தாயமடி யாசனம் யாவும் (௬)

தோலி னாலமைவு செய்துது ழாய்சேர்
வாலி தாயவனம் வந்துபு குந்து
நாலு வேதமுந வின்றறி யாத
மால தாம்வடிவை வந்தனை செய்தார். (௭)

பக்கன் மேவினனோர் பனவன வற்குத்
தக்க தாகவுப சாரமி யற்றி
மிக்கு யர்த்தவவன் விஞ்சின தேசா
ளக்கி ராமசப ரிச்செயல் யார்க்கும் (௮)

அன்ன தைச்சரும மீதி லமைத்துத்
துன்னு பூசைசெய றாயது தானோ
என்ன விப்பரிசி யற்றினை யீது
பன்னு வேதியர்ப ராவுவ தன்றே. (௯)

என்று வேதியனி யம்பிய யாவும்
நன்று ரோகியெனு நல்லவர் கேட்டே
என்றும் யாவையினு மெய்திய மாலைத்
துன்று கின்றமன நிற்பது தோலே. (௰)

துதிசெய் நாவுமொரு தோலல வோநேர்
விதிகொள் பூசைபுரி கைமிகு தோலே
முதிரு மூவகையு முந்திய வான்மாப்
பதித லுஞ்சரும மூடிய பையே. (௰௧)

எனவு ரைப்பதனை யெய்திய பார்ப்பான்
வினவி முப்புரியின் மேவுப வீதம்
புனையும் வேதியர்க ளேபுகல் பூசை
தனையி யற்றுமவர் மற்றையர் சாலார். (௰௨)

நீயி வாறுசெய ளின்னை யடுக்குந்
தீய பாவமிது செய்யலை யென்று
ஆய வேதியனு ளைப்ப வதற்குத்
தூய ரோகியெனு நல்லவர் சொல்வார். (மக)

என்னி டத்திலுப வீத மிருக்கை
தன்னை நீயறிதி யென்றுத நெஞ்சை
மன்ன வேபிளவ தாகவகிர்ந்து
மின்னு நூலைவெளி யாகவி டுத்தார். (மச)

மனது சுத்தமுள மாண்பினர் யாரும்
அனக பூசைசெய லாமென வன்னோன்
நினைநி கர்ப்பவரி னீணில மீதே
யெனவ மூத்திமனே யேகினன் மாதோ. (மரு)

போன பின்பரிபொ ருந்தரு ளாலே
ஞான ரோகியெனு நல்லவர் மார்பங்
கூன மின்றியொரு மித்துற வன்னோர்
வான நாயகனை வாழ்த்தி யிருந்தார். (மசு)

ரோகி தாசர் திருவடிகளே சரணம்.

ஆக சரித்திரம் மசு-க்கு செய்யுள் சுசுாருமக.

முற்றிற்று.



# பிம்பாஜிபக்தர்சரித்திரம்

உலகத் தோர்கடே மண்டலி யென்னுமூ ருக்குத்
திலக னுயுயர் பவித்திர னும்மிகச் சிறந்த
அலகி லாத்தரு மங்களு நடத்துகின் றவனுய்
இலகு சாதுசற் சனங்களுக் கினியதா சனுமாய் (க)

கிளர நீள்சவு ரியபராக் கிரமமுள் ளவனுய்த்
தளர்வில் சீலவு தாரனுய்த் தைரியத் தவனுய்
வளரும் புத்திர காந்தையா தியவளத் தினனுய்
இளகு சக்தியு பாசக னுயினி திருந்தான். (உ)

அரச ஞயபிம் பாஜியென் பெயருடை யவன்முன்
விரசு நாடொறும் விடியுமு னெழுந்துமே லோரால்
உரைசெய் நித்திய கருமங்க ளுஞற்றிநீ ராடி
முரச மார்ப்புறக் காளிவாழ் கோயில்போய் முந்தி (௩)

எட்டி ரண்டுப சாரத்தோ டியன்றுள பூசை
தட்டி லாதுசெய் துற்றனை வேத்தியந் தன்னை
இட்டமோ டந்தக் காளியுண் டிடவினி தியற்றி
மட்டி லன்புசெய் தேவரு வானரண் மனைக்கு (௪)

அப்ப டிக்கவன் வருமொரு நாள்வயி னவர்கள்
ஒப்பி லாததோர் தீர்த்தயாத் திரைசெய்வா ருற்றார்
தப்பில் யாகயக் கியங்களே காதசி விரதம்
செப்பு தாய்தந்தை சேவையே தீர்த்தயாத் திரையே (௫)

வாவி கூபத டாகங்கள் கோயில்கள் வகுத்துத்
தாவில் கண்ணனர்ப் பணமென வன்னதா ஞதி
யாவு முன்ஜன னங்களி லியற்றிய வவற்றால
மேவி ஞரவ னகரத்தில் வைணவ மேலோர் (௬)

அதுதன் சேவக ராலறிந் தரசனங் கவருக்
கெதுவு மோர்குறை யின்றிச்சீ தாமுத லெல்லாம்
உதவி நானஞ்செய் தம்பிகை கோயில்வந் துற்றுச்
சிதகில் பூசனை செய்துமுன் வந்தனை செய்ய (௭)

கண்டு காளிமுன் பிரசன்ன மாகியுள் கனிவாய்
அண்டு முன்னகர் வந்தசா துக்களை யடைவே
கொண்டு போயுன தகத்திடைப போனகங் கொளச்செய்
துண்டுவந்தபின் றனுன்பூ சையையினி துண்பேன் (௮)

ஏனென் றற்பிர மாண்டங்கள் யாவுக்கு நாதன்
தானென் றோங்கிய வைகுண்ட வாசியாய்ச் சத்தி
நானென் றுள்ளவர் யாவர்க்கு நாயக ஞகிக்
கோனென் றோங்கிய பிரமருத் திரேந்திரர் கோமான். (௯)

ஆய ஸ்ரீதர னன்பருன் றவத்தின தகத்து
மேயதாலுன்றன் பாக்கிய மிகவுமேன் மைத்தென்
றேய போதர சுன்னிலு முயர்ந்ததே யெனவே
தூய விண்டுவை நீசொலத் தெரிந்துநான் றுணிந்தேன் (௰)

அனைய தேவனைக் காணநா னருளுதி யெனநல்
வினைய மோடடி வணங்கியே வினவலுங் காளி
தனையொ வாதவன் றன்னையான் காட்டிடத் தகுமோ
நினைவி லேயரி நேயரோ காட்டுவர் நினக்கு. (௰௧)

அன்ன ராகிய வைணவர் தமைச்சர ணடைதி
என்ன வேநர பதியவ ளடியில் வீழ்ந் திறைஞ்சி
நன்ன ராம்வயி னவருறை விடந்தனை நணுகித்
துன்னு மாங்கவர் சேவடி பணிந்தனன் றுதித்து (௰௨)

நீவி ரொன்னகம் வந்துநா னிரப்புபூ சனையை .
மேவுகென்று கூஉய் விருந்தமைத் தமுதுசெய் வித்துத்
தாவி லன்புடன் சந்தன புட்பதாம் பூலம்
யாவு நல்கினன் வணங்கின னேத்தின னிசைப்பான் (௰௩)

அடிகளேயடி யேனும் ஸ்ரீ ராமனை யறியும்
படிசெய் வீரெனப் பார்த்திபன் றனையவர் பார்த்து
முடிவில் சீர்த்திரா மானந்த சாமிபான் முந்தி
மடிவி லாவவ ரருள்பெறின் மாறனைக் காண்பாய். (௰௪)

எனலுங் கேட்டவேந் தின்புடன் விராகமேற் கொண்டு
தனது மந்திரி தன்வயி னரசினைத் தந்து
கனக வஸ்திர பூஷணு திகளெலாங் கலைஞர்
மனமு வந்திடக் கொடுத்தனன் மனைவியுங் கண்டு (௰௫)

தானு மப்படி யேபல தானமுந் தந்து
கோனு டன்வர விருவரு மொருவழிக் கூடி
ஈனு ஞானரா மானந்த ரொழிற்கம லத்தை
மானு மார்திரு வடிகளை வணங்கினர் வந்து. (௰௬)

பொருளு டம்புயிர் மூன்றையுங் குருவுக்கே பொருந்தத்
தருதல் செய்தவர் தாள்களைத் தந்தலைத் தாங்கி
இருவ ரும்மெதி ரேநிற்பத் தாரக மென்னும்
அருமை மந்திரந் தனையுப தேசித்தா ரவரும் (௰௭)

தேசிகோத் தமர் திருவரு ளாலிவர் சிறந்து
மாசி லாச்சிர வணமன னுதியில் மகிழ்ந்து
நேச மாயின ரரிபஜ னத்திலே நிமிர்ந்து
காசி லாதொரு நாள்குருக் கழல்களை வணங்கி. (௰௮)

சேர்ந்து கண்ணனைத் துவரையிற் கண்டு சேவிக்க
நேர்ந்து நீரருள் செய்ம்மென வவரது நேரச்
சார்ந்து கண்ணனைத் தரிசித்து ஜயஜய முகுந்தா
ஆர்ந்த ஸ்ரீஹரி யாகிய வச்சுதா வமலா. (௰௯)

என்று தோத்திரம் பலபல செய்தன ரோத்தி
நின்றபோதந்த நின்மல னேமிசங் கேந்தி
நன்ற தானகே யூரகுண் டலமுடி நலஞ்சேர்
மன்றன் மாலைபீ தாம்பரம் வயங்குற மருவி. (௨௰)

சகுண ரூபத்து டன்பிர சன்னமாய்த் தழுவி
மகிழ்வு செய்தன னிருவரு மலரடி வணங்கி
நெகுத லாயுள மாடினர் பாடினர் நிற்கத்
தகுதி யாயின் சொற் சாற்றியே சனுதனன் மறைந்தான். (௨௧)

இருவரும்பின்பு நான்குமா தம்மவ ணிருந்து
மருவு ஸ்ரீஹரி பஜனையிற் றழைத்தனர் மகிழ்ந்து
திருவி னுயகன் விடைபெற்றுக் கானவழிச் சென்றூர்
வெருவு காட்டிலோர் வியாக்கிரம் விரைந்துவந் ததுவே. (௨௨

மனைவி யார் கண்டு பயந்துதம் மகிழ்நரை நோக்கிச்
சினவு வெம்புலி தினவரு கிறதென்று செப்ப
அனக ரானவ ரதனுளும் ஹரியமர் கின்றான்
வனிதை யேனஞ்சு கின்றனை வருகெனு மளவில் (உஙு)

தின்ன வந்தவெம் புலிமுகக் குறிப்பினைத் தெரிந்து
தன்ன தோர்கழுத் துறுகுல்லைத் தாமத்தை யெடுத்து
நன்னர் வீசலும் புலிகழுத் திடையது நண்ண
முன்னர் நின்றது கொடுந்தொழில் முழுவது மறந்தே. (உச)

நின்ற வெம்புலி தலைமிசைத் தம்கையை நிரப்பி
நன்ற தாகிய ராமநா மந்தனை நவின்றே
இன்று தொட்டு நீ கொடுந்தொழில் செய்யற்க வென்ன
அன்று ராமநா மஞ்சொல்லிக் கொண்டவ ரகன்றார்- (உரு)

அவர கன்றபின் புலிக்கனு தாபம்வந் தண்மித்
தவவு திர்ந்துகாய்ந் துளவனச் சருகுகள் புசித்து
நவமி குந்தஸ்ரீ தரனது நாமத்தை நயந்து
திவச மேழினிற் றேகம்வே றுயது தீர்ந்து (உசா)

பிம்பாஜி பக்தர் திருவடிகளே சரணம்.

ஆக சரித்திரம் (உ௰) க்கு செய்யுள் தூசுாாஎ௰கூ.

முற்றிற்று.

# நரசிம்மமேதாசரித்திரம்

அணிகொ ளுங்கடே மண்டலி யென்னுமூ ரதனில்
நணுகு நாகர வேதியர் தமக்கொரு நந்தர்
பணவ ராவணி பவனுடை யம்சமாய்ப் பிறந்து
தணிவி லாநர சிங்கமே தாவெனத் தழைத்தார். (க)

தாயுந் தந்தையுங் களித்துப வீதநூ றயங்கத்
தோயு நன்மணம் புரிந்தபின் சுவர்க்கம்போய்த் துன்ன
ஏயு மைந்தனைச் சிறுதந்தை முதலினர் யாரும்
நேய மாய்வளர்த் தார்வளர்ந் தனமொழி னிரம்ப. (உ)

வளர்ந்த மைந்தரவ் வூரிலே மருவுபிள் ளைகளிற்
கிளர்ந்து கூடினர் கல்வியிற் கெழுமுத லின்றி
விளைந்த நாள்விளை யாட்டிலே கழிந்திட வீணாய்த்
தளர்ந் தொர் நாண்மனை வந்தனர் தாகமாய்த் தாமே. (ங)

வந்து தந்தமை யன்மனை யாடனை வல்லே
முந்து நீர்தரு கென்னலு மன்னவள் முனிவாய்
இந்த வேளையி லென்னகா ரியம்புரிந் திளைத்தாய்
நொந்து வேண்டினை நீயெனச் சிற்சில நுவல்வாள். (ச)

மூர்க்க னாகிநீ சிறுவர்க ளொடுமிக முயன்று
வேர்க்க வேயிர வும்பக லும்விளை யாட்டிற்
போக்கு கின்றனை காலத்தைக் கல்விபோற் றாமல்
மார்க்க மோவிது சோறுண வயிற்றினை வளர்த்தாய். (ரு)

இன்ன வாறுநீ திரிந்துபி னெழின்மனை யாட்டி
துன்ன லானபின் பவளுணச் சோற்றுக்கென் செய்தி
என்ன வேகடு மொழிகளை யியம்பிட விவர்கேட்
டுன்னி னார்வெறுப் புற்றனர் மனைவிடுத் தொழிந்தார். (சா)

காடு சென்றனர் கருதினர் பாலனாங் காலை
நீடு தந்தைதா யிறப்பதும் யவ்வன நிலையிற்
கூடு பன்னிதான் மரிப்பதுங் கொடியமூப் பினிலே
தேடு மைந்தர்க ளிறப்பதுந் தீவினைப் பயனே. (எ)

அன்ன வாறெண தன்னையு மப்பனு மகன்றார்
என்ன ருங்கரு மத்தினு லென்றவ ரேங்கித்
துன்னி னாரொரு சிவாலயங் கண்டனர் தொழுது
மன்னு கோயிலுட் புகுந்தனர் சிவன்றனை வாழ்த்தி. (அ)

அருள்செய் தேயெனை யாளுதி யேழைபங் காளா
ஒருவ ரும்மிலை யெனக்குறு துணையுனை யன்றி
இருநி லத்திலென் றவிடை மேற்சய ரித்தார்
மருவி யேமூநா ளுணவின்றிச் சோர்வுடன் மாதோ. (கூ)

கண்டு சங்கர னுலகிலென் னடியவர் கனிந்து
மொண்டு றும்புனல் கௌவிய முந்துதே ளிளநீர்
கொண்டு மூழ்கிடச் செய்துபின் சந்தனங் குசுமம்
மண்டு றத்தரித் தாடையா பரணங்கள் வனைவார். (ம)

இவனென் மேற்றனை வனைந்தன னென்றமுற் பவத்திற்
கவன வெம்புலி யாகிரா மனைத்தொழல் கருதி
அவர்தன் மேன்மிக வருளுட னேந்துமா முகமும்
பவர்த டம்புயம் பத்தும்பன் னகமணிப் பணியும். (மக)

சடையும் பூதியுந் தயங்குறப் பிரசன்ன மாகி
அடையு மன்னவ னைத்துயி லெழுப்பிநீ யந்நாள்
மிடைபிம் பாஜியால் யான்செயும் ஜபத்தைமே வினையிவ்
விடையு னக்குவேண் டுவதைநீ யியம்புதி யென்றான். (மஉ)

எழுந்து வெள்ளியங் கிரியில்வா ழீசன்ற னடியில்
விழுந்து தோத்திரம் பலபல செய்துபின் விமலா
குழந்தை யாகிய யானெது பெரிதென்று கொள்வேன்
விழைந்து நீபெரி தென்பதே யருள்செய வேண்டும். (மங)

எனக்கெ னப்புக லன்னவர் சுகுர்ததத்தை யேத்தித்
தனக்கு வந்தகண் ணன்றிரு நாமத்தைச் சாற்றி
உனக்கு நானந்தக் கண்ணனைக் காட்டுவே னுறுக
மனக்கி சைந்தென வவருண வுணவுகள் வழங்கி. (மச)

கண்ண னுனவன் யமுனையங் கரையிலே காதல்
நண்ணு கோபிகை மாரொடு நடனங்கள் புரிவான்
தண்ணு மைதனைத் தாக்குவேன் யானங்குத் தழைப்ப
எண்ணு மன்னவன் சேவையே யெனக்கிட்ட மென்றான். (மரு)

மூன்ற தாமுகந் தன்னிலே நடந்தது முன்னே
என்ற விக்கலி யுகத்திலே யியங்குமோ வென்னில்
ஆன்ற வன்பர்தங் கண்ணுக்கவ் வானந்த மனைத்தும்
தோன்று மென்று தாஞ் சொல்லின னிளமதி சூடி. (மசு)

பின்பு கோபிகை வேடமற் றவர்பெறப் பிணைத்தே
அன்பி னேடுகைக் கொண்டுகா ளிந்தியை யடைந்தான்
முன்பு தோன்றின சந்தனங் குங்கும முதலா
மன்பெ ருந்தருப் பெருகின வானளாய் வளர்ந்து. (மஎ)

சண்ப கம்புன்னை பாதிரி மகிழ்பாரி சாதம்
தண்புகுந்துறு மல்லிகை முல்லைநற் சாதி
ஒண்ப லாநரந் தங்கொக்கு மாதுளை யோங்கிப்
பண்ப கர்ந்திட வண்டுகள் மஞ்ஞைகள் பயில. (மஅ)

அன்னங் கோகிலங் கிள்ளைமென் பூவையோ டனைத்துந்
துன்ன மாமணி வகைகளும் பரிசமுந் துலங்கி
மின்ன வாயிடைத் தென்றலு மெல்லென விரவப்
பன்ன வோங்குபூங் காவன நிரம்புறும் பாரம். (மகூ)

வேறு.

இப்படி யெழிற்கோ ளுங்கா ளிந்திதீ ரத்தில் மேவி
ஒப்பற விளங்குங் கண்ண னுழையுமை மேவு பாகன்
தப்பறு நரசிங் கம்மே தாவொடு வந்து கண்டு
மெய்ப்புடன் வணங்கி நிற்க விருப்புடன் கமலக் கண்ணன். (உ0)

தழுவின னநேக மென்கோ பிகைகளி னடுவிற் றங்கி
வழுவறு பூட ணாலங் காரத்தின் மகிழ்ந்தி யாவுங்
குழுவுற வேணு கானங் குறிக்கக்கோ பிகைகள் கூடி
நழுவுத லின்றி யாட நக்கன்மத் தளங்கை கொட்ட. (உக)

விளங்கிநிற் கின்ற கண்ணன் மெய்யெழில் கண்டு சில்லோர்
துளங்கிதழ் சுவைக்க வேண்டச் சிலர்தழு வுதற்குச் சூழக்
களங்கமில் சில்லோர் செய்ய கரந்தொட வேண்டச் சில்லோர்.
உளங்குளிர்ந் தினிது முத்த முதவுதற் கடுத்து வேண்ட. (உஉ)

கண்ணனெவ் வொருவ ருக்கோர் கண்ணனா யவர வர்க்குள்
நண்ணிய மனோர தங்க ணல்கின னுடல் செய்து
பெண் ணுறுபாகன் றன்னை நோக்கிக்கோ பிகையாய் மேவப்
பண்ணினை யாரை யென்னப் பசுபதி மிக நகைத்து. (உ௩)

நரசிங்க மேதா வுக்கு நயனத்தாற் குறிப்புச் செய்ய
விரைவுட னோடிவந்து விமலனை வணங்கக் கண்ட
முராஹரி தன்னை நோக்கி முந்திய பிறப்பி லின்னான்
உரமிகு புலியாய்ப் பிம்பா ஜிதனரு ளுறுத லானான். (உ௪)

செய்தவெம் பாவ மெல்லாந் தீர்ந்துவே தியர்கு லத்தில்
எய்தின னன்னை தந்தை யிறந்தபி னென்பால் வந்து
மெய்தனைத் தந்தா னேழு நாளுப வாச மேவி
நைதல்கண் டிரங்கி முன்னே நான்பிர சன்னமாகி. (உ௫)

உனக்கென்ன வேண்டு மென்ன வுறுவது தெரிந்தி லேன்யான்
நினக்கித மானதொன்றை யருள்கென நின்னை யன்றி
எனக்கித மில்லை வேறே யென்றியான் கூட்டி வந்தேன்
அனுக்கிர கஞ்செய் கண்ணா விவனுக்கென் றறைந்து நின்றான். (உ௬)

வினவிய கண்ண னந்த நரசிங்க மேதாவென்னும்
அனகர்தந் தலைமேற் கைவைத் தனுக்கிர கித்து நீயிவ
வனநதி தீரத் தென்னை மருவுகோ பிகைக ளோடு
மனம்வியந் தினிது கண்டாய் மற்றிந்த வாட றன்னை. (உ௭)

பிரபந்த மாகச் செய்தி பெரிதுல கத்தோர் கேட்கச்
சரதநின் கண்கள் காணத் தயங்குவ னின்ன வாறே
வரமிது வுனக்கேன் றோதிச் சிவனுக்கும் விடைவ ழங்க
நரசிங்க மேதா வோடு நக்கனும் வணங்கிப் போந்தான். (உ௮)

தானமர் கோயில் மேவித் தக்கதங் கவர்க்கு நல்க
லானபின் பமல லீலை யனைத்தையும் பாடல் செய்து
ஞானநற் சோதி தன்னை நயந்தகக் கண்ணிற் கண்டே
ஊனமின் றுடிப் பாடி யுளமகிழ் வெய்த லானார். (உ௯)

இவர்மனை தன்னிலுள்ளோர் யாவரு மிவரைக் காணு
தவரவர் தேடித் தேடி யலைந்தன ருலையுங்காலைச்
சிவனது கோயில் மேவித் திகழ்குஜ ராத்தி பாஷை
நவமுறு லீலைப் பாட னணுகினர் கேட்டு வந்து. (ருயி)

தேடுவோர் தமக்குச் சொல்லத் தெரிந்தவர் வந்த ழைத்து
நீடுறு மனையிற் சேர்க்க நிமலனைத் தினமும் பாடி
ஆடுறு மகிமை கண்டோ ரந்தணன் மகளைத் தந்து
கூடுற மணத்தைச் செய்யக் குலவினர் வாழு நாளில் (ருக)

மகளொடு மகனைப் பெற்று மருவுறு மாரெல் லோரும்
தகவொடு மிகக்கொண் டாடச் சௌரித னமல லீலை
அகவிழி தினமுந் தோற்ற வருள்கொடு பாடி யாடி
மிகமகிழ் வெய்தி யுஞ்ச விருத்திசெய் திருக்கு நாளில். (ருஉ)

அப்பதிக் கடுத்த சாம புரத்தினிற் றிரிபு ராந்த
கப்பெயர்ப் பார்ப் பான் பெற்ற கன்னிகை விவாக காலம்
இப்பொழு தென்ன நேரிட் டிருப்பதைப் புரோகி தர்க்குச்
செப்புறக் கிஷ்ணபட்டர் சென்றனர் வரனைத் தேடி. (ருரு)

விண்டுபானேய ராகி விளங்கிய கிஷ்ண பட்டர்
அண்டிய பதிக்கு வந்து நரசிங்க மேதா வான
தொண்டரைக் கண்டு மற்றுஞ் சுதனுக்கென் னெஜமா னன்றன்
பெண்டனைக் கொடுப்ப தாகப் பேசுகென் றென்னை யேவ. (ருச)

வந்தன னென்று சொல்ல மற்றவர் சம்ம திக்க
அந்தணர் பொருத்தம் யாவு மமைவது தெரிந்து வந்து
முந்தினர் நிச்ச யித்து மொழிதிரிபுராந்த கற்கு
நிந்தையில் லாது தாம்போய் மீண்டதை நிகழ்த்தி னூரால். (ருரு)

அவ்வுரை கேட்ட யாரு நகைத்தன ரைய ரேநீர்
செவ்விய வரனைத் தேடி வந்துளீர் சிரி தாமோ
வெவ்விய மிடியி னெந்தோ னரசிங்க மேதா வென்போன்
எவ்வியல் புமில் லாதோன் மகனுக்கோ விசைந்து வந்தீர். (ருசு)

நன்றுநன் றென்னக் கேட்டு நவிலுவார் கிஷ்ண பட்டர்
என்றுமப் பேயோ டாடிக் கிமலரை யினி துபெற்ற
தன்றனி மகனை யீயத்தக்கதன் றென்பார் போல
நின்றநீர் மறுப்பீ ராயி னிச்சய மான பின்னர் (ருஎ)

உங்குலத் தவர்கள் செய்த வூழ்வழு வாம லுங்கை
அங்குலி யீயத் தக்க தாமென வதற்கு வேட்கும்
மங்கையைப் பெற்றோன் சொல்வான் மணமக னெமது செல்வப்
பொங்கினுக் கேற்ப வஞ்ஞா ருனையும் புரவிக் கூட்டம். (ருஅ)

ஐஞ்சகத் திரமுந் தேர்க ளாயிர முங்குன் றுமல்
மைஞ்சரு மங்கை மாரு மருவுறு மவைகட் கேற்ப
விஞ்சுபூ டணம் பொன் னுடை விளங்குற வெகுவி னோத
பஞ்சவாத் தியமு நாளைப் பகன்மண மான தாலே. (ருகூ)

குறைவிலா தெய்தல் வேண்டுங் குறிபுரோ கிதரே யென்ன
வறியவன் வரனென் றெண்ணி மகடர மனமில் லாறுய்
முறைகெடக் கூறும் வார்த்தை முகக்குறிப் பதனாற் றேர்ந்து
மறையவர் நாளை நீசொல் வகைவரு வாரொன் றோதி. (௪௰)

நரசிங்கமேதா பக்க னண்ணினர் நாளை யேதான்
பரவுநன் மணத்துக் கேற்ற பகலுள தாத லாலே
விரவுவை பவத்தி னோடு வருகென விளம்பிப் பின்னுந்
திரிபுராந் தகனை நண்ணிச் செப்பினர் சிறப்ப மாதோ. (௪௧)

கேட்டவன் சிரித்து நீர்சொல் கின்றவன் மிடிய னென்று
நாட்டமில் லாது சொல்லு நயந்தெரி யாம னீர்போய்
மீட்டுவந் துரைத்தி ரெந்த விதத்தவர் வருவர் போம் போம்
கூட்டியே வருதற்கென்ன கோபமிக் குடையர் போனார். (௪௨)

மறுதினங் காலை யேசொல் வார்நர சிங்க மேதா
முறையுட னெழுந்து நித்தக் கடன்களை முடித்துநானங்
குறைவறச் செய்தி ராறு நாமமுங் குலவச் சாத்திக்
கறையறு துளசி மாலை கழுத்தினிற் றரித்துக் கொண்டு. (௪௩)

வீரவை ணவர்க ளோடு மனைவியுஞ் சேயு மேவச்
சீரரி பஜனஞ் செய்து சென்றனர் விவாகத் துக்குச்
சாரது துவரை மேவுஞ் சக்கர பாணி தேர்ந்து
நேருருக் குமணி தன்னை நோக்கின னிகழ்த்து கின்றான். (௪௪)

என்னடி யவனே யானநரசிங்க மேதா வென்போன்
றன்மகன் மணத்துக் கின்று சார்கின்றா னாத லாலே
நன்மணந் தன்னை நீயே முன்னின்று நடத்தல் வேண்டும்
நின்னது கூட்டத் தோடே நேருதி யென்று கூறி. (௪௫)

உத்தவ ரக்குரூர ருறுசுகர் பிரக லாதர்
சுத்தநா ரதர்வான் மீகர் தும்புரர் புண்ட லீகர்
மெய்த்தப ராசரர்சௌ னகர்விபீ ஷணர்வி துரர்
பொய்த்தலி லாஞ்ச நேயர் வீடுமர் சுதாமர் போல்வார். (௪௬)

கோவலர் கூட்டத் தோடு குழீஇவரச் சாது ரங்கம்
மேவரத் தேவி மாரும் வியந்துற வியமு ழங்கத்
தாவறு நரசிங் கம்மே தாவொடு கலந்து கூட
ஆவலின் வணங்கி யன்னா ரொடுமெண வூர்க்கு வந்தார். (௪௭)

வந்தவர் நகர்ப்பு றத்து வதிந்துதிரி புராந்த கற்கு
முந்துபோ யொற்ற ராலே மொழிந்திடச் செய்யக் கேட்டுச்
சிந்தையிற் றிகைத்துப் பந்து சேகரனாகி வாத்தி
யந்தமின் முழங்க வந்தான் கருடன்முன் மசக மன்னான். (௪௮)

மணமகன் வருவ தான மங்கள சம்பர மத்தை
உணர்வுற லாகி நாண முற்றனன் கிஷ்ணபட்டர்
துணர்செறி துளவ மாலைத் தூயவ னருளி னாலிவ்
வணமுற லாய தென்று மகிழ்ந்தனர் பின்பு மாதோ. (௪௯)

விச்சுவ கருமன் வந்து விவாகமண் டபத்தை யாரும்
நச்சுறப் புரிய ரம்பை மேனகை நடனஞ் செய்ய
மெய்ச்சிமே னின்று தேவர் முனிவர்வே டிக்கை பார்க்கக்
கச்சமில் பொருள்க ளெல்லாங் கலந்தமை வாகக் கொண்டு. (ரு0)

வதுவைமண் டபத்தைச் சேர்ந்து மருவுருக் குமணி யாதி
அதிகரஞ் சிதஞ்செய் கின்ற வரிவையர் மொய்த்தி ருக்க
யதுகுல நாதன் றன்னோ டியல்பவ ராருங் கூடப்
புதுமணம் புரிய வேண்டிப் புகுந்தினி திருக்கும் போது. (ருக)

மணம்புரி மகனை யீன்றோன் வந்துதஞ் சுற்றஞ் சூழ
அணங்கினைக் கொடுவந் தாங்கே யனுகவை குண்ட நாதன்
இணங்குதன் குழாங்கள் சூழ வெழுந்துப சரிக்கக் கண்டு
கணங்கொளுந் திரிபு ராந்த கன்னதி சயித்துச் சொல்வான். (ருஉ)

உம்மைநா னின்று காறுங் கண்டில னும்மூ ரோது
செம்மைசேர் நாம மேது செப்புதி ரென்னக் கண்ணன்
நம்மதூர் துவரை நாமஞ் சாமள நம்பி யிந்த
வெம்மையில் சிங்க மேதா மித்திர னெனக்கென் றோத. (ருங)

அக்கணந் தனிலே பெண்ணோ டமையமாப் பிளைகோ தூளி
லக்கன முகுர்த்தந் தன்னி னல்லமங் கலநாண் சாத்த
மிக்கமா மறையோ ரெல்லாம் வேண்டின ராசி சொல்ல
எக்கிய முடிந்த பின்ன ரியலூமூர்க் கோலமாக. (ருச)

ஐந்துநாட் சடங்குஞ் செவ்வே யானபி னிரவலர்க்கும்
வந்துள மறையோ ருக்கும் வழங்கினன் றானங் கண்ணன்
பந்துபோ ஜனஞ்செய் விக்கப் பரிவுடன் பெண்ணை யீன்றோன்
முந்துமாப் பிளைக்குத் தக்க படிசெய முயன்று நின்றோன். (ருரு)

என்னுடைப் பொருள்க ளெல்லா மிவர்பொருட் குறையும்போதா
தன்னமொன் செய்கே னென்று நாணுதல் கண்டு கண்ணன்
முன்னமோ தனக்குத் தக்க சம்பந்த முயல்கி லாது
பின்னர்யோ சித்து நாணிற் பிழையுனக் குளதே செய்க (ருசு)

எனுமது கேட்டுத் தன்னோ டியல்வகை செய்யச் செய்து
பினரவன் றன்னை நோக்கிப் பெரிதரி தாச ருக்கு
நினதுபெண் கொடுத்து நன்கு நின்றதா லென்றும் வாழ்தி
இனிதென வாழ்த்தி நார சிங்கமே தாவே யின்றே. (ருஎ)

வருகென யாருங் கூட மாப்பிளை பெண்ணோ டெய்தத்
திரிபுராந் தகனு நேரோ வழிவிட்டுச் செல்லத் தாசர்
மருவுமூர் சேரச் செய்து மற்றுநீ நினையும் போது
பரிவுடன் வருவ னென்று பகர்ந்தனன் றுவரை சேர்ந்தான். (ருஅ)

வேறு.

வந்தவ ருடனருள் மாதவ னேக
நிந்தையி லரிபத நேயர்தி னந்தோ
றுந்திரு நாயக னுறுவகை யாவுஞ்
சிந்தையு ளேகொடு பஜனைசி றந்தார். (ருகூ)

வளர்வுறு நாளிடை வந்தனர் துவரை
அளவுற லாகிய யாத்திரை யாரிற்
கிளரொரு நல்லவர் கேசவ பட்டர்
எளவுள தென்பது கருதினை ருற்றார். (சுூ)

போகிற வழியுள பொருள்கவர் வுற்றால்
ஏகுவ தெப்படி யெனவிவண் யாரே
ஈகைகொ டவ்விடை யீவகை செய்வோர்
வாகுட னென்னவு சாவிட மானார். (சுக)

இங்குள ரீவகை செய்பவர் நார
சிங்கமொ னும்பெய ராரெனல் செப்ப
அங்கவர் தம்முழை யன்னவ ரெய்திப்
பங்கமி லீரென வுற்றது பகர்வார். (சுஉ)

நும்முழை நானறு நூறுவி ராகன்
செம்மையு டன்றரு கின்றது செர
நம்மது நாயக னண்ணுது வாரை
தம்மிடை யென்வயி னீதல்ச மைப்பீர். (சுங)

என்றுரை செய்வதி னியல்புணர் தாசர்
நன்றென வேகொடு நல்கினர் சீட்டுத்
தன்றனை யேநிகர் சாமள நம்பிக்
கன்றது வேகொடு சென்றன ரன்னார். (சுச)

தருபொருள் கொண்டரி தாசர்த மில்வில்
வருவயி னவர்பெற மகிழ்வின்வ ழங்கித்
திருநெடு மால்பெயர் செப்பியி ருக்க
ஒருதுவ ராபதி யுற்றது ரைப்பாம். (சுரு)

போமவர் தம்பொருள் கொண்டவர் புரிவ
தாமதை யுன்னிய கத்தில்வி யந்து
தாமதி தூரந டந்தயல் சாருங்
கோமதி யாறுகு டைந்தனர் சென்றார். (சுசு)

சென்றுது வாரகை யிற்றிகழ் கண்ணன்
மன்றன்ம லர்ப்பதம் வந்தனை செய்து
நின்றரி நாமநி ரம்பநி கழ்த்திப்
பின்றனி யர்ச்சகர் தம்மடி பேணி. (சுஎ)

தாமதி யீர்துவ ராபதி தன்னிற்
சாமள நம்பியெ னும்பெயர் தக்கோன்
ஆமக மெங்கறை வீரென வன்னார்
நாமம றிந்திலெ மென்றுந வின்றார். (சுஅ)

பின்புறம் வந்தும்வி னவினர் பேரோர்
இன்பினிவ் வூரினி வில்லையெ னக்கேட்
டென்புரி தும்மென வெண்ணின ரங்கே
துன்புமி குந்துறல் கண்டவர் சொல்வார். (சுகூ)

என்னிய னிங்ஙனி னைந்தயர் கின்றீர்
சொன்மென வுற்றது சொல்லினர் கேட்டோர்
நன்மதி யீர்நர சிங்கனெ னும்பேர்
துன்னினன் வெம்மிடி துன்னின னின்னும். (எ0)

மானமு நாணுமி லான்வயி னெங்ஙன்
ஈனமி னும்பொரு ளீந்தனி ரன்றே
போனது நீர்துயர் புக்குற லாலென்
றேனுறு மென்றுச லிப்பைய கன்ற. (எக)

பின்னரு மிவ்வகை பேதுற வேயான்
முன்னரி யற்றிய தேதென முன்னிப்
பன்னரு மின்னல்ப டிந்தனர் தம்பால்
நன்னர டைந்தொரு சாமள நம்பி. (எ௨)

இவணடை நீரொவ ரொய்திய தென்னை
நவநர ரோயுறை செய்ம்மென நாணித்
துவரையின் மேவுது ழாய்விரி மார்பத்
துவமையி லாதவ னைத்தொழ வுற்றேன் (எ௩)

கள்ளர்ப யத்தினில் வைத்தது காமம்
விள்ளுநர் பாலறு நூறுவி ராகன்
கொள்ளவர் திட்டிது கொண்டுகொ டிப்பான்
தள்ளரு மாளொரு சாமள நம்பி (எ௪)

இங்கிலை யென்றனர் யாவரு மீதால்
மங்குறு கின்றனன் மாதுய ரத்திற்
பொங்கிய தேர்மிசை வந்துபு குந்தோ
யெங்குளை யாரென யாமள நம்பி (எ௫)

என்பவன் யானினி யும்பொருள் யாவும்
இன்புட னீர்பெற வையுற வில்லை
அன்புட னென்யஜ மானன ளித்த
நன்பொரு ளாதர வெங்கென நல்க (எ௬)

பெற்றரு ணன்குபி றங்குவி ழிக்கண்
ஒற்றுதல் செய்தரு குத்தவ ராதி
மற்றமு ளார்முக நோக்கிம கிழ்ந்து
நற்றிய வென்யஜ மானன யந்தே (எஎ)

எழுதிய சீரினை யென்சொல்வெ னென்ன
வழுவறு முத்தவ ராதியர் மாயம்
ஒழிகிலை யுன்கப டத்தினை யொன்றே
அழிவுறலின்றருள் செய்வத னாலே (எ௮)

பற்றிலர் பற்றென நின்றருள் பண்பே
உற்றனை யென்றுளு கந்தன ரோத்த
நற்றுணை யாய்வரு நம்பிந யத்தோ
டற்றதொ கைப்பொருண் முற்றுமளித்தான் (எ௯)

கேசவ பட்டர்கி டைத்தனர் கண்போய்
நாசமி லாதது பெற்றென நாடி
ஈசனு டைச்செய லிங்கிது வென்ன
நேசமி குந்துநி கழ்த்துத லானார் (அ௰)

நின்யஜ மானனை நீடுற நோக்கிற்
புன்மிடி யோனென லாயது பொற்பார்
உன்வ யினுற்றசி றப்பினை யுன்னில்
மன்மக னென்னம தித்திட வாய்த்தாய் (அக)

இப்படி யாயுற லெங்கணு மில்லீ
தெப்படி யென்னலும் யாமள நம்பி
அப்படி யாயின தன்னவர் மையற்
குட்படி கின்றிலர் சீருறல் வேண்டார். (அஉ)

ராமந னுமந வின்றுறு வாயார்
தாமடை கின்றவி திக்கெனை சாற்றல்
யாமனை சேயையெ ழிற்செயல் போல
மாமலி வாயெனை வைத்தன ரிங்கே (அங

அன்னவர் தம்மரு ளாலல வோநான்
இன்னற விர்ந்தமர் கின்றன னென்று
தன்னுடன் வந்தவர் தம்மொடு பூமேற்
பொன்னமர் மார்பனு வப்பொடு போனான் (அச)

போனபின் வந்தபொ ருட்குவை தன்னை
ஊனமி லாதெண வுற்றது மென்மே
லானது கண்டம லன்செய லீதென்
றீனமில் கேசவ பட்டரொ ழுந்தார் (அரு)

தானமெ னைத்துள வத்தனை யுந்தந்
தானபி னங்கமர் கோயிலை யண்மி
ஞானமு தற்றனி நாதனை வந்தித்
தூனமி லார்மகிழ் வுற்றனர் மீண்டார் (அசா)

மீண்டவர் தாநர சிங்களை மேவி
ஆண்டுந டந்தத னைத்துமு ரைத்து
நீண்டவ னைக்கட னுய்க்கதி றைத்தீர்
வேண்டிய நுந்துணை மேன்மைய ருண்டோ (அஎ)

என்றுபு கழ்ந்தினி தேகினர் பின்பு
நன்றுண ருந்தனி நல்லவர் கண்ணீ
ரொன்றுற நாதனை யுள்ளுள்வி யந்து
நின்றரி நாமநி கழ்த்தியி ருந்தார் (அஅ)

வேறு

பங்கமறு ஞானமிகு பத்தராம்
சிங்கர்மகள் மாமிமனை சேர்தரா
அங்கணுறை காலைதெரு ளாகவே
பொங்குமகிழ் கொண்டதுபொ ருந்தவே. (அகூ)

தாய்மனை தனக்கறித ரச்செய்வான்
ஏயவொரு வன்னிவணி லெய்தினன்
ஆயதனை யோடுனைசெய் தானதை
நாயகனை நோக்கிநவில் வாரரோ, (௯௰)

பாபமகல் பாகவதர் பத்தியில்
தீபநிகர் வீர்நமது செல்வியின்
சோபனந லந்திகழ்வு சொல்லினன்
கோபமறு குன்றுநிகர் கொள்கையீர். (௯௧)

நாமகிழ நல்வரிசை நல்குமா
ருமதனை நீரறைநதி ராலென
ராமனது நாமநல நம்வயின்
ஏமமென நின்றதுணர் கென்றனர். (௯௨)

என்றவரொ ழுந்துமக ளில்வயிற்
சென்றபொழு தங்கவர்சி ரித்துநீர்
நன்றுதுள வத்தொடையு நாமமும்
ஒன்றுஜப மாலையுமொ ருங்கவே. (௯௩)

மகடனது சோபனம ணத்தினுக்
கிகழ்வுறவெ றுங்கையுட னெய்தினீர்
தகவிதுகொ லோமகிழ்த ழைக்குமோ
மிகவயினவீரெனவி ளம்பினர். (௯௪)

வரிசைகளில் மிக்குயரும் வஸ்தெலாம்
தெரியவெழு தித்தருதிர் சேர்க்கென
அரிபதநி னைப்பினர ரைந்தனர்
விரிநகைவி ளைத்தனர்வி ளம்பவே (௯௫)

அவ்வயினெ ழுந்தொர்குடி லன்றுணிந்
தெவ்வகைகள் சொல்கெழுத வென்றனன்
நவ்விவிழி நங்கைமண நாரிதான்
மெய்வனைந லாடையணி வேண்டினள். (௯௬)

அவ்வவர வாவுவவெ லாம்வரை
செவ்வியனை நின்விழைவு சேர்க்கென
திவ்வியகுண பூர்ணருரை செய்திட
வெவ்வினையி னேன்விழைவு மேவவே (௯௭)

நெட்டயிலி லேகணியி னோர்மனுங்
கட்டியென வும்மெழுதல் கைக்கொளா
எட்டிறுவ ராபதியு ளின்பனைக்
கிட்டுநல னேயர்நினை கிற்கவே (௯௮)

எழுதுவதை யன்றிவர லின்றெனக்
குழுவிடைவி ராவுகுடி லன்சொலத்
தொழுமடியர் சூழுறவு சூழுவான்
வழுவில்சுமை யாளொடவண் வந்தனன். (௯௯)

மறையவனெ னச்சொல்வடி வங்கொடு
நிறையுமனெ வாயிலிடை நின்றுகொண்
டுறையுமடி யார்தெரிய வோதுவித்
திறையுறவெ லாருமவ ணெய்தியே. (௩)

வந்துசுமை யாளொடுதம் வாயிலின்
முந்துமறை வேதியனை முன்னிநீ
எந்தநக ரிங்கணுக லேதென
இந்தநர சிங்கர்புரி யேவலேன். (௩க)

வரிசைமக ளுக்குதவு வனவெலாம்
தெரியவொரு பெட்டியொடு சேர்ந்ததென்
றுறைசெயவ ழைத்துளுறை யச்செய
வருமவன்வ ரைந்ததனை வாங்கியே. (௩உ)

அதிலெழுது கின்றபொருள் யாவையுங்
கதுவும்வகை யொவ்வொருக ணக்குடன்
விதவிதம ளித்தெழுது மெல்லியோன்
அதையுமவ ளுதுதலை யாகவே. (௩௩)

வைத்தபொழு தங்கணுறை வாரெலாம்
மொய்த்ததிச யித்துமகிழ் முந்தவே
மெய்த்துநகை செய்துமதி மெல்லியோய்
மொத்தைமணு ளுதுதலை மோதவோ. (௩௪)

பெற்றனையெ னப்பலபி தற்றினர்
மற்றவனு நாணிமிக மாழ்கினன்
நற்றவமி குத்தநர சிங்கரை
உற்றனைவ ரும்புகழ்த லுற்றனர். (௩௫)

ஞானநல மிக்கநர சிங்கரோ
ஜானகிம ணாளனருள் தங்கினீர்
ஆனவதை யிப்பொழுத றிந்துளேம்
ஈனமதி யேமெனவி றைஞ்சினர். (௩௬)

பின்புமக ளுக்கணிபி றங்கவே
இன்புதரு சோபனமி யற்றினர்
அன்பின்விடை பெற்றுதம தாயவூர்
முன்புகிகழ் கண்ணனொடு முந்தினர். (௩௭)

கூடவரு கண்ணன்மகிழ் கொள்ளவே
நீடுபுகழ் கூறியெனி மித்தமாய்
ஆடரவின் மீதுதுயி லப்பனே
வாடுசிர மம்படவும் வாய்த்ததே. (௩அ)

என்றவரை நோக்கிமகிழ் வெய்தியே
குன்றவரை கொண்டமுகில் கோதிலீர்
ஒன்றவரை வுற்றபடி யுய்த்துளேன்
துன்றவனெ வீருமது தோளெனு. (௩௯)

தனதொருக ழுத்திலுறு தண்டுழாய்
வனவணிய லைக்கொடும கிழ்ச்சியாய்
அனகர்கள னிற்பொலிவ தாக்கினான்
பினரவர்வ ணங்கவிடை பெற்றனன். (௱௰)

அன்றுமுத லன்னவர்க ழுத்திலே
நின்றபஜ னைப்பொழுதி னேரவே
துன்றரிக ழுத்திலுறு தொங்கலான்
நன்றுவிழ லாயதுநா ளெலாம். (௱௰௧)

ஆகவரு கின்றதைய றிந்துமண்
ணேகவர சன்பெரிது மூகியா
மோகமுறும் வித்தையென முன்னியே
ஏகியது சோதனையி யற்றுவான். (௱௰௨)

அந்தநக ரிற்சினக ரத்துளே
வந்தரிக ழுத்திலுறு மாலையை
முந்துகவ சத்தொடுமு டிந்தது
சிந்துதலி லாதுசெறி யச்செய்தான். (௱௰௩)

இனையநர சிங்கருமி யற்றுப
சனைபுரிய நாளும்வரு தன்மைபோல்
முனைவிரவி நின்றதுமொ ழிந்தபோ
தனையவர சன்புகல்வ தாயினான். (௱௰௪)

நீருலகி லேதினமு நேருவோர்
யாரையும யக்கிடவ றிந்துளீர்
தாருமது தோள்விழல்ச மைப்பதை
நேரறிவ னின்றெனநி கழ்த்தியே. (௱௰௫)

மேவுதொடை தோளிடைவி ழாவிடில்
நோவுபட வேநுமைவ ருத்துவேன்
காவுமென வேயருள்செய் கண்ணனை
ஆவலுட னேதுதிய றைந்தனர். (௱௰௬)

என்றும்விழு தொங்கலவ ரின்களம்
துன்றலில தாகியது சோதனைக்
கன்றுவரு வோனறிய வாதரித்
தொன்றுதுதி நன்றுறவு ணர்த்தினார். (௱௰௭)

பின்னரும்வி ழாதுறுதல் பேணியே
இன்னலுட னேயிறையை யின்றுநீ
நின்னதுது ழாயணிய னேர்தியேல்
என்னகுறை வாமுனதி லென்றனர். (௱௰௮)

பரிவுடனி னைந்துதுதி பண்ணுமுன்
வரிவதுவ ரிந்தபடி மன்னவும்
ஹரிகளனி லாகியவிர் கின்றவோர்
தெரியலிவர் தோளிலொளி செய்ததே. (௱௰௯)

சிங்கரிவர் தோளிலொளி செய்துறும்
தொங்கலைய றிந்தவொரு தோன்றலும்
அங்கரிக ழூத்துறும லங்கருன்
எங்கெனவ றிந்தனணி லாததே. (௱௨௰)

பயமிகவி யந்தவர்ப தத்திலே
நயமுடன்வ ணங்கியிவர் நாகரோ
வியலிடம திற்பிறவி மேவினர்
ஜயஜயவெ னப்புகழ்த ழைக்கவே. (௱௨௧)

முகமனுரை செய்துமது முந்துசீர்
சகவறிகி லாதுறுத ருக்கிறல்
மிகநுமைவ ருத்திநவை மிக்கதே
அகமகிழ்வி னேடுபொறை யாற்றுவீர். (௱௨௨)

எனுமவனை யாசிகளி யம்பியே
துனவகம்வி டுத்தரிது ஊணப்பதம்
மனனுறநி றுத்திமிக வாழ்த்தியே
அனுதினமு மிவ்வகைய மர்ந்தனர். (௱௨௩)

நரசிங்கமேதா திருவடிகளே சரணம்

ஆகசரித்திரம் உகக்கு செய்யுள் ௲சா௨

முற்றிற்று.

# ராமதாசர்சரித்திரம்

பரம சத்குணர் பத்தரிற் றிலகர்பார்ப் பாரில்
விரவு முத்தம ராமதா சென்றொரு மேலோர்
தரமி குத்தடாங் கூரிலே வாழ்பவர் தாஞ்சென்
றிரவு பிச்சையூ ணேடுகும் பம்பெற வியல்வோர். (க)

ராம நாமமே நன்கிய ஞவுடை நல்லோர்
மாம ரந்தனைக் குடைந்ததிற் றுளசியை வளர்த்துத்
தோமி லாதுநூற் றைம்பது கோசுதூ ரத்தி
லேமு யங்குது வாரகைக் கேகுவ ரொடுத்து. (உ)

வருமெ காதசித் தினந்தொறுங் கண்ணனை மருவித்
தரிச னஞ்செயும் விரதத்தைத் தவிர்கில ராகி
விரவுமார்க்கத்தி னடக்கும்போ தானந்த மேவிப்
பரம ஞமத்தைப் பாடின ராடினர் பயில்வார். (ங)

தேக மீதபி மானமில் லாதவர் சென்று
வாக தாகிய கோமதி மூழ்கிமா தவன்பால்
ஏகி யன்பொடு வணங்கியென் பிறப்புட னிறப்புப்
போக நீயருள் கெனத்துழாய் கொண்டுபூ சிப்பார். (ச)

மீண்டு தாமுறை யூர்வரு வாரிந்த விதமாய்
ஆண்டு நாலைந்து மைந்துமே கழிதர லாக
வேண்டு கோளின ரொருதர மேவுதல் விலக
மூண்டு றுந்துயர் கொண்டவர் துவரையை முந்தி. (ரு)

பதித பாவஞ ககபதி வாகஞ பரமா
அதிதி ரக்ஷகா வெனக்குமூப் படைந்த தஞலே
நிதித ரித்திற் கெனநின்ற நின்னிடை நேரும்
விதித விர்ந்ததா லசக்தியு மெனக்குமே வியது (சு)

இனிநின் பால்வரு கின்றில னேலுமென் னிடத்தில்
கனியு மின்னருள் குறைவுறு தருள்செயக் கடவை
எனவு ரைத்தனர் கண்கணீர் பெருகுற வெனையாள்
அனக நின்னையான் காண்பதெப் போதென வழுது (எ)

முடிவ தாகிய சேவையீ தாதலால் மொழியும்
படியெ தாயினுங் கிடைத்தில னென்றுபோய்ப் பரமன்
அடிபி டித்தன ராயுற வருணிறை கண்ணன்
துடிது டித்தது பொறுக்கில னுன்குதோ ளுடனே (அ)

ஜம்பெ ரும்படை யொடுமுக மண்டல மவிரப்
பைம்பொ ஞர்கலை விளங்குறப் பத்தர்முன் றேன்றி
அம்பொன் மார்பகத் தணைத்தன னெடுத்தவர் தம்மை
நம்ப னேவெகு நாளெனைச் சேவித்து நயந்தாய் (கூ)

ஆதலாலுனக் கியான்கடன் காரனே யானேன்
ஏது செய்குவ னெப்படி யிக்கடன் றீர்ப்பேன்
போதல் செய்குவ னின்னுட னெனைக்கொண்டு போதி
காதலோடென ராமதா சென்பவர் கருதி (௰)

உன்னை யெப்படி யான்கொண்டு போவதென் றுரைப்பப்
பின்னை நாயக னெனதுதேர் வரும்வந்த பின்னர்
என்னை யன்னதி லேற்றியின் றிராவிடை யேகீ
நின்ன தூர்புகு கென்றுதேர் வரவுட னினைத்தான் (௰௧)

நினைத்த மாத்திரை வந்ததேர் கண்டன்பர் நிமலன்
றனைச்சு மந்தெடுத் தங்கதி லேற்றியூர் சார்ந்தார்
பினைச்ச ரண்டொழு தமலனை யென்னையாள் பெரும
உனைக்க ரந்தெங்கன் வைப்பதென் னகத்துநீ யுற்றால் (௰௨)

அங்குக் கண்டிலர் தேடிவந் தடியெனை யலைப்பார்
தங்கு நின்னினை வெப்படி யோவெனத் தளர்வோ
டிங்கு றப்பின்பு விடிந்தபி னெழிற்றுவா ரகையிற்
பொங்கு மர்ச்சகர் காண்கிலர் கண்ணனைப் புகுந்து (௰௩)

வியந்து விம்மினர் மயங்கலு மவரிலோர் விரகர்
நயந்து நேற்றிரா ராமதா சென்பவர் நணுகி
இயைந்து பூசனை யியற்றினர் தினந்தொறு மியற்றப்
பெயர்ந்து டன்கொடு போயின ரோவென்று பேச (௰௪)

யாரு மப்படி யாயினு மாமெனட் டாங்கூர்
சாரு வோமெனத் தெரிதரச் சார்ந்தன ராக
நேரு மன்னதை ராமதா சென்பவர் நினைந்து
சோரு நெஞ்சொடு கண்ணனைத் துதித்தனர் சொல்ல (௰௫)

கண்ண னேதொன்றுங் கழறில னுயுறல் கண்டு
திண்ண மேவருந் தண்டனையென்றுசீ தரனை
நண்ணு மங்கொரு கூபத்திற் கிடத்தினர் நண்ண
எண்ணி வந்தவர்ச் சகரிவ ரில்லிடை யெய்தி. (௰௬)

கொண்டு வந்தகண் ணனைக்கொடு மென்றவர் குறிக்கத்
தொண்டர் யான்கொடு வந்திலே னெனதகந் துருவிக்
கண்டு கொண்மினென் றுரைத்திட வர்ச்சகர் நடுங்கி
அண்ட கந்தொறுந் தேடினர் கண்டில ரயர்ந்தார் (௰௭)

கேணி வாவியிற் கிடத்தினுங் கிடத்தலா மென்று
வாணி மாமனைத் தேடின ரீட்டியான் மார்பில்
ஆணி பாய்ந்திடக் குருதிநீர்க் குமிழிமே லாகக்
கோணி னுரிது வென்னென மூழ்கினர் கொண்டார். (௰௮)

கொண்டு கண்ணனைக் குருதிநீர் துடைத்தொரு கொடித்தேர்
அண்டு றக்கொணர்ந் தேற்றின ரூர்செலலாகக்
கண்டு ராமதா சென்பவர் கலங்கினர் கண்ணு
விண்டு போதியோ கொண்டிலே னென்றுபோய் விளம்ப (௰௯

என்று சொல்வதைக் கேட்டருள் கண்ணனங் கிரங்கி
நன்று மற்றவ ருள்ளத்திற் றெரிந்திட நணுகி
ஒன்று புண்டலீ கன்றுவா ரத்துறு வதுபோல்
என்று நின்னகத் திருப்பனீ துயருற லென்றான். (௨௰)

எனலு ராமதா சென்பவ ருன்னையர்ச் சகர்தேர்
தனிலு யர்த்தினர் தாங்கொடு போவதைத் தவிர்த்திங்
கினிதி னெப்படி யென்னகத் திருப்பைநீ யென்று
பணிம லர்க்கணீ ரொழுகுறப் பகர்ந்திடப் பகவன். (௨௧)

நீசொ லர்ச்சகர் தம்மிடத் தெனதுமெய் நிறைக்குத்
தேசி கங்கொடுத் தென்னைநீ கொள்கென்று செப்ப
மாசி லாதவர் நினதுமெய் நிறைக்கொத்த மாழை
பேசு மென்னிடத் தேதெனப் பின்னைநா யகனும். (௨௨)

நினது நாயகி மூக்கணி யோடெனை நிறுக்கிற்
கனநி ரப்புவ னதைத்தந்து நீயெனைக் கைக்கொள்
கெனலு மின்புட னர்ச்சக ரிடத்தவ ரேகி
அனக ரேதுவ னாயினின்று மமலனீங் காறன். (௨௩)

யாது காரண மோதெரி கிலமிவ னணுகுஞ்
சீத ரன்றனை யென்கொடு செல்கிறீர் சிறக்க
மாத னந்தரு கின்றனன் மாதவ னிறைக்குப்
போத ரும்படி யமலனைத் தருகெனப் புகன்றார். (௨௪)

கேட்ட வர்ச்சகர் நகைத்திவன் கிளைபொரு ளில்லான்
நாட்டும் வாசக நன்றுநன் றெனநவில் வதைநாம்
ஈட்டு மிவ்விடத் தறிகுது மெனவவ ரிசையக்
கூட்ட மாயின ரூருளார் கொடுப்பது குறிக்க (௨௫)

வந்து கூடினர் தங்களை மாதவர் நோக்கி
இந்த வர்ச்சகர் பொருள்கொடு தருவமென் றிசைந்தார்
உந்த மக்குமு னுரைபிற ழாதுறல் வேண்டும்
முந்த வீப்பனீர் காண்குற நிறுத்தென மொழிந்தார் (௨௬)

ஊரு ளாரந்த வர்ச்சகர் தமையுற நோக்கிச்
சீரு ளீரிது சம்மத மோவென்று செப்ப
யாரு நோக்குற விவன்றரு கிற்பனே லளித்தும்
நேரு மூர்த்தியை யென்றன ரர்ச்சகர் நிலைக்க. (௨௭)

யாவ ருந்துலை மீதம லன்றனை யேற்றித்
தாவி லன்பனை நோக்கிநீர் பொருடரு கென்ன
மேவி யில்லிடை மூக்கணி கைக்கொடு மேவ
நீவிர் போய்க்கொடு வந்ததே தென்றனர் நின்றோர். (௨௮)

கைக்கு ளாயதைக் காட்டலுங் கண்டவர் நகைத்து
நிற்கு மோவிது நிறைக்கென வன்பரு நிறுத்தால்
ஒக்குமீதென வுச்சிமேற் கரங்குவித் துன்சொல்
பொய்க்கு மோவம லாவடி யார்க்குறு பொருளே. (௨௯)

முன்ன நாரதர்சத்திய பாமையை முயக்கி
உன்னை யேகொடு போம்பொழு துருக்கும ணித்தாய்
அன்ன நற்றுலை யிடுந்துள வத்தள மலவோ
என்ன தின்பொரு ளெனத்துலை யிட்டன ரேற்க. (௩௰)

இட்டமூக்கணிக் கெம்பெரு மானிறை யேலாத்
தட்டு யர்ந்திட மூக்கணித் தட்டது தாழ
வட்ட மாநிலின் றொலாம் வியந்தனர் வானோர்
மட்டு மாமலர் சொரிந்தனர் வாழ்த்தினர் மாதோ. (௩௧)

முன்வி ணோதமா யிசைந்தவர்ச் சகரொலா முன்னிப்
பொன்னி ணுயக ணிங்ஙன மிவர்க்கருள் புரிந்தால்
என்ன தாகுநஞ் செயலென மூர்த்திதா னிங்கே
நன்னர் வைகுக வெனநிலை செய்தனர் நல்கி. (௩௨)

நல்கி யன்பரைப் புகழ்ந்தனர் துவாரகை நண்ணிப்
பல்க வேறொரு மூர்த்தியைப் பதிட்டைசெய் துற்றார்
மல்கு றுந்துவ ராபதி வருமவர் டாங்கூர்
புல்கு கண்ணனைக் கண்டுபோ வாரின்றும் பொருந்த. (௩௩)

ஆகச்சரித்திரம் ௨௨க்குச் செய்யுள் ௩௪௫

இராமதாசர் திருவடிகளே சரணம்

முற்றிற்று.

# பிரமசாரிசரித்திரம்

அரித்து வாரமெ னும்பெய ரேயராப்
பரித்த பார்மிசைப் பல்கிய மாநகர்
தரித்த மாமறை யோர்சகத் தாசைமா
சிரித்து ளோர்கலி யாணசு வாமியே (க)

ஊரிப தாம்புயத் தாசைவிஞ் சன்னவர்
பெரிது தீர்த்தமா யாத்திரை பேணினார்
புரித ரப்புகும் போதினன் பாயுடன்
றுரிசி லாவொரு வன்னியுந் துன்னினார். (உ)

இரவி நன்பக லும்மிரா மன்பெயர்
பரவி யேயுள பற்பல தீர்த்தமும்
விரவி யாடிமால் வீற்றிருக் கும்பதி
கரவி லார்பல கண்டுகொண் டேகினார். (ஙு)

ஏகி யான்மவின் பம்பெரி தெய்தியே
வாகு நாலுடை மால்குண மாண்பைவீ
வேகர் பேசிமேன் மேன்மது ராபுரி
யாக நீள்யமு னாநதி யாடினார். (ச)

ஆடி யம்மது ராபுரி யண்மியே
நீடு மாயனைக் கண்டுநீ டாதரங்
கூடி வேண்டுறும் பூசைசெய் தேகுலாய்ப்
பாடி னார்புகழ் பற்பல பன்னியே (ரு)

மூன்றி ராவவண் மூந்தினர் தங்கினார்
ஆன்ற காலைகல் யாணசு வாமியங்
கூன்று மாறுதா பச்சுர முற்றதால்
ஏன்ற வன்னியு மேகில ரெய்தினார் (சா)

பரர்பொ ருட்டுப காரமே பண்ணுமா
தரவி ரக்கமுஞ் சாந்தமுந் தங்கிய
பிரம சாரிநோய் பேர்தரப் பத்தியம்
உரம ருந்துதந் துற்றனர் நாளெலாம். (எ)

ஆறு மாதமங் கானபி னேயறத்
தேறி னார்கலி யாணசு வாமிதேர்ந்
தீறி லாதெனைக் காத்துளீ ரோயெனக்
கூறு வாருப காரநேர் கொள்வே. (அ)

ஆண்டொ ரொட்டுளா ளானவென் றன்மகள்
வேண்டு நற்பதி நீரோன வேண்டினேன்
ஈண்டு நின்றுநா மேகின பின்புநீர்
பூண்டு கொண்மி னென் றுரைா பொய்க்கிலார். (கூ)

சொன்ன வாசகங் கேட்டவர் சொல்லுவார்
அன்னை தந்தையோ டாருமில் லேனெனக்
கென்னை நன்மண மெய்தவு மென்மனந்
துன்னு ருததுந் துக்கமென் றோதவே. (௰)

ஓது வன்னியை நோக்கியும் பாலுரு
தேத மற்றதற் கெம்பிரா னேயுளன்
ஆத லாலெனக் கானபெண் ணீர்கொளா
ஈதல்செய்தன னென்னலும் வன்னியே. (௰௧)

நீரு ரைத்தவர் நேர்வரோ நும்மனை
யார்ம றுத்திடி லென்செய்வீர் நீரெனத்
தேர்த வத்தினர் சேரவா ரும்மெனப்
பாரளிப்பவன் பாலழைத் தேகினர். (௰௨)

அன்ன மாதவன் முன்னர்நின் றன்பினோ
டென்ன தோர்பெணை யின்னவர்க் கீகுவேன்
சொன்ன சொற்றவி றோனெனச் சொல்லினர்
பின்னை கேள்வனைச் சான்றெனப் பேணியே. (௰௩)

வன்னி கையினீர் வாக்கிய பின்புமால்
பொன்னி ரடிப்போதினைப் போற்றியே
பின்னர் வன்னியைக் கைக்கொடு பேர்ந்தனர்
மன்ன ரித்துவா ரத்தில்வந் தாரரோ. (௰௪)

வந்து வன்னியை வைத்தோர்ம ருஙகுற
முந்து போதில்மு கங்கொடுத் தின்னுரை
தந்தி டாதுத னையரும் பன்னியும்
நொந்தி ருந்தபின் றந்தையை நோக்கியே. (௰௫)

மனைய றத்தைம றந்துபொன் வீட்டுத
றனைவி டுத்துநீர் சார்ந்தனிர் யாத்திரை
புனைவி னுள்பல போக்கிப்பு கும்பொழு
தினைய னைக்கொடிங் கேன்வந்தி ரென்னவே (௰௬)

மைந்தன் கூறிய கழ்ந்திட மற்றிவர்
நொந்து தம்மனை யாள்முக நோக்கியே
எந்த நாட்டினு மேகிம துரையில்
வந்த போதுதா பச்சுரம் வந்ததே (௰௭)

சுரத்தி னொந்துதொ லைவுப டாதெனைத்
திரத்தி னுறுதிங் கள்வரை தீர்மருந்
துரத்தி னல்கியு தவிசெய் தானிவன்
றரத்தி லென்செயத் தக்கதென் றெண்ணியே (௰௮)

நமது கன்னியை நல்குத லேநல
வமைதி யென்றறி முன்னரன் பாகிநீர்
சமைய நல்கிய ழைத்திங்குச் சார்ந்தனென்
நமரு மொப்புதி ரென்றுநு வன்றனர். (௰௯)

யாத்தி ரைக்க ணிறத்தனன் றன்னது
நீத்து ளீர்நெடு நாள்வரை நின்றநோய்
தீர்த்த னனிவ னென்றுநீர் செய்ததைப்
பேர்த்தி ருக்கெனப் பேசினள் பின்னரும். (௨0)

உலகி னன்றியொ ருவர்க்கொ ருவர்செய்
திலக லென்றுமுண் டின்னதற் காகநங்
குலந லக்கன்னி தன்னைக்கொ டுப்பதோ
நலமி லன்னியற் கென்று நவிலவே. (௨௧)

மதுரை நாதன்முன் யான்சொன்ன வார்த்தையைப்
பிதிர்வு செய்வதெவ் வாறெனப் பேதையும்
வதுவை வேறொன்று செய்தும கட்பெற்று
நொதும லற்கருள் கென்றுநு வன்றனள். (௨௨)

ஹரிப தத்திநல் லன்புசெய் வோற்குநந்
தெரிவை யைத்தரல் செவ்விய தேமறேல்
புரிகு ழற்குயி லேயெனப் பொள்ளென
விரிசி னத்தின்வி ளம்புகின் றாளரோ. (௨௩)

இன்னு மிச்சொலி யம்புவி ரோலென்றன்
கன்னி யைத்தள்ளு வேன்கயத் தென்னலும்
மன்னு மைந்தரு மற்றது வேசொல
என்ன செய்வர்கல் யாணசு வாமியே. (௨௪)

வாட்ட மிக்கவ ராய்மறு நாளுடன்
கூட்டி வந்தவவ் வன்னியைக் கூய்க்கொடு
நாட்டு வேந்தன்மு னண்ணியெ லாஞ்சொலக்
கேட்ட மன்னவன் வன்னியைக் கேட்கின்றான். (௨௫)

கோணி லாவிவர் பெற்றகு மாரிதன்
பாணி பற்றெனப் பாணிகை வார்க்குபோ
தாணி யாயவன் யாரிருந் தாரொன
வாணி மாமனென் றாரந்த வன்னியே. (௨௬)

ஆயி லந்தம துரையில் வாழரி
நேய மோடிவண் வந்துநி கழ்த்திடில்
ஈய லாமிவர் பெண்ணையு னக்கென்றான்
மேய பூதல வேந்தன்வி ளவியே. (௨௭)

நன்றெ னக்கொடு நம்பியவ் வன்னியுஞ்
சென்று கூட்டிவ ருவெனெ னச்சென்று
நின்ற மாமது ராபுரி நித்தன்முன்
ஒன்றி யஞ்சலித் தோதுகின் றாரரோ. (௨௮)

ஐய னேயகி லங்களுக் கன்பர்க்கு
மெய்ய னேயுன்றன் முன்னந்த வேதியர்
கையி னீர்தரக் கண்டனை யாதலால்
வைய மன்னன்மு னீவரல் வாய்த்ததே. (௨௯)

அரசன் முன்வந்த றைகிலை யேலினிப்
பிரம சாரிசம் சாரியெ னும்பெயர்த்
தரமி ரண்டிலொன் றும்மின்றிச் சாம்புவேன்
கரனி னீர்கொண்ட காரணத் தாலென்றார். (௯௰)

உன்னை யன்றியொ ருதுணை வேறிலா
என்னைக் காத்தியென் றேத்தவி ரங்கின
பின்னை நாயகன் பின்வரு கின்றவென்
றன்னை நோக்கலை சாருதி முந்தென்றான். (௯௧)

திரும்பி நோக்குதி யேலுடன் சேர்கிலேன்
விரும்பி யவ்விடத் தேநிலை மேவுவேன்
அரும்பு மன்பின னேயெனு மவ்வுரை
தரும்பொன் னுதனைத் தாழ்ந்துமுன் சார்ந்தனர். (௯௨)

செல்லு வோர்திரு நாயகன் சேவடி
புல்லு நூபுரம் பொங்குறு மோசையை
நல்ல தாகவி னுவிந டந்தனர்
தொல்ல ரித்துவா ரத்தினைத் துன்னவே. (௯௩)

கோச னைக்குப்பு றத்துக்கொ ழுஞ்சிலம்
போசை கேட்கில ருன்னித்தி ரும்பினார்
நேச மோடுடன் வந்தநி மலனும்
ஈச னின்றன னேக்குமி டத்திலே. (௯௪)

நின்ற மாயவன் வன்னியை நோக்கிநீ
ஒன்று நான்முனு ரைத்ததி கந்ததால்
நன்ற தாமிங்கு நண்ணுவ னண்ணிடேன்
வென்றி மன்னனி லென்றுவி ளம்பியே. (௯௫)

சென்று மன்னனைச் சேர வழைத்திவண்
ஒன்று கென்னவு டனந்த வன்னிபோய்
நன்றி மன்னனைக் கண்டுபொன் னுதனைத்
துன்று றக்கொடு வந்ததைச் சொல்லினார். (௯௬)

வினவி மன்னன்வி யந்துவி ளங்குமா
சனமி ழிந்தவர் தம்மைவ ணங்கித்தன்
அனிக மோடிய மார்ப்பவம் போருக
வனிதை நாதனை வந்துவ ணங்கினான் (௯௭)

வணங்கி யானந்த மாக்கடல் மூழ்கியிங்
கிணங்கு மூர்த்தியெ ழில்மது ராபுரிக்
கணங்கி ளர்ந்தொளிர் கண்ணனன் றேகண்ட
குணங்கி ளர்ந்தவ ரோயெனக் கூறினான். (௯௮)

கண்டு வந்தவர் யாங்கண்ட கண்ணனே
அண்டு மூர்த்தியென் றோத வரசனுந்
தொண்ட ரோடுதொ ழுதரி நாமத்தை
மண்டு றச்சொல்லி வாழ்த்திம கிழ்ந்தனன். (௯௯)

நல்ல மங்கல நாள்குறித் தஞ்சுகோ
செல்லை நீளமி லங்குறப் பந்தரிட்
டொல்லொ லிப்பல்வி யங்களு மோங்குறப்
புல்ல யாவும்பொ ருந்தவ மைத்தரோ. (௪௰)

மான மைந்தும கிழ்ந்துவி ளங்குகல்
யாண சாமிம களைய லங்கரித்
தேண நன்மணம் வன்னிக்கி யற்றியே
பூணு மாடையும் பொங்கவ ழங்கினன். (௪௧)

சான்று தொண்டற்குச் சாற்றம துரைவாழ்
தோன்ற லிவ்விடைத் தோன்றின னென்றுதேன்
கான்ற மாமலர் தூவிக்க ளித்தனர்
ஆன்ற தேவர னைவரு மங்ஙனே. (௪௨)

மதுரை மாநகர் மற்றொரு மூர்த்தியால்
அதுவி ளங்கவ மைத்திங்கொ ராலயம்
புதுமை செய்துபொ ருந்தவெல் லாம்புரி
மதுகை மன்னன்ம கிழ்ந்திருந் தானரோ. (௪௩)

அன்று தொட்டுத்த ரதிசை யாகியே
துன்ற ரித்துவா ரப்பெயர்த் தொன்னகர்
ஒன்று தக்கணத் திற்பண்ட ரியொளிர்
கின்ற மேற்கிற்று வரைகி ழக்கிலே. (௪௪)

மேவு றுஞ்சக நாதம்வி ளங்குவான்
பூவின் மங்கைபொ ருந்துநி றத்தினன்
ஒவி லுலுதி சைக்கணு முள்ளவர்
தேவ தேவவென் றேத்திச்சி றக்கவே. (௪௫)

ஆகசரித்திரம் ௨௩-க்குச் செய்யுள் ௲௪௱௰

பிரமசாரி திருவடிகளே சரணம்.

---

முற்றிற்று.

# சூரதாசர்சரித்திரம்

துவரா புரிமே விய தோன் றலுளங்
கவரா தரமே வுகளிப் பின்மகிழ்
பவரா னவர்சத் தியபா மையகத்
தவரா யினரக் குரூரர் ஒருநாள். (௧)

வந்தா ருறவா சனம்வண் மைபெறத்
தந்தா தரவிஞ் சுசன்மா னமிக
முந்தார் தருவோர் முகநோக் கிமனத்
துந்தா தரமோ துவர்பா மையரோ. (௨)

முன்போ லெனின்மே விமுயங் கமுகுந்
தன்பா லினிதோ துசமர்த் துடையீர்
அன்பா லரிநே யமளா வுதலால்
என்பா லவனெய் தவியற் றுதிரோ. (௩)

என்றா ரரியின் பிரிவான் மயனேய்
துன்றா யிழையார் புகுசோர் வுதனை
நன்றா யுணரக் குரூரர் இனிநா
தன்றா னிவரில் விடைசார் கிலனேல். (௪)

இவரா ருயிர்போ மெனவெண் ணியனே
கவலா துறுமிவ் விடைகண் ணனையான்
தவலா துறுமா றுசமைப் பெனனா
அவனார் வடிவத் தொடுமெண் ணினரோ. (௫)

கண்ணா னெதிர்நின் றதுகண் டவுடன்
பண்ணின் மொழியா ளொருபா மைமிக
உண்ணைந் துயிரோ வுதலோ விமகிழ்
நண்ணும் பொழுதே கினனா ரணனே. (௬)

தன்னின் னெதிர்நின் றவர்தம் மையெனே
என்னின் னிவனெய் தினையா னிலையாய்த்
துன்னும் பொழுதென் றுதொடர்ந் தகலி
மன்னந் தகனாம் பவம் வாய்க் கவெனா. (௭)

தளர்சத் தியபா மைநிதா சியெனக்
கிளரப் பவமே வல்கிடைத் திநிலத்
தளவக் கலிகா லமதிற் கடிதென்
றுளமொப் பவுரைத் தனனப் பொழுதே. (௮)

குருடா மவர்கோ கநகை கணவா
அருடா னிதுவோ வெனவஞ் சலியாத்
தெருளா தவனோ வெனைநீ தெளியாச்
சுருளார் குழலா ருறுசோர் வறவே. (௯)

அன்போ லிவணின் றனனீ யதனை
என்போ லெனவெண் ணினையா வருளும்
பொன்போ லொளிர்புங் கவனே பொறைசெய்
உன்போ லிலையா கியவுத் தமனே. (௰)

எனுமின் னுரைபற் பலியம் பிடலும்
வினவுந் திருமா லறிவேன் மெயினைச்
சினமொன் றிலென்மே தினிநீ தறவிங்
கனமும் மைநவின் றனனென் றனனே. (௰௧)

ஆயிற் கலிகா லமதிற் புவியான்
றாயிற் பவமே வுதலைத் தவிரா
நீயிப் படியென் னெதிர்நிற் கவென
வாயிற் றுதிவைத் துவகுத் தனரோ. (௰௨)

கலிசேர் வுறுகா லமதிற் பிரிவாற்
சலிபா மையொர்தா சியெனப் பவமே
புவிமே வுமிடத் துநீபோ தருபோ
திலியா னுமையென் னிடைசேர்த் துவெனே. (௰௩)

வேறு.

என்று மாயனி யம்புமா
நன்று மாமது ராநகர்
துன்று கண்ணொளி துன்னிடா
தொன்றி னார்செய லோதுவாம் (௰௪)

சூர தாசனொ னச்சொலும்
பேர ராயரி பேணையே
தீர ராயுரை செய்துறுஞ்
சீர ராயினர் தேறியே. (௰௫)

பலந லப்பிர பந்தமுங்
குலவ ரிப்பெயர் கொண்டதாய்
இலகு றச்செய்தி லங்குவார்
திலகர் வைணவ சேகரர் (௰௬)

ஒருதி னம்புரு ஷோத்தமன்
றிருவ டிப்பணி செய்கையில்
கருதி யிப்பவ காரணந்
தருதி ருக்கண வன்றனை. (௰எ)

எண்ணி யன்புட னேயெதிர்
நண்ண வேண்டினர் நாடியே
கண்ண னன்புக லந்தசீர்
அண்ணல் கோயில டைந்தனர். (௰அ)

சன்னி திக்கெதிர் நின்றுதாழ்ந்
துன்னி யுச்சியின் மேற்கரந்
துன்னி டத்தமி சொல்லினார்
மன்னி யிப்பவம் வாய்த்ததே. (௰௯)

ஊரிதி ருப்பெய ரன்புடன்
விரிக ருத்தினர் மேவுநாள்
வரிபுக ழ்ச்செய வந்திவாழ்
குரிசில் பேரவை கூடுவோர். (௯0)

தேறு பாடகர் தீரரைஞ்
ஞூறு பேரினு ணங்கியோர்
ஆறு தீபம விர்ந்திடக்
கூறு வாரொரு கோதிலார். (௯௧)

முகம்வி ரும்பினன் முன்னியே
சகமெ லாமகிழ் தானசேன்
நிகர்வர் யாருமை நேடுறின்
மிகவு மேன்மைவி ராவினீர். (௯௨)

என்று கூறிட வின்னவர்
ஒன்று சீரிலு யர்ந்துளோய்
நன்று மென்னின லங்கொடு
துன்று வோர்பலர் சொல்லிலே. (௯௩)

பெரிய தென்றுரை பேசிய
கரிய வேலைய கத்தியர்க்
குரிய வங்கையொ டுங்கிய
தரியெ னுந்திர லண்மிறோய் (௯௪)

காசி னித்தரு கஞ்சனுங்
கோசி கற்கொளி குன்றிளும்
ஆசில் மாருதி யங்கையால்
மாசு ணரிம ழுங்கினன். (௯௫)

பல்ல மென்மகள் பண்புசால்
வல்ல மாயன்ம ணத்தினில்
நல்ல சாம்பன்மு றைரதன்
அல்லல் பாடவி லாயினன். (௯௬)

இப்ப டிக்குல கெங்கணும்
ஒப்பி லீசனு ஞற்றினன்
அப்ப டிக்குற லானபோ
தெப்ப டிக்கெனை யெண்ணுவேன். (௯௭)

எனலு மன்னவ னேசிலீர்
நனிசி றந்துமி னண்ணுவோர்
இனைய றொன்றுரை செய்கென
அனையர் கூறிட லாயினர். (௯௮)

அரச னேமது ராபுரி
சுரந லந்தெரி சூரதா
சனெனின் மிக்கவர் தானெனப்
புரவ லன்புகல் கின்றனன். (௯௯)

ஆகி லன்னவ் வொத்தனை
ராகம் வல்லவர் நன்றெனப்
பாகி னின்னிசை பற்பல
வாக வல்லவர் மன்னனே. (௪௰)

என்னு முன்னர சின்பமாய்
மின்னும் யானம் விடுத்தவர்
துன்னு முன்றுதி சொல்லிநேர்
மன்னு தாளில்வ ணங்கியே. (௪௧)

ஆச னத்துற வைத்தவர்க்
கேசில் பூசையி யற்றியே
நேச மோடுறு நீளவை
மாசில் பாடகர் மல்கினார். (௪௨)

தான சேனரி தாசனை
ஆன வன்புட னஞ்சலித்
தூன மின்றும துத்தம
ஞான கீர்த்தன நாமெலாம். (௪௩)

வினவ மிக்கவி ருப்புளேம்
அனக ரேயருள் செய்ம்மெனக்
கனநி றந்திகழ் கண்ணன்மேல்
மனமு ளோர்சொல்வ ழங்குவார். (௪௪)

நானி சைப்பது நாரணன்
கான நுஞ்செவி கட்குநேர்
ஆன தாயிலி சைப்பெனென்
றேநல் வீணையெ டுத்தரோ. (௪௫)

எழுசு ரங்களு மேலவே
வழுவி லாதுவ குத்துமால்
பழுதி லின்னிசை பாடினார்
குழுமி னோர்மயல் கொள்ளவே. (௪௬)

கங்கை பெற்றரு ளுங்களிற்
றங்கை தாள மமைக்கவெண்
பங்கை யாசனி பண்சுரம்
பொங்க நன்குபொ ருத்தவே. (௪௭)

கண்ண னுடல்க லந்துற
விண்ணு லாவிய மேனகைப்
பெண்ணொ டெண்ணிலர் பெட்புறத்
தண்ணெ னோசைத ழைக்கவே. (௪௮)

துன்பு றுரிசை சோர்விலா
தன்பர் பாடின ரங்குளோர்
இன்பின் மூழ்கிட விவ்விதம்
மன்ப ராவவோர் மாதமே. (௪௯)

அரசன் மேவுமைஞ் ஞூறராங்
தெரிவை மாரிவர் செய்கையைப்
பெரித றிந்திசை பேணியே
குரிசில் பாலிது கூறினர். (௫௰)

ாங்க ளும்மவர் நல்லிசைப்
பாங்கு நேர்வின வும்படித்
தீங்கி லோயருள் செய்கென
ங்கு சீரின னுன்னினன். (௫௧)

ண்ணி லாரிவர் கண்முனே
ண்ண லாமென நாடகத்
தண்ண ரங்கிடை சார்வுறப்
பண்ணி யின்னிசை பாடவே. (௫௨)

செய்து தேவிய ரும்வரப்
பெய்த போதவர் பெட்புற
ஐது பாடிட லானபோ
தெய்தி னளிசை யின்பினல். (௫௩)

சாவ மானது தாங்கியக்
கோவி லேய்பணி கொண்டுறும்
பாவை யாகிய பாமையை
மேவு மன்பர்கண் மேவியே. (௫௪)

கண்டு பாடுறு கானமுட்
கொண்டுகூவல்கு றித்திடா
தண்டு கின்றனே யாலென
மண்டு தேவியர் மாழ்கினர் (௫௫)

விழியு ளானொன வெள்கியே
முழுக நீடினை மூடினர்
வழுவ லிவ் விரு வரு முடன்
கழும லாகிய காலையே (௫௬)

கண்ண னங்குக லந்துமாப்
பெண்ண ணங்கொடு பேசுசீர்
அண்ண லன்பனை யுந்தன
தெண்ண ரும்வடி வெய்தவே (௫௭)

சேர்த்து நீளொளி சேர்ந்தனன்
சீர்த்த மன்னெடு சேர்ந்துளோர்
பார்த்து மற்றிவர் பண்பினைத்
தீர்த்த மொன்றிசை செப்பினர் (௫௮)

ஆகச்சரித்திரம் உ௪ க்கு செய்யுள் ௲௫௬௮
சூரதாசர் திருவடிகளே சரணம்

முற்றிற்று.

# சேனாநாபிகர்சரித்திரம்

நானா நன்மையு நல்க விந்தர்வாழ்
மானா வூரில்வ திந்த ளோர்குலம்
ஏனா தியரெனி னும்வி ரக்தராய்ச்
சேனா நாபிக ரென்றோர் செவ்வியோர். (௧)

அன்னார் வாழும கத்தி லேவலை
மின்னா ராழிவி ளங்கு கையனும்
பொன்னார் மார்பனை வைத்துப் பூசனை
பன்னா ளும்புரி கின்ற பண்பினோர். (௨)

அரிநா மந்தனை யனுதி னஞ்சொல்வார்
புரியாள் மன்னவன் வேலை பூண்டுளார்
கரியா னைக்கரு தற்கு நந்தொழில்
பெரிதா குந்தடை யென்று பேணிடார். (௩)

கண்ணன் பூசனை யேக னிந்துறப்
பண்ணுஞ் செய்கையி லேப யின்றுளார்
நண்ணும் போதொரு நாளின் மூள்கிநீர்
எண்ணங் கொண்டரி பூசை யெய்தினார் (௪)

எய்தும் போதர சன்ற னேவலார்
வெய்தின் வந்துவி ரைந்த ழைத்திட
மெய்தங் கன்னவர் தேவி யார்வினாய்
நொய்தி னோதினர் கேட்டு நோன்மையோர். (௫)

நானிங் கில்லென நாட்டு கென்றிடத்
தேனின் மென்மொழி மாதர் சென்றழை
கோனி னேவலர் கட்குக் கூறிட
ஊனின் வேலர சன்க ணோதினார். (௬)

அப்போ தன்னவ ரிற்க டுத்துளோன்
வெப்போ டோடியவ் வேந்த னோர்ந்திட
இப்போ தில்லுழை யேயி ருந்துகொண்
டெய்ப்போர் பான்மனை யாளை யுய்த்தரோ. (௭)

இல்லென் றோதவி சைத்து ளானெனச்
சொல்லும் முன்னர சன்சு ளித்துமுன்
புல்லும் வீரரை நோக்கி நீர்புகா
தில்லி லெய்தும வன்க ணேகியே. (௮)

பாசத் தாற்பிணி செய்து பையுளின்
மூசக் கொண்டிவண் முந்து கென்றுமன்
பேசக் கண்ணபி ரான்பொ றுப்பனோ
மாசற் றோருரு வாகி வந்தனன் (௯

தோளி லோர்புடை தூங்க டப்பமோ
டாளு மன்னன்மு ளுகி யேசலாங்
கோளும் மாறினி தேகு றித்திட
மூளுங் கோபமெ லாமு ரிந்தவே. (௰)

தினமா றிம்முக வேலை செய்கையில்
நனிநன் காயது கண்டு நாபிகர்
முனைநீ செய்பணி தன்னில் முந்திய
தினநாள் செய்பணி யென்று கோமகன் (௰௧)

உன்கை யாலெண்ணெ யென்ற னுச்சிமேல்
நன்கு பூசுக வென்று நானநெய்
மின்கொண் டார்மணி வேய்வ ளத்துறத்
தன்கண் ணாசன மீது தங்கினான். (௰௨)

சேனா நாபிக னைய ஸ்ரீ ஹரி
தானா ரெண்ணெய்த லைக்க ணிந்திடக்
கோனார் வள்ளம திற்கொள் குண்டலம்
மேனா ருண்முடி தோள்க ளால்விராய் (௰௩)

பொன்மா னுடைபொ ருந்த நீனிற
மன்மா மேனிவ யங்கு றத்தெரிந்
தென்மா மாயமெ னத்தி கைத்துமேல்
தன்மா நாபிகர் தம்மை நோக்கினான். (௰௪)

மயிர்கொய் நாவித னய்வ யங்குறச்
செயிரில் கிண்ணம தைத்தி ரும்பவும்
பயில்பீ தாம்பர தாரி பண்பினை
உயிர்தா னின்புற வுற்று நோக்கினான். (௰௫)

அவசங் கொண்டன னுக வெண்ணெய்பூ
சுவரும் பூசுற வுள்ளு ளாரெலாம்
இவர்தஞ் செய்கையெ னேயெ னத்திகைத்
தவர்தங் கோனைய டைந்து கூறுவார். (௰௬)

அரசே யிங்கிரு ஜாம மாகியும்
விரசாய் நானம்வி ரும்பி யென்னுமவ்
உரையா லேயுணர் வுற்று மன்னவன்
புரைதிர் நாபிகனைப்பு கழ்ந்தனன். (௰௭)

இங்கே நீயிரு வென்றொ ராதனம்
அங்கே யீதலு மவரி ராதுறத்
தங்கா யாகிலெ னவி தங்கிடா
தெங்கே னுஞ்செல லென்று கூறினான். (௰௮)

வேந்தே நானக மேவி மீளுவேன்
போந்தா டின்புன லென்ற போதவன்
ஈந்தே மங்கடி தேகி வாவென
ஏந்தா நாபிக ரிற்க ணேகியே. (௰௯)

அலையும் பொன்னடைப் பத்து ளேயுற
முலையின் மாட்டிமு ராரி சென்றனன்
திலையு மெண்ணெயி னுனந் தீர்ந்தபின்
வலையின் மன்னவன் வந்த வைக்கணே. (உ௰)

ஏவ லாளரை நோக்கி யேயிவண்
மேவ நாபிகன் வேண்டு நீர்செலீஇக்
கூவல் செய்துடன் கூட்டி வம்மெனக்
காவ லின்றன மீதி லென்றனன். (உ௧)

உடனே யேவல ரோடி நாபிகர்
இடனே கிவ்வரு கென்ன மற்றவர்
கடனே சென்றுநாங் காண லென்றுதோள்
வடனே டாரடப் பத்தை மாட்டியே. (உ௨)

கோபங் கொண்டனன் கோனெ னுமலர்
நாபன் றன்னடி யார்ந டுக்குடன்
பூபன் றன்னவை போத லும்பிர
தாபஞ் சேரர சன்னெ ழுந்தனன். (உ௩)

கண்டோர் யாவருங் கல்லெ னுநகை
கொண்டா ரன்னதெ லாங்கு றித்திடான்
வண்டார் மாலைய மன்ன னுபிகர்
ஒண்டா வும்முக நோக்கி யோதுவான். (உ௪)

உதயத் தும்முரு வத்தை யுன்னுமென்
இதயத் தின்புற வின்று காட்டினீர்
அதைமற் றின்னமும் யான றிந்திடச்
சிதைவற் றீரருள் செய்க வென்னவே. (உ௫)

பாதங் கைக்கொடு பற்ற மற்றிவர்
ஏதம் வந்ததென் றேதி கைத்துறும்
போதங் கன்னவர் நீழ லுட்புக
வேதங் கெண்ணெயி லெய்த நோக்கினன். (உ௬)

காணுன் முன்னெனக் காவ லன்மல
ராணு தாவெளி யார்க ணுதரா
மாணு வென்னுழை வந்து கீழ்த்தொழில்
கோணு தேபுரி கோவ லாகனு. (உ௭)

என்றென் றுன்னியி ரங்கி நாபிகர்
துன்றுஞ் சேவடி பற்றி யேதொழு
தின்றும் மாவினி தெய்தி னேன்மலர்ப்
பொன்றன் றுதனை யென்று போற்றியே. (உ௮)

ஊரிநா மந்தனை யன்பு மிக்குறப்
பெரிதோ தத்துதி பேசி நாபிகர்
பரிவாற் றம்மடப் பத்தி னுட்பொருள்
கரியான் வைத்தது கண்டு கைக்கொளா. (உ௯)

மறையோர் கொள்ளவ ழுங்கி யேதரும்
இறையோன் முன்னுற வேத்த மன்னவன்
கறையார் மூக்குடைப் புட்க டாவுவோன்
நறைநே ருந்திரு நாமம் வாழ்த்தினன். (௬௰)

அந்நா டொட்டவ னதி நாமமே
எந்நா ளுஞ்சொல லாக விண்ணவர்
மன்னு வான்விடை கொண்டு வாழ்மனை
துன்னு வாழ்ந்தனர் சோர்வி லாதரோ. (௬௰௧)

ஆகச்சரித்திரம் ௨௫ க்கு செய்யுள் ௬௰௧

சேனாபிகர் திருவடிகளே சரணம்.

முற்றிற்று.

# சாத்விகராஜன்சரித்திரம்

வேறு.

ஜகநா தப்பொன் னகர்தனை யாண்டு தனிவாழ்கோ
மகன்மால் பத்தி தனின்மிகு நேயம் வளர்கின்றான்
புகழா நின்ற சாத்துவி கப்பேர் புனைவானுன்.
முகனார் தாதை பூசனை நாளு முயல்கிற்பான். (க)

திரிகா லத்துஞ் செய்துது ழாய்நீர் செங்கைக்கொள்
பரிவா னேரு மதிதிக ளுக்கும் பயில் பூசை
பெரிதே செய்து பின்புண லான பிரியத்தான்
விரிவா யன்ன சத்திர மாதி மிகவைத்தான். (உ)

சகலபி ராணி களினுமி குந்த தயையுள்ளான்
இகலினர் சீய மெனமிகு சீரி னியல்வானோர்.
பகல்பொழு தேகக் கவறுரு ளாடல் பயில்போதிற்
புகழரி கோயிற் றிகழ்பிர சாதங் கொடுபோந்தார். (ங)

அர்ச்சக ரானோர் கவறுருள் செய்கை யதின்மூழ்கி
நச்சுறு மன்னற் கப்பிர சாதந் தனைநல்கப்
பச்சையு கக்கப் பட்டதி தென்னும் பரிவின்றிப்
பிச்சரின் வாமக் கைதனை நீட்டப் பிசகென்றே (ச)

அன்னவ ரீயா தேகினர் பின்பவ் வரசன்றான்
முன்னரி னுடன் முற்றிட நின்றார் முகநோக்கி
என்னிடை மேவு மின்பிர சாத மெங்கென்றான்
மன்னினர் வாமக் கைதனி லீயா மற்போனார் (ரு)

என்றுமு னின்றார் கூறிட மன்ன னிதுவென்னே
அன்றுசெய் பாவ மின்றொரு சூதா யபசாரந்
துன்றிட வேசெய் ததுநனி நன்றே தொலைவுண்டோ
இன்றியல் கின்ற தென்றனன் மாளா விடருற்றான். (சு)

கள்ளவி ரும்பிப் பாலைய கற்றுங் கலர்செய்கைக்
குள்ளுற லானே னென்றரி கோயிற் குருமேகான்
கொள்ள கிலாவிக் கைபிர சாதங் கொளலாமோ
எள்ளல்செ யாதென் றெண்ணிய றுத்தற் கிசைவுற்றான். (எ)

மந்திரி தன்னை வருகென வந்தான் வதனம்பார்த்
திந்தவென் மாடச் சாளர வாய்வந் திரவோர்பேய்
முந்தொரு கைநீட் டுகிறதி னுலே முதிரச்சந்
தந்துறு கின்ற தக்கர மதைநீ தடியென்றான். (அ)

அன்னது செய்வே னென்றிர வூடவ் வகன்மாடந்
தன்னிடை வந்து சாளர வாயிற் சார்ந்துற்றான்
மன்னவ னங்ஙன் பின்புற முருமா றய்வந்து
துன்னுறு கையை நீட்டினன் வாளிற் றுணிசெய்தான். (கூ)

துணிசெய மன்னன் வீழ்ந்துது டித்துச் சோர்கிற்கப்
பணிபுரி கின்ற மந்திரி வெளியிற் பதறுற்றே
அணுகினன் வந்து நோக்கலு மன்ன னவனுகத்
தணிவறு துன்பங் கொண்டெதிர் நின்றே தளர் வுற்றான். (௰)

சோர்வுறு மன்னன் றுயர்கொள மைச்சன் முகநோக்கி
நேர்வுறு மிக்கை சார்பிழை போக நீசெய்தாய்
ஆர்வுறு மென்னு லேயல வோநன் றாயிற்றுச்
சார்வுறு துன்ப நீயொழி கென்றான் றளர்வின்றே. (௰௧)

விடியள வேகை சிவிகையின் மேவ மிசையேற்றி
கொடியவ னேசெய் பிழையது தீர நிறைதண்டம்
தடிவதை யன்றிப் புரிவது முண்டேற் றடையின்றிக்
கடிகென மால்வாழ் சினகர மேவக் கடிதுய்த்தான். (௰௨)

சொல்லிய வண்ணந் தூதர்கள் சொல்லத் தொழுகோயிற்
புல்லின ரங்கே பொலியடி யார்கட் பொருவேந்தன்
மெல்லிய கையைக் காட்டினர் சொன்ன விதமெல்லாஞ்
செல்வகை சொல்லத் தேறின ரீதோ செயலென்றே. (௰௩)

தழைவிப வத்தா னுடனவை விட்டுச் சகநாதன்
உழைமனம் வைத்தான் மிகவும்வி ரக்தியுளனென்று
குழையும னத்தார் ஜயஜய வென்று கொணர்கைமேல்
விழைவுறு கந்த பொடிகளி றைத்தார் விரைநாற (௰௪)

பொடிபட லுங்கை தவனம தாகிப் பொலிவெய்த
அடியவர் கண்டு மிகவும்வி யந்தங் கதுதன்னை
நெடியவ னடியிற் படிவது செய்து நிகழ்நாண்முன்
படிபிர சாத முடனர சன்றன் பாலுய்த்தார் (௰௫)

வருபிர சாத மொடுதவ னத்தை மகிழ்விற்கண்
டரசனி ரண்டு கரமுமி ணங்க வவையேற்றான்
கரமும்வ ளர்ந்து குறைவற லாகக் கண்டோர்கள்
பரவினர் நாமம் ஜயஜய வென்று பணிவோடே (௰௬)

ஆகச்சரித்திரம் ௨௬ க்கு செய்யுள் ௲௫௮௫

சாத்வீகராஜன் திருவடிகளே சரணம்

முற்றிற்று.

வேறு.

நாடுஜக நாதமென நண்ணுநக ரத்தின்
ஊடுகரு மாபாயி யென்றொருவ ருள்ளார்
நீடுதரு மம்பலவு நீதியொடு செய்யக்
கூடுமன முள்ளவர்கு ணந்திரிபி லாதார் (க)

கருவயினு றீஇமருவு காலமவர் கண்டன்
ஒருவியுயிர் போனபினு யிர்த்தனரொர் சேயை
அருமையின்வ ளர்த்துவளர் வானமக ளுக்குத்
திருமணமி யற்றினர்தி கழ்ந்தணிசி றக்க (உ)

அந்தமக ளுயிழையை யன்பொடும ணந்து
தந்தனனொர் சேயதுத வழ்ந்துவளர் நாளில்
மைந்தனு மிறக்கமிக மாழ்கினர் தளர்ந்து
நொந்தனர்க வன்றரித னுமநுவல் கிற்பார். (ங)

நாரணத யாநிதியெ னந்தன்மக னேனுஞ்
சீருறிலெ னக்குதவு மென்றனர்சி றக்கப்
பேரன்மக ளுகநினை பெற்றியின்வ ளர்த்தார்
ஆரமகன் மைந்தனும ணங்குறவி றந்தான். (ச)

அம்மகவி றக்கவவ லக்கடலின் மூழ்கித்
தம்மனநி லைப்பதில ராய்த்தளர்த லானார்
மைம்மலிநி றத்தமல ராள்கணவ நீயென்
இம்மலின வெந்துயரி லென்னைவிழ விட்டாய். (ரு)

என்றுமிக நொந்தனரி ரங்கியுறு நாளில்
துன்றுஜக நாதவிறை தன்னடிதொ ழற்கு
நன்றரிந லோர்களவ ணண்ணியவர் நல்வீ
டொன்றினரு ணர்ந்தனரி டர்க்குளுறு வாளை (சா)

என்னையிவ ணீர்துயரி லெய்துகிற தென்ன
மன்னுதுயர் மூழ்குமவர் மற்றவளை நோக்கி
முன்னைநிகழ் வுற்றசெயல் யாவையுமொ ழிந்தார்
அன்னவர்தெ ரிந்துதுய ராறும்வகை சொல்வார். (எ)

அணுவளவு நன்மையிலை யானசமு சாரப்
புணர்வுநிலை யற்றதத னுட்புகுத லாகிப்
பிணியுறுவ தென்னமது கண்ணனடி பேணுந்
துணிவினிடர் தீர்திரொன வேயவர்து ணிந்தார். (அ)

ஸ்ரீதரன ருட்குரிய சீரினவ ரோநீர்
பேதையடி யேனொருநி லைக்கணுறு பெற்றி.
யாததையு ணைத்தருள்க வென்றனரி ரந்தார்
மாதரவ ருக்கவரு மன்னுநிலை செய்வார். (கூ)

நாதனரி நாமமதை நன்கினுப தேசித்
தேதமகல் கண்ணனது விக்கிரக மீந்து
மாதகவ தாகமக வன்பிதனில் வைத்து
நீதமொடு பூசனைநி ரப்பநிய மித்தார். (௰)

நன்றெனவு கந்துகொடு நல்குமவர் தம்மை
மன்றவுப சாரமொடு வந்தனைபு ரிந்து
ஒன்றுமவர் போனபின ரோவுதலி லாமல்
அன்றுமுத லந்நியதி செய்கையில மர்ந்தார். (௰௧)

பெற்றவொரு கண்ணனொடு பேசிவிளை யாடி
முற்றுதயி லந்தடவி மூழ்குதல்செய் வித்துச்
சுற்றுடையி னீரமற வேநனிது வட்டி
நற்றுடைகி டத்தியுரை யௌடதமு நல்கி. (௰௨)

பாலமுத ருத்திவளர் தொட்டிலுறல் பண்ணி
மாலரிகு ணங்களைவ குத்தினிதி றாட்டிக்
கோலவிழி மூடுதுயில் கொண்டபினெ டுத்துப்
பாலரின்வ ளர்த்தனர்செய் பாவனைத வாதே. (௰௩)

ஆடையணி சேர்க்கவளர் வாகிவரு கண்ணன்
ஈடனமு ணற்கிசைவ தெய்துபரு வந்தான்
கூடினதெ றுவயிறு கொள்குழைவு கண்டு
நாடியுறு கண்ணனையு ணற்குநவில் கின்றார். (௰௪)

உண்கவினி துண்கவென யாவுமினி துண்ட
பண்பினனை நன்குபச ரிக்குமது பார்த்துக்
கண்கள்களி கூரவுள மானதுக ளிந்து
நண்பினமு துண்டுமகிழ் செய்தனன யந்தே. (௰௫)

அன்னையனை யாருபச ரிக்குமத னாலே
இன்னவித நாடொறுமி யைந்தமுது செய்தான்
மன்னுகரு ணாநிதிவ ளர்ந்துவரு நாளில்
துன்னினன வில்லிலொரு சுத்தமறை யோனே. (௰௬)

முந்துபெறு தேவகிவ ளர்க்கமுய லாமல்
நந்தன்மனை விட்டகுறை நன்குநிறை வேற
இந்தவகை யெய்தியதி யின்பினமர் வாரை
வந்தமறை யோனறிக லானவண்வ திந்தான். (௰௭)

அத்தினம்வி டிந்தவுட னன்னையென லானார்
நித்தனையெ ழச்செய்துநெ டும்பசித ணிப்பான்
உய்த்தவமு தைக்கடிதி னுண்கவினி துண்க
முத்தமனை யாயெனமொ ழிந்துறுதல் கேட்டான். (௰௮)

யாரையவ னுண்கெனவ றைந்துறுதி சொன்னக்
காரைநிகர் கண்ணனையெ னக்கழறல் கேட்டு
நீரயிலு விப்பதுந னீர்முழுக லாதோ
சீரையிலி ராயஃந்து செய்வதுத காதே. (௰௯)

என்றவனு ரைத்தபடி யேபுரிவ னென்று
துன்றுமறு நாள்விடியு முன்றுயிலு ணர்ந்து
நன்றுபுன றோய்ந்துபுது நன்புனல்கொ ணர்ந்தே
அன்றகமெ லாமெழுகி னாடுத லானார். (உ௰)

தினமுநுகர் காலமது தீர்ந்துணுத லாக
மனதுசகி யாதுஜக நாதமழை வண்ணன்
சினகரமி ருந்துபணி செய்துறும வன்றன்
கனவினிலி ராவிடைக லந்துரைசெய் கின்றான் (உக)

நானமுது செய்துவரு காலநனி நண்ணத்
தானடுதல் செய்வகைச மைத்தனனொ ருத்தன்
ஆனதனை முன்படிய மைத்திகரு மாபாய்
பான்முடுகி நீயினிதி னென்றுரைப கர்ந்தான். (உஉ)

அன்னதனை யர்ச்சகனு ணர்ந்துவிடி யாமுன்
மன்னினன சோலையின்வ ளர்த்துவரு வார்பால்
பன்னுருக மாதிதனி றைந்தபர மான்மாத்
துன்னுகரு ணாநிதிய ருத்தும்வகை சொல்வான் (உ௩)

சீலநனி கொண்டடிசில் செய்திரத னாலே
காலமிக நீடியது கண்ணனமு துண்ணச்
சாலமிகு கின்றபசி கொண்டுதளர் கின்றான்
ஞாலமுத னாதனதை யென்வயின வின்றான். (உ௪)

வெளியின்மிகு சீலமுற வேண்டல்பய னின்றாற்
களிகொடுள மானதுக னிந்துபரி சுத்தம்
கொளினதுமி கப்பெரிது கொண்டணிகர் வண்ணன்
அளிமிகமு னீர்செய்வத வாவியுள னென்றான். (உ௫)

என்பதைவி னாவினரி சைத்தபடி செய்ய
அன்பினமொ லாமறிய வையனினி துண்டான்
நன்புதுமை யென்றுதுதி நன்குசெய லானார்
இன்பினது கண்டவரொ லோர்களும்வி யந்தே. (உ௬)

தூயமக மோமமொடு சோர்வருநல் யோகம்
ஆயபல செய்துமடை யாதபர னுக்குத்
தாயெனவ ளர்த்துமகிழ் தங்கியவொர் கர்மா
பாயிதவ மேபெரிய தென்றிசைப கர்ந்தார். (உ௭)

கண்ணனைவ ளர்த்தவவர் கான்மிசைவி ழுந்தார்
எண்ணரிய தோத்திரமி யம்பினர வாறே
பண்ணியமை கிச்சடிப ரற்கினிய தாகி
நண்ணியது நாளுநலம் விஞ்சுஜக நாதம். (உ௮)

ஆக சரித்திரம் உ௰எ க்கு செய்யுள் ௩௱௪௬

கருமாபாயி திருவடிகளே சரணம்.

முற்றிற்று.

# ஜயவந்தபக்தர் சரித்திரம்

ராமவுபா சகராகிச் சயவந்த ரெனுநாம நண்ணி நாளும்
காமனையீன் றவனடியார் களைப்பூசை புரிவாராய்க் கருதுதாரி
யாம்வணிகர் புத்திரரோ டைவருள ராகலக்ஷா திபதி யானோர்
தோமறுசம் பத்துடனே ஹரிபஜனை செய்துகொண்டு துலங்க வாழ்வார் (௧)

வருசாது ஜனங்களுக்கு மதிதிகட்குஞ் சுயம்பாகம் வழாம னல்கிப்
பெருகாத ரத்தினைப் புத்திரர்கள் பக்குவராய்ப் பேணராகி
மருவாத துஷ்டதுரா சாரதுன்மார்க் கத்தின்மிக மலிவா ரோதும்
கருதாது பிரமகுலத் துற்பவித்த ராவணனைக் கடுப்ப தானார். (௨)

தந்தைதரு மச்செயலுக் கொவ்வாராய் விருத்தனுக்குத் தகாத பித்தம்
முந்தியதால் வாணிபத்துக் குளபொருள்க ளெலாஞ்செலவின் முற்று விக்கச்
சிந்தைகொண்டா னிதற்கென்ன செய்துமென வுளபொருளிற் சிலம றைத்து
மைந்தரொன்போ ரோதந்தை தனைவருத்த வேந்தனிடம் வந்து சொல்வார். (௩)

எங்கள்பிதா வெமக்குள்ள பொருள்களெல்லாம் வீண்செலவே யியற்றுகின்றான்
அங்கனுல கத்தரசே பொருள்செலவுண் டே லுமக்கு மமையத் துக்காம்
தங்கும்வகை விருத்தனைக்கூய்த் தண்டிக்கத் தக்கதெனச் சாற்றக் கேட்டுப்
பொங்குபுகழ்ச் சயவந்தர் தமைக்கூவி விசாரிக்கப் புகல்வ தானார். (௪)

புத்திரர்க்கு வைக்காமல் வீண்செலவேன் புரிகின்றா யெனப்பு கன்றீர்
அத்திரமே பொருள்புதல்வ ரனைத்துநிலை யாவதுதா னறமே யன்றோ [ன்று
முத்தணிவெண் குடைவேந்தே யெனலுமிவன் பயித்தியத்தின் முதிர்ந்தா னெ
மெத்தவருத்து கிறதிலுங் கொலைசெய்த லலனென்று வெகுண்டு வேந்தன். (௫)

உங்கள்பிதாத் தனைக்கொல்வ துங்களுக்குச் சம்மதமோ வுரைத்தி ரென்ன
எங்களுக்குப் பிதாவல்ல னிவன்பகைஞ் ஞனதனாற் பொதியி னுள்ளே
தங்கவமைத் துக்கட்டி யாழியனீர் தனிவிடல்வேண் டியதே யென்ன
வெங்கடுங்கோ லுடைவேந்தன் ஜயவந்தர் தமைக்கட்டி வீழ்த்தற் கெண்ணி. (௬)

கற்களொடு கனமாகப் பொதிந்தாழ நீரினிடைக் கவிழ்க்கச் செய்தான்
தற்கடிமை யானவர்நீ ரிடைமூழ்கு முன்வந்து சௌரி தானோர்
வற்கடின முதுகாமை வடிவாகித் தம்முதுகின் மலையிற் றாங்கி
நிற்கவய மேன்மிதக்கும் ஜயவந்த ரியல்கண்டா னிருபன் மன்னோ. (௭)

அகிலவியாபகனான வநாதரக்ஷ கன்கருணை யமைந்தி ருக்க
இகலியிவர் தமைக்கொல்ல வெண்ணியது தகாதசெய்கை யெனப்பயந்து
மிகவிரைந்தங் கவர்தம்மைக் கரையேற்றிக் கட்டவிழ்த்து விடுத்தன் னார்கருத்
தகவுமிகவுபசரித்துத் தாள்பணியத் தனையர்களுஞ் சரணந் தாழ்ந்தார். (௮)

அரசனொடு மைந்தர்களும் யாஞ்செய்பிழை பொறுத்தருள்க வடிக ளென்று
பரசுதலும் ஜயவந்தர் மைந்தருக்கு மரசனுக்கும் பரிந்து வாழ்த்த
விரசரசன் ஜயவந்தர்க் கடியவனா யன்றுமுதல் வேண்டி வாழ்ந்தான்
சரசமுடன் றனையர்களும் பிதாச்சேவை செய்துமுறை தவாது வாழ்ந்தார். (௯)

ஆகச்சரித்திரம் உ௮க்கு செய்யுள் ௲௯௨௩

ஜயவந்தர் திருவடிகளே சரணம்.

முற்றிற்று.

# சூரதாசர் சரித்திரம்

அத்தின புரியை யாளு மகபார வரசன் றன்னை
எத்தினங் களும்வி டாம வியன்றவன் றயையி னாலே
மைத்தபூம் பொழில்கள் சூழ்ந்த மதுரைமா நகரத்திற்கு
மெய்த்தவோர் தலைவ ராக விளங்கினர் சூரதா சென்போர். (௧)

மதுரைகோ குலம்பி ருந்தா வனமெலாம் புனித மான
புதுமைசேர் தலங்க ளாகப் பொருந்தலா லவண்வந் துற்ற
சதுரசச் சனங்க ளுக்குத் தகவுப சரித்து நாளும்
முதுரச போஜ னங்கண் முதலிய வழங்கி வந்தார். (௨)

நலமிகு வழியி லுள்ள பொருளெலா நல்கி நல்கிச்
செலவுமிக் காக மற்றுஞ் செலவுசெய் வதற்குத் தம்பாற்
பொலனிலை யாக நல்லோர் பொருந்திடிற் றருவ தற்கு
வலமிலை யேயென் றுன்னி மனத்திடை யழுங்கி நைந்தார். (௩)

நம்மையே நாடிச் சாரு நல்லவர் தமக்கீ யாமல்
இம்மையில் வாழ்க்கை யுற்று லென்பய னினியெங் கோவின்
செம்மைசேர் பொருள்க ளீவோஞ் செலவுகண் டரசன் சீறி
வெம்மைசெய் திடினு நல்லோர் விஷயத்தின் மேவ னன்றே. (௪)

என்றுதம் வசத்தி லுற்ற விறைபொரு ளெல்லாம் தம்பாற்
றுன்றுசா துக்க ளுக்குத் துயரற வுபச ரித்தும்
நன்றறச் சாலை கட்கு நல்கியுங் கட்டு வித்தும்
மன்றல்செய் துளவி னானை மதனமோ கனனென் றுக (௫)

தாமுறு மதுரை தன்னிற் றயங்குறப் பிரதிட் டித்தார்
ஆமத னாலே யெண்ப திலக்கமு மயுத முஞ்சேர்
ஏமநல் விராக னான செலவினை யெதிர்ந்தோர் தேர்ந்து
தோமிலத் தினபு ரிக்குத் தோன்றல்பால் வந்து சொல்வார் (௬)

வேந்தநின் பொருள்க ளெல்லாம் வீண்செல வாகச் செய்தான்
போந்துள சூரதா சென்போ னென்றவர் புகலக் கேட்டுச்
சாந்தனு மரசன் கோபந் தான்மிக லாகித் தன்பால்
வாய்ந்தசே வகரை நோக்கி மதுரைநீர் விரைந்து சென்று (௭)

அங்குள பொக்கி ஷத்தி லமைந்துள பொருள்க ளோடு
தங்குறு சூரதா சென்போன் றன்னையுங் கொணர்க வென்று
பொங்குகைத் திட்டு நல்கப் போந்தவர் மதுரை சென்று
சங்குசக் கரத்தா னன்பர் தம்மவை வந்து சார்ந்தார் (௮)

நிருபன்கைத் திட்டு நல்கி நிகழ்ந்தவை யாவுஞ்சொல்ல
மருவிய சூரதா சென்போர் வாசித்துத் தெரிந்து கொண்டு
வெருவுறு தரச னென்மேல் வீண்சினங் கொண்டான் யானோ
தருபொருட் கமைய மாணிக் கங்களாய்ச் சமைவு செய்தேன். (௯)

அம்மணி களைக்கோன் கன்டா லன்பென்மேன் மிகவுஞ் செய்வான்
இம்மணி மண்டபத்தி லிருத்திரொன் றுரைத்தல் செய்து
தம்மணி மனைக்குட் சென்று தக்கபே ழையினி ரம்பச்
செம்மணி யெனநி னைக்கப் பரற்களைச் செறிவு செய்து. (௰)

மன்னநின் பொருள்க ளெல்லா மருவுநல் லோர்க ளுக்கும்
துன்னறச் சாலைகட்குந் தொகுத்தொரு கோயி லுக்கும்
நின்னது புகழ்வி ளங்க நிரப்பிநின் றேனே யன்றி
மின்னனு வேனு மிங்ஙன் வீண்செல வியற்று கில்லேன். (௰௧)

எனவுரைத் துன்பா லேம மெய்தில வெனவென் மேனீ
சினமிகு வாயென் றியாளித் தினத்திரா விடையெங் கேனும்.
வனமதின் மறைவே னென்றும் வரைந்துபே ழைக்குள் வைத்துக்
கனமிகு பேழை தன்னைக் கடுகிவந் தவர்பா லீந்தார். (௰௨)

இன்னதை யானே கொண்டங் கெய்துற விருக்கும் போதில்
நன்னர்நீ ரடைந்த தேசன் றாகிய தெனந வின்றே
அன்னவர் தமக்குப் பொன்பூ ணுடைகள் சிறப்ப நல்கித்
துன்னவ ருடன்று யின்று நடுநிசி வனந்தொ டர்ந்தார். (௰௩)

வனம்புகுந் தரித ரைமம் வழுத்தின ரிருக்க விங்கே
தினஞ்செயும் பரிதி தோன்றச் சேவக ரொழுந்து பார்த்து
மனந்தெளி சுரதா சென்போர் மனையிலு மிருக்கக் காணார்
சினந்ததம் மரசற் கேது செப்புது மெனப்ப யந்தார். (௰௪)

அந்தவூ ரடுத்த வூர்மற் றாகிய விடங்க ளெல்லாம்
முந்தினர் தேடிக் காணார் முனிவனென் றரசற் கஞ்சி
எந்தவூ ருற்ற னோவென் றெண்ணியப் பேழை தன்னைத்
தந்தலை சுமந்து வந்து சார்ந்தன ரரசன் றன்பால். (௰௫)

உற்றதை யுரைத்துப்பெட்டி தனையொரு வேந்தன் காண
மற்றவ ணிடத்து வைத்தார் மன்னவன் பீரப லென்று
சொற்றரு மமைச்சற் கோதிச் சுரதாசர் பெட்டி தன்னை
நற்றியே திறந்து கற்க ணனிநிரம் புறுதல் கண்டான். (௰௬)

பின்னரோர் கடித மந்தப் பேழையி லிருக்கக் கண்டு
மன்னிய வொருவ னுலே வாசிக்கத் தெரிந்து மன்னன்
முன்னர்கோ ளுரைத்தோன் றன்னை முனிவுட னோக்கி நீமுன்
சொன்னதோர் சுரதா சென்போன் வீண்செல வேது சூழ்ந்தான் (௰௭)

நல்வழி களிலென் னேம நனிசெல வழித்த தன்றி
அல்வழி செய்தா னென்றிங் கறைந்தனை பிழைய தாக
ஒல்வகை யெழுதி வைத்துப் பயந்தன னொளித்து ளமல்
செல்வகை செய்தா யன்றோ நீயென மிகச் சினந்து' (௰௮)

வயிணவ துரோகி யென்று மற்றவன் றனைக்கண் டித்து
வியனுறுங் கடிதந் தன்னை வாங்கியே விரைந்து பார்த்துச்
செயிரறு சுரதா சென்போன் றீட்டின தேயென் றோர்ந்து
நயனநீர் பெருக லாகி நல்லமந் திரியைநோக்கி. (௰௯)

திரிபுவ னங்க ளெல்லாந் தேடினுஞ் சுரதா சைப்போல்
ஒருவனைக் காண லாமோ வுயர்ந்த வென் மதத்தி னாலே
வெருவுறக் கோபித் தேனே யெனமிக வருந்தி வேந்தன்
இருவிழி குளிரப் பார்க்க வெங்கிருந் தாலுந் தேடி. (௨௰)

சொணர்கென வுரைக்கக் கேட்டுக் குறைவில்சீ ரமைச்ச னேறோன்
புணரிசூ ழுலக மெங்கும் போய்விரைத் தேடிக் காணும்
வணமிகு தூதர் தம்மை வல்விரைந் தனுப்ப மற்றோர்
துணர்விரி நிழற்பைங் காவிற் றுருவினர் வந்து கண்டார். (௨௧)

ஹரிபஜ னத்தோ டுற்ற வவர்தமைக் கண்டு நீர்முன்
புரிவுறுஞ் செயலுக் கன்பு புரிந்துமைக் காண வேண்டிப்
பரிவுட னமைவி டுத்தான் பார்த்திப னென்று கூறத்
தெரிதரு சுரதா சென்போர் தேறினர் நினைய லுற்றார். (௨௨)

எங்கணு நிறைவா யுற்ற வெம்பிரான் செயலீ தென்று
சங்கையின் மனத்த ராகிச் சார்ந்தனர் தூதரோடு
துங்கவத் தினபு ரிக்குத் தோன்றலை வந்து கண்டு
செங்கையிற் சலாஞ்செய் வாரைத் தேடிய வேந்தன் கண்டான். (௨௩)

ஆசனத் திழிந்து முன்வந் தவர்தமை யழுந்தப் புல்லி
நேசமிக் குவகை தூங்க நுமக்குநே ரொருவ ருண்டோ
மாசறு வழியிற் பொன்னை வழங்கிமற் றெனக்கு நல்ல
தேசுறப் புரிந்தீ ரிந்தச் செய்கைக்கோர் செய்கை காணேன் (௨௪)

உமதுசீ ரறிகி லாவோ ருன்மத்தன் சொல்லைக் கேட்டு
நுமதகம் வருந்தச் செய்தே னேக்கியென் பிழையைப் போக்கித்
தமதுளப் படியே செய்க மதுரையிற் சார்ந்து செம்பொன்
நமதெனத் தருமோ பூமின் னாசனுக் கினிய தென்றான். (௨௫)

என்பது சுரதா சென்போர் கேட்டுளத் திசைவி லாராய்
மன்பிர தாபங்கொண்ட மன்னனே யுலக வாழ்க்கை
துன்பென விடுத்த வென்னை யின்னமுந் துயரத் தாழ
வன்பர சியலுக் கேற்க நடக்கவும் வருக்க லாமோ (௨௬)

எனுஞ்சுர தாசர் தம்மை யரசனு மினிதி னோக்கி
மனஞ்சலித் துலக வாழ்க்கை விடுத்துளீ ரெனுநும் மாண்பின்
கனந்தனை யறிந்தே னேலு நுமைவிடக் கருத கில்லேன்
முனஞ்செயும் படிநீர் செய்ய முயன்றுளேன் மொழியக் கேண்மின் (௨௭)

நீதியி னீரங் கீட்டு நிதியும துளத்துக் கேற்ற
சாதுசச் சனங்க ளுக்குந் தருமங்க டமக்கு மீயப்
போதுறு தாயி லென்பா லுள்ளன பொருளுங் கொண்டு
ஸ்ரீதரற் கடிமை யாக வென்னையுஞ் செய்தி ரென்றான் (௨௮)

ஆயது கேட்ட தாச ரரசன துளமுந் தம்பால்
நேயமு மினிய சொல்லு நிரப்பலாற் றமதுள் ளத்தை
ஏயது செய்தாற் சாது சேவையு மிணையி லாத
தூயதும் வருதற் கில்லை தடையெனத் துணிந்து சொல்வார். (௨௯)

ஹரிதன தடியர் சேவை யனுதினந் தடையி லாது
புரிவதற் கான செய்கை பொருந்தவெற் கருளு கென்று
பரிவுகொண் டொப்ப வேந்த னவிந்தனு யிருந்தும் பண்பாற்
றிரிகர ணமுநன் ருகி யங்ஙனஞ் செய்க வென்ருன். (௫௰)

கண்ணனுக் கன்ப ஞகி யுளமிகக் களித்து வேந்தன்
பண்ணுசன் மானம் பெற்றுப் பரமனுக் கன்ப ராகி
நண்ணிய சுரதா சென்போர் மதுரைமா நகரஞ் சென்று
தண்ணளி மதன மோக னன்றனைத் தரிசித் திற்ருர். (௫௧)

அன்றுதொட் டரிதா சர்க்கு மடுத்தவர் தமக்கு மற்றும்
துன்றுனர் தமக்கு நல்ல போஜனந் துகில்பூண் யாவும்
ஒன்றநிரப் பயராய் நல்கி யுத்தமன் குணங்கள் பாடி
என்றுமா லுருவுட் கொண்டா ரிடைவிடா திருக்கு நாளில் (௫௨)

மாலடி யார்க்குத் தொண்டு வகுப்பதி லிவர்போ லில்லை
ஞாலமீ தென்றெங் கெங்கு நவில்வது தெரிய வோர்நாள்
நீலமா முகில்கோ யிற்குச் சிவிகைமே னேரும் போது
சீலமா ரொருவர் வந்தார் செருப்புக்கா லோடு மாதோ. (௫௩)

வந்தவர் சுரதா சென்போர் மதிமுக நோக்கி யைய
இந்தவென் செருப்பைக் காத்திங் கிருக்கயான் கண்ணன் சேவை
முந்தவே பெற்று மீளு மளவுமென் றுதவ முந்தித்
தந்தருள் கென்று கொண்டார் சிவிகைவிட் டிறங்கித் தாழ்ந்தே. (௫௪)

கொண்டதோர் செருப்பை யாடை கொண்டுமூ டித்தம் மார்பில்
அண்டுற வணைத்துக் கொண்டங் கிருந்தன ரதனைத் தந்தோர்
தண்டுழாய் மார்பன் கோயிற் சார்ந்தனர் வாரார் பானு
மண்டல மறையுங் காறு மற்றிவர் தமைச்சோ திக்க. (௫௫)

வருமள விவருந் தந்த வயினுறத் தந்தோர் மீண்டு
தருமிடம் வந்து சார்ந்து கண்டன ரன்பர் தம்மைத்
திருமகள் கொழுந னன்பர் செருப்பினை யவர்முன் வைக்க
ஒருவரு நும்மைச் சாது சேவையி லொவ்வா ரென்ருர் (௫௬)

சோதனை செய்தோ ரந்தச் சுரதாசர் தமைம தித்து
மேதகு புகழ்கொண் டாட விண்டுவி னடியா ரெல்லாம்
காதலி னுதைக் கண்ணன் கனிந்தங்குக் காட்சி காட்டக்
கோதறப் பெற்று வாழ்ந்தார் குவலயம் விளங்க மாதோ (௫௭)

சூகச்சரித்திரம் உகக்கு செய்யுள் ௩௫௰௧

சுரதாசர் திருவடிகளே சரணம.

முற்றிற்று.

# ரசிகமுராரிபக்தர்சரித்திரம்

மெய்த்த மாமது ரரபுரிக் கருகதாய் விளங்கும்
சுத்த மாநகர் சாயமென் பதிலொரு தூயர்
நித்த மாலரி பத்தியி னிரம்பிய முராரி
பத்த ரானவர் பரமவை ராக்கியப் பண்பர் (௧)

நாளுங் காளிந்தி நதியிடை நானஞ்செய் தரியை
நீளுஞ் சோடசோ பசாரங்க ணிறைவுறப் பூசை
மூளு மன்பொடு முடித்தபின் வைணவமுதலோர்
தாளுந் தீர்த்தங்கொண் டாட்டியந் நீர்கொளுந் தக்கோர் (௨)

பின்ன ரின்னமு தட்டரி தாசரைப் பேணி
நன்ன ருண்பித்தச் சாதுசஜ் ஜனங்களை நாளும்
பன்னு மால்வடி வாகவே பாவனை பண்ணி
முன்னு மெய்யன்பு குறைவில ராகவே முயல்வார். (௩)

அன்ன வர்க்கு நல் லன்பினர் பற்பல ரடியார்
துன்னி யன்னவர் சம்பிரதாயமே தொடங்கி
மன்னி மாலரி பஜனையி னொடொறும் வதிவார்
இன்ன நாளிலங் கெய்தினர் பலரரிக் கின்பர். (௪)

வந்த மாலடி யார்களுக் காசனம் வழங்கி
அந்த வாசனத் திருந்திடச் செய்துபின் படைவே
முந்தோர் சீடனை விடுத்துநம் முகுந்தனுக் கடியார்
விந்தை சேரடி விளக்கிநீர் தருகென விதித்தார். (௫)

தேசி கோத்தமர் செப்பிய படியந்தச் சீடன்
ஆசி லாதவ ரடிகளைப் புதியநீ ரதனால்
மாசி லாதுற விளக்கினன் வரவொரு மறையோன்
பேசி டாவரு வருப்புமிக் கான்மிகு பிணியால். (௬)

சில மேதுமில் லாதவன் றனைக்கண்டு சீடன்
சால வேயரு வருத்தவன் றொடொடான் விடுத்து
மேல வாவிலர் பாதங்கண் முறைப்படி விளக்கிக்
கோல நீர்தன துத்தமக் குருவின்பாற் கொணர்ந்தான். (௭)

கொண்ட வன்றரு பாதநீ ரதனையுட் கொண்டு
கண்ட மற்றதின் சுவைருசி யிலதென்று கருதித்
தொண்ட ரானவர் தமையெலா மழைத்திந்தத் தூநீர்
உண்ட போதிலென் னுருசியின் றுயதென் றுரைத்தார். (௮)

பாத நீர்கொடு வந்தவன் றன்முகம் பார்த்து
நீத ரும்புன லிற்சுவை யிலதுநி நிசத்தைக்
கோத றச்சொல்லு வென்னலு மவனுளங் கூசி
ஏத மற்றசற் குருவெதிர் நின்றுதா னிசைப்பான். (௯)

ஐய வந்தவர் தமிலொரு வேதிய னசுத்த
மெய்யன் கால்களு மிகவெந்து வெடித்தபுண் ணாகி
வெய்ய தாலதைத் தொடுதற்கு வேண்டலேன் விடுத்தேன்
மைய லென்பிழை யிதன்றிவே றின்றென வருத்தான். (௰)

கேட்ட மாதவ ரப்படி யோவெனக் கிளர்ந்து
நாட்டு சீலமில் லாரிடை விரைந்தனர் நண்ணிக்
கோட்ட மின்மனத் தோடவர் பதங்களைக் கொண்டு
நீட்ட மாய்விழுந் தெழுந்துபற் பலதுதி நிகழ்த்தி. (௰௧)

தங்கை யாற்புனல் கொண்டவர் தாள்களை விளக்கிச்
சங்கை யின்றுப சாரமுங் குறைவறத் தந்து
கங்கை நீரிலுஞ் சிறந்ததாய்க் கழுவிய நீரை
அங்கை கொண்டுவாய்ப் பெய்துதீஞ் சுவையென லானார். (௰௨)

சுவைநன் றாயதென் றவர்களி கொள்வதைச் சூழ்ந்த
நவையி லாதசா துக்கள்கண் டதிசய நண்ணி
கவையி லாவிவர் மனநிலை யறிபவன் கணனே
இவைய மீதில்வே றருள ரொன்றன ரோத்தி. (௰௩)

பாத நீர்ச்சுவை யறிதரு மற்றிவர் பண்பால்
ஓத லாமினி ரசிகமு ராரியென் றொருபேர்
காத லோடென வவர்தலை மேற்கரங் கவித்து
நீத மாயரி நேர்வந்து நினைவுமுற் றுவிப்பான். (௰௪)

என்று வாழ்த்தினர் போனபின் ரசிகதா சேத்தத்
துன்று தேசிக ராகிய தயார்ணவர் துழாய்சேர்
மன்றல் மார்பினன் பூசையி னியதராய் மருவு
கின்ற போதுவந் தானொரு கோனடி கெழும. (௰௫)

வந்து மற்றவர் பூசையி னியதியை மகிழ்ந்து
முந்து பாதங்கள் வணங்கினன் முறைவழு வாமல்
தந்த னன்கிரா மங்களோர் நான்கவை தம்மால்
உந்த மாலது பூசைக்கு நேர்கென வுரைத்தான். (௰௬)

உரைத்து மன்னவன் போனபின் றயார்ணவ யோகி
விரைத்து ழாயவ னருளிது வெனக்களி மிகுந்து
நிரைத்து நாடொறு மடியவர் பூசையு மெடுநாள்
சுரைத்து மேவுநாள் வந்தன னொருதி காரி (௰௭)

சாய மென்னுமூர் தனில்வரு பொருள்களிற் றலைவற்
கேய நிந்துமிக் கதுதனக் கானவேற் றவன்றான்
ஆய தாற்றயார் ணவர்க்குள கிராமங்க ளவற்றின்
மேய வோண்பொரு டருகிலன் றகைந்தனன் வெஃகி (௰௮)

தகைவு செய்தபோ தந்தவூ ருள்ளவர் சார்ந்து
மிகைய தாத்தயார் ணவர்க்குள பொருளைநீ வெஃகல்
பகைசெய் யேலெனப் பலபடி சொல்லியும் பாரான்
நகைசெய் தின்னவர்க் கியான்றரு கிலனென நவின்றான் (௰௯)

போன பின்றயார் ணவருணர்ந் திந்தனைப் பொருந்தத்
தான்வ ரைந்தொரு திருமுகம் ரசிகராந் தாசர்
ஆனவர்க்குத வுகவெனத் தூதன்பா லனுப்ப
ஞான மிக்கவர் மடம்வந்து சார்ந்தந்த நல்லோன். (உ0)

உண்டு கொண்டுறை போதந்த ரசிகர்பா லுதவக்
கண்டி டக்கையின் வாங்கினர் தலைமிசைக் கவித்துக்
கொண்டு கண்களி லொற்றின ரொப்பணி கொளினும்
விண்டு வாவெனுங் கருத்தறிந் தெழுந்தனர் விரைந்து. (உக)

உண்ட கைகழு வாமலா சானிடத் தோடி
மண்டி வந்துகண் டவரடி வணங்கினர் வாழ்த்தி
அண்டி நின்றபோ தவர்கண்டு தென்னென வினவத்
தொண்ட ரானவ ராணையின் படிவரல் சொன்னார். (உஉ)

அமுது செய்வதை விடுத்துண்ட கைகழு வாமல்
தமது பால்வந்த சீடரை மகிழ்ந்தனர் தழுவி
உமைநி கர்ப்பவர் சீடரி லொருவரு மில்லை
எமது பாலெனத் தயைமிகப் பெருகின ரேழுந்து. (உ௩)

அமர்க ரத்தொடு வாயையுங் கழுவின ராகித்
தமர்த மக்குநே ரிட்டசங் கடத்தினைச் சாற்றிக்
கவர்மி டுக்கினன் பாற்சென்று மீட்டிடக் கற்றோர்
எவரு மக்குநேர் வாரொரு வருமிலை யென்று. (உ௪)

புகழ்ந்து பேசிநீர் கண்ணைன்றன் பெயராது பொருந்தத்
திகழ்ந்த பத்திராங் கிராமங்கட் கியைவது செய்து
நெகிழ்ந்தி டாதிவண் வருகவென் றுரைத்தலு நேர்ந்து
மகிழ்ந்து தேசிகர் பதந்தொழு தந்தவூர் வந்தார். (உ௫)

வந்த போதந்த வூரின ரிவர்தமை மருவி
இத்த வூர்க்குநீர் வருவதென் காரண மென்ன
அந்த வன்பர்தந் தேசிகர் குறைதனை யறைய
நொந்து மற்றவ ரன்னவன் செய்கையை நுவல்வார். (உ௬)

துடுக்கன் மிக்கதுன் மார்க்கனன் வைணவத் துரோகி
மிடுக்கன் காதக னிரக்கமில் லாதவன் வெகுள்வோன்
கடுக்கும் வார்த்தையன் றனைக்கண்டு நீர்சொலு மிதங்கா
தடுக்கு மோவவன் றன்னுழை யேகலா காது. (உ௭)

என்று கூறுதல் கேட்டியான் குருவரு ளினைக்கொண்
டொன்றி னேனது செய்குவ தேயெனக் குறுதி
நன்ற தென்றுபோம் பொழுதுசிற் சிலர்முன்பு நண்ணித்
துன்று கின்றவர் செய்கையை யவனுக்குச் சொன்னார். (உ௮)

கேட்ட வன்சிறி துன்னிவா றுவன்வரக் கிளத்தி
நாட்டு மென்வயின் வரும்வழி யவன்றனை நால்வாய்
ஓட்டி முன்சென்று காலிடற் றுவைத்து யிர்போக்கில்
வேட்ட தீகுவ னென்றவன் றனைமுன்பு விடுத்தான். (உ௯)

வாது வன்னந்த வகைசெய்வே னென்றுதன் மதமா
ஆது வம்பெரி துண்டிட நிரப்பிமீ தமர்ந்து
போது றும்பொழு தெதிர்பல சீடர்கள் பொருந்தச்
சாது வானவர் பஜனைசெய் தின்பொடு சார்ந்தார். (௬௰)

அடுத்து வீதியிற் சிலர்வரும் ரசிகரை யண்மித்
துடுக்கன் யானையாற் கொல்வது சமைந்ததைச் சொல்ல
நடுக்கி லார்குரு காரியத் தானுயிர் நலிவாய்
விடுத்து மாயிலீ தேமிக நன்றென விரைந்தார். (௬௧)

யானை முன்வரச் சீடர்கள் கண்டியா மிதனால்
வானை யெய்துவ மெனப்பயம் வாய்ந்தவ ராகிப்
பூனை கண்டுபோங் கருப்பையின் கூட்டம்போற் போக
ஏனை மாதவ ரோடுவோர் தமக்கிவை யிசைப்பார் (௬௨)

நீவி ரொன்வயின் மூவகைக் கரணமு நிரப்பித்
தாவி லாவுப தேசம்பெற் றீரதைத் தவிர்ந்து
மேவு தேகத்தில் விருப்பமுற் றோடுவீ ராறல்
ஒவு நுங்களத் தேன்றுழாய் மணியென வுரைத்தார். (௬௩)

அன்ன வாசகங் கேட்டலுஞ் சீடரொல் லாரும்
இன்ன மாலைக ளெங்களத் திருக்கிலன் றேநீர்
பன்னு சீடரொன் றுரைப்பது கொண்மெனப் பரிந்து
மன்னு மாதவர் கையிடை வழங்கினர் போனார். (௬௪)

கொண்ட மாதவர் தனியரா யரியையுட் கொண்டு
மண்ட வோடிய சீடரு நகர்வதி வாரும்
கண்டு நின்றிட வாதுவ னேவிய கரிதான்
அண்ட வந்திந்த ரசிகர்தாள் வணங்கிய தடங்கி. (௬௫)

யாவ ருங்கண்டு வியந்திட ரசிகர்த மங்கை
மேவு மாலையெல் லாமொரு மாலையாய் விளங்கக்
கோவை செய்தந்தக் கோட்டுமாக் களத்திடைக் கொளுவித்
தாவி லாஹரி நாமத்தைச் செவியிடைச் சாற்றி. (௬௬)

இனியுன் மத்தத்தை விட்டுநல் லோர்களுக் கிணங்க
நனிக ளித்தியென் றுரைத்தந்த மிடுக்கன்பா னண்ணத்
தனிந டப்பவ ரால்வினை செய்கையைச் சடன்பால்
முனிவொ டுங்கிடக் கண்டவர் சிலர்சென்று மொழிந்தா (௬௭)

ஆய வன்பயந் ததிசயித் தெதிர்பத சரனைத்
தூயர் முன்வந்து நம்முடை மகிமைதோன் றாமல்
நாய னேன்செய்த பிழைபொறுத் தருள்கென நல்லோர்
சேய தாண்மிசை விழுந்தனன் றோத்திரஞ் செய்து. (௬௮)

ஐய ரோநமக் கேதுவேண் டுஞ்சொல்லி யருள்க
வெய்ய னேனது வேண்டுகின் றேனென விளம்பப்
பொய்யி லாவன்ப ரொன்குருப் பொன்றரு நிலமும்
மையி லென்னுப தேசங்கொள் யானையும் வழங்கி. (௬௯)

என்னி டத்தியான் செல்வகை செய்தியென் றியம்பச்
சொன்ன சொற்படி சன்னது பத்திரந் தொடுத்து
மன்னும் யானையுந் தந்தடி வணங்கினன் வாழ்த்த
இன்ன வன்பர்கொண் டேகினர் குருமரு விடத்தில். (சῶ)

எய்தி யாரியர் பதந்தொழு தவையெலா மியம்பிக்
கைத ரும்பத்தி ரத்தொடு கரியையுந் தந்தார்
மைத ருங்கரி யன்றுதொட் டங்குமா ளுமம்
பெய்து காதிடை யின்புட னமர்ந்தது பேணி (சக)

தொலைவில் கானகம் பகலிடைச் சென்றெங்குந் துருவி
இலையொ டிந்தன மடத்துக்கு வேண்டுவ வேந்தி
மலையில் வந்துறக் குவித்தரி நேயருண் மிச்சில்
மலையெ னக்குவி வனவன்றி யுண்பதில் வாய்ந்து. (சஉ)

களிறு செய்வது கண்டவர் களித்ததி சயிக்கப்
பிளிறு வெங்கரி தான்பெறு பேற்றினைப் பேணி
வெளிறு ளேன்முன்பு செய்தவ மேதென வியந்து
குளிறு மாலரி பஜனைகேட் டமர்ந்ததுட் கொண்டு. (சரு)

இன்ன வாறுபற் பலபகல் கழிந்தபின் ரசிகர்
தன்ன தாரியர் விடைபெற்றுத் தடினிக ளாடத்
துன்னு மால்கரி மேற்பல பொருள்களுஞ் சுமத்தி
நன்ன ரன்பர்க ளுடன்சென்றூர் நாமங்க ணவின்று. (சச)

செல்லு மார்க்கத்திற் றிருடர்க ணவிவுகள் செய்ய
மல்லல் யானைகண் டிவரரி நாமம்வாய் வழங்கார்
புல்லு றூர்துழாய் மணித்தொடை யாதலாற் பொருது
கொல்ல லாமெனக் கொன்றதங் கவரைக்கோ பித்து (சரு)

ரசிக ரானவர் பின்பல வுந்திக ணண்ணி
உசித மாங்குருக் கேத்திரம் போகவு முன்னி
வசியி லாரரு ளுவதி நகர்வழிக் கண்டு
கசியு மன்பின ருடனங்குத் தங்கினர் கலந்து (சசு)

மூன்று நாளுற வங்நக ராளுவோன் மூர்க்கன்
ஆன்ற வுன்மத்த னவிந்தன்பாற் சிலர்விரைந் தண்மித்
தோன்ற லேநம தூரிடை வைணவத் தொகுதி
என்ற தோர்கரி யிலக்கணஞ் சிறந்ததோ டென்றூர். (சஎ)

கேட்ட மன்னவ னக்கரி மேன்மயல் கெழுமி
நாட்டு வேந்தனுக் காங்கரி நல்கென நவின்மின்
கூட்ட மாயினர் நல்கில ரோன்மிகக் கொடுமை
பூட்டு கென்றுதூ தரையவண் போக்கினன் மாதோ. (சஅ)

தூத ரோடினர் செப்பலும் வைணவர் துன்னி
ஈதெ னேவிவ னுன்மத்த னீதிவா யிசையான்
யாது செய்வதென் றெண்ணினர் தூதரை நோக்கிப்
போது றூதநும் பால்வயி னவரன்றிப் பொருமா (சகூ)

என்ற போதந்தத் தூதர்மெய் யெனவதை யெண்ணார்
துன்றி னார்கரி தனைக்கொளத் துளவொடு நாமம்
இன்றி வந்தவர் தமைக்கண்டு கரிமுனி வெய்தி
நின்று சீறலும் பயந்துபோய் நிருபனுக் குரைத்தார். (௫௰)

அரச னன்றென வாதுவ னொருவனை யழைத்துப்
பரசு வைணவ வேடத்தை நீயுடல் பரித்து
விரசி யானையைக் கொண்டுவா வெனவவன் விரைந்து
புரசை யானைமுன் போயினன் வைணவம் பூண்டு (௫௧)

கபட மாயிவன் வந்தன னெனக்கரு தியுமவ்
விபம வன்சொலு நாமத்திற் கிசைந்தெதிர் நிற்க
நிபமில் யானையை வாதுவ னோர்ந்தனன் கொடுநி
ருபன்முன் சென்றிடக் கூடத்திற் புகுத்தென வுரைத்தான். (௫௨)

கூடத் துய்த்தலும் யானைசா துக்களைக் குறித்து
வாடி யிங்ஙன மெய்திய தேயென வருந்தி
நீடு நித்திரை யுணவதில் லாமலே நின்று
வீடிற் றேழொழு நாளிடை வைகுந்த மேவ (௫௩)

அப்ப டிக்கரி யானபின் ரசிகரு மறிந்தே
ஒப்பி லன்பரோ டிப்படி யுறுதலா காதென்
றெய்ப்பி லாதரி பஜனைசெய் தெங்கணு மேகி
வைப்ப தாகிய தீர்த்தங்க ளாடினர் வாழ்ந்தார். (௫௪)

ஆக சரித்திரம் ௯௰-க்குச் செய்யுள் ௩௲௰௯.

ரசிகமுராரிபக்தர் திருவடிகளே சரணம்.

முற்றிற்று.

# மீராபாயிசரித்திரம்



இந்துஸ்தா னதேசத்திற் பெரியவுதே யபுரமென விசைகொ ளூருண்
டந்தச்சீர் நகரத்திற் கரசன்விஷ்ணு பக்தியுடை யவன்றன் பக்கல்
வந்துற்ற வதிதிகளுக் கன்னதா னஞ்செய்தும் வருநல் லோரை
முந்துற்றுப் பூசித்துச் சேவைசெயும் ராணுவா முதல்வன் மாதோ. (க)

கோபால மூர்த்தியைத்தன் னகத்தில்வைத்துக் குறைவிலுப சாரமான
தீபாதி களைப்புரிந்தவ் வரிபிரசா தத்தைநன்கு தினமுங் கொள்ளும்
பூபாலன் பின்புசித்து வருமவற்கோர் புதல்விமணி போற்பி றக்க
மாபால னஞ்செய்தக் குழவிக்கு மீராபா யெனும்பேர் வைத்தான். (உ)

அன்னைகுழ வியையெடுத்துக் கண்ணனடி யிற்கிடத்தி யன்பு செய்து
நன்னர்வரு நாளுக்கு நாள்வளர்ச்சி யாகமிக நன்கு போற்ற
மின்னுகுழ வியினுருவ லாவணியங் கண்டுதந்தை மிகக்க ளிக்க
இன்னபடி வருநாள்கண் ணன்கோயிற் கப்பெண்ணை யெடுத்து வந்து. (௩)

மகுடகுண்ட லங்களொடு மணிமுத்து மாலைவைஜ யந்தி மாலை
நகுதுளவ மாலைகவுத் துவமான மணிமாலை நவில்கே யூரம்
உகுமொளிசேர் பொன்னுடை யிடையணிநூ புரம்விளங்க வுற்ற கண்ணன்
நெகுபுனகை முகவொளியு மைம்படையுங் கண்டுதெரி சித்து நின்று. (௪)

தினந்தோறுந் திவ்வியமங் களமூர்த்தி சேவைசொன்ன படிசே வித்து
மனந்தாவி லன்புகொள வருதந்தை தாயுடனே வருமீ ராபாய்
எனுந்தூய வனிதையுமக் கோபாலன் சேவைதனி லீடு பட்டுப்
புனந்தோயு மயில்பொழியும் புயல்கண்டா லெனமகிழ்வு பொங்க லாகி. (௫)

எனக்கிந்தக் கண்ணனன்றி வேறொர்புரு டனைவேண்டே னென்ற வண்ண
றனக்கன்பு பூண்டிருக்கத் தந்தைமனை வியினிடத்துச் சார்ந்து மாதே
மனக்கின்பந் தருநமகண் மணப்பருவ மேவியதுன் மனங்கொ ளாயென்
வனக்கன்னி தனக்கினிய வரன்வேண்டு நாடுகென வலிந்து சொன்னான். (௬)

அவ்வாறு தந்தைதன தன்னையுடன் பேசுகின்ற வதனைக் கேட்டுச்
செவ்வாயின் மீராபாய் தந்தைவயின் வந்துதந்தாய் செப்பக் கேண்மோ
தவ்வாதி யானொருத் தமபுருடன் றனைக்குறித்துத் தங்கு கின்றேன்
எவ்வாறே வெனினீவிர் தினந்தொறும்பூ சிக்குங்கோ யிலனே யாமால். (௭)

அந்தக்கோ பாலனுக்கே யென்னையர்ப்ப ணஞ்செய்யு மதற்கோ ரையம்
சிந்திக்கா தெனைத்தருக வெனவுரைக்கு மகள்வார்த்தை தேர்ந்து மன்னன்
எந்தக்கா லத்தெவர்தாம் விக்கிரகந் தனைமணந்தா ரிசைகோ பாலன்
இந்தக்கா லத்தர்ச்சா ரூபமதாய் விளங்குகின்றா னிணங்கு வானோ. (அ)

ஆதலா லிவ்வுறுதி தனைவிட்டுப் புகழ்குணங்க ளனைத்துங் கொண்ட
நீதனு கியவரச குமாரனைத்தேர்ந் தேமணக்க நினைத்தி யென்ன
நாதனர்ச்சா ரூபமதா யிருந்துநிஜ பத்திக்கொண்ட நாமதேவர்
போதுகென வருகின்றா னுடனுண்கின் றான்விபவம் பொருந்தி மாதோ. (௯)

ஐயவிந்தக் கலியுகத்தி லர்ச்சாரூ பம்விபவ மாகித் தோன்றும்
மெய்யறிகி லாயோநீ பலவுண்டு நிஜபக்தி விளங்கிற் றாறல்
வையநுகர் கோபால னெனக்குமெய்யாய் விளங்குவனீ மறுத்தல் வேண்டாம்
செய்யவனுக் கர்ப்பணமென் றுரைசெய்தாள் மகள்வார்த்தை தேர்ந்துமன்னன்

சிறுவயதி லரிபஜனை புராணசிர வணஞ்சிறந்த திவ்விய ஞானம்
பெறுமகளை யதிசயித்திக் கோபாலன் றனையுனக்கென் பிரியத்தீந்தேன்
நிறுவியவுன் மனைகொடுபோய் நித்தநிஜ பாவமது நிரம்பப் பூசை
உறுதிகொண்ட படிபுரிகென் றுரைத்திடமீ ராபாயி யுகந்து கொண்டார். (௰௧)

கண்ணனைத்தன் மனையில்வைத்துத் தினமும்விடி யற்காலங் கடி தெழுந்து
தண்ணியநீ ராடல்செய்து நித்தநிய மக்கிரியை தனையுஞ் செய்து
புண்ணியநற் புனல்கொண்டு கோபாலற் கபிடேகம் பொருந்தச் செய்து
வண்ணவஸ்தி ராபரணங் களும்பொருத்தி யுபசார வகையுஞ் செய்து. (௰௨)

பூசித்து வீணைகைக்கொண் டரிகுணங்கள் பலபாடிப் புகழ்ந்து போற்றி
நேசித்துச் சாதுக்க டமையழைத்துப் பிரசாத நிவேதித் துப்பின்
பாசித்துத் தான்புசித்துப் புராணசிர வணஞ்செய்து மான்ம ஞானம்
வாசித்து மாலரிதன் குணானுபவ பிரபந்தம் வகுக்கு நாளில். (௰௩)

அப்பதியிற் சிலகுடில தூர்ப்புத்தி யுடையரிந்த வரசன் கன்னி
பற்பல்புரு டர்களிடையே பாடுதலோ டாடுதலும் பயில்கை தன்னால்
இப்பதிதன் குலத்துக்கோ ரிழுக்கமென வறிகின்றா னில்லை யென்று
செப்பலுணர்ந் தரசன்முனி வாய்மனைவி தனைநோக்கிச் செப்பு கின்றான். (௰௪)

இது காறுஞ் சிறுவயதா யிருந்ததனால் வைணவரோ டிருக்கச் செய்தேன்
முதுஞானம் விளைந்தாலும் யௌவனத்திற் புருடரொடு முயல்வ தாகா
ததுதேரு ராரிகழ்ந்தா ரெனையதனா லினிவரனை யணைவ தாச்செய்
வதுதானுத் தமமென்றுன் மகட்கறைந்து சொல்வதனை வகுத்தி யென்றான் ( )

அன்னைமகண் மனைவந்து மகளேநீ மணங்கொள்ளா தமைத லாலே
உன்னையூ ராரிகழ்ந்தா ரிகழ்ந்ததனை யுனதுபிதா வோபொ றாமல்
என்னையுனை மணஞ்செய்து கொள்ளும்வகை யிசைத்தியென விசைக்கவந்தேன்
முன்னைநினை வதைவிடுத்து நல்லவரன் றனைமணக்க முயறி யென்றாள். (௰௬

கண்ணனன்றி யுலகிலுள்ளோர் பிதாக்களெனக்கருதுமென் றன்கருத்தைநீபோய்
அண்ணறனக் குரைசெயெனு மவருறுதி தனையறிந்த வன்னை தான்போய்
மண்ணுலகா ளரசனுக்குச் சொல்லவவன் வைணவரால் வாய்த்த தீதென்
றெண்ணி யினிமகளைக்கொல் லாதிருத்து மேலிகழ்ச்சி யெய்து மென்றான். (

மனைவிதனை அழைத்துவிடங் கலந்தசோற் றினையளித்துன் மகளைக் கொல்க
வெனலு மவள்கணவன்சொற் கடக்கமாட் டாளாகி யிசைந்து நஞ்சு
தனைவிரவு சோறுகொண்டு மகளிடஞ்சார்ந் துனதுபிதாத் தானுன் செய்கை
யினையு கவா தடுநஞ்ச மிடுசோறுண் பிக்கவென்னை விடுத்தா னென்றாள். (௰௮

அழுதுசொல்லுந் தாயுரைகேட் டந்தமீ ராபாயி யன்னே நன்று
வழுவிலரி பக்தியினால் யான்மடித லென்றுமா தவன்முன் வந்து
தொழுது நின்று கண்ணாநின் பக்தியினால் யான்மடிந்தாற் சொலாரோ நின்னை
பழுதுமுழு வதுமென்றுன் பூசையினி யார்புரிவார் படலா னேனேல். (௰௯

எனப்பலவா றியம்பினைந்தி யான்பூசை புரிவதுனக் கிச்சை யானல்
முனைப்பிரக லாதனர விடத்தாற்சா வாதுசெய்த முகுந்தா நீயென்
றனைச்சாவா திருக்கச்செய் யாயோவென் றேத்தியன்னை தராமுன் வாங்கி
மனத்தார்வ முடனுண்டா ருடனேமா தவன்பச்சை வடிவங் கொண்டான் (உ௰)

விடவமுதுண் டெங்கன்னி வீயாமற் கண்ணனுரு வேறு பாடாய்
இடல்கண்டு தாய்வியந்து கணவனிடஞ் சென்றியம்ப விதுமெய் யோவென்
றடலரச னவணேகி மகளையும்பார்த் துக்கண்ண னுன பச்சை
உடலையும்பார்த் ததிசயித்துக் கண்ணுநான் விடமுண்ண வுனைச்செய் தேனே. ( )

தகுமோவென் றனுதபித்துச் சாஷ்டாங்க தண்டனிட்டுத் தனது கன்னி
மிகுமன்பை மிகவியந்து மகள்காலில் விழுந்தெழுந்து மிகத்து தித்து
நெகுமுன்றன் மகிமையறி யாதுசெய்த பிழைபொறுத்தி யென்று நேர்ந்து
புகுதந்தை தனைவணங்கி நின்னுற்கண் ணன்கருணை பொருந்தி னேனே. (உஉ)

எனுமீரா பாயிதனை நோக்கி யன்னே யான்விடச்சோ றுனையுண் பிக்கப்
புனிதநிறம் வேறுன கண்ணனைநீ யேயினிது புகழ்ந்து போற்றி
அனகன் முன்னை வடிவாக வமைத்தியெனப் பிதாவேண்டு வதனைக் கேட்டு
வனிதைகண்ண னன் றனைவணங்கிப் பூதனைதன் விடப்பாலை மாந்தி னேனே (உ௩)

நிறம்வேறு யினையோநீ யதனாலே யின்றுமுன்னை நிறமே யாகி
விறல்வேந்தன் றனக்கருள்க சேவையென வேண்டுதலும் விமலன் கன்னி
உறவேண்ட றனையுகந்து களஞ்சிறிது பச்சைநிற முறுத லாகப்
பிறவுடலெல் லாமுன்னை வடிவாகி யதிசயிக்கப் பிறங்கி னனே. (உ௪)

ராணுவேந் தன்கன்னி நிமித்தமாய்க் கண்ணனிந்த நன்மை செய்ய
மாணுத துர்ச்சனருஞ் சாதுஜன ருந்தெரிந்து மகிழ்ந்து போற்ற
நாணுளுங் கண்ணனின்று மவ்வாறே விளங்குகின்ற னவிலுங் கன்னி
ஆணுதன் கருணையா லான்மனா னம்விளங்கி யமர்ந்தா ரம்மா. (உ௫)

ஆகச்சரித்திரம் ௬கக்கு செய்யுள் ௬௭௬

மீராபாயிதிருவடிகளே சரணம்.அ

முற்றிற்று

# தாசி கான்ஹோபாத்ரா சரித்திரம்

பண்டரி புரத்தின் றென்பாற் பகரொழு கோசு தூரம்
கொண்டமங் களவே டத்திற் குடியிருப் பவளோர் தாசி
உண்டவ ணாமஞ் சாமா வவள்வயிற் றுதித்தா ளோர்பெண்
கண்டவர் வியப்ப நாளுங் கவின்மிக வளருங் காலை. (௧)

நாமந்தான் கான்ஹோ பாத்தி ராவென நவில்வ தாக
மாமைமிக் குறுதல் கண்டு வானவர் மகளிர் நாணம்
தாமிக வடைவ ரானாற் சகத்தவர் தமக்கு நேர்வே
றாமவ ருண்டோ நாட்டி யக்கலை யனைத்துந் தேர்ந்தார். (௨)

இளமையிற் பாடி யாடு மெழிலெலா மரம்பை யாதி
வளமைசேர் வான நாட்டு மாதர்க ளறிந்து மெய்ச்ச
உளமயி லனைய கன்னி யௌவன முறுத லாகக்
கிளர்மக டன்னை நோக்கித் தாயொன்று கிளத்த லுற்றாள். (௩)

கொற்றவ னிடத்துற் றாலுன் கோலமோ டாடல் பாடல்.
நற்றலா யுனக்கு வேண்டு நலமெலா நல்கு கிற்பான்
முற்றறி மகளே போக வருகென மொழிதல் கேட்டு
மற்றவ ளதற்கொவ் வாமன் மறுத்தன ருரைக்க லுற்றார். (௪)

எனதெழிற் கதிக மான வெழிலுள புருடன் றன்னை
மனதினில் விரும்ப லன்றி மற்றையோர் தமைவி ரும்பேன்
கனதயை யுடைய தாயே யெனவவ ருறையுங் காலை
வினதைபுத் திரன்பா கற்கு விளைந்தது திருநன் னாளே. (௫)

தாளமிர் தங்கம் வீணை தடாரிதார்க் கியப தாகை
நீளதிர் நிரம்பத் தாசர் நிமலநன் னாமம் பாடித்
தோளணி துளவத் தான்வாழ் துகளில்பண் டரிக்கு மேவ
வாளன கண்ணார் கண்டு மற்றவர் தமைவ ணங்கி. (௬)

ஹரிதிரு நாம கீர்த்த னஞ்சொலுந் தாச ரோநீர்
மருவுவ தெங்கே யென்ன மற்றவர் புண்ட லீகர்க்
கருள்செயும் பாண்டு ரங்க னமர்ந்தபண் டரிக்கென் றோத
திருமக ளனைய கான்ஹோ பாத்திரை செப்பு கின்றார். (௭)

நீர்புகல் பாண்டு ரங்க னழகெங்க னிகழ்த்து கென்னச்
சோர்வறு கமல நாப னழகினைச் சுருதி யாலும்
வேரிமுண் டகத்தோ னாலும் விளம்புதற் கரிய தென்று
சாரரி தாசர் சொல்லத் தாசிபுத் திரியார் சொல்வார். (௮)

தாசரோ நீர்கொண் டாடத் தக்கபாண் டுரங்கன் றன்னை
வேசியான் சரண டைந்தால் விரும்புகிற் பானோ வென்ன
மாசிலார் மதுரைக் கூனி வணக்கமு மகிழ்ந்து கொண்டான்
ஏசிலாக் கண்ண னாக வெய்திய போதி லென்றார். (௯)

ஈனராஞ் சோகா மேள ரென்பவர் முதலி யோரைத்
தானருள் செய்து காத்த தயாநிதி பாண்டு ரங்கன்
ஆனதா லுன்னைக் காப்ப தரிதன்று மாதே யென்ன
ஞானமுண் டாகித் தாய்வாழ் நன்மனை விரைவிற் புக்கார். (௰)

தாய்தனை நோக்கி நான்பண் டரிதனைச் சார்ந்து மீள்வேன்
நீயிவ ணிருத்தி யென்று நிகழ்த்துசா துக்க ளோடு
மேயினள் வீணைகொண்டு விமலகீர்த் தனங்கள் பாடித்
தூயரோ டாடிக் கொண்டு தொடர்ந்துபோ யவிடஞ் சேர்ந்தார். (௰௧)

தளிதனிற் புகுந்து பாண்டு ரங்கனைத் தரிசித் தேத்தி
முளரியந் தாளில் வீழ்ந்து முகுந்தகோ விந்த நின்சீர்
தெளிகுந ருரைக்கக் கேட்டுச் சிறியவென் சாதித் தீமை
விளியவிட் டுன்னை நம்பி மேவினேன் சரணந் தாழ்ந்தேன். (௰௨)

ஆதலா லங்கி காரஞ் செய்தெனக் கருளல் வேண்டும்
நீதயா நிதியன் றோவென் றுரைத்தனர் நிமலன்பாத
மீதுதன் றலையைச் சார்த்தி விழியினீர் பனிப்ப நின்று
மாதுதி பலபு கன்று வதிந்தனர் சினக ரத்தில் (௰௩)

அப்படி யிருக்க வோர்நா ளொருதுரா சார னன்னோர்
மெய்ப்படி யெழிலைக் கண்டு வியந்திவள் போலு முண்டோ
இப்படி மீதி லோர்பெ ணென்றுபே தரியை யாளும்
மைப்படி யுளமி லேச்ச மன்னவன் றன்பால் வந்து (௰௪)

வேந்தபண் டரியின் கோயின் மேவின ளொருபெ ணன்னாள்
மாந்தளி ரனைய மேனி வனப்பினை யென்சொல் கேளுள்
நீந்துத லரிதி யார்க்கு நிரம்பெழிற் கடலுட் பட்டால்
வாய்ந்தனை யறிதி யென்றான் மற்றவன் வியந்து சொன்னான். (௰௫)

தூதனை நோக்கி நீர்போய்த் துளவினோன் கோயில் மேவும்
மாதனைக் கொணர்க வென்ன மற்றவர் விரைந்து சென்று
ஸ்ரீதரன் கோயின் மேவுங் கருடதம் பத்தைச் சேர்ந்து
மாதவன் கீதம்பாடி வதிபவர் தம்மை நோக்கி (௰௬)

உனையெங்க ளரசன் றன்பா லுறுகென வுரைத்தானின்றே
சினகரம் விடுத்தங் கேகீ சேர்கசீக் கிரஞ்சே ராயேல்
நினைவலிந் தங்கே கொண்டு நேர்குவோ மென்று சொல்ல
அனையவ ரரியைத் தாழ்ந்து வருவெனென் றவருக் கோதி (௰௭)

மாதவன் கோயிற் கர்ப்ப கிரகத்துட் புகுந்து மன்னன்
றூதர்கள் வெளியே நிற்கச் சுவாமியை வணங்கிச் சென்னி
மீதுறக் கைகு வித்துப் புண்டலீ கவர தாமேற்
போதகந் தனக்கா பத்தைப் போக்கிய புனித சீலா (௰௮)

நின்னடித் தொழும்ப தாக நேர்ந்தவென் றன்னை வேந்தன்
றன்னிடத் துய்த்தி யேலுன் றனைப்பணி சாது சங்கம்
மின்னிட நகைப்ப தாக விளையுமே யறிகி லாயோ
என்னநற் றுதிகள் செய்யு மின்னுரை யினிது கேட்டு (௰௯)

கருணையங் கடலாங் கண்ண னுடனவர் கண்முன் றோன்றித்
தெரிவைதன் றாவி தன்னைத் திகழுந்தன் றுடையிற் சேர்த்தான்
அருகிலர்ச் சகரோ டுற்ற சாதுக்க ளனைவ ருங்கண்
டுருகினர் ஜயஜ யாவென் றுரைத்தனர் வியந்து நின்றார் (௨௰)

இன்னமும் பாண்டு ரங்க னெழிற் றொடை தனிலே யந்தக்
கன்னிசேர் குறிகாண் கின்றார் சேவைகாண் போர்க ளெல்லாம்
மன்னவ ருடலைக் கொண்டு போய்த் தெற்கு வாச லோர்சார்
துன்னுறப் புதைத்தார் கோயி லர்ச்சகர் துதிகள் செய்து (உக)

புதைத்தவவ் விடத்தப் போதே யொருதருப் பொலிந்த தாக
மதத்தகோன் றூதர் கோயிற் குட்புக்க மாத ரெங்கே
இதத்தவர்ச் சகரோ யென்ன வெழிலிவண் ணன்க வானிற்
பதித்தனன் மாத ராவி யென்னலும் பதரித் தூதர் (உஉ)

உயிரிலா வுடலைக் காட்டு மெனவுடல் மரமா யுற்ற
தயலெனக் கேட்ட தூத ரதிசயித் தவ்வா றாமோ
மயிலனு டனைம றைத்துப் பொய்யுரை வகுக்கின் றீர்நீர்
அயிலுடை வேந்தன் றன்பால் வருகென வழைத்துச் சென்றார். (உ௩)

போமவ ரினிய கந்த பொடியுடன் பிரசா தங்கொண்
டேமயல் கொண்ட வேந்த னிடஞ்சென்று நல்கலோடும்
ஆமதி லுரோமங் கண்டீ தேதென வினைய ரச்சம்
தான்மிகக் கொண்டு சாமி தலைமயி ரென்று சொன்னார். (உ௪

வேறொரு மயிரொன் றோதில் வேந்தன்றண் டிப்பா னென்று
கூறிய வார்த்தை கேட்டுக் கோன்மயி ருண்டோ சாமிக்
கீறுசெய் முன்னஞ் சொல்க மெய்யென வினையர் கோயில்
காறும்வந் தறிக வென்ன வேந்தனுங் கடுகிச் சொன்னான். (உ௫)

நன்றுநா னழைத்த தாசி யெங்கென நடந்த தோத
இன்றதை யறிவோ மென்ன வெய்தினன் றொடர வன்னார்
துன்றினர் சாமி தன்னைப் பலவகை துதித்து ரோமம்
ஒன்றநீ யுறாயேல் யாங்கள் மடிவதா மெனவு ரைத்தார் (உ௬)

உடன்வரு மரசன் கோயிற் குட்புக்குச் சாமி தன்னைத்
திடமுட னோக்கும் போது சீதரன் மகுடத் தின்கீழ்ப்
படிசுரு ளுரோமங் கண்டு பயந்தன னுகிமற்றை
வடிவுடன் கவானி லுள்ள குறியுங்கண் டுளம கிழ்ந்தான். (உ௭)

பலவகை துதித்துப் பாதம் வணங்கினன் பகர்ந்த வண்ணம்
இலகுறக் கண்டே னென்ன வர்ச்சகர் தமக் கியம்பி
நலவிழி களிலா நந்த நீர்வர நங்கை யிந்தச்
சலசலோ சனன்க வானிற் சாரவெத் தவஞ்செய் தாளோ. (உ௮)

என்றனன் வியந்து சாமி யிணையடி தழுவி யேத்தி
நன்றுகொண் டாடி மாத ருடன்மர நயந்து கண்டு
பின்றையா னுணரா தேசெய் பிழைபொறுத் தருள்க வென்று
மன்றலந் துளவோன் பாதம் வாழ்த்தின னூர்போய் வாழ்ந்தான் (உ௯)

உடலுறு மிடத்தி லுற்ற மரமின முளது காணக்
கடவதாய் வானோர் மற்றுங் கலந்துள மரங்க ளோடு
படர்சிலை யாகி யங்கே பரவின ராய தன்மை
திடமுறச் சேட னாலுஞ் செப்பொணா தென்ப மாதோ. (௩௰)

ஆக சரித்திரம் ௩உ க்குச்செய்யுள் ௬௱௩௰அ.
தாசி கான்ஹோ பாத்திரா திருவடிகளே சரணம்.
முற்றிற்று.

# தாமாஜிபண்டிதர்சரித்ரம்

பேதரிமா நகராளு மவிந்தர்பிரான் மங்களவே டப்பேர் பூண்ட
நீதமிகு வளம்பதியைத் தனதாள்கைக் குள்ளாக்கி யதற்கு நேரில்
ஸ்ரீதரன்றன் பஜனையிலே சிறந்தவராய் மனம்விரக்தி திகழ்வோ ரான
தாமாஜி பண்டிதரா லதிகாரந் தழைக்க வைத்தான். (க)

பண்டிதர்தங் குடும்பமுட னவ்வூரி லிருந்துதம்மாற் பார்க்க லாக
மண்டலிகா ரந்தனைச்செவ் வேநடத்திக் கொண்டுதினம் வருத லான
தொண்டருக்கு மதிதிகட்கும் பூசையன்ன தானமிகச் சுரந்து நல்கி
விண்டுபஜ னையுஞ்செய்து வெகுகாலங் கழித்தினிது மேவு நாளில். (உ)

பஞ்சமிக வந்ததனாற் சீவகோ டிகளெல்லாம் பசிபொ றாமற்
றுஞ்சுதலா லதையன்றிச் சோறுணக்கிட் டாதுமிகு துன்ப நேர்ந்து
நஞ்சுறுகா லத்திலுயர் பண்டரியி லிருந்தொர்மறை நல்லோ னிந்த
விஞ்சுபுகழ்த் தாமாஜி பண்டிதர்வாழ் வீட்டிற்கு மேவினானே. (ங)

இன்றுநமக் கமுதுதப்பா தேகிடைக்கு மென்றுபசி யாலி ளைத்துத்
துன்றுமறை வேதியனைப் பண்டிதர்சத் பாவமுடன் றொழுது நீர்போய்
நன்றுபுன லாடிவிரை வாய்வருக வமுதுணற்கு நன்கென் றோதச்
சென்றுமறை வேதியனும் புனலாடிப் பண்டிதர்வாழ் மனையைச் சேர்ந்தான்.()

வந்தவுடன் சன்மானஞ் செய்தொருதம் பந்தியிடை வதிய வைத்து
முந்துபல விதமான வுத்தமபோ ஜனம்படைத்து முயல்சங் கற்பம்
நிந்தனையில் லாதுபுரோ கிதர்கூற வேதியனை நோக்கி நீவிர்
நந்தலிலாப் போஜனஞ்செய் யுங்களெனப் பண்டிதர்தா நவிலும் போதில். (ரு)

பண்டரியி லிருந்துவந்த வேதியன்கண் ணீர்பெருகப் பரித பித்துக்
கொண்டுறுதல் கண்டுசக லருந்திகைக்கப் பண்டிதர்முன் குறுக வந்து
விண்டடிய ரேநீரோ னழுகின்றீ ரெனக்கேட்க வேதி யன்றான்
அண்டெனது குடும்பமெல்லா நாலுநா ளுபவாச மானதாலே. (சு)

இங்குணும்போ தவர்நினைவு வந்தழுகின் றேனென்றா னென்னக் கேட்டுப்
பொங்கழலி லிடுமெழுகு போலுருகிப் பண்டிதர்மற் றவனைப் போற்றி
நுங்குடும்பந் தனக்காண்டுக் குறும்பொருள்க ளருகின்றே னெனநு வன்று
மங்குதலில் லாதுசெய்து போஜனமுண் பித்தெவரு மகிழ்வ தாக்கி. (எ)

தக்கணைதாம் பூலமது பெற்றெவரு மாசிமிகச் சாற்றிச் செல்ல
மிக்கதொரு பண்டரியி லிருந்துவந்த வேதியற்கு விளம்பு மாறே
தொக்கபொதி களிற்றானி யங்கனக்கச் சுமையேற்றித் தொடர்ந்து கொண்டு
புக்குமனை யிடைச்சேர்த்து வருகவென வூழியர்க்குப் பொருந்தச் சொன்னார்.()

ஊழியர்தாங் கொடுபோந்து பண்டரியின் மேவவங்கே யுற்றோ ரெல்லாம்
சூழுறவந் துற்றவெல்லாஞ் சூறையா டினர்கொண்டு சுமந்து சென்றார்
வாழ்வருளத் தாமாஜி வடிவாகிப் பாண்டுரங்கன் வந்தா னென்று
தாழ்வறுசீர் மறையோனு மூழியராற் றடைசெய்யத் தகாத தாகி. (கூ)

கிடைத்தனவூ ரார்கொள்ளக் கூகூவென் றலறியழு கின்ற பார்ப்பான்
உடைப்பொருளோ விவையென்னப் பண்டரியிலுள்ளவர்க ளொருங்கு கூடிப்
புடைத்தழுகின் றோயுனக்கித் தானியங்கள் யார்கொடுத்தார் புகறி யென்னப்
படைத்தபுகழ்த் தாமாஜி பண்டிதராற் கிடைத்ததென்று பரிந்து சொன்னான்.()

யான்செய்வினை தானியங்க ளெலாங்கொடுபோ யிற்றேயென் றிரங்கிப் பின்னு
வான்செய்புகழ்த் தாமாஜி பண்டிதர்பாற் றிரும்பிவர வறுமை யாலே (ம்
ஊன்செயுடம் பிளைத்தமறை யோரொல்லா மவன்பின்னே யொருங்கு கூடி
மீன்செய் கடல் போலொலித்துத் தாமாஜி பண்டிதர்வாழ் வீட்டைச் சூழ்ந்தார்

வந்துநிரம் பியதுகண்டு பண்டிதரம் மறையோர்க்கு வணக்கஞ் செய்ய
முந்தியவே தியரொல்லா மாசிசொல்லி யாமுழுது மிடியின் மூழ்கி
நைந்துயிர்போங் காலமதா னீர்தீர வுதாரர்தயா நலமுள் ளோர்சீர்
நந்துதலில் லாதுசமா ராதனஞ்செய் பவரென்று நவிலக் கேட்டு. (௰உ)

அடைந்தவெங்கள் பசிநோய்தீர்த் தருளுமென வவர்சொலுந்தீ னவார்த்தை கே
மிடைந்தபுகழ்ப் பண்டிதரங் கவர்களைநன் குறவிருத்தி மெலிவு றேன்மின் ட்டு
குடைந்துவண்ட ரிசைபாடு மலர்த்தலஞ்சூழ் பண்டரிவாழ் கோபா லன்றான்
உடைந்துறச்செய் பசிநோய்தீர்த் தருளுவா னென்றுமனைக் குட்புகுந்தார் (௰௩)

தமதுதர்ம பத்தினியை நோக்கியன்னங் கிடையாமற் றளர்ந்து வாடி
நமதுபண்ட ரிக்கணுள்ளார் வந்துமொய்த்திங் கிருக்கின்றா ரவர்க்கு நங்காய்
உமதுகுறை தீர்ப்பான்கோ பாலனென்று சொல்லிவந்தே னுறுகண் டீரா
தெமதிடத்தி லொன்றுமில்லை யெனமறுத்தா லவர்களெல்லா மிறந்து போவார்.

ஆதலா னம்மிடத்திற் றானியங்க ளேதுமில்லை யளித்தற் கிப்போ
தேதுசெய்து மெனவினவக் கற்பின்மிக்கார் கொழுநர்முக மினிதி னோக்கி
நாதரொயெவ் விதத்தேனும் வந்தோர்தந் துயர்தீர்த்த னலனென் றோத
மாதரார் தமைநோக்கி மன்னனுறு பொருளுளது வழங்க லாகும். (௰௫)

வழங்கிலென துயிர்போகும் போனாலிங் கிவர்களெல்லாம் வாழ்வ தாகும்
முழங்கிவர்தம் பொருட்டெனுயிர் விடுதன்மிக நன்றென்று முன்னுகின்றேன்
கழங்குபயில் கைமானே யிருத்தியென வெளிவந்து கலந்து மொய்த்துத்
தழங்குமறை யோர்முதலோர் தங்களைக்கூய்த் தானியவைப் பதனைச் சார்ந்தார்

கதவுதிறந் துங்களுக்கு வேண்டுவகொள் ளுங்களென்று கழறி விட்டார்
பதறிவந்தோர் கொள்ளைகொண்டு பண்டிதரை மிகவாழ்த்திப் பகரோர் மாதம்
மிதமிலதாய்க் கொடுசென்றார் பஞ்சத்தால் வருந்துயிர்கள் மிடியுந் தீர்ந்த
நிதமுமரி பஜனைசெய்து பண்டிதர்கண் ணனைமறவா நினைவோ டுற்றார். (௰எ)

வேறு

வழுவலி லரசன தாக வாய்பொருள்
முழுவதுங் கொள்ளையின் முடிய விட்டதோர்
பழுதறு பண்டிதர் தமக்குள் ளேபணி
கெழுமிய வொருவனுற் கிளர்ந்த தோதுவாம். (௰அ)

பண்டிதர் பார்த்திபன் பொருளைப் பல்படி
கொண்டுபோ கக்கொள்ளை விடுத்தல் கொள்கையோ
அண்டிய யான்சும்மா விருக்க லாகுமோ
புண்டரு வேலிறை பொறுப்ப னோவென. (௰௯)

எண்ணினன் பொருளெலாம் போன விவ்வகை
அண்ணலுக் கறிவுற வரைந்த னுப்பினன்
நண்ணிய வதுதெரிந் தவிந்தர் நாயகன்
ஒண்ணுமோ விதுசெய வெனவு ருத்தனன். (உ௰)

எனதரு ளாணையில் லாம லிங்ஙனம்
வனைபவன் றனதுயிர் வதைத்தல் வேண்டுமென்
றனையவர் தமைப்பிடித் தனுக வீரரைத்
தனதுகைத் தீட்டொடு சார வேவினன். (உக)

பண்டிதர் பால்விரைந் தடுத்துப் பார்த்திபன்
கண்டனைத் தீட்டினைக் காட்டி நீர்விரைஇ
அண்டுதல் வேண்டுமா லரசன் பாலெனக்
கொண்டன ரோகிடக் கடுத்துக் கூறினர். (உஉ)

கூறின வீரர்சொற் கேட்டுக் கோமகன்
ஆறுசெ யாணையின் படிய டைந்திடத்
தேறினர் பண்டரி சேர்ந்து நாதனை
வீறிலை யடிதொழு தேக வேண்டினர். (உங)

வீரருக் கின்னுரை விளம்பிக் கொண்டுதாம்
சீரரி பண்டரி புரத்தைச் சேர்ந்தனர்
சார்தரு சந்திர பாகைத் தண்புனல்
ஆர்வமோ டாடினர் கோயி லண்மினர். (உச)

சன்னிதிக் கருடதம் பத்தின் சார்புற
மன்னினர் வணங்கினர் செங்கண் மேல்வதி
பொன்னிறு யகனது பாதப் போதினைச்
சென்னிமேற் சேர்த்துக்கை குவித்துச் செப்புவார். (உரு)

ஞானநல் லுருவபொன் றைந நாடுறுந்
தீனத யாளவா பத்தைத் தீர்ப்பவ
வானவர் நாயக வெனவ ழுத்தினர்
மானமணி மேனியை மகிழ்ந்து புல்லினர். (உசா)

சென்னியின் மேற்கரஞ் சேர்த்து நின்றுமுன்
உன்னது சேவையென் முடிவி லுற்றதால்
மன்னது பவம்பரி சுத்த மெய்திய
தன்னது முனதரு ளாமென் றோதினர். (உஎ)

நாதனை துருவெலா நயந்து நோக்கினர்
ஆதரம் பெருகவுள் ளமைவு செய்தனர்
காதலிற் கண்கணீர் ததும்பக் காருழாப்
போதுகே ணெனவிடை கொண்டு போந்தனர். (உஅ)

திருமக ணிமைகண் முதல தேவிமார்
மருவுறுங் கோயின்முன் வந்து நின்றுமுன்
கருணையம் பிராட்டிதன் கமலத் தாள்களை
வெருவுற வணங்கினர் வேண்டி னின்றனர் (உகூ)

பிரமருத் திரேந்திரர் பேண நீயுமோர்
வரனது கருணையே வடிவ மாயினை
சரமதா கியதிரி புவனந் தாங்குவாய்
உரனிலே னுன்வயி னுரைப்ப தென்னரோ (௬௰)

மற்றைய தேவிமார் தமையும் வந்தித்துச்
சொற்றனர் துதிபல சொல்லிப் பின்புமுன்
முற்றமார் வினதைதன் மைந்தன் முன்னுறீஇப்
பொற்றுணை யடிகளை வணங்கிப் போற்றுவார். (௬௧)

தலைசிறை வாலுட லென்னத் தக்கவே
நிலைகுலா மறைகணின் மேனி லாவுவோன்
அலைகுலா யதில்வள ரமல னனபோ
திலையுனை யலதுவே றுளத்திற் கேய்வதே (௬௨)

உளத்தினுக் கமைவதென் றுற்றுப் போற்றினோர்
களத்துவெண் ணிலாவணி கனக மேனியான்
வளத்துநீள் கோயிலை விடுத்து மாருதி
விளக்குநீள் கோயிலை மேவிப் போற்றினார். (௬௩)

மேவிய வுயிர்க்குயி ராய மேலவன்
ஆவியைக் காணவல் லவனென் றல்லவோ
தீவினை யறநினைச் சேவிப் பார்கள்சஞ்
சீவிதந் தருள்சிரஞ் சீவி யேயெனா (௬௪)

அங்குநின் றம்புறம் போந்தம் மன்னவன்
வெங்கடு வீரரோ டேக மேவினார்
அங்குபண் டரிநகர்ச் சனங்கள் யாவரும்
பொங்கினர் கண்டனர் பொருமி விம்மினார் (௬௫)

விழியினீ ராறெனப் பெருகி மேலெலாம்
வழிவுற வெங்கடம் வறுமை நோய்தெறீஇ
அழிவதில் லாமலே யாவி காத்தவர்க்
கெழிலிவண் ணன்செய லென்னை யெய்துமோ. (௬௬)

என்றனர் பற்பல வியம்பிச் சூழ்ந்தனர்
துன்றினர் வரவிவர் தொழுது பண்டரிப்
பொன்றிரு நகர்வலம் போந்து மன்னன்பால்
சென்றனர் கண்ணனை யுளத்திற் சேர்த்தியே. (௬௭)

வேறு.

இன்ன வாறிவ ரேகுமுன் னேதயை
துன்னு பண்டரி நாதன்று ணுக்கெனப்
பன்னு பண்டிதர் பற்றறச் செய்திடா
தின்னு நானிங் கிருக்க வமையுமோ. (௬௮)

மோன மாயிவ ணெய்திடின் முன்னையோர்
ஆன வன்பர்கள் பாலனன் யாதுமில்
தீன ரக்ஷக னென்பெயர் சேருமோ
ஈன மெய்திடு மப்பெயர்க் கென்றரோ. (௬௯)

அம்ப ரம்பழு தாகித்த லையுறக்
கம்ப லக்கயி றுரக்க ழுத்தினில்
நம்பு கோவண நாலம லினமாய்
வெம்பு மோர்தடி கையில்வி ளங்குற. (௪௰)

அடிக ளிற்செருப் பாரவப் பண்டிதர்
நெடிது நீட்டிநி கழ்த்தினர் தந்ததாம்
படிகொள் பத்திர முங்கையிற் பாங்குற
வடிவி னீலம்வ ழாமலெ ழுந்தனன். (௪௧)

வெட்டி யாளென வேடங்கொண் டெய்துவோற்
கிட்டி நின்றுகி ளர்கம லாசனி
முட்டி லாவருண் மூர்த்தியி தென்னைநீ
விட்டு நாணம்வி ளங்குகின் றுயென்றாள். (௪௨)

தேவ தேவன்றி ருமக டன்னைநீ
ஆவ தொன்றறி யாயுன தன்பனைக்
காவ லன்மிகக் கண்டனை செய்வதற்
கேவ லாளர ழைத்தன ரேகுவார். (௪௩)

நம்ம தூரிலுள் ளார்நலி வைத்தெறு
செம்மை யோர்க்குறு தீங்குதெ றுப்பதில்
எம்மை யாயுறு நாணமெ னக்கிலை
தம்மை நம்வயிற் சார்த்தினர் சார்பிலே. (௪௪)

என்று சேர்பொரு ளெய்திய சாளிகை
நன்று தன்றலை மீதுற நண்ணவே
சென்று பேதரி மாநகர்ச் செம்மறன்
முன்றி லெய்தி வரவுமொ ழிந்தனன். (௪௫)

வாயில் காப்பவர் சொல்லவம் மன்னவன்
மேய வன்றனை மேவுக வென்னலும்
போய ழைக்கப்பு குந்துமுன் னேசலாம்
ஏய வேசெய்து நிற்கவென் னென்றனன். (௪௬)

பண்டி தர்தரு பத்திர மேயிது
கொண்டு வந்தது கோனுன்பொ ருள்களே
கண்டு கொள்கெனக் காவலன் கண்ணெதிர்
அண்டு·வோரினெ ழுத்தும றிந்தனன். (௫௭)

மேய நின்பெயர் யாதென வெவ்வராப்
பாய லன்விடோ பாநாக னென்றனன்
ஆய பத்திரத் தாகிய தென்னெனில்
ஏய பஞ்சம தில்விலை யேறவே. (௪௮)

தானி யங்களெ லாம்விலைக் குத்தந்து
மேனி றைந்தவி ராகனெல் லாம்பையு
ளேநி ரம்பவ டக்கியென் வெட்டியான்
பானி னக்கனுப் பப்பட்ட தாதலால். (௪௯

முழுதுங் கொண்டுர சீதிமு றைப்படி
யெழுதி யுய்க்கவெ னக்கென் றிருப்பதைப்
பழுதில் மன்னவ னோர்ந்துப டர்பொருட்
குழுவ னைத்துந்த ருகெனக் கூறினான். (௫௰)

வெட்டி யான்விளை வாகப்பொ ருட்பையைக்
கொட்டி யெண்ணிக்கொ ளுமென வைத்தலுங்
கிட்டி நின்றவ ரெண்ணிக்கி டைப்பது
முட்டி லாதுகொண் டாரர சன்முனே. (௫௧)

லக்கத் தைம்பத்து நாலாயி ரமெனத்
தொக்க தானவி ராகனெ லாந்தொகத்
தக்க தோவொரு பையெனத் தானெணுர்
மைக்க ரும்புயல் போல்பவன் மாயையால். (௫௨)

எண்ணி யெண்ணிக்கை யேசலிப் பெய்திட
நண்ணு றும்பொருள் யாவையு நல்கின
ஒண்ணி றப்பையைப் பொக்கிஷத் துய்க்கென
அண்ண லாணையி னுலமை வானபின். (௫௩)

கன்ன டன்கீழ்க்க ணக்கனெ ழுதிய
சொன்ம திப்பினிற் றூதனை யேவினேன்
நன்ன யத்துநீர் நல்குவ தோர்கிலேன்
என்ன நன்மையெ ழுதிய பின்னரும். (௫௪)

செல்ல வேண்டுந்தொ கைகள்செல் லாயின
புல்லு கென்றுர சீதும்பொ ருந்தவே
ஒல்லை திட்டினன் றந்துபல் லக்குடன்
பல்வ ளங்களுந் தந்தனன் பார்த்திபன். (௫௫)

வெட்டி யானுக்கும் வேண்டுவ தந்துநீ
கிட்டு மங்கள வேடமெ னக்கிளர்
மட்டி லீசனன் றென்று மகிழ்வுடன்
விட்ட பண்டிதர் வாழ்மனை மேவினான். (௫௬)

மன்னன் றந்தவ ரிசையெ லாமனை
துன்ன வுய்த்துர சீதுந்தொ ழுத்தகும்
பொன்னெ னத்தகு பொற்பினர் தம்வயின்
நன்ன ரங்கையி னல்கின னேகினான். (௫௭)

பண்ட ரிநின்று வந்தவப் பண்டிதர்
அண்டு வீரரோ டண்மினர் பேதரி
மண்ட வேந்தன றிந்தெதிர்வந்தனன்
கண்டு ளன்புக னிந்துத ழுவினான். (௫௮)

நீர னுப்பநி ரம்புபொ ருள்கொடு
சார வந்துத னந்தரு வெட்டியான்
நேரொ திர்ந்தில னேவுமை நேர்ந்தியான்
தீர நல்கும்ர சீதுட னென்றனன். (௫௯)

என்று பண்டித ரேயெனக் கின்பொருள்
துன்ற நீரொழு தும்பத்தி ரந்தனை
நன்று காண்கென நல்கினன் பண்டிதர்
அன்ற தாலமை வானத றிந்தனர். (௬0)

நானெழுதிய தோவிது நன்றுநன்
றூன காரிய மையவிவ் வையகம்
போன கங்கொள்பு ராதன பொய்யிலார்
ஞான நாயக வென்றுந வின்றனர். (௬௧)

பொன்னின் மாமகு டம்புனை யுந்தலை
தன்னி லேபழங் கந்தைத ரித்தனை
மின்னு செம்மணி மாலைமி ளிர்களம்
பன்னு கம்பளப் பாசந்த ரித்தனை (௬௨)

சங்கு சக்கரந் தாங்கிவி ளங்கிய
செங்கை யிற்றடி சேர்த்தினை தேசிகப்
பைங்க லிங்கமு டுத்தனை பற்றினை
மங்க ழுக்கும லிகோவ ணத்தையே (௬௩)

தேவர் தாழுந் திருவடி யாகிய
பூவி லேசரு மச்செருப் புப்புக
மேவி னய்வினை யேன்பொருட் டிற்றகாப்
பாவ மேவிய வார்த்தைப கர்ந்தனை. (௬௪)

நிலையில் காமநி ரம்படி யேனொரு
தலைக டுக்கத்த னப்பைசு மந்தனை
அலைகு லாவிய வாழியின் மேலோரால்
இலையி லேதுயி லேய்புரு டோத்தமா. (௬௫)

பற்ப நாபப சுந்துள வம்புனை
பொற்ப பத்தரை யென்றும்பு ரப்பவ
நிற்ப தாகிநி லாவியொர் பண்டரிக்
கற்பகக் கனி யேசுவைக் கற்கண்டே (௬௬)

எனப்பி தற்றின ரேங்கினர் கண்கணீர்
தினக்கு ரற்கம்ம நின்றுது ழாய்முகில்
வனப்பி னிற்கருத் துற்றும யங்கினர்
நினைப்பி னைக்கண்டு கொண்டநி ருபனே. (௬௭)

ஆதி யாவரு மாச்ச ரியங்கொடு
சாத ரூபந்த னைக்கொடு வந்தவன்
மாத வன்மது சூதன னேயெனத்
தீதி லாதுதெ ரிந்தில முன்னையே. (௬௮)

சாற்று மத்தொகை யாவுமொர் சாளிகை
ஏற்ற தோதலை தானவை யேற்குமோ
தேற்ற மேதெனத் தேர்கிலம் பண்டிதர்
ஆற்ற லானத வத்திங்ஙு னையதே. (௬௯)

என்று தேறியி றைஞ்சிப்பு கழ்ந்திட
நின்ற பண்டித ரோவென்னி மித்தமாய்
மன்ற லந்துள வோன்வ ரலாயதால்
நன்ற தன்றித்தொ ழிலென நாடினர். (௭௰)

வேந்த னேயெனக் காகவி திதொழில்
ஆந்த கைத்ததன் றுதலி னீவிடை
போந்த வெற்கரு ளென்றுபு கன்றிட
எந்தல் கேட்டங்கி யம்புகின் றனரோ. (௭௧)

கேளும் பண்டித ரேகிள ரும்மல
ராளி னுதனும் மாளென வந்தனன்
நீளு ஞானத்தி னிர்மல னென்றனைக்
கோளுங் கண்களிற் காணக்கொ டுத்திரோ. (௭௨)

ஆத லாலுமைப் போல்பவ ராருளர்
நீத லாதெந்தி றத்திடை நீருறல்
காத லேதொழில் கைக்கொண்டி ருமென
மேத கச்சொல்லி னன்மிக வேண்டினன் (௭௩)

வேண்டல் பண்டிதர் வேண்டில ராகியப்
பாண்டு ரங்கன் பதிக்கினி தெய்தினர்
ஆண்ட மாலைக்கண் டார்வமிக் கன்பினிற்
பூண்டு தாள்களைப் போற்றிப்பு கலுவார். (௭௪)

தேவ தேவதி ருமக ளுயக
பாவி யென்பொருட் டாகவொர் பார்த்திபன்
மேவ வைக்கண டைந்துன்வி ளங்குறு
சேவை தந்தனை சேவித்தி லேனென. (௭௫)

கண்க ணீருகப் பாதங்க ழுவினர்
மண்கொள் வாமன நின்னைம றக்கிலா
தெண்கொ ளும்மெனக் கேனெதிர் தோன்றிடாய்
தண்கொண் மேகவு ருக்கொடு தானென. (௭௬)

உற்ற பண்டித ருண்மைதெ ரிந்தவக்
கொற்ற வன்பண்ட ரிவந்து சோதினும்
பற்ற தாகப்ப ரமனைக் கண்களால்
மற்றுங் கண்டும கிழவ ருள்கென (௭௭)

வேண்டல் செய்யவி ளக்கஞ்சு டர்மிகத்
தூண்டல் செய்தெனத் தோமறு பண்டி தர்க்
காண்ட மாலின்ன ருளுருக் கோனெனக்
காண்டல் வேண்டுங் கருத்துவ ளர்ந்ததே. (௭௮)

காதல் விஞ்சின ராகிக்க மலக்கண்
மாத வன்றனை வாழ்த்தினர் பன்முறை
ஸ்ரீத ரன்முனர்ச் சென்றவு ருவுடன்
போதல் செய்தனன் மன்னனும் போற்றவே. (௭௯)

கண்டு பண்டிதர் கண்ணநி னதருள்
மண்டு கின்றதிவ் வண்ணம தோவெனப்
புண்டரீகப் பதங்களைப் போற்றலும்
தொண்டர் தம்மைத்த ழீஇத்தொழப் போயினன். (௮௰)

போன பின்பர சன்புகழ்த் தொண்டனை
ஞான தேசிக ராகந யந்தவர்
பான லம்பெறு பண்பில ளாய்ச்செலத்
தேன லம்புசெ ழுந்துள வோன்றொண்டர் (௮௧)

குடும்ப மும்வரக் கொண்டர சால்வரும்
இடும்பை யேதுமி லாதருள் செய்தவன்
நெடும்பொற் பாத நினைவு விடார் விண்ணைத்
தொடும்பொற் கோபுரப் பண்டரி துன்னினார் (௮௨)

இன்ன ராகிய பண்டிதர் சீரொலாம்
துன்னு பண்டரி யோர்தெரிந் தேதுதி
பன்ன நாம பஜனைசெய் துற்றனர்
மன்னி ராவும் பகலும்வ ழாமலே. (௮௨)

ஆக சரித்திரம் ௩௩க்கு செய்யுள் ௩௮௱௪௰௬.

தாமாஜிபண்டிதர் திருவடிகளே சரணம்.

முற்றிற்று-

# மிருத்யுஞ்சயபக்தர்சரித்திரம்

சாந்தப மணியென நாமஞ் சாற்றுற
வாய்ந்தவன் பேதரி நகர்க்கு மன்னனாய்
நேர்ந்துள வவிந்தனந் நகரி னீள்பகல்
சேர்ந்தர சாண்டுவாழ் தினத்தி லோர்தினம். (௧)

தன்மனை யாளொடு தனது மாளிகை
மன்னுமே லுபரிகை வதிந்து மான்மதம்
துன்னுசந் தனகந்த புட்ப முந்தொக
நன்னயச் சுகசல்லா பத்தி னண்ணினான். (௨)

மனையவ ளொடுமுதிர் வாழைத் தீங்கனி
தனையுரித் தினியசர்க் கரைக்கு ளேயதை
நனிமிகத் தோய்த்துண்டு நண்ணுந் தோல்களை
இனிதெதிர் சாளரத் தேயெ றிந்தனன். (௩)

எறிவதிற் கீழ்விழுந் தோலெ லாமொரு
வறியவன் கண்டெடுத் தொடுத்து வாய்ப்பெய்து
நறியதென் றுண்பதை நன்கு கண்டனன்
வெறிகம ழலங்கருழ் வேந்தன் றேவியே. (௪)

கண்டதைக் காவலன் றனக்குக் காட்டலும்
மண்டல வேந்தனிவ் வறிய னெப்படி
அண்டினன் காவல்சே ரகத்து ளேயெனக்
கொண்டகோ பத்தொடு கூவி னனரோ. (௫)

காவலர் தமைவரக் கண்டிக் கள்வனிங்
கேவர விடுத்தவர் யாரென் றெற்றினன்
ஆவயின் வறியனை யவர்கள் கைக்கொடு
நோவகை சாடினர் நொருக்க மற்றவன். (௬)

அடிகளைப் பொறுத்தன னகைக்க லாயதை
முடிகொள்கோன் கண்டனன் வியந்து முன்னுறத்

. . .

கடிதுதன் முன்வரக் கண்டு கூறுவான். (௭)

இவ்விடை யொருமுனைப் பிடித்தென் னேவலர்
நைவகை செய்திட நலிவு ற்றுநீ
எவ்வகை சிரித்தனை யியம்பு கென்னலும்
அவ்வர சன்றனக் கறியக் கூறுவான். (௮)

உரித்தெறி தோற்சுவை யுணவி னேயது
மரித்திடத் தக்கதோர் வருத்த முட்சுவை
தெரித்தினி திருக்குநீ சேர்வ தேதெனச்
சிரித்தனெ னெனப்பினுஞ் செப்பு கின்றனன். (௯)

நின்மனைப் புறம்புநா னேர வின்னது
துன்னிய துள்ளுறு முனக்கென் சூழுமோ
என்னலும் விரக்திமிக் கெய்தி யேந்தறுன்
பொன்மனை விடுத்தனன் புறம்பு போந்தனன். (௰)

வேறு.

அனைசோடு மனைவிமக்க ளானவெலாம் வெறுத்துவன மணுகி யோர்பால்
தனைசார விருந்துதெய்வந் தனைப்பஜிப்ப தெவ்வாறு ஜனனந் தீர்ந்து
கனைசேர்வ தெவ்வாறு கருத்தறியா வெனக்குவழி காட்டு மாசான்
உனைசார்வ தெவ்வாறென் றெண்ணியங்கே சிலகால முழலுங் காலை. (௰க)

பண்டரியி லாடியெகா தசித்தினத்தி லரிசேவை பண்ணற் காகத்
தொண்டர்சில ரவ்வனத்தின் வழியாக மிருதங்கந் தொனிக்கத் தாளம்
மண்டுறயாழ் வீணைபல வாசிக்க ஹரிநாமம் வழுத்தி யேத்திக்
கொண்டொருவர்க் கொருவர்தழிஇ வணங்கியன்பு பெரிதுறக் குழுமி வந்தார்

கருடனெடுங் கொடியோடு போதுவதைக் காவலன்முன் கண்டு சார்வோர்
அருகில்வந்துமுன்வீழ்ந்து பணிந்தெழுந்து சாதுசங்கத் தன்பு கூர்ந்து
மருவுமின்றுசுதினமிந்த வகைவருவார் தமைக்காண வாய்த்த தாலென்
றுருகுமனத் தொடுகூடி யவர்சேரும் பண்டரியூர்க் குவந்து வந்தான். (௰௩)

வந்துநிலாப் பாகைதனிற் றேய்ந்துபுண்ட விகர்தமையும் வணங்கிப் போற்றி
அந்தநெடுங் கேத்திரத்தை வலம்வந்து கோபால னமருங் கோயில்
முந்துநின்று சாதுஜனஞ் செயுநாம கீர்த்தனத்தை முயன்று கேட்டுப்
பந்தமறு வோர்தமையும் பணிந்துவரு மானந்தம் படிந்து சொல்வான். (௰௪)

பலதீர்த்தம் பலதெய்வங் களைக்கண்டேன் கேட்டேனிப் பாரி விந்த
நிலைகொளும்பண் டரிபோலெங் கணுமில்லை நிலாத்துண்ட நேர்ந்து மூழ்கின்;
மலையுமபி மானம்விட்டு மகிழ்விறெருரு வருக்கொருவர் வணங்கச் செய்யும்
உலைவுறுதற் புத்தியுள்ளோ ரயினும்பண் டரிசேரி னுசித ருக்கும். (௰௫)

இவ்விதநன் மைமையச்சேர்ந்த தீர்த்ததல மகிமையையா ரிசைக்க லாகும்
செவ்விதெனப் புளகரும்பிக் கருடதம்பத் தருகில்வந்து சென்னி தாழ்த்தான்
அவ்வயிற்கூ டியசாதுக் களைவணங்கித் தழுவியபின் பழகார்ந் துள்ளே
திவ்வியரூ பத்துடனே செங்கலின்மே னிலவுசெழுஞ் சோதி தன்னை. (௰௬)

கண்களிகூர்ந் துறநோக்கித் தழுவியிரு தாட்கமலங் களிற்கீழ் வீழ்ந்து
மண்கொளும்வா மனபதித பாவனவுத் தமபுருட வரகோ பால
பண்கொள்சுவை யாமிருடி கேசபரந் தாமபாண் டுரங்க பார்க்கத்
தண்கொளரு ளுருவவுன திசைகேட்டு வந்துபைம்பொற் சரணந் தாழ்ந்தேன்.

சக்கபக்கை யாவுனது வடிவென்மனந் தனில்விளங்கித் தழைக்கச் செய்வோர்
பக்கல்கிடை யாதுழல்கின் றேனுணர்த்தும் போதகரைப் பார்ப்ப தாகித்
தக்கபடி யெனதுமனோ ரதங்கூட நீயேதண் ணருள்செய் தாள்வாய்
மிக்கதிது செயுமளவும் விடேன்கோயில் வாயிலென வேண்டி வீழ்ந்தான். ( )

வீழ்ந்துஜல பானமுதல் வேண்டாதங் கேகிடக்க விரும்பி வேதத்
தாழ்ந்தபொரு ளாம்விமலன் மூன்றுநா ளிரவிலவன் கனவில் வந்து
சூழ்ந்தகலி யாணபுரத் துறைசகஜா னந்தசுவா மிகள்பாற் சென்று
வாழ்ந்திடநல் லுபதேசம் பெறுகெனவி வேகசிந்து வழங்கிப் போனான். (௰௯)

போனவுடன் கண்விழித்து வேந்தனரு கேயுறுபுத் தகத்தை நோக்கி
ஞானவிவே கசிந்திதுவோ வெனவியந்து பாண்டுரங்க நாத னென்
ஈனதயா ளன்கருணை யாலென்னைப் பாலனஞ்செய் தானென் றெண்ணித்
தானதையே காந்ததலந் தனிலிருந்து படித்துமன னஞ்செய் காலை (உ௰)

கனவுதனை நினைந்துகலி யாணபுர மேகலந்து கமலக் கண்ணன்
அனகவடி களைவணங்கி விடைகொண்டு குருவிடஞ்சேர்ந் தவரைத் தேடப்
புனிதரிலா திருந்ததினாற் பண்டரிக்கு மீண்டுவந்து பொருந்து நாளில்
இனியகுரு கார்த்திகையே காதசியிற் பண்டரிவந் தெய்தி னரோ. (உக)

எய்தியதே சிகர்தமைக்கண் டுறுகனவி னியலோத வினிது கேட்டுப்
பொய்தவிருங் குருமகிழ்ந்து வேந்தனுக்கங் குபதேசம் பொருந்த நல்கி
மெய்தரும்பே ரதுமிருத்தி யுஞ் சயனென் றேவிளங்க விளம்பப் பெற்றோர்
மைதவிர்நா ரணபுரத்தை யணுகியங்கே கேட்டதனை மனனஞ் செய்து. (உஉ)

தெளிந்துசா க்ஷாத்கார ஞ் சேர்ந்துவிஞ்ஞா னத்திநியிற் றிகழு நாளில்
மிளிர்ந்தவவ்வூ ரினிலொருஜங் கமர்டவரா யனெனநலம் விளங்கு பேரார்
ஒளிர்ந்தமிருத் தியுஞ்சயனைக் கண்டிரா னடைந்துபதே சத்தை யுற்றோர்
குளிர்ந்துறுநாட் சங்கமரிற் சிரேட்டனொரு சமுச்சியெனுநாமங் கொண்டோன்

தன்சாதி யானபவ ராயனொரு துலுக்கனுப தேசஞ் சார்ந்தான்
என்சாலுஞ் செருப்புபுதி தென்றாலுந் தலையின்மிசை யேற்ற லாமோ
தொன்சாலு மிவனடக்கை கூடாதென் றிகழ்வதனைக் குறித்துத் தீர்த்த
ரின்சார்பு வந்து சொல்லச் சீடனுளந் திடமாக வியம்பு கின்றார். (௨௪)

மதபேதி சொல்வதனை மனத்தெண்ணா தென்வார்த்தை வழியே நின்று
நிதம்ராம பஜனைசெய்தி யெனவுறுதி நிலைகூறி நியதி செய்தார்
சிதமான பூதியணி ஜங்கமரா ஜன்போர்கா சிபதி யென்போன்
சதநூறு ஜங்கமரைக் கூடவைத்துத் தானுண்பான் சால நாளும். (௨௫)

வேறு

ஒருதி னத்தி லெல் லோரு முண்பதாய்
மருவு பந்தியி லசனம் வண்கறி
பெருக வேபரி மாற லானபின்
நிருப னன்னவர்க் குரைநி கழ்த்துவான். (௨௬)

நீவிர் யாவரு நினையுந் தேவுக்குத்
தாவில் பூசனை சமையு மென்னலும்
ஓவி றேவனுக் குடன ருத்துவான்
மேவு தங்களம் விரவு பூட்டையே. (௨௭)

திறந்து நோக்கினர் தேவைக் கண்டிலர்
இறந்த தெங்ஙனே யெனம யங்கினார்
மறந்த பூணூல் வழுவ வீழ்த்தியோர்
சிறந்த வேதியன் றேடு மாறுபோல் (௨௮)

மயங்கி நாணுடன் வருந்தி யாவரும்
தயங்கி லிங்கமில் லாத தன்மையால்
தியங்கி யாம்பிராய்ச் சித்தஞ் செய்வதாய்
முயங்க லாயதே முழுது மின்றெனா. (௨௯)

அனைவ ருந்திகைத் தழுது செய்திடா
ரினைதல் கண்டுகோ னென்னை யென்னயாம்
புனையி லிங்கமெங் ககன்று போயதோ
நினைகி லோம்வகை யெனநி கழ்த்தினார். (௩௰)

அதுவி னுயகா சிபதி யையமீர்
இதுவி ராவுதற் கேகி யாவதே
சதுரர் தூஷணை தனில்வி ராயதீ
தெதுத ஞலுமன் றெனநி கழ்த்தினன். (௩௧)

துலுக்கன் பாற்பவ ராயன் றுன்னினன்
கலக்க னன்றதன் றெனக்க ருத்துளே
குலுக்க நீள்வசை கூறி னேன்முனித்
தலக்க ணென்னவே சமுச்சி கூறினன். (௩௨)

அவ்வி தத்தினீ றறைந்து ளீஒனில்
செவ்வி பெற்றவத் தேசி கோத்தமர்
ஒவ்வி டத்திலுற் றுரைத்துக் காண்மெனத்
தெவ்வி னைத்தெறும் வேந்தன் செப்பினன். (௩௩)

நலதே னப்பவ ராயன் றேசிகர்
குலவி டத்தினிற் கூடி யாவரும்
நிலனு றப்படிந் தெழுந்து நின்றதே
விலக லுற்றதை விளம்பி னாரரோ. (௩௪)

ஆய்ந்த தேசிக ரதனைக் கேட்டுமே
தாந்த மொன்றுசித் தாந்த மொன்றென
வாய்ந்த நாயிரண் டிம்ம டத்துளே
ஏய்ந்த லிங்கமேல் லாங்கொண் டெய்தின (௩௫)

களவி ளுலெனக் கருது கின்றனென்
உளத ரச்செய்வே னெனவு ரைத்தவண்
அளவு மாறுகூப் பிடவொன் றங்குவந்
திளகி நிற்கவீ தெனவி சைத்தனர், (௩௬)

அறையு முன்னறை யயுத லிங்கநாய்
தறையிற் கான்றிடத் தனிமற் றொன்றுமம்
முறையிற் கான்றது முன்னர்த் தந்தமக்
கிறையி னைத்தெரி கிலரி தென்னென்றார். (௩௭)

சாமி நீவிரொரு சாமி தம்மையாய்ந்
தீமி னென்றுதோத் திரமி யம்பலும்
பூமி நாயக னடியர் புந்திசேர்
தோமில் கண்ணிறைற் றுலங்க வாய்ந்தனர். (௩௮)

ஆய வன்னவை யவா வர்க்குற
ஏய நல்லரு ளினிது செய்தனர்
மேய வவ்வவர் விமல தேசிகர்
தூய பொன்னடி தொழுது வாழ்த்தினார். (௩௯)

ஞான சாகர னென்னு நாமமிட்
டான பின்பவ ரடிவ ணங்கியே
கோன கஞ்செலீஇக் குறியைப் பூசித்துப்
போன கம்புசித் துறல்பொ ருந்தினார். (௪௰)

ஆக கதை ௩௰௩க்கு செய்யுள் ௲௮௱௮௰௬.

ம்ருத்யுஞ்சயர் திருவடிகளே சரணம்.

முற்றிற்று.

# பானுதாசர் சரித்திரம்

புகழும் பைடண புரத்துளோர் சூரிய பூசை
திகழ வேசெயும் வேதியர் திலகர்சுஞ் ஞானர்
இகழ்வி லன்னவர்க் கொருவர்சே யெனப்பிறந் தெவர்க்கும்
தகவு கூர்தர வளர்ந்தனர் தாய்மகிழ் தழைக்க (௧)

வளர்ந்து கல்வியிற் பயின்றபின் வேதமும் வாய்ப்பத்
தெளிந்து தந்தையே கூறுநா ளொருதினஞ் சேய்மேற்
கிளர்ந்த தாயது சினங்கல்வி கிளத்துறுந் திறத்தில்
தளர்ந்து மற்றதிற் சிறுவரா னவர்புறஞ் சார்ந்தார் (௨)

எங்குச் சென்றாளிப் போமெனப் பயத்துட னேகித்
தங்கு மூர்க்கரு கேயொரு கானிடைச் சார்ந்தார்
அங்கு மண்ணிடைப் புதைந்துள வலரிநா ரணன்றன்
பொங்கு கோயிலைக் கண்டத னுள்ளிடைப் புகுந்தார். (௩)

புகுந்து மூர்த்தியைத் தொழுதன ருள்ளன்பு பொலிய
உகந்து சூரிய நாரணன் றோன்றியு னன்பு
தகுந்த தென்றுகொண் டாடின னபயமுந் தந்து
முகுந்த னைத்தியா னித்துநீ முயல்கென மொழிந்தான் (௪)

பாலை வட்டிலிற் கொணர்ந்தந்தப் பாலகற் கருத்திக்
கோல மைந்தனே யுனக்கிடை யூறுகள் குறுகில்
ஏலு மற்றதை யான்வந்து நீக்குவே னென்று
சால வோதினன் மறைந்தனன் பின்னரத் தனையர் (௫)

தாயுந் தந்தையு மூரிடைத் தேடினர் தளர்ந்தே
ஏயுந் துன்பத்தோ டேழுநாள் வரையுங்கா ணமல்
ஓயு நாளந்தப் புதல்வரக் கோயிலு ணின்று
மேயி னார்வெளி வரவொரு வேதியன் கண்டான். (௬)

கண்ட வேதியன் புதல்வரைக் கூப்பிடக் கடுகிச்
சண்டன் கோயிலுட் புகுந்தனர் மறையவன் சார்ந்து
விண்ட தாய்தந்தைக் குரைத்தனன் விரைந்துசில் லோரோ
டண்டி னாரந்த விருண்மிகு கோயிலி னருகே. (௭)

இருள கன்றிடத் தீவர்த்தி கொண்டகத் தேகி
மருவி னோர்களெல் லோரும்போய்ப் பார்த்திட மைந்தர்
பரிதி நாரணன் றாளிடைத் தலைவைத்துப் படுத்து
வெருவ லின்றிநித் திரைசெயக் கண்டனர் வியந்தார். (௮)

அனையுந் தந்தையும் புதல்வரை யெடுத்துமார் பணைத்துத்
தனைய நீயிங்குத் தனிவந்து கங்குலிற் றங்க
எனைய தெய்திய தெழுபக லுணவின்றி யிருந்தாய்
உனையிங் கேவர்போற் றினரெனக் கேட்டன ருவந்து (௯)

தினமு மிங்கொரு தெய்வவே தியன்வந்து நீம்பால்
மனமு வந்துதந் தேகுகின் ஞனதை மாந்திக்
கனமி கும்பசி யின்றியுய்ந் தனனெனக் கழற
ஜனக ராதியோ ரதிசயித் துன்னினர் தாமே (௰)

மைந்த னன்மையைக் கண்டிந்தப் பானுவே மகிழ்ந்து
தந்த னன்பரு கற்குப்பா லென்றுங்கிச் சயித்து
வந்த நன்மையாற் பானுதா செனப்பெயர் வகுத்தார்
அந்த மைந்தனை யழைத்துக்கொண் டகம்வந்து சேர்ந்தார். (௰௧)

சேர்ந்த தாய்தந்தை தினகர னேயிந்தச் சேயை
ஈந்த னனென்று பானுவை யேத்தின ரிருக்க
வாய்ந்த தந்தையிம் மைந்தர்க்கு வேதநூல் வகுக்கில்
ஆய்ந்தி டாதுமுன் போற்செயிற் செய்வதே தாமே. (௰௨)

விதியி னுவதே யாமெனப் பெண்விசா ரித்து
வதுவை செய்துவைத் தனர்பின்பம் மைந்தர்பொன் மணாளன்
துதியில் விஞ்சின ராயுறத் தந்தைதாய் துளவோன்
பதிய டைந்தன ரிவரொரு தொழிலிலும் பயிலார். (௰௩)

மிடியி னுற்றுங்கி லனமில ராகியும் விமலன்
அடிம றந்திலர் பஜனைசெய் திருந்தன ராக
நெடித றிந்தபந் துக்கள்வந் தவரொடு நேர்ந்து
முடிவி லின்னலைக் குறித்திது செய்கென மொழிவார். (௰௪)

உமது தந்தைதாய் குடும்பர க்ஷணைமுன்செய் துற்றூர்
அமைய நீரது செய்கிலீ ராயரி பஜனை
சமைதி னோற்குடும் பச்சுமை தாங்குவார் யாவர்
எமதுரைப்படி கேண்மென விசைவுற வியம்பி. (௰௫)

சதவி ராகன்யாந் தருதுமற் றதுகொண்டு தானே
விதவி தங்களாய்க் கொண்டுவிற் றதில்வரு விபவம்
நிதமு முண்பதற் காகநீர் கொள்கென நேர்ந்தார்
அதனை வேண்டுபோ தீகெனப் பின்னரு மறைந்தார். (௰௬

தங்க ளாவணத் தருகுறக் கடைவைக்கச் சமைத்து
மங்க ளம்பெறு பானுதா சருக்குடை மாறும்
சிங்க வில்லதோர் பாஷையைக் கற்பித்துச் சீலைக்
கங்கு விற்பதோர் விலைகளின் வகையறி வித்து. (௰௭)

வாணி பஞ்செய்து வருவதின் மெய்சொலின் வாராப்
பேணு மூதியம் பொய்சொலின் வரும்பெரி தென்னத்
தாணு வாய்முதற் றருமவர் தங்களை நோக்கிக்
கோணி லார்தலை போகினும் பொய்சொலக் குறியேன். (௰௮)

மெய்யி னல்வரு மூதிய மிகச்சிறி தேனும்
உய்வதற்கது போதுமென் றுரைத்தன ருற்றோர்
சையெ னச்சிரித் திவன்பிச்சை யேற்பதே சமைவான்
மையி னஞ்சொலைக் கேட்குறு ளிவனுக்கென் வருத்தல். (௰௯)

என்று சொல்லும்போ தொருவன்வா ணிபத்திற மிவன்றான்
நன்ற றிந்திடு மைமையொப்பா குவனென நவிலத்
துன்றி நேரொலாஞ் சரியென்று தொழில்செய் வைத்தார்
அன்று தொட்டிவர் வாணிபஞ் செய்திட வமைந்தார். (உ௦)

வாங்கு வோர்வரி லின்னதே கிரயமற் றதற்குப்
பாங்க தாகிய லாபமின் னதுசரிப் பட்டால்
நீங்கி லாதுகொள் ளுங்களன் றேலயல் சேர
நீங்கு வீரென்று ராமநா மஞ்சொலி நிறைவார். (உக)

கொள்ளு வோரிவர் பொய்சொலா ரெனநனி குறித்து
விள்ளு மவ்விலை தந்துகொள் வாரது வினவி
எள்ளி லூருளோர் யாவருங் கொள்வதா யியன்றார்
உள்ள வாறிவர் வாணிபத் தூதிய மோங்க. (உஉ)

மாடு றுங்கடை களிற்செயும் வாணிப மின்றி
வாடு வாரழுக் காறுகொண் டுளதுசொல் வாமேல்
நாடு றும்மிவன் றனைநம்பல் போனமை நம்பார்
நீடு நாண்முன்பு பொய்சொல்ல லாலென நினைவார். (உங)

வேங்கை சாந்தத்தை மேவினுங் கொல்வதற் கென்பார்
ஓங்கு லோபியு தாசின முறிற்பொருட் கென்பார்
வீங்கு சாரன்யாத் திரைசெய மேவுவா னாயின்
ஆங்கு மேபர தாரத்தை யடைவதற் கென்பார். (உச)

என்ன வாயதா லிவனில்வந் தெய்திய தின்னல்
நன்ன ரிங்கிவன் றனக்குப காரஞ்செய் நமக்கு
மன்ன லாயது பெருங்கடன் செய்வதென் மாற்ற
இன்ன காலையி லென்றெதிர் கோயில்போ யிருந்தார். (உரு)

பானு தாசரோ கடைவைத்துப் பகர்ந்தன ரிருக்கல்
ஆன காலையி லந்தவூர்க் கணுகரி தாசர்
ஞான நாமசங் கீர்த்தன நடத்துகின் றாரொன்
றேந வின்றிடக் கேட்டனர் போவதற் கிசைந்தார். (உசு)

கோயில் கூடிய கூட்டத்துள் ளார்களைக் குறித்து
மேய வின்றெகா தசியரி கீர்த்தனம் வினவப்
போயிங் கியான்வரு மளவுமென் கடைதனைப் போற்றி
நீயி ரோதரல் வேண்டுமென் றிரந்தனர் நேர்ந்து. (உஎ)

உனக்கு யாங்கடை வைத்துத வினமதை யலது
கனத்த வுன்கடை காக்கவு மாள்களோ யாங்கள்
மனக்கு வந்தது சொல்லிநீ போதரின் மடிகள்
இனத்தை யாங்கள்காத் துறுவதில் லெனமறுத் திசைத்தார். (உஅ)

மடிகள் போதரில் யாங்கள்பாத் தியப்பட மாட்டோம்
திடம தாயென வயற்கடைக் காரர்கள் செப்பப்
படங்கள் போயிலெ னிருக்கிலெ னென்றுபாண் டரங்கன்
மடமலர்ப்பத நினைத்தனர் வழுத்தினர் போனார். (உகூ)

போன பானுதா சங்கரி கதைகளைப் புகல
ஞான மிக்கனர் கேட்டனர் நயந்தினி திருக்கல்
ஆனகாலேயி லயற்கடைக் காரர்க ளவர்தம்
பான லந்தரும் குதிரையின் றளையறப் பண்ணி. (௬௰)

ஓட்டி விட்டுள புடவைக ளனைத்துமோர் மடுவின்
மாட்ட மிழ்த்தினர் மருந்தின்றிப் பிணியகல் வகையில்
வாட்ட மிக்குள நமக்கிந்தச் சமயம்வாய்த் ததென்று
கூட்ட மாகியங் கிருந்தவர் பின்னரும் குறித்தார். (௬௧)

வந்து பானுதா சென்பவன் மடிமுத னோக்கி
நொந்து போனபின் மடுவிடை நூக்கிய வெல்லாம்
சொந்த மாகக்கொள் வோமென்று தூஷித்தங் கிருந்தார்
அந்த வேளையிற் பாண்டுரங் கன்செய்த தறைவாம். (௬௨)

என்னி டத்தன்பு மிக்கவன் பானுதா சென்போன்
தன்னு டைப்பரி தனையவிழ்த் தேகவிட் டுத்தாம்
மன்னு தூசுக ளனத்தையு மடுவில்வீழ்த் தினரீ
தென்ன நீதியென் றெழுந்தனன் பண்டரிக் கிறைவன். (௬௩)

மேய்ந்து கொண்டுறு பரியின்பால் விரைந்துவந் ததன்றன்
வாய்ந்த நன்களத் திடைத்தன்பொன் னம்பர மாட்டித்
தோய்ந்து றக்கொடு பானுதா சுறுவழி தோன்றி
ஆய்ந்தி ருந்தன னவர்கடூ ஷிப்பதை யறிந்து. (௬௪)

முனிவு கொண்டவர்க் குளமடி மூட்டையும் பொருளும்
இனிய வாசியுங் கொள்ளைபோ கக்குறித் திடலும்
நனிநெ ருங்கின கள்ளர்வந் தவையெலா நாடித்
தனித னிக்கொடு போயின ரவர்களைச் சாடி. (௬௫)

ஆவ ணத்தின ரனைவரும் கூடின ரலறிக்
கூவெ னக்கத்திக் கொண்டுநாம் பானுதா சனுக்குத்
தாவி ழைத்ததி னுடனமக் கேகெடல் சார்ந்த
தோவெ னச்சிலர் சொல்லுவர் வருந்தின ருளைவார். (௬௬)

நாஞ்செ யுங்கரு மத்துக்குத் தக்கதாய் நமக்குத்
தோஞ்செ யும்புத்தி தோன்றிய தெனச்சிலர் சொல்வார்
வாஞ்சை யற்றரி தாசனுய் வாழ்பவன் றனக்கி
யாஞ்செய் நஷ்டத்துக் கெதிர்நஷ்ட மியைந்தது மன்றி. (௬௭)

இலாப மாயுதை யடிகள்பட் டனமென்பர் சில்லோர்
விலாவ றக்கத்திக் கூவுத லூரின்மே வுற்றோர்
எலாருங் கேட்டில ரீதென்னை யெனச்சொல்வார் சிலர
யலாருங் கேட்கில ராகவே யியற்றினன் விமலன் (௬௮)

இன்ன ராயின ரிங்குறப் பானுதா சென்போர்
அன்ன ராத்திரி நாழிகை யிருபத்தா றளவும்
சொன்ன மாலரி கதைகளைக் கேட்டுச்சூ ழார்த்தி
நன்னராய்ப்பிர சாதமும் பெற்றனர் நயந்து. (௬௯)

அரிதன் குருசனை வணங்கிக்கொண் டகத்துக்கு மேவ
வருமம் மார்க்கத்தி லொருமறை யவனொரு வாசி
கரனி லேபிடித் துக்கொண்டு நிற்பதைக் கண்டார்
அருகி னிற்சென்றக் குதிரையைத் தமதென வறிந்தார். (௪௰)

உடன்பி டித்திருந் தவன்மறைந் தனையுநன் கோர்ந்திவ்
விடனி லேநம தயத்தைக்கொண் டுற்றவ னெவனோ
திடனி லோர்கிலே மெனப்பரி தனைக்கொண்டு சேர
மடனு ளோர்கண்டு மருங்குசூழ்ந் தழுதனர் வருந்தி (௪௧)

பதறு மன்னவர் தமைக்கண்டு பானுதா சென்னே
கதறு கின்றனிர் கழறுமி னெனவவர் களுந்தாம்
சிதறு செய்கையுங் கள்வரா லடிபட்டுத் தேகம்
உதறு செய்கையும் யாவையும் வழுவுறு துரைத்தார். (௪௨)

என்ன லுந்தழ லிடுமெழு காயரி தாசர்
உன்னி யைக்கொண்டங் குறைந்தவன் பார்த்தசா ரதியே
தன்னை யல்லது வேறல னொன்றுநிச் சயித்துப்
பொன்னி னுயக னிழிதொழில் செய்வதென் பொருட்டோ. (௪௩)

அப்ப டிக்கவ னுகையா னித்தொழி லயர்தல்
செப்ப மோவென வனுதபித் தவர்களைச் செவ்வே
ஒப்ப நோக்கிநும் பொருணஷ்ட முளவத னுலே
வெப்பு றுந்துய ரடையன்மி னெனத்திடம் விளம்பி. (௪௪)

மடுவில் வீழ்த்திய தமதுகோ சிகங்களை வாரிக்
கொடுவ ரச்செய்து பங்கிட்டங் கவர்க்கெலாங் கொடுத்து
வடுவி றம்பொரு ளனைத்தையு மவ்வகை வழங்கி
விடுதல் செய்தனர் பரியையு மவர்கொள விரும்பி. (௪௫)

இருவ கைப்பற்று மில்லவ ராய்மனைக் கேகித்
திருவி னுயகன் பஜனையிற் சிறந்தன ரிருந்தார்
மருவு மன்னவர்க் கிரங்கினர் தருபொருள் வாங்கிப்
பொருவ ரக்குடும் பந்தனைத் தாங்குதல் புரிவார். (௪௬)

நண்டு தேண்மதி நண்ணுமே காதசி நாளில்
மண்டு வீணையுந் தாளமு மண்கொண்மத் தளமும்
கொண்டு கோஷிக்க நாமசங் கீர்த்தனங் குறித்துப்
பண்ட ரிக்குவந் தாடுதல் பாடுதல் பயில்வார். (௪௭)

பாண்டு ரங்கனைத் தரிசித்தா னந்தபாஷ் பந்தம்
நீண்ட கண்களில் வரவணங் கித்தழீஇ நின்று
வேண்டு தோத்திரஞ் செய்வர்தம் மனைமக்கள் விரவ
ஆண்டு நோக்கினர் யாவரு மவர்தமைப் புகழ்வார். (௪௮)

வேறு.

பண்டரியெ னும்புரியில் வாழுமொரு பார்ப்பான்
மண்டுபொருள் வேண்டியம னத்தினர்பு றப்பட்
டண்டுபல தேசமும டைந்தனர்செ லும்போ
தேண்டிசையு மெய்ச்சுமொரொ ழிற்பதியெ திர்ந்தார். (௪௯)

ஆனைபதி யின்பெயா றைந்திடுவர் வித்தி
யாநகர மென்றதனி னுட்புகுத லாகிக்
கோணதக வாசலிடை யிற்குறுகி நின்று
தானடைத லைப்பதித னக்கறிய வைத்தார். (ருய)

வாசலுறு வோரரச னுக்கறிய வைத்து
மாசிலிவ ளைக்கொடுசொன் மன்னனிடை யுய்த்தார்
காசிலிவ ளைத்தனெதிர் கண்டவுடன் மன்னன்
நேசமிகு பூசனைபு ரிந்தனனி ரம்ப (ருக)

எங்கினிரு ருந்தடைதிர் நீர்விழைவ தேது
பொங்கருள்கொ டென்னிடைபு கன்றருளு மென்னப்
பங்கமில்பி ராமணரோர் பண்டரியில் வாழ்வேன்
இங்குமது தாரகுண மேவினவி வந்தேன் (ருஉ)

என்னவர சன்வினவி யின்பமிக லாகி
மன்னுமறை யோர்தமைவ ணங்கிமுக நோக்கி
நன்னரல ராடியினி நான்பரவு காளி
தன்னிடம்வி ராவுவனீர் சாருமவ ணென்றான். (ருங)

நல்லதென வேயரச னேடுடன டந்தான்
வல்லவொரு காளியுறை கோயிலைய ணைந்து
பல்லமலர் வர்க்கமொடு பற்பல்பொரு ளுங்கொண்
டெல்லையிலி யம்பலமு ழங்கவெழி லாக. (ருச)

செய்யுமுப சாரமுழு துஞ்செய்துசி றப்பா
யையைதனை வந்தனைபு ரிந்தனைவ ருக்கும்
துய்யபிர சாதமது தந்துமகிழ் தோன்றல்
மையறுமொ ராசனம திற்றிகழ மன்னி (ருசா)

பண்டரிபு ரத்துமறை யோனைநனி பார்த்தியான்
அண்டுமொரு தேவிநிக ரானதெய்வ தத்தைக்
கண்டதிலை கேட்டதிலை காசினியி லெங்கும்
உண்டெனவு ரைப்பதுள தோவெனவு ரைத்தான் (ருசா)

வெள்ளியையு ருக்கிமெழு கிச்சுடர்வி ரிக்கும்
பள்ளிநிகர் பாழிவிரி பார்மிசையி லுண்டோ
விள்ளுமும தூரிடைவி ராவியுறு தெய்வம்
எள்ளுதவி லிவ்வளவு பீடெழிலொ டுண்டோ (ருஎ)

தீனமறை யோர்கள்வழி பாடுசெய நின்ற
தானகட வுட்கணிக ளேதுடைக ளேது
ஞானமறை யீருமது நல்வினையி னாலே
மானமிகு தேவிதனை வந்துதரி சித்தீர் (ருஅ)

நன்றுபணி வீரொனந ராதிபனு ரைக்க
ஒன்றுமறை யோரதுவி னவலுமு டன்றூர்
என்றுமுள பண்டரியு ளோனெழிலை நோக்கா
தென்னவமோர் காளிசெழி லேபெரிய தென்றாய் (ருகூ)

வெள்ளியத னுண்மெழுகி மேவுமிது வென்றுய்
ஒள்ளியபொ னலினிது னுற்றிமணி யீட்டம்
அள்ளிமிசை யப்பியுள னண்டர்புகள் தச்சன்
எள்ளிலெமை தூரையினி நீயெதிர்க வென்றூர். (௬௰)

வேறு.

அங்குறு மரங்க ளெல்லா மைந்தரு வாகி நிற்கும்
பொங்குறு பரற்க ளெல்லாம் பொலிசிந்தா மணிக ளாகும்
தங்குறு பசுக்கள் காம தேனுவாய்த் தழைத்து லாவும்
எங்குறுஞ் செடிக ளெல்லாந் துளசியா யியல்வ தாகும் (௬௧)

சாதுசற் சனர்க ளான மாலரி தாசர் கூடி
மோதுமத் தளதா ளங்கண் முதலவாத் தியமுழங்க
மீதுயர் பன்னகாரிக் கொடிமின்னி விளங்க வெங்கும்
ஓதுவர் நாமசங்கீர்த் தனங்களை யொழிவி லாதே (௬௨)

சந்திர பாகை யென்று தவழ்வதோர் தெய்வ யாறு
வந்ததைத் தரிசிப் போர்கண் முத்தராய் மருவு வார்கள்
விந்தைசேர் விமலன் கோயிற் கருடகம் பத்தின் மாடு
சுந்தர வரம்பை மாதர் தொக்கினி தாடு வார்கள் (௬௩)

வாசலிற் கானம் பாடி வதிவர்கந் தருவர் மிக்க
தேசுடைத் தேவ தேவன் றீனத யாளன் செவ்வே
காசினி முழுதுங் கூடிக் கலந்தவன் பாலின் வேலை
மாசுணச் சயனன் பூமேல் வளர்திரு மகட்குக் கேள்வன் (௬௪)

புண்டலீ கருக்குண் டான பொருவறு ஞான பக்தி
கண்டுபண் டரியிற் செங்கண் மீதுநின் றிடையிற் கைகள்
அண்டுற வைத்துத் தாசர்க் காமிங்க் கண்ச ளெல்லாம்
விண்டிடத் தானே தீர்த்து விளங்குவன் வேண்ட னல்கி (௬௫)

அப்படிக் கமைந்த திவ்ய மங்கள மூர்த்தி யான
ஒப்பறு வடிவை நோக்கி முடிவுறு துலக மீன்ற
பொற்புறு திருவு நாணம் பொருந்துகின் றுளோர் கோடி
வெப்புறு சுடரின் சோதி விமலன்மேன் முடிக்கு வேள்கும் (௬௬)

இருபுய மலேகண் மீதே யெழுந்திரு சுடர்க டம்மிற்
பொருதனே ராகச் சோதி மகரகுண் டலங்கள் பொற்ப
பருமணி வெயில்பொ ருமற் பதுமைபைந் துளவமாலைத்
தருநிழ லமர்ந்து வாழ மறுவங்குத் தழைத்து மேவ (௬௭)

மேருவைச் சூழ்ந்த சேடன் றலைகளா யிரத்து மேவி
ஏருறு மணிகண் மின்னி யிலங்குறு சோதிபோல
நேரிலுறுட் கேயூரத்தி னிறைந்துசெம் மணிகண் மின்னச்
சீருறு நிலவு பானு வெனவளை திகிரி சேர (௬௮)

பொன்னுடைச் சோதியெங்கும் பொலிதர மருங்கிற் சாத்தி
மின்னுபல் கலன்க ளோடு விளங்குதே ஜோம யத்தின்
மன்னிய மூர்த்தி தன்னைச் சேவிக்க மகவா னுதி
பன்னுமுப் பத்துமூன்று கோடிபண் ணவர்கள் வந்து (௬௯)

சமயம்பார்த் திருக்கின றாச சாமள மூரத்தி நாமம
அமைவுறப் பகலு மெல்லு மிடைவிடா தமர்ந்தே காந்தத்
துமையவள் கொழுந னுன்னிப் பழித்துக்கொண் டிருகின் றான்போற்
கமலநான் முகனும் வேதங் களுமந்தக் கமலக் கண்ணன். (௭௰)

குருமணிச் சொரூப ரூப குணவிபூ திகளை நாளும்
வருணித்து முடிவு றாது மருவுகின் றார்சி ரங்கள்
ஒருசகத் திரங்கொள் சேட னுகந்தவை யுரைத்துத் தாலம்
இருபிள வாகி நாணி யென்செய்வ தெனநிற் கின்றான். (௭௧)

இன்னபாண் டிரங்கன் போலோர் தெய்வமு மெழில்கொள் சோதி
துன்னுபண் டரியைப் போலோர் நகரமு நிலாத்துண் டத்தின்
மன்னுதீர்த் தமுமீ ரேழு புவனத்து மில்லை மன்னு
நின்னதா ராதனைக்கு நேர்ந்துள சக்தி தானும். (௭௨)

பண்டரி புரத்திற் கோயிற் பணிவிடை செய்கின் றானீ
கண்டறி யாமை யாலிக் காளியைப் புகழ்ந்து சொன்னாய்
அண்டிவந் தறிகென் றோத ராமநா மத்தி னண்ணல்
மண்டுறு கோபங் கொண்டு மறையவர் தம்மை நோக்கி. (௭௩)

என்னதா ராத னைக்கிங் கேய்ந்ததெய் வத்தை நிந்தை
சொன்னவுன் றனையிப் போதே கொல்லவே வேண்டுஞ் சூழ்ந்தால்
மன்னுறும் பிரம ஹத்தி யாதலால் வருத்தி நின்னை
நின்னதூர்க் கனுப்ப வேண்டு நிகழ்த்திய மறைவல் லோனே. (௭௪)

பொன்மய மாகத் தோன்றும் பண்டரி புரமென் றாய்நீ
யென்மனோன் மணியைத் தாசி யென்னவுஞ் சொன்னா யிவ்வா
றுன்மன மஞ்சா தேன்பொய் யுரைத்தனை யெனக்கோ பிக்க
நன்மறை யவரும் வேந்தே நண்ணிநீ காண்க வென்றார். (௭௫)

மறையவ னேநீ சொன்ன வகைமெய்யே யாகி லுன்பின்
அறைதரு பண்ட ரிக்கு வருகின்றே னவ்வா றின்றேல்
குறைவுசொல் லுனைத்தண் டிக்கா மல்விடே னென்று கூறி
முறைசெய்மந் திரியை நோக்கி யெழுகமுன் படையோ டென்றான். (௭௬)

இயம்பல முழங்கச் சேனை யெழுந்துடன் படர வேந்தன்
நயந்தெரி மறையோர் கூட நண்ணவே யிருநா டிக்
கயந்தனைக் காத்த கண்ண நின்பெயர் கழறி யெங்கும்
வியந்திடச் செய்தி ரந்தென் குடும்பத்தை விழைந்து காப்பேன் (௭௭)

சாதுக்க ளுனையு முன்றன் றலத்தையும் வருணித் துற்றார்
ஓதுற்ற படியே வேந்தற் குரைத்தன னுண்மை யாகப்
போதுற்ற வேந்தற் கந்தப் படியிங்குப் பொருந்தல் வேண்டும்
மாதுற்ற மார்பா விந்தக் கலியின்மண் மயமா யார்க்கும்.

தோன்றுகின் றாற்போல் வேந்தன் றனக்குமே தோன்று மாகில்
சான்றவ ருரையும் பொய்யா யெனக்குந்தண் டிப்ப துண்டாம்
தேன்றரு துளவி னானே தீனத யாளா வாபத்
தேன்றிடிற் காக்கு மீசா வென்றுளத் தேத்தி வந்தார்.

எங்கணு நிறைந்தோ னன்று ரிரங்கினர் நடுங்கித் தன்னைப்
பொங்குறத் தோத்தி ரித்துப் போதுவ துணர்ந்தென் கீர்த்தி
அங்கிறைக் கோதும் வேதி யனைத்துன்பத் தழுத்த லாமோ
செங்கம லத்தி ருளே யென்றனன் செப்பு கின்றான். (அ௰)

வித்தியா நகரை யாளும் வேந்தன்வே தியன்சொல் வார்த்தை
சத்திய மோகாண் பேனென் றுரைத்தனன் சார்த லாலே
மெய்த்திற மாகச் செய்ய வேண்டுமென் றேலெ னக்குப்
பத்தபா லனனென் றோதும் பெயர்பழு தாகிப் போகும். (அக)

வேதியன் றனக்குந் தண்ட முறும்புரா ணம்வி ளம்பும்
நீதியும் பொய்யா நம்மை நேர்ந்தவன் பருந கைப்பார்
தீதிலா யெனலும் லோக ஜனனியாந் திருவு நாதன்
பாதமீ துறவ ணங்கிப் பாக்கிய மெனவுட் கொண்டாள். (அஉ)

கொண்டவக் கணத்தின் முன்னோர் கூறிய படியே பொன்னாய்ப்
பண்டரி விளங்கிற் றந்தப் பார்த்திபன் விரைவி லூர்ச்சார்
அண்டுறு போதிற் சொன்ன வேதிய ரதிக வச்சம்
மண்டுறப் பாண்டு ரங்கன் மலரடி வழுத்தி வந்தார். (அ௩)

மாதங்க மேறிச் சார வருமந்த ராம ராஜன்
ஏதங்க ளில்லா தங்கு னியன்றபண் டரியை நோக்க
வேதங்க மயத்திற் கோடி விண்மணி விளங்க லென்னக்
காதங்கள் பலவுஞ் சூழக் கவின்மணி விளக்கங் கண்டான். (அ௪)

வேதிய னங்குச் சொன்ன விதத்திலெண் மடங்க தாக
ஈதியல் கின்ற தென்றி யானையி னிறங்கி யச்ச
மீதிடக் கூட்டி வந்த வேதியர் பதம்வ ணங்கி
ஆதியி னீர றைந்த ததுவுண்மை தானென் றேத்தி. (அ௫)

தெரிகிலே னுமைக்கோ பித்த பிழைபொறுத் தருள்செய் கென்ன
விரிபுக ழரசே நின்போல் விளங்கறி வினர்க்கு மெய்யாய்ப்
புரிபுரா ணத்திலுள்ள பொருட்படி யுறுமற்றோர்க்குச்
சரிவரா திலங்கு மிந்தக் கலியுகந் தன்னி லென்றார். (அ௬)

என்றுதாஞ் சொன்ன வாறே யிருடிகே சன்பு ரிந்தான்
நன்றுநன் றெனக்கொண் டாடி நர பதிதாளம் வீணை
துன்றுமத் தளந்தொ னிக்கச் சுருதிசே ரிசைகள் பாடி
மன்றுதி தாச ரோடு வரவுடன் றூழும் வந்தார். (அ௭)

எங்குமைந் தருவின் சோலை யதிலியல் பறவை யெல்லாம்
தங்குபாண் டுரங்க னுமஞ் சாற்றிவீற் றிருக்க மஞ்ஞை
பொங்குறு நடனஞ் செய்யப் பொலிசிந்தா மணியின் சோதி
வெங்கனல் சுடுமென் றஞ்சி யெகினங்கள் பண்ணைமேவ. (அஅ)

காமதே னுக்கள் பைம்புன் மேய்ந்தெங்குங் கவினப் பொற்ப
தாமமவை யெல்லாங் கண்டு வியந்தன னுகருளாக
வாமமா ளிகைக டங்க மயத்தின்மா ணிக்க மின்னப்
போமவன் கண்கள் கூசப் புவியும்பொற் சோதி போர்ப்ப. (அ௯)

வேதகோட் டங்களோர்பால் விமலகீர்த் தனங்க ளோர்பால்
தாதர்க டழுவ லோர்பால் தாண்மிசைப் பணித லோர்பால்
காதலோ டாட லோர்பால் கவன்றிய மியம்ப லோர்பால்
கேதனந் திகழ்வ தோர்பால் கெழுமுவார் குழுவ லோர்பால் (௯௰)

பற்பல தீர்த்தஞ் சூழப் பரவுறு சந்த்ர பாகை
அற்புத வெள்ளத் தாடி யானந்த பாஷ்பம் பொங்கப்
பொற்பமர் விமலன் கோயிற் சன்னிதி முன்பு போத
நிற்புறு மிந்தி ராதி தேவர்க ணெருக்கங் கண்டான். (௯௧

நெருக்கத்துட் புகுந்து போந்து நெருங்கிய வரம்பை மாதர்
திருக்கற வாடல் பாடல் சிறந்துறு கருட கம்பத்
திருக்கையில் வந்து தாழ்ந்தங் கெழுந்துசன் னிதிக்குட் போம்போ
தருக்கொடெண் சித்தி மாத ருழியஞ் செய்தங் குற்றார். (௯௨)

அவருடன் றான்பூ சிக்கு மம்பிகை கெழுமித் தானும்
உவமையில் பணியின் மேவி யுறுதலுங் கண்டி தென்ன
நவமென நோக்கி யம்மே யூழியஞ் செய்து நண்ணல்
எவனிவ ணென்னக் காளி யென்றுமென் பணியீ தென்றாள். (௯௩)

பின்னுமிப் புண்ட லீகர் பெருந்திரு முற்றத் துள்ளே
மன்னுமென் றனைப்போற் றுசி மாதர்க ளநேகருண்டு
பன்னுறு தீர்த்த மெல்லாம் பாவையர் வடிவ மாகி
என்னுடன் பணிகள் செய்வா ரித்தல மகிமை தேர்வாய். (௯௪)

என்றவ ளுரைக்கக் கேட்டு மன்னவ னினிதுட் செல்லத்
துன்றுநா ரதரோ டண்மித் தும்புரு விசைகள் பாடத்
தன்றுணை யில்லா வாயில் ஜயனொடு விஜயன் காத்து
நின்றன ரவரைத் தாழ்ந்து நிமலன்வாழ் வுறையுட் சென்றான். (௯௫)

வளரொளி மிளிர்ந்து தேஜோ மயவடி வாகி நிற்கும்
கிளர்தயா நிதியை நோக்கிக் கண்கணேர் கெழுமச் சோதி
அளவளாய் விரவக் கூசி முகிழ்த்துத்த னங்கை யாலத்
தளர்வறு மறையோர் தம்மைப் பற்றினன் சார நின்றான். (௯௬)

நின்றவன் விழித்து நோக்க நெடியமா லுடனே நீண்ட
தன்றனி மேனிச் சோதி தனைமறைத் தழகு சார்ந்த
முன்றிரு வுருவங் கொள்ள முகிழ்த்தகண் விழித்து வேந்தன்
பொன்றிரு மார்பன் றன்னைக் கண்டனன் புகழ்ந்து போற்றி. (௯௭)

அடிமிசைப் பல்காற் சேவித் தானந்தக் கடலின் மூழ்கி
நெடிதுடல் புளகித் துக்கண் ணீர்மல்க நின்று நாதன்
வடிவினைத் தழுவிப் பல்கால் வழுத்தித்தன் மருங்கு நின்ற
முடிவில்சீர் மறையோர் தம்மை நோக்கினன் மொழிய லுற்றான். (௯௮)

அடியெனைப் பவித்தி ரஞ்செய் தாண்டசற் குருவே நீர்செய்
படிதனக் கியான்கைம் மாறெப் படிச்செய்வே னீவிர் சொற்ற
நொடிதனக் கநேக கோடி பங்கிங்கு நோக்கி னேன்யான்
கொடியனேன் பவத்தை யுஞ்சா பல்லிய மாக்கிக் கொண்டேன். (௯௯)

திரிபுவ னத்து மில்லாச் சீர்கொள்பண் டரியை யுஞ்சீர்
விரிநிலாத் திங்கட் டுண்டந் தன்னையும் விமல ஞான
கரியமா மேனி கொண்ட கண்ணனை யும்யான் காணப்
பெரிதுத வியசீர் சாலெம் பெருமவென் றடியில் வீழ்ந்தான். (௱)

அப்பொழு தரசற்காக வவிரொளி யான வெல்லாம்
தப்பிலாக் கலிகா லத்திற் சார்ந்துள படியே யாக
ஒப்பிலன் னதையும் வேந்த னுவந்துபார்த் ததிச யித்து
மெய்ப்புள விதுவு மிந்த விமலன்றன் விளையாட் டென்முன். (௱க)

கற்பக மிருக்கத் தாழ்ந்த கள்ளியை விரும்பு வாரோ
பொற்புறு காம தேனுப் பொருந்தவாட் டைக்கொள் வாரோ
எற்பவ னத்திருக்க விளக்கையு மீட்டு வாரோ
சிற்பர விமல னிற்கத் தேவொன்றைத் தேடுவேனே. (௱உ

வேறு

என்று ளத்திடை யெண்ணியக் கோமகன்
குன்ற மேந்திக் குளிர்மழை காத்தவ
மன்ற லந்துள வார்மணி மார்பவென்
றொன்ற நீள்புக ழோதித் துதித்தனன். (௱௩)

ஐய நின்னிடை யான்பெற லென்னெனில்
துய்ய வென்னகர் நீவந்து தோன்றியே
மெய்யனுகி விளங்கியி ருந்தருள்
செய்ய வேண்டின னென்னலும் ஸ்ரீதரன் (௱௪)

நின்ன தெண்ணநி றைவுற நின்னகர்
மன்னு வேன்வரு மார்க்கத்தில் வைத்தியேற்
றுன்னு றேனின்னிற் றேமங்குத் தோன்றிடில்
பின்னு மிவ்விடைப் போகுவ னென்றனன். (௱௫)

வேந்தன் கேட்டுமி கவுநன் றென்றதற்
கேய்ந்து பல்படை யேந்துநர் தம்மொடு
வாய்ந்து தேரிடை வைத்துவி மலனைப்
போந்து தன்னக ரிற்பொலி யச்செய்தான். (௱௬)

இடைத டுத்துள வர்ச்சக ரின்றிறம்
அடைவு றுதமர்ந் தாரவ்வ ரசனுந்
தடையி லாதுப சாரமெ லாந்தகப்
படையந் தானுக்குப் பூசைப யின்றனன். (௱எ)

வேந்தன் முன்செயும் பூசையை வேண்டிப்பொன்
காந்த னிங்குறக் கர்க்கட கத்திங்கள்
சார்ந்தெ காதசி தானுறப் பண்டரி
போந்து ளாரரி தாசர்பொ லியவே. (௱அ)

நாற்றி சைக்கணு நண்ணியு ளோரெலாம்
போற்றப் பண்டரி நாதனைப் பொற்பொடு
தோற்றக் கண்டிலர் தோன்றல்கொண் டேயது
சாற்றக் கேட்டுத்த ளர்ந்துச லித்தனர். (௱௯)

ஆவியற்ற வுடலென வேயயர்ந்
தோவி றுன்பக்க டலிடை யுற்றனர்
தேவில் கோயிற்க ருடகம் பந்திகழ்
ஆவ யிற்பொலிந் தாரமர்ந் தாரரோ. (௱௰)

புண்ட லீகர்க்குத் தந்தவ ரம்பொய்யாய்
அண்ட யாவரொன் செய்தனர் கோயிலை
விண்டு போகவிப் போதுசே விப்பதென்
கண்டென் னேசெய்வ தென்றுக லங்கினர் (௱௰௧)

வித்தி யாநகர் சென்றுவி மலனை
இத்த் ராதலத் தெய்துவிப் பாரெவர்
மெய்த்த புண்டலீ கன்மேல்வெ குளியோ
அத்த னிங்ககல் வாகவென் பார்சிலர் (௱௰௨)

சாது சற்சனர் தங்கண்மேற் கோபமோ
மாத வன்செல வாய்த்ததென் பார்சிலர்
ஓதிவ் வூருற வுள்ளமி லாமையோ
சீத ரன்செல்ல லானதென் பார்சிலர் (௱௰௩)

நாமெ லாநல மில்லவ ரோயென்றே
போம தாயிற்றெ னப்புகல் வார்சிலர்
காமன் றாதையை நாம்வந்து காண்பதே
நேரம தானதெ னநுவல் வார்சிலர் (௱௰௪)

வித்தி யாநகர் சென்றுசே வித்திட
மெய்த்தி யானத்து மேவினே மாயினும்
அத்தி செய்யவஞ் சாவர சன்செயும்
பத்தி ரத்துறு மேயெனப் பன்னுவார். (௱௰௫)

இன்ன வாறிவ ரெண்ணிய யர்வுறத்
துன்னி யங்குறு சூரிய தாசர்தாம்
அன்ன தோர்வித்தி யாநகர் சென்றுபொன்
மன்ன னைக்கொணர் வேன்வல்லை யானென்று. (௱௰௬)

எழுந்து கொண்டு வருகில னேலங்கே
விழுந்தென் னுவியை விட்டிடு வேனெனச்
செழுந்தண் பண்டரி நீங்கினர் சென்றனர்
அழுந்து துன்பத்தி னார்வித்தி யாநகர் (௱௰௭)

அங்குள் ளாரைவி னவினர் பண்டரி
தங்கு நாதனை யிவ்வர சன்கொணர்ந்
தெங்கு வைத்தன னென்னவவ் வூருளார்
வெங்கண் வேந்தன்ப யத்தின்வி ளம்பிலர். (௱௰௮)

சிலரை நேசித்தி ராசிய மாயிவர்
நலமு ரைத்துவி னவந ரபதி
குலம னைக்குள்வைத் துக்கொடு பூசனை
இலகு றச்செய்தி ருக்கின்று ரென்றனர். (௱௰௯)

பூசை செய்தபின் மற்றையோர் போகுறு
தேசில் காவலி யற்றின னென்பதும்
தேசு தாசர்வி னவிக்க ளிசிறந்
தாசி லன்றிர விற்செல்ல லாயினர் (௱உ0)

யாரு நித்திரை யானவி ராவிடைப்
பாரி ராஜன்ப திபுக வாயிலில்
நேரு பூட்டுநெ கிழ்ந்துவ ழிதரச்
சாரும் பாண்டுரங் கன்னிடஞ் சார்ந்தனர். (௱உ௧)

பாண்டு ரங்கனைக் கண்டுப ணிந்தனர்
வேண்டு மன்பொடு மேவித்த ழுவினர்
ஆண்டு தங்குரற் கம்மிய ழுதனர்
நீண்டு ளோயென நேர்துதி செய்தனர் (௱உஉ)

பொன்ம ணுளவொர் புண்டலீ கர்க்கருள்
நன்ம னோகர வைகுண்ட நாயகா
நின்மு னன்பினர் தங்களை நீக்கிநீ
என்மன் வாழ்மனை யெய்தினை யென்றனர். (௱உ௩)

புண்ட லீகருக் கன்றுபு கன்றது
விண்ட தோநெடு நாணனி மேயதால்
தொண்ட ரோமெளி யோமெனத் தோன்றல் பால்
அண்டி னைவலி யோன்பூசைக் காசையோ (௱உ௪)

சேர்ந்த பூமக டாரணிச் செவ்வியோ
டார்ந்த தேவிய ராதியெல் லாரையும்
நேர்ந்த வெம்மையு நீவிடுத் தெய்தினை
வேந்தன் பூசனை மேல்விருப் பத்தினே (௱உ௫)

நின் னிடத்தன்பு நீதரு கென்றியாம்
பன்னு தற்கிசை யாதுப ரமநீ
மன்னி டத்துவந் தாய்கொலோ வெம்வயின்
என்ன குற்றங்கண் டெய்தினை யென்றனர். (௱உ௬)

நாங்கள் செய்யுநின் னுமசங் கீர்த்தனம்
ஓங்கி னின்செவி யைத்தொளை செய்ததோ
ஆங்கவ் வோதையல் லும்முற லாற்றுயில்
நீங்கி யோவிங்கு நேர்ந்தனை யென்றனர் (௱உ௭)

அன்ப ருன்னைத் தழுவலி னுலுன்மெய்
துன்ப முற்றுவ ருந்திய துண்டதால்
இன்ப மெய்தியி ளைப்பின்றி ருக்கவோ
மன்ப திக்கண்வந் தாய்பர மாவென்றார். (௱உ௮)

இவ்வி தத்திவர் பன்னலெல் லாம்வினைச்
செவ்வி மிக்கதி ருமக ணயகன்
வெவ்வி னைக்கிகல் வேந்தனன் பாலெனை
யவ்வி டத்தனி யந்தன னென்றனன். (௱உ௯)

இவனை யீனத்தனி வைத்தியல் பூசையில்
உவகை யுற்றில னேங்கிய பண்டரிக்
கெவகை யெய்துவ னென்றிர வுமெல்லும்
கவலை கொண்டுசி றையிற்க ரந்துளேன். (௱௬௰)

இங்கு நான்வந்த நாண்முத லென்னுயிர்
அங்கு நம்மிடத் தாநம தன்பினால்
தங்கு மென்கணிந் நாள்வரை சார்கிலீர்
கங்கு லும்பக லும்முமைக் காணவே. (௱௬௧)

நீவி ரங்குநி ரந்தரம் வந்தெனைச்
சேவை செய்கடன் றீர்க்கவென் றலொலா
தாவ தேகருத் தாகவ ராதுற்றீ
ரோவெ னப்புகன் றுன்கண்க ணீருக (௱௬௨)

பரிதி தாசர்ப ரிந்துகண் ணீருகச்
சுருதி நாதனைத் துன்னத்த முவினர்
கருதி யின்னக முறுதல் சாலுமோ
வருதி யென்பின மொன்றுவ குத்தனர். (௱௬௩)

நன்று நாளைக்கு நான்வரல் செய்குவேன்
என்று தன்கழுத் தின்மணி மாலையைத்
துன்று தாசர்க ழுத்திடைச் சூட்டியே
ஒன்று நின்வயி னென்னவு ரைத்தனன் (௱௬௪)

அமல னன்னது ரைத்தனு மன்பரும்
கமல பாதம்வ ணங்கிக்க ருத்தினில்
விமல னைக்கொடு வேண்டிவெ ளிவந்து
தமதி டஞ்சென்று சார்ந்தன ராகவே. (௱௬[illegible]

வாயி லோறும்வ குத்தகதவுகள்
மேய பூட்டொடு மேயின முன்புபோல்
ஆய பின்னர லரியெ ழுந்தனன்
தூய கோவுந்து யிறுறந் தானரோ.

நானஞ் செய்தங்கு நண்ணின னுதனுக்
கான பூசையி யற்றித்தி பாவுதி
தானி யற்றுறு போதிற்ச நார்த்தனன்
பானி லாமணி மாலையைப் பார்த்திலன். (௱௬௭)

யாரொ டுத்தன ரிம்மணி மாலையைச்
சோர ரொப்படித் துன்னின ரிவ்விடை
நீர்வ குத்திரொ றுநெடு வாயில்காப்
பாரை நோக்கிய ரசன்வெ குண்டனன் (௱௬௮)

காவ லாளர்க லங்கினர் கண்டிலம்
யாவ ரோவவ்வி யேகின ரொன்னலும்
நீவிர் சென்றங்கு நேடிக்கொ ணர்கென
ஏவி னன்வெகுண் டெய்திய மன்னனே. (௱௬௯)

தேடிக் கொண்டுதி ரிந்தனர் கங்கைநீர்
ஆடித் தீர்த்தம மர்கதிர்த் தாசர்பால்
நாடிக் கண்டனர் நன்மணி மாலையைச்
சாடிப் பற்றினர் தாங்கொடு வந்தனர். (௱௪௰)

சாது வேடந்த ரித்தறி ருடீதற்
கேது வென்பர்சில் லோர்ஜக தீசனார்
மேத குங்கள மாலையை வெஃகுவோன்
யாது செய்கில னென்பர்சில் லோர்களே. (௱௪௧)

கண்டு வீதியுற் றோர்கழ றுற்றதுட்
கொண்டு மேதுங்கு றித்திலர் வேந்தன்பால்
விண்டு நாமம்வி ளம்பின ரோதினார்
தொண்டு செய்துறுஞ் சூரிய தாசரோ. (௱௪௨)

பற்றிச் சென்றவர் பார்த்திபன் முன்சென்று
நற்று மாமணி மாலையை நல்கினார்
உற்ற தோதலும் வேந்தனு ணர்ந்துடன்
செற்று நீள்கழு வேற்றிடச் செப்பினான். (௱௪௩)

ஆய்கி லாதுவி னாவில றைந்ததைப்
போய்மு டித்திடப் பற்றினர் போகுங்கால்
தூய பானுவின் றொண்டரத் தூதனை
ஏய நோக்கி யியம்பின ரீதரோ. (௱௪௪)

என்ன தாருயிர்க் கிறியை வாதலின்
பொன்னி னாயகன் சேவடி போற்றியான்
மன்ன நீரருள் செய்யவ குத்திர்போய்
அன்ன வேந்தனுக் கென்னவ வர்களில். (௱௪௫)

ஒருவன் சாதுவெ னவுள னானவன்
பரிதி தாசர்ப கர்ந்ததைப் பார்த்திபன்
அருகு சென்றுரை யாடிவி டைபெறீஇத்
திருவின் காதலன் பாற்கொடு சென்றனன். (௱௪௬)

சென்று நின்றெதிர் சேவிக்கச் செய்தனன்
என்று தாசரி றைஞ்சிவி மலனை
நன்று நின்செய னான்மறை வாவுனைத்
துன்று பண்டரி சேர்க்கத்து டங்கினேன். (௱௪௭)

என்ன வுன்னிய ரசன்ற னாலென்னைத்
துன்னு வெங்கழு வேற்றத்தொ டங்கினை
இன்ன முன்னைக்கொண் டேகவு றுநனை
மன்ன னாற்கொன்று நீயிங்கு வைகவோ. (௱௪௮)

என்க ழுத்திலுன் மாலையை யிட்டனை
நன்கு நின்றந்தி ரமென்று நாதநீ
புன்க னாம்பல்ப வத்தெனைப் போக்கினும்
நின்க ணன்புநெ கிழ்கிலெ னென்றனர். (௱௪௯)

என்றெ ணங்கம்ப டியவி றைஞ்சினர்
ஒன்று காவல ரோடுவெ ளிவந்தார்
அன்று வெங்கழு வேற்றவ னுகலை
நன்று காணவுற் ருர்நக ராரரோ. (௱௫௰)

யாருங் காணவி ருங்கழு வேற்றிடச்
சாரும் போதென்று தாசர்ஜ நார்த்தனு
கூரு றுங்கழு வேற்றினுங் குண்டலம்
நேரு மென்றலை நீவிழச் செய்யினும். (௱௫௧)

இன்ன மெவ்வித வூறுக ளெய்தினும்
நின்னை யான்மற வேனெனு நீடுரை
தன்னை யோர்ந்தவர் தந்திட முந்தெரீஇப்
பின்னை கேள்வன்க ருணைபி றங்கினன். (௱௫௨)

பார்க்க வக்கழுப் பச்சென்று றத்தளிர்
தாக்கி நன்குத ழைத்துச்செ ழித்தது
நோக்கிக் காவல ரோடிநு வன்றனர்
காக்கு மன்னவன் பாலிக்க ருத்தையே. (௱௫௩)

வேந்தன் கேட்டுவி யந்துவி ரைந்துவந்
தார்ந்த வம்மரந் தன்னைக்கண் டாய்வுறு
தேய்ந்த தாசரை யிவ்வகை செய்ததால்
வாய்ந்த தாலப ராதம றுகவே. (௱௫௪)

என்ன வுன்னியி ரவிய டியரை
மன்னத் தாழ்ந்துவ ணங்கியம் மன்னவன்
உன்னி நோக்கிடி லும்வயின் யான்மிகத்
துன்னு நீளப ராதத்தைச் சூழ்ந்துளேன். (௱௫௫)

சாமி யன்னது தன்னைப்பொ றுக்கவென்
றேமி குத்துப சாரமி யம்பித்தன்
றேமில் மாமனை தன்னுட்டு லங்குறு
மாமி னுயகன் பால்கொடு வந்தனன். (௱௫௬)

வரலுந் திருமா மகனா யகனுர்
சரணங் களில்வீழ்ந் துதழீஇ யினர்காண்
பரமன் னவரைப் பரிவோ டுதழீஇத்
திரமன் னுறுசொற் சிலசெப் பினனே. (௱௫௭)

நன்று டருநா யகனுக் கடியாய்
என்றால் மிகுதுன் பமதெய் தினைநீ
மின்றூர் தருபண் டரிமே வவனை
இன்னே கொடுசெல் லுகவென் றனனே. (௱௫௮)

அதுகேட் டுறுமன் னவனு வலுடன்
மதுசூ தனைவந் துவணங் கியிவண்
கதுவா தவனே குகருத் துளையோ
இதுவோ நினதின் னருளென் றழுதான். (௱௫௯)

இறைவன் முகநோக் கியெழிற் றிருமால்
அறைவன் னுனிலா சுறுமே லதனைப்
பொறைகொண் டுறைகின் றிலனென் றுபுகன்
றுறைகின் றதைநீ யுணர்கின் றிலையே. (௱சுய)

முன்சொன் னதிகந் துமுயங் குறுதற்
கென்சிந் தையுகப் பதிலின் றளவு
நின்செஞ் சதனத் திடைநின் றதுமுன்
றன்சந் நடையா லினிநீ தகவே. (௱சுக)

உனதுள் ளுறவென் னையிருத் தியுகந்
தெனதின் றிருநா மமியம் பினையாய்
மனதின் னலறத் தனிவா ழுதியென்
றனன்விண் மணிதா சர்பணிந் தறைவார். (௱சுஉ)

ஒருநா னுனையெவ் வகைகொண் டுறுவேன்
திருநா யகசெப் புகவென் னலுமால்
வருவே னுறுசத் துமதென் றுவகுத்
துருவோர் சிறுசெப் புறவுற் றனனே. (௱சுங)

கொடுபோ கெனவண் டகுலங் களெலாம்
படுமோ டுடையா ளெருகைப் படுசெப்
பிடுமா றகமெய் தியதென் னையெனத்
தடுமா றிலர்தா சர்கொணர்ந் தனரோ. (௱சுச)

கொண்டார் வருகாற் பொறிகொண் கன்மலர்த்
தண்டா மரைதன் பதிதா சநிஞல்
பண்டேய் தருபா கவதர் வதனம்
கண்டே மகிழ்கொள் கைகலந் ததரோ. (௱சு(

இன்றே சுதினம் பெரிதின் பமெனக்
கென்றோ வருமென் றவணெய் தினன்யான்
நன்றே மிகுபண் டரிநன் னகரம்
சென்றோ ரிறையுந் திரியே னினியே. (௱சுசு)

வேறு.

இப்படி யவரோ டுள்ள தியம்பினன் வருமார்க் கத்தில்
ஒப்பில்பத் மாள மென்னு மூர்ப்புறத் தணுகுங் காலை
அப்புறத் தலரி தாச ரிரங்கினான் முகற்கம் மானை
வைப்புறு செப்புக் கீழே வைத்துநீ ராட லானார். (௱சுஎ)

மடிக்கறை யினிற்செப் புக்குள் வைகிய பாண்டு ரங்கன்
படுத்தசெப் புடைத்துக் கொண்டு பழவடி வாகி நின்றான்
அடுத்தநீ ராடித் தாச ரங்குவந் தவனை நோக்கி
எடுத்ததெ னிந்த ரூப மெனவவ னியம்ப லுற்றான். (௱சுஅ)

இரவியின் றாச ரோநீ ரிங்குநின் றேகி யங்கே
பரவுபண் டரியி லுள்ள பரமசா துக்க ளுக்கு
விரவின தறிவித் தாலவ் விமலர்கள் வந்து தேர்மேல்
வரவெனை யேற்றிக் கொண்டு வாத்திய முழங்கச் செல்வார். (௱சுகூ)

என்றுபாண் டுரங்கன் கூற விரவிதன் முசர் தாழ்ந்து
நன்றெனப் பண்ட ரிக்கு நண்ணிநா காரி கம்பம்
துன்றுசா துக்க ளுக்குச் சொல்லினர் சொல்லக் கேட்ட
மன்றலந் துளவோ னன்பர் மகிழ்ந்தன ரெழுந்து வந்தார். (௱௭௰)

பற்பல வியங்கள் பொங்கப் பன்மணிக் குலங்கண் மின்னிப்
பொற்புறு தேருங் கொண்டு போந்தனர் பத்மா ளத்தில்
நிற்புறு பாண்டு ரங்கன் றன்னைநேர் கண்டு தாழ்ந்தே
அற்புதன் மேனி தன்னை யன்புடன் றழுவிக் கொண்டார். (௱௭௧)

பரமானந் தத்துண் மூழ்கிப் பரமனைத் தேர்மே லேற்றித்
திரமான பண்ட ரிக்குட் சேர்ந்தவ ரெல்லாங் கூடிச்
சுரமான கீர்த்த னங்கள் சொல்லிக்கொண் டாடிக் கொண்டும்
உரமான வாத்தி யங்க ளொலிக்கவந் துற்றார் மாதோ. (௱௭௨)

சந்திர பாகை வந்து சார்ந்தசம் பிரமந் தன்னை
இந்திரன் முதலாந் தேவ ரேவரோ சொல்ல வல்லார்
மந்திர மறையோர் கூடி மதித்துண்ட நீரி னாட்டித்
திர மறைகோ ஷிக்கச் சடங்குக ளெல்லா முற்றி. (௱௭௩)

பாண்டுரங் கனைத்தேர் நின்றும் பல்லக்கி லேற்றிக் கொண்டு
வேண்டினர் கோயில் வந்து விமலனைப் பதிட்டை செய்தார்
ஈண்டபி ஷேக மெல்லா மியற்றின ரலங்க ரித்தார்
நீண்டதோ ருபசா ரங்க ணிரம்பச்செய் துறப்பூ சித்தார். (௱௭௪)

நாமசங் கீர்த்த னங்க ணனிமிக முழங்க நல்லோர்.
சாமகா னங்கள் பாட மங்களா ரதியுந் தாங்கி
மாமகள் கொழுநற் கேற்ப வந்தனை புரிந்து நின்றார்.
யாமதை யுணர்த்த வென்ன வறிவுள மெவர்க்கு மீதே. (௱௭௫)

அங்குவந் துள்ள நல்லோ ரனைவரும் பானு தாசர்
பொங்குபத் தியைக்கொண் டாடிப் புகன்றமற் றிவரா லையன்
இங்குவந் தமர்த லாயிற் றென்னச்சர்க் கரைவ ழங்கித்
தங்குழு ரார்க ளெல்லாந் தனித்தனி மகிழ்வு கூர்ந்தார். (௱௭௬)

பின்னரு மன்ன வர்க்கம் பேசும்பல் கார வர்க்கம்
நன்னரங் கமைத்து நந்த னந்தனுக் கூட்டி யார்க்கும்
வின்னியோ கங்கள் செய்து தாங்களு மிதப்ப வுண்டு
பொன்னிறக் கமலை கேள்வன் பொன்னடி போற்றி நின்றார். (௱௭௭)

ஏழிரண் டாண்டு கான்போ யெய்திய விராமன் றன்னைச்
சூழெயி லயோத்தி யுள்ளோர் கண்டுசந் தோஷித் தாற்போல்
வாழிய பாண்டு ரங்கன் வரக்கண்டு மகிழ்வு கூர்ந்தார்
ஊழியுங் கெடாத பண்ட ரிக்கணுள் ளோர்க ளெல்லாம். (௱௭௮)

ஆகச்சரித்திரம் ௯௫க்குச் செய்யுள் ௨௲௯௫

பானுதாசர் திருவடிகளே சரணம்.

முற்றிற்று.

# ஏகநாதசுவாமிகள்சரித்திரம்

தினகரன் முரசர் தனையர்சத் குணசி ரோமணி சக்கர பாணி
அனகரன் னவர்வை ணவநல ஞானத் தரிபஜ னைக்குயர் தவர்தம்
தனையர்ஞா னப்பிர காசசூ ரியநா ராயண ரவர்தமக் குரிய
மனைவியார் சுலக்ஷ ணபதிவி ரதாசி ரோமணி மாதருக் குமணி. (௧)

என்பவர் வயிற்சா க்ஷாத்ஜகத் குருவா யியலவோர் மதலைவந் துதித்த
தன்பொடம் மதலைக் கேக நாதனொன்று நாமமிட் டதனைநா டோறும்
இன்புடன் வளர்த்து பநயன முஞ்செய் தெழிற்கலி யாணமு மியற்றிப்
பின்பரு டாயுந் தந்தையு மன்பு பெரிதுசெய் திருந்தனர் மாதோ. (௨)

சாய்வில்லை டணபு ரத்திடை ஞான சமுத்திர மாகித்தத் தாத்தி
ரேயர்தம் பிரசன் னம்பெறு மவர்ஜ நார்த்தன பண்டித னென்போர்
தூயமா மறையோ ரிருந்தன ரவர்பாற் றுன்னின ரிந்தவே கநாதர்
மேயவச் சநார்த்த னரைக்கண்டு சாஷ்டாங் கத்துடன் வணங்கினர் விரும்பி (௩)

ஆனபோ தந்தச் சநார்த்தன ரேக நாதரைப் பார்த்துநீ யாரை
ஏனிவண் வந்தா யதார்த்தத்தை யொளியா தியம்பென விருகரங் களையும்
மானமார் பணைத்து நின்றுகொண் டிருக்கு வேதமா மறையவன் மைந்தன்
யானனை தந்தை வெறுப்பிலே னிந்த யாக்கைக்குப் பிரபஞ்ச மாயை (௪)

சம்பந்த மாகிக் காமமா திகளாற் றளர்ந்துநை வதுபொறு தவனாய்
வெம்பியென் றனக்கே மிகவனு தாப மேவித்தே வகிரியை விடுத்து
நம்பிநுஞ் சரண கமலங்க ளடைந்தேன் சற்குரு நாதரே யென்ன
அம்புயத் தாளிற் பின்னரும் பணிந்தங் கடியெனை யாண்டருள் கென்றார் (௫)

என்றவர் தம்மைச் சநார்த்தனர் நோக்கி மிகவியந் திவன்வய தோதான்
மன்றவுஞ் சிறிது ஞானமோ பெரிதாய் வாய்ந்ததென் றவர்தமக் கபயம்
துன்றுறத் தந்தென் பாலினி திருத்தி சுகத்துட னெனவருள் சுரக்க
முன்றனி மகதி யாழ்முனி வரரா லருள்பெருந் துருவர்போன் முயல்வார். (௬)

இரவொடு பகலுஞ் சற்குரு சேவை யிடைவிடா தியற்றுவார் துயிலிற்
பரவியே யவர்தம் பாதங்கள் பிடிப்பார் பரிந்துதாம் பூலமுங் கொடுப்பார்
விரவு தாம் பூலந் தின்றுமிழ் போதும் படியகமேந்துவார் விரும்பி
வரமிகு மவர்பூ சைக்குவேண் டுவன வழுவற வுதவுவர் மாதோ. (௭)

தேசிக ருண்ட பின்னருச் சிஷ்ட மருந்துவார் சிறுதொழில் பலவும்
ஆசறத் தாமே யியற்றுவா ரமைதி யாவையு மறிந்தசற் குருதாம்
நேசமா மிவனே மானிட னல்ல னிறைகுணத் துத்தம தேவன்
தாசனாய் நமக்கு வந்தன னென்று சாற்றருங் கருணையிற் றழைத்தார். (௮)

ஏகநா தாநீ வருகென வழைத்திங் கெனக்குப்பன் னாள்களு மேவல்
வாகுடன் புரிந்து கொண்டிருப் பாயேல் மற்றுனைப் பெற்றதாய் தந்தை
சோகமாய்த் தளர்ந்து மூப்பிடை வருந்தி வறுமையாற் றுன்புறு வார்கள்
ஆகையா லுடையூண் டந்திடல் வேண்டு மெனவவர்க் கருள்செய்வ தானார். (௯)

தந்தைதா யுடையூண் பெறலினும் புதல்வன் ருன்குரு சேவைசெய் வதினும்
உய்ந்துசம் மதரா யிருந்தனர் பின்பு ஜனர்த்தன ருன்னியிங் கிவனுக்
கிந்தமா மடத்தோர் சேவகத் தமர்த்த வேண்டுமென் றவர்தமை நோக்கி
முந்தொரு கணக்கு வேலைநீ செய்து வருகென முயன்றன ரிருந்தார். (௰)

முன்புதாஞ் செய்யும் பணியினும் வழாமற் கணக்கெனுந் தொழிலினுமுயன்றே
அன்பொடு தினந்தோ றுங்கணக் கெல்லா மாரியர் தமக்கறி யச்செய்
தின்புற வருநா ளொருதின மொருகா செண்ணிடைப் பிழைக்கராத் திரியில்
மன்பெற விளக்கு வைத்துக்கொண் டாய்ந்து வாய்ந்திடா திருப்பதி னலே.( )

உடன்மிக வருந்தித் தாகமிக் காகி யும்புனல் பருகிடா துழன்று
திடமுணர் குருவுக் குரைப்பதென் னென்று சிந்தையைக் கணக்கிடை வைத்துச்
சடமதை மறந்தாய்ந் துறைந்திட வெளியிற் சயனங்கொள் ஜனார்த்தன ரொழிஇ
மிடமுறு மேக நாதனைக் காணு தெங்கென மடத்தினுள் வந்தார். (த்தம்

வந்தவ ரேக நாதனைப் பார்த்து மற்றவ ராய்வதை யுணர்ந்து
முந்தவ ருணரா மற்பினர் வந்து நின்றனர் முயல்கணக் கதிலே
சிந்திய காசு வந்தது தெரியச் சிரித்துக்கை கொட்டினர் மகிழ்ந்தார்
அந்தமி றவத்தோ ரதுகண்டு முன்வந் தவர்தமை நோக்கின ரறைவார். (௰௩)

யாதினைக் கண்டு வியந்துநீ சிரித்தா யெனவினு விடத்தலை நிமிர்ந்து
மீதுற நோக்கிக் குருவென வறிந்து துணுக்கென வெழுந்துதாள் விழுந்து
தீதறு கணக்கின் ருகையிலோர் காசு சிந்திய ததுதனைத் தேடி
வேதனை யுற்றிப் பொழுதுணர்ந் தின்ப மேவியா னகைத்தன னென்ருர். (௰௪)

ஆரிய னவர்சொல் வதுதனை வினவி யன்னவர் தம்முக நோக்கி
ஓரியல் காசு தேடுறும் விஷயத் துன்சித்தம் லயித்திடச் செயல்போல்
சீரிய கண்ணன் றிருவடி களிலுன் சித்தஞ்சேர் வுறிலுன்றன் ஜன்மம்
நேரிய தாகு மென்றினி துரைக்க வக்கணத் தவர்மன நெகிழ்ந்து. (௰௫)

நாதரோ யீது வாய்த்திட வெனக்கு நசைமிக வுளதுமற் றதுவிப்
போதுற லாயிற் றினிக்கிரு தார்த்த னுயினே னெனநனி புகழ
மூதுணர் கின்ற ஜனார்த்தனர் மகிழ்ந்து நன்றுநீ மொழிகணக் கென்னச்
சாதுசற் குருவாற் கண்ணனென் ருேதக் கேட்டதிற் றங்கிய வுளத்தார். (௰௬)

பிரபஞ்ச விவகா ரத்தினை மறந்து பின்பவர் பாற்றத்து வத்தின்
வரவொடு செலவை வகுத்திடக் கேட்டு மாசிலாத் தேசிகர் வியந்து
திரநிலை யுபதே சம்பெற விவன்ருன் றெளிந்தன னென்றருள் சிறந்து
கரமதாற் றழுவித் தாரகமறையைக் கருணைகொண் டோசெய்தார் கவின(௰௭)

அதுமுத லேக நாதரம் மறையை யனுசந்தித் தாரியர் பணியும்
கதுவின ராகி வருமவர் செயலைக் கண்டிந்த வுலகையுத் தரிக்க
மதுவிரி துளவ னேயிவ னுக வந்தன னெனமிக மதித்துக்
குதுகுலித் திவற்கு நங்குரு சேவை கொடுத்திட வேண்டுமென் றெண்ணி(௰௮)

ஏகநா தாநீ யென்குரு சேவை யெய்திடச் செய்வேன்மற் றவர்தாம்
வாகுறத் தமது வடிவினை மாற்றி வருவர்நீ யவரொன மதித்தற்
காகநான் பேசும் வகையினு லறிதி யபேதமாய் வணங்குதி யவர்தாம்
ஓகையோ டுதவு வதுவெதா யினுநீ யுவந்தினி துண்கவென் றுரைத்தார் (௰௯)

பாக்கிய மென்று கேட்டவர் வணங்கப் பின்பொரு தினத்திற்றம் பணியில்
யோக்கியர் தம்மை யழைத்துக்கொண் டொருகா னுற்றன ரங்குறுவரிற்சி
லாக்கியர் தத்தாத் திரையர்பட் டாணி வடிவராய் நாணுகத் தேறி
வாக்கியப் படியே வந்தன ருணர்ந்து ஜநார்த்தனர் சீடற்கு வருப்பார். (உ௰)

என்குரு சாமி வருகிறார் பார்நீ யெனச்சொலச் சீடரு நோக்கி
மின்கதிர் வாள்கைக் கொண்டொரு துலுக்கன் விரைபரி மேல்வர வவனே
நன்குரு தமக்கென் றிவருரைப் பதுதா னென்றதென் றெனமன நாடா
தின்பிலர் நின்றார் குதிரைமேல் வந்தோ ரிறங்கினர் ஜநார்த்தனர் பணிந்தார் ()

அஞ்சலி பந்த ராகியே நின்றா ரனகுயை புத்திர ரவரோ
டெஞ்சலில் மிலேச்ச பாஷையிற் பேசி யெனக்குறு பசியுள தென்ன
விஞ்சிய தமது தவத்திறற் சமைத்து மிளிர்மணி யிழைத்தபாத் திரத்தில்
செஞ்சுவை யாறுஞ் சேர்ந்தபோ ஜனத்தைச் சேர்த்தினி திருவரு முண்டார் ()

நுகர்தரும் போது ஜநார்த்தனர் தம்மை நோக்கியிச் சிறுவனு முண்ணத்
தகமன முளதேற் சாப்பிட வழையு மென்பதைக் கேட்டேக நாதர்
பகர்துலுக் கனுட னெப்படிக் குண்ப தென்றயல் பரிந்தன ரோகத்
திகழுமும் மூர்த்தி வடிவின ருண்ட திரிசய மாய்மறைந் தனரோ (உ௩)

மறைந்தபி னேக நாதர்தங் குருவின் மாடுவந் தவரடி வணங்கி
நிறைந்தமெய்த் தவத்தீர் குதிரைமே லேறி நேருறு வோர்தமைக் குருவென்
றறைந்தனி ரவரிங் கணுகலு மிலேச்ச ராயின ரிருக்கமற் றவரோ
டுறைந்தினி துண்டீ ரென்னெனச் சநார்த்த னருமினி துரைசெய்வார் மாதோ

முன்னரே சொன்னே னென்குரு வடிவ மாறினர் முந்தவா றென்ன
அன்னதை மறந்தா யந்தவத் திரிதன் புத்திரர் தமையெவ ராலும்
துன்னிட லரிது மற்றவர் கிரோது வாய்வரச் சுதைதனைக் கழுநீர்
என்னவி னினைத்தா யநேகயோ கங்க ளியற்றினு மியற்றலா மின்னும். (உ௫)

அனைத்துயி ருளமு மறியினு மறிய லாகுமேழ் கடலைநீந் திடினும்
நினைப்பொழு திடையே நீந்தலாந் திரிகா லமுமுணர் திறலையும் பெறலாம்
வினைப்பருந் திரிமூர்த் திகள்வடி வாய நிமலனைக் காண்பதோ வரிதித்
தனைப்பெரி யவரை யநாயாச மாகக் கண்டுநீ தவிர்ந்தனை தகவோ (உ௬)

ஆயினு மினியிங் கவருறில் வணங்கி யருள்பெறு கென்னலு மிசைந்து
மேயினர் மடத்துக் கவருட னுறையப் பின்பொரு தினத்திலவ் விமலர்
நீயினுங் காட்டுக் கென்னொடு வருதி நிமலரொவ் வுருக்கொடு வரினும்
சேயினை யனையா யுனக்கெச்ச ரிப்பேன் றெரிந்துகொள் கெனக்கொடுபோனார்

உற்றவக் காட்டின் மலங்குபக் கிரித னுருக்கொடு காமதே னுவுடன்
செற்றமி றத்தாத் திரையர்வந் தணுக ஜெநார்த்தன ரவரெதிர் சென்று
நற்றுணை யடியை வணங்கலு நாதர் நன்குறத் தழுவின ருணவு
பெற்றிட வேண்டு மெனச்சநார்த் தனரும் வருபசுப் பால்கலம் பெய்து. (உ௮)

உணவமைத் துதவ வவரிவ ரோடுமுண்பொழு திச்சிறு வனைநீர்
கொணர்க நம்மோடு கூட்டியுண் போமென் றருள்செயச்சநார்த்தனர்குறிப்பின்
அணவுமுன் றனக்கென் குருவெனச் சொன்ன வவரிவர் தாமென வழைக்க
நணுகினர் நிற்க வத்திரி புதல்வ ருடனுண வருகென நவின்றார். (உ௯)

அஞ்சியே யருகு நின்றிடு மேக நாதர்நு மங்கையா லெனக்கு
விஞ்சுறு பிரசா தந்தரு கென்று விளம்பிட வத்திரி புதல்வர்
தஞ்செவா யுற்ற போனகந் தன்னைத் தங்கையாற் கொண்டனர் தரலும்
செஞ்செவே தம்முன் ஞானையிற் கொண்டார் ஜநார்த்தன ரருள்பெறு சீடர். ( )

இருவரும் புசித்த பின்பனு சூயை யீன்றபுத் திரர்ஜநார்த் தனர்தம்
திருமுக நோக்கி யிச்சிறு பிள்ளை யாரெனச் சநார்த்தன ரவரை
அருகுற வழைத்துத் தங்குரு பாதத் தன்பொடு கிடத்தியே யிவனென்
கருணைசே ராசி ரதனென வோதக் கடைக்கணித் தருள்செய்து புகல்வார். ( )

சுருதிசாத் திரங்க ளாகிய பாலைத் துகளறக் கடைந்தெடுத் ததுவாய்
மருவிய நவநீ தமாகிய பாக வதப்பொரு ளாழமா கியதால்
தெருளுறப் பிராகி ருதமொழி களினுற் செய்யவல் லவனிவ னுவான்
பெருகிய ராமா யணத்தையு மினிமை பெறச்செய வல்லவ னுவான். (௬௨)

இன்னமும் ஹரிகீர்த் தனங்களுஞ் செய்ய வல்லவ னுமிவ னுலே
சொன்னதைச் சிரவ ணித்தவ ரெல்லாந் தூயசா யுச்சியம் பெறுவர்
என்னநல் வரந்தந் தவர்தலை மேற்கை யேற்றின ரருள்செய்து மறைந்தார்
அன்னது கண்ட ஜநார்த்தன ரேக நாதரைப் பார்த்தினி தறைவார். (௬௩)

உன்னிடத் தெனது குருவருள் சுரந்தா ருவந்தவ ரருள்பிர சாதம்
தன்னையென் செய்தா யெனவவர் தறையிற் கிடத்தின னென்னலு மந்தோ
என்னைசெய் தனைநீ யெனமனம் வருந்தி யெழிற்றிரு வாயிடை யிருந்து
மன்னுதம் பலத்தைக் கையிடை யுமிழ்ந்து மற்றவர் வாயிடைப் பெய்தார். ( )

அவர்கரம் பற்றிக் கொண்டுதம் மடத்துக் கணுகின பின்பிரு வருஞ்சூழ்
தவனனு மொளியு முயிருட னுடலுந் தமிற்கலந் தெனத்தமிற் கலந்து
புவனமுண் டருள்வோ னுமகீர்த் தனங்கள் புகன்றுகொண் டுற்றன ரொருநாள்
தவநனி மிகுந்த ஜநார்த்தன ரிவன்பாற் பணிகொள றக்கதன் றென்றே. (௬௫)

சீடனை நோக்கி யினியுனூர் சென்று செயத்தகு மில்லறஞ் சேர்ந்து
நீடுநீ ராடல் சந்திவந் தனைதே வதார்ச்சனை நித்யநை வேத்யம்
கூடுறு மதிதி பூசனை யாதி குறைவறச் செய்துறல் வேண்டும்
பீடுறு கரும மெனவிக ழாமற் பிரபஞ்ச நடைபிற ழாமல். (௬௬)

உனக்குமெய்ஞ்ஞான முறினுஞ்செய் தொழுக லுடனரி பஜனையை விடாயேல்
கனக்கரு மேனிக் கண்ணனுன் கண்முன் காணவந் தருள் செய்வ னென்று
மனக்கினி தாக வாழ்த்தின ரபய கரமவர் தலைமிசை வைத்தே
அனுக்கிர கஞ்செய் தனுப்பின ரேக நாதர்தம் மூர்மனை யடைந்தார். (௬௭)

வேறு

விருத்தரா கியதந்தை தாயர்தமை வணங்கவவர் விரும்பிச் சேயை
அருத்திகூர்ந் தெடுத்தணைத்தே யுச்சிமுகந் தானந்த மடைய லானுர்
பெருத்தமா தவரான குருநாதர் சொன்னபடி பிறழா தன்பு
பொருத்தநா டொறுஞ்செயுநித் தியகரும வனுஷ்டானம் போற்றிச் செய்து ( )

தேவதார்ச் சனைமாதா பிதாச்சேவை முதலவெலாம் பெரிது செய்து
மேவலா கியசகல வுயிர்களையுந் தம்முயிர்போல் விரும்பிப் போற்றித்
தாவிலாத் தமதகத்தி லுறைபாண்டு ரங்கனைச்சாஸ் திரோக்த மாக
ஆவல்கூர்ந் தேதினமும் பூசித்துப் பலதுதிக ளறைந்து வாழ்த்தி. (௬௯)

மலஞ்செய்து சாஷ்டாங்க மாகவணங் கித்துளவ மாபிர சாதம்
கலந்தவர்க்கெல் லாங்கொடுத்துத் தீர்த்தமுந்தந் ததுதாமுங் கைக்கொண்டுண்டு
நலங்குலவு வேதியரோ டினிதுண்டு பின்புபுரா ணகால க்ஷேபம்
துலங்குறச்செய் திராத்திரியி லரிகீர்த்த னங்கள்செய்து துயில்வ தாவார் (சம)

அப்படியாய் வருமவர்தஞ் செயலறிந்தோ ரவதார புருஷ ரென்று
செப்பவுயர் குருவருளா லநேககவி ரசனைகளுஞ் செய்ய லானார்
ஒப்பறுமக் கவிகளைக்கேட் டியோர்சாது சத்சனங்க ளுகப்ப தானார்
இப்படியாய் நடந்துவருங் காலத்தி லொருதினநித் திரையின் மேவி. (சக)

ரகுநாதன் வான்மீகி வடமொழியில் ராமாய ணத்தைச் செய்தான்
வெகுவாகி யதுபொருள்காண் பரிதாக லாலேநீ விபுலை யோர்க்குத்
தருமாறு பொருள்விளங்கப் பிராகிருதந் தனிற்செய்தி யென்று சாற்றிப்
புகுபோது துயில்விழித்துக் கனவிலுரை பொருடெரிந்து புந்தி கொண்டார் ()

வடமொழிரா மாயணத்தின் பொருண்முழுதுந் தெளிவாக மனதி லோர்ந்து
திடமுறவே பிராகிருதந் தனிற்செய்து வருநாளிற் றீய தான
விடமனைய வயல்வீட்டான் வடமொழிரா மாயணந்தான் விளங்கி நிற்க
மடனிவன்பி ராகிருதத் தியற்றுவதென் விசேஷமென வழுசசொல் வானாய் ()

தினமுநனி யிகழ்ந்துவரச் செயும்பிரா கிருதரா மாய ணத்தில்
வினதைசுதன் பிடர்வருவோன் மிகவிருப்பங் கொண்டிரவி லேக நாதர்
கனவிடைவந் திப்பொழுது துயிலொழித்தி ராமனது கதையைப் பாடு
கெனவுமுன்றன் மதுரமொழி களைக்கேட்க விருப்பமுளே னென்றுங் கூறி. ()

மசிக்கூடும் லேகணியுங் கொண்டுவந்து மருங்கில்வைத்து மறையத் தாசர்
நிசிக்காலத் தினில்விழித்து நேரெழுதுங் கருவிகளி னிலைமை கண்டு
சுசித்தாக வெழுதுகெனச் சொன்னவனைக் காணுமன் மிகவி யந்து
முசிப்பேது மில்லாம லிராமகதை தனையெழுத முயலுங் காலை. (சரு)

தனித்துமகேந் திரத்தினின்றுஞ் சதாகதிசேய் கடுவுஞ் சமய மாக
இனித்தவரோ குறும்வேக மனத்திடைக்கொண் டவசரிக வெய்திப் பாய்ந்து
சினத்திகழு மயல்வீட்டான் றனிமுற்றத் திடைவிழுந்தார் சிலம்பல் கேட்டு
மனத்துணர்ந்து முன்றிலிடை மூர்ச்சித்துக் கிடந்தவரை வந்து கண்டான். சசு

இன்னவகை வந்துவிழுந் தானென்று தெரியாம லிறைம யங்கி
அன்னவர்தங் கரத்திருந்த காகிதத்தை வாங்கியதி லறைதல் பார்த்து
மன்னுமிந்தச் சமயத்திற் பரவசரா யனுமனென மதித்துப் பாய்ந்து
துன்னவிங்கு விழுந்தனரொன் றறிந்துகொண்டே கநாதர்தமை நோக்கிச் சொ
[ல்வான்.

என்னிவணீர் வந்துவிழுந் தீரென்ன வவர்பேசா திருத்த னோக்கித்
தன்னுளத்தி லனுதாபம் தான்பிறந்தங் கவரையவ தார மூர்த்தி
என்னவுணர்ந் திவரைநெடு நாளாய்வீ ணேயிகழ்ந்தே னெனவு ணர்ந்தே
அன்னவரை யெடுத்தணைத்துக் கொடுபோந்தங் கவர்மனையி லமரச் செய்தான்.

உடனேக நாதர்தெளி வுறலாகிப் பழையபடி யெழுத லுற்றார்
திடனுன வதுதெரிந்த வயல்மனையா னவரடியிற் சென்னி தாழ்த்து
மடனுன வெனதுபிழை பொறுத்தருள்க வெனவழுத்தி மனைக்குச் சென்று
சடனேனி னிவரிடத்தி லுபதேசம் பெறல்வேண்டுஞ் சரத மென்று. (சகூ)

ஒருதினமற் றவர்திருவா ராதனவீட் டுறுங்கால முணர்ந்து சென்று
திருவினரோ யுமதுசெய லறியாம லிகழ்ந்துவந்தேன் றீமை தீர்த்து
மருவுமெனக் குபதேச மருள்கவெனத் தாசர்சற்று மவுனத் துற்று
வருமவனை நோக்கியுனக் கானகுருத் தனையடைந்து மருவு கென்றார். (௫௰)

அம்மறையோ னுமையன்றி வேறொருவ ரிடத்திலுறே னெனவ றைந்து
செம்மையுட னவரடிக்கீழ் வணங்கிநிற்க வவன்வருத்து செய்கை நோக்கித்
தம்மனதி லிவன்றக்கோ னலனென்று கொண்டவற்குத் தக்க தாக
நம்மிடத்தி லேநாளைச் சுதினமதா னீராடி நண்ணு கென்றார். (௫௧)

அவனலதென் றேகியபின் றமதகத்து ளுறைவோனை யடைய நோக்கிப்
புவனமக ளையகற்கு நாளைநறு மஞ்சனஞ்செய் புனலெ டாது
தவிருதிர்நான் வேண்டிடினு நீவிர்ஜலங் கொணராது தாழ்த்தி சொன்ன
இவர்மொழிந்து வற்புறுத்தி யிருந்துமறு நாட் காலை யெழுந்தி ருந்து. (௫௨)

நீராடி மாலடிதஞ் சென்னிவைத்துப் பாண்டுரங்க நிமலற் கேற்ற
ஆராத னஞ்செய்யத் தொடங்கியபோ தயல்வீட்டா னருகில் வந்தோர்
சாராக மனையிலுள்ளோர் தமைநோக்கி யின்னமுமஞ் சனநன் னீரோன்
தாராம லுறைகின்றீர் கொடுவாரு மெனவுரைக்கத் தவிர்ந்தி ருந்தார். (௫௩)

கண்ணனது நாமஜப தியானத்தி லிருந்துபின்பு கண்டி றந்து
நண்ணியங்கே யிருப்பவனை நோக்கியிவ னலந்தெரிவோ மென்று நாடிப்
புண்ணியநீர் கொண்டுவர லிங்கொருவ ருமிலையோ புகறி சொன்ன
அண்ணியதம் மனையுள்ளோ ரொருவரும்பே சாதிருந்தா ரவனு முற்றான். (௫௪)

பலவாறு புனல்கேட்டுங் கொடுவருவா ரில்லையெனப் பரிந்து தாமே
நலமாக வுபதேசம் பெறவந்தோ னுங்காண நயந்தோர் செப்புக்
கலமேந்திக் கொடுபோந்து நீர்முகந்து விரைந்துவந்து கருதும் பூசைத்
தலனூடு செயத்தொடங்குஞ் சமயத்தி லிவனவர்க்குச் சாற்றலானான். (௫௫)

அடிகளே யெனக்குநல வுபதேச மருள்கவென வவரி வன்றன்
கடினமனம் புனல்கொணரக் கருதாத தன்மையகங் கார மன்றோ
கொடியனிவன் றனக்குமிக வுபதேசந் தனையினிது கூறலாமோ
படிசரியன் றெனனினைத்துச் செம்மாப்போன் றனைநோக்கிப் பகர்வ தானார் ()

மஞ்சனநீர் கொடுவருவா ரிலரானார் நீயுமதை மனதிற் கொள்ளா
திஞ்சிருந்தா யதனாலே யுபதேச காலநனி யிகந்த தாயிற்
றென்செயலா மெனவவனு மெழுந்துதன தகஞ்சென்றா னேக நாதர்
கஞ்செயலுக் கொருசீடன் வேண்டுமோ வெனப்பூசை நடத்தி யுற்றார். (௫எ)

வேறு

இனியசற் குருவே யான ஜநார்த்தன ரேக நாதர்
புனிதநற் றந்தை தாய்பாற் பொருந்துநா ளவரைக் கூவிக்
கனிவினன் னவர்மு கத்தைக் கண்களி கூர்ந்து நோக்கிப்
பனிபரப் புறுசு லீபப் பருப்பதத் திடையோர் பாங்கர் (௫அ)

சூரிய தீர்த்த மென்று சொல்லுமோர் புனித மாய
சீரிய வதன்ச மீபஞ் சிந்தைக்கும் விழிக்கு மின்பம்
சாரியன் மார்க்கண் டேயர் தலமொன்றுண் டாங்க நேகர்
அரிய ரரியைப் போற்றி யடைந்துளோர் சாக்ஷாத் காரம் (௫௯)

அன்ன புண் ணியத்த லத்தை யன்புட னீபோ யண்மி
மன்னுகு ரியதீர்த் தத்தின் மனமொரு மித்துமூழ்கிப்
பன்னுபாண் டுரங்கன் றன்னைத் தியானித்துப் பயில்வா யானல்
உன்னும்விட் டலன்றன் சேவை யுனக்கெளி தாகவுண்டாம் (சுo)

தரிசனங் கிடைத்த பின்பென் னிடம்வந்து சார்தி யென்று
பெரியவ ருரைக்க நாதர் பெருங்களி கூர்ந்தா ராகி
அரியசற் குருவைப் போற்றி யவர்விடை பெற்றுச் சார்ந்தார்
பரிவுடன் சுலீபமென்னும் பருப்பத மதனை மாதோ. (சுக)

நித்திய நியமமுற்றி நேரில்சூ ரியதீர்த்தத்தில்
பத்தியின் முழுகிப்பானு வருதிசை முகமதாகச்
சுத்தியி னிருந்து சிந்தை யொருமித்துச் சுருதிக் கெட்டா
தத்தியிற் றுயிலுங் கண்ணன் றனைத்தியா னித்தன்பாகி (சுஉ

பரவச ரானபோதப் பருப்பதத் துறுமோர் பாம்பு
தரவுண வமைந்த தென்று சார்ந்தவ ருடலைச் சூழத்
திரமிகு மேக நாதர் தேகத்தின் பரிசத்தாலே
அரவதற் குணவி னிச்சை யகன்றதங் கவருக் கன்பாய் (சுங)

தொண்டுசெய் வதனுக் கெண்ணி யவர்தலை மீது தோன்ற
மண்டுபை விரித்துத் தண்மை வரப்புரி கவிகை யாகக்
கொண்டுற லாகி நாதர் கொளுந்தியா னத்தி னின்று
விண்டுறு போது நீங்கி யோகத்தில் வெயிலைப் போக்கி (சுச)

தினந்தொறுங் கவிகை யாகச் செயும்படம் விரித்திவ் வாறவ்
வனந்தனில் வரச்சு லீப மலையடி வாரத் துள்ளோன்
மனம்பரி சுத்த னாகி மலைவந்து தவஞ்செய் சாது
சனங்களுக் கின்பா னளுந் தருமவ னாத லாலே. (சுரு)

ஏகநா தனையம் யோகத் தெழுபொழு தடிவ ணங்கிப்
பாகமா கியவிப் பாலைப் பருகுமி னென்று வேண்ட
ஆகநன் கென்றன் னன்ற னன்பினுக் குகந்துட் கொண்டார்
தாகநீங் குறநா ளுளுந் தந்துவந் தனனோர் நாளில். (சுசு)

மிக்ககா லையிற்பால் கொண்டு நாதர்பால் விரைவிற் சென்றான்
தக்கயோ கத்தி லன்னார் பரவச ராகிச் சாரச்
சக்கிரி முறைவ ழாது தலைமிசைப் படத்தைத் தூக்கித்
தொக்கநன் னிழலுண் டாகக் கவிகையிற் றோன்றக் கண்டான். (சுஎ)

என்னிதி யோகத் துற்றோர் தமைச்சுலாய்த் தீண்டற் கேய்ந்த
துன்னிடி லெவ்வா றுமோ வெனப்பரி தாபத் தோடு
தன்னிரு கரமுந் தூக்கித் தலைமிசைக் குவித்துக் கொண்டு
பொன்னிவர் மார்பா தீன தயாநிதி யேயூங் கண்ணா. (சுஅ)

இச்சம யத்தி னிவந் திவரைக்காப் பாற்றல் வேண்டும்
நச்சராத் தீண்டு முன்னே யெனநனி புலம்பிக் கூவ
அச்சமி லன்பர் கூவு மவன்குரல் கேட்டு நோக்கப்
பொச்சமி லரவு தானே விலகிப்போ யிற்று மாதோ. (சுகூ)

என்னைநீ கூச்ச லிட்டா யென்றவன் றன்னைக் கேட்டார்
அன்னவன் வணங்கி யைய வராவுமைச் சூழ்ந்து நுந்தம்
சென்னிமேற் படந்தூக் கிக்கொண் டிருந்தது தெரிந்தச் சத்தால்
உன்னிட்டக் கூவி னோனென் றுரைத்தன னேக நாதர். (எ0)

ஹரிபதத் தியானி யைக்கண் டஞ்சுவான் யமனு மென்று
தெரிகிலா யாநீ யென்று திறந்தகண் முகிழ்த்துக் கூய
கரிகுரல் கேட்டுக் காத்த கருணையங் கண்ணு சீர்ப்பண்
டரிபுர விட்ட லாஸ்ரீ தரஹரி பாண்டு ரங்கா. (எக)

உன்தரு ளுருவங் காணற் குன்னியிங் குறுகின் றேன்யான்
எனதுள நிரம்பு காத லினைநிறை வேற்றல் வேண்டும்
பனகமென் சயனு வென்று பற்பல வாகப்போற்றிக்
கனலுறும் வெண்ணெய் போலக் கரைந்துளங் கனிந்து வேண்ட. (எஉ)

வேண்டலுக் குவந்தப் போதே விட்டலன் சகுண ரூபம்
பூண்டசங் காதி பஞ்சா யுதங்களும் பொருந்தப் பொன்னின்
நீண்டவம் பரமுந் தோன்ற நின்றன னேக நாதர்
காண்டலு மெழுந்து காற்கீழ்ப் பணிந்தனர் கரங்கள் கூப்பி. (எந)

வணங்கினர் தம்மைத் தூக்கி மகவைமார் பணைக்குந் தாய்போல்
குணங்களா லுயர்ந்த வள்ளன் மார்புறத் தழுவிக் கொண்டான்
இணங்குமுன் னினைவிற் கேற்க யாண்டுமெப் பொழுதுங் காப்பேன்
அணங்கற வெனச்சொல் போதி லயனின்று கண்டோன் றானும். (எச)

கண்ணன்பொன் னடியிற் றாழ்ந்து கைகுவித் தெழுந்து நின்று
திண்ணமாய்த் தவயோ கங்கள் யாதொன்றுஞ் செய்யா தியானிங்
கண்ணிய வேக நாதர் சேவையா லயனே யாதி
விண்ணவர் காண்கி லாத மெய்யருள் வடிவங் கண்டேன். (எ௫)

என்றவன் றானும் பல்லா றேத்தமால் கருணைக் கண்ணால்
நன்றவன் றனையு நோக்கி மறைந்தன னுதர் பாதம்
ஒன்றநற் சிரமேற் றாங்கி யும்முடை யருளி னாலே
பொன்றயங் குறுமார் பானைக் கண்டன னென்று போற்றி. (எசா)

விடைபெற்றுத் தன்னூர் போனான் விரும்புபா லீந்து பின்னர்
தடையற்ற வின்ப மேவிச் சநார்த்தனர் தம்பாற் சென்றார்
அடைவுற்ற மகிழ்வி னோடு மவரடி வணங்கிப் போற்றத்
தொடையுற்ற மார்பிற் சேரத் தழுவின ரருள்சு ரந்தே. (எஎ)

வேறு.

வியன்மி கக்குரு விடைதரத் தம்மதூர் மேவி
நயமு டைத்தென நனிமகிழ்ந் தவரரி நாமம்
பயில்க ருத்தின ராய்வரு நாளிற்பண் டரிவாழ்
புயனி றத்தின னெண்ணின னிவரிடைப் புகுவான். (எஅ)

என்னு டைப்பஜ னையிலிவ னிடைவிடா தென்னைத்
தன்னு ளத்திடை நினைப்பதுந் தவிர்ந்துறுன் பூசை
மன்னு றத்தினம் புரிந்துவாழ் பவன்மன மதிக்க
நன்ம றைக்குலத் தொருவனாய் நணுகுவ லென்று. (எகூ)

வந்து தேவகி ரியிலுளோர் தமைக்கண்டு மறையோர்க்
கிந்த வூரில்யார் போஜன மிடுபவ ரென்ன
அந்த வூருளோ ரேகநா தனைச்சொல வவர்பால்
முந்தி யங்கவர் தமைக்கண்டு பணிந்தனன் மொழிவான். (௮௰)

தீன ரன்பர தேசிய நாதனீர் செவ்வே
போன கந்தரு வோரெனக் கேட்டிங்குப் புகுந்தேன்
ஆன வென்றனக் கன்னமுவ் விரந்தரு வீரேல்
யானி யந்தர மும்பணி விடைசெய்திங் கிருப்பேன். (௮௧)

எந்த வேலையு மடியிலா னியற்றுவ னென்ன
அந்த வார்த்தைகேட் டேகநாத் தனரருட் சீடர்
முந்து நீயெவ ணிருப்பது மொழிநின்பே ரேது
வந்த நீயுளை யெனப்புரு ஷோத்தமன் வழங்கும். (௮௨)

எனக்கொ ருருமி லென்பெய ரோகண்டி யாவென்
மனக்கி சைந்துளோர் யாரெனத் தேடினன் வந்தேன்
புனப்ப சுந்துழா யவனடி யீருமைப் போலோர்
கனக்க ருத்தினர் தமைக்கண்டி லேனெனக் கழற. (௮௩)

ஏக நாதர்கேட் டுனக்கிவ ணிருந்திட விச்சை
வாக தாயுறிற் றடையின்றி வசிக்கலா மென்ன
மேக மாநிறத் தினனதற் குவந்தங்கு விரும்பிப்
போக மீதென வவர்மனைப் பணிசெயப் புகுந்தான். (௮௪)

பூட்டு கோமய மெடுத்தவை குவிவுறப் பொருத்தல்
வீட்டுக் குப்பைக ளகற்றுதன் மெழுகுதல் விளங்க
நாட்டு பாத்திர வகையெலா நன்குசெய் தமைத்தல்
சூட்டு தோதவத் திகள்விளர்ப் பாயுறத் துவைத்தல். (௮௫)

காவ டிக்கணீர் கொடுவந்து பெய்தவர் கருதும்
தேவ பூசைக்கு வேண்டுப கரணங்க டேடித்
தாயின் மஞ்சன நீர்தரல் சந்தன மிழைத்தல்
மேவு நன்மலர் தொடுத்துவைத் தல்விளக் கேற்றல். (௮௬)

தாசர் தம்மனை வியர்சொலும் பணிதகச் சமைத்தல்
ஆச றத்தயிர் கடைதல்வே றுய்வெண்ணெ யமைத்தல்
நேச மிக்குறப் போனக வகையட்டு நிறைத்தல்
போச னஞ்செயுஞ் சாலைசுத் தஞ்செய்து பொருத்தல். (௮௭)

பன்னி யார்தமை யின்னமென் பணியெனப் பகர்தல்
மன்னு பூசைசெய் தானபின் வருமறை யவரோ
டுன்னு தாசரு முண்டிடப் போனக முதவல்
நன்ன ருண்டபின் சுத்திசெய் தமையநீர் நல்கல். (௮௮)

பின்பு சந்தன புஷ்பதாம் பூலங்கள் பெறவே
அன்பு செய்தளித் தானபி னெச்சிலா மடைகள்
துன்பு றாதெடுத் தகத்தயல் கொண்டுபோய்த் தொகுத்தல்
இன்பி னேறுமுண் டவிடமெலா ஞ் சுத்திசெய் தியற்றல். (௮௯)

இவையெ லாமமை வெய்திய பின்றன கால்கை
நவையெ லாமறச் செய்துகொண் டொருபுற நணுகிச்
சுவையெ லாமமை போனகந் தானுமே துய்த்தே
அவையெ லாம்புரா ணஞ்சொல வசதிசெய் தமைப்பான். (கூ௰)

இரவ தெய்திய பின்புசெய் வனவெலா மியற்றிப்
பரவு தாசருண் டானபின் படுக்கையு மமைத்துக்
கரவி லாதுகுற் றேவலுஞ் செய்துகண் டுயிறும்
விரவிலானபின் றானுண்டு துயில்செய விழைவான். (கூக)

இன்னவாறுநா டொறும்புரிந் தியலுறு நாளில்
அன்னதாசர்தந் தந்தைதாய் விண்ணுல கடைந்தார்க்
கென்ன செய்வதோ வவையெலா மியற்றிமு ற்றின
பின்ன ராண்டுபோய்ப் பிதிர்த்தினம் வாய்ந்தது பெருக. (கூஉ)

தெரிந்து தாசரவ் வூர்மறை யோரகஞ் சேர்ந்து
திருந்து நாளையெம் மகத்திடைச் சிரார்த்தமா தலினல்
அருந்த வந்திட வேண்டுமென் றனைவர்க்கு மியம்பிப்
பொருந்து தம்மகம் புகுந்திருந் தாரநாள் போக. (கூ௩)

விடியல் காணுமு னெழுந்துபோய் வெள்ளநீ ராடி
நெடிது தாஞ்செயு நித்திய கருமங்க ணிரப்பி
ஒடிவில் பூசையு முஞற்றிமே லுபரிகை யிருந்தார்
மடிவில் வீதியிற் புலையனும் புலைச்சியும் வந்து. (கூச)

குப்பை கூட்டுறு போதிவர் வீட்டினிற் குலவும்
ஒப்பிலட்டிலின்மணத்தினை யோர்ந்தந்தப் புலைச்சி
தப்பி லாததன் பதிக்கந்தமணத்தினைச் சாற்றி
எப்ப டிக்கிந்தப் போனகங் கிடைக்குமென் றிசைத்தாள். (கூரு)

தரும சீலரந் தணர்க்கலா னமக்கது தருமோ
அரிவை யேநமக் கெச்சிலா யினுங்கிடைத் தக்கால்
பெருக நாஞ்செய்த புண்ணிய மாமெனப் பேசி
மருவி யெச்சிலுஞ் சிரார்த்தமின் றாதலால் வராது. (கூசா)

வீணி லேனவற் றிச்சைநீ கொள்கிறாய் மின்னே
காணு றாதெச்சி லிலையெலாங் குழியிடைக் கவிழ்த்து
மான மூடுவ ரென்றந்தப் புலையன்சொல் வார்த்தை
ஏண வேயுப ரிகைதனி லிருந்தவர் கேட்டார் (கூஎ)

இறங்கித் தம்மனை யாள்வயின் வந்தெழின் மின்னே
பிறங்கு வீதியிற் குப்பைகூட் டுறுமவன் பிரியை
நிறங்கொ ணம்மனைக் கறிமணம் விரும்பின ணிரம்ப
அறங்கொ ளந்தணர்க் கடுவதை யவட்கிடல் வேண்டும். (கூஅ)

என்னக் கேட்டந்தப் பத்தினி யாரகத் தியற்றும்
அன்னத் தோடுகாய் கறிமிக வுளவவற் றவட்குச்
சொன்ன வாறிடின் மிகுந்தவை தோஷமா மின்றே
மற்றவ ளுறவினர் தமக்கெலா மிடுவாம். (கூகூ)

எங்கு முள்ளவன் ஜநார்த்தன ஞதலா லிச்சை
தங்கு கின்றவர் தமக்கிட்டுத் திருத்திசெய் வதுதான்
பொங்கு முத்தம மெனவவர் வெளிப்புறம் போந்தே
அங்கு நின்றவப் புலையனுக் கறிவித்தா ரம்மா. (௱)

நின்கு லத்தவர் யாவரு மிவண்வர நிகழ்த்தி
நன்கு மற்றவ ரொடுமனை யாளொடு நண்ணித்
தன்கு றப்புசித் திடுகவென் றருள்கொண்டு சாற்றப்
புன்கு லத்தவ னப்படி யேகொண்டு போந்தான். (௱க)

தெருவில் வைத்தவ ருணும்படி சேர்ந்தருத் திரரால்
பெருகு காய்கறி யன்னமெல் லாம்பெரி திடச்செய்
தொருவில் கண்ணனுக் கர்ப்பண மெனவுணச் செய்து
பொருவி லந்தணர் தமக்குய்த்த புஷ்பதாம் பூலம். (௱உ)

சுகந்த சந்தனந் தந்துபோ கும்படி சொல்ல
உகந்து மற்றவ ருண்டபோ ஜனத்தைப்போல் யாங்கள்
ஜகந்த னிற்கண்ட தில்லையா மமுதபோ ஜனமே
நுகர்ந்து ளோமென நுவன்றனர் வாழ்த்தினர் போனார் (௱௩)

புலையர் போனபின் றெருவெலாஞ் சாணியாற் புதுக்கி
உலவி லாவகந் தன்னையுஞ் சுத்தநன் குஞற்றி
அலகில் பாத்திர வகையெலாம் விளக்குத லமைத்துக்
கலக ளுந்துவைத் தாற்றிடை மூழ்கிக்கா வடியால். (௱௪)

புனல்கொ ணர்ந்தறு சுவைக்கறி போனகம் புதுக்கி
நினைவி லந்தணர் வருவதை யெதிர்கொண்டு நிற்க
அனைய வந்தண ரிவணியன் றனவெலா மறிந்து
மனையி லேசிரார்த் தம்மென நமக்கெலாம் வகுத்து. (௱௫)

புலையர்க் கிட்டனன் போனக மிதுபொருந் துறுமோ
தலைமை யந்தணர் தமக்கென முனிந்தனர் தழன்று
நிலைமை கெட்டவ னகத்துணத் தகாதென நிகழ்த்தி
மலைவு செய்தவர் தமைவிசா ரித்திட வந்தார். (௱௬)

வேதி யர்க்கெனப் போனக மமைத்துத்தீ வினைசேர்
சாதி யீனருக் கிட்டனை கருமசண் டாளா
நீதி யற்றவெம் புலையரோ பிதிரர்நின் றனக்குப்
பேதி யாதசாஸ் திரத்திற்குப் பேதநீ செய்தாய். (௱எ)

என்று ரைத்திட வேகநா தருமவர் தம்மை
நன்று நோக்கிவந் தனத்தொடு நவிலுவார் நாடி
இன்று மக்கெனச் சமைத்தபோ னகமண மெதிரோ
நின்று வீதியிற் புலையனோர் நுகர்ந்தன னதனால். (௱௮)

அனைய போனகந் தனைமிகு தோஷமென் றகற்றி
மனையெ லாஞ்சுத்தி செய்துவே றேவகுத் தமைத்தேன்
வினையெ லாந்தெறு மந்தணீர் மிகைபொறுத் தருளி
மனையர் தங்கரு மத்தினை முடித்திடென் றிசைத்தார்.. (௱௯)

நுவல வேதிய ரவர்திரு முகத்தினை நோக்கி
நவிலும் வேள்வியி னமுதினை நாய்க்கிடு மாறும்
சவல ருந்துழாய் தனைமகி துக்குச்சார்ந் துதலும்
உவமை யாகவே யுளுற்றினை யெமையவமானம். (௱௰)

வேறு.

எனவு ரைத்தங் கவரோக வேக நாத ருண்ணைந்து
மனையிலுறப் பணிபுரியுங் கண்டியா மருங்குவந்து
வினைதெறுவீ ருளத்தேது விசனமடைந் ததுபோல
நினைவு கொடிங் கிருக்கின்றீ ரெனவவற்கு நிகழ்த்துகின்றார். (௱௰௧)

பிதுர்த்தினத்திற் கவலையுற்றுப் பேதுறுத லழகன்று
மதிப்புளநீர் வேண்டியக்கால் வாராரோ பிதுர்க்களெல்லாம்
திதித்தினமிங் கடைந்துண்பார் சிதைவின்றி யென்றுசெப்ப
முதுக்குறைவி னுருணர்ந்து முடிவுபெறும் படிநினைந்தார். (௱௰௨)

நல்லதென்று சொன்னவனை நனிநோக்கி நீயிங்கு
வல்லபிதி ரருக்குணவு வாய்ப்பவிலை களைப்பாப்பி
மெல்லமுது பரிமாறு கெனவிளம்பிக் கண்ணனென
அல்லறவிர்த் தருள்பரமான் மாவையகத் துறநினைத்து. (௱௰௩)

தென்புலத்தோ ரிவண்வந்து சேர்ந்தமுது செய்தருளி
இன்பமுறக் கருணைபுரி கெனவேண்ட வீண்டவவர்க்
கன்புகொடர்க் கியபாத்தி யாசமன முந்தந்து
பின்புறச்செய் தாதனத்திற் சநார்த்தனனை யம்பேணி. (௱௰௪)

கண்ணனுக்கர்ப் பணமென்றே கநாதர்சொல்லிச் சங்கற்ப
நண்ணுபுன லுதவுதலு நன்கருந்தி னோர்பிதிரர்
புண்ணியநீர் தந்துணும்வாய் பூசியங்கை தாளலம்பப்
பண்ணியபின் றருவனவுந் தக்கணையும் பரிந்தளித்தார். (௱௰௫)

வீடுறுமப் பிதிர்க்கடமை நோக்கியிங்கு மிகுந்துள்ள
சேடமதைச் செய்வதென்னை செப்புகென்ன வேபிதிரர்
கூடுறுநும் மிட்டரொடு கூடியினி துண்கவென்றார்
ஆடுறுமவ் வார்த்தையினை யகன்மறையோர் கேட்டிதென்னே. (௱௰௬)

அதிசயமென் றவண்வந்துள் ளகத்திலயன் மறையோர்வந்
தெதிர்மொழிதந் துறுவோர்யா ரறிதுமென விற்புகுந்து
புதியவவர் தமைநோக்கப் பொருந்துமவர் தமைநோக்கிப்
பிதிரருட னேமறைந்தா ரதைப்பார்த்த பிராமணர்கள் (௱௰௭)

வியந்துவெளி வந்திவர்மா னுடரல்லர் விண்டுருவ
லயந்தனில்வந் தவதரித்தா ராதலினு னயந்தபடி
இயைந்துளது கருமாபி மானமதி லீண்டியயாம்
அயர்ந்தவமா னத்தையுற வவர்பிதிர ரணுகியுண்டார். (௱௰௮)

இத்தினத்தி னமக்குவருந் தக்ஷிணையுங் கிடைப்பதின்றாய்த்
தத்தினதே யினிநாளைச் சார்ந்திவர்பா லெல்லோரும்
ஒத்துறச்செய் பிராய்ச்சித்த முளுற்றியுற வானூற்றான்
சத்தியமாய் மானநிலை தருமெனப்பே சிப்போனார். (௱௰௯)

ஈங்கவே கநாதர்தம திஷ்டரொடு நேர்ந்துண்டார்
ஓங்குமறை யோர்மறுநா ளுதயத்தி லேதிரண்டு
தீங்கறுகங் காதீரஞ் சேர்ந்தேக நாதர்தமை
ஆங்குவர வழைக்கவவ ரணுகியவர் கழ்ாப்பணிந்தார். (௱உ௰)

களையின்மறை யோரேந் ரொனையழைத்த காரியமென்
உளையுமென மறையோர்க ணேற்றம்மா லுளதவறுக்
கிளையுமறை முறைப்படியே பிராய்ச்சித்த மியற்றிவந்த
புளைதவிர்க்க வழைத்ததெனப் புகலவவர் பொருந்தாராய். (௱உக)

முண்டகலோ சனனருளென் முன்னிற்க மற்றெனக்கோர்
தண்டமும்வேண் டியதில்லை யெனச்சாற்றத் தருமறையோர்
வண்டவரோ நீர்சொல்லும் வார்த்தைமெய்யே யானாலும்
விண்டவெம துரைக்குநல வீறுதந்து பிராய்ச்சித்தம். (௱உஉ)

செய்துகொள்ளு வீராகிற் றேகசுத்தி யாகுமென்று
மைதவிரு மவர்மனஞ்சம் மதமாகச் செய்துகங்கை
எய்திமுழு குறச்செய்து பிராய்ச்சித்த மியல்காலை
உய்தருவான் திரியம்ப கத்திருந்தொ ருவன்வந்தான். (௱உங)

வந்தவனம் மறையோரை வணங்கியவர் முன்னின்றே
இந்தநக ருறுமேக நாதரொவ ரிசைமினெனச்
சந்தமறை யோயேனீ வினவுகின்றாய் சாற்றென்ன
அந்தமறை யோன்றனது வரலாற்றை யறைகின்றான். (௱உச)

குட்டநோ யெனக்குவந்து கொடுமைசெய்ய வதனாலே
இட்டனந் திரியம்ப கேச்சுரனை யினிதேத்தித்
தொட்டநோ யகலும்வகை கரந்தருள்செய் கெனத்துயின்றேன்
நட்டமா டும்பரம னண்ணினனென் கனவிடையே. (௱உரு)

கருதுறதே வகிரியி லேகநா தரொன்றோர் விண்டுபத்தர்
மருவுகின்றோர் பிதிர்த்தினத்தில் வரம்பில்புலை யருக்கெல்லாம்
பெருகவன்ன மிட்டனரச் சுகிர்தத்திற் பெற்றுண்ட
ஒருவனது சுகிர்தத்தை யுனக்கருளி னேயகலும். (௱உசா)

மற்றவனைப் போய்க்காண்டி யெனவுரைத்து மறைந்ததனால்
உற்றனனிங் கவர்தம்மை யடைந்துய்ய வேண்டியெனச்
சொற்றனனங் கதுகேட்டுத் துகளின்மறை யோரெல்லாம்
எற்றெனநன் கதிசயித்தி தென்னையென வறைகின்றார். (௱உஎ)

பனவர்களுக் கமைத்ததனைப் பறையர்களுக் கிட்டதனால்
புனிதமுறு புண்ணியமென் றுரைத்ததெந்தப் புகழ்நூலோ
எனவனுரைப் பதுபொய்யே யெனவவரிற் சிலர்கரத்திற்
றினவுறுபுண் டனக்கத்தம் வேண்டுமோ வெனச்செப்பி. (௱உஅ)

ஏகநாத ரதுசெய லெல்லோருங் கண்டோமே
வாகதா யின்னமென்ன வியற்றுவரோ வாய்பேசா
தேகணிறுற் பார்த்திடுங்க ளென்றேக நாதர்தமைச்
சோகமற வந்தவற்குக் காட்டியிவ ரெனச்சொன்னார். (௱உகூ)

ஆயநோ யாளியுட னேகங்கை நீராடித்
தூயவர்முன் பேவந்து சுவாமிநீர் பிதிர்த் தினத்தில்
நேயமா யோர்புலையற் கிடும்பலத்தை நிகழ்த்துமெனக்
கேயவே யளித்தி ரெனி லெனதுநோய் தீருமென்றே. (௱௬௰)

திரியம்ப கேசனுரை செய்தனனென் றுரைசெய்யப்
பரிவினொடு நீர்கேட்ட படிகொடுத்தே னென்புனலை
விரிகரத்தி னிடைவிட்டார் ஜனார்த்தனர்தம் மெய்ச்சீடர்
இரியலா யினகுட்ட நோயெல்லா மிறைப்பொழுதே. (௱௬௧)

நோய்தீர்ந்து சரீரமெல்லா நுவலரும்பொன் னொளிவீச
லாய்நின்ற வேதியனைக் கண்டவர்க ளதிசயித்து
வாய்நின்று ஜயஜயவென் றொலிமுழங்க வாழ்த்தினர்கள்
மாய்கின்ற செயலினராய் மனம்வருந்திச் சொல்கின்றார் (௱௬௨)

கருமாசா ராபிமா னிகளாகிக் கருதிலெமைப்
பொருவார்க ளிலைப்புகழும் பிராமணனைத் தமரொன்று
பெருநாளு மிருமாப்புப் பெற்றிருந்த தேகுற்றம்
தருமாறா யிற்றுநல்ல ஞானமில்லாத் தன்மையினால் (௱௬௩)

என்றுதங்க ளைத்தாங்க ளேயிகழ்ந்து கொண்டறிவு
துன்றுஜநார்த் தனர்சீடர் தமைநோக்கித் தோன்றியநீர்
பொன்றிருமார் பினனன்றி மனிதரல்லீ ரெனப்புகழ்ந்து
நன்றுமையா மறிந்துகொண்டோ மென்றுபின்னு நவிலுகின்றார். (௱௬௪)

பனிவரைக்குப் பனியுறக்கால் விசிறியினாற் பறப்புதலும்
இனியவமு தினுக்கினிப்பை யேற்றுதலும் போலுமக்கும்
புனிதமுறும் பிராய்ச்சித்தம் பொருத்தியது பொருந்துறுமோ
தனிமிகுசத் குணரோயென் றுறப்போற்றிச் சாற்றுகின்றார் (௱௬௫)

உமதுபிதிர்க் களச்சிரார்த் தத்திலுற வழைத்தவர்கள்
அமுதுசெய்யச் செய்ததும்யா மடையக்கண் டனமிவரை
எமதிடையே பரிசுத்த மியற்றியதுங் கண்டோமுந்
தமதுமகத் துவமிகவற் புதமென்று தகத்துதித்தார். (௱௬௬)

அவரையவ ரகம்புகுத வழைத்தேகி யவர்கொடுக்கும்
தவறறுதக் கிணைபெற்றுத் தகவாழ்த்தித் தங்கடங்கள்
பவனமடைந் தனராகி யிவர்பனவ பத்தியிலும்
எவமிலரி பத்தியிலு மிகுந்தவரொன் றினிதிசைத்தார். (௱௬௭)

வேறு

வியன்மிகு துவரை வாழோர் வேதியன் றனக்குக் கார்கொள்
புயல்வணக் கண்ணன்சேவை பொருந்துற வனுதபித்து
நயமிகு தவத்தைச் செய்து நாடொறும் வருங்கால் ராதை
இயலுருக் குமணி யென்போ ரிருவரு மனக்கட் டோன்றி (௱௬௮)

நீவிரும்பு கின்ற கண்ண னிகழுந்தே வகிரி தன்னி
லேவயி ணவசி ரோம ணியெனவா ழேகநாதர்
மேவுறு மகத்திற் கண்டி யாவெனு நாமமேவித்
தாவிலீ ராறுண் டேழி யஞ்செய்து தங்குகின்றான். (௱௬௯)

நீயவ ணேகி யெங்க ணினைவின்றி யிருக்கு மந்த
மாயவன் றனையழைத்து வருகெனச் சொலலு மன்னன்
ஆயவூர் விடுத்துத் தேவ கிரியில்வந் தேக்நாதர்
மேயவிற் புகுத லோடு மேவுதா பதனைக் கண்டு (௱சo)

வந்தனை புரிந்து நல்லா சனத்திடை வைகச் செய்தே
எந்தவூ ரிருந்து வந்தீர் வந்தகா ரியமய்யா தென்ன
அந்தமா தவத்தோன் கண்டி யாவினைக் காணவென்ன
முந்தவன் கங்காதீர்த்த முகந்துறப் போனா னின்னம் (௱சக)

மற்றிறைப் பொழுதி லிங்கே வருவனென் றுரைக்கும் போதில்
சொற்றவக் கண்டி யாவுந் தோளிற்கா வடியோ டங்கே
உற்றன னுறைதவத்தோன் றனைக்கண்டு நாணமுற்றுச்
செற்றமி லேக நாதர் மனையிடைச் சென்று சேர்ந்து (௱சஉ)

பனிரண்டு வருஷக் காலம் பரிவின்றி இங்கிருந்தேன்
தனியினிப் போதி லெங்கே யிருந்திந்தக் கடன்கா ரன்றான்
நனி தொடர்ந திங்குவந்தா னெனமன நலிவதாகப்
புனிதரத் தவனுக் கீதோ கண்டியாப் போந்தா னென்றார் (௱சங)

தாமத மின்றிக் கேட்ட தவனெழுந் தோடிச் சென்றான்
ளேமரு வுகின்ற கண்டி யாவினை வணங்கப் பேசா
தாமரி லேகி யாரா தனவக முற்றுத் தோளில்
ஆமுறு கின்ற காவை யிறக்கிவைத் தவன்ம றைந்தான். (௱சச)

கண்டியா வெளிவ ராமற் கரந்திடத் தபசி சற்றே
அண்டியங் கிருந்துட் புக்கு நோக்கிக்கா ணும லையன்
தொண்ட னோற் கருள்செய் யாமற் போயின னெனத்து ளக்கம்
கொண்டுகீழ் விழுந்த ழுங்கிக் கோவெனக் கதற லானான். (௱சரு)

கதறல்கேட் டேக நாதர் கடுகிவந் ததனைக் கண்டேன்
பதறுத லென்று கேட்க வவரது பதத்தில் வீழ்ந்து
முதனடந் துள்ள செய்கை மொழிந்திட வேக நாதர்
விதனமோ டவனை வாரி மார்பணைத் திதுவி ளம்பும் (௱சசு)

தவத்தினி லுயர்ந்தீர் நீர்செய் தவமதே தவம தாகும்
பவத்தியல் பொழிக்குங் கண்ண னெனவரிந் தவனைப் பார்த்து
நவத்திரு வடியிற் றாழ்ந்தி ருமையொக்கு நல்லோர் யார்யான்
அவத்தனு யாண்டான் றன்னை யாளென நினைந்தி ருந்தேன். (௱சஎ)

அவனிடை மிகுந்த வூழி யத்தினைப் பெற்றே னென்று
தவவனு தாபத் தோடு சௌரியை நினைத்தி ரங்கிப்
புவனநா யகனே பூமேற் பொன்மண வாளா தொண்டர்
எவமதைப் போக்குங் கண்ணா வெனப்பரி தபித்து நைந்தார். (௱சஅ)

ஆறிரண் டாண்டு கால வளவதா யநேக மான
வேறுவே றூழி யங்கள் வேண்டிய தியற்றப் பெற்றேன்
கூறுகோ மளசு ரூபம் வருந்திய கொள்கை யேதோ
மாறிலுன் மலர்க்க ரங்கள் வருந்திக்காய்த் ததுவே யென்றார். (௱சகூ)

உனதுமெல் லடிகள் கன்றத் தோளிடைக் காவு றுத்தப்
புனல்கொடு வரப்பெற் றேனே புகல்பிரா மணரூ பங்கொண்
டெனதகத் திருந்து நின்னை யறியாத வீன ஞானேன்
பனலரும் பாவத் துக்கு மாளெனப் பரவி னேனே. (௱௫௰)

என்றின விதமாய் நைந்தா ரிதுதெரிந் தவர்தந் தேவி
கன்றிய மனத்த ராகிக் கலங்கிவீழ்ந் தழுது சோர்ந்து
குன்றினால் மழைத டுத்த கோவிந்தா தேவ தேவா
உன்றனை யறியா தியாங்க ளூழியம் பலகொண் டோமே. (௱௫௧)

இனையராய்ப் புலம்புகின்ற வியல்பறிந் தத்த வத்தோன்
அனையவர் விடைபெற் றேகி ஞானதன் பின்ன ரன்பின்
மனைவிய ரோடு தாமு நாடொறும் வருந்திக் கண்ணன்
றனையினைந் திரங்கி நைந்து தளர்வுறு காலந் தன்னில். (௱௫௨)

ஒருபக லேக தாத ருறங்குற ஞான தேவர்
மருவுறு கனவிற் றோன்றி வளரள காபு ரிக்கட்
பெருகுமென் சமாதி வந்து நீர்தரி சித்துப் பேணி
அருகுறு மஜானு வென்னு மரத்தின்வே ரணுகு மென்னை. (௱௫௩)

சாரும்வேர் தனையோர் பக்கத் தொதுக்கியென் சமாதி தன்னை
நீர்பல மாக மூடி வருகென நிகழ்த்திப் போனார்
சீருள வேக நாத ருடன்விழி திறந்தா ராய்ந்து
நேரின படியே யந்த வளகையம் பதியை நேர்ந்தார். (௱௫௪)

இந்திரா யணியென் றோதும் யாற்றினீ ராடிச் செய்யும்
சந்தியை முடித்துச் சித்தே சுரன்றனைத் தாழ்ந்து சென்று
வந்தனர் சமாதி தன்னில் வச்சிரா சனத்தின் மேவும்
சுந்திர ஞான தேவர் தமைக்கண்டு தொழுது போற்றி. (௱௫௫)

அத்தரு வேரை யோர்பா லொதுக்கின ரகற்றிப் பின்பு
சித்திரக் கதவை மூடிக் கல்லினாற் செறித்துச் சாந்து
மெத்தியே வெளிப்பு றத்திற் பழம்படி யியற்று வித்தார்
இத்திற முளுற்று கின்ற விடத்திற்சீ தாநே ராமல். (௱௫௬)

தாசரோ டடைந்து ளோரும் பசியுடன் றங்கத் தேர்ந்து
நேசமாய்ப் பாண்டு ரங்கன் வணிகனாய் நேர்வ வெல்லாம்
ஆசறக் கொண்டு வைத்தங் காடியி லிருக்கக் கண்டு
மாசறு மேக நாதர் மகிழ்வொடு மருவு வோரை. (௱௫௭)

இக்கடை தன்னில் வேண்டு வனவெலா மியையக் கொண்மின்
சிக்கென வென்று செப்ப விரண்டுவே தியர்கள் சென்றப்
பக்கமார் கடையில் வேண்டு வனவெலாம் பற்றிக் கொண்டு
தக்கதோர் விலைகொண் டேய்ப்போன் சற்றிரு மென்று செப்ப. (௱௫௮)

வணிகனிப் பகல்முற் றுங்கா திருப்பனும் மாடு போய்நீர்
தணிவறச் சமையல் செய்து சாப்பிட்டு வம்மி னென்றும்
அணிதிக ழேக நாதர் தம்மையா னறிவே னன்னோர்
திணிதெனை யறியார் வந்த செய்தி கேட் டிங்கு வந்தேன். (௱௫௯)

பலசரக் குடனே யென்றும் பகரக்கேட் டரி ரண்டு
நலவடி தன்னைப் பேர்த்து நடந்தனர் திரும்பிப் பார்க்க
இலகுறு வணிகன் றன்னைக் கண்டில ரதிச யித்து
வலனுறு மேக நாதர் வயின்வந்திச் செய்தி சொன்னார். (௱௬0)

வினவிய வேக நாதர் மிகக்கம்மு குரல ராகி
மனதினிற் றுயரத் தோடு நமக்காக மாத வன்றான்
டனிமிக வருந்து கின்றா னேயென நவின்று நைந்தார்
பனவர்தாங் கொடுவந் தத்தைப் பழிப்பறச் சமயல் செய்தார் (௱௬௧)

சமையலங் கானபின்பு சார்ந்தவ ரோடு தாசர்
அமைவுறப் புசித்த பின்ன ரன்றிரா வங்கிருந்து
நிமலனும் பாண்டு ரங்க னுமகிீர் தனநிகழ்த்தித்
திமிரநீங் கியபின் னந்தச் சமாதியைச் சேவை செய்து (௱௬௨)

அங்கிருந் தகன்று தம்மூர்க் கணுகின ரரிநா மங்கள்
பொங்குறப் பஜித்துக் கொண்டப் போதுந்தங் குருவை யெண்ணித்
தங்கின ராதலாலே ஜலத்தொடு ஜலஞ்சேர்ந் தென்ன
மங்கலில் லாத கீர்த்தி ஜனார்த்தனர் தாமாய் வாழ்ந்தார். (௱௬௩)

வேறு

ஒருதி னத்துறுஜ னார்த்தனர் பூமிக் குள்ள ளாவுஜட மூடரை யெல்லாம்
திருநி றத்தவன தன்பர்க ளாகச் செய்ய வெண்ணியுறு நாதரை நோக்கிப்
பெருநி லத்திலுள தீர்த்தம னைத்தும் பெட்பின் மூழ்கியவ ணுள்ளவ ருய்யக்
கருதி யச்சுதன தொண்புகழ் கூறிக் கண்டு நின்சரண டைந்தவர் கட்கு (௱௬௪)

நன்றனுக் கிரக மின்பினி யற்றி நண்ணு கென்றுசொல நாதர்ம கிழ்ந்து
துன்றுசற் குருவை நீங்கம னத்துட் டென்பு சற்றுடைய ராகிவ ணங்கிச்
சென்று தக்குருவி னல்விடை பெற்றுத் தீர்த்த யாத்திரைகு றித்தனர் சென்றார்
ஒன்று மொவ்வொருத லங்களு மங்கே யுற்ற தீர்த்தமும்வ ணங்கினர் மூழ்கி. ()

ஸ்ரீத ரன்றனது கீர்த்தன மோதிச் செறிவு கொண்டஜட மூடரை யெல்லாம்
காதல்கொண் டரித னன்பர்க ளாகக் கருணைசெய் தருள்பு ரிந்துக லந்து
மேத கும்படிதி ரிந்தனர் கோதா விரிந திக்கரையி லேமன ரம்யம்
ஆதல் செய்யுநக ராகிய பிரதிட் டான மேவியொரு சார்வில மர்ந்தார். (௱௬௫)

அங்கு நாள்பலவ மர்ந்திட வெண்ணி யரித னுமமியல் கீர்த்தனை செய்து
தங்கு றும்பொழுது கேட்டவர் யாருஞ் சாற்று வோரையவ தாரபு மானென்
றெங்கு மிங்கிவரை நேர்பவர் யாரென் றேத்தி யோதுமரி கீர்த்தன நாளும்
பொங்கு மன்பினொடு கேட்டனர் மேவப் புகலு நாதர்தனி யென்றுபொ றாணய்

விட்டலன்புகலு வோரொடு கூடி மேவு கீர்த்தனைவி ளம்பில வர்க்குக்
கிட்ட ருஞ்சிரம மாறுமெ னுவோர் கீத வேதியனு ருக்கொடு மேவிக்
கொட்ட கங்கையுறு தாளம்வி ளங்கக் கூடி நாதர்முது கின்புற நின்று
முட்ட றும்படிதொ டர்ந்தவ ரோடு மொழித ருங்கவிமொ ழிந்தன னூற்றான். ()

உற்ற நாண்முதலு ரைப்பன கேட்போ ருடன்ம றந்துபொ ருளின்மய மாகப்
பற்ற லாகிவரு நாள்களி லோர்நாள் பகரு நாதருயர் கண்ணனு யந்தி
நற்று முற்சவந டத்திட வேண்டு நாமெலோ ருமென நண்ணிய திச்சை
மற்ற தற்கிசைவு செய்ம்மென வவ்வூர் வாழ்வ தாகிவின வுந்தன வான்கள். ()

கிளரு முற்சவம தற்குறு சாமக் கிரியை யாவும்விளை விற்குவி வாக்கத்
தளர்வில் ஞானமிகு நாதர்தெ ரிந்து தமதுசற் குருவு மேவுற வேண்டி
வளர்வ தானவுயர் பைடண முறவோர் மறைய வன்றனையனுப்பவவன்போய்த்
துளவமா லெனவி ளங்கும வர்க்குத் தொழுது சொல்லலுமி குந்தன ரின்பம் ()

தங்கு டும்பமொடு வேண்டுவெ கொண்டு சார்ங்க பாணிபுகழ் சாற்றுத லாகிப்
பொங்கு மன்பிலுயர் நாதரிருக்கும் புரநெ ருங்கவரு போதெதி ரோநேர்
இங்கு தீரவருள் செய்துறு தத்தாத் திரைய னைப்புகுஜ நார்த்தனர் தேர்ந்து
கொங்கு றும்பதும பாதம்வ ணங்கிக் குறைவி லாதவர்கு ணங்கள்பு கழ்ந்தார் ()

புகழு கின்றவரை மார்பொட ணைத்துப் பொருவி லாதவனு னக்குறு சீடன்
திகழு ஞானநல னுக்குயர் காதல் செய்து நாளுமவன் வாழ்மட வாசற்
கிகழ்வில் பாலனென யானினி தெய்தி யேத்து கீர்த்தனம்வி ளையுய ரின்பம்
தகவி ணங்கியுறு கின்றன னென்று சாற்றி நாதர்வயி னேடினர் வந்தார் (௲௭௨)

நன்னயத் தொடவர் சந்நிதி நின்று நாத ரேயுமது நற்குரு வந்தார்
என்ன வுட்களிது லும்பவெ ழுந்தங் கேக நாதர்குரு வின்சர ணெய்திந்
துன்ன ருட்புகழ்கள் சொல்லிந யந்தித் தூர நீர்வரவு செய்சதை யுன்னில்
முன்ன ரொத்தவமி யற்றின னென் றுமொழியவந் தவர்த மீஇயுண்மகி ழ்ந்தார்

வந்த சற்குருவை யுட்கொடு சென்று மணிம யத்தவிசி ருக்கவ மைத்தே
ஐந்த டுத்தபதி னேருப சாரத் தடைவு டன்பதம்வி ளக்கிய தீர்த்தம்
முந்த வுட்கொடுபி னுற்சவ மேவ முயல்வு செய்துபல சம்ப்ரம மாகச்
சந்த மெய்ச் சுருதி யோரினி துண்ணச் சமைவு செய்துவிப வம்பெரி தாக ()

கண்ண னைத்தவிசி நண்ணுதல் செய்து கருதுசற் குருவை யும்புடை வைகப்
பண்ணி நாதரெதிர் நின்றரு ளிக்கோ பாலன் மெய்ச்சரிதை பன்னுத லுற்றார்
உண்ணி லைத்தகுரு வோடது கேட்க லுற்ற யாவருமி கக்களி யெய்தி
அண்ணி மற்றிவரி யற்றுக தைக்கின் பமைவு கானமொடு தாளமி சைத்தே )

உதவி யானசக பாடிகி டைத்திங் குறுதன் மிக்கநல னென்றுவி யந்தார்
முதல்வ னுக்கினிதி னாரதி செய்து முந்து பின்புபிர சாதமு நல்கி
இதம தாயினவி தங்களி யற்றி யெட்டு நாளளவி னும்பக லெல்லாம்
பதநல் வேதியரு ணச்செய்தி ராவிற் பதும நாபனுயர் கீர்த்தனை பாடி (௲௭௬)

ஒன்ப தானநவ மித்தின மன்றங் கோங்கு பாகவத மோதிய கண்ணன்
இன்ப லீலைகளெ லாம்விளை யாடி யெய்து றுந்தசமி யன்றிய மெல்லாம்
அன்பு மேவுறமு ழக்குதல் செய்தா ரணிய தாகவலம் வந்துறு கண்ணன்
முன்பு மேவுமட மெய்தவ மைத்து முந்து மாரதியெ டுத்தினி தாக. (௲௭௭)

யாவ ருக்குமிய லும்பிர சாத மீந்த பின்புவரு சற்குரு நாதர்
தாவ றப்புரியு நாதரை நோக்கித் தனிய னுனசக பாடி யுனக்கிங்
கேவ ரத்தவமி யற்றினை யோமற் றிவனி யம்புமிசை யின்கரை கண்டோன்
ஆவன் மிக்கசது ரன்புரம் வேறே யான தன்றியமை செய்கைக ளொன்றே. ()

இப்ப டிக்கியலு றும்மிரு வர்க்கு மென்று மோர்பிரிவி லாம லிருக்க
ஒப்பி லச்சுதனை வேண்டுறு கின்ற துள்ள மெற்கெனவு ரைத்தனர் நாதர்
தப்ப றத்திகழ்வு றுஞ்சக பாடி தன்னை நோக்கியும தூரொது பேரொன்
செப்பு கிற்கவென வூர்நிலை யில்லைத்தெரியுநல்லவரி டத்துறை கிற்பேன் (௲௭௯)

விட்ட லன்பெயரொ னக்குநு மைப்போன் மேவு நல்லவர்கி டைத்தில ராதல்
இட்ட நும்வயினி சைந்துறை கின்றே னோது மாசையிலை யென்றலு நாதர்
மட்ட றுங்களிது ளும்பின ரொன்றும் வசிமி னென்னிடையெனச்சொலி நாளுள்
கிட்ட லும்பரம சற்குரு வானோர் கிளரு நாதரையி ருத்திய கன்றூர். (௱௮௰

வேறு.

பின்பேக நாதர்தினந் தோறுமரி கீர்த்தனங்கள் பேணிப் பாடி
அன்போடங் குறுகாலம் பண்டரியி லொருமறையோ னருள்வி டோபாத்
தன்பால னச்சகுண வுருக்காணத் தினந்தோறுஞ் சந்த்ர பாகை
இன்பானீ யம்படிந்து தினமுமரி திருநாம மேத்தி வந்தான். (௱௮௩)

வருமவனுக் கருள்பெருகிப் பாண்டுரங்க னவன்கனவில் வந்துநீ யென்
அருளுருவைக் காணநினைத் தாற்பிரதிட் டானநக ரடைந்து நாதர்
பெருகுமரி கீர்த்தனஞ்செய் பொழுதுசக பாடியாய்ப் பின்பு நிற்பேன்
தெருளவுணர் கெனவுரைத்தான் விழித்துவியந் துடனவ்வூர் சென்றுசேர்ந்தான்

சென்றமறை யோனேக நாதர்கதை செயுஞ்சமயம் சேர்ந்தன் னூர்பின்
நின்றசக பாடியைக்கண் டேன்வணங்க வவ்வுருவ நீங்கி நேமி
மின்றயங்கு சங்கிலங்கு திருக்கரங்க ளொடுமகுடம் விளங்கக் காதிற்
றுன்றணிகுண் டலம்விளங்கக் கேயூரந் தோள்விளங்கத் தோன்றி நின்றான். ()

நின்றருள்பீ தாம்பரனை நாதரொடு சுரோதாக்க ளிலவக் கண்டு
நன்றுஜய ஜயவென்று சாஷ்டாங்க மாகவொளிர் நளின பாதம்
ஒன்றவணங் கிப்பலவா றுண்மகிழ்ந்து போற்றிஞெ ருடன்ம றைந்தான்
அன்றடைந்த வேதியனு மனைவருமந் நாதர்திரு வடிகள் போற்றி (௱௮௪)

பன்னிரண்டாண் டெமக்குவிடோ பாவந்து சகபாடி யாகப்பாடி
மன்னினனென் றுலுமது மகிமையெவர் மகிதலத்தில் வழுத்த வல்லார்
நன்னிலையீ ரெனப்போற்ற நாதரருள் பாண்டுரங்க னம்பால் வந்து
துன்னினன்மெய் வருந்தவெனச் சொலிநயந்து வியந்துதம்மூர் துதித்துச் சேர்

வேறு [ந்தார். (௱௮௫)

வாழுநா ளொருநா ளேக நாதர்பால் வசிப்போ ராகித்
தாழுமுத் தவரொன் போர்மற் றவர்சரண் டாழ்ந்து சாமி
சூழுநும் வாக்காற் பாக வதஞ்சொலக் கேட்க வேண்டி
ஆழுமெ னபேக்ஷை தீர வருள்கவென் றினிது வேண்ட. (௱௮௬)

நன்றெனு வேக நாதர் நாடியுத் தமதி னம்பார்த்
தன்றுதொட் டினிய பாக வதம்படித் தருத்தஞ் செய்து
துன்றிய நாளி லோர்நா டொழத்தகும் பாண்டு ரங்கன்
குன்றலின் மறையோ னாகி வந்துநா தரைக்கும் பிட்டான். (௱௮௭)

வணங்கினின் றவனை நாதர் மார்புற வணைத்திருத்தி
இணங்குநும் பேரெ னூரென் னெனநிலை யில்லை வாழூர்
குணங்களா லுயர்ந்தீ ரென்பேர் கேசவன் குல்லை வீசு
மணங்கமழ் மார்பன் சீர்த்தி யாயபா கவதந் தன்னை (௱௮௮)

வாசித்துப் பொருள்சொல் கின்றீ ரெனப்பலர் வழுத்தக் கேட்டு
நேசித்துக் கேட்க வந்தே னிரந்தர மென்று கூற
யோசித்துக் கேட்க வந்த துத்தம மிகநன் றென்று
பூசித்துப் படித்து வந்தார் தினந்தொறும் பொருந்த வோர்நாள். (௱௮௯

இரவிரு சாமஞ் சென்ற பின்னரீ ரிருவர் தேசாந்
தரர்மறை யோர்வந் தேக நாதரைச் சார்ந்து கண்டு
பரவிய தான வெங்கள் பசிதவிர்த் தருள்க வென்ன
வரவினு ருரையைக் கேட்டு மனைவியாங் கிரிஜா பாயி (ாகய)

தனையழைத் திவர்க்கு ணூரீ தருகென விரைவிற் கூற
மனைவியார் சமைக்கக் காட்ட மிலையென வருந்திக் கூற
இனையவீ டெல்லாங் காட்ட மாயுற விலையென் றூயே
நனைவிரி குழலா யென்று நன்னுமுத் தவரைக் கூவி. (ாகக)

இந்தவீட் டினைப்பி ரித்து விறகிவட் கீதி யென்றார்
முந்தவர் பிரிக்கக் கால நீளுமே யெனமொ ழிந்தார்
சுந்தர நாதர் கேட்டு விரைவுகொண் டினிது தூங்கும்
சந்தமாங் கட்டில் போழ்ந்து தந்துடன் சமைத்தி யென்றார். (ாகஉ)

கட்டிலாம் விறகு கொண்டு கணவர்சொற் படிச மைத்துத்
திட்டமாய் வந்தோ ருண்ணத் திருத்திசெய் துடன்றம் பூலம்
கிட்டுதக் கணையு மீயக் கிடைத்தவர் நாதர் தம்மை
மட்டற வுவந்து வாழ்த்தி விடைபெற்று வழிக்கொண் டாரே (ாகஙு)

சிலபகல் கழிந்த பின்புசி ரார்த்தம்வந் துற்ற தாகப்
பலமறை யோர்க்குங் கூறிப் பண்புடன் சமைத்தி ருக்க
நலமிகு நாத ருள்ள நாடுதற் குன்னி யாங்கு
வலதிரி மூர்த்தி யானோர் பகீரர்க ளாகி வந்தார். (ாகச)

நாதரைக் கண்டுமிக்க பசியொடு நாங்கள் வந்தோம்
ஆதரித் தன்ன மிட்டெம் பசியவித் திடுக வென்றார்
காதலி யாரைக் கூவிக்க டிதன்ன மிடச்செய் வித்தே
ஓதரு முபசா ரத்தோ டுணச்செய்தா ருண்ட பின்பு. (ாகரு)

தாம்பூ லந்தந் தனர்பின்னு முபசா ரிக்க
வருமின் புற்று வருணபே தம்வேண் டாரொன்
றொக்கமற் றவர்க்குத் தங்க ளுருவங்கள் காட்டக் கண்டு
தொக்கவர் தமைச்சே வித்துத் துதித்தன ரேக நாதர். (ாகசா)

அவர்துதித் துறுபோ தெய்து மன்னவர் பகீர்க ளாகி
யவனபா ஷையிற்ற மக்கங் கன்னமிட் டதனுக் காகத்
தவநனி துதித்துத் தாம்பூ லந்தமக் கின்ப தாகப்
பவளவாய் சிவப்பக் கொண்டு பாங்குற வமரும் வேலை.. (ாகஎ)

நாதர்வீட் டுண்ப தாக நணுகுறு மறையோர் கண்டு
ஜாதியி லிழிப கீர்க டமக்கின்றே தனந்தந் தாயால்
நீதகாய் மறையோ ருக வெனச்சினத் தொடுநிந் தித்துட்
போதரார் போய்நாட் டாண்மைக் காரன்பா லிதுபு கன்றார். (ாகஅ)

அவ்வழி காரி யேக நாதரை யழைத்துச் சாதி
செவ்வனில் பகீர்க ளுக்குச் சிரார்த்தத்தி லன்ன மிட்டீர்
ஒவ்வுமோ யாவர்க் கேனு மெனவின வுறலு நாதர்
எவ்வமே பசித்து வந்தார்க் கிட்டன னசன நீவீர். (ாகக)

அதுபொறுத் தருளி வேறே யமைத்துள சுசிய தாகக்
கதுமெனச் சிரார்த்த முற்றிக் களித்துண வேண்டு மென்று
துதிசெய வவன்கே ளாமற் சொலுஞ்சிரார்த் தத்தில் வந்தும்
பிதிருண் பாரேல் யாமும் வந்துணப் பெறுது மென்றான். (௨௱)

எம்பிதிர் வந்துண் பார்நீ ரெய்துமென் றுடன்கொண் டேகித்
தம்பதி தனிற்பி துர்க்குஞ் சார்ந்தவர் தமக்கு மன்னம்
பம்புறப் படைக்கச் செய்து பிதுர்க்களைப் பார்த்து வேண்ட
நம்புறு பிதுர்க்கள் வந்து நாதர்பூ சிக்கப் பெற்றார். (௨௱க)

உண்டன ரமுது கண்டா ருடனுறு மறையோ ரெல்லாம்
வண்டமர் துளவி னானே நாதனாய் வந்தா னென்றுட்
கொண்டனர் பயந்து தாமுங் கூடவிண் டனர்பின் பார்க்கும்
தண்டலி னாதர் தாம்பூ லந்தந்து விடையுந் தந்தார். (௨௱௨)

இரவுற வரிதன் கீர்த்தி யேத்தியா ரதியுஞ் செய்து
பரவுறு பிரசா தந்தந் தனர்வினாம் பண்பி னோர்க்கு
விரவுமவ் வூரில் வாழ்வோன் வேதியன் கிர்ஷ்ண தாசன்
திரமொடு காளி தன்னைச் சிந்தித்துக் கவிசெய் வோனாய். (௨௱௩)

நாரத ரால்வான் மீகி நவின்றரா மாய ணம்போல
நீரபா கிருதந் தன்னிற் செய்தனன் யுத்த காணடம்
நேரதா கியபோ தோர்ந்த நிறைமறை யவரெல் லோரும்
சீரதாய் வியந்து நாதர் பாற்சென்று செப்பு கின்றார். (௨௱௪)

காளிதன் வரத்தி னாலே கவிஞனாய்க் கிர்ஷ்ண தாசன்
நீளிரா மாய ணத்தை நிகழ்பிரா கிருதந் தன்னில்
கோளிருங் கவிசெய் கின்றான் கூ றுமக் கவிக்கு நேரில்
கேளிரோ வென்றார் நாத ரரிபுகழ் கிளத்து கின்றான். (௨௱௫)

நன்றுநன் றெனம கிழ்ந்தா ரொருதின நள்ளி ராவில
சென்றுறு கிர்ஷ்ண தாசன் கனவிடைச் சேரு நாளை
ஒன்றுத யத்து னக்கு மரணமுண டாகு மோர்தி
என்றனள் காளி கிர்ஷ்ண தாசன்கண் விழித்தெ ழுந்தான். (௨௱௬)

புரிவுறு கிரந்த முற்றும்பூரண மாகு முன்னே
பரிவுறமரண நேர்வ தேதனைப் பாது காத்தற்
குரியதொன் றுண்டோ வென்று யோசித்துப் பலவு முன்னிச்
சரிவரா தேக நாதர் பாற்செலுறக்க தென்ன. (௨௱௭)

செயும்பிர பந்தங்கொண்டு சென்றுறப் பரித பித்துத்
துயிலவர் விழிக்கச் செய்து துணைச்சரண் டாழ்ந்து வேண்டி
உயும்வகை யியற்று மீது முடியுமு னுதயத் தாவி
னையுமுடி வுறுமென் றெய்திக் காளியே நவின்றா ளாதல். (௨௱௮)

குறைவுறா திதனை நீரோ முடித்தருள் கூறு மென்றான்
மறைவல நாத ரன்னான் வரைந்தபுத் தகத்தை வாங்கி
முறையுற நோக்கி யன்பின் மொழிகவி நனிநன் றென்னா
நிறைவுற லொருவர் வாக்கே லினிதென நிகழ்த்தி யீந். (௨௱௯)

முடிவுறு மளவுங் காலன் முந்துமு னும்மு னீவீர்
கடிமனை செல்க வச்சங் கடிந்தென்று கூறக் கேட்டு
நெடிதவ ரடியிற் றாழ்ந்து நிரம்பவா னந்தங் கொண்டு
விடியுமுன் மனைக்குள் வந்தான் விரும்புநூன் முடிக்க லானான் (உ௱௰)

வேறு.

தாவில்கரு நாடகதே சத்தின்மிகுந் தனவானோர் வணிகன் றுங்க
மேவியபண் டரிநாதன் றனக்கன்பன் மிகுதருமன் விளங்க லாகித்
தேவியலி லனைத்துநிரம் புறவிடோ பாவுருவந் திகழ்சொர் ணத்தால்
மாவியல்பு பெறவமைத்துப் பிரதிட்டை செயச்சுதினம் வகுத்தி ருந்தான் ()

அக்காலத் தொருதினத்தி ராத்திரியி லவன்கனவி லருள்வி டோபாப்
புக்காசி றேவகிரி தன்னின்மிகு பத்தசிரோன் மணியாய்ப் போந்த
தக்காரா இயவேக நாதரிடை நீபுகுந்து தருதி யானு
மிக்கான விக்கிரகந் தனையலையே லுனக்குமிகு துன்ப மேவும். (உ௱உ)

எனவுரைக்க வணிகன்விழித் தெழுந்துதுய ருறவெய்தி விடிந்த பின்றன்
கனவுநிலை தனைமறையோர்க் குரைக்கவவ ரிக்கனவு கண்ட வாறே
தினமொருமூன் றுந்தெரிந்தா லப்படியே நாதரிடைச் சேர்த்து கென்றார்
அனவிதமெ மூன்றுதின முங்கண்டான் கனவுடனே யவர்பா லெய்தி (உ௱௩)

விக்கிரகந் தனையெடுத்துக் கொண்டு சென்று நாதர்முன்பு விளங்க வைத்துத்
தொக்கவொரு மூன்றுதின முங்கண்ட கனவுதனைச் சொல்ல நாதர்
தக்கதொரு விக்கிரக சௌந்தரியந் தனைநோக்கிச் சந்தோ ஷித்து
மிக்கவன்பு கொண்டதனை மார்பொடணைத் துக்குறித்து விளம்பு கின்றார் (உ௱௪)

கருணைநிரை யுறுகடலே கண்ணுபாண் டுரங்காகா குத்தா நீசெய்
தருளுவதை யெவர்நிறம்பப் புகழுறுவா ரெனப்பலவா றுய்த்து தித்து
மருவுநல முகூர்த்தத்தி லவ்வூரார்க் கறிவித்து மகிழ்ந்தோர் பாங்கு
தெருளுமதைப் பதிட்டைசெய்தி ரொட்டுபசா ரமும்புரிந்து திகழ நோக்கி. ()

வெண்ணெயைக்கைக் கொண்டுநின்று விட்டலநீயிதைவிழுங்கவேண்டுமென்று
கண்ணபிரா னைத்துதிக்க வுடன் செவ்வாய் திறந்தருந்தக் கண்டார் யாரும்
எண்ணநிரம் புறுகளிப்போ டினிதுஜய ஜயவெனநன் கேத்திக் கண்ணன்
றண்ணளிநன் றெனவியந்து நாதரையும் போற்றிசெய்து தாழ்ந்து நின்றார். ()

பின் பெல்லோ ருந்திரண்டு மூர்த்திதனை வலம்வந்து பெரிது போற்ற
அன்புகொடு பிராமணசந் தர்ப்பணஞ்செய் தடைவொடுதக் கனு[illegible]புலம்
இன்புபெற வுதவினார் நாதர்வணி கன்புரிந்த யாவுங் கண்டு
தன்பதிவிட் டலனொருகா லேனும்வந்து புரியுமகோற்சவங்கொ[illegible]ள ()

எண்ணியுட னேகநா தரைநோக்கிப் பணிந்துதுதித் தென்னூர்க் கெய்தி
நண்ணியவிட் டலன்றனக்கு நாயகியா முருக்குமணி நங்கை தோன்றப்
பண்ணியறி விக்கின்றேன் கண்ணபிரான் றனைக்கொண்டு பரவென் னூர்க்குப்
புண்ணியரோ வந்துமணம் புரிந்தருள வேண்டுமெனப் புகல நாதர் (உ௱௮)

மகிழ்ந்துடன்பா டாகவுடன் வணிகன்விடை பெற்றவரை வணங்கிச் சென்று
மிகுந்தசௌந் தரியமுற வுருக்குமணி விக்கிரகம் விளங்கச் செய்து
தகுந்த முகூர்த் தம்பார்த்து நிச்சயித்து நாதனுடன் தன்னூர் நாதர்
[illegible]சொலியனுப்பி னன்றெரிந்து நாதருளம் புரிப்பாகி (உ௱௯)

மங்களவாத் தியமுழங்கச் சகலபரிவாரமுடன் வரவி டோபா
அங்கணுறக் கொடுவணிக ஹூர்க்கருகு மேவவவ னெதிர்கொண் டண்மித்
தங்கள்பரி சனங்களுடன் சகலமரி யாதைகளுந் தழைக்கச்செய்து
பொங்கமகிழ் வுடனழைத்துப் போந்துநிய மித்தழனே புகுதச் செய்து (உ௱உ0)

நிச்சயித்த முகூர்த்தத்தே சகல சம்பிர மங்களுட னியதி மேவப்
பச்சைமுகில் வண்ணனுஞ் செம் பதுமமலர் மகளுந்தம் பதிக ளாக
இச்சையுற மணம்புரிந்து பிராமணசந் தர்ப்பணமு மியற்றி நாதர்
அச்சுதன்றன் கீர்த்தனங்க டினந்தோறு மொருதிங்க ளளவுஞ் செய்தார். ( )

வினவியவ்வூர் தனிலுள்ளோர் ஞானபத்தி மிகமேவ வணிகன் பெண்சீ
தனமுதலி யனவுதவக் கொண்டுபரி வாரங்க டழைத்துச் சூழக்
கனமிகுமங் களகோஷ முறத்தேர்மேற் றம்பதிகள் கவினவேற்றி
மனமகிழ்தம் மூர்க்குவந்து பதிட்டைசெய்து கீர்த்தனங்கள் வழுத்தி வாழ்ந்தார்

வேறு

வாழுநா ளோர்நாட் டம்பால் வசிக்குமுத் தவனை நோக்கி
வேழமுன் கூவ வந்தோன் பண்டரி மேவி யாரும்
தாழும்விட் டலன்றன் பாதந் தரிசித்து மீளுங் காறும்
கேழுலா வுறவி வாகங் கெழுமியிங் குறைத லான (உஉ௩)

விட்டலன் றனைப்பூசித்து வருகென விளம்பி நாதர்
முட்டில்சா துக்க ளோடு தாளமத் தளமு ழங்கத்
தொட்டவீ ணையின்மா ணுமந் துளங்குறத் துதித்துச் கொண்டு
கிட்டினர் சந்த்ர பாகை கிளருநீ ராடுங் காலை (உஉ௪)

அங்குள பாண்டு ரங்க னர்ச்சகர் வேசமாகிப்
பொங்குறு மன்பின் மிக்குப் பொருந்துறு மேக நாதன்
தங்குமிங் கென்னைக் காண வந்தனன் சந்த்ர பாகைத்
துங்கநீ ராடு கின்று ளுதலா னீவிர் சூழ்ந்து. (உஉ௫)

யான்வெளி வரும்போ தெய்தும் யாவையும் விளங்கக் கொண்டு
நான்முறை யெதிர்கொண் டேத்தி நுவன்மரி யாதை யாவும்
மேன்மிகப் புரிந்த ழைத்து வருகென விளம்பக் கேட்டு
நான்மறை யவரொல் லோரு நன்றுநன் றெனவி யந்து. (உஉ௬)

அகிலகா ரணனு நாத னுணையின் படிதப் பாமல்
சகலவாத் தியமுங் கோஷந் தரவிரு துகளுஞ் சூழப்
புகலருஞ் சந்தர பாகை பொருந்தினோர் தமைக்கண் டேத்திக்
ககபதி நாதன் சொன்ன படிதனைக் கழறக்கேட்டார். (உஉ௭)

பரமவா னந்த ம்பாடிப் பாண்டுரங் கனைப்பல் லாறு
சரதமாந் துதிகள் கொண்டு சகலசம் பிரமத் தோடு
வரமிகு புண்டலீகர் மிலரடி வணங்கிப்போற்றிப்
புரம்வலம் வந்துமேவிப் புள்ளர சுறுதம்பத்தில். (உஉ௮)

அங்கமோ ரெட்டுந் தாழ வணங்கின ராகிக் கோயிற்
செங்கன்மே னிலைசெய் தாளுஞ் சீதரன் றனைச்சே வித்துப்
பொங்குமா னந்தக் கண்ணீர் பொழிதரத் தழுவிப் போற்றித்
தங்கினா ஞானன் காறுந் தரிசித்துக் கொண்டு மேவ. (உஉ௯)

சதுர்த்தசித் திதியி லேயர்ச் சகன்கணு வேச மாகி
முதுமறைப் பொருளேயான விட்டல மூர்த்தி யின்று
கதுமெனப் பானுதாசன் கதையைக்கீர்த் தனங்களாக்கிப்
புதுமைசெய் தேத்து கென்னப் புகன்றன னுதர் கெட்க. (உ௯௰)

வினவியா னந்தங் கொண்டு மேவுதங் குலத்தோ ரான
தினகர தாசர் கீர்த்தி தெரியக்கீர்த் தனங்க ளாக்கிப்
பனகசத் துருகம் பத்தி னடிநின்று பாடிப் போற்றி
அனக பிர சாதந் தந்தங் கருள்பெற்றுத் தம்மூர் சென்றார். (உ௯௧)

வேறு.

சென்றி ருந்துதி னந்தொறு மால்புக
ழென்ற பாகவ தம்பக லெய்துற
மன்ற வோதி வருமிர வின்கண்மால்
நின்ற கீர்த்தன நீதியிற் பாடுவார். (உ௯௨)

ஆன நாளொரு நாளவர் தம்முகம்
மான வேதிய னும்வடி வங்கொடு
ஞான கேசவ நாமம்பு னைந்தவர்
தான மேவித்த யங்குறும் விட்டலன் (உ௯௩)

பார்த்திங் கெய்தின னுண்டுப னிரண்டு
தீர்த்த யாத்திரை செல்வ னினியென
வார்த்தை கேட்டுவ ணங்கிச்சென் றெங்கணும்
பேர்த்தும் வந்துமைக் காணப்பெ ரிதருள். (உ௯௪)

செய்க வென்னநன் றென்றுடன் சென்றனன்
ஐயன் பின்புதி னந்தொறு மாங்கவர்
மெய்யன் போடுவி ளம்புபு ராணமும்
தெய்வ கீர்த்தன மூஞ்செவி சேரவே (உ௯௫)

வெளியி ருந்துசத் பாவிக னுகியும்
எளிய னைரா னுவேன்பு லையனும்
களிகொ ளும்மவன் காதலி யும்வி னுய்த்
தெளிம னத்தினர் செல்வழி யாவையும். (உ௯௬)

குப்பை போக்கிச்சுத் தப்படுத் திக்கொடு
தப்பின் மெய்ப்பொரு ளேயிவர் தாமெனு
ஒப்பி னுதனை யுன்னித்தி னந்தொறும்
திப்பி யத்தவ னைத்தரி சித்துளார். (உ௯௭)

இன்ன வாறவ ரெய்துறு நாளொர்நாள்
அன்ன வன்றனை நோக்கிய வன்புணர்
பன்னி விட்டல னேயிந்தப் பாரெலாம்
நன்ன லம்பெற நண்ணின னுதராய். (உ௯௮)

என்ப துண்மையி னுலவர் யாமினி
தன்பி னூட்டும முதொரு வேளைகொண்
டின்ப மாவமொ னினங்கு லத்துடன்
[illegible] மென்றனள் (உ௯௯)

எனவி ளுவிய வன்பெரி தின்பமாய்
அனகர் தாந்தனி யாயுறு போதெதிர்
நனய மேவவ ணங்கினன் கேத்தியெம்
இனமெ லாமப வர்க்கத்தை யெய்தவே. (உசய)

ஒருதி னத்தென் பவனத்தி லுற்றியான்
தருசு வைக்கறி தம்மொ டுணவுணப்
பெரிது நீரருள் செய்கெனப் பேசினுன்
தெருளி னுரவ னன்பினைத் தேர்ந்தனர். (உசக)

நின்க ருத்தின் படிநிறை வேற்றுவேன்
நன்கெ னச்சொல நாதரைக் கைதொழூஉ
தென்க ருத்துநி றைந்ததென் றில்லவள்
புன்க ணீங்கப்பு கன்றனன் போயரோ. (உசஉ)

வழுத்தக் கேட்டும கிழ்ந்து மறுதினம்
தழைத்த வன்புத கச்சமை யற்செய்து
பழுத்த ஞானப்ப ருணிதர் தம்மைநீ
அழைத்து வாவென்ற றைந்தன ளன்பற்கே. (உசங)

நாதர் நானந டத்திவ ரும்வழிப்
போதல் செய்துவ ணங்கிப் புரையிலீர்
ஓத னஞ்சமைத் துற்றது ணற்குநீர்
காதன் மேவிவ ருகக டிதென்ருன். (உசச)

தனிவந் தார்நன்றெ னப்பின்பு சார்தரும்
புனித வேதியர் கேட்டுப்பொ ருதுளம்
முனிவு கொண்டு புலையனின் முந்திநீர்
இனித ருந்தற் கிசைந்ததிங் கேற்குமோ. (உசரு)

இசையு மற்றிதற் கேதகுந் தண்டநும்
மிசைசு மத்திட வேண்டுமென் ருரதற்
கசைவி லுள்ளத் தறுபகை செற்றுவெம்
பசைய றுத்தரி பத்தியில் விஞ்சினேன். (உசசா)

பரம சீலனி வனைப்ப றையனென்
றுரன்மி கத்தெளிந் திருளைக் கத்தகா
திரவு கண்டுநன் றென்றனன் யானதைத்
திரனு ளீர்கமை செய்தருள் கென்றனர். (உசஎ)

வேண்டல் கொண்டில ராய்மறை வேதியர்
பூண்ட தண்டம்பொ றுக்ககி லீரெனில்
நீண்ட ஜாதியி னின்றுங்க ழிப்பமென்
றூண்டந் நாதர் தமையழைத் தேகினர். (உசஅ)

பெருகி யாற்றிடை வைத்துப்பி ராய்ச்சித்தம்
தருவ தானத ருதியெ லாங்கண்டு
மருவு ராணு வெனுமவன் மம்மர்கொண்
டருகி யோடி மனைவிக்க றைந்தனன். (உசகூ)

கேட்டு மற்றவ ளுதர்கி டைத்துநம்
வீட்டு ளுறொனி வித்தினம் வீவது
கூட்டு வேனெனக் கூற வவனவள்
மாட்டு மேவுவ ருத்தம கற்றுவான். (உருய)

நாதர் தீனத யாளர்நம் வேண்டலிற்
காதல் செய்தருள் கிற்பர்க லங்கனீ
போதல் செய்கில ரென்னிற்பொ ருந்தியாம்
வீதல் செய்குவ மென்றுடன் மீண்டனன். (உகரு)

சிந்து விற்றண்டஞ் செய்வித்துக் கொண்டுறும்
முந்து ஞானமு திர்வுறு நாதர்பால்
வந்து கண்டுவ ணங்கிவ ருகென
நொந்து கூறநன் றென்றுநு வன்றனர். (உருஉ)

வருவ ரொன்றுண் மகிழ்ந்து திடமுறீஇ
மருவி ஞனக மெய்திவ ரும்வழி
கருதி நோக்கின ளுகக்க கரையுறூஉம்
பொருவில் வேதியர் கேட்டுப்பு மூங்கினர். (உருங)

முன்னர் நீயிர்மொ ழிந்ததற் கேதண்டம்
நன்ன திக்கரை நாடிச்செ யும்பொழு
தின்ன மும்புகல் கின்றனி ரெங்கண்முன்
என்ன செய்வ திதற்கென வெண்ணினர். (உருச)

ஆகிச் செய்வ தனைத்தும்பு ரிந்தந்த
யோகி யைக்கொடு வீட்டகத் துய்த்துயிர்
போகி யற்றிலும் பொய்சொல்கி லாரிவர்
ஏகி யற்றுவ ரென்றகங் காத்தனர் (உருரு)

மேவு நாதர்தம் வீட்டிடைத் தாஞ்செயும்
தேவ தார்ச்சனே செய்துபி ராமணர்க்
காவ தாமமு தாதியுஞ் செய்வித்துத்
தாவி லன்னந் தகவருந் திப்பின்பு (உருசு)

சொல்ல பாகவதந்தொடங் குற்றவவ்
வெல்லை ராணு வெனுமவன் கூப்பிட
வல்லைப் பின்பு வருகிறே னீமுன்பு
செல்லுகென்னத் திடஞ்செப்பிப்போக்கினர் (உருஎ)

போக்கி விட்டல னைப்புந்தி நேருற
ஆக்கி நீசன தன்புநி றைவுறச்
சீக்கி ரத்தருள் செய்கென வேண்டினர்
ஊக்கிப்பாகவ தஞ்சொல லுற்றனர். (உருஅ)

நாதர் வேண்டலை நன்குதெ ரிந்துடன்
சீத ரன்புலை யன்மனை சென்றனன்
காத ஞுதரு ருக்கொடு கண்டனன்
பாதபங்கய மேத்திப் பணிந்தனன் (உருகூ)

ஆதனத் தம்ரச்செய்து பசரித்
தோத னத்தைக்க ரிகளு டன்மனே
மாத ருத்திகொ டுபரி மாறச்செய்
தாத ரத்தின ருத்தின னுண்ணவே (உசுய)

இங்கு நாத ரிருத்தல்செய் கின்றனர்
அங்கு நீசன யர்வதி யாதெனத்
தங்கு மிற்புற மற்றவர் சார்கிலா
தெங்குங் காத்திருந் தாரொண்ணி லாரரோ. (உசுக)

எண்ணி நீசன கத்திடை யெய்தியங்
குண்ணு நாதரு ருவினைக் கண்டனர்
ஒன்னு மோவி தெனுவுடன் ரோடினர்
நண்ணு மில்லிடை நாதரைக் கண்டனர் (உசுஉ)

ஈண்டுப் பாகவ தம்மிசைக் கின்றனர்
ஆண்டு புன்குலத் தானமு துண்கின்றார்
யாண்டுத் தேர்வ திவர்நிலை யென்றுபோய்
மீண்டு பன்முறை கண்டுவி யந்தனர். (உசுங)

நிலையிற் பாகவ தஞ்சொல்லு நேயரை
புலையன் வீட்டிற் போசித்திரொன் றெப்படிக்
குலையக் கேட்பதென் றேயுளங் கூசினார்
அலையப் பெற்றுள் ளகந்தடு மாறினார். (உசுச)

விண்டு தாசர் மகிமைவி ளம்புதற்
கண்டு மோவென் றறைந்தேக நாதரைக்
கண்டு பூசித்துக் கைதொழு தேத்தினர்
மண்டு நீதி மறைவர் யாருமே. (உசுரு)

வேறு

அவ்வூரி லொருமறையோற் கரும்பெறலாய்ப் பரிசக்கல்
கைவாய்த்த ததுகொண்டு கனகஞ்செய் துறுகுடும்பம்
உய்வாறு வருகாலத் துறுமனைவி யொடுபுதல்வன்
நைவாக விறந்தனர்மற் றதனிலஞர் நண்ணினனாய் (உசுசு)

காசியாத் திரைசெலற்குக் கருதியுறு பரிசக்கல்
மூசுவழு தனிற்றவரு மெனக்கொடுபோ தற்குமுன்னான்
ஆசிலவ ரிடத்திடைவைத் தகலமனத் தெண்ணியொரு
மாசுமிலர் நாதரென மற்றவர்பாற் கொண்டுசென்றான். (உசுஎ)

சென்றவர்த மடிவணங்கிச் சிறந்தபரி சக்கலிது
நன்றுதரும் யாத்திரைபோய் நான்வருங்கா றும்பிழையா
தொன்றவும தகத்திடைவைத் துதவுகெனக் கையிற்கொடுக்க
அன்றவனை நோக்கியிக் தாற்றுறுகற் களிலொன்றே. (உசுஅ)

யாதிதற்கு மேன்மையென வவனிரும்பைப் பொன்னுக்கும்
மாதகவுள் ளதெனவன்ன மாட்சிபெற்ற தோவிதென்று
கோதறயாத் திரைமேவக் குறித்ததலந் தீர்த்தமெல்லாம்
தீதறநீர் போய்வருதி யென்றுவிடை செய்தருளி (உசுகூ)

மற்றவன்கண் காணநிரு மாலியம்பெய் குப்பையிடைப்
பற்றுறவீ சினரதனைப் பார்த்திஃது வழுவுறுமேல்
நற்றவரோ தரத்தகுவ தெனவணங்கித் தானடந்தான்
குற்றமறு தீர்த்தமெல்லாங் குறுகியன்பு கொடுபடிந்தான். (உஎ0)

ஓராண்டி யாத்திரையு முனுற்றியபி னம்மறையோன்
சீராரு நாதரிடை வந்தவர்சே வடிவணங்கி
ஏராரு மெனதுபரி சுக்கல்லை யீமினெனக்
காரார்மே னியனன்பர் காணவெறி குப்பையிலே (உஎக)

கண்டெடுத்துக் கொள்ளுமெனக் குப்பையிற்றே டிக்காணான்
மண்டுசிர மத்துடனே மனத்துயர்வின் சினனாகி
அண்டினரைக் கேட்கநீர் வருமளவு மானகுப்பை
கொண்டுபல தரமாற்றிற் கொட்டினமிங் குறத்தேடில் (உஎஉ)

கைப்படுமோ யாற்றிடைப்போய்க் கண்டெடுத்துக் கொள்கவென்றார்
அப்படியோ வெனமறையோ னளர்மிகுந்து நாதரைப்பார்த்
தெப்படியா னுய்வதென விரக்கமனத் துள்ளவராய்த்
தப்பறயாற் றிடைக்காண்போஞ் சதுமறையீர் வருகவென்று (உஎங)

கூய்க்கொடுசென் றாற்றினிடைக்கு ளித்தொருகை நிரம்புகற்கள்
வாய்ப்புறக்கொண் டிவற்றிலுங்கல் யாதென்ன வம்மறையோன்
தேய்ப்புறத்தான் கொண்டுவந்த விரும்பினிற்றேய்த் தொவ்வொருகல்
லாய்ப்பார்க்க வவ்வளவும் பரிசக்க லாயினவே (உஎச)

மிகவியந்து நாதரைவிட் டலனேயென் றகம்விரும்பித்
தகவணங்கித் தனக்கொருகற் றான்வேண்டு மெனக்கொண்டே
அகமடைந்தான் கொண்டகற்க ளனைத்தையும்யாற்றிடைவீசிச்
சகபதித னன்பர்நதி மூழ்கியகந் தாஞ்சார்ந்தார். (உஎரு)

வேறு.

மற்றோர் தினத்தல் லிடைச்சோர ரோர்நால்வர் வந்து
கற்றோர் மடத்துட் சிலவொண் பொருள்கைக்கொ டேக
லுற்றா ருடனுல் வருங்கண் டெரியாம லோடல்
அற்றார் தடவிக் கொடுநாதர் தூங்கங்கு வந்தார். (உஎசு)

நாட்டந் தெரிந்து தியானத் துறுநாதர் தம்மை
நீட்டன்பு கொண்டு பணிந்தா ரவணிற்றல் கண்டார்
ஈட்டங்கொ ணீவி ரெவரென் செயவந்தி ரென்னக்
கேட்டங் கவர்யாந் திருடற் கிவண்கிட்டி னேமால். (உஎஎ)

துரிசின் மடத்திற் பொருடொட் டனந்தொட்ட போதே
தெரியெம் விழிக டெரியா திவண்சேர்ந்து பெற்றோம்
பெரிதெம் விழிக ளுமைப்போற் பெரியார்க ளுண்டோ
அரிதிங் கணுக லெனத்தேர்ந் திலமாகி வந்தோம். உஎஅ)

வந்தோம் புரிந்த பிழைதேவர் மன்னித்தல் வேண்டும்
முந்தா தரங்கொண் டெனப்போற்றி மொழிந்த போது
செந்தா மரைமேன் மகள்சேர் மணிமார்ப னன்பர்
அந்தோ விதனைக் குறித்தஞ் சுதலேதும் வேண்டாம். (உஎகூ)

நீர்வேண் டுவதே திவணுள் ளதினேர்ந்து கொண்மின்
சோரீ ரெனமற் றவர்நாதர் சொல்வண்மை நோக்கிக்
கார்மே னியனைப் பொருவீர் நடுக்கங்கு றன்னில்
நேர்வீ ரெமக்கன்ன மெம்வெம் பசிநீங்க வென்றார். (உஅ௰)

உடனே கிரிஜா பாயிதன் றுயிலை யுணர்த்தி
மடவாய் விரைவிற் சமையற்செய் துவந்த நால்வர்க்
கிடவேண்டு மன்ன மெனப்பெண் ணரசென்னு நங்கை
கிடமாக நல்லுண்டி யட்டிட் டினிதின்பு செய்ய (உஅக)

அந்தப் பிரசாத முண்டன்பு மிக்காங் கவர்க்கு
முந்தைக் கெடுதுன் மதிநீங்கி யம்மூர்த்தி தன்னால்
பந்தப் படுபாச நீங்கத் தயைபண்பு பெற்றுச்
சிந்தைக் கிதமாய் விடைபெற் றுடன்செல்ல லானார். (உஅஉ)

வேறு.

மற்றொரு தினங்கள வயர்ந்து மன்னனால்
உற்றதண் டச்சிறை யுறைந்து போனகம்
பெற்றிலன் பலவிதப் பீழை யாலுயிர்
முற்று றுமபல னாய்மோச னம்பெறீஇ. (உஅ௩)

வெளிவரும் பறையன் மெல்லென நடந்துசீர்
ஒளிவரு நாதர்தம் மடமு னோர்புடைத்
தெளிவில னாய்க்களைத் துத்தி கைத்துறக்
களிதருங் கண்ணன தன்பர் கண்டனர். (உஅ௪)

இருட்டினி லிசென்கறுப் பான தென்றுபோய்த்
தெருட்டர மானிட னெனத்தெ ரிந்தெவன்
பொருட்டிவ ணுற்றது புகறி யென்றனர்
மருட்டுவெம் பசியினால் வாய்தி றந்திலன். (உஅ௫)

கையினாற் பசியெனக் குறித்துக் காட்டினன்
மையிலா ருணவிலா திவன்ம யங்கினான்
நையினா னுனக்குணா நல்கில் விக்கியிங்
குய்விலா னவனென் றுளத்து ணர்ந்தனர் (உஅ௬)

சக்கரை கலந்தபா றன்னை வள்ளத்தில்
கைக்கொடு விரைந்தவன் கண்வந் தூட்டினர்
அக்கணத் தவனினி தருந்திச் சோர்வெலாம்
உக்கன னாகிநல் லுணர்வு கூடினான். (உஅ௭)

நாதரை நோக்கிநான் பறைய னன்மதி
வீதலாய்க் களவுசெய் மிகையில் வேந்தனால்
நோதலாந் தண்டனை நுனிக்கப் பட்டுயிர்
சாதலாந் துன்புறீஇத் தளர்ந்துற் றேனரோ. (உஅஅ)

இத்தரு ணத்தெனைக் காத்த ளித்தநீர்
மெய்த்தளர் வகலுநா ளளவும் வேண்டியென்
னைத்தனிக் காத்திரே லலகில் புண்ணியம்
உத்தம ரேபெறு வீரென் றோதினான். (உஅ௯)

உனதிசை யின்படி யுறைதி யிங்கெனக்
கனமிகு நாதர்கட் டுரைக்கக் கண்டயார்ப்
பனரொலாம் பறையனுக் குபச ரிப்பதை
மனமிகப் பொறுர்களாய் வசைசெய் தேசினூர். (உகூ௰)

அப்புலை யன்பின ரநேக நாள்வரை
மெய்ப்புகழ் நாதருச் சிட்ட மேவியுண்
டொப்பறு ஞானநல் லன்புண் டாகியே
தப்பறு விடையின்யாத் திரைக்குச் சார்ந்தனன். (உகூக)

வேறு.

ஒருநா ளவர்நா னமுளுற் றுறுவான்
வருமா றநசின் றலைவை கியதாம்
அருமா மறையா னெனும்ர க்ஷசுகண்
டிருமா நிலமேத் துநலம் பெறுவீர். (உகூஉ)

என்றே தனுருக் கொடுவந் தெதிரோ
நின்றே வர்களுக் குநிரம் பவணம்
நன்றே யினிதிட் டநலங் களெலாம்
குன்றே யெனநின் றுருவிந் ததிலே. (உகூ௩)

பறையன் பெறவிட் டபலத் தினையான்
குறைவின் றுபெறத் தரிலோ கொடியேன்
நிறையும் பரிசுத் தநிலா வுவனென்
றறையும் பொழுதன் பொடுதந் தனரே. (உகூ௪)

உடனே யதுதிவ் வியரு பமுறீஇத்
திடனு யவர்சே வடியைப் பணிவுற்
றிடனூர் துதியெண் ணிலசெய் துவிடைக்
கடன்மே விமறைந் ததுகண் டனரே. (உகூ௫)

முன்னு தனைநிந் தைமொழிந் தபல
பன்னுன் மறையோர் கள்பயந் துவியந்
தின்னு மொழிபே சறகா தெனவே
நன்னு தனையேத் திநயந் தனரே. (உகூ௬)

வேறு.

பின்புவட மொழிப்பாக வதம தன்னைப்
பிராகிருத டீகாவா கவும்பல் லோர்க்கும்
அன்புதரும் ஹஸ்தாம லகநூ றன்னை
யப்படியே டீகாவா கவும மைத்துத்
தன்பொருவில் சுகாஷ்டகத்தை டீகா வாகச்
சமைத்துமநே கம்மபங்கங் களுமநேகம்
இன்பமிகு பதங்களுஞ்செய் தனரந் நாத
ரிவையெல்லாந் தெரிவுறக்கேட் டடறிஞர் யாரும். (உகூ௭)

மிகவுமா னந்தமடைந் தனர்மற் றங்கோர்
வேதியன்பா கவதட காவைப் பெற்று
மகிழ்வுகொடு தினம்பாரா யணஞ்செய் தற்றேன்
மகிமைதரு காசியாத் திரைக்குச் சென்று

தகவுதருங் கங்கையினீ ராடி யாங்குத்
 தருமணிக ரணிக் கட்டந் தனிலுட் கார்ந்து
புகழ்வுறும்பா கவதமெ காவை முன்பு
 போற்பாரா யணஞ்செய்தான் புனித மாக. (உகூஅ)

அப்போதவ் வூரிலுறு சாஸ்தி ரத்தா
 லறிவுவல்ல சன்னியா சிக்கு கப்பில்
தப்பாத சீடர்நா னஞ்செய் தற்குச்
 சார்ந்த விருவரும்பாக வதமெ காவை
ஒப்பாக வினவிமிக வுஞ்சு வத்தா
 யுள்ளதிது வென்றதனை யுரைப்போன் றன்னை
மெய்ப்பாக நோக்கியிந்தக் கிரந்தஞ் செய்த
 மேதக்கோர் யாவரென வினவப் பார்ப்பான். (உகூகூ)

நலமிகு தேவகிரி தன்னில் வாழுமேக
 நாதர் செய்த தென்றுரைக்க ஞாலந்தன்னில்
இலகியிது பிரசித்த மானல் யாரு
 மினித்தேவ பாஷைப்பா கவதங் கேளார்
புலமுறவென் றுளங்கொண்டு தமதா சன்பாற்
 போ யுரைக்கச் சன்னியா சிக்குக் கோப
வலமுளதா யிதுசெய்த வனைய ழைத்து
 வாயடக்கித் தண்டிக்க மனதிலெண்ணி (கூா)

நாதருக்கோர் கடிதம்வரைந் திரண்டு சீடர்
 நண்ணியவ ரிடைக்கொடுக்க நல்கலோடும்
மேதகவோ ரிடைச்சென்று கொடுக்க வாங்கி
 விரித்ததனை வாசித்து நன்குதேர்ந்து
தாதரா கியவுத்த வரைக்கூஉய்க் காசித்
 தலங்கண்டு வரவேண்டுஞ் சாருங்காறும்
நீதமொடு நான்செய்யும் விண்டு பூசை
 நெறிமறையோ ருண்டிபுரா ணகாலட்சேபம். (கூாக)

பகலியற்றி யிரவிலரி கீர்த்த னங்கள்
 பாடிவழு வாதுவரல் வேண்டு மென்று
தகவுரைத்துத் தமையழைக்க வந்தோரோடு
 சார்ந்துகா சிக்கங்கை தனினீ ராடி
அகமகிழ்ந்து பூசைசெய்து தியானத் தூற்று
 ரழைத்துவந்தோர் தமதாசா னருகிற் சென்று
புகலமடத் தழைத்துவந்து வைமி னென்று
 புகன்றுதொடர் மூந்நூறு சீடரோடு. (கூாஉ)

நல்கு பிச்சை பெறப்போகு னிருவரும்போய்
 நாதர்வரக் கூய்மடத்தி னண்ணச் செய்தார்
மல்கிவரு சீடர்முக நோக்கியாசான்
 வந்தனன்முன்னோர்கவியை மழுங்கச் செய்தோன்

ஒல்குறவொவ் வொருவருமை யைந்து குத்தா
யோங்கியுறக் குத்துமின்பின் னுறுகின் றேனீர்
செல்கமுந்தி யெனவிளைந்தவ் வண்ணஞ் செய்யச்
செலுஞ்சீடர் தம்மிற்சிற் சிலர்யோ சித்தே. (௩௱௩)

குருவுரைத்த படியே போயவன் வருத்தங்
கொளக்குத்தி லுயிர் போனாற் கொலைப் பாவந்தான்
வருநமக்கன் றேவதனா லவனை நேர்ந்து
மற்றவன்ற னியலறிந்து செய்யத்தக்க
சருமமியற் றுறுவோமென் றெருங்கு கூடிக்
கவிநாதர் முன்பு வந்து கண்டபோது
திருமகிழும் விட்டலன்றன் வடிவமாகத்
தேசொடு தோன்றினார் கண்டு திகைத்தாராகி (௩௱௪)

பயபக்தி மிகத்தெளிந்தட் டாங்கமாகப்
பாதபது மம்பணிந்து பல்லாறேத்தி
நயமுற்ற குருசேவை செய்து நாளு
நண்ணுறுமப் பொருடனையே நண்ணினோ நாம்
முயலவற்றென் றின்பநல மானவாரி
மூழ்கியுல குக்கெல்லா முதன் முகுந்தா
கயமெய்க்க வருமூல நாதா கண்ணா
காகுத்தா வெனத்துதித்துக் கருதி நின்றார் (௩௱௫)

புறத்திவை யெல்லாங்கேட்டு நின்றங்குள்ளே
போகாத வொருத்தன்போய்ச் சன்னியாசிக்
கறத்தடிய வனுப்பியபே றொல்லாரும்போ
யணுகிய நாதன்றன்னைப் பணிந்துபோற்றி
விறப்பொ டிருந்தன ரென்னக் கேட்டு நாதன்
மேதினியோர் தனைக்கண்டு மெய்ச்சு மாபோல்
சிறப்பிவருஞ் செயவசியஞ் செய்து கொண்டான்
செய்கை நன்று நன்றென்ன மிகச்சினந்தான். (௩௱௬)

நீமுன்போய் நானிருக்கு மாசனத்தை
நிறையச் சுற்றிலுந் திரையிட் டிருத்தியென்ன
ஆமன்போ டவனோடி யவ்வாறாக
வமைத்திருக்க வேறுவழி யாய்ச் சன்யாசி
தோமின்றி யுறையுமடம் வந்துட் புக்குத்
தொண்டனிட்ட திரைக்குளுறு மாசனத்தில்
தீமண்டு சினத்தொடிருந் தூரப்பிநாதர்
திருமறையோர் குலத்துமிகச் சிறந்தோனாகி. (௩௱௭)

உத்தமமெய்ப் பதமான சன்னியாச
முறவகித்துக் கொண்டுளயா னுன்கபட்டு
வித்தையைச்சீ ரழித்துநினைத் தண்டித்தோட்ட
மேவினே னெனச்சாந்த விமலரானோர்

சுத்தபவித் திரமதுர வசனங்கொண்டு
    சுவாமியுமைத் தொழுகின்றேன் பாலனேன் யான்
மெத்தமகி மைத்திறத்தும் பக்தன் மேவ
    விரைந்தழைத்து வரச்செய்து முகங் காட்டாமல். (கூாஅ)

திரைக்குளிருந் தறச்சினத்துப் பேசுமாயான்
    செய்த குற்றம் யாதுளதேற் பொறைசெய் தீண்டும்
விரைக்கமல முகந்தெரியத் தோற்றஞ் செய்ய
    வேண்டுமென வேண்டினார்வினைய்ச் சன்யாசி
உரைத்த சுகுணச்சொற்க ளாற்கோபம்போ
    யுறுசாந்த குணனாகித் திரையைநீக்கி
வரைக்கு நிகர் குணநாதர் தம்மை நோக்க
    வனமாலை யணிகண்ணன் வடிவாய்க் கண்டான். (கூாகூ)

கண்டுபயந் துறவியந்த நாதர்பாத
    கமலத்திற் சாஷ்டாங்க மாய்ப்பணிந்து
தொண்டுகொள வோவந்தாய் கண்ணா வென்னத்
    துதிசெய்து நிற்பளவிற் கண்ணரூபம்
விண்டு தேவ கிரியுறு நாதராக
    விளங்குதல் கண்டிவ் வேகநாத ரூபம்
கொண்டபரந் தாமனே வந்தானிந்தக்
    குவலயங்க ளீடேற வெனக்கொண்டாடி. (கூா௰)

அருகில்வந்து பாதங்க ளிரண்டுங் கைக்கொண்
    டறிவிலேன் பிழைகள் பொறுத்தருள்கவென்றுன்
னுருகிநிலங் கிடந்தானை நாதர்தூக்கி
    யுறநிறுத்தி நிலையிலுயர் வீர்நீ யென்னைப்
பெருகநினைத் துப்பணியத் தகுமோ வென்று
    பேசியுப சரித்திருக்கச் செய்தார் பின்பு
முருகுறழ்நீர் பொழியும்பா கவதங் கேட்க
    முன்னுகின்றேன் மொழிந்தருள வேண்டு மென்றான். (கூகக)

நாதரன்பு கொண்டுரைசெய் கவிகளெல்லா
    நவிலக்கேட் டுத்துறவி யவச மேவி
ஓதவரை மிகப்புகழ்ந்து நீவிரொன்பா
    லோங்குதலை செய்தநன்ன ருறல்வேண்டுஞ்சின்
மாதவள வெனவேண்ட விசைந்து நாதர்
    மருவினர்சீர்த் தனபுரா ணங்கள் பாடிப்
போதவுணர் துறவிபா கவத மவ்வூர்ப்
    புகன்றரங்கேற் றக்கருதிப் பொருந்தச் செய்தான். (கூகஉ)

பண்டிதர்க டெரிந்துநம தாசான் றன்னைப்
    பாரோரை மயக்கியவப் படிம யக்கிக்
கொண்டிணைசே வடிவணங்கக் கொண்டானுதன்
    கூறினபா கவதத்தை நாமெல்லோரும்

அண்டியத னைப்பறித்துச் சென்று கங்கை
யாற்றிடைவீ சத்தகுமென் றறத்து ணிந்து
மண்டினர் போய் மடந்துறவி தனைவ ணங்கி
மறைக்குலத்தெங் களுக்கெல்லாம் வாய்ந்த சாமி (௫௧௩)

நாதன்செய் பிராகிருத கிரந்தத் தைநீர்
நன்றென்றங் கீகரித்த லாரியத்தில்
மேதகுபா கவதகிரந் தத்துக்கேது
மேன்மையத னாலிதனைக் கங்கை யாற்றில்
ஆதரமில் லாதெறிந்து விட்டான் மேவு
மனைவருக்குஞ் சம்மதமா மெனச்சன் யாசி
நீதமறை யவரோயா னும்மவ் வாறே
நினைத்தேன்மற் றிவர்முகமுன் னோர்ந்த போது (௫௧௪)

கண்ணனே யிவர்வடிவா யவத ரித்துக்
காசினியை யீடேற்றக் கலந்தா னென்றென்
றெண்ணமதிற் றோன்றவிளங் குகின்றா ரீங்கே
யிவராத லானீவி ரெல்லா ருஞ்சேர்ந்
தண்ணலிவ னைப்பணிந்தா ளாவதன்றி
யயர்வதுவே றில்லையென வவர்கேளாமல்
திண்ணநினை வுடனேக நாதர் முன்பு
செறிந்தபத்த சத்தைவலிந் தெடுத்துக் கொண்டு (௫௧௫)

சென்றாற்றி லெறிந்தனரப் போதுகங்கை
தேசுசெறி கங்கணங்கொள் செங்கை நீட்டி
நன்றாத ரத்துடனேற் றுக்கொண் டாள்பெய்
நான்மறையோ ரதுகண்டு நனிப யந்து
பொன்றாத ஞானநலம் பெறுநம் மாசான்
புகன்றதுமெய் மெய்யென்று போந்து நாதர்
முன்றாளிற் பணிந்துபல துதிசெய் தெங்கண்
மூர்க்ககுணச் செய்கைபொறுத் தருள்க வென்றார். (௫௧௬)

சிலமறையோர் சென்றாற்றில் விழுந்து நீந்திச்
செறிகங்கை யங்கையிற்புத் தகத்தைக் கொண்டு
வலதுறவி பாலணுகித் தந்து சாமி
வருத்த றுஞ்சொன் மறைமொழியே யெனக்கொண்டாட
நலநாதர் தமக்காளாய் நீவிரெல்லா
நண்ணுங்க ளெனத்துறவி நவின்றான் கேட்டுப்
பலமறையோ ருந்திரண்டு நாதர் பாதம்
பணிந்தெம்மை யீடேற்று மெனப்ப கர்ந்தார். (௫௧௭)

துறவியோடவ் வூரிலுள மறையோ ரெல்லாஞ்
சூழ்ந்தேக நாதர்தமைப் பூசித் தேத்த
உறநினையு மதுதெரிந்து நாதர் வேத
வொழுக்கங்குன் றாமறையோர் தாச னென்னைத்

திறமிகுநீர் பூசிக்கத் தகாதி சன்பாற்
செய்கிரந்த மிதைப்பிரிய முறிற்பூ சிக்கப்
பெறனலனென் றுரைக்கவின வியவெல் லோரும்
பெரிதுமகிழ் வுற்றவராய்க் கிரந்தந் தன்னை. (கூகஅ)

யானைமுது கேற்றிப்பல் லியங்க ளோங்க
வெழிலரிகீர்த் தனங்களுறப் புகழ்ந்து சூழ்ந்து
சோனையென வபீர்மலர்கள் சொரிந்து தூற்றிச்
சொல்லியமங் கலங்களொடு தொடரும்போதி
லேனையர்கள் வழியிற்செய் யுபசா ரங்க
ளேற்றேழு நாளளவும் வலம்வந் தோதை
வானையுற வெட்டாநாண் மடம்வந் தெய்தி
மறையோர்போ ஜனமுஞ்செய் துறமகிழ்ந்தார். (கூகக)

அன்றிரவி னுதாரி கீர்த்தனங்க
ளறையக்கேட் டனைவருமா னந்தமேவி
நன்றியலு மாரதிசெய் தானபின்பு
நலந்தருசீர்ப் பிரசாத நல்கப்பெற்றுத்
துன்றிரண்டோ டிரண்டுநா ளளவுஞ் செய்யத்
தொடங்கியவுற் சவமுடித்து நாதர் செய்த
வென்றிதரும் பாகவத மெவருங் கற்று
விளம்பியதி லானந்த மேவலானார். (கூஉ0)

வேறு

துறவிதன் முகமனொடு பலமறையோர் சூழ்ந்துநல் விடைதரப் பெற்றுத்
திறநல நாதர்வரு வழித்தாசோ பண்டிதனொடுந் திருநாம
மறையவ ரினிய வயதினிற் றத்தாத் திரையளைக்கண்டு தாம்வணங்க
நிறையுறுமனங்கொண் டுறவினர்தம்மை நீத்தொருதனிவன நேர்ந்தார். (கூஉக)

சருகுகள் பசித்துப்புரவபி மானந்த விர்ந்தவர் தமைத்தியானித்தங்
கிருபது வருடகால மேவுதலு மிரக்கமுற்றனர்தத் தாத்திரையர்
அருளுருக்காட்டியருளினர் கண்டாரடைந்தனர் திவ்விய சரீரம்
பெருகருளதனாற் கவிகளும் பாடிப்பிரபலராயினர் பெரிதே

அன்னவர் நாதருட் செயன் முன்பே யறிந்துளராதலானுதர்
பொன்னடிவணங்க நாதரும் வணங்கிப்பொருந்துற வொருவருக்கொருவர்
சன்னலங்கொண்டு தழுவினர் மகிழ்நாதரை நோக்கி நீர் நயந்தென்
பன்னகசாலை மேவவெண்டு மெனப்பகர்ந்தினி தழைத்து வந்திருத்தி. (கூஉஙு

அருக்கிய முதலாகிய வுபசார, மனைத்து நன்கியற்றினரருந்தத்
திருத்தி செய்தான பின்னரந்நாதர் செயுங்கிரந்தஞ் சிரவணித்து
மருத்தினு மினிய கீர்த்தன மிரவில் வழுத்துறக்கேட்டுள மகிழ்ந்து
பொருத்துற வொருமாதத்தளவிருக்கப் போற்றினர்நாதர்தாம் பொருந்தி. கூஉச

பண்டிதர் முகத்தைப்பார்த்தருளுதர் பார்த்தன்றன் சாரதி ஜயந்தி
அண்டிய தூர்க்குச் செலவிடை நல்கியாங்கு நீரும் வரல்வேண்டும்
கண்டியாமகிழ வென்றினி தனைந்தார் கருது தேவகிரியை யறுகால்
வண்டியறுவோன் ஜயந்திமேவுறு முன்சிவிகை மேற்பண்டிதர்வந்தார். (கூஉரு

வந்தவர் நாதர் மடத்தின் முன்வருங்கான் மடத்தின் வாசற்படி மருங்கே
மைந்துரு சூலபாணியாய்த் தத்தாத்திரையர் நிற்கக்கண்டு மனத்தில்
முந்துறு வியப்புக்கொண்டு பல்லக்கை விட்டிறங்கித் தனி முன் போய்
அந்த மெய்ச்சுருவின் பதங்களில்வணங்கி யையவிங்கடுத்ததென்னென்றார். ( )

தழுவினருலகந்தன்னை யீடேற்றத்தானவ தரித்தனர் நாதர்
வழுவலி லிவர்தமன் பினுக்கன்பாய் மடத்தின் வாசற்படிகாத்துக்
கெழுமினர்தமை முன்பறி வுறச்சென்று கிளத்துறு சாரணருகி
பொழுதெலாமிங்குத்தங்கு வனிவர்தம்புனித மெய்த்தவஞ் சோலப்போமோ. ()

அளவில் ஜென்மங்கடொறுந்தவம் புரிந்தார்க்கன்றி மற்றிவர் தரிசனம்வே
றுளர் பெறலாமோவுனது புண்ணியத்தாலுற்றனைய வர்தரிசனத்துக்
கிளகியிங்குறுகியென வுரைத்துட் போயேக நாதருக்கிதை யிசைத்தார்
தளர்வருதத் தாத்திரையர்கேட்டுடனே சார்ந்தெதிர்கொண்டனர் நாதர். ௩௨௰

ஒருவருக்கொருவர் வந்தனம் புரிந்தாலிங்கன முளுற்றின ரொருகை
மருவுறப்பற்றிக்கொடு மடத்துக்கு வந்த பின் பண்டிதர் தம்மைப்
பெருருப சாரத்துடன முதருத்திப் பின்புராணஞ் சொலிக்கங்குல்
திருமருமார்பன் கீர்த்தனஞ் செய்தார் பண்டிதர் செவிமடுத்திருந்தார். (௩௨௧)

கண்ணனுற் சவஞ்செய்காறு மங்கிருந்து களித்தருணுதர்தம் விடைபெற்
றண்ணினர் தம் பாருதர்தம் புகழையனு தினந்துதித்தல் செய்தமர்ந்தார்
புண்ணிய நாதர் மடத்துள் வந்தவர்க்குப் போஜனங்குறைவற வூட்டி
நண்ணினர் புராண கீர்த்தனம் பகலு மிரவினு நடத்தினர் நாளும். (௩௨௨)

வேறு

ஒருதினத்தோங்கு கோதாவிரிப்புனல்
மருவினராடினர் வருமம்மார்க்கத்தில்
பெருகுதுன் மார்க்கனோர் துலுக்கன் பேசரும்
கருவனுயவர் தமைமதி கருத்திலான். (௩௨௩)

எச்சிலையுமிழ்ந்தனனேக நாதர்மேல்
அச்செயற்குச்சின மடைவதின்றியே
பிச்சனிங்கிவன் செயும்பிழையிற் பேசொணுத்
துச்சவெங்கதியுறீ இச்சுழல்வனே யெனு. (௩௨௪)

அருள் சுரந்திவனே யெவ்விதத்திலாவது
தெருள்பரி சுத்தனுகச் செயச்சிறி
திருளறு மனத்திடை யெண்ணி மீண்டு போய்
மருளறு நதியிடை முழுகி வந்தனர். (௩௨௫)

நித்தியஞ் செபு நியமங்கள் யாவையும்
அத்தினத்தியற்றி யோராள்வசத்தமு
தத்தினைக்கொடுத்துடனனுகச்செய்து தாம்
பத்தியிறுலுக்கன்றன் பவனமெய்தினர். (௩௨௬)

எய்தியங்கவன்றனைக்கண்டிப்போனகம்
வையக நாயகன் மகிழ்வுகொண்டுணச்
செய்தது நீமகிழ் சிறந்துகொள்கெனப்
பொய்தவிருளத்தினர் புகலும் போதிலே. (௩௨௭)

வேறு.

திரியம்பக மெனுமூர் யறிகழ் வேதிய னொருவன்
மருவும் பிணிதொழு நோயொரு வகையானு மடங்கா
தொருவுஞ் செயலினியே தெனவுறுகாய் கனிகந்தம்
வருவெம்பசி தெறவுண்ட வண்மருவும் பசுபதியே. (௯௬௬)

துணை யென்று னிவருடங் களோர்ப னிரண்டு தொலைந்தே
அணையும் பொழுதொரு நாடியில் கனவின் கணைடைந்தான்
பிணையொண் மழுவுடை யோனுறு பிணிதீர் வகை சொன்னான்
இணையின் றியல் கோதா விரிநதியின் கரையினிலே. (௯௬௭)

மருவுந் திருவொடு நீடு தெவகி ரிப்பதி வளர்வோர்
அருளன் புளொரு நாதர்தம் வயினண்டினை யாகிப்
பெருகன் பொடொர் சிறுவன் படுவெயில் வெங்கதிர் பெயரக்
தருநன் கதுபெறில் விண்டுற விரும்பிணி யெனவே. (௯௬௮)

துயில் வேதியனுடனே சிவனார் சொல்வகை சூழ்வுற்
றெயில் மன்னு தெவகிரிப் பதியது சேரவெழுந்து
வெயிலுங் குளிர்வுறு மூரிடை மேவித் தனிநாதர்
பயிலும் பவனஞ் சார்ந் தகம்பார்த்தா னெதிர்பாரான். (௯௬௯)

தேடிக் கொடு கோதாவிரி தீரத்தயலே நீர்
ஆடிக்கொ டிருப்பார் தமில்யார் நாதரொனப்பாற்
கூடிக் கொடுநீ ராடுநர் தமை வேதியர் குறிக்க
நாடிக் கொடுவந்தா னெதிர்கண்டான் முகநன்றே. (௯௭௰)

உள்ளங் கனிவாய் நாதரை யுறுவந்தனை செய்து
வெள்ளங் கொளுநெடு வேணியனுரையும் படுமெலிவும்
கள்ளந் தெறுவோ ரோர்வுறக் கழறக் கரையின்மை
கொள் ளன்பொடு புரிபுண்ணியங்கொடுத்தா ரவன் கொளவே. (௯௭௧)

பிணிவிண் டுடல்புனிதம் பெறலானான் றுதிபேசிப்
பணி வொன்றின னதுபார்த் துளபார்ப்பார் முழுதார்த்தார்
எணிலிங் கிவர்நிகர்வோ ரெவரொன்றூர் ஜயஜயவென்
றணிகொண் டனேகத் தனிமடம்வந் தனரறவோர். (௯௭௨)

வேறு.

ஒருதினத்துத் தவமொன்னு மறையவரோ முதலான வுண்மைகூர்ந்து
மருவுறுபா கவதரெல்லாம் வந்தேக நாதர்தமை வணங்கிப்போற்றித்
திருமகள்கா தலனன்பீர் நீரியற்றும் பாகவதந் தினமு மும்மால்
அருள் விரவி யுரைசெய்ய யாம்வினவ வேண்டுமென வன்பின் வேண்ட. ௯௭௩

நன்றென்று தனிநாதர் பாகவதஞ் சொலத் தொடங்கினா ரந்நாளே
குன்றொன்று குவிமுலைக் கோதாவிரியுங் கேட்போருட் கூடிவந்து
மன்றென்றல் வாகனனு மயங்குமதி ரூபலா வண்ணியத்தோ
டென்றொன்றுமணிக்கலன்களிலங்குமலங்காரங்கொண் டெதிர்சார்ந்தோர்சார்

தனியிருந்து வினவிமற்றங் கொருவரிடத்தும் வார்த்தைதான் பேசாமல்
பணியரும்பு கண்களொடு நாதரைப்பார்த் தன்புமிக்குப் பகவன் கீர்த்தி
முனிவிரும்பி யிவ்வாறே நாடோறுங் கேட்டுமுடி வாருங் காறும்
தனிசெறிந்து மீளுவது கண்டோர்கள் வியந்திந்த நங்கையாரோ. (௯௭௪)

இந்த நகரிற் கண்டிலேன் தெரியே மெனவினவி யெழுந்தந் நங்கை
முந்தவுடன் றொடர்ந்துபோய் நங்கை கோதாவிரியின் முழுகக்கண்டு
தந்தமனத் ததிசயித்திந் நங்கைகோதா விரியாந் தையலேயென்
றந்தணர்தம் பிரான்பக்கலடைந்து வணங்கிப்போற்றி யறியச்சொன்னார் ௧௫௬

வினவேக நாதருங்கள் பாக்கியத்தா லேகோதா விரியென் றோர்ந்தீர்
கனமேவுந் தவயோக ருமையொப்பா ரில்லையெனக் கழறக்கேட்டோர்
மனவாய்மை யொருங்குபெற நீரியற்றும் பாகவத மகிமை கூர்ந்த
தெனநாடோ றும்புகழ்ந்து பாராயணஞ்செய்தங் கியல்வதானார். (௧௫௭)

வேறு.

பரவரி தாசரெல்லாம் பயபக்தி செயற்குத் தக்க
குரவர்தம் மடத்துக் கோர்சார் குடியிருப் பவனென்றேனும்
நரஹரி நாமங்கேட்க நயந்தில னேகநாதர்
விரவரு நரதேகத்தை வீண்செய் கின்றானேயென்று. (௧௫௮)

நம்மடத் தருகுசார்ந்து நமிற்கல வாமனானும்
செம்மையுற் றிலனாய்ப்போத றருவதோ வெனச்சிந்தித்துத்
தம்மனத் தன்புகூர்ந்தன் னான்றனைத் திருத்தவேண்டி
அம்மடத் தமருநாளி லொருதினத் ததரினோக்கி. (௧௫௯)

குடிமையோய் சுகமோ நீகொள் குடும்பமென் றவனைத்தாமே
நெடிதள வளாவ வன்னா னிகழ்த்தின னெல்லாங்கேட்டு
மடிமையி லுனதுவாழ்க்கை வழிகழிக்குங் காலத்தோர்
கடிகைவிஞ் சுறச்செய் தாழிக் கரன்கதை கேட்கவேண்டும். (௧௬௦)

எனவவிந் துரைக்கக்கேட்டோ னெனக்கொரு கணப்போதேனும்
தினமொழி வுறுவதில்லை யெனத்திரு மாறனுமம்
நினதுறு பணிக்கண்ணேனு நிகழ்த்துதி நிரம்பவென்ன
மனமனை விமக்கண் மாட்டே வாய்ந்துறும் விகாரத்தும். (௧௬௧)

நீருரை நாமங்கூற நேர்வுறா தென்று நாதர்
ஒருதல் சிறிது செய்துள் ளுவந்தவன் முகத்தைக் கையாற்
சீருறத் தடவியன்னான் றிருந்துற வொரு சுலோகம்
நேருற வரைந்து தந்து நீயிதை யெனுந் தேர்தி. (௧௬௨)

என்றுதம் மடத்துக்கெய்தி யிருந்தன ரவனுக்காங்கே
நன்றுமெய்ஞ் ஞானமேவி நாதர் நல்கிய சுலோகம்
ஒன்றுறப் பாடமாகி யோர்ந்ததன் சாரத்தாசை
துன்றுறீஇ மறுநாணாதர் சுகத்துறு மமையநோக்கி. (௧௬௩)

வந்தடி வணங்கிச்சாமி மற்றுமோர் சுலோகந் தீட்டித்
தந்தருள் கென்றுவேண்டத் தகவொரு சுலோகம் பின்னும்
முந்தென வெழுதி நல்க முகிழ்கரத் தினன்கொண்டேகி
மைந்துறப் பாடஞ்செய்து மதித்ததன் சாரந் தேர்ந்தும். (௧௬௪)

குடும்ப ரக்ஷகமுஞ்செய்து கொண்டுநண் பகலிற் சென்று
நெடுங்கதை வினவியல்வி னோர்ந்தரி கீர்த்தனங்கள்
விடும்பரி சின்றிக்கேட்டு விவேகனாகி யதையோர்ந்து
கொடும்பவங் கெடப்போரன்பு கூர்ந்தவன் றனக்குப்பின்னும். (௧௬௫)

சகத்திர நாமந்தன்னைத் தாம்வரைந் துதவிநாளும்
நிகழ்த்துதி நீரிலாடி நியமத்தோ டெனமற்றன்னான்
மகத்துவ நாமந்தன்னை வாங்கியவ் வகையே வாழ்த்தி
அகத்தெளி வுடன்மற்றெல்லா மறிந்தரி தாசனானான். (௩௬௬)

வேறு.

பன்னரும் புகழ் படைத்தவர் கோதா பாயியென் றோர்மகளைப்பெறலாகிப்
பின்னரோ ரரியெனுஞ் சுதன்மேவப் பெற்றுமற்று மொருபெண் மகவீன்றோர்
அன்ன புத்திரி தனைத்திகழ் கங்காபாயி யென்று பெயராக வழைத்து
நன்னர் மேவு மிரு பெண்களையுஞ்சீர் நண்ணுறும் பதிகளோடி யளித்தார். (௩௬௭)

ஹரியெனும் புதல்வர் கல்விபயின்றே யாறு சாஸ்திரமும் வல்லவராகப்
பெரிதியன்று மணமுஞ் செய்து வாழப் பெற்றபின்ன ரரிபண்டிதர் கல்வி
தெரிவுறுந்திற னறிந்துமதித் தார்சேரு மூரிலுளயாவரு மந்தப்
பரிசுகண்டதின் மிகுந்த பிமானப் பண்பராயினர் பிராகிருதத்தே. (௩௬௮)

ஆயவொண் கவிகள் கற்பதுமால் சீரான கீர்த்தன முறைப்பதுமாக
மேயதந்தை செயலுக் குகவாராய் மேவுமக்களொரு மூவரிலிளைய
சேயிராக வனையங்கு விடுத்துத் தேவிதன்னொடி ருமக்களு மேவப்
போயுயர்ந்த தலமாகிய காசிப் புரிய மர்ந்தன ரிராகவ னென்போர். (௩௬௯)

தந்தை தந்தை வயினன்பு மிகுந்து தகுதியான பணிவிடைகள் புரிந்து
விந்தையாக ஹரிகீர்த்தனை பாடமேவு போதிருகரத் திருதாளம்
சிந்தை யன்பு பெருகக் கொடுகொட்டிச் சேர்ந்துபாடியொரு நாதர் புரிந்த
நிந்தை தீர் கவிகள் யாவுமுணர்ந்து நிகழ்வ தாயின தெலாரு மறிந்தே. (௩௭௰)

நன்று நன்றிளை யபிள்ளை செய் செய்கை நாதர் நாம நவிலத் தகுவோரோ
என்று துன்று புகழ் கூறுவதாக விளைய பண்டிதரொர் நாடனி னாதர்
முன்றுலங் கடிபணிந் தடியேற்கு முடிவின் ஞானவுபதேச மினிச்சீர்
ஒன்றுறும் படியனுக் கிரகிக்க வுண்ணயத்தி ரொனவோ தினர்மாதோ. (௩௭௧)

மிக்க பாலனுரை செய்வதை நாதர் வினவியுட்களி மிகுந்தவர் செய்கை
தக்க தென்றுளம் விரும்பி யவர்க்குத் தகுதியான வுபதேச முரைத்தார்
தொக்கநாள் சிலகழிந்த பினாதர் துவளு மூப்புநமை நண்ணின தானம்
பக்கலிற் புதல்வரின்றி யிருக்கப் படுதனன் மையது வன்றென வுன்னா. (௩௭௨)

காசியம் பதியடைந்தனர் மேவக்க ரிசிலாதவரி பண்டிதர் நேரோ
தேசின் வந்தடி பணிந்துத மில்லிற் சேரவேகொடு செலீ இயமரச்செய்
தாசில் பூசனைகள் யாவுமியற்றியன்பொ டுண்டியும ருந்தவ மைத்தார்
பேசி மைந்தரொ டிருந்தனர் சின்னாள் பெயர்வதாக வொரு நாட னினாதர். ( )

மைந்தர் தம்வதன நோக்கி யெனக்கு வார்த்திகப் பருவம் வந்துள தானீ
இந்தவேலையி லெனைப் பிரியாதென் னிடையிருக்க வமையும் மதனானீ
தந்தமைந்தரி ருவரையும் விளங்கித் தலனிருக்க விடைதந் தெனுடன் சார்
நந்த னன்னுனைய லாதினி வேறார் நண்ணுகின்றனரொ னாமுனவின்றார். (௩௭௩)

தாதை கூறு முறை தன்னை மதித்துத் தனையரான ஹரிபண்டிதர் தாதாய்
மேதை நீரொன்மனம் வேண்டியவாறேவிளைவுசெய்யிலுமுடன்றொடர்வுற்றென்
வாதை தீரவருவே னென மைந்தர் மற்றதென்னை யெனலும் பரரன்னம்
சூதை விண்டுணல் பிராகிருதத்துத் தோன்றுநூல்களைநம்வாய்கொடுசொல்லல்

ஆனமற்றிவை விடுத்திடினும் மோடமருதற் கென்மன மமையு மெனக்கேட்
டேன மற்றதவ யோகர் சலிப்பின்றுண் ணகைத்துன் மனமொப்ப நடப்பேன்
ஞான மிக்கசுதனே யெனமேவ நன்கழைத்துற நடந்தினி திற்றம்
தான முற்றன ருறைந்தபின் மைந்தர் தந்தையைத் தவி சுறத்தனி வைத்தே. ()

வடமொழிக் கனுயரும் பிரபந்த வகைவினுவ வசனித் தனர்வந்தார்
திடமுறத்தின மிவாறு நடத்தத் திகழூரிலுள செவ்வியர் யாரும்
மடனிடைப் பழயமார்க்க மகன்றோர் மார்க்கமேவிய தெனத்துனி யுற்றார்
தடநிரப்புரம வூரிலொரேழைத் தையல்பார்ப் பனிதனேய்த புதற்கே. (௩௭௭)

வேண்டிறுளொரு சகத்திரமானவே தியர்க்கன மிடப்பிணி தீர்ந்தாள்
தூண்டிறுளன மிடப்பொருளின்றிச் சோர்வுகொண்டு சிலநாள்கடொலைத்தாள்
ஈண்டி றுடனது சற்குரு வின்பா லெய்தி வந்தனைசெய்தெண்ணநிரப்பத் [வே
தேண்டிறுடெறு பிணிக்குமுன் வேண்டுஞ்செய்கையைச்செவிநிரப்பினள்செவ்

பொருளிலாமை கொடுநும் மடியேன்முன் பூண்டநல்விர தமோம்ப விலாமை
தருவதேயிது தனக்கென செய்கேன் சாமியென்று தளரத் தவர்தாமும்
கருணைகொண்டு மடவாய் சுருதிக்கட் கட்டுரைத்த தொருபாய மொர்நூறு
பருணிதற்கு நிகராவனெர்வேத பாடகன்னவ னெர்பத்து நூருனல். (௩௭௧

நிகர வெய்துவ னோர்யக் ஞியகர்த்த னிகழுமற்றிவ னோராயி ரமானல்
தகவொ ரைந்தினை யும்வென்ற வனவன்ற குஞ்தேந்திரிய னையிரமானல்
அகல்கொள் வையக மளந்தவ னன்பனு வனந்தநலவன்ப ரில்மிக்கோர்
இகழ்வினுத ரவரொரு வருணச்சோறிடுதி வேண்டுகை யுனக்கினி தெய்தும். ()

அன்றியும் பெறுதி வேண்டுவ வெல்லாமயர்தி போதியென வகமகிழ்வாகி
நன்றிசொல் குருவை நன்குவணங்கி நாதர்தம்மட நயந்து புகுந்து
முன்றினின் றடிபணிந்து துதித்தாண் முன்புகொள் விரதமுற்ற மொழிந்தாள்
ஒன்றியென் மகனிடத் தரைமேவ வுய்க்கிலெய்து வெனெனப்புக வுய்த்தார்.()

நாதரோவவரு நாரியைநோக்கி நற்குணத்த ரரிபண் டிதரொந்தை
நீதமேவி நலனே தருகாசி நீடியாத்திரை புரிந்தபி னெங்கும்
ஓதனங் கொளுவ தில்லை யெனப்பே ருறுதிகொண் டுறைகிற ரொனவோத
மாதரங் கவன்மிகப் பரிதாபம் வாய்ந்து நாதரடி வந்துவணங்கி (௩௭௨)

நும்மகற் குளமிரங் குதலில்லை நுவலினன் கருள்சுரந் தினினீரே [தத்
செம்மையுற்ற வெனதெண்ண நிரப்பத்தேடல் வேண்டுமென வாடல் கொடோ
தம்மனத் தருள்சுரந்தொரு நாதர் தனையர்தம் முகம்விரும் பினர்நோக்கி
அம்மனைக்கு நிகரான விமாதி னகமகிழ்ந்திட வியற்றுதல் வேண்டும். (௩௭௩)

நீயுநின் மனமிசைந் துரையென்ன நெடியகாசிதனி னேர்ந்தது வீணே
போயதென்ன மகனே யினிஇல்லம் புக்களிப் பனவெலாங் கொடுநீயே
நேயமோடடுதி யோவண் வந்துநின் கருத்துமிவடன் குறையுஞ்சீர்
ஆயதென்ன மிசைவேனென நன்றென்ற வரிசைந்தனருளம் பிசகாமல் (௩௭௪)

மறுதினத்தி லரிபண்டிதரந்த மாதர்வீடு புனலாடினர் சென்றே
அறுசுவைக் கறியோடன்ன மமைத்தார வடரும் பொருளனைத்து முறக்கொண்
டுறுகவென்றுதனி நாதரை மேவவுடனழைத்து வருவழி யிடையன்னுள்
தெறுவினைப் பகைஞர் தம்முகநோக்கித் தேவரீ ரினிதுணற் கொருநானே. ()

நல்லநல்ல பலகார மமைத்தேனு னிடப்பெரிது நீருணவேண்டும்
அல்லது னகலவென்னலு நாதரங்கு நான்மிசையு மமயமதிற்சீர்
புல்லலான பலகார மனைத்தும் போடுகென்றவள் பொருந்துறவந்தார்
இல்லமேவுசி தாசனமிட்டங் கினிதிருத்தி யுபசார மிழைத்தாள். (௫௮௬)

தந்தையுண்ண ஹரிபண்டிதர் தாமே தங்கரத்தறு சுவைக்கறிசோறு
முந்தநின்று பரிமாற மிசைந்தார் முகினிறத்த னடியா ரதுபோதில்
அந்தநாரி பலகாரமெலாமிட் டாள்விளைந்த வையுமுண் டனராக
மைந்தனு ரதுதெரிந்து சினந்தம் மாதைநோக்க வவர்மா முகநோக்கி. (௫௮௭)

சாமிநீர்தயை புரிந்தருள் கென்னத் தானுரைத்தனள் பிதாத்தபு செய்கை
ஆமிதைப்பி னருசாவுவனென் றுவங்கடங்கியுறு கின்றனராக
நேமியானடிய ருண்டுகரங் கானி மலராயொருதமகன் முகநோக்கித்
தோமிலாதபடி யெச்சிலை மாற்றச் சொல்லினு ரவர்செயத் துணிவுற்றே. ( )

அந்தவோ ரிலையை யங்கைகொ டேகியது கிடத்துழி யெறிந்தவர் மீண்டு
வந்தமைந்த தலசுத்தி முடிப்போர் மற்றுமோரிலை கிடந்தது நோக்கி
விந்தைகொண் டதையுமங்கை கொடெய்திவெளியிலேவிழவெறிந்தனர் மீண்டு
முந்தவந்தவ ணடைந்தெதிர் நோக்க முன்பு போலிலை கிடந்தது கண்டார். ()

அதையு மங்கை கொடுபோய் வெளிவீசி யணுகி நோக்கினர் பழம்படியாகச்
சிதைவிலா திலைகிடந்தது தீரத்தீர்வுசெய்யினு மனேகமதாக
உதயமா தலையறிந்து கைகால்க ளுறவருந்தி மிகவுட றடுமாறி
இதயநொந்தி வரையித்தனை நாளாயீசனம்சமென வெண்ணகிலேனே. (௫௯௦)

உலகமோதலையு முன்னகிலாமலுற்ற குற்றமிக வுண்டென வெண்ணிச்
சலசலோசன னடிக்கினிதன்பு தந்திருந்தவொரு தந்தைதனக்கோர்
அலகில்வந் தனைபுரிந்து கணீரோ ராறுபோல் வரவுமஞ் சலிசெய்து
நிலவநின் றுலக குருவெனலாக நிறையுநும் பெருமை யறிகிலனந்தோ. (௫௯௧)

கல்வியா லெனைமதித்திது காறுங் கருவமுற்றவென துறுபிழையெல்லாம்
வல்வினைப்பகைளோபொறைகொண்டுமனமிரங்கியருள்செய்ம்மெனவேண்டச்
செல்வநாரணனதன்பர் வினுவிச்சிறியமென் னகைசெய்தென் சிறுவாநீ
இல்விராவுமிலை இத்தனையுங் கொண்டேகி யேகிமிகவெய்த்தனையன்றே (௫௯௨)

இனியிராதி விலைகொண் டெறிவுற்று லென்றுகூறலு மெடுத்தெறி வுற்றே
புனிதமாக வவிடஞ்செயவந்தப் பூவைசந்தன சுகந்தமடைக்காய்
பனியமென் மலர்தரக்கொடு நாதர்பணி மடக்கொடி தன்விடை பெறலாகி
கனிதிருந்து மகனோடு மடத்தை நண்ணமேவு மரிபண்டிதர் சொல்வார். (௫௯௩)

ஐயநீர் முனமொனக் கருளிச்செய்ததை விடுத்துறு பிராகிரு தத்துச்
செய்தமைந் தவைபடித்து முறைத்துத் தினமுமாலரித னுமமிசைத்தும்
உய்வதானபடியே யினிதென்று முறநடத் துதிமொனத் தனிவேண்ட
னையலென்றவை நடத்துதலானூர் நாதர்மைந்தரும் வினுவியிருந்தார். (௫௯௪)

வேறு

அவ்வூருக் கருகொரு கிராமத்திற் கணக்கனென லானபார்ப்பான்
தெவ்வான மிடியி லகப்பட்டவனுக்குப் பிறந்த சிறுவர்தம்மில்
செவ்வாயி னுமைபேசா வூமையனு யொருசிறுவன் செனித்தோன் பானுண்
டிவ்வாறே பேசுவதில் லவனையீன்றவள் வருந்தி யிடும்பைகூர்ந்து (௫௯௫)

அருண்மகிமை களிற்சிறந்த நாதாராற் காவ்ஜியெனு மந்தச்சேவை
வருகவென வழைத்துவந்து பாதமுன ரோகிடத்தி வணங்கிப் போற்றிப்
பெருகருளீ ரிவன்பிறந்தோன் பதுவருட மாகியும்வாய் பேசாறுைல்
மருவுமிடி யுளயாஞ் செய்வகை யேதிங் கிவனைவைத்து வளர்ப்பீ ராகில் (௫௰௬)

புண்ணியமும் புகழுமுமக் குண்டென்று விடுத்து மனைபோன பின்பு
நண்ணியவூ மைப்பிள்ளை தாய்தந் தைகளை நாடான் மடத்தி னண்ணி
உண்ணியவுண் டுறுகாலத் தொருதினத்துத் தமர்பூசை யுஞற்றி மாலை
எண்ணியவுள் ளத்தினரா யேகாந்தத் தினிதிருக்க வெழிலிராமன். (௫௰௭)

முன்னனுகிப் பிராகிருதத் தியற்றுராமா யணத்தை முடித்துப் பேர்தான்
மன்னியபா வார்த்தராமா யணமென்றிடுதி யெனமறைந்தா ணதர்
பொன்னிறத்துப் புரவலனைப் போற்றியது நடத்திவந்து போர்க்காண் டத்தில்
துன்னியநாற் பத்திரண்டத் தியாயவரை யாகமுன்பு தோன்றக்காவ்ஜி (௫௰௮)

தனையழைத்துச் சகலமறை வேதியரும் புடைசூழத் தருவித் தன்னூர்
முனையெனக்குப் பரந்தாம மேவுறுநாண் முற்றியது முனைக்காண் டத்துப்
புனைவுறுத்துங் குறைவெல்லா நிறைவேறப் புரிந்தெவரும் போற்றலாக
வனைவுறுத்துத் தரகாண்ட வரையுமென லேகணிமைக் கூடுந்தார். (௫௰௯)

மூங்கைதலை மேலபய கரமமர்த்தி யருள்செய்தார் முகுந்தனுமம்
ஆங்கவனப் பொழுதேதாள் வணங்கியெழுந் தவனொதிரோ யமர்ந்திருந்து
தீங்ககலோ ரத்தியா யஞ்சொன்று னதையெவருஞ் செவியிற் கேட்டுப்
பாங்கனொரு நாதர்திருக் கவிகளென வூமையனும் பாடுகின்றான். (௬௰)

இதுபுதுமை யெனமகிழ்ந்தார் மறுதினத்திற் பரந்தாம மேகநாதர்
கதுவுறுவ லெனக்கேட்டுச் சாதுஜன மொருங்குவந்து கலந்தாராக
விதுமுகச் சுந்தரநாதர் மறுதினத்து விடிவேலை விட்டலன்றன்
பதுமபதங் களைப்போற்றி வீணை தாளங்கள் கொண்டு பாடியாடி. (௬௰௧)

ஹரிதாச ரனைவரும்வந் தடிசூழப் பகவநூமங்கள் வாழ்த்திப்
பெரிதாவ பீர்மலர் சந்தனம் பனிநீ ரிறைத்தனர்கள் பெருகக் கோதா
விரிநாடிப் பல்லியங்கண் மிகமுழங்கப் பிரிவோர்த மெலிவுதீர்த்துப்
புரிதீமைக் கலிகாலத் ததுவேத சாரமெனும் பொருளென் பீரோல். (௬௰௨)

அச்சுதன்ற ஞமசங் கீர்த்தனமே யென்றெவரு மறிவுறப் போதித்து
மெச்சுறுஸ்ரீ வகாருணிய மேவியுறை வீரென்வும் விளம்பிப் போற்றி
நச்சுறுபாம் பணையாற்கு மங்களா ரதிசெய்து நதிதீரத்தில்
கிச்சுவளர் வேதியர்க்குத் தீர்க்கவந் தனம்புரிந்து கிளர்ந்து நீரில். (௬௰௩)

இடையளவு மிறங்கிநின்று திருமாலை யிதையத்து ளிருத்திப்போற்றி
அடைவுறுவ தாயினோர் பரந்தாமம்வாய் திருநாமங்கள்வாழ்த்த
மிடைவதுகண் டுளசகல சஜ்ஜனரும் பரிதபித்து வேதமோதும்
கடையடைவே நாதர்சரீ ரத்தைக்கோ தாவிரிநன் னதிதீரக்கே (௬௰௪)

மைந்தரரி பண்டிதராற் றகனஞ்செய்வித் தியற்றும்வகை யெல்லாஞ் செய்
தந்தமறு தினத்தெலும்பு களையெடுக்க வதின்முளைத்தோ ரச்சுவத்த
முந்தவெழு வதுகண்டு வியந்தேக நாதரிதாய் முளைத்தாதொன்று
தந்தமனங்களி சிறந்தங் குக்கோயி லொன்றியற்றித் தகுதியாக. (சாறு)

நாதர்திருப் பாதுகையைப் பிரதிட்டித் தெல்லாரு நயந்து பூசித்
தாதரம் விஞ்சினராகிப் பகலிடைப் புராணகா லக்ஷேபஞ்செய்
தேதமற விராத்திரியி லரிகீர்த்தனம்பலவு மிசையிற் பாடி
மாதவங்கள் புரிகின்று ரின்னமுந் தோந் தறிமினுயர் மதிவல்லோரே. (சாசு)

ஏகநாதசுவாமிகள் திருவடிகளேசரணம்.

ஆகச்சரித்திரம் ௬௬-க்கு செய்யுள் ௬௭௩௱௭௰



முற்றிற்று.

# மாண்கோஜிபோதலே சரித்திரம்

தாமணை மென்னும்பாலே காட்டுமா நகரிற்சார்ந்த
தீமையில் லாதோர் நான்காம் வருணத்திற் சிறந்த சான்ருேர்
கோமளப் பருவத்தேமாண் கோஜிபோ தலேயென் ருேதும்
நாமராய்த் திருமாலன்பு நலத்தினின் மிகுந்தநல்லோர் (௧)

அன்னவர் குடிப்பேர் ஜக்தாப் பென்பவ ராகவாழ்வார்
பன்னிதாங் கற்பில் விஞ்சு பவர்மம தாயியென்பார்
முன்னைய தனையர்நல்ல குணவயி ராக்ய முன்பர்
நன்னயப் பேரோ மாஜி யென்பவர் நலங்கொள்பாரி. (௨)

சற்குண ராசியாம் பாகீரதி சாற்றிந் நால்வர்
சொற்பிர பஞ்சவாழ்க்கை தொடர்ந்தமா விரக்தராகி
அற்பகற் பாண்டுரங்க னடியிடை விடாதுபோற்றும்
நற்பயன் பெற்று வாழ்வார் நாடொறு நலிவுருமல். (௩)

வீட்டிடை வேண்டுங் காறுமிருந்தன தானியாதி
ஈட்டினர் பசுக் கூட்டத்தோ டெவற்றிலுங் குறைவுருரில்
நாட்டுமாண் கோஜிபோத லேயெனு நாம நல்லோர்
வேட்டெகாத சிகடோறும் விளங்கு பண்டரிக்குச் செல்வார். (௪)

நியதி தப்பாமற் சென்று நின்மலச் சோதியான
புயனி றவண்[illegible]ன்றன்னைத் தரிசித்துப் புகழ் புகன்று
நயனங்கள் விழித்து மற்றை நாட்டுவாத சியில் வேள்விச்
செயன் மறையவர்க்கு மற்றைத் தீனர்க்கு முணவு நல்கி. (௫)

மறுதினம் பாலேகாட்டில் வந்து வாழ்வாரிவ் வாறு
குறைவற நெடுநாள் காறுங்கோதின்றி நடத்து நாளில்
வெறுமையாய் மேகஞ் சாமகால மேமி குவதாக
வறுமையாற் சனங்க ளெல்லாம் வருந்தின பசிநோய் கூர. (௬)

போதலே யென்பா ரன்னபசி மிகு புழுக்கங் கண்டு
காதலி யாளை நோக்கிக் காசினிச் சனங்க ளெல்லாம்
ஓதன மின்றி நோவ நாஞ்சுகத்துறு தனன்ருே
கோதிலா யெனவுள்ளத் தாக்குறித் தறங்கூற லானுர் (௭)

ஆதுலர் தமக்குச் சாலையறு சமயத்தார்க் குண்டி
ஓதுவார்க் குணவாவுக்கு வாயுறை சிறைச் சோறையய்
தீதிறின் பண்ட நல்கலறவைச் சோறிடுதல் சேயைக்
கோதறப் பெறுமா செய்தல் குழவியை வளர்த்தல் மாதோ. (௮)

அன்பொடு மகப் பால்வார்த் தலறவையாம் பிணந்த கித்தல்
துன்பிலாத றவைத்தூரியஞ் சுண்ணநோய் மருந்தோ
டின்புற வண்ணனேஞ் சியாடி காதோலை கண்ணின்
யம்பு நோய் நீர்மருந்து தலைக்கெண்ணெய் மாதர் போகம். (௯)

பிறர் துயர் காத்த றண்ணீர்ப் பந்தல்பேர் மடமியற்றல்
நறுமலர்ச் சோலைவாவி யாவுரிஞ் சுதறி நண்ணும்
மறுவற விலங்கிற் குண்டிமாசி லேறுய்த் தலாவி
பெறவிலை கொடுத்துக் காத்தல் பெண்மணம் புணர நல்கல். (௰)

இன்ன முப்பத்தி ரண்டிவியல் வனவேற்பச் செய்து
மன்னுறிற் பாவந் தேய்ந்து வளரு மெய்ஞ் ஞானந்தன்னால்
துன்னுறும் பிறவி வெந்நோய் தொலைந்து நம்பாண்டரங்கன்
பொன்னடி புகுதலாகு மெனவிசைவுறப் போதித்தார். (௰௧)

கணவனார் புகலக் கேட்ட கற்புடை மனைவி யாரும்
குணமிகு கருணை கூர்ந்து குவலயத் துயிர்கட் கெல்லாம்
உணவுற நடத்திவந்தாரு ஞற்றுறு நாளின் வீட்டில்
அணவுறு பசுக்க ளெல்லாமந் தணர்க் களித்துப் பின்னும். (௰௨)

உளதன தானியங்கள் யாவையுமறமு ஞற்றிக்
கிளரணி யாடையும் விற்றற நெறிகெழும லாலே
வளர்பொருளின் மையாக வருந் துதலின்றி நாளும்
துளவணி பாண்டரங்கன் றுதிபல புகன்று கொண்டு. (௰௩)

பதிமகன் மனைவியோடு பலபிரயாசைப் பட்டும்
அதிதிகள் பூசைகுன்றா ராயவர் வைகு நாளில்
மதிகுல திலகனுன மாலவர் திடந்தெரிந்து
துதிகொள்மாண் கோஜிபோத லேமுனர்த் தோன்ற நின்றான். (௰௪)

கண்டவர் பாண்டரங்கன் கழற லைக்கொண்டு போற்ற
விண்டுவுங் கருணைசெய்து விலகின பின்புகண்ட
தொண்ட ரோடரி தினந்தாஞ் சென்று பாதந் தொழற்குப்
பண்டரி புரத்திற் கேகும்போது தம்பன் னியாரும். (௰௫)

செலவுக்கு வேண்டலான பொருள் சிறிதேனு மின்றி
நலிவுற்று மனம்வருந்தி நன்குடுத் துடையு மின்றி
மெலிவுற்ற கலையினேடு விறகு விற்றேனு மேமம்
நலமுறக் கொண்டுநாளைத் துவாதசி நடத்து கிற்பாம். (௰௬)

என்றெண்ணிச் செல் லுமார்க் கத்திடை விறகுகள் பொறுக்கி
நன்று தன்றலை மேற்கொண்டு நாதன் பண்டரி புரந்தாம்
சென்று நீண்மறுகில் விற்றுவருபொருள் செங்கை கொண்டு
மன்றலந் துளவமாலை மகிழ்ந ரோடுற வழுத்தி. (௰௭)

நதிமதிப் பாகைவந்து நானஞ் செய்தங்குச் செய்யும்
விதிகொள் சங்கற்பஞ் செய்ய வேதி யன்றனக் கோர்காசு
துதியொடு கொடுத்துப் போற்றித் துளவமீர்தி வேதனங்கள்
மதிவிலையோர் காசுக்குள் வாங்கிச் சன்னிதிக்கு வந்து. (௰௮)

விட்டல மூர்த்திதன்னை விழைவொடு பூசைசெய்து
கிட்டினர் தழுவிக்கொண்டு கீழ்ப் பணிந்தெழுந்து போற்றி
முட்டிலாதன்றி ராச்சென் முழுதரி தாசரோடு
மட்டில் கீர்த்தனைகள் செய்து வதிந்தனர் கண்விழித்து. (௰௯)

விடிபொழு தெழுந்து சென்று விதுத்துண்டங் தனி லீராடி
மடிகொளும் பொழுதுமாண் கோஜிபோத்லே மனேவியாளை
நெடிதுற நோக்கியின்று நிரப்புவேதியர் பூசைக்காம்
படிபொரு ளிலேயே யேதுசெய்வது பகர்தி யென்ருர். (உ௰)

மகிழ் நரஃதுரைப்பக் கேட்ட மனேவியார் செலவு செய்து
மிகுதியாங் காசுதந்து வீசனைச் சேர்மா வாங்கித்
துகிலிடை முடிந்துநாத ஞர்கரங் கொடுக்கத் தொண்டர்.
ஜெகபதிதனேத் துதித்துச் செங்கை கொண்டங் கிருந்து. (உக)

அறுசுவைத் தாயவுண்டி யருந்து வேதியர்க ளிந்தச்
சிறுசுவை மாவைக் கொள்வரோ வெனச்சிந்தை செய்தார்
உறுபொழு திவர்தம் முள்ள முணர்ந்த ஸ்ரீ பாண்டுரங்கன்
மறுவிலா விருத்த ஞன மறையவன் வடிவங்கொண்டு. (உஉ)

தலேயிலே பழைய குல்லாத் தயங்குறத் தடிகைக் கொண்டு
கலேயிலா தரைக்குக் கோவணத் தொடுகட நடுங்கி
அலேவுறத் தொண்டர்தம் பாலனு கினன் மெள்ள மெள்ளத்
தொலேவில் சீரன்பர் தம்மை நோக்கினன் சொல்ல லுற்ருன். (உங)

நீர்வெகு நாளெனக்கு நிரப்பறத் தருதலாலே
சார்தரு நானு மன்னம் புசித்திங் குச்சார்ந்து மக்கே
ஏர்பெற வாசிகூறி யிருக்கின்றே னிந்தவூர்க்கு
நேர்பவர் செல்வருக்கே நெடும்பொருள் கொடுப்ப தன்றி. (உச)

தீனனு மெனக்குச் சோறு மிடுகிலர் சிறிது மத்தால்
போனக மீன்றி நாளும் புழுங்குறு மெனக்கு நும்பால்
ஆனதோ ருணவே தேனுமரு ளுதிரொன்று கூற
ஊன மிலன்பர் கேட்டங் குவகைகொண் டுன்ன லானுர். (உரு)

வேறு.

இம்மாவையைய மெனவாங்கி யுண்ண வெதிர் வார்கள் யாரி வுலகில்
செம்மா மலர்க்கு ளுறைவாள் விளங்கு திருமார்பனே யிவ்வடிவின்
நம்மா டடைந்த தெனவே முடிந்த துகின்மாவை நாணமிகவே
அம்மாத வப்பன வனங்கை பெய்துத மதங்கை கூப்பி யறைவார். (உசு)

உமதங்கை பெய்த வெறுமாவை யன்றியுள தேதுமில்லே யுதவற்
கெமதன்பு கூரவரு நாதரோ நீரினி துண்மி னென்ன வினவிச்
சமதங் கொடந்த மறையோ னுகந்து தனதங்கை கொண்ட முதுநந்
தமதன் பினீயு மிது நேர்கிலாது சலியன்மி னென்று புகல (உஎ)

தருமன் பரிந்த வெறுமாவை யன்புதக வுண்பலொன்றல் சதமோ
வருமிந்தவே தமறையோ ஜனத்த மனதின்க ளுன்ன மறையோன்
உருவங் கொள்வேத முதல்வன் றெரிந்தி துதவன்பரோ யிதடயான்
கருதுங் கணின்று தலம்வாய்கி லாததின மென்று முன்பு கழறி. (உஅ)

இவிட்த்திலே நலடை தட்டியட்டி தனேயுண்ப னென்று புகலத்
தவறற் றவன்பர் மகிழ்வா யடுப்பி லெரிமூட்டல் கண்டு தலேவன்
நவமிக்க தானமதி துண்ட மூழ்கி நனேவுற்ற தூசினுடனே
அவிடத்திலேநல டைதட்ட லாகஷிறி லுற்றுருக்கு மணியும். (உகூ)

அடைதட்டுகின் றகிழவற்கு நேரவமை வுற்றவோர் கிழவியாய்
நடைமெத்த நொந்துமுடை மிக்கு நைந்து நலிவுற்றோர் தண்டு பிடியாப்
புடைகிட்டி நின்று தலைவற்கி யன்ற புதுமைக்கு நன்கு நகைசெய்
திடை விட்டிடாத வெனைவிட்டு நீரிவடைதட்டு கின்ற தெனையே. (௩௰)

நானீது செய்து தருகிற்பெ னென்று நவிலக்கை தந்தருகு சார்ந்
தானாதல் கண்டி தொருவற்கு நுங்கவமையாத மாவிருவரோ
நோனாத வெய்யபசி தீர நுங்க லெனவன்பர் நொந்து மகிழ்வு
தானாகு தம்பதி களுண்ப தாயதக விற்குவந்து றுதலும். (௩௧)

அம்மாத வக்கிழவி கொண்டமாவை யடைசுட்டு வைக்கவமலன்
எம்மோடு நீருமுணவம் மினென்னவெ திரன்பர் நீவிரிருவீ
ரும்மாத ரங்கொடு ணலான பின்னருச் சிட்டமீ யினுகர்வேம்
செம்மாத வத்தி ரெனமாலுகந்து திருவோடருந்து மளவே. (௩௨)

ஆகாச வீதியதிலே நிறைந்த மலரான சித்தர் முனிவர்
வாகான தேவர்பல ருந்திரண்டு மறையால் வழுத்தி வழியே
யோகாதி செய்து மமுதுண்க வென்னிலுக வாதவிந்த வொருவன்
மாகாதலோடு சிறிதேனு முப்பிலடை தட்டியட்டி வணிலே. (௩௩)

மனையான ருக்குமணியோ டோரன்பர் மனதுக்கு கந்து நுகர்தல்
எனையே யெனக்கொடிவி னோதை நோக்க விணையற்ற வேகன் மலரங்
கனையோட ருந்தியதின் மிச்சிலன்பர் கரமீந்து கண்முன் மறைய
அனையார றிந்து ஜகதீசனான வமலா வெனத்துதி செய்தே. (௩௪)

இல்லா ளொடையனுகர் மிச்சிலுண்ட விடைகால் கைசுத்தி புரியா
நல்லார் வணங்க வருகோயில் வந்து நளினைக்குநண் பனனிதான்
உல்லாசமாக நிலைநிற்றல் கண்டவுழை தாள்வணங்கி யொருவா
பல்லாரு நோக்கமறை யோனுருக் கொள்பவனாகி வந்தபடியே. (௩௫)

பாலாழி வந்ததிரு வுந்தொடர்ந்து பரிவோடு கூடவுலகில்
மேலானசெல்வர் பலருஞ் செய்பூசை விழையாது மிக்க விழைவாய்
நோலாத வென்றன் வெறுமாவை யட்டு நுகர்தந்து மிச்சிலுதவிக்
கோலாகலஞ் செய்தனையே யெனக்கோர் குறைவில்லை யென்றி விடையே. ( )

இதுவோ நினது செயலென்றுகூற விணையின்றி நின்றவிமலன்
முதுவே தியர்க்கு நிதிசா லநேகர் முயல்கின்ற பூசை யிடைசெல்
வதுநானு முண்ட வரில்யாரு மென்னை மதியா திகழ்ந்து விடுவார்
அதுநீ யறிந்து கொளவேண்டுமாகி லடைவே தெரிப்பே னெனவே. (௩௭)

வேறு

நன்றெனத் தொண்டரு நயந்திருந்தனர்
அன்றொரு நிதியுளோ னாயி ரம்பெயர்க்
கின்று சோறளிப்பெ னென்றிசைக்க வந்தணர்
துன்றினர் போனக சாலை துன்னவே. (௩௮)

ஆயிரம் பேரையு மாய்ந்தெண்ணிக் கொடு
மேயின போதொரு விருத்த வேதியன்
ஆயிந்த வன்பனா யழைத்துக் கொண்டவண்
போயினன் பண்டரி புரத்து நாதனே. (௩௯)

போன பின்பிவர் தமைப்புறத்திருத்தி நீர்
மேனனி விளைவினோதங்கள் காண்கெனத்
தானகம் புகுந்தந்தத்தன மிக்கோனைக்கண்
டானவென்பசிக்க முதளித்தி யென்றனன். (௪0)

என்றலு மிங்கமு தீகுவோரில்லை
துன்றுதி நீபுறத் தென்று சொல்லலும்
நன்றொ ராயிர வர்க்குநல்கு மிவ்விடை
இன்று சோறென லுனக்கேற்கு மோவென்றான். (௪௧)

நாதனஃ துரைத்தலு நல்குவோன் கணக்
கேதமின்றா யினபின்ன ரொய்தினை
நீதனியே யுறினின்னைப் போற்பலர்
போதுவ ராதலாற் போபு றத்தென்றான். (௪௨)

என்பதற் கிசைகிலா திறைவ னென்கிழ
வன்பசி மிகுந்துளேன் புறத்து வாய்த்திலேல்.
அன்பக மென்றங் கோரிலைக் கணமியே
துன்புற விருந்தனன் சோற ருந்தவே. (௪௩).

கண்டுமா தனமுளோன் கடுஞ்சி னத்துடன்
அண்டு தன்னூழி யர்தமை யழைத்திவன்
மிண்டுசெய் கின்றனன் வெளியிற் போக்குமின்
தண்டு கொண்டடித் தெனச்சாற்றி னாரோ (௪௪)

சாற்றலுங் கிங்கரர் கிழவன் றனையும்
ஊற்றமில் கையையுஞ் சிகையை யும்பிடித்
தாற்றலி னுரப்பின ரொடுத்து வந்தயல்
ஏற்றின ரிட்டன ரிரக்க மின்றரோ. (௪௫)

வெளிப்புறத் திடுதலும் விமலன் மெள்ளவே
களிப்பில னெழுந்துடல் கலைக்கச் சென்றனன்
தெளித்தில னாயிரம் பேருஞ் செவ்வையாய்த்
தளிர்த்துணப் போசனந் தந்தபோதிலே (௪௬)

சண்டமா ருதம்வந்து தாக்கி மண்டுகள்
மண்டவோ தனமெலாங் கெடுத்து மாற்றலும்
உண்டிலர் மறையவ ரொன்றுந் தாமெழுந்
தெண்டிசை மருங்கினு மேகி னாரரோ. (௪௭)

இவையெலா நோக்கியங் கிருந்தபோதலே
நவையறு முகந்தனை நோக்கி நாயகன்
செவையினி கண்டுளை திறந்து லோகமா
மெவையு மாகுல மிகவிசைந் திருத்தலே. (௪௮)

அல்லது தினனா யாத ரிப்பவர்
நல்லைநீர் நன்மன மிசைந்து லீரொன
வல்லையினும் வெறுமாவை வாங்கினேன்
ஒல்லையி னடைசுட்டு மன்பொ ருண்டனென். (௪௯)

எனவுரை பண்டரிக் கிறைவன் வார்த்தையை
மனநல ரானமான் கோஜி கேட்டுநின்
றனதுமா மகிமையை யறியத் தக்கதோர்
கனமுளோர் யாரெனக் கைகள் கூப்பினார். (௫0)

துதிபல புகன்று தாடொழுது தொல்லைமால்
அதிபிரி யத்துடன் விடைய ளித்திட
வதிதரு தாமணஞ் செல்ல வந்தனர்
பொதிதரு வனத்திடைப் புக்க போதிலே. (௫௧)

தாகமிக்கின் புனல்பெருகத் தாம்பெறார்
ஆகமற் றங்ஙன மடைத லைத்தெரி
மேகமொத்தவ னுருக்குமணி மின்னொடு
வேகமுற்றவர் குலவேட மேவியே. (௫௨)

வருவழி தனிலொரு மனையுஞ் செய்துகொண்
டிருவருந் தயிரடை யினித மைத்தவர்
மருவுறு மனையொடு வருதல் கண்டுநீர்
பொருவுறு பண்டரி புரத்தின் மேவியே. (௫௩)

மீளரி தாசரா தலினெம் வீட்டிலும்
தாளுற வெய்தியாந் தருவ துண்டுமிந்
நாள்பவித்திரம் பெறவெமக்கு நல்கிறும்
ஆள்பதி சென்மினென் றடைவிற் கூறினேன். (௫௪)

அவ்வுரை போதலே மனத்த மைத்துநீள்
இவ்விடை மனையொடு ஜனங்க ளோ்பெற
ஒவ்வுதல் யாமொரு நாளு மோர்ந்திலேம்
எவ்வியல் புதுமையென் றிசைந்து சென்றனர். (௫௫)

சென்றந்த மனையிடைச் சேர்ந்தி ருந்தவர்
நன்றுறத் தருவன மிசைந்து நண்ணுசோர்
வன்றவண் டீர்ந்துசெல் வதற்க மைந்துசெல்
இன்றவர் திரும்பிநோக் கினரிற் கண்டிலர் (௫௬)

என்னிது புதுமையென் றெண்ணி யாம்புனல்
உன்னியே வருவது தெரிந்தவ் வுத்தமன்
பன்னியோ டிவ்வயிற் பயின்று தீர்த்தனன்
மன்னிய தாகத்தை யெனம கிழ்ந்தனர். (௫௭)

தாமும் தம்பன்னி யுஞ்சகங் களுக்குயி
ராமந்த நாதனை யன்பு மிக்குறப்
போமந்த வழிதொறும் புகழ்ந்து கொண்டுபோய்க்
காமுந்து தாமணங் கலந்தி ருந்தனர். (௫௮)

வேறு

தொல்லை மாலரி தாசரோர் தினந்தங்கள் சோளக்
கொல்லை காத்தன ரிருப்புளிப் பறவையின் கூட்டம்
ஒல்லை வந்து தின்றிடச் சிறிதோட்டி லருவப்பார்
எல்லை யில்லவ னுறைகின்ற னெவ்வு யிரிடத்தும். (௫௯)

ஆதலாற் பசிபறவை கடீர்தனன் ருமென்
றேத மின்றியங் குறுமவர்களுக் கெலா மின்பாய்ப்
போதருங் கதிர்தந்துள மகிழ்வுறப் புரிவார்
ஸ்ரீ தரன்றிரு நாமமே வாய்சொலத்திகழ்வார். (௬௰)

இருக்கு மவ்வுழைத் துணைவியா ருணவுகொண் டெய்திச்
சுருக்கி லன்புட னூட்டினபின் பவர்துணி வாய்ப்
பெருக்கி னீவதும் பறவைகடின் பதும்பேறு
திருக்கு மன்புடனு றுவதுந் தெரிந்துகொண் டுரைப்பார். (௬௧)

ஐயநீ ரிங்கு விளைவதெல்லாம் பிறர்க் களித்தால்
செய்ய கோலுடை யரசற் கெப்படிப் பொருள் செல்லும்
நையலின்றி நாமுண்ப தெப்படி நனிநயவீர்
உய்யவேண்ட லீதெனக் கடிந்தோருரை யுரைப்பார். (௬௨)

ஈண்டி ருந்து நீரினி நுந்தங் கைக்கொ டீவீரேல்
பாண்டரங் கன்ற ளுணையுண்டு மக்கெனப் பகர்ந்து
வேண்டுகொண்டு சென்றார் தமதில் விடைமேவத்
தூண்டு மன்பின ரிருந்துழி நடந்தது சொல்வாம். (௬௩)

இளையில் பண்டரி செல்கின்ற யாத்திரைக் காரர்
அணைவதா யவர்தம் முகநோக்கி நீரந்நாள்
உணவ தின்றி யெங்களுக் குணவுத வினீரும் போல்
துணைசெய்வோ ரெவரெனப் புகழ்ந்திடு தலுந் தொண்டர். (௬௪)

அம்ம விங்கிவர் ஸ்ரீ ஹரி தாச ரென்றன்பு
விம்ம மற்றவர் தாள்பணிந் தேத்தினர் வியந்து
நும்மை யிங்குறப் பெறுவதற்கென் முன்னை நோற்றேன்
செம்மை சான்றவரோ யெனப்பல் படி செப்ப (௬௫)

கேட்ட மற்றவர் தம்மிலோரந் தணன்கிட்டி
வாட்ட மற்ற நல்லன் பினரோயெனவாழ்த்தி
ஈட்ட முற்ற சோளக்கதிர் களில் சிறி தீந்தால்
நீட்ட முற்ற வென்பசி தெறுமெனறன னின்று. (௬௬)

போதலே யவன் புகன்றது கேட்டு நங்கையால்
ஏதலோ தகாதில் லவள் சொல்லினு லென்று
கோதி லீரும தங்கையால் வேண்டுவ கொண்மின்
பேதமின் றெனக் கூறின ரின்மை பேணாராய். (௬௭)

விடைகொண்டங் கவன் வேண்டுவ விளைவினிற் கொள்ள
அடையும் யாவரு மன்பரை வேண்டின ரடுத்துத்
தடையிலா தெமக்குங் கதிர்தந்தருள் வீரேல்
மிடையும் புண்ணியம் விமலன்ற னருளுமேன் மேலாம். (௬௮)

என்றுகூறுவோர் தமக்கெலா மின்னுரை யியம்பி
நன்று வேண்டுவ கொண்மென வுரைத்தனர் நயந்து
துன்றுவோ ரெலாம் புகுந்தனர் சோளக் கொல்லைக்குள்
அன்று வானரமது வனம்புக்க தேயாக. (௬௯)

கதிர்களென் பனசிலவு மில்லா துறக் கண்டு
முதிரு மாசைக்குத் தக்க கொண்டே கினர் மொய்த்தே
எதிரி னெய்து வோர்யாவருங் கண்டு மற்றிவருக்
குதிர்தலாயிற்றுள் ளுணர்வென்ப தாயின மொருங்கே. (௭0)

விரக்தி யுற்றன ரிவரெனலாய்ச் சிலர் வியப்பப்
புரத்தி லுற்றவர் பற்பல புகலப் போத லெதாம்
தரத்தினம் மகன்முதலினர் நமைப் பழிசாற்றி
உரத்து ளுற்றுவரு ரெனவூர் செலா துறைந்தார். (௭௧)

கொல்லை மாட்டுறைந் திடவிவர் குமரனுர் குறித்து
வல்லைவந்து சோளக்கதிர் யாவுமாட்ந் துறுமவ்
வெல்லை கண்டுளைத்த ளுருடனோர் புறத்தி ருக்கக்
குல்லைமாலையான டியவர் குமரனை நோக்கி (௭௨)

ஈக்கடா முணவீட்டிடுங்தேன் பிறரினையத்
தாக்கியே கொளத்தக்க தாந்தன்மை போற்றுரா
தாக்கு மப்பொருள் பிற ரபகரிப் பதாயமையும்
தீர்க்க மாதலாற்றே டுறும் பொருளெலாஞ் சிறக்க (௭௩)

நல்ல பாத்திரத்து தவிளுன ளினைாய கன்றன்
வல்ல தாந்தையைக் கிடமதா யமைவறு மைந்த
சொல்லலான வீதறிகிலா தேன்று யரத்தைப்
புல்லலாயினை யெனமனந் தெளிந்தனர் புதல்வர். (௭௪)

தந்தை தாள் களிலுடன் பணிந்தெழுந்தனர் தாழ்ந்தே
எந்தை நீர்நமதில் விடைவருக வென்றியம்பி
முந்தை யாதரங் குறைவிலராயக முந்திச்
சிந்தை நைகிலர் தாய்க்கு மற்றவை யெலாந் தெரித்தார். (௭௫)

மைந்தர் கூறிய வகைவின வியம மதாயி
அந்தமில்லவ ளுணை வைத்திருந் துந்தம் மன்பர்
சிந்தைசெய் கிலா தீதலைவிடாது செய்திறந்தான்
விந்தையென்று கொண்டுள மிகக் களித்தனர் விரும்பி. (௭௬)

அன்ன கொல்லைக் கேழ்விராகனுந் தீர்வையையளித்தற்
கென்ன செய்வர் மற்றிவரெனச் சிந்தையு ளினைந்து
மன்னலாகிய பின்னர்வாய் தாக்கொள்வோன் வந்து
முன்னர் நின்றமாண் கோஜியைக் கேட்டனன் முயன்று. (௭௭)

ஆய தாசரு மகத்திடை மூன்று விராகன்
மேயதாயதைக் கொடுவந்து தந்துநால் விராகன்
சேய தின்றிநாளைக்கு நான் செலுத்துவே னென்னப்
போயி னன்னவன் போனபின் போதலே யென்போர் (௭௮)

அந்தவூரி னுகாயி யென்றுரைக்கு மந்தணிபால்
வந்துநால்விரா கன்வட்டிக் காய்வழங்கென்ன
முந்துமற்றவ னுளைக்கேவெனென மொழியச்
சொந்தமாமனைக் கெய்தின ரிருந்தனர் துணிவாய். (௭௯)

கடன்கொடுப்பவ ளுருளோரிவர் செய்கை கழறத்
திடங்கொளத்தெரிந் தீந்திடின் முதல் சிதைந்திடுமென்
றுடன் படற்குள மின்றியே யுற்றன ளுறைய
மடங்கொல் பேரறி வுற்றவர் வந்தனர் மறுநாள். (அ0)

அம்மையேபொரு டருகென வவளெனக் கொருவன்
பொய்ம்மை யின்றியே கொடுவந்து தருவதிற் பொய்த்தான்
மெய்ம்மை யெயதற் கென்செய்வே னெனக்கொடாள் விளம்பச்
செம்மை சேருளத் தோரக மீண்டனர் சேர்ந்து. (அக)

மனங் கலங்கினராகித் தம்மனைவியை நோக்கி
இனங்கிடைத்தில பொருளிந்த வூரிலே யிதனுல்
தனங்கொ டெய்துவன் பிறநகர் சார்ந்தியானென்று
வனங் கடந்துபோய்த் தனம்பெறு மூருக்கு வந்தார். (அ உ)

இங்கிராதிவர் போனபி னூருளோர் யாரும்
தங்குபோதலே தனந்தரா தெங்ஙனே சார்ந்தான்
கொங்குலாந்தொடை மன்னவ னேவலர் குறித்துப்
பொங்குவானெனப் பயங்கொடென் றேபல புகன்றார். (அங)

அதுதெரிந்தவந் தரசன்ற னேவலரவர்தம்
பதியின் வாயின்வாய்க் கதவடைத் திலச்சினை பதித்து
நதியி னிர்நெருப் புட்புகா தியற்றினர் நலிய
மதிகுலத்துறு கண்ண னீ தறிந்தனன் மனத்துள். (அச)

வெட்டியானென வேடங்கொண் டீரிருவிரகன்
தட்டிலாதுகொண் டரசன்ற னேவலர் தம்பாற்
கிட்டி நின்றுபோ தலேதந்த திதுவெனக் கிளத்தி
முட்டி லாதளித் தேகினன் பண்டரி முன்னி. (அரு)

போதலே மறுநாள் பொருளீட்டியூர் புகுந்து
நீதிலேவலர் பாற்பொருட் செலுத்திடச்சென்று
கோதினும் பொருள் கொண்மெனக் கோவினே வலர்நீர்
ஈதலாம் பொருணும் வெட்டியான் றந்தானென்றார். (அசு)

என்றபோதி லீதென்னென வீட்டினுக்கேகி
நன்றுதம்மனை முதலியர் யாரையு நணுகித்
துன்றுவெட்டியான் வயிற்பொரு டந்தார் சொன்மின்
இன்றெனக்கென யாந்தந்திலோ மெனவிசைத்தார். (அஎ)

மீண்டவ் வூர்வெட்டி யான்றனைக் கண்டனர் வினவ
ஆண்டவ் வெட்டியான் யான்செலுத்திலே னெனவறைய
ஈண்டியார்பொருள் செலுத்தின ரெனமனத் தெண்ணி
வேண்டு மென்னிடர் தீர்க்க வந்தனன்கொலோ விமலன். (அஅ)

வெட்டியானென வேடங்கொண் டெனதிடர் விலக
மட்டிலான்றனை யன்றியார் பொருள்கொண்டு வருவார்
கிட்டி நம்பொருட் டிவ்வகை கேசவன் வருதற்
கொட்டி யான்செய்த தவமெது வோவென வுன்னி. (அக)

பரமன் றன்னருட் கிரங்கினர் பரிந்தனர் பயந்து
வரதனீர்விழி மாதவ கேசவ முகுந்த
நரஹரீயென நாமங்கள் பலசொல்லி நயந்து
விரவென்னுபத்திற் குதவினை பண்டரி விமலா. (௯௰)

புலயனுகிநீ வரும்படியெனுற் பொருந்திற்றே
அலகிலாப்புக ழையனே நினக்கென வயர்போ
துலகளந்தவ னெதிர்வந்து தோன்றின னுடனே
நிலவுமன்பர்கண் டடிதொழத் தழுவினனிமலன். (௯௧)

தழுவு நாதனை நோக்கி நால்விராகனீ தந்தாய்
வழுவிலாதவை யுனக்கெங்ஙன் வாய்த்தது வகுக்கென்
றழுவலன் பினர் வினவலும் விட்டலனுனக்கு
நழுவிலுடரு வேனென்று பொருளென நவின்றான். (௯௨)

நன்னரவ்வுரை கேட்டலுங்கல்லென நகைத்தார்
இன்ன வாறுகொலோபுரிந்தாய் ஜகதீசா
அன்ன வேழை தன்பொருளை நீ யேன்கள வயர்ந்தாய்
மன்ன வட்டிக்கியான்கொணர் பொருளை மற்ற வட்கு. (௯௩)

கொடுத்துத்தீர்ப் பெனின்களவினை யெனவன் பர் குறிக்க
வடுத்த விர்ந்தவர் தமக்கருளாதவள்வைப்பைக்
கெடுத்த ழிப்பனு னீர்தரி லென்றுமால் கிளத்த
அடுத்தமாலுரைக் கெதிர்சொல வஞ்சின ரமர்ந்தார். (௯௪)

அஞ்சு மன்பரு ணுடையின்றி யினித்தளர் வாவார்
விஞ்ச வென்றுகொண் டவர்கொல்லைச் சோளநல் விளைவு
செஞ்செ வேயுறச் செய்தனன் சென்றனன் றிருமால்
மஞ்சுசேர்நக ராரது கண்டனர் மதித்தார். (௯௫)

அழிந்தசோளமிப் படிவிளை வாயின தந்தோ
பொழிந்தகன்மழை விலக்கி னேன்றன தருள்பூண்டார்
வழிந்த வன்புடைப் போதலே யெனப்புகழ் வழுத்தக்
கழுந்த பேரதி சயத்துட னிருந்தனர் கலந்து. (௯௬)

மனைக்குள் ளாகிய களஞ்சியங் களுமிக மலிய
அனைத்துந் தானிய நிறைந்துள வெம்பிரா னருளால்
இனைத்தும் போதலே யென்பவர் கண்டியாசகர்க்கு
நினைத்த வாறுகொள் கெனக்கொடுத் தார்மகிழ் நிரம்ப. (௯௭)

வேறு

கொடுத்து மாலரு ளால்விளை கொல்லையை
அடுத்துக் காத்திருந் தாரரி நாமங்கள்
தொடுத்து வாய்சொலச் சோர்வற் றிருந்தனர்
விடுத்துக் காதல் விளைவதில் லாமலே. (௯௮)

ராளே ராசென நாட்டுமெவ் வூரினை
ஆளுவோரிவர் மாதுல ராகுவார்
மூளுமன்பர் முஹூதமெ னப்பெயர்
கோளு நல்லவர் கொண்டம னையுடன். (௯௯)

வானடைந்தபின் மற்றவர் புத்திரர்
ஈனமண்டுதுன் மார்க்கரிருவரும்
ஆனதங்குடும் பச்சுமை யாற்றிலார்
மானமின்றி மறந்திருந் தாரரோ. (௱)

அவரவ் வாறிருக் கின்றதினலவர்
தவறிலூழியஞ் செய்தென்றுஞ் சார்பவர்
எவரும் ஹாசி யெனப்பெயர் சாற்றிடக்
கவர்கொ ளக்குடி காத்துவந்தாரரோ. (௱௧)

அக்குடிக்கழிவின்றி நல்லன்புதான்
மிக்குநாளும் விளங்கச்செய்கின்றவர்
கொக்கு வாய் கிழித்தான் பெயர் கூறுவார்
இக்கு நேரென்றிரவும் பகலுமே. (௱௨)

ஆயசெய்கையராய் வருமம்மையார்
மாயனுமம் வழுத்தினராய்க் கொல்லை
மேயதூயர் விளம்பும் பஜனையை
நேய மோடவணோர்ந்து வினவுவார் (௱௩)

நாளுமிப்படி நண்ணி வினவுவார்.
ஆளுமோர் தினமன்பு மிக்காகியே
மூளுமன் பின் முகதர்மருகனூர்
நீளுஞ்செவடி பற்றி நிகழ்த்துவார். (௱௪)

ஐய நான் பராதினத்த மரினும்
செய்ய கண்ணெடு மாலடி சேர்வகை
மெய்யர் நீர் செயவேண்டு மென்றே துதி
உய்யு மாறுபல வுரைத்தாரரோ. (௱௫)

ஆசிகூறலறிந்துடன் போதலே
தாசிமற்றி வடான் பராதீனையாய்
நேசியா நின்ற தானெடு மாலடி
ஏசிலேது செய்தே பெறுவாளெனு. (௱௬)

மாலன் பார்பணி செய்து வழுத்திநற்
காலந் தன்னிற் செங்கண்ணெடு மால்வளர்
கோலங்காணக் குறையுடை யாள்பிறர்
பாலடைந்து பணிவிடை செய்வதால். (௱௭)

பாடுவாசியின் மற்றிவடம் மனம்
ஓடு மாறுசெயற் கரி தென்றுனி
நாடுமிங் கிவளுக்கித நல்கிடா
தீடு கொண்டுறிலோ பிழை யென்றெனு. (௱௮)

ஆசியா மம்மையார் முகநோக்கிநீ
நேசி நாளு நிமலனை நெஞ்சிடை
ஏசிலா விரதஞ் செய்தேகாதசி
ஆசி லெண்ணிலடைந் தரிநாமங்கேள். (௱௯)

இன்ன வாறெழு கற்குனை யேவுவோர்
நன்னர் நல்விடை பெற்று நடத்தியேல்
பொன்னிறுதன் பதம்புகு வாயென
அன்ன ஷ்ராசிக்கடை விதங்கூறினர். (௱௰)

நல்ல தென்றவர் பாதநளினங்கள்
சில்லலோதிச் சிரமிசைச் சேர்த நித்தம்
மல்லல் சேரகம் வந்தொழி வின்றிமால்
புல்லநெஞ்சிற் புரிந்துறு வாரரோ. (௱௰௧)

மனையி னுழிய முஞ்செய்து மாலரி
தினமுணர்ந் துபவாசஞ் சிதைவுரு
தனைய பாத்தி ரிப்போதிற்றம் மாண்டைமார்
நினைவினல் விடையிய நிகழ்த்தியே. (௱௰௨)

கொண்டுபோதலே வாழுங் குலமனைக்
கண்டுவோரோடு கூடியடைந்தவர்க்
கண்டு பாதம் வணங்கிக்க சிந்துளம்
விண்டு கீர்த்தனம் பாடவின வியே. (௱௰௩)

ஹரி தினந்தொறு மிப்படிக் கண்டரும்
பெரிய மாதவருங் களிபேர்கிலாக்
கரியமால் புகழ்கேட்டுக் களிப்பினிற்
றிரிபிலாது வரவோர் தினத்திலே. (௱௰௪)

புறத்து மாய புரத்தினின்றும் வரு
திறத்து ளோரி லொருத்தனைத் தீங்குசேர்
உறக்கடித்த துரக மூலந்தனன்
இறக்கக்கண்டங் கியாவருங் கூடினு. (௱௰௫)

நாலு ஜாமமு நன்கந்தப் போதலே
மாலினும மகிமை சொல்கின்றத
றுலினுன் பிழைக்கச் செய்வ தாகுமோ
ஏலநாமறி வோமென வெண்ணினர். (௱௰௬)

எண்ணியச் சவத்தைக் கொடங்கேகினர்
புண்ணியத் துயர்கின்றவொர் போதலே
பண்ணினர் திருநாமம் பகரிடம்
நண்ணிநன் கிருக்கச் செய்து நாடினர். (௱௰௭)

ஹரியினுமம முதினு நல்லது
பெரிதியாவரும் பேணிப் பசித்திடற்
குரியதாத வின்கை புடைத்துத் தமக்
கரியனுமங் கழறுமி னெனறனர். (௱௰௮)

என்றுபோதலே கூறவங்கி யாவரும்
நன்றவாறு நடத்தின ராயிவண்
துன்றுகின்றவன் சொல்கில னுமமும்
ஒன்றுகை கொட்டிலனென வோதினர். (௱௰௯)

அணவ னேருரை கேட்ட ரவாற் செத்த .
பிணமெனத் தெரியாது பெரியவர்
குணபந் தன்னைக் குறித்து யிருள்ள தென்
றுணர்வு தோன்ற வுரைக்க லுற்றாரோ. (௱௨0)

மனிதராகப் பிறந்தவர் மாலரி
புனித நாமத்தைக் கைகொட்டிப் போற்றுதல்
இனிதிதிற் பெரிதில்லை மற்றை கையாங்
க் கைநாமங் களோ தென்றார். (௱௨௧)

தனது தாசர் சவந்தனை நாமங்கள்
இனிதுசொல் கென்றிசைத்தலு மவ்வுழி
வினவுவாரொடு கூடிவிளையுறும்
பனக மெல்லணை யான் பரிவாகியே. (௱௨௨)

பேசு கென்றபடி பிணம் பேசிடா
தேசும் மாவுறி லென்பெயருக் குமென்
றேசருக் குந்த வறுறுமென்றுகன்
னேசமுற்றி யமனை நினைத்தனன். (௱௨௩)

நினையுமுன் யமன்வந்து முனிற்றலும்
அனைய னனன நோக்கிய ராத்தொடும்
இனையனுவி பெறவினி திகென
முனைவன் முன்னுயிர் தந்தருண் முற்றினன். (௱௨௪)

ஆவிபெற்ற வனையனெழுந்துதன்
னாவி னலரி நாமங்க ளோதிக்கை
மேவுமன்பொடு கொட்டி விருப்புடன்
றேவிலா நடஞ்செய்தனன் றேசர்முன். (௱௨௫)

கண்ட யாவருங் கைபுடைத் தாரைந்தம்
கொண்டு நன்கு வியந்து கூத்தாடினார்
தொண்டருந் தெரிந்தன்பு துளங்குற
விண்டுவைக் குறித்தின் பின் விளம்புவார் (௱௨௬)

சவமெனத் தெரியா மற்றக வுடன்
புவன நாயகன் பேர்புகல் கென்ற சொல்
அவமிலா திவனுவி பெறச் செய்தாய்
நவமிதென்னை நளினை தன்னுதனே. (௱௨௭)

யாதுந் தேர்வதில் லாதுறு மென்வயிற்
கோதிலா வருள்கொண் டுவிளங்குறும்
நாதனே யைவர்க் காகநயந்துபோம்
நாதனே யெனக்கண் புன றூவினார். (௱௨௮)

நாவிக் கீட்டிசைச் சூரியன் றேன்றுமுன்
மேவுமா ரதிவிட்டல னுக்கெடுத்
தாவலிற் பிரசாத மளித்திட
யாவரும் பெற்றக மகிழ்வாகியே.

உலகத்தை யுத்தரிக்கும் பொருட் டிவண்
நிலமளந்த வனேயிந்த நேயராய்
இலகு கின்றன னென்றவரைத் துதி
பலபுகன்று பதியுறப் போயினார். (௱௬௰)

வேறு.

ஹாசிப் பெயராரிப் படியாஞ்செய் கைகள் யாவும்
நேசத்தொடு கண்டுஞ்சொலு நெறிநிற்பது கொண்டும்
மாசற்றியல் வாரிப்படி வருடம்மொரு மூன்று
காசற்றுற மூகதம் பெறுகாலைப் பருவத்தார். (௱௬௧)

தமிலாகிய பாகம்பிரி வாகற்கமை தருவார்
நமிலாகிய வடிமைப் பணிநாளும் புரிகிற்பாள்
தமியாள் பகல் கூடாளது தன்னுற் பணிகொள்வார்
எமிலா ரெனவிலை செய்வதற் கிசைந்தா ரிருவருமே. (௱௬௨)

அவ்வண்ண மறிந்தே பணி ஹாசிப் பெயரார்தாம்
செய்வண்ண மிவன்றான மைச்சேர்ப்பார் செவியோரோ
உய்வண்ண நடக்கா தெனவுள்ளிற் றுயருற்றார்
மெய்வண்ண முரைப்போர் வயின்மேவிப் புகல்கின்றார். (௱௬௩)

அய்யே யெனையாள் வோர்தமிலாம் பல்பொருளெல்லாம்
மெய்யே பகிர்கிற்பா ரெனைவிற்றுப் பொருள்பெற்றுச்
செய்வார் பகலெனையும் விலைசெய்தா லெனைச் சேர்ப்போர்
உய்வாம் வகை யுதவா ரெனக்கு தனுலெது செய்வேன். (௱௬௪)

என்றார் விழிகளி னீர்வரவினைந் தேயவரி ருதாள்
நன்று யுறப்பிடித்துக்கொடு நவிலன்னை பிதாவோ
டொன்று கியகுருவுங் கடவுளு நீரென வுற்றேற்
கின்று கியதுமை நீங்கிட வெனக்கென்றி ரங்குற்றார். (௱௬௫)

இரங்குற்ற தகண்டும் பிரிவெய்திற் றெனல்கொண்டும்
தரங்கத் திடைத்துயில் வோனொடு தாசர் தனிநோக்கிப்
புரங்கற் பிதமதனு லெதுபுகு மோவது புகுநீ
அரங்குற்ற ஞர்கொளலாற் பயன் யாதாமெனவறைந்தார். (௱௬௬)

அவ்வாறவர் புகலப் பணிஹாசிப் பெயரார்கேட்
டிவ்வாறுரை செய்யாதுமை யான்றான் பிரிவுறுதற்
கொவ்வாதுள விலைதந் தெனை யுய்யக் கொளுநீரோ
தவ்வாதென வவர்கான் மிசைத்தாழ்ந் தாருளந் தளர்ந்தார். (௱௬௭)

அனையார் தளர்வது கண்டரி தாசர்க்குள மமைவாய்
இனையாடனை விலைகோடலுக் கில்லைப் பொருணம்பால்
பினையாது செய்வோ மென்றனர் பேதுற்றனர் கொல்லை
தனையா யினும் விற்றுக் கொளறகு மென்றுரை தருவார். (௱௬௮)

நீயஞ் சலையூர் செல்லுதி நின்பின் வருவேன் யான்
ஏயுங் கிரயங் கொண்டென வபயந் தரவெரியும்
தீயண்டின வின்மேன் மழைபெய்தா லெனத் தெளிந்து
வாயுஞ் சதனஞ் சென்றனர் மனநோ வகிலாமல். (௱௬௯)

பின்மைத்தூர ரூர்க்கே கினர் பேசும் ஹரிதாசர்
வன்மைக்கொடி யோரா மிருவரையுந் தனிநோக்கி
நன்மைச் செயல்புரிதாசியை விலைசெய்திட நாடும்
தன்மைச் செயல் கேட்டுற்றன னீர்சொல் விலைதருவேன். (௱௪௰)

என்றுரை கேட்டா ரிருவருஞ் சம்மத மெய்தார்
குன்று நெடுங் கோபங்கொடு கொள்வான் வரலானீர்
பின்று விலைகொடு நம்வயி னீ யோம்பிற ருக்கேல்
இன்றுயினும் விலையீகுது முறவாயினி னொலால். (௱௪௧)

எனவே யிருவருஞ் சொல்வதை யிற்குள் ளுறைஹாசி
வினவாமுன னொனதூழின் விசித்ர மிதுவென்று
மனவேதனை கொளலைத்திருமால் தாசரு ணர்ந்தே
இனலே னுறு கின்றுயென வெல்லோர் முனுமிசைப்பார். (௱௪௨)

விலைதந்தனை வாங்கற்கு விடோபாவை விடுப்பேன்
பொலியுந்துதி புரிந்தென்றுடன் றமதூரகம் புக்கார்
உலைவின் றவனுறுவோ ரவருரையின் படியுறுமோ
தலைவெண்க டலமர் வானருளா லென்றன ரார்த்தார். (௱௪௩)

உடனே முகதம் புத்திர ரிருவோரு முடன்று
படநாகணை யுடையோனடி பரவப் பெறுதாசர்
திடனாய் விலைதந் தய்ப்பதின் முன்னம் விலைசெய்வோம்
மடநாரியை யெனவாங்கு நர்தமைத் தேடினர் வாய்க்க. (௱௪௪)

பகரும் விலையது தானிரு பத்தைந்து விராகன்
தகவின் பொடுதருவோன் கிடைத்தான்றன் வயின் ஹாசி
மகர்தம் மொடுபொருள் கொண்டுடன் வழங்கிச் செலுகென்றார்
முகமுன் பரிவாயோ வெனவலறிச் சிலமொழிவார். (௱௪௫)

என்றேசிகர் மொழிதப் புவதிலே யாமென வெண்ணி
நின்றே னுயிர் கொண்டிங்ஙன நிலையாயிது காறும்
அன்றுகு வதாகின்ற துனடியார் மொழியதுதான்
குன்றுவகை காப்பாய் வரைக்குடையாயென வழுதார். (௱௪௬)

ஆனைக்கு முன்வந்தாய்திரௌபதிக்காடை முன்றந்தாய்
சோனைப் புயல்காத்தாய் மலைமிதக்கும் படிசூழ்ந்தாய்
மீனைப் புரைகண்ணு ணிறமேவச் சுதவெனவும்
மானைத் துதிசெய்தார் பலவகையா யதுபொழுதே. (௱௪௭)

புகழ்பண்டரி புரம்வாழ்வுறு புனிதன் ஒருபனவன்
திகழ்வேட மொடவண் வந்தயல்செறிவோர் பலர்தெரிய
நிகழ்கின்ற தென்னென ஹாசியை நேர்ந்துன் குருநின்னை
இகழ்கின்றிலர் வருகென்றென ளெனையேவின னென்றான். (௱௪௮)

தனைவாவென வழைக்கத்தெரி தாசித்தொழி லார்தாம்
முனைமேவுறு பனவன்கழல் முன்வீழ்ந்தடி பற்றி
எனையாள்குரு வுரைமெய்யென மகரோடினை வாக
அனையான்மக ருடன்ஹாசியொ டடனேமறை வர்னன். (௱௪௯

வேறு

போதலே யெனுந்தாசர் புகன்றபடி தனதுதிருப்
பாதமே வுறப்புரிந்தான் ஹாசியைப்பண் டரிநாதன்
நீதமெய்ப் புதல்வருட னெனவியந்தார் நின்றுகண்டோர்
பேதமேயீ தென்றுபொருள் கொடுத்தான் பேசுற்றான். (௱௫௰)

முகதம்புத் திரரோசீர் முந்துற வென்பொருள் கொண்டீர்
தகவினுங்க டொழுத்தைதனைத் தருகின்றி லீரதனால்
அகவின்பிற் கொளும்பொருளை யளிக்கவெனக் கேட்கவவர்
மகர்தம்மோ டாசியையாம் வழங்கினபின் பொருள்வருமோ (௱௫௧)

ஹாசிதனை மாண்கோறு யழைத்துப்போ யிருப்பதனால்
தாசிவிலை யவர்கொடுக்கப் பெறுதியெனச் சாற்றவவன்
மாசிலவர் கொடுபோகக் கண்டிலன்யான் மற்றவர்பால்
பேசிவிலைப் பொருள்கொள லெப்படியென்று பிணங்கினான். (௱௫௨)

இங்குவழக் கிவ்விதமா யிருக்கமுன்போம் போதலே
தங்குமிடத் திருந்திந்தத் தகுதிதனைத்தான்கேட்டுப்
பொங்குமன்பு கொடுபாண்டு ரங்கவனைப் போற்றமுன்
அங்கு நடந்திவ்வண்ண மழைத்தனை யோவென மகிழ்ந்தார். (௱௫௩)

அக்காலத் தவ்வூர்ச்சார் பதிலிருக்குமோர் புலையன்
மிக்கார் பாற்றினமடைந்தங் கவரடியை மிகப்போற்றி
இக்காலத் தெனக் குபதேசித்தருள வேண்டு மெனத்
தக்காரோர் தினமவனை நோக்கி யொன்று சாற்றுகின்றார். (௱௫௪)

யானுப தேசித்தருள் வதிலை யெவர்க்கு முபதேசம்
தானுரைக்க வல்லார் பாற் சார்கென்னவவன் மறுத்தும்
தேனுகுக் குந்துள வினனுக்கன் புறுவீர் திரஸ்கரியீர்
நானுமக்குப்பணி செய்யவுபதேச நல் கென்றான். (௱௫௫)

ஆனாற் பண்டரி நாதன்றனையடைவிற் கேட்கின்றேன்
தேனார் பைந்துள வலங்கற் றேவன்விடை தருவானேல்
மேனானுன்றனக் குபதேசித்தருள் வேனென விளம்பி
மீனன பாண்டுரங்கன்றனை யுளத்துள் வேண்டினார். (௱௫௬)

தேவாதி தேவா பண்டரி மேவுந்திருத்தலைவா
ஓவா திங்கிவனுபதேசிக்க வென வுரைக்கின்றான்
தாவாத வுபதேசந்தரவுனக்குச் சம்மதமோ
ஏவான படி நடக்கின்றே னென்ன விறைஞ்சுதலும். (௱௫௭)

பாண்டுரங்கனஃதறிந்து பக்தருளந் தனிற்றோன்றி
வேண்டுமன்பு நல்லறிவு விரக்தி குரு விசுவாசம்
ஈண்டு மவர்க் குபதேசஞ் செயலாசை யிரக்க மின்மை
நீண்டுறு பொய்களவு கட்காமங்கொலை நேருறுதலொடு. (௱௫௮)

தேசிகன் சொலுளத் தமையாமற் பிறர்க்குச் செப்புதலாம்
மாசினனீங் கிவற் குபதேசம் வழங்க லாகாது
நீசிறி திங்கிவனை யறிதர வேண்டினி கழ்த்து கின்றேன்
ஆசி லுபாயத்தை யெனவ வர்க்கருள லாயினான். (௱௫௯)

நீருழு மோபெருத தனை நீசனிவனைற் கொன்று
சீருறு நுங்கிளைஞரொடு சேர்ந்துண்க செய்யு மிதை
யாருமறிவுறச் சொல்லே லெனவவற்கு வற்புறுத்திப்
பாருமெனவே தாசர் பரிந்து நொந்து பகர் கின்றார். (௱௬௰)

உயிர் வதை செய்கிற தேதுக் குறைதனை யுண்கிறதேதுக்
கெயிறு கரிக்கிறச் செய்தோ யெனக்கிது நன்றன்றென்ன
வயிறு நிரம்புறவுலகை வாரியுண்போனெனதுரையைச்
செயிரில் பிரமாணமென விசுவசித்துச் செய்வதனால். (௱௬௧)

கொலைப் பவமும் புலாலுண்ணுங்கொடும் பவமு முமையடையா
நிலைப்புறயான் சொன்னபடி நிகழ்கவெனச்சொலி மறைந்தான்
கலைப்பிலுள மாண்கோஜி புலையன் முகங்கண்ணுற்று
மலைப்பிலென் சொற்படி நடக்கினீயே நன் மாணக்கன். (௱௬௨)

நடப்பதே தெளிலெனது நல்விடையைக் கொலை செய்திங்
கடப்பிறர்க்குத் தெரியாமலளித்து வெளிப்படுத்தாயேல்
இடப்பட வுன்றனக் குபதேசஞ் செய்வே னெனச்செப்ப
மடப்புலைய னன்றென்று விடைவதைத்து வழங்கினனே. (௱௬௩)

விடைக்கறியைச் சமையல்செய்து விரும்பு முறவினரோடு
தடைப்படலின் றியுண்டார் தாசரப்போ துடனுண்டோர்
கடைப்படுமிக் கொலைசெய்யா தவரிவரிக் காலத்தி
னிடைச்சகளைக் கொலைசெய்தா ரிது நன்றோ வெனவகன்றார். (௱௬௪)

புசித்துறவோ ரகன்றபின்பு போதலே புலையனோகி
நசித்தவிடை யெலும்புதோ னண்ணுகொம்பு குளம்பெல்லாம்
விசித்தெனது கொல்லையிடைப் புதைத்தியென விளம்பதலும்
வசித்தவனப் படிச்செய்தான் மறைவாகநிசிதனிலே. (௱௬௫)

விடிந்தபின ரப்புலையன் விருந்துண்டோர் தமிலேதும்
தடிந்திலன் றெனன்றோ ரகம்புகுந்தோர் சார்பிருக்கப்
படிந்தவவ்வில் லான்கண்டு பறையனுள்வந் தானென்று
கடிந்தவனை நோக்கியில்லுள் வரலாமோ வெனக்கூற (௱௬௬)

சண்டாள னுங்களுக்கு மெனக்குமென்னை தான்பேதம்
கொண்டாளும் விடையைநென்னற் போதலே கொலைசெய்து
தண்டாதுங் களுக்கெல்லாம் விருந்துசெய்யச் சாப்பிட்டீர்
எண்டாவெனவ் வளவுமின்றி யெனையிகழ்வ தென்னென்றான். (௱௬௭)

என்றலுமவ் வில்லகத்தி லெல்லோரு முறக்கூடி
நன்றலது செய்யாமெய்ஞ் ஞானமுள மாண்கோஜி
யின்றிவன்சொல் வதுபிசகென் றார்சிலர்மற் றவரொருது
துன்றுமிடத் திலையென்றார் சிலர்துணுக்குற் றார்சிலரோ. (௱௬௮)

இப்படியெல் லோருமனக் கிசைந்தபடி தாம்பேசி
அப்படிச்செய் வாரோமற் றவரிடம்போ யறிகுதும்யாம்
பொய்ப்படிறு காதுனுரை பொருந்துகரி தானுண்டோ
வப்படிநீ மெய்க்காட்ட லெனப்பகல வவன்புகல்வான். (௱௬௯)

என்னுரைதான் பிசகாம லின்றேமெய்க் காட்டுவனென்
றன்னவருக் குரைசெய்ய வனைவருங்கேட் டகங்காரம்
துன்னியிந்தப் போதலேசெய்த துண்டேற் கொலைசூழ்வோம்
மன்னனமை யொறுத்தாலும் பொறுத்துமென மனத்தமைத்து (௱௭௰)

ஆயுதபா ணிகளாகப் புறப்பட் டச்சுதனையுளத்
தேயுறக்கொண் டிருவிழியுந் திறவாம லிருக்கின்ற
மீயுயர்மாண் கோஜிமுன்னே வந்துனையாம் வீக்கவந்தோம்
நீயுனது கண்டிறந்து நோக்கென்று நெறுக்கினார். (௱௭௧)

விடைவதைத்து விருந்துசெய்து ராசாரம் வேண்டுவதோ
தடையறச் சொல்கெனக் கேட்கத் தாசருங்கண் டிறவாமல்
அடைவறவென் விடையதனை வதைக்கவருள் செய்தோமென்
புடைநெருக்கித் கேட்பவர்க்குப் புகல்வதென்னை புகலென்பார். (௱௭௨)

உன்னா லுண்டான விபத்தினைப் போக்கி யுதவுகெனப்
பொன்னா தன்றனைத் துதித்துப் புகழ்ந்து கொண்டு தாமிருக்க
அன்னா றொல்லாரு மெமைக் குலப்பிரஷ்ட ராக்குமுனக்
கென்னாகும் விழிதிறவாதிறை வனையெண்ணுறி லென்பார் (௱௭௩)

பலவிதமாய் வைதவரைப் பறையன் முகந்தனை நோக்கி
நலவிடையை வதைத்ததற்கு மெய்க்காட்டு கெனநவில
புலயனவர் தமைவாரீ ரெனவழைத்துக்கொடு போந்து
நிலவறையுட் கிடப்பவெல்லா மெடுத்து வெளியுற நிறைத்தான். (௱௭௪)

அவையெல்லாந் தகருறப்பா யமைந்திருக்க விடைவதைத்தோன்
இவையென்ன புதுமையெனத் துணுக்கமுற்றங் கேங்கினின்றான்
உவைகண்ட வுறவினர்பொய் புலையனுரைத் தானிவன்மேல்
கவைகொண்ட தெனவவன்ற னுயிர்வதைக்க நாடினார். (௱௭௫)

போதலே யெருதுளதோ வதுதெரிது மெனப்போந்து
மாதரோ ருளநிலையை நோக்கலு மற்றது நிற்க
ஏதடா புலையாநீ யெனதில்லுட் புகுந்திலவ
நீதநீ புகன்றதனா னினைவதைத்த னீதமென்றார். (௱௭௬)

அனைவரு மவ்வாறந்தப் புலையனுயிர் தனைவதைக்க
நினைவுகொளத் தெரிபுலைய னிலைதளர்ந்து நடுக்கமுற்று
மனையுறுமாண் கோஜிகடை வாயில்வந்தோ வெனப்புலம்பி
எனைவதையா தினித்தயைசெய் தீடேற்ற வேணுமென்றான். (௱௭௭)

அரிதாச ருறவினரை யாதரங்கொண் டுறநோக்கிப்
பெரியோர்நீ ரிவனிழைத்த பிழைபொறுக்க வேண்டுமெனத்
தெரியாதி யாமும்மைச் சீறிவைத பிழைநுமுளம்
தரியாமற் பொறுத்தருள்க வெனவணங்கித் தாம்போனார். (௱௭௮)

அருள்செய்த பெருமாய னவருளத்துக் குட்டோன்றி
மருள்செய்த புலையனிலை தெரிந்தீரோ வெனவருக்கத்
தெருள்செய்து ஜகதீசா தீனத யாளாவென்னைப்
பொருள்செய்து நீயியற்றும் புதுமைக்கோ ரளவுண்டோ. (௱௭௯)

எனத்துதிகள் பலபுகலுந் தாசரன்புக் கிரங்கியருள்
புனத்துழாய் முகினகைத்துப் போயினன். போனபின்பு
மனத்திலொரு வருத்தமுமில் லாமலந்த மாண்கோஜி
இனத்துடனே களிசிறப்ப விருந்தனரக் காலத்தில். (௱அ௰)

புருடரிற் றிலகர் போதலே யென்போர்
கருடனைத் துவச மாயுள க்கண்ணன்
அருடலைக் கொள்பவ ராயினபோதோர்
வருடமுற்றுநனி மாரிவ றந்த. (௱அக)

வித்து வித்திடுத லின்றிவிலங்க
மைத்து விண்ணிலொரு மாமழைபெய்ய
வத்ததிக்கண் விளைவாமெனவெண்ணி
வைத்த வித்தையவர் மைந்தர் விதைத்தார். (௱அ௨)

பொழியு மாமழை மிகப்பொலிவாக
அழுகலாய்விதை யனைத்துமவிந்த
பழுதிலாதவரி பக்தர் தெரிந்து
வழுவிலாதுகடன் வாங்கினர் வித்தே. (௱அ௩)

வாங்கிவைத்தினிது வைகுமந்நாளில்
ஓங்குபண்டரியி னுற்சவநோக்கத்
தீங்கிலாதஹரி பக்தர் திரண்டே
ஆங்குவந்தவரை யண்மினரம்மா. (௱அ௪)

வந்ததாசரை மகிழ்ந்திவர்கண்டு
முந்துசென்றடி வணங்கிருகுந்தற்
குந்து மன்புமிக வுள்ளவர் சேர
எந்தமாதவ மியற்றினனென்றார். (௱அ௫)

என்றபோதவ ணெதிர்ந்தவர் தம்முள்
ஒன்றோர் வேதிய னிவுத்தமர் தம்மை
நன்றுயர்த் தின னயந்து நலீர்நீர்
துன்றுபஞ்சமிதி லேசுகமாக. (௱அ௬)

எம்மை யாதரவு செய்திடல்வேண்டும்
செம்மையாக முன்பு செய்ததுபோல
வெம்மை தீரருள் விளைப்பவர் தும்போல்
இம்மை யிவ்வுலகில் யாருளரொன்றான்- (௱அ௭)

வினவி யன்பருள வித்தை யிவர்க்கோ
தனமதற்குதவில் வேறில் விதைக்க
மனமிளைக்க விலையென்பது மாறே
எனவுளத்தெணி மகாரை யிசைப்பான் (௱அ௮)

தனிவி டத்துற வழைத்தரிதாசர்க்
கினிது ணற்குள நம்வித் தலதின்றால்
அனைய வித்தினை யளிப்பத னீர்
மனமறுக்கமு றன்மின்ன லமைந்தீர். (௱அ௯)

உயிரிலாநில னுறச்செய்து வித்தை
பயிரதாக வெகு பாடுகள்பட்டால்
முயல்வ தான முயல்வுக் கமைவாக
அயர்வு தீர வருளும் பலனம்மா. (௱௯௰)

ஆவியுள்ள வுடலாக விதைக்கில்
மேவுமிக்க பயன்மெய்த் துனியின்றித்
தாவில்மற் றிதிலுமே வரிதாசர்
மாவயிற்றிடில் வரும்பய னென்றே. (௱௯௧)

ஆதலாலிவ ணடுத்துள நான
சாதுசற்சனர் தமக்குளவித்தை
ஈதலேநல னெனச்சொல வந்தப்
போதலே புதல்வர் புந்தியிசைந்தார். (௱௯௨)

உள்ளவித்தையவ னுற்றவருக்குப்
பொள்ளெனத் தரலும் வாங்கினர் போனார்
விள்ளு மற்றிவர் நிலத்திட வித்துக்
கொள்ளு மற்றொருவ னைக்கொடு வென்றார். (௱௯௩)

வாய்ப்பவே கடன் வழங்கு மவன்றான்
பேய்ப்பரங்கி விதையைப் பெறநல்கப்
போய்ப் புனத்திடை பொருந்த விதைத்தார்
காய்ப்ப வீதறி கருத்தர் சிரித்தார். (௱௯௪)

இவரி வூர்முதல்வ ரொன்றெண யார்க்குந்
தவிர்கி லாமலுள தானிய மெல்லாம்.
கவரு மாதருத லாயினர் காத்தற்
கெவருளா ரிவரை யன்றியி லென்பார் (௱௯௫)

இன்னுமிட்டுள பரங்கி யெனுங்காய்
தன்னைமற்றும் வருதற் கிசைவானோர்
நன்னர்பெற் றகல நல்குவதன்றி
என்னைமுற்று மிவரிற் பயனென்பார். (௱௯௬)

உறுநிரப் பினர்கள் யாருமொவொன்று
பெறுதலுக் குரிய தாகுமெனப்பின்
மறுவறக்கிளரும் வன்பயிரைப் போய்த்
துறுவநோக்குவ மெனச்சொலுகின்றார். (௱௯௭)

சிலபகற்கழிதல் சென்ற பின் வந்து
பலரு மற்றவரிடும் பயிர்தன்னை
நலமுறத் தெரிதல் செய்த தினன்காய்க்
குலவுவோர் பலமுறித்தனர் கொண்டார். (௱௯௮)

பற்றியங்கதை யுடைத்தனர் பார்க்க
உற்றகோதுமை களாயதனுள்ளே
மற்றி தென்னென வியந்து மதித்தார்
பெற்ற மேய்த்த வோர் பிராணருளென்றார். (௱௯௯)

அதை யறிந்தோரதிகாரி வியந்தே
இதை யிமண்டலீ கனுக்கிது போதே
சிதை வதின் றறிவுறச் செய்வனென்று
விதை விரைந்தெழுதி விட்டனன் மாதோ. (உ௱)

அரசனுகிய வவிந்தனறிந்து
விரசுமிங்கிது வியப்புள தென்று
பரசு கண்ணனது பத்தரை யன்றே
முரசிணங்குகடை முந்துக வென்முன். (உ௱க)

ஏவலாளர் கடிதேகி யவைக்கண்
மேகலாகவ வரைப்புகு விக்கக்
காவலோனவ ரடைந்தது கண்டி
யாவதீதி வணியம்புக வென்முன். (உ௱உ)

யாது நானறிகிலேனி வியற்கை
ஸ்ரீ தரன்றெரி வனென்றனர் செப்ப
ஓது முன்பவனுருத்திவன் வஞ்சச்
சூது ளோனெனமனந்துணி வுற்முன். (உ௱௩)

இன்றிவன் றனையவிந்த னெனச்செய்
தொன்று விப்பெனென வுன்னியுளத்தில்
நன்று கோவின திறைச்சியை நண்ணும்
சொன்றி யோடுறுதல் செய்திவர் துய்க்க. (உ௱௪)

வைத்தபோ தவைமருத் துளவத்தோன்
மெய்த்த சீரருளின் மெல்லி யபூவும்
பைத்த பைந்துளவு மாயினபார்த்துச்
சுத்தரொன்றுடன் வியந்து துலுக்கன். (உ௱௫)

மனதுளேமிகு பயங்கொடு மாமால்
தனது தாசரடி தாழ்ந்து நுமக்கென்
இனிது வேண்டுறுவ தீகுவனென்னப்
புனித சீலரொதும் வேண்டிலர் போந்தார். (உ௱௬)

இரவு நண்பகலு மோவுதலின்றிப்
பரம னெஞ்சுற நினைந்துறு பக்தி
திரமதாகநிலே செய்துற மூட
நரருமுய்வுறுத னண்ண விருந்தார். (உ௱௭)

மாண்கோஜிபோதலே திருவடிகளேசரணம்.

ஆகச்சரித்திரம் ௩௭-க்கு செய்யுள் ௩௲௱௭௭.

முற்றிற்று.

ஆதலா விழிகுல மாத னன்றெனக்
காதலி தனைவிடுத் தவிந்தர் கட்கெலாம்
மேதகு குருவென விளங்கு வோன்வயிற்
போதர லாயினர் புகலு கின்றனர். (௰)

உங்குலத் தியாமுறி னலமுண் டாகுமோ
பொங்குநுங் குரான்வயிற் புகல்வ தென்னென
எங்குலத் துறிலுமக் கினிமை யுண்டுதான்
அங்கிருந் திங்குறல் பொருள பேட்சையோ (௰௧)

நீர்மிக யோக்கியர் நெறியெ லாந்தெரி
வீரும தின்குலம் விடுத்த னன்றன்று
சார்தரல் பொருணசை தானென் றுற்பொருள்
சேர்தரும் வகைசெய்வே னென்று செப்பினன். (௰௨)

உம்மத மொருவகை யுளவென் றெண்ணியான்
சம்மத மாயின தன்றிச் சார்தலின்
நம்மனத் திலைபொரு ணசையென் றேதினோர்
தம்மனை வியைவிட்டுச் சார்ந்த பட்டரோ. (௰௩)

அவர்மனத் திடத்தினை யாய்ந்த விந்தர்தந்
தவகுரு சுன்னத்துச் சமைத்துப் பிரஷ்டனாய்
எவமுறச் செய்தன னிவர்தஞ் செய்கையின்
விவரம தறிந்தனர் வேத வேதியர். (௰௪)

பட்டரைத் திருத்தலெப் படியென் றெண்ணிக்கை
விட்டன ரிவரிழி மிலேச்ச னாகியே
கெட்டதை யறிந்திவன் கெடற்குக் காரணம்
இட்டநன் மனைவியா லெனச்சொல் வார்சிலர். (௰௫)

ஆயினு மவளிழித் தறைத லாகுமோ
தீயவற் சொல்லினுஞ் சினக்கக் கூடுமோ
மேயவிங் கிவனென விளம்பு வார்சிலர்
ஏயது பித்தமிங் கிவற்கென் பார்சிலர். (௰௬)

பாவியிங் கிவனைப்பார்த் திடினும் பாவமாம்
நாவினிற் பெயர்நவின் றாலுந் தோஷமாம்
தீவினை யோன்மனை தீரு முன்னரோ
ஆவியை விடினல மாமென் பார்சிலர். (௰௭)

இன்னண மூரிலுள் ளவரி யம்பிடப்
பின்னரப் பிரஷ்டனம் மதத்தும் பெற்றிலான்
நன்னரை நவையென நாடி யோர்தினம்
மன்னுகங் காநதிக் கரைக்கண் வந்தனன். (௰௮)

அக்கரை மருங்குறு மந்த ணாளர்பால்
புக்கியான் பிரஷ்டனாய்ப் போத லாயிற்றே
மிக்கநான் மறைதெரி வேந்த ரேயெனச்
சக்கினீ ரொழுகுற வழுது சாம்பினன். (௰௯)

இருபிறப் பாளந் துலுக்க ரின்மதம்
மருவின தார்பயன் வந்த தென்னெனச்
சருவுமென் முன்வினை தன்னிற் சாதியை
ஒருவின தன்றிமற் றொன்று மில்லென்றான். (உ௰)

நன்றென விரங்கினர் நாடிப் பிராய்ச்சித்தம்
இன்றுசெய் திணக்குத லினிய தென்றுகொண்
டன்றவர் தக்கன வுஞற்றி யந்தணர்
என்றுறச் சேர்த்தன ரிசைவு கொண்டரோ. (உக)

அத்தரு ணத்திலே யவிந்தர் யாவரும்
ஒத்தனர் கங்கைநீர்க் கரைக்க ணேடிவந்
தித்துலுக் கனைமறை யவரி லெய்திட
எத்திறத் தமைத்துளீ ரென்று கேட்டனர். (உஉ)

வேதியர் தமைவந்த விந்தர் கேட்டதற்
கோதுவன் பிரஷ்டனை யுற்ற வேதியன்
நீதியிற் றுலுக்கனாய் நியமித் தீரெனில்
காதினிற் றுளையுள காண்க வென்றனன். (உ௩)

என்றவ ரோடுவா தாடி யேசலும்
சென்றனர் பின்பிராய்ச் சித்தஞ் செய்துடன்
ஒன்றினர் தங்களை நோக்கி யுங்களால்
துன்றுதோல் வளர்ந்தில சுனத்துக் கேனென்றான். (உ௪)

தோல்வளர்ந் திலவதாற் றுலுக்க னேயன்றி
மேல்வரு வேதிய னாகு வில்லைநான்
சால்பெருந் தகுதியீ ரென்று சாற்றிட
நூல்வளர் மார்பினர் நுவல்கி லாருற்றார். (உ௫)

வேதிய னும்மலன் மிலேச்ச னும்மலன்
சாதியி லானெனச் சலித்து மார்க்கத்திற்
போதரு வோர்தமை நோக்கிப் போந்தயான்
ஏதுசா தியிலுள னெனவி னவினன். (உ௬)

வழிவரு வோரவன் வதனம் பார்த்து நீ
எழின்மறை யவனென வெனக்குச் சுன்னத்துச்
சுழிபுள தேயெனச் சொல்ல மற்றவர்
இழிவுறு பித்தனென் றேசிப் போயினார் (உ௭)

பின்னருஞ் சிலர்தமை நோக்கிப் பேதைமை
துன்னினேன் காட்டிடத் துலுக்க னென்றனர்
மன்னுறு துலுக்கனேற் செவியில் வன்றொளை
என்னுள தெனமனந் தியக்க மெய்தினார் (உ௮)

தியக்கமோ டவனெங்குந் திரித லைக்கண்டு
மயக்குறு பித்தனென் றுரைவ ழங்கினார்
அயர்ப்பிலன் றனக்குள வையந் தீர்த்தருள்
நயக்குரு யாரென நாடி னின்றனன். (உ௯)

வந்தன னோர்வட வாள மென்னுமூர்
நந்தவூ ரினிலொரு நாக நாதனென்
றந்தமி லருந்தவத் தவரைக் கண்டனன்
முந்தினன் வணங்கினன் மொழிவ தாயினான். (௩௰)

சொல்லுநான் மறையவ னோது லுக்கனோ
நல்லநீ ரறைகுதி ரொன்ன நல்லவர்
வல்லதங் கைத்தடி கொண்டு மாமயல்
புல்லினோன் றலைமிசைப் பொருந்தச் சாடினார். (௩௧)

சாடலு மூர்ச்சையாய்த் தரணி வீழ்ந்தனன்
ஈடறு தவத்தின ரிவன்ற னையத்தை
வீடுறத் தொலைத்துநல் விவேக ஞானத்தை
நீடுறப் பொதிக்க நிச்ச யித்தனர். (௩௨)

அருகுறு சீடரை நோக்கி யக்கணத்
தரளுட னுலக்கைகொண் டுவரச் சொல்லினர்
மருவலு மதிலவன் றன்னை மாட்டியே
உருவற விடிக்கவென் றுரைசெய் தாரரோ. (௩௩)

சீடர்க ளப்படி யேசி தைத்தனர்
மூடுதோ லெலும்பொடு தசைச மூலமும்
கூடியொன் றுயறக் குத்தி மொத்தையாய்
ஈடுறச் செய்தபி னிருந்த வத்தினர். (௩௪)

அந்தமொத் தையையொரு பாவை யாக்கியே
இந்தனச் சிதைகளை யடுக்கி யேயதில்
வெந்திடும் படிவைத்து வினையெ லாங்கெடச்
செந்தழ லிட்டனர் சேர்ந்து ளோரெலாம். (௩௫)

கண்டதி சயித்திடக் கனிந்து வெந்தபின்
மண்டருந் தவத்தின ரதனை வாரளி
கொண்டதங் கண்களாற் குளிர நோக்கினர்
அண்டுரு மவுனமாயமர்ந்த தாகவே. (௩௬)

எரிந்துறு சிதைகளை விலக்கி யாரைநீ
தெரிந்துரை செய்யெனச் சென்ம மாறினோர்
அரிந்தசுன் னத்துநிற் றுலுக்க ரேமென்பாம்
விரிந்தகா திற்றுளை மேவி லின்றென்பாம. (௩௭)

இரண்டுமில் லாதபோ ததனைச் சொல்லுவோம்
தெருண்டதே சிகர்க்கெனச் சிந்தித் துற்றனர்
மருண்டுறு வதுதெரி மாசி றேசிகர்
இரண்டுளத் துறுநர்யார் செப்பு கென்றனர். (௩௮)

அதற்கும்பே சாதவ ரிருக்க வாரியர்
சிதைக்குளிட் டெரித்துநற் றெளிவ தின்றென
இதத்துடன் சிதையினின் றெழுப்பி மாசுதீர்
விதத்தமெய்ஞ் ஞானத்தை மேவச் செய்தனர். (௩௯

பட்டர்மெய்ஞ் ஞானத்தைப் பெற்றுப் பற்றறு
நிட்டையோ டானந்த நிலைய ராகித்தம்
இட்டநே ரருள்குரு விணைம லர்ச்சரண்
தொட்டுற வணங்கினர் துதிமி கச்செய்தார். (௪௰)

முன்னொரு நாமர்பா வனை மூர்த்தியை
இன்னமு துணச்செய்தார் ஞான தேவென்போர்
அன்னிறக் கவரியே தஞ்சொ லச்செய்தார்
பன்னரு மதிசயம் பலசெய் வாருளர் (௪௧)

ஹரிதன தாசரி லான போதிலும்
எரிபுகு வித்தெனை யின்ன செய்தவிப்
பெரியவர் போலெவர் பிறருண் டென்றவர்
விரிபுகழ் பற்பல விளம்பி நின்றனர். (௪௨)

நாகநாத சித்தர்தா நல்க நல்விடை
ஏகெனத் தருதல் பெற்றவ ரிணைச்சரண்
வாகுறத் தொழுது பண்டரிக் கண்வந்தனர்
மேகமா நிறத்து விட்டலனைக் கண்டனர். (௪௩)

கண்டு கண்ணொடு மனங்குளிர்ந்து கண்கணீர்
மண்டுறத் தொழுதனர் தழுவி வாழ்த்தினர்
விண்டுதன் குணவ னுபவத்தின் மேவினர்
தொண்டரோ டிணங்கினர் கவிகள் சொல்லியே. (௪௪)

பக்ரம்பட்டர் திருவடிகளே சரணம்

இச்சரித்திரம் ௩௪-க்கு செய்யுள் ௩௯௬௱௭௨

முற்றிற்று.

# கணேசநாதர்சரித்திரம்

சீரணிபாலே காட்டெனு நாட்டைச் சேர்ந்தோர் சார்
சாரசமென்று முச்சனி யென்றுஞ் சமைவாக
ஊர் களிரண்டுண்டாயவை சேர்வோ ரொருவாத
பேரறி வோர் வைராக்கிய சீலம் பிறழா தோர். (௧)

ஞானகணேச நாதரெனும் பேர் நலனோர்கெள
பீனமதொன்றே யன்றியொர் தூசும் பேணு தோர்
தீனதயாளனை விடோபா சீர் சேர்வ
தான நலஞ்சேர் கீர்த்தன நாளுமறை கிற்போர். (௨)

ஆரணியஞ் சென்றே பகலெல்லாமமர் கிற்போர்
போரணி யூருட் கங்குலடைந்த பின் வந்து
சீரணி மாறனு மநவின்று திரிவுற்றுக்
கோரணி யின்றி நேருறு பிச்சை கொடுவென்பார். (௩)

புகழி கழுன்றுதவருறு நாளிற் புவியாளும்
இகழ்வினனென்னுந்தக வினனுன சிவராஜன்
ஜகமகனு தன்வளர்வுறு மோர் பண்டரி சார்வான்
அகமகிழ்வோடு வருமளவிவர் சீரறிவுற்ருன். (௪)

காண நயந்தான் வந்திவர் தம்பாற் கடிதுற்று
மாண வணங்கித்தானவரேவு மாடுற்றுப்
பேணரு ஞானம் வரகவி பேசும் பேச்செல்லாம்
ஏணவர் தம்பாலினிது தெரிந்தங்கின் பானுன். (௫)

பலரும் விரும்பும் படி புதிதான பரியங்கம்
நலமுற முந்தியிவர் துயில் செய்தனன் றென்று
குலவவர் முன்றன்னிரு கரமும் மன்பொடு கூப்பிச்
சலனமிலா தீரொருதின மெண்ணிற் சயனித்து. (௬)

அடியனே யாளவருள் செயவேண்டும் மென வேண்ட
முடிவுறு சீலரவனுபசார முகமன்கண்
டொடிவற வுள்ளமிகவு மிரங்கியுவனுய்த்த
வடிவுறு பல்லக்கதனிடை யேறி மனே வந்தார். (௭)

வந்த பினந்தராத்திரி மலரால் வனேவித்துக்
கந்த மிகுந்த பஞ்சணே சேரங்கந்தன்பால்
நுந்த மிலென்ன நன்குதுயின்று நுகர் கிற்பீர்
எந்த முளத்துக்கினிதுற வென்றங்கிறை சொன்ருன். (௮)

வினவுகணேசரிது விழைவுற்ருே மோவென்று
மனது சலித்தம் மன்னிரவுக்கு மாறின்றி
முனருறுகிற் கும்பரல்கள் பொறுக்க முடிவேந்தன்
இனவெதனுக் கென்றதனே வினவவிவர் சொன்னுர். (௯)

ஹரிபெயரொண்ணற் கெனவுடனே யவ்வரசன்ருன்
திரிகள் கொளுத்தித் திகழ்வுறு தீபஞ் செறியச்செய்
துரிய படுக்கைக்கணுற விடுத்துப்புற முற்றுத்
தெரிதரவின்றித் திரை திசை தோறுஞ் செறிவித்தான். (௰)

வலையுள கப்பட்டுறு மிருகம் போன்மன நொந்திந்
நிலேதப லெப்போதென நினைவுற்று நிறைகிற்கத் .
தொலேவில் பரற்கள மளிபரப் பித்துயில் வுற்ருர்
மலேவறு கொற்றத்தரசன் விடிந்த வுடன் வந்தான். (௰௧)

வந்து கணேச நாதரை வந்தித்தனே முற்றும்
சிந்து பரற்கள் முழுவது நோக்கித் திகழ்வோரை
இந்த விதத்திற்றுயில் வகை யேதுக்கென நாதர்
அந்த விதத்திற்றுயில் வதுவே நன்றக மாருு. (௰௨)

மெத்தெனிடத் தினித்திரை மேவின் மெய் சோரும்
அத்தனே நத்தும் புத்தியுருதிங்கரசே நின்
சித்தம் விரும்பற் குற்ற சுகத்தின் செயலுக்காய்
ஒத்ததுயர்க் கட்டத்துறல் வேண்டு முடனென்ருர். (௰௩)

ஆயதுகேட்டுப் புரவலன் மிக்கவனு தாபம்
மேயவனுகிச் சுகம்விழை யாளுய் வினைவென்ற
தாயனைவேண்டித் தொழுதருள் பெற்றுத் துளவத்தார்
மாயவனுமஞ் சொல்லொழிவின்றி மகிழ்வுற்றுன். (௰௪)

பின்புகணேச ரவ்வயினின்றும் பெயர்வுற்று
முன்புறைதானத் தெய்திமுகுந்தன் றிருநாமம்
அன்புடனேதித் தம்பதமேவு மவர்சென்னி
இன்புறவங்கை வைத்தவுடன்மற் றவரெல்லாம் (௰௫)

உலகவியற்கை பலவுநசித்துள் ளுயர்ஞானம்
இலகநிலைப்புற் றரியடியாரா யெழிலுற்றுர்
நிலவுறவிவ்வா றொருவருஷந்தா னிகழ்கிற்க
மலமறு முந்நூற் றறுபதுபேடர் வாய்ப்புற்றுர். (௰௬)

வாய்த்தவர் கௌபீ னத்தொடுவைராக் கியசீல
ராய்த்திக ழான்ம ஞானமுடைத்தா யரிநாமம்
தோய்த்தன நாவா ராயினரவ்வூர் தொகுகிற்போர்
தூய்த்தவர் செய்யுஞ் செய்கையைநோக்கிச் சொலலுற்றுர். (௰௭)

இவர்சர ணுற்றே ரிவனொன லாறு வென்போரும்
இவருறுவோனை மயலுறவிப்பா னென்போரும்
இவர்திகழ்பண்டரி யிலுறைவா னேயென்போரும்
இவரதுசேவை பவமகல்விக்கு மென்போரும். (௰௮)

ஆயினயாரு மிவ்வகைபேசி யவர்தம்பால்
மேயினர்கண்டார் சூதமரச்சார் மிளிர்கிற்கப்
பேயினசாவி மூலவழியுண்டான் பெயரோதும்
வாயினரோசீ ரும்வயின்வந்த வனையெல்லாம். (௰௯)

சேடனெக்கொண் டிதவுபதேசஞ் செய்தும்பின்
ஓடிவரச்செய் வதினவருக் குள்ள வில்வாழ்வு
கேடுறுகின்ற தாகலின்யாஞ்சொல் கிறவாறு
நீடுறநீர்செய் தருளுதல்வேண்டு நிலையாக (௨௰)

அதுவெலையென்னி லான்மவி வேகத் தவராகக்
கதுவுநுமக்குச் சகலபிரா ணிகளுமொன்றுல்
இதுமுதனீர்கி ருபைகொடுதாருக் கட்கெல்லாம்
முதுவுபதேசஞ் செயுமெனநாதர் மொழிகின்றுர். (௨௧)

அப்படியேசெய் கிறெனென வேதன் னருகாகக்
கப்புடனின்ற சூதமரத்தைக் கண்ணுற்றே
ஒப்பறலான தாரகமறையை யுரைசெய்தார்
செப்பியதைக்கண் டோரவர்முன்பீ துரைசெய்வார். (௨௨)

மானிடருக்கு நீருபதேசம் வாய்ப்பச்செய்
தானபினம்மா னிடர்குணம்வேறு குதல்கண்டோம்
ஈனமிலிம்மா மரமுபதேச மெய்துற்றுத்
தானுளநீர்வே றுனதனுக்கென் றகவென்றுர். (௨௩)

அன்றுகிடைத்த ரொட்டியுடன்கீ ரையுமைக்கு
நன்றுபடைத்துக் கொண்டமரத்துக் கெதிர்நண்ணி
இன்றுநமக்கா கியபிரசாத மிவைநீயுண்
கென்றுகொடுத்தார் மற்றவர்கண்முன் னேநாதர். (உச)

தருதலுமந்த மரம்விடராகத் தாங்கண்டுட்
செருகினரம்மா மரம்விடர்மூடித் திகழ்கிற்க
அருகுளயாருங் கண்டுவியந்தா ராய்நாதர்
திருவடிகளில்வீழ்ந் தினிதுதுதித்துச் சேவித்தார். (உரு)

மறுவில்கணேச நாதனைநோக்கி மகிதன்னில்
உறுவருமைப்போ லாருளர்யாஞ்செய் துளதீமை
சிறிதுமுளத்தெண் ணுறுதலிலாமை செயுமென்று
பெறுவிடைபெற்றுப் போயினர்பாதம் பெரிதேத்தி (உசா)

ஆரணியத்தில் மாலரி கீர்த்தனஞ் செய்து
போரவிருக்கும் போதொருநாள்மெய்ப் புகழ்கேட்கச்
சாரவடுத்தார் நால்வருணத்துத் தமரெல்லாம்
நேரவரைக்கண் டோருரைசொல்வார் நிகரில்லார் (உஎ)

கூடினயாரு மால்பெயர்கூறிக் கரதாளம்
போடுமினென்ன வந்தவரெல்லா ரும்போட
நீ றுமறையோர் போடலராகி நீயென்
ஈற்றவெம்மைப் போடெனயாம்போ டேமென்றார். (உஅ)

என்றலுநாதர் நீயிர்சுமா விருங்கோளும்
மன்றயவாலிங் குறுசிலைபோடு மெனமாடே
ஒன்றியகற்க ளொன்றுட னென்றுற் றுறுதாளம்
பின்றுதலின்றிப் போடவியந்தே பேசுற்றார். (உகூ)

உயிரறுகற்கள் போடுதரூள முணர்கிற்கில்
செயிரறு நாதர் மகிமையி னுமிச் செயலினனோர்
மயர்வறுசீர்சான் மகிமையையுணரவல் லோர்யார்
அயர்வறவென்று மறையவரனுதா பங்கொண்டே. (௩௰)

நாமபராதி யாயினமிந்த நாதற்கென்
றேமுறலின்றி யிருகைபுடைத்தே யீறில்லான்
தோமறுநாமஞ் சொல்லினர்கண்டு துதிநாதர்
தாமிகவானந் தங்கொடுமால் பஜனைசெய்தார். (௩௧)

பின்புயர்மாலுக் காரதிசெய்து பிரசாதம்
அன்பினர்யாரும் பெறும்வகைநல்க வவர்போனார்
துன்பறுநாதர் முன்புவிடோபா வுந்தோன்றி
இன்புடனீ பஜனைசெய்கிநாளு மினிதென்றான். (௩௨)

பண்டரிநாதன் கூறியவாறே பழுதின்றித்
தொண்டருமால் பஜனைசெய்துநாளுந் துதிசெய்தே
அண்டுமவர்க்கின் னருளினராகி யருள்செய்து
கொண்டுபெயின்று மகிழ்வொடிருந்தார் குறையாமல். (௩௩)

கணேசநாதர் திருவடிகளேசரணம்.

ஆகச்சரித்திரம் ௩௯-க்குச்செய்யுள் ௩௲௬௱௪.

முற்றிற்று.

# கேசவசுவாமிசரித்திரம்

பவமுறு தவிராக நீடியபரம பக்தசிரோமணி
புவனமீ துறுதேசம் யாவையுமேபுகுந் துறுகின்றகே
சவசுவாமி யொர்கால் விஜாபூர் தனிற்புகுந் தரிகீர்த்தனம்
நவமதா யுறவைந்து வெந்தழலுறப் பணின்று நவின்றனர். (க)

சாதுசற்சனர்வை திகந்திகழ் பண்டிதர்த் தனியந்தணர்
ஆதிநால்வருணத் தருமவண்வந்து கேட்குந ராகவப்
போதுகே சவசாமி தாமருள்போத மேவிய சீடர்சிர்
வேதியர்க்கு ளுயர்ந்துளோரொர் விருத்தனைத் தனிகூவியே. (உ)

இன்றெகா தசிவிரத மாதலின் யார்க்குநற் பிரசாதம்யாம்
நன்றளித் திடல்வேண்டு நீகடைநண்ணுசர்க் கரைசுக்கொடு
சென்றுகொண்டுறு கென்னவேயுறு சீடராவண மேவினர்
அன்றுசெட்டியு றங்கினனதுகண்டெ டூப்பின ரல்லிலே. (ங)

எழுவதாயின செட்டியைக்கழி கீசு சுக்கொடு சர்க்கரை
பழுதிலாதென வுங்கடைக் குள்விளக் கிலாதிருள்பற்றுற
வழுவி நாவிகொள் சுக்கெனக்கொடுவந்து வேண்டுவ நல்கினன்
தழுவுசர்க்கரை யோடுசீடரை நோக்கி மற்றிது சாற்றுவான். (ச)

இன்றுசந்தை யிணங்குமவ் வயினேகி யுற்றன னென்மகன்
துன்று கின்றில னுதலா லரிகீர்த்தனம் புகல் சூழல்வாய்
ஒன்று மின்றிலெ னியிர் யானினி யுதவு சுக்குகளுங் கொடு
சென்று வந்தவருக்கெலா முண நல்கெனச் சிலதந்தனன். (ரு)

நீர்கொள் சுக்கவ னேகருவோர்பெற நல்குதற்கு நிரம்புறு
தார நான்றரு சுக்கையுங் கொடுசெல்லு மென்றவ னல்கலும்
தேர்கிலார்தரு நாவியைப்பெற சுக்கெனக் கொடு சேர்ந்தனர்
மாரனூர்மகிழ் தாதையாகிய வாசுதேவ னறிந்தனன். (சு)

இன்று நேர்பிர சாதமுண்பவர் யாவரும் மரணங் கொள்வார்
இன்று சாவுறி லரிபெரும்புகழ்வினவலாலிவர் செத்தனர்
என்று நம்வயி னெய்துறும் பழியன்றி யும்மிது மூலமாய்
ஒன்று மின்றிலர் கீர்த்தனங் கொலைசெய்வ தென்றுல கத்துளோர். (எ)

கீர்த்தனம் புகல்சாது சற்சனர் தம்மையும் புகழ்கிற்கிலார்
ஓர்த்த நந்திரு நாமமானது தாரகம் மெனலும் பொயாம்
சீர்த்த தன்றிது வென்று நாவி செறிந்த சத்தினையுண்டனன்
நேர்த்த கேசவ சாமிராத்திரி நாலு ஜாம நிரம்பவே. (அ)

வீணைதாள மிர்தங்கநாதம் விளங்குறப் புகல் கீர்த்தனம்
கோணையின்றி நடத்தியா ரதிகொண்டல் வண்ணனு வப்புற
ஆணையின்படி செய்து பாகவதர்க் கருட்பிரசாதமும்
நாணையம்பெற நல்கின ரயர்நல் கருத்தி நடந்தனர் (கூ)

புலரி சாரவெழுந்து செட்டியு நாவியைப் பொதிவுற்றனை
குலவு முன்னவிழ் வுற்றிருந் ததுகண்டு நெஞ்சு குலுங்கியே
அலகில் மாதவர் சுக்கெனக்கொள நல்கினே னிதையல்லவோ
நலவ னொத்தனைபேர் மடிந்தனரோ வருந்தி நலிந்தரோ. (௰)

அன்ன வாறவர் சாவுறும் படிசெய்து பாதகனாயினேன்
என்னை யிவ்வித மென்றறிந்தவர் யாவருங் கொலை சூழுவார்
இன்னலாகி யிறந்தபின்னரும் ரௌரவாதியை யெய்துமா
றுன்னுமோசம் விளைந்ததே மிகநன்றி தென்று துளங்கினன். (௰௧)

இகபரத்திலை யெய்தினே னெனவனு தபித்தினி யென்றுயிர்
உகவி யற்றுதல் செய்யவேண்டிய தென்றுனிக் கடைவிட்டிடன்
அகநிரப்புள வீதிவாய் வரலான போதில வூரிலே
தகவ ரற்றுறு குரவிலாமைதனைத் தெரிந்தக முன்னுவான். (௰௨)

அந்த ராத்திரியிற் கதைக்குறலான பேர்தமி லொருவனை
எந்த நற்பிரசாத நும்வயி னீந்துளாரென லும்மவர்
முந்து சுக்கொடு சர்க்கரைப் பிரசாத நல்கினர் முற்றவும்
வந்தவர்க் கவையுண் டுளோமென வணிகனுண் மகிழ் வெய்தியே. (௰௩)

சுடு மயான மடைந்து செத்தொருவரும் வராமை துணிந்துகண்
டடும நாவியினு லிறப்பதி லாமைசெய் தவனுழிகை
தொடும விட்டலனே யெனத்தெளிவுற்று நெஞ்சு துடிப்பிலான்
நெடும் வியப்பொடு மீண்டுதன் கடைநேர்ந்து மாலடி போற்றினன். (௰௪)

வைகறைக்க ணெழுந்து கேசவ சாமி வாரியின் மூழ்கியிங்
குய்கருத்தொடு தாந்திலந்தின மொழிவிலாதுயர் பூசனை
செய்கனத்தியல் விட்டலன்றிரு மூர்த்தியைத் தெரிசித்தலும்
மெய்கறுத்து விளங்க நோக்கியிதென்னை யென்று மெலிந்தனன். (௰௫)

திண்ணன் யாவையினுஞ் செறிந்து விளங்குகின்ற தேஜோமயக்
கண்ணனின்று கறுத்துறற்கென காரணம் மென வேகவன்
றெண்ணன் மேவிய போது செட்டி யெதிர்ந்து கேசவ சாமிதன்
அண்ணன் சேவடி தாழ்ந்திராத்திரி யான செய்கையை யோதுவான். (௰௬)

தாமியற்றுறுகின்ற மெய்க்கதை கேட்க மேவுவர் தாமுனைற்
காமினுக்கலில்போது நும்முடை யன்பரொன் கடையண்மியே
நீமிகக்கடி திக சுக்கென நாவிதந்து நிகழ்த்தொனுத்
தோமி யற்றினெனன் குணர்ந்தி லெனென்று துன்பொடு சொல்லினன். (௰௭)

நாவிசுக்கெனவே செய்தான ளினைக்கு நாயகனன்கு செய்
யாவிடிற் கடிதாவி போவர்களுண்டயாவரு மாதலால்
பூவிலப்படியோ தெரிந்திலனுயி யற்றிய போக்கறப்
பாவி யெற்க பராத மேது பணித்தி ரென்றடி பற்றினன். (௰௮)

கேட்ட கேசவசாமி கண்களினீர் சுரந்து கிளர்ந்திட
வாட்ட முற்றழுதந்த மூர்த்தியை நோக்கி மாதவவாமனா
நாட்டு தீனதயாள பக்தர்கள் வற்சலாகருணா நிதி
நீட்டு பண்டரி விட்டலாவெனை நென்னலாண்டருணின் மலா. (௰௯)

கருது நின்பிரசாத முண்டவர் தம்மையுங் கழியாத நின்
விருதையுந்தி கழ்வித்தளித்தனை விட நுகர்ந்து கறுத்தனை
ஒருவனின் பெயரோது பிள்ளையு முமைதனைப் புணரொருவனும்
தருவிடந்தனை யுண்டிறந்திலர் தங்கடந்நிற மாறிலர் (௨௰)

நென்னனீ யுணுநாவி யெவ்வள வன்ன தானிற மாறுதல்
பன்னுநல் லமுதுக்கு நோயது பற்றலும் பருதிக்கிருள்
துன்னலும் பனி மாமதிக் குடல்வேர்த்தலுந் துணையாகுநின்
பொன்னடிக்குறு தாசனுக்கணி பூணநீ விளையாடினாய். (௨௧)

என்க ணின்னருள் செய்துநின் னிறமாறன் மாறுத லேய்கெனப்
புன்க ணூற்றிவர் வேண்டுகின்றது புந்திகொண்டு புராதனன்
தன்கணான கறுப்பகன்றொளிர் தங்கு முன்னுரு வாயினான்
முன்க ணின்றது நோக்கினோர்கள் வியந்து போற்றினர் மொழிகுவார். (௨௨)

நிகழு மிக்கலி யுகமதிற் கடவுளை வசிப்பது நேயமே
புகலின் மற்றிலை யெனநெடுங்கை புடைத் தொலித்தனர் பொங்கினார்
தகவதைக் கணினோர்க்கு செட்டியும னுதபித்தனர் சார்புறு
திகமயற் களகன்றுகேசவ சாமிதன் கணிருந்தனன். (௨௩)

வே.று.

ஹரிநாமஞ் சிரவணிப்பதே
பெரிதானந்த மதெனப்பிரான்
விரிசிரின்புற விளைப்பதற்
குரியாருந் திடமுறுத்தினர். (௨௪)

கேசவசுவாமி திருவடிகளே சரணம்.

ஆகச்சரித்திரம் ௬௰-க்கு செய்யுள் ௩௲௯௱எ௫

முற்றிற்று.

# கோமாயியம்மாள்சரித்திரம்



சீர்ப்பதில் லாவுடை யுடுத்தல் செய்துசேர்
ஊர்ப்பவனந் தொறுஞ்சிரந் துண்டுட்பசி
தீர்ப்புறுந்தார்ப் பலநீனையே யொரு
பார்ப்பன விதவை கோமாயி பாயியே. (௧)

என்பதங்கி யாவரும் புகலவேற்பவர்
இன்புசெய் பண்டரி யாத்திரைக் கென
வன்பிரவாகமாய்க்கரை வழிந்து போம்
துன்பறு சந்திரபாகை துன்னினார். (௨)

நீடிய பெருக்கினைக் கண்டு நீர்தொறு
தோடுமிந்நதி கடந்துறுவ தெங்ஙனின்
றூடிமாதஞ் சுத்ததசமியாயதே
நாடு மேகாதசி நாளையல்லவோ. (௫)

எனவுளத் தெண்ணினரி னைந்து பாண்டுரங்
கனையடி வணங்கிடக் கருது சிந்தையேன்
றனை யெவரக்கரை சேர்க்கத் தக்கவர்
மனமிரங் குதலுட னெனவு மாழ்கினார். (௬)

எதிருறு மவர்களை யோடத் தேற்றுவோன்
கதிமுகங்கொண்டு நீயெனை யுமக்கரை
பொதிவுறச் சேர்க்கெனப் புகன்று காசினை
துதிகொளன் றோடமீ தேறத் துன்னினார். (௭)

கண்டவ னீரிடைக் கவிழ்த்துச் சென்றனன்
மண்டு நீரிடைத்து கினைந்து மாழ்கினர்
அண்டிய கரையிவர்ந் தாற்ற லாயினர்
விண்டுறு பெருங்குரல் கொண்டு விம்மவே. (௮)

ஓடமுய்ப் பவரவ ருறுக ணோக்கினார்
நாடியோய் கிழவி நீகாசு நல்கினல்
ஈடுறுநதி யினக்கரையி னேறலாம்
வாடிலென்பய னெனவாய்ப் பச் சொல்லினார். (௯)

காசினை கொஞ்சமாவுண்டு கைக்கொண்டு
பேசெனை யக்கரை சேர்க்கிற் பிறென
மாசறுது திபலவருக்க மற்றவர்
சீசியென்றி கழ்ந்தனர் சிறிதிரங்கிலர். (௧௦)

காசுதந்த வரையக் கரையிற் சேர்த்தனர்
மாசில்கோமாயி தாந்தனி வருந்தினர்
ஆசிலிக் கரைநின்று மக்கரைக் குற
எசிலே தொன்றுமில்லா திரங்கினார். (௧௧)

தேவர்தந்தேவ பாண்டுரங்க தேசுடன்
ஈவதி கின்ற வித்தலத்தி னேருனர்
யாவருங் கடின சித்தத்த ராயினர்
ஆவயின் வருவதெப்படிக்கியா னென்றார். (௧௨)

உன்னடி சேவிக்க வுற்றுளேன் றனக்
கென்னிடையூறு வந்தெய்தல் கூடுமோ
பொன்னியல் மார்பினே யெனப்புலம் புறத்
தன்னிகர் தானலா தான்றெரிந் தனன். (௧௩)

தோணி யுய்ப்பவ னெனத்தோன்றி யம்மைநீ
பாணியைக் கடந்தப் பாரஞ் சேர்தியேல்
ஆணியாயுனக்கு நானமைவன் வாவெனக்
காணியே தொன்றுமில்லாதகைம்மையார். (௧௪)

என்னிடைக் கொஞ்சமா வுண்டு காசிலை
நின்னிடைத் தரக்கொடு நீந்தி யக்கரை
தன்னிடச் சேர்ப்பை யேற்றோடர்வ னின்னுடன்
பன்னிடு கென்னலும் பரமன் கூறுவான். (௰௩)

யானிவண திக்கரை யேறவெய்து வோர்
நீனர்களா யுறிற் சேர்ப்பெனக் கரை
நானெதும் வேண்டலே னதியின் பாலுறு
வேனடைவோரை யக்கரைக்க ணேற்றவே. (௰௪)

யென்றலு மம்மையாரொம் பிரானருள்
நன்றென வியந்துட னயந்து தோணியோய்
இன்றிராயாம மொன்றெய் திற்றுதல் யான்
மன்றவும் விருத்தை தூர்ப்பலை வருந்தினேன். (௰௫)

குளிர்பொறே றொருது கிலன்றிக் கூறைவே
றெளிமையி னில்லை மற்றிது நனைந்திடில்
அளியள் யான்செய்வதே தென்னவம்மை நீ
நளிர்புனல் காலுறு நனுகென்றே னென்றான். (௰௬)

தோளிடை யேற்றினன் றூக்கிச் சென்றனன்
நீளிய புனலொரு நிமிடத்திற் கடந்
தோளிய கரைமருங் குய்த்து நின்றனன்
தாளினு நீருறறனக் கின்றுகவே. (௰௭)

நின்றபோரு ளுடையவனை நோக்கிநீ
ஒன்ற நின்காலிடைப் புனலுறு திவண்
துன்ற லெவ்விதத் தெனவம்மையார் சொல
மன்றலந் துளவமால் வகுக்கின் றனனோ. (௰௮)

இவ்வயிற் றோணியுய்ப் பவரலேன் பவப்
பவ்வ நீந்தச் செயும்படகு காரன்யான்
எவ்வயி னிருந்தியா ரெய்தினுங்கரை
செவ்வயிற் சேர்ப்பெனீர் சிறிதுறுதென்றான். (௰௯)

கேட்ட கோமாயி நீயைய கிட்டியென்
மாட்டு பகாரமோ மழையிற் செய்தனை
ஈட்டு மென்னிடத் துளமாவை யேற்கென
நீட்டலும் வாங்குறு னிமலன் கூறுவான். (௨௰)

எவர்வயினும் பொருளேற்கி லேனதால்
துவதசித் தினத்திலிம் மாவைச் சுட்டடை
கவர்மனப் பிராமணர் கையினல்கென
உவமையில் லானுரைத்துடன் மறைந்தனன். (௨௧)

மறைந்தபினம் மையார் மணிவண்ணன் றனைச்
சிறந்தபொற் கோயிலிற் சென்று சேவித்துப்
புறந்துயின் றெழுந்துறு புகரிதன்னிற் போய்
அறந்திகழ் சந்திர பாகை யாறடே. (௨௨)

வந்துப வாசமாய் மாயவன்றனைப்
புந்தியுளன் பொடுதொழுது போற்றினார்
அந்த வேகாதசி யிரவிலன்பு ளோர்
முந்தரி கீர்த்தன மொழியக் கேட்டனர். (௨௩)

காலையிற சநதர பாகையையககலந
தேல நீராடினர் கரையி னெய்தினர்
சாலுமன்று றுதுவாத சிமற்றுதலால்
நாலு மாமறை யவர்க்கு தவ நாடினார் (௨௪)

உப்பொடுபெ ருப்புமற்றென்று மில்லைநங்
கைப்படி யுறுவெறு மாவைக்கைக்கொள
எப்படி நல்குவ தென்றி யோசித்துத்
தப்பறு மறையவர் தம்மை நோக்கியே. (௨௫)

ஐயமீரொன் வயினருள் செய்தி யான்றரும்
நொய்ய விம்மாவதை நும்மில் யாரொனும்
கையுறப் பெறுமி னென்றுரைக்கக் கண்டவர்
தைய லாரரு குற்றயலிற் சார்ந்தனர். (௨௬)

ஒருவருங்கைக் கொளா துறுதல் கண்டுசீர்
மருவு பாண்டுரங்க பக்தனை வாழ்விப்பவ
அருமறையவர்க் குணவளிப் பதின்றியான்
கருதுமித்தின முணவெங்ஙன் காண்குவேன். (௨௭)

எனவருந்தின ருறவிவர்த நிச்சய
மனநிலைகண்டு பாண்டுரங்க மாலோர் பார்ப்
பனவடிவங்கொடு பார்க்க முன்வந்து
தனதருளவர் பெறச்சாற்று கின்றனன். (௨௮)

அம்மை யான்றூர்ப் பலன் கிழவ னனைதால்
செம்மை சேர்து வாதசித்தின மின்றுண் பதற்
கும்மருங் கெய்தினே னொருகை மாவெனும்
தம்மி னென்றவர் தரச்சாற்றி னனரோ. (௨௯)

கேட்ட கோமாயியார் மகிழ் கிளர்ந்துளே
வாட்ட மின்றாய் வெறுமாவை நல்குமுன்
காட்டலர் துளவினன் கடும் பசிக்குண
ஒட்டடை சுட்டு நீருதவு கென்றனன் (௩௰)

அடைசுடற் கிடமிலை யசக்த னனெனும்
நடைதெரிந்துடன் விறகுகணன் றாய்ந்து கொண்
டிடையழல் மூட்டின ரினிது சுட்டடை
உடையவன் கைதர வுண்பதாயினன் (௩௧)

அருந்துமுன் மலரின்மே னங்கை யவ்வயிற்
பொருந்தினள் மூப்புடன் புனித மங்கலம்
திருந்து மோரந்தணி யாகிச் செவ்வையாய்
விருந்து நீருண்பதோ வெனைவிடுத் தென்றாள். (௩௨)

அருகொருசுமங்கிலி யண்மி னுளம்மே
மருவுநுந் தானையி லிருக்கு மாவையும்
தருகசுட் டெனப்பிரான் சாற்ற வம்மையார்
பெருகின துகிலின்மா விருக்கப் பேணினர். (௩௩)

கண்டடை சுட்டுடன் கையி லெய்தலும்
ஒண்டொடிச் சுமங்கிலி யும்வந் துற்றதும்
பெண்டவ மெனப்பிரான் பெரிது பேசியே
உண்டனன் முமறை யுறையு மாதுடன். (௩௪)

பின்பிரு வருங்கைகால் பெரிது சுத்திசெய்
தன்புடன் மறைந்தன ராக வம்மையார்
இன்பொடு தாமுமங் கருந்தி யேகினர்
முன்புறு முரகரி பெயர்மொ ழிந்தரோ. (௩௫)

கோமாயியம்மாள் திருவடிகளே சரணம்.

ஆகச்சரித்திரம் ௪௩-க்குச் செய்யுள் ௩௩௭௯.

முற்றிற்று.



# லதிப்ஷா பக்தர் சரித்திரம்

வேறு

கீதை பாகவத முதற்புராண மிக்க கேள்வியோர்
தீதிலாத பரமபக்த வைணவச் சிகாமணி
ஓதிராம பஜனையே யிராப்பகலு ஞற்றுவோர்
கோதிதென்ற விந்தரான குலமதத்தை விட்டனர். (௧)

ஹரிதனக்கு நித்தநேம மாய்மிகுந்த பூசனை
பெரிதியற்றுவார் லதிபெனச் சொல்கின்ற பெயருளார்
இரிதலாகி யதையறிந்த விந்தரான தீமையோர்
துரிதரா யடைந்துதங்க ளரசன் மாடுசொல்லுவார். (௨)

நங்குலத் தொருத்தன் வேறு நாமமோதி நன்றதென்
றங்குளுற்று பூசைசெய்வ தாயினு னவன்றனைத்
தங்குநங் குலத்துமேவு மாறுநீ சமைக்கநின்
பொங்குமாணையா லெனக்கருத்திலாத புன்மையோன் (௩)

மதவிரோதியான மற்றவன்றன் மாமனைப்புகுந்
தீதமதான கைத்தெலா மியற்று மின்கள் கொள்ளையென்
றுதவுமேவ லாளருக் குரைப்ப வன்னர்யாவரும்
கதமொடெய்தி யவரகத்திருப்பை நின்றுகண்டனர். (௪)

காணுமுன் னரோபுகுந்த கடுமையா வையுங்குலேந்
தெணுசாந்த ராயிரங்கி யேவின்வந்த தங்களைப்
பூணு தாங்களே யிகழ்ந்து பொருமிராஜ சேவைதான்
மாணுகின்ற தன்றுகெட்ட தென்றுதாம் வருந்தினூர். (௫)

இனிநமக்கொணுத சேவையென்று பாகவதமுதற்
றனிசெய் கீதை சிரவணித்து மிவர்களென்று தங்கினூர்
துனியிருந்த செய்கைகேட்டு வேந்தனெஞ்சு துண்ணென
முனிவுகொண்டு நேரொதிர்ந்து மோதுகிற்ப நாமென. (௬)

விரைவின்வந்த போதிலிங்கு வீட்டுளே லதீபுஷா
புரைதவிர்ந்து ளோர்கண்முன்பு பொருவில் பாகவதமதை
நிரைபிருந்தை யருகிருந்து நித்தமுந்தெ ரித்தல்போல்
உரைசொல்கின்ற தாயிருக்க வுற்றவேந் துணர்ந்தனன். (௭)

கண்டுநாமு மிறையிருந்து கேட்டுமென்று காவலன்
மண்டுவோர்க ளுடனிருந்து மாடுமுற்று நோக்கினுன்
அண்டுசார்பெ லாமெழுக்கி யதிகசுத்த மாய்மணம்
கொண்டுமேவு புஷ்பஜாதி யுங்குலுங்க லாகவே. (௮)

சுவரொலாந்த சாவதார முந்துலங்க வெழுதிய
நவமெலா முணர்ந்துகண்டு நரபதிக்கு வெகுளிதான்
இவர்தலாகி யும்மிராதை கண்ணனுக்கு வெற்றிலைப்
பவர்மடிப்ப ளிக்குமோ வமதையுமுன்பு பார்த்தனன் (௯)

பார்த்துடன்றுபகவனும மோதுகின்ற பண்பராம்
தீர்த்தர் தம்மை நோக்கியிங்கி தென்னை செப்பு கென்னலும்
சீர்த்த ராதை கண்ணனென்று செப்பராதை கையிலென்
ஆர்த்த தென்ன மகிழ்நனுக்களிக்கும் வெற்றிலை யென. (௰)

துணைவி நல்கு சுருள்கொளா திருப்பதேது சொல்கெனப்
பணைவிநோத மாயுரைக்க வவர் பரிந்து பார்த்திபா
இணைவி தோர்தி யென்றெழுந்திரண்டு கைகளுங்குவித்
துணைவியாள மிகு தயாளவன் பரன்ப வச்சுதா. (௰௧)

...தை நல்கு சுருள்கொளா மனீ யிருத்தனன்கதோ
ஏதை யின்றியம் புகிற் பெனென விரைந்து சுருளையம்
போதை வென்ற வாய்வயிற்கொள் போற்றெனக் கிரங்கி யென்
றேதை கொண்ட சங்கிடங் கொளு தன் முன்ன ரோதினுர். (௰௨)

தீனராயிருந்து வேண்டு செய்கை கண்டு சித்திரத்
தான கண்ணனுள மிரங்கி யருளின்வாய் திறத்தலும்
மோனராதை வாயிலீய முன்பிருந்த பைஞ்சுருள்
போனதக்கணத் தெதிர்ந்த புரவலன்றிகைக்கவே. (௰௩)

ஒவியப் பெணங்கையுற்ற சுருள்மடிப்ப துறவுருள்
மேவி நிற்க நாதன் வாயு மூடவேந்து மிகவியங்
தாவியுற்ற தெவ்விதத்திலோ வியத்திலென வ்கம்
தாவினற்ற வத்திரோ ரடிக்கண் வந்து தாழ்ந்தனன். (௰௪)

நீரியற்று பஜனையே நிலைத்ததும் முனிலை தனை
ஓர்வதற்று நமை வருத்த வந்த நானுஞற்று மென்
றீர்வில் குற்ற நீர் பொறுக்க வென்று செப்பி யேகினன்
ஆர்த வத்தரரிதனும மோதியங்க மர்ந்தனர். (௰௫)

லதீப்ஷா பக்தர் திருவடிகளே சரணம்

ஆகச்சரித்திரம் ௬௩-க்குச்செய்யுள் ௩௲௭௱௨௰௮

# முற்றிற்று.



# சந்தோபாபக்தர் சரித்திரம்



நாஞ்சண மென்று மூரிஞ மஞ்சந்தோபா வென்னத்
தாஞ்ச துரங்க சேனை தழைத்திடத்தன சம்பத்தில்
காஞ்சன பதியை நேராய் வாழ்பவர் காவலன்பால்
ஆஞ்சனர் தம்மின் மேலாயதி கரித்துறு வதானோர். (௧)

ஒரு தினந்து காராம் ஸ்வாமியுடைய மெய்க்கதையைக் கேட்டுக்
கருது மிக்குடும் பவாழ்வுங்காயமும் பொய்யேயென்று
மருவு நிச்சய நன்ஞானம் வாய்ந்து வைராக மென்னப்
பெருகு மண்டபத்திற் கோர்துணையினர் பிறவி வேண்டார். (௨)

இனியரை நிமிடமேனும் வீண்பொழுதி யற்றலாகா
தெனவுளத் தெண்ணித்தம் பாலிருக்கு மூழியரை நோக்கி
நனியு மதிடங்கள் செல்க வென விடை நல்கி வேண்டும்
தனமினி தளித்துப் பின்னந்தணர் தமை யழைத்த வர்க்கு. (௩)

தம்முடைத்தன சம்பத்து முழுவதுந் தத்தஞ் செய்து
கைம்முள நான்கதான கலிங்கந்தம் மிடையிற் கட்டிச்
செம்மு நாண் சிறிது மின்றிச் சீரரி கீர்த்தனம் வாய்
விம்முறப் பாடியாடி வெளி வந்தார் விமலராகி. (௪)

பீமரதி நதிக் கூலத்தோர் புறம் பிறங்குகின்ற
தாமலை யேறிக் கூட்டின் விடுபட்ட தான கிள்ளை
மாமரந் தேறிவைகல் போலவு மலர்கிலாத
தாமரை யகத்து வண்டு வெளியுற்ற தெனவுந்தங்கி. (௩)

பரவசராகிக் கண்ணன் பஜனை செய்திருக்கத் தேர்ந்து
திரவவரன்னை மிக்க துயரத்துட் செறிந்து சேயா
தரமுற வெனக்குண்டா மோர்தனையன் வைராக முற்றுப்
புரமகல் வாகி வெற்பிற் போயினனே யென்றேங்கி. (௪)

வடிவினிற் குணத்தின் மிக்க மருகியை யலங்கரித்துப்
படிமை யுற்றவன் பாற் செல்ல விடுத்து மேற்பார்த்து மோகம்
நெடிதுற்றி வருவனென்று நிச்சயித்த வண்புரிந்து
கடிமனை தனிவிருந்த கற்புடை மருகி யாரை. (௫)

சிவிகையிலேற்றி யுய்க்கச் சென்றனர் துணைவர் தம்பால்
அவிர் மலரடி வணங்கி யருகுற விழிகள் மூடித்
தவிர் கிலரரிதியானந் தனிலுறு வோர் விழித்துச்
செவி மிகுமனைவியாரை நோக்கினர் செப்புகின்றார். (௬)

என்னிடை யேன் வந்தாய் நீ யிங்கு முதினி மீண்டேகுதத்
துன்னு தியென்ன வன்னார் துணைவர் தம்மடி வணங்கி
பன்னருங் குணத்தீர் நும்மை யல்லது பற்றிலாதாள்
பொன்னடி பிரிதலாற்றே னெனவவர் புலம்பல் கேட்டு. (௭)

ஹரிபதம வாவலான் மற்றவா வெலாம் விடுத்து வந்தேன்
சுரிகுழனீ யுமவ்வாறு றுதியேற்றுன்னு கென்ன
அரிவையார் தாமுமவ் வாறமை குவனென்ன வன்பர்
தெரிவை நின்று கில்பூ ணெல்லாந் தீர்ந்திங்ஙனி ருத்தியென்றார். (௮)

இருவெனச் சொன்னதே போதும் மெனவின் புள்ளூறி
மருவிடைக் குடித்தநான்கு முளம்வைத்து மற்றையாவும்
கருதுவதின்றி வீசிக்கணவ ரோருகிருந்தார்
திருமகணுதனும கீர்த்தனஞ் செய்து கொண்டு. (௯)

சிலபொழு தகலச் சந்தோ பாவுக்குப் பசிசெறிந்து
நலமனை வியரை நோக்கி நாரிநீ யூர்க்குட் சென்று
பலருளருறவோர் நட்போர்தங்களைப் பார்த்து வெள்கா
திலகு மொவ்வோர கத்துமரை யடைக்கதிக மேற்கேல். (௧௦)

வாங்கினை வருதி யென்ன மயலறுகற் பின்மிக்கார்
நீங்கரு மரிதியான நினைவினர் தமைவணங்கி
ஓங்கி யவழகுந்தேசு முருவமு மாறிவேறாய்த்
தாங்கின தாலிமுண்டு தவிரவெல்லாந் தவிர்ந்து. (௧௧)

பூங்கமலத்தை நேரும் பொன்னடி பரலுறுத்த
ஆங்கு நின்றூர்க்குண் மேவியகந் தொறுமைய மேற்றுத்
தீங்கறு நாதனார் தந்தங்கை வாழின்முன் சென்று
பூங்கடல் வண்ணனமம் புகழ்ந்தனர் பிச்சை கேட்டார். (௧௨)

அன்னதோர் குரல்கேட்டில்லுள மர்ந்தவ டெரிந்துவாயின்
முன்னமர் வோர்பாலோடி வந்தழு துறமுயங்கி
நின்னது செல்வமெல்லா நீங்கினை பல்லக் கின்மேல்
துன்னுறும் பூவின் மென்காறுகள் படலாய தென்றே. (௰௫)

நினதகி ரூபலா வண்ணிய மெலாநெகிழ்ந்து பிச்சை
வினவுவோர்க்கீ யுங்கையும் பிச்சை வேண்டுவ தாயிற்றே
எனமனந் தளர்ந்து தெய்வச் செயலிப் படிக்கு முண்டோ
கனவு லகத்திலென்றுங் கதறினள் பதறி வீழ்ந்தாள். (௰௬)

அழுமவடன்னை நோக்கிக் கற்பினுக் கரசியாரும்
பழுதிலென்றலை வர்மிக்க பசியுட னிருப்பர் மின்னே
எழுக கால்விடுக வென்ன வேங்கின ளெழுந்துட் சென்று
முழு அடையி ரண்டு நெய்சர்க்கரை தகக்கொடு முன்வந்து. (௰௭)

கொடுத்தலு மடையடைக்கு மேற்கொளிற் கொழுநர் கோபம்
அடுப்பரிவ் வளவுவேண்டா மெனமறுத் தறையக் கேட்டு
விடுத்திடற் கரியவென்பா விரண்டடை வேண்டா மென்று
தடுப்பது தகுதியன்று கொள்கெனத் தந்துட் போனாள். (௰௮)

வலிந் தவடரு மிரண்டும் வாங்கிக்கொண்ட விடம்விட்டு
நலிந்திடர் செய்யுங்காட்டின டந்துவந் தாவிநாதர்
பொலிந்துறை யிடமுற்றன்னார் புசித்திட வேண்டலோடும்
மெலிந்தில ரரிதன்னாமம் விடாதுளைப் பவருங்கண்டு. (௰௯)

எற்றுவந் தவற்றிரண்டு முழுவடையா யிருக்கத்
தோற்றிவை முழுமையாகக் கொணர்ந்த தேன்சொல்லு கென்னச்
சாற்றினர் நடந்தவற்றை யவர்பரி தாபத்தோடு
மாற்றி நீதந்தோர் பக்கல் வழங்கினை வந்தா லுண்பேன். (௨௰)

அல்ல தண்ணே னென்றோத வருந்தகி யனையார் மீண்டு
மெல்லடி வருந்தத் தந்த மெல்லியல் மனைக் கண்வந்து
சொல்லினர் மறுத்த செய்கை யடைகளைச் சுருக்கிற் றந்தங்
கல்விடை மழையும் பெய்ய மீண்டன ரணுகும் போது. (௨௧)

வருவழி தன்னிலாறு மழையினிற் பெருகிமண்ட
மருவினர் கண்டிவ் வாற்றைக் கடந்துபோம் வகையே தென்றும்
புருட ருண்ணது மிக்கபசி பொருந்துவரோ யென்றும்
பருவர லுற்றுநைந்து பாண்டுரங்கனைச் சிந்தித்தார். (௨௨)

நாதனுக் குதவாப் பேதைநாரி யென்றுரு மெள்ளப்
பாதகமெது செய்தே னோபக் தரக்ஷக கோபாலா
மாதவ முகுந்த கேசவாவென மாழ்கி நிற்க
ஸ்ரீ தரன்றெரிந்து நீந்துவோ னுருக்கொண்டு சேர்ந்தான். (௨௩)

மாதனைநோக்கிச் சோன்வருந்து கின்றீ ரென்றோத
நாதரக் கரையி லுற்றார் நானவர்க் குணவு நல்கப்
போதரும் வழியிலா றுதடுப்ப தாற்புக்கி நொந்தேன்
ஈதுநற்ற ருணமென்னை யன்றங்கை யென்ன வெண்ணி. (௨௪)

அக்கரை சேர்ப்பையாகி லரிய நல்லு தவியாகும்
தக்க வுத்தமனே யென்னச் சவுரிநன் றென்று தோளில்
மிக்க கற்புடைய மாதையேற்றினன் விரைந்து சென்றப்
பக்கமுய்த்தழைத்துக் கொண்டு பதியுறை பாங்குஞ் சென்று. (உ௫)

கண்டனையா நீகாதற் கணவரை யென்று காட்டி
விண்டனன் மறைந்துபோனன் விட்டலன் போன பின்னர்
ஒண்டொடியார் தந்நாத ருறைமருங் குற்றார்கண்டு
தொண்டரிம் மழையிலாற்றைக் கடந்த தெவ்விதஞ் சொல்கென்றார். (உ௬)

பதிதமக் குற்றவாறு பத்தினியார் பகர்ந்தார்
மதிமுக மடந்தாய் பாண்டரங்கமாலுனக்கு வாய்த்தான்
எதிர்கில னெனக்கன்றன்வந் தெதிருறு மளவு முண்ணேன்
வதிகுவ னென்றிருந்தார் மற்றந்நாள் ராஞ்சணத்தில். (உ௭)

திகழுமோர் பரம பக்தனாகிய செட்டி காணக்
ககபதி நாதனான காகுத்தன் கனவிற் றோன்றிப்
புகழுடைச் சந்தோபாத் தான்பொருந் துறுபசியைத் தீர்க்க
நிகழறு சுவைச் சோறிட்டா னினக்குறுஞ் சுகிர்தமென்றான் (உ௮)

மறைந் தனனுகச் செட்டி விழித்தனன் மனத்துணர்ந்து
நிறைந்தவின் சுவைச்சோறட்டு நிகழ்த்து சந்தோபா மேவி
உறைந்துறு மருங்கிலெய்தி யுளபடி யுரைத்து நாதன்
அறைந்த வாறுண்க வென்னவ வரடி வணங்கிச்சொன்னன். (உ௯)

சொன்ன வன்றன்னை நோக்கிச் சொற்பனத்துன் முன்வந்தான்
என்னருகேன் வாராம லிருக்கின்றா னிருடிகேசன்
அன்னவன் சேவைநல்கு மளவு நானுண்ணே னென்றார்
மன்னர் பின்னவன் போனனூர் மற்றவர் திடத்தை நோக்கி (௩௰)

உடலன்ன மயமேயாகுங் கலியுகத் தென்ப தோரார்
கடவுளைக் காண்பான் வேண்டிக் கருது நிச்சயத்தைக் கண்டு
புடவிமாமகள் மணாளன் பொருந்தினன் சகுண ரூபத்
துடன்வரக்கண்டு சந்தோபா மகிழ்வொடு பணிந்தான். (௩௧)

வேறு.

எழுந்து தோத்திரஞ் செய்தலு மபய மீந்திடையர்
கொழுந்து போய்மறைந் தனனவன் குணங்களுட் கொண்டும்
அழுந்து மன்பொடு நாமகீர்த்தனவ முதுண்டு
செழுந்தண் ராஞ்சண மென்னு மூர்தினந் தொறுஞ்சென்று. (௩௨)

பிச்சை யேற்றுண்டு பிறங்கலில் வதிதர முழுதும்
கொச்சைத் துன்மதியான வோரந்தணன் குடும்பத்
திச்சை மிக்கவனந் தவூரிடைக் குடியிருப்போன்
செச்சையந் தனத்தேவி தன்னுடன் றினந்தோறும். (௩௩)

சண்டைசெய்பவ னயவளை திருவை தந்தால்
அண்டையேய் வனத்தடைந் துறுகின்ற சந்தோபா
கொண்டகோலத்தைக் கொள்குவேன் குடும்ப நீக்குறுவேன்
விண்டபோது நீயென் செய்வை யெனப்பயம் விளைப்பான். (௩௪)

கணவ ஞேடெதிர் பேசுறி லென்னேக்கை விடுவான்
அணவு ருதுகை விடிலென்ன செய்வதென் றடங்கிக்
குணநலாள்வர வொருதினம் பிச்சையைக் குறித்துத்
தணவின் மற்றவடன் முன்வந்தா ரரிதாசர். (௩௫)

கண்டு மற்றவ ளவரிரு கால்களிற் பணிந்து
கொண்டகேள்வ னென்னுடன் றினம் வீண்வம்பு கொடுத்துச்
சண்டைசெய்வது தவிர்கிலன் மறுமொழி சாற்றில்
அண்டு நம்மைப் போலாவ னென்றுரைக்கு நஞுஞல் (௩௬)

நானென் செய்வது சாமி நீர்நவில் கென நவின்றாள்
ஞானமிக்க நல்லவரது கேட்டுன் றனுதன்
மானமற்றுறு துறவியாகுவ னெனவகுத்தால்
ஆனவப்பொழுதே துறவெய்தென வறைதி. (௩௭)

பின்னே நான வன்றனக்கு மந்திரஞ் செவிப்பெய்து
நன்ன ராண்டிகைக் குரங்கென நின்வய நணுக
மின்னே நேரிடை செய்வனென் றுரைசெய்ய மின்னுள்
அன்னதாசர் தந்தாள் பணிந்தானந்த மடைந்தாள். (௩௮)

ஐயநல்கக் கொண்டா சிரமத்தினை யடைந்தார்
மெய்யர் போனபினந்த வேதியன் மனைமேவித்
தையலே ளின்னஞ் சமையல்செய்யத்தடை பசிதான்
வெய்ய தாயிற்று தவினுன்னே விடுவனென் றுரைத்தான். (௩௯)

சொன்ன கேள்வனே நோக்கிநீ துறவுறத் துணிந்தால்
இன்ன மேன்றடை விரைந்து செல்கென வியம்பினள்கேட்
டன்ன வந்தணன் கோபங்கொண் டிவளிவ்வா றறைந்த
பின்னர் யாமிவ ளுறில்வரு மோதகும் பெருமை. (௪0)

இனியிங் கெய்தொணு தென்றொரு செம்புகை யேந்தி
நனிசெறிந்தகாட் டுறுசந்தோ பாவயி னணுகித்
தனி யிருந்தநும் போற்றும் பத்தினைத் தவிர்ந்தேன்
புனித ரேயும்மை விடுகிலே னெனப்பல புகன்றான். (௪௧)

இதமதாமுப தேசஞ்செய் வீரெனக் கென்பான்
வதன நோக்கியான் றனியென வாய்ந்தது துணையிவ்
விதவி ராகங்கொள் வோருனேப் போலெங்கு மேவார்
உதவு நிற்குப தேசித்தற் கையமென் னென்றார். (௪௨)

என்று செம்பொடு கலேயுடுத்துச் செல்வதேற்ப
தன்றுசோர ராற்கவர் வுணுமாதலா லகற்றித்
துன்று கோவணத் தொடுசுரக் குடுக்கையைத் தூக்கிச்
சென்று நீநறும் புனல்கொண்டு வாவெனச் செப்ப (௪௩)

நன்றெனச் சுரைக் குடுக்கையைத் தூக்கிநீ நாடித்
துன்று கோவணத்தொடு சென்றான்பின் பரிதொண்டர்
சென்றவன் கலேயைப் பலதுணியுறச் சிதைத்தார்
அன்று செம்பையு மோர்குழிவிழ வெறிந்தனரோ. (௪௪

போன வந்தணன் பசியொடு புனல்கொடு போந்தான்
ஆனபோதிவர் மனைவியுந் தாமுமா யங்குப்
போன கம்மென நிம்பவெங் காய்களைப் புசித்துத்
தானமர்ந்துழிப் பசியெனைத் தபிக்கின்ற தென்றான். (சரு)

பசியென்றான் வயிற்றா மருந்துற்ற வேப்பங்காய்
புசியென்றே சிலவள்ளினர் தருதலும் புகல்வான்
கசிவுறுங் கசப்புற்ற காய்களைக் கருத்துடனே
மிசைவதெப்படி யெனச்சொல விளம்புவார் மேலோர். (சசா)

துறவு கொண்டுளோ நமக்கருஞ் சுவைக ளேதுக்குத்
தெறு பசிக்கெது வாயினுந் தின்பது செறிவே
அறிதி யென்னலு மந்தண னுலரடை யேனும்
பெறுவெ னென்றுற வேப்பங்காய் கிடைத்தது பெரிதே. (சஎ)

நன்ற தென்விதி மனைவிடுத் தென்பெற நடந்தேன்
என்றுதேம்பின னழுதன னென்செய்வ னெனறு
கன்றுவோன்றனைத் தொண்டர்கண் டென்னைநீ கருதி
நின்று தேம்புதி யெனவவ னுளபடி நிகழ்த்தும். (சஅ)

உம்மை நம்பிநான் வந்ததற் குண்ணவேப் பங்காய்
இம்மையிற்கிடைத் ததுபசித் தீயெரிக்கிறது
பைம்மை யாய்க்குளிர் நலிகின்ற தாடையும் பறந்த
தெம்மை யெவ்வினை யியற்றின னேவிவை யெய்த. (சகூ)

மனைவியைத்தினம் வருத்தின வினைவந்து வாய்த்த
இனையவிப் படியினி யுமதிடை யிருப்பேனேல்
முனைவன் பாசத்தான் மனைவியைத் துறந்ததே மோசம்
பினையுங் கோவணத் தோடெங்ஙன் வீடெய்தப் பெறுதல். (ரு0)

நான் மிகுத்தது பசியிலுங் குளிரிலு நன்றே
ஆண் மனைக்குநாண் விடுத்தினி தேகினு மனையாள்
மாணுறுத்திய துறவியா னவன்வரலாமோ
நீண்மனைக்கென நேர்ந்துளோர்க் குரைத்தெனை நீப்பாள். (ருக)

என்செய்வேனிதற் கென்றன னிரங்கின னழுதான்
தன்செய்கைகண்டு மாதவரான சந்தோபா
மின்செய் நுண்ணிடை மனைவிதன் னுடன்றினம் வீணே
கொன்செய் வம்பிழுத் துச்சண்டை செய்வது குறியோ. (ருஉ)

எதிருரைத்திட லென்னைப்போற் காட்டிற் கெய்துவனென்
றதிருறுத்துவ தும்மழகோவிவை யாகா
முதிர் நலத்தினை யேயின்று முதலுன்றன் மூர்க்கக்
கதியனைத்தையும் விடுத்திநீ மனைவியுட்களிப்ப. (ருங)

உன்னைக்கொண்டுபோ யுன்மனை யாளுறவாக
நன்னர்ச் சேர்த்துவே னென்னலு மந்தண னயந்து
துன்னச் செய்வதும் பெருமையே நாணின்று தொடங்கி
முன்னைச் செய்சண்டை வம்பிவை செய்கிலேன் முழுதும். (ருச)

இதுமெய்யென் றுறுதிப்பட விசைத்தனன்கேட்டு
முதுதவத்தினர் பொழுதுபோயின பின்பு முன்னிக்
கதுவுமற்றவன் மனைவரா வழைத்துப்போய்க் கடுகி
விதுமுகத்தினளேயெனவழைத்தனர் விரும்பி (௫௫)

உன்பதிக் குபதேசஞ்செய் தினிதுற வுன்றன்
முன்பழைத்து வந்தேனினி யுன்வச முயங்க
அன்பனைக் களிப்புட னழைத்தின்புற வமர்த்தி
வன்புரைத்திடேற் கோவணத்துட னவன் வருவான். (௫௬)

அவனுடுத்திட வஸ்திரந் தருகென வறைந்து
தவன் முகத்தினை நோக்கிந் யினியுளந் தளரோல்
எவமறப்புண ருன்மனை யாட்கித மியல
நவமுறுத்தினேன் மனைக்கடை யென்றனர் நல்லோர். (௫௭)

சாமி நும்முறை தவிர்கிலே னென்றடி தாழ்ந்து
மாமின் போல்பவள் மனையகம் புகுந்தனன் வரலுந்
தோமில் வஸ்திரந் தந்தனள் சுவையமு திட்டாள்
ஆமில் வாழ்ந்தனன் மனையொடு கலகமில்லாமல். (௫௮)

இவ்விதஞ் செய்துதம் மிடமேய சந்தோபா
வெவ்விதன் மதிமாத மேகாதசி மேவச்
செவ்வி சேர்திருப் பண்டரி யாத்திரை செல்லத்
தவ்வில் வீணையாழ் மிருதங்கஞ் சச்சரி தாளம். (௫௯)

கருட நன்கொடி யுடனரி நாமங்கள் கழறி
மருவியாங்கெ லுடனிரண் டாயிரர்மன்னப்
பொருவிலாற்றச மித்தின நரசிங்க புரத்தின்
அருகுசார்ந்தன ரங்குறு நதிமழை யதனால். (௬௰)

பயமிகப் பெருக்குற் றதுகண்டு பண்டரிபோய்
இயலுருக் குமணிபதி தன்னைநா மெங்ஙன்
நயமுறத் தரிசனஞ் செயவுன்னி நண்ணுறுமோ
அயர்வறக் கடத்திடு மொருபஃறி நேராமோ. (௬௧)

என்றியாவரு மினைவுறு போதுசந்தோபா
நின்ற நீருடன் மானங்கொண்டெப்படி நீந்திச்
சென்றுகாண் பதத்திருமகள் கேள்வனைச்சேரத்
துன்றுமென்னுடன் வருகவீரரிபதந்துணையாய். (௬௨)

அளித்தல் செய்யினு மழிப்பது செய்யினும் ஹரியே
ஒளிப்பருங் கதியென நம்புயின் னெனவுரைத்துக்
களிப்பொடுந் தியிலிறங்கினர் முன்செலக் கண்டு
தெளிப்புடன்செல்ல லாயினர் யாவருஞ் சேர்ந்து. (௬௩)

செல்லமாதவன் கச்சபமாகியுட் செறிந்து
புல்ல நீர்களைக் காலள வாயுற போவோர்க்
கல்லலின்றி யாவரும் ஹரிபதனை வாய்க்கொண்டு
மல்ல னீர்நதி யக்கரையேறினர் மகிழ்வாய். (௬௪)

கலையணிந்தரி தாசரைப் புகழ்ந்துதாங் கருதும்
புலையில்பண்டரி புரம்புகுந் தம்புலிப் பாகை
விலையு நீர்படிந்துற்ற புண்டலீகரை விரும்பித்
தலைவிழுந்தடி பணிந்து கோயிற்குளே சார்ந்தார். (௬௫)

சார்ந்துளோரொடு புகழ்ந்துகொண் டேகுசந்தோபா
நேர்ந்த மாலடி கண்டுசேவித்து நின்மலனை
ஆர்ந்த வன்பொடு தழுவியாலிங்கனஞ் செய்து
கூர்ந்த நாமங்கள் பலசொல்லித் தோத்திரங் குறித்து. (௬௬)

ஐய நீயுல கத்துளவன்பருக் கெல்லாம்
மெய்யனுகிப்பல் விதத்தருள் புரிகின்றாய்மேவி
உய்ய நின்புகழ் சேடனும் வழுத்துதற் குறுமோ
மைய னெஞ்சினேன் சொல்வதெவ்வாறென வாழ்த்தி. (௬௭)

ஆமையாகியின் றாலையுங் காத்தனை யருளால்
பூமின் னாயகா நின்னடிப் போதிடைப் பொருந்தித்
தோமி லாதுற வருள்கென மாலருள் சுரந்து
நீ மிடைந்தெனை நீங்குறா திருக்கென நிகழ்த்த. (௬௮)

சலசலோ சனனருள் வழிவேண்டுசெந் தோபா
குலவுதம் மனைவியரொடு மெய்ம்மகிழ் கூர்ந்தங்
குலவுநாயகன் பெரும்புகழ் பற்பலவோது
நலமிகுந்தனராய் நனிவாழ்த்துநர் நாளும். (௬௯)

சந்தோபாபக்தர் திருவடிகளே சரணம்.

ஆகச்சரித்திரம்௫௨க்குச்செய்யுள் ௩௨௱௭௰௩.



முற்றிற்று.




# நீளோபாபக்தர்சரித்திரம்.

மாலின்புறு பிம்பளநேரியில் வாழ்வர் நீளோ
பாவென்பவர் யானெனதென்ப தில்லாத பண்பர்
மேவன்பொடு மாலரிகீர்த்தனம் வேண்டுகிற்போர்
நாவின்புற முந்தடியார் கதைநன்கு ரைப்போர். (க)

குடும்பத்தினைத் தம்மதென்றே யுளங்கொண்டிலாதோர்
தொடும்பற்றிலயா சிதவிர்த்தியிற் றுன்னல்கொண்டு
நெடும்பற் றறுமா லடியார்க்கு நிரப்பினர்க்கும்
இடும்பத்தி கொண்டே குடும்பத்தையு மின்புசெய்வார். (உ)

இத்தன்மையரா யவர்கன்னிகைக் கின்மணந்தான்
ஒத்தன்று களத்திரந் தாசரை யுற்றுநோக்கி
வித்தம்பெரு குற்றவர்நங்கினை மேவுகிற்போர்
அத்தன்மை யருக்குநா மேழைக ளாதலாலே. (ங)

எவ்வா றுறழ்வாகுதலே ளனமெய்து மென்று
செவ்வாய் திறந்தோதலுந் தாசரச் செய்திகேட்டுக்
கைவா ரணங்கூப்பிடச் சென்றவக் கண்ணனுண்டு
தவ்வாது காத்தாளுதற் கென்றனர் தங்குநாளில் (ச)

மணநாட்கு முன்னாட்கிழ வேதியனாகி மாயோன்
வணராக் கையிற்கொண்டுள ஜீரண வஸ்திரத்தில்
உணவாக் குதற்கேற்றன சிற்சில வுய்த்தல்செய்து
தணவாத் தனகீர்த்தனஞ் செய்பவர் தம்முன்வந்தான். (ரு)

கண்ணுற் றவர்தம்மை நான்றார்ப்பலன் கைத்ததினன்
நண்ணுற்றன னுண்டி செய்கைக் கிறை நல்கல்கொண்டு
பண்ணுற்றுண வீதல் செய்தாற் பசிதீருமென்றான்
எண்ணுற்றவர் வேதியன்றாள் பணிந்தீ துரைத்தார். (சு)

நீரோது நல்கன்மின்யான் பண்டரி நின்றமாலுக்
காரா தனஞ்செய்தமு தீவனிங் கண்முகென்னக்
காரோத வண்ணற் கிடும்போனகங்காய் பசிக்கு
நேராகிறை யாதலினென் வயிறோ நிரம்பா. (எ)

வயிறார நானுண்பதற் கெய்தினனென்ன வாழ்க்கைக்
குயிர்போ லுறுகின் றவர்தம் முகநோக்கி யுற்றோர்க்
கியல்வாக நீயட்டமுதீ வயிறார வென்ன
மயினோர்பவர் நன்றெனவுண்டி செய் மாலேவந்தோன். (அ)

கற்பாலுயர் சாலியன்னீர் கரங்கொண்டு வந்த
இப்பாக மென்பண்டநும் பெண்மணத்திற் கிசைந்த
அப்பா லுறுகின்றபல் பண்டமோ டாகவைத்தால்
ஒப்பாயிடும் போனகம் யானினி துண்பெனென்றான். (௯)

வாங்காதுறில் வேதியர் போனக முண்ணமாட்டார்
தீங்காயுறுமென் றவனித்தன செங்கைகொண்டு
பாங்காய் மணத்திற் குறுபண்ட மூடாக வுய்த்தார்
நீங்காதரி கீர்த்தனஞ் செய்பவர் நேயமிக்கார். (௰)

கனவேதியன் மாலடியார் சமைக்கண்டுநைவே
தனமானதை யீதிர் முறுண்டு பின்றான்சமைக்கும்
அனமானதை யுண்குவனென்வயி றாரவென்றான்
வினவா வவர்நன்றென நல்கினர் வேண்டியுண்டான். (௰௧)

இல்லா டனைநோக்கி நீ சீக்கிரஞ் செய்த வுண்டி
நல்லாய் சமைக்கென் றரிதாசரு நன்குகூற
வல்லார் முலைமா மயிலன்னவர்மற்ற வாறே
தொல்லா தரத்தட் டிடவேதிய னன்கு துய்த்தான். (௰௨)

அடியாரு முண்டானபின் ராத்திரியாக வையன்
ஒடியாத வன்புள்ளவர் தம்முகநோக்கியுங்கள்
கொடிநே ரிடைப்பெண் மணநாளை நேர் கூடலாலே
நெடிதா மணவேலை யெல்லாஞ்செய நேர்ந்துநின்று (௰௩)

ஐதா மணமுற் றுறுங்காறு நன்காற் றியுண்ணற்
கெய்தா தரங்கொண் டுளதென் மனமென்று கூறப்
பொய்தான் றவிர்தாசரு நன்றெனப் போற்றல்செய்ய
மைதாணெடுங் கங்குலுஞ் சென்றது காலைவாய்ப்ப. (௰௪)

உடனேயெழுந்தா னுயர்மாட முற்றும்விளக்கித்
திடனுமெழுகிப் புனற்காவடி கொண்டுசென்று
குடனூர் தரநீர் நிரப்பிக் கொடுவந்து வீட்டில்
கடன்யாவு நிரப்பினோர் காரியஞ் செய்திருந்தான். (௰௫)

அப்போது மாப்பிள்ளையுங் கேள்களுஞ் ஞாறுபேரும்
மெய்ப்போ டுறைவைத்த பண்டங்களில் வேண்டல்கொண்டு
நெய்ப்போ னகம்வந்தவர் யாரு நிரம்பவுண்ண
ஒப்போரி லானட்டினி திட்டனனுளோர் நான்கும் (௰௬)

பலகார வர்க்கத்தொ டுண்டானபின் பற்றுமெச்சில்
இலையா வையுந்தா னெடுத்துய்த்தபி னெச்சின்மாற்றி
நலபாகடை சந்தன புஷ்ப சுகந்தநல்கி
உலகோர் வியப்பப்பணியாவு முனூற்றிநின்றான். (௰௭)

முதுவே தியன்றூழ் விலன்செய் பணிமுற்றுமோர்ந்து
மதுவார் துளவத்தினன் றாசர் மனங்களித்தே
எதுவோ துதிர்நும் பெயரொன்றலு மெய்துபார்ப்பான்
சதுரார்முன ரோதினன் விட்டலனென்று தன்பேர். (௰௮)

பின்னும் பெரியீர் நுமக்கன்புறு பெண்மணத்தில்
தான்றரும்வயி ரூர நானுண்டனன் சோர்வுநீர்ந்தேன்
என்றுங்கிழ வேதியன்மேற் பரிவெய்தி யன்பர்
மன்றுங்கலை யொன்றவர்க்கீய மனஞ்சொ டுற்றார். (௰௯)

முந்தாந் தினத்தெய்திய கேள்களெல் லாருமேக
மைந்தார் கலையொன்று கொண்டுயர் மற்றுனை நேடி
நந்தாவிடோபா விடோபாவென நன்குகூவ
முந்தா தகல்வுற்றனன் வேலைமுற் றும்புரிந்தோன். (௨௰)

காணாமையி னேர்ந்துணர்ந்தா ரிவன் கண்ணனென்று
நீணாகணைப் பள்ளியன் பண்டரி நேமிநாதன்
மாணுறாங் கொண்டு நம்மிற்பணி வாய்ந்துசெய்தான்
வீணாபராதி யானேனென விம்மலுற்றார். (௨௧)

தாங்கா திரங்குற்றவர் சித்திரை காய்ந்தபோது
பூங்கார் முகில்போல் மனம் வற்றினர் போழ்தின்னன்னார்
பங்கார் கயிற்றணி வந்திடைபற் றுளைகொள்
நீங்காதுற நின்றனன்பொருளா னிறைந்து (௨௨)

உம்மன்பிற்குத் தாமயிங்கினை னொன்றுமுண்மை
இம்மண்ணுறாக் கத்தவர் மாண நாணிங்குறற்பேன்
செம்மன்புட னெப்பொழுதும் மெனச்செப்பியத்தம்
கம்மன்னுற வைத்தருள் செய்தனன் காதல்கூர. (௨௩)

துண்ணென் றெழுந்தார் தனிநோக்கலுஞ் சுவாமியந்த
வண்ணமெதிர் நின்றனன் வந்தனை செய்து வாழ்த்தி
எண்ணுந்திருநாம சங்கீர்த்தன மென்றுமோதி
கண்ணன்கழல் பூசைசெய் துற்றனர் காதலீட. (௨௪)

அங்கெய்து மவ்விட்டல மூர்த்தியை யாதரித்துப்
பொங்கும் வருடந்தொறும் பங்குனித் திங்கள்பூணத்
துங்கந்தரு கண்ணபக்கத் துதியைத் தினத்தில்
எங்கும்புகழ்ந் துற்சவமெய் தியதின்று மாதோ. (௨௫)

நீளோபாபக்தர் திருவடிகளே சரணம்.

ஆகச்சரித்திரம் சசக்குச்செய்யுள் கூ௩அ௱௨௰௨.

முற்றிற்று.



# உத்தவசித்கனர்சரித்திரம்.

தத்துவனுட் பொருண்முற்று முணர்ந்தவர் தாரூர்வாழ்
உத்தவசித் கனர்மெத்த விரக்தவுளத் தோர்மா
பத்தரனேக கிரந்தமுடித்துள பண்போர்சீர்
சித்திரைசுத்த பிரதமை தினத்திடை சேர்வுற்றார். (௧)

பேதரி யென்றுசொ லூரிடைவந்து பிறங்காழி
நாதனகீர்த்தன நன்குமுலாச நலஞ்சார
ஓதலுமெய்தினர் கேள்விகொளப் பெருகொண்ஞான
போதனர் பத்தர் பல்ஜாதிநலோர் வருபொற்போடே (௨)

கேட்டு வியந்து மகிழ்ந்தவ சத்துள் கிளர்ந் திந்த
நாட்டு மிராமநவ மிவணை வைகுதிர் நல்லீரெம்
மாட்டு மெனத்துதி செய்ய மறுத்திலர் வைகுற்றார்
கூட்டு மிடங்களெலா நிறைவாயணி கோடித்தார். (௩)

ராமபிரானை நலம்பெறவைத் தனர்நன் றாய்மால்
நாமநலந்திகழ் கீர்த்தன மன்பின வின்றேத்தித்
தாமவிழாத் தினமும் புரிவுற்றனர் சதுராக
மாமறையோ ருணநாளுநன் மூரல் வழங்குற்று. (௪)

உற்சவ முற்றுதினத்தி லியம்பலவுஞ் சேர
மெய்ச்ச முழக்கி விகங்க நெடுங்கொடி மின்னச்சீர்
அச்சுத னுமமுலா சமதாக வறைந்தேத்தி
நிச்சயவன் பொடு புரம்வலம் வந்தனர் நெடிதாக. (௫)

வலம் வருபோதவ ணெய்துமசீதிடை வைகுற்றார்
நலமில விந்தர்களைந் துறுநூற்றுவர்நணுகுற்றோர்
பலமையு நலிவுபடுத் துவமென்றுனல் பண்ணிக்கொண்
டலமரல் செய்வகை யாயின ரவரதி காரத்தால். (௬)

நீதியிலாத வுன்மத்தவ விந்தர் நெருங்குற்ற
வேதிய ராதியர் மேலுருள் சாணிகள் வீசுற்று
மோதினர் கேதனமுங் கொடுவீணை முழங்காமற்
காதினர் தந்தமிர்தங்க முடைத்தனர் கடிவுற்றார். (௭)

தாசரெலோரு நடுங்கின ரோடினர் சாராமல்
ஈசனை நாடுறு முத்தவ சித்தனரிற் சென்று
பேசின ரிங்கு நடந்தவை கேட்டவர் பேராமல்
ஆசறவைகிய ராமபிரான் முனடுத் துற்றார். (௮)

கேசவ வாமன தீனதயாள கிர்பா மூர்த்தி
நேசமொ டென்றிரு நாமநவின்றுறனோர் வின்றோ
கூசறினஞ் செய்வதேனுன துள்ளிது கொள்ளாயேல்
நீசர் நெருங்கி யுனன்பரை மோதலுனோர் வேயோ. (௯)

பத்தர்களுக்குறு தீமையகற்றுறு பண்பாலே
உத்தம பத்தர்கள் பாலனனென்ப துணர்ந்தோர்கள்
நித்தமு நின்னை யவிந்தர் திறத்தினை நீக்காதால்
மெய்த்துறு பேர்பழு தாயினதின்றென வெகுள் வுற்றார். (௰)

அங்குறு ராமபிரானையொர் மாடமதிற் சேர்த்துப்
பொங்குமலங் க்ரதமெங்கு மழித்தல் புரிந்துற்றார்
தங்குறு மவ்விடை சார்வுறு மாருதி தானோர்ந்து
சிங்கலில் கோபமடைந்தன னன்பர் திறத்தாலே. (௰௧)

ராம பிரானது தாசரை யிங்ஙன லிந்தோரைச்
சாம்வகை செய்குவ னென்றும சீதுதனைத் தீண்டத்
தாமதரான வலிந்தர் செய்தீவினை தன்னாலீ
தாம்வகை யென்றய லுற்றவொர் ஞானப கீரானேன். (௰௨)
முனிவுட னெய்திய மாருத புத்திரன் முகநோக்கி
இனி திருகைகள் குவித்து முனின்றெளியேன் வாழும்
தனிமனை யொன்று தவிர்த்து நீர்செய்வது தான்செய்க
புனித மருந்தருள் வீரெனவன்பொடு போற்றுற்றான். (௰௩)
போற்றுதல் கண்டு துலுக்கர்கள் வந்திது போதென்னே
தோற்றுப கீர்மயல் கொண்டனனென் றெதிரே சொல்லச்
சாற்றுப கீரவர் தங்களை நோக்கிம சீதைத்தான்
காற்றுத வுந்திறலோர் பொடிசெய்குவர் கண்முன்னே. (௰௪)
ஆதலினீவிர் விரைந்தய லோடுக வெனவன்பால்
ஓத லுணர்ந்திலர் துஷ்டர் பகீர் முனுரைக் கின்றார்
தீதற நின்றம சீதையிடித்தல் செயற்காமோ
வாதமகற்கவனைப் பெறுதாதையு மாட்டானே. (௰௫)
என்பதறிந் தெதிர்மாருதி வெஞ்சின மெய்திக்கண்
முன்புறுகின்றம சீதினையோர் கையின் மோதாமுன்
பொன்பிறழ் மேருவிடிந்து விழுந்தது போல்வீழ
வன்புரை யைந்துறு நூறுதுலுக் கர்மடிந்தாரே. (௰௬)
வேறய னின்ற துலுக்கர்கள் கண்டுவிரைந்தோடிக்
கூறினர் தம்மது கோவயினின்று கூ கூ வென்று
மாறில ராகிய விந்தர்வணங்குற மன்கேட்டுச்
சீறின னுகவயிற் றுழைநோய் நனிசெம் மிற்றே. (௰௭)
போதரு நோய்மிகவுந் துயர்செய்தல் பொறானாகிப்
பூதல மீதுபுரண்டுபகீரனுமார் போரை
மேதக முன்ன ருரைத்த துணர்ந்து வியந்துள்ளே
காதரம் விஞ்சின னுத்தவசித் கனர்கண் வந்தான். (௰௮)
அன்புடனன்கு பணிந்து புகழ்ந்தடி கேணும்மைத்
துன்பு செய்தோர்களெலோரு மடிந்தனர் சுவாமீ நீர்
இன்புடன் மாருதி தன்னையி வேளையிரந் தெம்பால்
வன்புற நன்கருள் செய்வகை செய்மென வந்தித்தான். (௰௯)
உங்கண லுற்சவ பங்க நடந்ததை யோராமல்
எங்களை யாள்க வெனப்பொரு ளெண்ணிலவா யீந்தான்
அங்கப ராதமதாக மனைக்கணடைந் திற்றான்
பங்க மிலுத்தவசித் கனர்பின்பு பரிந்தாராய். (௨௰)
தாளமிர்தங்க நல்வீணையுடன்றிரு மாறுசர்
நீளமுழங்குற நின்றுது வாதசிநிறைவாக
ஆளரி நாமமியம்பிய லூர்வலமாகித் தாம்
மீளரு மின்பு சிறப்ப விருந்தனர் மேன்மேலும். (௨௧)

உத்தவ சித்கனர் திருவடிகளே சரணம்

.ஆகச்சரித்திரம் ௪௫-க்கு செய்யுள் ௲௮௱௪௰௩

முற்றிற்று.

# நாபாஜிபக்தர்சரித்திரம்

காசிநகர் தனிற்பத்தி ஞானவயிராக் கியத்திற் கனிந்த சீலர்
ஆசிலரா மானந்த சாமிதனக் கனந்தானந்தச் சுவாமி
மாசிலடியாரானு ரவர்தமக்குப் போகாரி தாசர்வந்தங்
கேசிலடியா ரானரிவர்க் கக்கிரஜி கிலஜியென்போர் சீடர் (௧)

ஒல் மூத்தவ ரானவக்கிரஜிய னுதினமும் விரக்த ராகி
ஊனமிலா விண்டுபக்தி யுடைய வராயரி குணங்க ளுரைக்கிற் பாராய்
ஞானமிகுசாந்தி தயைக் காதாரராய்ப் பிரபோதனியு நாமம்
ஈனமிலாப் பத்மஹஸ்தியும் முதலோர்க் கரிபத்தி யினைப்போதித்தார் (௨)

சிரவணமே முதலான நவவிதபக்தியு மொய்வோர் திறத்தோர்க் கீந்து
பரவவவை யீடேறச் செய்தவராயி ருப்பவர்க்குப் பருமை நாதன்
வரசகுண ரூபத்தை நினைத்தபோதெல்லாஞ் சேவைதந்தாள்வான்
இரமுடனிவ்வா றிருக்கவத் தேசமதை யின்றிச் சிறுமை கூர. (௩)

உணவுதகங் கிடையாமன் மிருந்ததுயரு றும்போதவ் வூரிலேயோர்
குணவதிதன் பிள்ளைக்குச் சோறின்றி மிகுந்த துயர்கொண்டு சார்ந்து
தணவில் கனையிற் சேயை வைத்தாற்றில் விழுந்திறந் தாடனிமை யாற்சேய்
அணவினையைக் காணமற்பசிவருத்தக் கோவென்றே யழுதும்போது (௪)

அக்கிரஜி தாசரங்கே நீராடவந்தனர் கண்டழைப் பிள்ளை
யிக்கரையி லிருப்பதென்னை யெனவிரங்கிப் பிள்ளையரு கிற்சென் றேங்கித்
துக்கமுறு கின்றனையே யெனக்கேட்கத் தாய்தன்னைச் சோறு கேட்டேன்
மிக்கபசியா லென்னை விட்டகன்று ளெங்கேயோ வெனயியம்ப (௫)

வினவிய வக்கிரஜி யென்போர் மிகக்கருணை கூர்ந்து புனலாடி மீண்டத்
தனையனுடன் வரவழைத்துப் பயப்படே லெனவுரைத்த தன்மையாலே
புனைபெயர் நாபாஜி யெனப்பொருந் திற்றுப்பின்பு மடங்கொண்டு போந்தார்
அனையர் மடந்தனின் மேவும்பெரியோர்க ளெச்சிலுண்டு வளர்ய தானார். (௬)

அக்கிரஜி தினம்புரியு மர்ச்சனையே முதலான வினைத்தும் பார்ப்பார்
தக்கவெளிப் புறத்திருந்து வரும்பெரியோர் தமையெல்லாஞ் சரணந்தாழ்வார்
மிக்கமடத்தினி னடக்கும் பாகவத முதலியவும் வினவு கிற்பார்
புக்கவிவர் நடக்கையினுற் சஞ்சித கர்ம்மங்க ளெல்லாம் பொடிந்துபோக. (௭)

மெய்யறி வுண்டா யுலகத்தெல்லோர்த நினைவறியும் விவேகியாகி
ஐயமறத் திரிகாலங் களுந்தெரிய வல்லவ ராயண்ட மெங்கும்
எய்து செயலுந் தெரியலாயினுர் மௌனமாயிருக்கு நாளில்
பொய்யறு சீரக் கிரஜியொரு தினத்திற் கங்கை நீராடப் போந்தார். (௮)

விண்டுபூசனை செய் தாரதிசெய்து விமலன டிவிரும் பித்தாழ்ந்து
கொண்டு பினரவ்விடத்திருந்து நாபாஜி தனைக் கூவியுள்ளே
அண்டும் வகையொரு வரையும் விடாமல் வெளிப்புறத் திருக்கவாணை செய்து
மண்டு கதவடைத் தொருகம் பளம் போர்த்து மானச பூசனையின்மேவி. (௯)

சித்த மொருதன்மை யராய் ஸ்ரீ ஹரியைத்தியானிக்கத் திருமால் வாரா
தத்தினத்திலுளம் வருந்தித்தியானித்துத் தியானித்தங்கயர் வதானூர்
இத்த குதிதனை வெளியிலிருந்த நாபாஜி தெரிந்தின்று சாமி
அத்தியிலோர் வணிகனது கலமுழுகலாகு கின்ற வதனை நோக்கி. (௰)

துவரை நகருறு வோனை யெனது கலமுழுகாமற் சூழ்தியானுற்
கவரின் மனத்தக் கிரஜிக் கைகந்திலொன்றிக் கலத்திலுள கனக மீவேன்
தவறுதல் செய்யேனென்று வேண்டினனவ்வணி கனது தன்னுலோர்
உவமையு மில்லான் சென்றுனு மக்கிலா பங்கிடைத்தற்குன்னி மாதோ. (௰௧)

ஆதலினீர் சற்றுழலாத மைந்திருக்க வெனவோ தவவரவ்வாறு
மாதவனை நினையாமற் சற்றிருக்க நாபாஜி மறுத்துங் கூவி
மேதகையீரிப்போது கலங்காத்துக் கண்ணபிரான் மீண்டானியிர்
போதரு மாநினையு மெனவக்கி ரஜிதியானிக் கக்கண்ணன் போந்தான். (௰௨)

பொன்னுடை நனைந்திருக்கச் சார்ங்க தரன்றோன்றுதலும் புகழ்ந்து போற்றி
மின்னுருந் திகிரியினு யிந்நேர மெங்க கன்றாய் விளம்பு கென்ன
மன்னுழி முழுகாமற் கலங்காத்து வந்தேனவ்வணி கனுய்ப்பான்
தன்னுன பொருளிலந் திலொரு பாகங்கொண்டு மடந்தனக் குநேர்தி. (௰௩)

செலவுனக்கு மிகுதியாயிருக்கின்ற தெனக் கூறிச் செய்யும் பூசை
நலமுடிந்த வுடன் மறைந்தானளினை நாயகன் பின்பு நனிவியந்தங்
கிலகு கதவைத்திறந்து நாபாஜிதனை யுள்ளே யெய்தக் கூவிச்
சலசமலருறை வாற்குந் தெரியாத தறிந்த தெங்ஙன் சாற்று கென்றார். (௰௪)

நகை முகராய் நாபாஜி சாதுக்கள் பிரசாத நாளு முண்ட
வகையதனாலுந் தேவரீர் கருணை வசத்தாலு மனத்துணர்ந்தேன்
தகைமிகு சீர்க்கண்ணனது செயலே யென வக்கிரஜி தயவு கூர்ந்து
மிகைநலஞ்சேர் நாபாஜிமுக நோக்கி மறைப்பொருளை விளம்புகின்றார். (௰௫)

ஹரிகுணங்களே புகழு மதிலும வனடியர் புகழடைவிற் கூறில்
சுரிமுகச் சங்கேந்து மவனுக்கு மிகமகிழ்வுண்டாமிது தோன்றாது
விரியு முலகத்தவர்க் கிம்மறைப் பொருளையுனக்கு நான் விளங்கச் சொன்னேன்
தெரிதி யென நாபாஜி யக்கிரஜிபாத மலர் சேவித்தேத்தி. (௰௬)

தேசிகராணைப் படியே பக்த சரித்திரங் குவாலேர பாஷை
மாசில் பிராக்ரத பாஷையிலும் வழங்க நாடோறும் வரைதலானூர்
ஆசிலிவர் வரைவது கேட்டத்தேசங்களிலுள்ளோ ரவரைப்போற்றி
ஏசில் சிரவணஞ்செய்து மனனஞ்செய்தும் புகழ்ந்து மிருக்கலானூர். (௰௭)

நாபாஜி பக்தர் திருவடிகளே சரணம்

ஆகச்சரித்திரம் ௫௯ க்கு செய்யுள் ௩௯௮



முற்றிற்று.



# நானகதாசர் சரித்திரம்.

வேறு

நீடுமோஞானியாய் நெடிய வைராக்கியம்
கூடுவோரரிதனு மந்தினங் கூறுவார்
நாடு பஞ்சாபு தேசத்துளார் நானகர்
சூடுபேர் மிக்க சம்பத்துளார் துகளுறுர். (௧)

ஆசையா லாசையு மளவிலா மோகமும்
மாசு சேர்டம்பமும் வளர கங்காரமும்
நாச மேய் கொலையு நன்மார்க்க நண்ணுமையும்
நீசமாகிய வெலாநிறை தலாணினைவிலே. (௨)

அத்தகைப்பொருள் கணல் வழியிலே யமையுமா
உய்த்தல் செய்திடருரு தவண கேதனனுடைச்
சுத்த நாமந்தினஞ் சொல்லவுத் தேசராய்க்
கைத்தினல் விண்டுவுக் காலயங் கட்டினர். (௩)

அந்த நாடான தவிந்தர் நாடானதால்
இந்த மாகோயில் கண்டேவரு மிசைவுருர்
நிந்தை செய்துற மவர் நினைவை நானகர் தெரீஇ
நைந்து மாமனமிக நாடு வாராயினர். (௪)

துட்டராகிய துருக்கக் குரோதியர் துணிந்
திட்ட விண்டாலயமினை செய் தேவாலயம்
நட்ட மாகச் செய்வார் நான் மறைக் குலவையும்
தொட்ட சற்சனரையுந் தொலைவு செய் வாரரோ. (௫)

ஆதலாலிவர் கடம்மரசனுக் குரை செய்து
மாதவன் சினகரந்தனையு மாய்க்கும் முனம்
சேதமாகும் வகை செய்து நாமே யென
ஏதமோடந் தவாலய மிடித்தாரரோ. (௬)

அத்துருக் கர்க்கு வப்பாக மசீது கட்
டித்துலக்கஞ் செய விந்தெலா மேசினர்
அத்தையோர் நானகரதையு முன்போலிடித்
துத்த கர்த்துச் செய்தார் தொலைவில் கொல்லைகளரோ. (௭)

கைத்தெலா நானகர் கழியுமா செய்ததால்
பித்தராயின ரெனப்பெரிது கண்டோ ரெலாம்
தத்தம் வாய் வந்தவா சொல்லியத் தாசரை
மெத்த நிந்தனை செய்தங்கவரை நேர் வினவுவார், (௮)

சிலர் துணிந்திணைய நீர் செயலெனேபகர் கெனச்
சிலர்கள் சங்கரனையுஞ் சிலர் கணேசனையும்
சிலர் முகுந்தனையு நேர்சிலர் பதங்கனையு மோர்
சிலர் களிந்திரனையுஞ் சிலர் செழுந்தழலையும். (௯)

கடவுளென்றடி தொழக் கருதுகின்றனரினும்
புடவியிங்கிதின் மதம்பல படப் புகலுவார்
அடையநன்கென விசைந்துறவி வாறயர்கிறேன்
மிடை மினென் சொல்லை முற்றிலு மெனு விசை செய்தார். (௰)

யாவரும் வினவி யின்னகை செய்தாராகவே
தாவரும் பொருளெலாஞ் செலவு செய்தனர் மகிழ்ந்
தோவருஞ் சுத்த சாத்துவிகவைராக்கிய
ராய்வருங்காம மாதிய வெலாமறல் செய்தார். (௰௧)

அறிப கீரலது பைராகி யென்றறி யொணுச்
செறியுமோர் வேடராய் ஸ்ரீ தரன் சிந்தையிற்
பிறிவுறு துறவுடற் பேணு மானங்கழீஇ
நெறிகொளான் மாவுறூஉ நிலையிலே நிலவினுர். (௰௨)

எவரேனுந் தமைச்சரணைனு வெய்திஞல்
ஆவதாம்வகை யவர்க்கருள் செய்வாராயுற
மேவனேர் செயலெலா மிடைய விந்தர்க ளுணர்ந்
தாவறீ ரும்பகீரோ பயிராகியோ. (௰௩)

இனையனென் றறிகொணு திவனலைந் திடலெனே
நினைவின்மந் திரமுறீஇ நிலைதவிர்ந்தன னதால்
புனைவிலுண் மருளுடன் புரள்கிறுன் பொருளெலாம்
தனையகன் றிடமனத் தளர்வினேங் குறுகிறுன். (௰௪)

இந்தவூ ரிற்பலோ ரெய்துகின் றனர்தனம்
விந்தநேர் குவையினிவ் விதமியற் றினர்கொலோ
தந்தகொல் லையினுறுஞ் சனர்களுக் குதவியே
முந்தினன் ஞானியாய் முழுதும்விட் டனனரோ. (௰௫)

என்றுபற் பலரொலா மெனையசொற் சொல்லினும்
துன்றிராக் கதிரினேர் சுனகன்வாய்க் குரையெனு
நன்றுநா னகரொணி நாடொறுந் தமதுளே
மன்றலார் துளவினுன் வாழவை குற்றனர். (௰௬)

வேறு.

இவ்வகை யியலுகின்ற நானக ரியல்புநோக்கி
வெவ்விய துருக்கரொல்லா மிகப்பொறு தரசன் பாற்போய்
ஒவ்வுநங் குலத்துளுற்றே னங்குலத் தொழுக்கந்தீர்ந்து
தவ்வினன் றிரிகின்றுனென் றுரைத்தனர் சாற்றக்கேட்டோன். (௰௭)

ஏவலா ளொருவன்றன்னை யேவிநீ குலத்தொழுக்கம்
ஓவலின் றுகநிற்க வுரைக்கென வுரைக்கக் கேட்டோர்
மேவுமண் ணென்றேபற்பல் விதங்கலம் பொன்னுமொன்றே
தாவிலாப் பணிகள்வேறு தன்மைய வாதல்போல. (௰௮)

தனிமறை யுரைக்கும் விண்டு மயஞ்சகத் தென்றுதந்த
நனிமொழிப் படியேதெய்வ நாயகன் விளங்குகின்றான்
முனிவிறெய் வங்களாகப் பலவகைமுயலுஞ் சாதி
இனிலுந்தெய்வங்களாலும் பேதமின் றேனுங்கேண்மோ. (௧௯)

துலுக்கர் சிப்பியர் குலாலர் புலையர்தோல் வினைஞரான
நலக்கபீர் நாமர்கோரா நயம்பெறு சோகாமேளர்
விலக்கரு ரோகியென்போர் விண்டுவே கடவுட்கெல்லாம்
சொலற்கருங் கடவுளென்று சூழ்ந்துநற் றொண்ட ராஞர் (௨௰)

ஆதலா லாதித்தெய்வம் விண்டுவே யாமென்றெண்ணி
மாதவன் றானட்கொண்டு நாமநான் வழுத்துகின்றேன்
ஈதறி கென்றோர்பாட்டை யெழுதினரவன்கை யீயத்
தூதன்போ யரசன்கையி லீந்தெதிர் தொழுது நின்றான். (௨௧)

உய்த்தவக் கவியைநோக்கி யுளமகிழ்ந் தரசனுய்த்தோர்
சுத்தமெய்ந் நிலைமைதன்னைச் சோதிக்க நினைவுகொண்டு
மெத்தவுங் கோபங்கொண்டான் போல்வெளிக் காட்டிவேந்தாய்
இத்தலத் திருக்குமென்சொ லிகழ்ந்தனன் மறுத்தலாலே. (௨௨)

கைப்பிடி யாயன்றனை கொணருங்கள் கடிதினென்ன
ஒப்பறு படாணி யீரைஞ் ஞூறுபே ரொருங்குசெல்லத்
தப்பிலர் தம்பாலே விஞைவர் தர்முஞ் சூழ்ந்து
பற்பலா யுதங்களோடு நானகர் பதிக்கு வந்தார். (௨௩)

உள்ளுற முயலும் போதுள்ளுறைந்த நானக ரறிந்து
புள்ளிவர் வோனை யெண்ணப் போந்தனர யுதவீரர்
தள்ளருங் கடுமை பூண்ட சத்திர வத்திரங்கள்
கொள்ளையின் வீசி யெய்யக் குலைந்தனர் படாண் களெல்லாம். (௨௪)

பயந்து போயரசன் பக்கல் பார்த்திப நாங்கள் சார்ந்தோம்
ஐயந்தரு மயுத வீரர் சார்ந்தன ரவரகத்துள்
வியந்திடப் படைகள் கொண்டு வெளிவந்தெம் மேல் வீசுற்றார்
அயர்ந்தெதிர் நிற்க வஞ்சி யடைந்தனமும் பாலென்றார். (௨௫)

அன்னது கேட்ட வேந்தனட்ட சித்தியும் பெற்றோரை
நன்னயந் தெரி விலாதோர் நவில்வது கேட்டு வீணே
இன்னல் செய்தன மென்றெண்ணியனு தபித்திரண்டு கையும்
துன்னுற வஞ்சலித்துத் துதித்துட னெழுந்து வந்தான். (௨௬)

நானகரகத்துள் வந்து நயந்து சாஷ்டாங்கமாகத்
தானடி பணிந்து மிக்க சாதுவாய் விளங்கு நும்மை
யானஞரு றுத்தினேனே யாயினுங்கிருபை கூர்ந்தஞ்
ஞானமிக் குடைய வென்னை நாதகாத் தாள்க வென்றான். (௨௭)

வேண்டி னன்று தித்தன்னோர் தம் விடை பெற்றுச் சென்றானாக
ஆண்டன செயல்களெல்லா மறிந்தன ரூரிலுள்ளார்
நீண்டன கீர்த்தி யெங்கு நிமலரை யடிவணங்கிப்
பூண்டன ருபதேசங்கள் பொருள் பல தருதலானார். (௨௮)

வருபல பொருளுங்கொண்டு சாது சர்ச்சனர்க் குவாய்ப்பத்
தரும முதிட்டு வந்தாரவர் மடந்தங்கு சீடர்
பெருநிணரிகத் திலாசை பிறழ்கிலராயிருந்தார்
இருவர் சூத்திரா மர்தானு வென்பவர் தேசிகர்க்கு. (உ௯)

உடல் பொருளாவியர்ப் பணஞ்செய் திவ்வுலக வாழ்க்கை
விடல் செய்து தேசி கோத்தமனை விடார் சேவை செய்து
மடனறு மவர் தம் வார்த்தை வழி வந்து கருணை பூண்டார்
திடமுடனிவ்வாறுகச் சென்றன சின்னுள் பின்பு. (௩0)

ஊனமில்வாழ் வென்றுன்னி யுற்றனர் மடத்தி லீதும்
ஈன மற்றதிலு மென்ன வெண்ணினர் மடத்திருக்க
நானகர் சூத்திராவை வைத்து மர்தானு நண்ணத்
தேனமர்துள வோனுமஞ் செப்பினரழைத்துச் சென்றார்- (௩௧)

நிலைபெறுங் கண்ண விக்கிரகந்தனை நிலையிற் பேர்த்துக்
குலைவுற மாட்டெலும்பைக் கூட்டிக் குப்புறக்கிடத்தி
அலைவு செய்தனர் மக்காவி லெனவகத் தெண்ணிச் செய்யாள்
தலைவனைக் காணவேண்டிச் சார்ந்தனர் வழிக்கொண்டம்மா. (௩௨)

சார் தரு வழியிலோராறுளது ஜலமிக்காகி
ஆர்தரக்கண்டா ரோர் காலலக் நிரஞ்சன மென்றோதி
நீர் தனிநடந்து சென்று ருடன்வரு சீடர் நேரார்
வார்தரு கரையினின்றார் மனத்துறு பயங்கொண்டம்மா. (௩௩)

தேசிகர் தமைக்குறித்துச் செங்கை ளிரண்டுங்கூப்பி
ஆசில்சீ ரையரோ யானும்முட னடையவஞ்சிக்
கூசியிங் குறுவேனும்மைக் கூடுறத் தகுமுபாயம்
பேசியங் கழைத்துக்கொள்க வென்றுபே சுற்றார்மாதோ. (௩௪)

பேதுறு சீடர்தம்மை நோக்கினர் பிரளயத்தின்
மீதுற நின்றுகொண்டு வேண்டுசத் குருதியானம்
போதுற மனத்துட்கொண்டு போதரு கிற்பையாகில்
ஈதுற வின்றிச்சார்வா யென்றெடுன் றினிதுசெப்ப (௩௫)

அவர்சொன்ன படியேயாசா னைத்தியா னித்துக்கொண்டு
புவனமங் கிடையளாவப் போயினர் நடுவினின்ற
தவரிட மிவர்கணைக்கா லளவுறச் சார்தலாக
எவமொடிவ் வாற்றுநீரொன் னிடையள வாயிற்றென்னே. (௩௬)

அலக்நிரஞ் சனமென்றோதா மையினல வோவென்றெண்ணி
நலக்குரு நினைவைவிட்டு நானகர்போனடந்து
செலற்கது செப்பநீர்தான் றிரள்கழுத்தளவதாகச்
சொலற்கருங் குருவேயாற்றி லமிழ்கின்றே னென்றுசொன்னன். (௩௭)

திரும்பினர் நோக்கியாசான் றியானமேன் விடுத்தாயென்ன
விரும்பினர் குருதியான மேவலுமுன்போ லாக
அரும்பெறற் கரைபோய்ச்சேர்ந்தா ரணுகுதே சிகரன்னார்க்குக்
கரும்பிர சம்போற் கொள்ளக் கனிந்திதோ பதேசஞ்செய்வார். (௩௮)

ஓடரா ஞேராசான்றான் செப்பிய வழியே செல்லல்
காட்டு நலமதாகு நவில்வழி நடவாராகில்
கேட்டு வாகுமென்னக் கிளர்ந்தது நன்றென் றாசான்
பீடமர் கமலபாதம் பேணினர் வணங்கினின்றார். (௩௯)

பின்னிரு வரும்போய் மக்கா வருகுறப் பேசவ்வூரார்
மன்னுமாட் டிறைச்சிசோறு விற்பதிந் துக்கள்வந்தால்
துன்னிடா தகற்றறப் பிவரிற் கொலைசூழ்த லன்னோர்க்
கின்னன வழக்கமாக விருப்பதை யிவரறிந்து (௪0)

மக்கமா நகரிலுள்ளோர் கண்ணுக்கு மறைவதாகப்
புக்கிரு வரும்போய்க் கோயிற் புகவுறு முஜாவர்கண்டு
தொக்கதெவ் வாறிங்கின்னே ரொனவியப் புற்றுத்தோன்றும்
மிக்கவர் தம்மைநோக்கி நீவிர்யாரெனவினவ (௪௧)

உற்பத்தி லயத்துக்கேற்ற காரணமாகியோங்கும்
சிற்பரஞ் சோதியாகித் திரிகுண ரீதமாகிப்
பற்பல்வியா பகமுமாகிப் பதிநிரா மயமுமாகித்
தற்பர மாகிநிற்ப தெதுவது தான்யா னாகும் (௪௨)

அடியனைக் காத்தற்காக வவனியில் யாருங்காணிவ்
வடிவொடு வந்தேனென்ன முஜாவர்நீர் வழங்குமாற்றம்
முடிவுறப் பரிக்ஷை யீந்தால் மொழிதல்சத் தியமாமென்ன
மடிவறு தாசரோது பரிக்ஷைநீர் வருக்கவென்றார். (௪௩)

இந்துக்கள் வணங்குதற்கா யியற்றுவிக் கிரக மிங்கு
முந்துற்ற ததனைமண்ணிற் புதைத்தன ரது முன்போல்
வந்துற்று நிற்கச்செய்வீ ராயினீர் வழங்குமாற்றம்
மைந்துற்ற தென்னச்சொல்ல நானகர் மனத்துட்கொண்டார். (௪௪)

கண்ணனை நினைத்துக்கீரக் கடலுறு வோனே பூமேல்
நண்ணுமங் கைக்கின்பா கருணைநிதி நளினநாபா
எண்ணுறு பக்தவற்ச லாவிய லான்மராமா
மண்ணுல களந்துகொண்ட வாமனாவென்றுவாழ்த்தி (௪௫)

அடியனே னுரைத்தவார்த்தை யவமுறா தவிந்தர்காண
நெடிதெழுந் தினிதுநின்று நிலைதரல் வேண்டுமென்னப்
படியளந் தவனன்பர்க்குப் பரிந்தெழுந்தாழிசங்கம்
வடிவுறத் துலங்கி நின்றான் மனத்துப சாரமெல்லாம் (௪௬)

செய்தனர் கண்டுபோற்ற முஜாவர்மற் றதுதெரிந்து
மெய்தனி னடுங்கியஞ்சி நானக ரடியில் வீழ்ந்து
பொய்தவி ரன்புகொண்டு போற்றிநீ ரேமெய்யான
தெய்வமிங் குதித்துவந்தி ரொனத்துதி செய்தல்கேட்டு (௪௭)

அங்குநின் றெழுந்துவெற்பின் சாரல்க ளனைத்துநீங்கிப்
பொங்குமோ ராற்றின்பாங்கர் போந்தன ரங்கோர்வேந்தன்
தங்குதன் சேனையோடு நதிக்கரை தன்னிற்சார்ந்து
சங்குமே வாற்றைநீந்தத் தகாதவ னாகியுற்றான். (௪௮)

தாசனைக் கண்டுபோற்றித் தாழ்ந்தடி வணங்கிமிக்க
நேசமுட் கொண்டிவ் வாற்றை நீந்துதற் குபாயஞ் சொல்க
மாசறு மடிகேளென்ன மற்றவர் காயிதத்தால்
காசறு கல்லைசெய்தங் கவன்கரந் தந்துவேந்தே (௪௯)

நீயுன தனிகத்தோடு நேர்ந்திதன் மேலே யேறிப்
பாயுநீ ராற்றைத் தாண்டு கெனப்பகர்ந் துறுதன்சேடர்
மேயுறத் தாங்கடந்து விரைந்துவந் தனரவ் வாற்றை
ஆயுமவ் வரசனீந்தக் கல்லையையாற்றிலிட்டு (௫௰)

எய்தினை ரேறவேற யாவர்க்கு மிடமுண்டாகி
மையில்புட் பகமானம்போல் வந்தது நதியின் மீதாய்ப்
பொய்யிலர் தந்தகல்லை புரவல னனிகத்தோடும்
கையற லின்றியாற்றின் கரைவந்து சேர்ந்தான் மன்னோ. (௫௧)

தீரம்வந் தடைந்தவேந்தன் சிந்தையின் மிகவியந்து
காரண புருடரொன்று கருதின னவர்தம் பாதம்
சாரவீழ்ந் தெழுந்துபோற்றிச் சாமிநீ ரேயெனக்கு
நாரண னுருவங்காணச் செய்யுமி னெனநவின்றான். (௫௨)

நிராமய னாகியெங்கு நிறைந்தநின் மலனைநேரோ
பராவுறக் காணவேண்டிற் பரமசற் குருவைப்பற்றி
விராவுறு முபதேசத்தால் விளங்குறக் காணலாமித்
தராதலந் தனின்மற்றொன் றாலுந்தெரி தரல்கூடாது (௫௩)

என்பது கேட்டவேந்த னிவ்வுரை மெய்தா னென்ன
அன்பரை வணங்கிச் சென்றா னணிநகர் சேடரோடு
பின்புநா நகர்வரும்போ தவ்வழிப் பிரமன்போலும்
இன்புறு தவத்தரான கோரக்க ரெய்தக் கண்டு (௫௪)

வணங்கின ரவரைநோக்கி வந்தகோ ரக்கர்சொல்வார்
நுணங்குநுண் ணறிவினீர்நீர் நும்மகத் துவங்கள் பார்மீ
திணங்குற வெளியிட் டுள்ளீ ரின்றரித் துவாரந் தன்னில்
கணங்கொள நாலிலக்கம் பேர்கலந்துற்றார்மாதோ. (௫௫)

அனைவரு மரிதன்றாச ராதலா லவர்கட்கெல்லாம்
புனைவுண வளித்தல்வேண்டு மென்றனர் புகலக்கேட்டு
நினைவினீர் முன்னர்ச் சென்றங் கவருணு வுணற்கு நேர
முனைவரோ சொன்மினென்ன முந்தினர் சென்றார்மாதோ. (௫௬)

நானக ரவர்முன் சென்று நாலிலக் கம்பேருக்கும்
போனகந் தரலுமுண்டு புகழ்ந்தன ரிருக்கும்போது
வானக மார்க்கம்வந்த கோரக்கர் மற்றெல்லோர்க்கும்
நானக ருங்களுக்கு நல்குவ ருணவின் றென்றார். (௫௭)

சேரநீர் வாருமென்னச் செப்பநா னகரெங்கட்குப்
போரநன் குணவளித்துப் போயினரிப்போதென்னத்
தீரராகியகோரக்கர் மிகவியந்திருக்குஞ் செவ்வி
நேரநா னகர்வந்தந்த நிமலரை வணங்கிநின்றார். (௫௮)

நின்றநா னகனைக்கண்டு கோரக்கர் நெகுமன்போடு
துன்றமார் புறவணைத் துச்சூக்கு மவடிவங் கொண்டு
நன்றிவ னூற்றோர்க்கெல்லா நல்கினீர் விருந்தவந்தின்
றொன்றறி தாசரும் போலுல கிடையொருவ ருண்டோ. (௫௬)

கண்டிலே னெங்குமென்று களித்தனர் ககன மார்க்கம்
அண்டினர் சென்றார் செல்ல நானகர் மடமடைந்து
தொண்டரோ டிருந்துமன் றற்றுழாய வனுமஞ் சொல்லிக்
கொண்டனர் வாழ்ந்தார் நாளுங்குளிர் மகிழ்சிறப்ப மாதோ. (௫௭)

நானகதாசர் திருவடிகளேசரணம்.

ஆகச்சரித்திரம் ௫௭-க்குச்செய்யுள் ௩௬௩௧.



முற்றிற்று.



# பிரேமாபாயி சரித்திரம்

வேறு

சாதுசர்ச்சனர்தம் மிடத்தன்பு மிக்கவர்தாம்
ஓதுபாகவசம் வினவுறுகுண முடையார்
ஸ்ரீ தரன்பெருங் கீர்த்தனத் தன்பு செய்திறத்தார்
பூதம்யாவை யிலுந்தயை பொருந்திய பொற்பார். (௧)

ஹரிதியான மேயன்றி வேறொன்றையு மறியார்
பெரிய காசியில் வளர்பவர் பெயர்பிரே மாபாய்
தெரிய மங்கலியார் தினங் கங்கை சேர்ந்தாடல்
புரிவர்தம்மகத் தொருகண்ணன் மூர்த்தியைப் பொற்ப. (௨)

அர்ச்சித் தெத்துவர் தினமும் பாகவதங் கேட்பாராய்
இச்சித் தானந்த பாஷ்ப மோடவச மாயிருப்பார்
குச்சிற் கெய்தின வொருதினம் பசிமிகக் கொண்டு
மெய்ச் சிச்சாது சஜ்ஜனர் வரக்கண்டனர் விரும்பி. (௩)

வணங்கியங்கவ ராசனத்துற வகம் வைத்து
நுணங்கலின்றி மற்றிவருணவ முதிட நோக்கில்
இணங்கு மின்று பாகவத சிரவண மின்றுகும்
உணங்குவார் பசியால் வினவுறச் செல்லுவோ மேல். (௪)

அன்றியும் வருசாதுக்கள் சேவை கிட்டாமல்
இன்றுநானப ராதியாயி துவரை யியற்றும்
நன்றதாகிய சுகிர்தமெல்லாங் கெடனண்ணும்
என்று தம்மனத் தெண்ணினர் செல்லுறுதி ருந்தார். (௫)

வயது பத்துள ஞனதம் மகன்றனை நோக்கி
நயமொடின்று போய்ப் பாகவதங் நன்கு வினவி
அயர்விலா தெனக்குவந்து நீயுரைத்தி யென்ற னுப்பி
மயர்விலா தரிநாமங்கள் வழுத்தி நீராடி. (௬)

வந்துபோனக மட்டுவந் துளவயி ணவர்க்கு
முந்துபாத பூசனைசெய்தம் முளரிநீர்கொண்டு
தந்துசோட சமா முபசாரமுந் தகவாய்
உந்துபோனக முண்ணச் செய்தார் மிகவுவந்து. (௭)

உண்டபின் கரங்கால் சுத்திசெய்திடவுஞற்றி
மண்டு சீதளச் சந்தன மருவுதாம் பூலம்
விண்டு தாசருக் கீந்து பசரித்தனர் விரும்பி
அண்டிஞன் மகனவனுடன் றுமுமுண்டாராய். (௮)

மத்தியானத் தின்மகனை நீகேட்ட பாகவதம்
உய்த்தயான் வினவுறச் சொல்லு கென்னலு முரைத்தான்
மெய்த்தகோ குலத்துறு நந்தகோபற்கும் விரும்பு
மைத்தகண்ண சோதைக்கு மோர்குழந்தையாய் வளர்வான். (௯)

அன்னை யோர்தினத்தயிர்கடை போதினி லழுது
தன்னியந் தரவேண்டினான் கடைதலைத் தவிர்ந்து
மன்னு மங்கவள் பால்கொடுத் துறவவன் மனத்தில்
உன்னினான் வினோதஞ் செயவடுப் பிற்காயும்பால். (௰)

பொங்கிமேல் வழிவுறத் தழன்மிகும் படிபுரிய
அங்கிமிக்க தாய்ப்பானை யிற்பாலெலா மழன்று
தங்குபானை யுட்சிறிது மில்லாமலே தவிர
தூங்குபால்கருகியதறிந்தமலனை நூக்கி. (௰௧)

ஓடிவந்து நோக்குறு பொழுதுள தயிர்த்தாழி
சாடிவீதியிற் றவழ்சிறு பாலரைத்தான் கூஉய்
நாடிமற்றவருடன் சிதறிய வெண்ணெய் நயந்து
கூடியுண்டனன் கொள்ளைசெய் தாயிடைக் குறுகி. (௰௨)

பாலெலாஞ் சிந்திப்போயவே யெனவுளம் பரிந்து
சாலமீண்டனள் கண்டன ளுடைதயிர்த் தாழி
ஏலும் வெண்ணெயுந் தயிரும் போயின வெனவிரங்கி
மாலின் மேலுடைத் தானென மனங்கொதித்தனளே. (௰௩)

இனையன் போற்புரி வாருலகத் தெங்குமில்லை
மனைக டோறுமிப்படிச் செய்வா னெனவுள மதித்தங்
கனையர் சொல்வதும் பொய்யன்றித் தீங்குசெய்பவனை
நினைவிலேபய முறமிகத் தண்டிக்க நினைந்தாள். (௰௪)

கையிலோர் பிரம்பைக் கொடுகண்ணன் பாற்கடுக
ஐயனோடின னடிப்பளென்றச்ச முள்ளவன்போல்
வெய்யகோபமோ டவன்றனைத் தொடர்ந்தனள் விரைந்தாள்
மையல் சேருறு கோபிகள் கண்டனர் வகுப்பார். (௰௫)

ஆதியே மிகவன்பு செய்ததினடங் காமல்
தீதிலே மிகச் சிறந்தன னிவனென்று சினமுற்
றோதினார் முனம் யாங்கள் சொல்லுவதெலா முன்னாய்
கோதியாவு நீயுந் தெரிதர வின்று குறித்தான் (௰௬)

எரிதழற்க ணெய்யு குத்தெனக் கோபிக ளியம்பத்
தெரியசோதை மிக்காள் சினங்கொண் டவற்றேடி
இரிய மற்றவ னெங்குங் காணா தொளிந்திட்டான்
ஹரியை நேடினள் காண்கிலாள் மிகவயர் வுற்றாள். (௰௭)

சோர்வு கொண்டன ளுடன் மிகவருந்தித் துண்டத்தில்
வேர்வு சிந்திடத்தாய் நிற்பதைத் தெரிவிமலன்
சார்வு வந்தன னிற்கமற்ற வன்றனைத் தாய்கண்
டோர்வு கொண்டன ளரவிடைப் பிணித்தடித் துரப்ப. (௰௮)

கண்ணன்றன் கரம் பற்றின ளீர்த்தனள் கடுகி
நண்ணுங் கோபிகளுடன் றனதில் லிடைநணுகி
அண்ணறன் மருங்கசைப்ப வோர்தும் பினைய விழ்த்துத்
திண்ணம் யாத்தனடும்பு பற்று றாதுறச் சிறிது. (௰௯)

வேறு தம்புகொண்டுற முடிந்தசைக்க மீண்டதுவும்
பாறு வோனிடைக் கேலுறு திருந்திடப் பரிந்து
நூறுதாம் பலநூறு நூறுயிர மசைத்தும்
ஈறு றுனிடைக் கேலுறு திருப்பவென் செய்வாள். (உ0)

கைசலித்தனை கடுந்துய ருறுவது கண்டு
வைய முண்டவற் கிரக்க முண்டாய் வனைபாசம்
செய்ய தாமிடைக் கேலுறச் செய்தலும் பிணித்து
வெய்ய தாமுர லோடணைத் தசைத்தனள் வெறுத்து. (உக)

உரலிற் கட்டலுங் கோபகன்னிக ளெலா முருத்தித்
தரமிழைப்பது தக்கதிங் கிவற்கெனச் சாற்றிக்
கரமிகப் புடைத்தார்த் தனர்சிரித் தனர்கண்முன்
முரகரித் திருமால் பிணித்தாள் முகமுன்னி. (உஉ)

தீனபாவ மாயினி யிந்தத் தீத்தொழில் செய்யேன்
ஆனவிப்பிணி யவிழ்த்தருள் செய்யென வழுது
தானுரைத் திடவதற் கிரங்கா தந்தத் தாயும்
பானலேய் விழிக் கோபிகைகளு மகம் படர்ந்தார். (உ௩)

என்றுதன் மகனுரைத்தலு மெதிர்பிரே மாபாய்
அன்று கண்கனீர் பெருகுற வழுது கண்ணனையார்
சென்று கட்ட விழ்ப்பாரென மனஞ் சிதறுற்று
நன்று தாழியின் பொருட் டிங்ஙனலி வுறுத்து வதோ. (உ௪)

தகவி தன்றுதாய்க் கெனமனஞ் சலித்தனர் தளர்ந்து
மகனை நோக்கிநான் கோகுலஞ் சென்று மாதவன்றுன்
மிகவருந்து முனிடைப் பிணிய விழ்த்துடன் மீள்வேன்
அகமிருக் கெனப்போ முனராவி தீர்ந்தனரோ. (உ௫)

மாதவா பிணிய விழ்த்திட நானிதோவந்தேன்
பேதுறு யெனப்போ முனராவி பேர்ந்தந்தச்
சீதரன் வயிற்சென்றதை யவரகஞ் சேர்ந்த
சாது சஜ்ஜனர் கண்டிதாச் சரியந்தா னென்றுர். (உ௬)

தாயினும் மிகத் தண்ணளி கொண்டு பிரேமா
பாயி கண்ணனை நினைத்தடைந்தாள் பரந்தாமம்
ஆயிவிங் கிதற்புத மெனவானந்த மகத்தின்
மேய போதலர் தூவினர் துளவொடு விண்ணோர். (உ௭)

கண்டி யாவரும் வியந்தனர் களித்தனர் கண்ணீர்
மண்ட லாயினர் ஜயஜயா காரமாய் வாழ்த்தி
அண்டு தன்னனைக் காங்கரு மங்கண் முற்றுற்றி
விண்டு தாசனாய் விளங்கினன் புத்திரன் மேன்மேல். (உ௮)

பிரேமாபாயி திருவடிகளே சரணம்

ஆகச்சரித்திரம் ௪௮-க்குசெய்யுள் ௩௬௬௯௨0௮

முற்றிற்று

# சிளாபாயி சரித்திரம்.

வேறு.

காவல னொருத்தனுக் கோர்மகள் பிறக்கவக் கன்னிகை தனக்கு நாமம்
மேவுறு சிளாபாயி யெனவைத்து வித்தையும் விரும்பி யேகற்க வைக்க
ஆவலுட னவர்கற்று வருபோது தந்தை சாளக்கிராமப் பூசைசெய்
தோவில னிருப்பதைக் கண்டு தானுஞ் செயவுபாத்தி யாயர்க் குரைப்பாள். (௧)

தேசிகா நின்னையான் வேண்டுகின்றேன் யான்றினந்தொறும் பூசைசெய்ய
மாசில் சாளக் கிராமம் வேண்டு மொன்றுநீ மகிழ்வு கொடு நேடியெற்கு
நேசமுட னீகவென வன்புடன் வணங்கினர் நிகழ்த்தவத் தேசிகன் விறுய்
ஆசிலாச் சரியமிக லாயின னிச்சிறு பெண்ணன் புக்கு நன்றென்னவே. (௨)

ஒருகரு நிறங்கொண்டு ருண்டகல்லைத் தந்து வந்திதைப் பூசியென்று
தருதல் செயமற்றதைத் தான்கொண்டு மிக்க சந்தோஷந் தழைத்து நாளும்
மருவுதந் தந்தைசெய் வதுபோல வுதயத்தெழுந்து நீராடி வந்து
கருது மந்திர மின்றி யன்பு கொடுபூசனை கருத்துற நடத்தி வந்தார். (௩)

இன்னபடி பூசனை யியற்றுவதை நெடுமா லினித்தறிந் தக்கல்லிலே
மன்னி யுறுநை வேத்தி யங்களையு மன்புகொடு மகிழ்வுடன் கொண்டிருந்தான்
அன்னை யொடு தந்தை யுமறிந்த தனைநம் மகள்செய் கிறதாட லென்றிருந்தார்
பின்னையக் கன்னியார் புஷ்பவதி யாகலும் பெற்றவர் மகிழ்ந்து பின்பு. (௪)

தங்குலத்தொருவனை விசாரித்தவன் கொளத் தந்தனர் மணஞ்செய்துபின்
அங்கவர்த மாமிவீட்டுக் கணுகலான போதனு தினம் பூசைசெய்யத்
தங்கினதை யுறுபேழை யொடுகொண்டு தம்பதி தனைத்தொடர்ந் தேகிமுதனன்
இங்கிவர் முனம்போலி யற்றினர் தனிப்பூசை யேகுவழிய தனின்மாதோ. (௫)

பூசைசெய்வது கண்ட புருடனீ தென்னெனப் போந்தவுற்று ரனுதினம்
ஆசையுடனே செய்வ தாமிதென மற்றவ னறிந்து பூசைக் கருகியோ
பேசிவ ளெனக்கொண்டு தெரிவுறு தாற்றிடைப் பேழையி லிருந்தன வெலாம்
கூசிடா தெறிதல் செய்தவரு டன்றங்கினன் குலவியவ் வூர்தனிலரோ. (௬)

மறுதினக் காலையிற் கன்னியா ரொழுதரு வழக்கத் தெழுந்து நானம்
குறைவற வியற்றிவந்தே பூசைசெய்யக் குறித்தபோதப் பேழைதான்
உறைவிடத் திலதாக வுள்ளத்தின் மிக்க ஞருறக் கொண்டெனது பேழையை
மறைவு செய்தவரா ரெனத்தியக் கத்தொடு வருந்தின ரருந்திடாமல். (௭)

தொண்டரித யத்தெழுதல் போலவேகை யிடைசுமக்க வூன்றித்தொழுமெனுப்
பண்டரி புரத்திலெழு பாண்டுரங்கா செய்ய பதும நாபா பண்ணுடன்
வண்டரின மேய்துளவ மாலைமார்பா நிகரின் மதுசூத னவாமனு
அண்டரியதேவதே வாவச்சுதாபக்த ராதரா வருணின்மலா (௮)

ஏதுகுறை நேரிட்டதோ வென்னைவிட்டுநீ யேகற் கெனவிரங்கி
மாதுயருடன் கண்கணீர் பெருகயா னின்னைவந்தனை செயாத வனியின்
மீதுயிர் கொடுற்றி டேனென்று பற்பல படி விளம்பிப் புலம்பு தலுறும்
போதுமாமன் மாமிபுருட னுற்றேனீ புலம்பு கின்றனை போனதால். (௬)

என்று பற்பலவித சமாதான மோதியுங் கெனுமதற் கிசைவுறாமல்
துன்று மென்சாமியைக் காணாது ஜலபான முஞ்செயே னென்று துவளா
அன்று முதனாலு நாள்வரையு முபவாசமாயி னரைந்த தானநாளின்
ஒன்றுமுதயத்தின் முன்னேருக்கு மணிநாத னுவருளத் துறுதியோர்ந்து. (௭)

கல்வியவருக் குரைசெய் தேசிகன் போலவர் கனவில்வந் தவர்கையுறப்
பல்விதமு முறுபேழையைத் தரவிழித்ததைப் பார்த்துச் சிளாபாயியார்
வல்விரைவுடன் சென்றுநானஞ் செய்துடன் வந்துமால் பூசைசெய்ய வரசன்
செல்வியர் தமைக்கண்டு பேழையி லிருந்தன சிதர்ந்து நதிசேர்வு செய்தேன்.

அவையெலாஞ் சேரநீர் முழுகியெவர் கொண்டுதந் தாரிவட் கென்று மகிழ்நன்
நவையற வியந்தி வடன் மனநிலே தெரிந்து ஜகநாதனே யருள்செய்த தாம்
இவையலது வேறில்லை யென்றனுத பித்துட னிசைந்து மாலடியனுனன்
குவைமகிழ்வு கொண்டுள சிளாபாயியோடு மகிழ்கூடி வாழ்வுற்ற னனரோ. ௭௨

சிளாபாயி திருவடிகளே சரணம்.

ஆகக்சரித்திரம் ௬௬-க்குசெய்யுள் ௩௭௬௬௭

முற்றிற்று.



# சமர்த்த ராமதாசசுவாமிகள் சரித்திரம்.

வேறு

கங்கைக்கஞ்சுகோ சுக்கிப்பாற் சாம்பெனக் கருதூர்
தங்குற்றேூர் குலகருணிக ரில்லறஞ் சார்ந்தோர்
துங்கத்தார் பரமார்த்தத்தைச் சாதிக்குந் துணிவோர்
பொங்குற்றன் பொடுசாதுக்கள் பூசனை புரிவோர். (க)

ஆயுநான் மறையந்தணர் திலகர்த நாமம்
தேய்வில்சூரி யாஜிபண்டித ரவர்மகிழ் தேவி
ஏய்வதாம் பதிவிரதசி ரோமணி ரேணு
பாயிமற் றிவரிருவரும் பானுவா ராமுன். (உ)

எழுந்து நித்திய கருமங்க ளியற்றிநீ ராடிச்
செழுங்கதிர்க் கடவுளைக் குறித்தெண் ணிருசெயலின்
மொழிந்தபூசனை முற்றியா தித்தவிர் தயத்தை
அழுந்துமன்பிற் பாராயண மாற்றியபின்பு. (௩)

ஒருமையானநெஞ் சுடன்பரி தியைப்பெரி துன்னி
மருவுதீர்க்கவந் தனமொரு சகத்திரம் வகுத்துப்
பரிதிநாமமோர் பன்னிரண் டாயிரம் ஜபித்து
வருவதாயினர் பன்னிரு வருடமிவ் வாறு (௪)

பின்னரோர் தினமவ்விதப் பூசையிற் பிறழார்
மன்னுபோதெதிர் வந்தன னருளின்மார்த் தாண்டன்
பன்னு சூரியாஜி பண்டிதரின்பொடு பணிந்து
துன்னுதம் மிருகரங் குவித்தெதிர் நின்றுது தித்தார். (௫)

இரவி யுண்மகிழ்ந் துனக்குவேண் டியவர மென்பால்
கரவிலாதுகே ளெனச்சொலக் கதிர்தனை நோக்கி
விரவுநின்றரி சனத்தின்ப மிகவிளை வுற்றேன்
பரவுமென்மனை யாள்மகன் வேண்டினள் பரிவாய். (௬)

அருளுகென்னலும் ரேணுபாயி யுமடிவணங்கிக்
கருதிவேண்டிடக் கதிரவன் களிமகிழ் சிறந்து
மருவுவாரிரு புத்திரர் நுங்கட்கென் வரத்தால்
இருவர்தம்மின்மூத் தவனென தம்சமா யியல்வான். (௭)

இல்லின் வாழ்க்கையி லெய்திமற் றவனெந்த வறமும்
நல்லநீதியு நடத்துவான் பரம்பொரு ளண்ணி
அல்லனீங்கிளை யவன்விறன் மாருதி யம்சம்
புல்லலாய்வயி ராக்கியசீலனுய்ப் பொருந்தி (அ)

ஞானமேபிர பலமுற ஞாலத்தை யெல்லாம்
தானுத்தா ரணஞ்செய்வ னென்றருள்செய்து சார்ந்தான்
வானமெய்தலு மிருவரு மானந்த மருவி
மேனவின்றுள படிதினம் பூசனை விளைத்தார். (௯)

இரதசத்தமி யுற்சவ மேழுநா ளியற்றி
விரதமாய்க்கதிர் வாரத்தில் வேதியர்க் கருத்திச்
சரதமாய்வரு காலத்திற்கருவயிற் சார்ந்தார்
சுரதமேவிய ரேணுபாயானசுந் தரியார். (௰)

மதிநிரம்பநற் றினந்தனின் மைந்தர்வந் துதிக்க
அதிகவன்புட னவர்க்குக்கங் காதர னொன்றும்
துதிநி ரம்புபே ரிட்டுநா டொறும்வளர்த் தேழாண்
டெதிர நன்குப வீதமென் மணமினி தியற்றி (௰௧)

வித்தை கற்கவுஞ் செய்துபின் விதிப்படி மணமும்
உத்தமத்தினத் தியற்றினர் பின்புரேணு பாயி
சுத்தநற்றினந் தனிற்பெற்ற சுதருக்கு நாமம்
வைத்ததாயது நாரணனெனவழங் குவதே. (௰௨)

இளவலானவச் சேய்க்கிறை வாலிருந் ததுகண்
டளவளாவினர் வியந்தனர் தந்தைதா யானோர்
வளம்வி ராவொளி யோன்சொன்ன மாருதி யம்சம்
கிளர்வதாயது சிறிதென வெண்ணினர் கெழும (௰௩)

வெளியிடார்மறை யாகவே கொண்டுளம் விளங்கத்
தெளிதுநாடொறும் வளர்த்தனர் சேயையச் சேயும்
களிதுளும்புற வளர்வுழி யனைக்கண மேனும்
எளிதிராதினி தாடல்செய் தெங்கணுந் திரியும். (௰௪)

திரிதல்கண்டந்தச் சேய்தனைப் பெற்றதாய் சிறுவா
மருவியெங்கணுந் திரிதரே லகத்துளே வளர்தி
வெருவினீவெளிச செல்லிற்பூச் சாண்டிமேவுறுவான்
ஒருவனஞ்சுதி யெனப்பய முறவுரைத் திடலும். (௰௫)

உரைத்ததாய்முக நோக்கிப்பூச் சாண்டியெங் குறுவான்
விரைத்துமற்றவன் றனையெற்குக் காட்டுதி மேவில்
இரைத்தொ ரேயறை யாற்கொன்று விடுகிறே னென்னச்
சிரித்துத்தாயந்தச் சேய்தனை மார்புறத் திளைத்து (௰௬)

மிக்கவன்பொடு வளர்ப்புழி யடிக்கடி வெளியே
புக்கலைந்தினி தாடல்செய் தகம்புகு பொழுது
தக்கதாய்வெளிச் சென்றிடே லெனவெளிச் சார்தி
இக்கடுந்தொழி லென்னெனச் சேயினி திசைக்கும் (௰௭)

மனையிலேயினி துறமன மெனக்குவந் திலதென்
றனைமுன்சொல்லலுங் கல்லெனச் சிறித்தந்த வன்னை
தினைய மென்மழலைச் சொற்கனிரம் புற நிரைத்துப்

ஆண்டைந் தாகலும் வித்தை கற்கச் செய வாண்டொன்
றீண்ட வெவ்வகைக் கலைகளுங் கற்றுணர்ந் தியன்றூர்
நீண்ட நூன்மண நிரப்பின ராண்டொரேழ் நிரம்பப்
பூண்ட முன்னவர் புத்தியிற் சிறந்தனர் பொருந்தி. (௧௯)

மனையறந் தனிற்குறைவற நடத்தினர் வந்து
தினமுஞ் செய்கடன் செய்து வேதாத்திய யனமும்
அனக நீடரி பூசையு மரிய கீர்த்தனமும்
இனிதியற்று வர் தந்தை தாயே வலுமியல்வார். (௨௰)

பன்னரும் பரமார்த்தமுந் தெரிந்தனர் பரவி
நன்ன ரோங்குறு நாளிலோர் நாளச் சுவத்தத்
தின்னடிக் கணுற்றி ராமநாமஞ் செப்பு கிற்க
முன்ன ரெய்தினன்ற சரத குலத்துறு முதல்வன். (௨௧)

கிரீட குண்டலந் திவ்ய பீதாம் பரங்கெழும
மரிய மற்றைய வாபரணங் களும் வயங்க
வரிய கோதண்டத் தொடு ஜனகன் மங்கை மருவ
உரிய தம்பியு மனுமனுந் தொடர் வுற வுறலும். (௨௨)

கண்டு கண்களி கொண்டுடன் வணங்கினர் கருதி
மண்டு தோத்திரம் வழங்கின ருடல் பரவசமாய்
மொண்டு பெய்தெனக் கண்கணீருடம் பெல்லா மொய்ப்ப
அண்டு கின்ற வானந்தத் தோடருகு நின்றனரே. (௨௩)

நின்ற போது கோதண்டக்கை நிமலன் மாருதியை
ஒன்ற நோக்கியிங் கிவனை யுள்ளத் திலொருங்கே
நன்று கொண்டதின் ராமிராம தாசனென்றி வனுக்
கின்று பேரிட்டே னென்ற பயந்தந் தேகினனூல். (௨௪)

பின்பு வீடிவர் வந்த பின் பிதாவவர் தம்மை
முன்பு சென்ற நீயிது வரை முயன்ற தென்னென்ன
இன்பு கொண்டங்கு நடந்த தெல்லா மினிதிசைத்தார்
அன்பு கொண்டு பண்டிதர் மகன்றனை யினி தணைத்தார். (௨௫)

தந்தையின் புறத்த கும்பக்கிரச மெனுங்கிரந்தம்
சிந்தை கொண்ட மைத்திராம நவமியொன் பான்றினமும்
விந்தை யாயுற் சவஞ்செய்து நித்தம் வேதியர்க்கு
முந்தை யோர் முறைபோஜனஞ் செய்வித்து முடிவில். (௨௬)

பத்தெனுந் தினம் லலிதமாய்ப் பதிவலம் வந்து
சித்தெனும் பரமார்த் தத்தின் மனந்தினஞ் செறிந்து
பித்தெனும் பிரபஞ்சத்திற் றேகத்தைப் பெயர்த்து
வித்தெனுந் திருமாலரி பஜனையில் விழைந்தார். (௨௭)

என்றுமிப்படி யிடை விடாதுறவி வரிளவல்
துன்றும் பன்மரந்தொறு மினி தேறினர் தூங்கி
நின்று பல்வினை யாடல்கள் புரிந்தனர் நிகழ்வை
நன்று தாய் தெரிந்திவ்வித நன்றன்று நந்தா. (௨௮)

யாதெனுந் தனதானிய மீட்டிடு லன்றோ
தீதறுங்குணத்துத் தமவனி தையைத் தேடி
நீதநன் மணஞ் செயத்தகு மென நிகழ் மறுநாள்
ஆதவன்வரு முன்னெழுந் தூரரு கான.

நெற்களந் தனிற் சென்றவனொருங் குறு பொதியில்
ஒற்க மின்றொன்றைத் தூக்கிக்கால் வேகத்திலோடி
இற்கண் மேவுதிண்ணை யில்வைத்துத் தாயைக் கூவிதோ
எற்கறைந்தது செய்த னென்காணுதி யென்றார். (௩௰)

என்று முன் குடியான வனிவர் பின்னே யெய்தித்
துன்றுதாய் தனை நோக்கி நுஞ்சுத னென்னெற் பொதியைத்
தன்றுரங்கொடு தூக்கி வந்தனனொரு தமியன்
பன்னு கின்ற தென்னிருவர் தூக்கற் படாத தென. (௩௧)

நுவலுமக் குடியானவன் முகந்தனை நோக்கித்
தவலறுங் குணரான நாராயணசாமி
சவலமின்றி யேன் சலசல வெனப்புலம்புகின்றாய்
அவலமின்றுன தேற்கொடு செல்கென வறைந்தார். (௩௨)

எனவுமக் குடியானவன் சிலர் தம்மோ டெடுக்க
அனகனெற் பொதிக்கீழொரு பொதியுற வதுவும்
பினரெடுப்பது மன்றியும் பொதியின் கீழ்ப்பெரிது
தனலறிந்தனர் தூக்கினர் தூக்கினர் துவண்டார். (௩௩)

வியந்து மற்றிவரோவ வதார மேதக்கோர்
உயர்ந்த வுத்தம ரெனவ வருபய சேவடியை
நயந்து போற்றினர் சென்றனர் பின்பு நாரணரும்
பயந்த நெற்பொதி மனை யகப்படுத்தினர் பண்பாய். (௩௪)

அந்த நல்ல மயத்திற் பண்டிதர் வர வவர்தம்
சிந்தை தேர்வுற நெற்பொதிச் செய்கையைத் தெரித்து
மைந்த னேவவதாரி யென்றியம் பினர் மாதா
தந்தை கேட்டுளம் வியந்தனர் மணஞ்செயச் சமைந்தார் (௩௫)

தகுந்த கன்னிகை தனை விசாரித்தனர் தாவா
துகந்து நன்மண மண்டப முதலியவுளுற்றித்
திகழ்ந்த மஞ்சளுந் தேவதா பூசையுஞ் செய்து
மகிழ்ந்திரண்டு நாளுறவினர் தம்மொடு மறுநாள். (௩௬)

மங்களஞ் செறிபல்லிய முழங்குற மாலை
பொங்குகின்ற கோதூளிலக்கினந் தனிற் புனைந்து
தங்கு கின்ற மண்டபந் தனில்வது வரர்தம்மை
இங்கிதம் பெற நிறுத்தின ரியற்றுவ வியற்றி. (௩௭)

இருவர் நாப்பணிற்றிரை யிட்டு மறை யவரெல்லாம்
மருவி மங்களாஷ்ட கஞ்சொல மாடுதம் பதிகள்
ஒருவிலாசிகள் கூறியகூதையினி துய்க்க
வருபுரோகிதர் வகுத்துறு மங்களாஷ்டகத்தில். (௩௮)

சாவதான மென்றடிக் கடிசாற்று தறன்னை
மேவு நாரணசாமி கேட்டருகின் மேவுறுவோர்
தாவிலாமுக நோக்கிச் சாவதான மென்றுரைப்ப
தாவதி யார்க்கென மைத்துனர் விநோத மாயறைவார். (௩௯)

இன்று தொட்டு நுங்காலிலே பவபந்த மென்னத்
துன்றுறுந்தனை விழுகின்ற தினிமனஞ் சோரா
தொன்று கின்றது வேண்டு நுந்த மக்கெனவுரைக்க
நன்றறிந்த நாராயணசாமி யுண்ணடுங்கி. (௪௰)

என்னைத் தாய் தந்தை யானவர் பவ பந்தத்திடுதல்
தன்னைப் போதரக் கொள்வது தகுவதன்றெனப்பூ
மின்னைத் தோய் நிறத்தானடி யுட்கொடு வேழ
முன்னைக் காத்தருள் பவன்றனைப் பல துதி மொழிந்து. (௪௧)

அங்கு நின்ற திவிரை வுடன் வெளிச்செறி வாகிப்
பொங்கு பாதவக்கானிடைப் போய்ப்புக்கு மறைந்தார்
இங்குறைந்தவர் யாவரும் பின்றொடர்ந்தேகி
எங்குங்கண்டிலர் நாடிமிக் கனாரணரிடையே. (௪௨)

தாயுந் தந்தையு மாற்றி லரனரிடைத் தளர்ந்து
வாயுங் கண்களும் வறளிட வழுதனர் மாழ்கிச்
சாயுந் தன்மையராய்க் கதறினரவர் தம்மை
ஏயும் பல்கிளைஞரு மெடுத்தாற்றின ரிரங்கி. (௪௩)

தந்தையிற்புகத் தாயுந் தந்தையுந் தளர்ந்துள்ளம்
நொந்து சோர்வதைக் கண்டுமுன்னவ ரங்குறுவல்வார்
இந்தநாரணன் மாருதி யம்சமா யிசைந்து
வந்துளானவ னுக்குநீர் மணஞ்செய மதித்தீர். (௪௪)

அதனா லவனெறப்புறந் தெங்ஙனே வடைந்தான்
நிதுறு னவனெங்குஞ் சென்றுலு மேதினியை
நிதமாக வுத்தரிக்க வந்தவனென்றே நினைமின்
றொதனிங்குறின் சிலதினத்திங் கவனுழைவான். (௪௫)

என்றகேட்டவர் மெய்யென வொருவிதத் திரங்கல்
தன்னை நீத்தனராயந்த நாரணசாமி
முன்னர்ச் செய்வினை பாடல்கள் யாவையு முன்னிப்
பன்னிக்கொண் டிருந்தாரங்குப் பற்பல நாளும். (௪௬)

வேறு.

வலையகப்பட்டமானவ் வலைதப்பி மறையுமாபோல்
சலைநிரப்புறுதம் முள்ளங் களித்துக் கானகத்துட் போம்போ
துலைவுறுத் துழுவையெண்கு முதலுயிர்க் கூறுசெய்து
கொலையுறுத் துவன கண்டுங் கூசுறா தினிதுசென்றார். (௪௭)

சென்றவர் பசிதாகங்க ளோர்ந்திலை ராக்யசீலம்
துன்றினர் மனங்களிந்து சுவாமியை நினைத்தெப்போது
நன்றருளெனக்குச்செய்வா னெனநனி நயந்துபோற்றி
யன்றிற லுதனின்மிக்க மாருதி தனைத்தியானித்து. (௪௮)

பலவிதத் துறப்புகழ்ந்தும் பரிந்துதன் னருகில்வந்து
குலவருள் புரிகிலாத கொள்கைகண் டியானேசிவன்
நிலவுறு சுகத்தில்வைக நினைப்பதி னாலேநோரார்
உலவைதன் மகனொன்ன வுன்னின னொருபாற்சென்று. (௪௯)

கொடிகளை யறுத்துவந்து குதிக்குமேற் காலிற்கோத்து
நெடிதொரு மரத்தோர்கொம்பி னேருறப் பிணித்து நீள
முடியது கீழதாகத் தூங்கிமா ருதியைமுன்னிப்
படிபுகழ் தாநின்றேங்கு கீர்த்திகள் பலவுஞ் சொல்வார். (௫௰)

கடல்கு ளப்படியதாகக் கடந்துஜானகியைக் கண்டு
சுடரன விலங்கை யூட்டித் தொடுசிரஞ் சிவியாகிப்
படர்தெறப் போய்ச்சஞ்சீவி பருப்பதங் கொணர்ந்து காத்த
அடன்மிகு திரடோள்வீரத் தஞ்சனை சிறுவீரொன்று. (௫௧)

அடியரைக் காத்தற்காக வல்லவோ நிலத்தெந்நாளும்
முடிவற விருத்தினன்சீர் முந்துகா ருத்தனும்மை
நெடிதிதை மறந்துளீரோ நீரெனப் பலவாறேத்திக்
கடிதென்முன் றோன்றிலீரேற் காயத்தைக் கழிப்பேனென்ன. (௫௨)

அவ்வள வனுமனோர்ந்தங் கவருறு தீனபாவம்
செவ்விதிற் றெரிந்து காலிற் சேர்த்துறு பிணியைத்தீர்த்து
வவ்விமார் பணைக்கக்கண்டு மகிழ்ந்தடி வணங்கி யாங்கோர்
திவ்விய வபங்கத்தேத்து நாரண சாமி தேற. (௫௩)

நோக்கியஞ் சனைதன் சிங்க நுவலுநீயோவென் னெஞ்சம்
ஊக்கினை பிறந்துளாயிங் காதலா லுனக்கிராம
பாக்கிய மினிதுண்டாகப் பண்ணுகின்றேன்யா னென்று
நீக்கில தங்கைகொண்டு நீள்பஞ்ச வடியைச்சேர்ந்தார். (௫௪)

பொழுதுபோ யினபோதங்குப் பொருந்திய ராமகுண்டம்
முழுகுதல் செய்துசெய்யு நியமங்கண் முடித்துக்கொண்டு
நழுவில தன்றிராம நவமியா தலினல்லோர்தம்
குழுநனி வந்துகூடிக் கோதண்ட பாணிகோயில். (௫௫)

மிருதங்கந் தாளநல்யாழ் வீணைகின்னரி முழங்க
வருதுங்க வனுமனீண்டு வளர்கொடி விளங்கப்பாடல்
அருடங்கு மாடலோடு மமர்வது தெரிந்தங்கோர்பால்
கருதங்கு வந்தோர்மீளுங் காறுமன்னினர் துதித்து. (௫௬)

நவமியுற் சவங்கொண்டாடி நணுகின ரொல்லாஞ்செல்ல
அவளவி லனுமன்றா நாராயண சாமிதன்னைக்
கவர்தொடு கோயிற்கர்ப்ப கிரகத்துட் கலந்துகாமர்
பவர லங்கிரதத்துற்ற பரமனைப் பணிந்து பார்த்து. (௫௭)

அடித்தலத் திறைஞ்சியேத்தி யன்புமிக் கிருகை கூப்பிப்
படித்தனர் புகழ்ந்து நிற்கப் பரமனங் கருளிப் பார்த்து
முடித்துள சேதுகாத்து முயலுநீ யாதிச்செய்கை
பிடித்திவண் வந்தாயென்னப் பிரான்முக நோக்கிச்சொல்வார். (௫௮)

பின்பிருவரு மிராம பிரானடி வணங்கிப் போற்றி
அன்புகொண்டங்கு நீங்கியனு கினர்டாங் களிக்கண்
இன்புற விராமகாதை யினிதுமாருதி நன்கோதத்
துன்பற வினிதுகேட்டுச் சுகானந்தக் கடலின்மூழ்கி. (௬௯)

தாசரன்றிர விராமநாமசங் கீர்த்தனங்கள்
நேசமோட மர்ந்துபாட யாவரு நிரம்பக் கேட்டுப்
பூசனைபுரிய நாளும்புரிந்தனர் பஜனை யோர்நாள்
வாசநாண் மலரோனுகு மாருதி வழுத்து கின்றார். (௭௰)

நானுனைத் தொடர்ந்து பன்னாண யந்துட னுறைந்தேன் மேல்யான்
வானுயர் சேதுக்கேகல் வேண்டு மென்னலும் வந்தித்து
மீனுயர் கொடியினானை வென்றநுந் தமைப் பிரிந்து
யானுறச் சகிக்கி லேன்பின் னடைகுவெ னென்று பின்னும். (௭௧)

தீன நல்வசனத்தோடு திகழ்பஞ் சவடியிற் றீர்த்தன்
ஆனநும் வசத்திலன்றோ வெனையொப் புவித்த தன்று
தானமை வவ்வாறாகச் சாமிநீ ரெனைவிடுத்து
மௌனமாகுதல் வழக்கோ வெனவிளம் பினர்நற்றாசர். (௭௨)

என்றவர்தம்மை நோக்கி யெனைக் குறித்தினைதல் வேண்டாம்
மன்றலந்துளவோனானை வருவி பீடணருக் காகத்
துன்றனை யிருந்து காக்கச்சொனபடி சூழ்தல் வேண்டும்
ஒன்றநீ நினைத்த போதங் குறுவன் யானுன் பாலென்றார். (௭௩)

பின்னரு மிராம தாசகே ளனப்பிழை யொன்றில்லார்
நின்னடைந்த வருக்கெல்லா நீயனுக் கிரகஞ் செய்ய
மன்னு தென்றிசையை நோக்கி வருதி நீ ஜனகி கேள்வன்
றன்னை யுள்ளிடை விடாம லெனுமவர் தமை வணங்க. (௭௪)

தழுவி நன்காசி கூறிச் சதாகதி தனையர் தம்பாற்
கெழுதலு மிராமதாச ரதுமுதலெதிர் நாடோறும்
வழுவில ருதய நானம் வகுத்தரி பூசைசெய்து
தொழுது பின்னைய மேற்றுமறை யவரோடு துய்த்து. (௭௫)

இரவரி பஜனை மாருதி யற்ற நாசிக மென்றோதும்
புரமரு வினரு மவ்வூர் பொருந்துறு வோருங் கேட்டுத்
திரமிகவன்பு கூர்ந்து சீரரி நாமஞ் செப்பற்
குரமிக லானார் மற்றை யவரிலுத்தவ ரொன்றுள்ளார். (௭௬)

மறைக் குலத்த வரிராம தாசர்தஞ் சரணம் வாய்ந்து
துறைப்பட வவர்தஞ் சீலந்துணிந்த னுக்கிரகஞ் செய்தார்
முறைப் படுத்தவர் பற்றற்று முழுதுந்தே சிகர்தஞ் சேவை
இறைப் பொழுதகல் வுறுமலி ராமனைப் பஜித்து வந்தார். (௭௭)

ஒருதினத் திராமதாச ருன்னின ராஞ்ச னேயர்
திருவுரு வமைக்க வாதரேயவ ணடைந்திம் மூர்த்தி
மருவுறத் தாபியென்று மற்றதிற் பிரவேசித்துப்
பெருகுற விளங்க லானார் பேணின ராமதாசர். (௭௮)

வேதியர் சூழக்கூட்டி விதிவழி மூர்த்தி தன்னை
நீதியி னிறுவியன் பினிமலமஞ் சனநீராட்டல்
ஆதிய சோட சோபசாரமு மமையச் செய்து
தீதிலது றுசமா ராதன நன்கு திருத்திப் போற்றி. (௭௯)

இரவுற மருத்தின் மைந்தரின் கதை ராமகாதை
பரவு கீர்த்தனத்திற் பாடிப்பரிதி தோன்றுறு காலத்தில்
விரவுமாரதி செய்திந்த விதந்தினந் தொறு நாடாத்தி
வாலறிந் தெவரும்வந்து மாருதி சேவை செய்வார். (௮௰)

இவ்வகை வருநாளுத் தவளையழைத் தின்று தொட்டுச்
செவ்வை சேருத யந்தன்னிற் றீர்த்த நீராடிப் பூசை
எவ்வ மின்றுற்றி வாயுவின் சுதற் கூரிற்பிச்சை
கைவரக் கொண்டு நேருமதிதியர் களுக்கு மிட்டு. (௮௧)

நீயுமுண் டிடை விடாம னெடியமால் பஜனைசெய்தி
எயுனைச் சரணமெய்து மவர்க்கினி துபதேசித்து
வாயுறுதியி னென்றோத மற்றவர் சரணந் தாழ்ந்து
தாயுற ழருள் கொண்டென் னுட்டங்கி நீர் நடாத்தல் வேண்டும். (௮௨)

உமதரு ளன்றியேதுமு ளுற்றுத லென்னுற் கூடா
தமல சற்குருவே யென்னவவர் நன்றென்றுசி கூறித்
தமநிசி தனியெழுந்து சார்ந்தனர் தென்பாற் கானம்
நிமல வுத்தவ ருறக்க நீத்துச் சற்குருவை நேடி (௮௩)

கண்டிலர் வருந்தித் தேசிக ருறுநேர் காறுநோக்கிக்
கொண்டுறைப் படிநடந்து கொடுவந்தாரி ராமதாசர்
மண்டுறு காட்டிற்போந்து மால்பஜ னையைவிடாது
தண்டுத லின்றியாங்குச் சரித்தமை தனைச்சொல்கிற்பாம். (௮௪)

வேறு

உதிருகின்ற சருகொடு பழங்களினிதுண்டு நித்திரையு முற்றபோ
தெதிர்வுகொண் டொரிடமெய்திவன் மிருக மெவைகளும் மருகிலினியதாய்
முதிரு மன்புகொடு வினவிநன் பஜனைமொழிதல் கொண்டுற முயங்கியே
துதிகொள்கின்ற பலதலமெலா மருவியங்கு மால்பஜனை சொலியுமே. (௮௫)

புகழ்ஜரா டெனுமொரூ ரடைந்துவளி புத்திரர்க்குரிய கோயில்போய்
மகிழ்வுடன் பெரிதுசேவை செய்து விடைபெற்று மாவுலி நகர்க்குவந்
திகழுவில்கண்ண னதிமூழ்கி நேமமுமியற்றிமா ருதியை யெண்ணலும்
திகழுவந் தனர்சதா கதிக்குரிய சேயர்தாசர் தரிசித்தரோ. (௮௬)

ராமசேவை தனிலிச்சை யெற்குளதெனப்புன் மூன்று திருவக்கரத்
தாமமூல மறையைத் தனித்துறைதலாகி மூன்றனாகொள் கோடிநீ
நேமநே ருருவியற்று வாயெனி னினக்குநேரு நிமலன் னெனுத்
தாமறைந் தனர்பின்ராம னைக்கருதி மறை ஜபித்தனர் தனித்தரோ. (௮௭)

ஊணுறக்க மிலராய கோரதவ மின்னவா றிவருளுற்றுநாள்
சேணிருக்கு நகரிந்திரற்கு நனி சிந்தையிற்பயம் விராவிநீள்
மாணுடைக் குருவைநோக்கி மண்ணுலகில் வழுவினற்றவ மியற்றுவோன்
கோணினைப்பெரிது குறித்தியாவனவ னெனவினுவவிடை கூறுவார். (௮௮)

உத்தரிக்க வுலகத்தை மாருதியுதித்திராமனை யுளத்துளே
வைத்தருந்தவ மியற்றுகின்றன னெனத்தெரிந்து தனிவாசவன்
மெய்த்தவித்தவ முடிக்கினம் மிலைவன்மேவு மோவென வெருண்டுதான
அத்தவத்தினை யழிக்கமோ கினியை யருகழைத்து நினைவறைகுவான். (௮௯)

சத்தியம் சமதுபெற்ற நீயுலகுதனை மயக்க வலையல்லவோ
இத்தனத்தின் மணி லெய்திரா மனடி யெண்ணு வோனுனை யிணங்குறும்
பித்தி யற்று கென வேவியையங்கவனை பிடிக்கு மாரனை யழைத்து நின்
சித்திரப் பொழிலெனச் செய்தவ்வன மதைத் தவஞ்சிதைவு செய்கெனு. (௯௰)

எவமன் மதனவ்வன மெலாமினிய வாசம் வீசி நிறை வெய்துறப்
பூவலர்ந்து கனிபொழிய வாவி புனல் பொங்க மந்தவளி பொலிய முன்
மேவமென்குயின் மகிழ்க்க வின்குடை விளங்க வண்டொலி விராவமென்
காவகங் கொள்க முருதவுபானை மினிர்கவரி வீசி யொளி கவினவே. (௯௧)

அன்றிலோர் புடையாற்ற மென் மலர் சோகு இலிகைகளாக மென்
மன்றன் மேவி யொளிர் சண்பகந் திகழ மல்லிகைக் கடிமணம் பொறக்
துன்றிரும் பொழிலிரா வெனச்செறிய விரை செய்தாழை மடலுன்ன நீள்
வென்றி செய் மகளிரான சேனை நனியேய மென்கிளி விராவவே. (௯௨)

வேழவில் வனைவு மேவ நாரியிடை விரவு பூவிசிக மைந்திளல்
ஆழமார்பிலொரு ராமதாசர் மிசையழுகி யெய்தனன வேளையில்
யாழ இன்னிசையம்ப மோகினியு மெய்தியாக வொளி யெங்கனும்
சூழமம்மர் மகிழ் துன்னலாம் வடிவு துவள மின்னிடை சுருங்கவே. (௯௩)

தன தடங்கிளர்வு ஆமுசம் பொலிவு தங்க மென்னடை ததும்பமப்
வனமிருந்து பிரமாதி தேவரு மயங்க வின்னிசை வழுத்திலள்
அனகரங்க வையறிந்து தம்முனை யாகியேது மனமசையவு
துனலுறுந்த மதியோக மாநிலை யிலுற்றிருந்தனர் முனெறக்கவே. (௯௪)

கண்டு மேவிய விரிஞ்சனு தியர் கலங்குறு நிலைமை கருதுதற்
கண்டு ருதிது வொரற்புதற்புத மெனப்புகழ்ந்து தவராக மேல்
மண்டு பூமழை பொழிந்து போயினர் மன் மதனுமோகினியு மாழ்கியே
விண்டு சென்று மகவான் முனேதலை குனிந்து நின்றனருள் வெள்கவே. (௯௫)

நாணி யிந்திரனு மங்கிருக்கவிவண் ராமதாசர் வளிநந்தனைப்
பேணி யுன்னுற வெதிர்ந்துளார் பிரமனுக மேதகவு பெற்றுளோர்
மாணியானவவர் தாள் வணங்கி யுறவந்த தோதலு மகிழ்ந்து நீ
ஆணியாணியுலகுக்கு நிற்குரகு நாதன்ரக்ஷையுள தாகவே. (௯௬)

என்று கூறியுயராசி நன்கனி களிருவரும் மினிது துய்த்தபின்
ஒன்று மாருதி செலத்தவம் புரிதலுறுதலாயினர் முனெறப்பவே
நன்று பன்னிருசம் வற்சரங்கழிய நவிலு மந்திர நலத்தொகை
சென்று தீர்வுறலும் ரகுகுலத்திலக னெய்தினன் மகிழ் சிறக்கவே. (௯௭)

குண்டலஞ் செவியயர்க மாமகுட முடிகுலாவ நகை முகநிலா
மண்டலங் கவினமார்பி லொண்மணி வயங்குறப்புயவலையமுடன்
வண்டலம்பு துளவஞ் செறிந்து மணம் வரமினைம்படையு மருவவோர்
கொண்டலங் குறலூ முன்பு கண்ட படி கண்டு கொண்டு மகிழ் தரயவே. (௯௮)

தாசர் தாசாதி தாள்பணிந்திடலு மவரை மார்புறத்தழீஇ
நேசமோ டவர்சரீரம் யாவுநிமிர் கைகளால் வருடி நின்மலத்
தேசனாய வருகுற விருத்தமகிழ் செறிவதாகி யிருவிழியுநீர்
வீசலாக வொரபங்கமேகொடு விளம்பினார் துதிவிளங்கவே. (௯௯)

ஜானகிநாதனவர் பேசலிற் களிதழைத்து நீவிழைவதாயதை
வினவுமென்ன ரகுநாத வெப்பொழுது நின்னை யென்னுளம் விளங்கவைத்
துனது நாமமுறை சிவனெனப் பெரிது முன்னியான் கவிகளோதவுன்
றனதருங் கருணை வேண்டு மென்பதை யலாமலாசை பிறதானிலேன். (௱)

எனமகிழ்ந்து ஜகத்ச னன்கபய மினிதுதந் தெவையு மறிவுறத்
தனதுகைய வறிவைக் கொடுத்தருள வவர்மகிழ்ந்து சரணந்தொழக்
கனகவம் பரன்மறைந்து போயின னதன்பினை கருது தாசர்தாம்
உனாதிருந்து தினமருவு கண்ணனதி மூழ்கிவந் தனைபுரிந்து பின். (௱௧)

வேறு

அயனகர் சேர்பதி னொருமலை சென்றன ராயமெய்ப்புழி நின்
ஜயரகுவீர சமர்த்த வெனக்கடை தங்கியுரைத்தருவி
இயல்வன பெற்றுதி திகளு றினல்கிமிகு தியையெடுத் தனர்போய்
வியலடைகட்டு திவேதனம்ராம னடைந்து மிசைந்தபினே. (௱௨)

மிகுதியை யண்டுறு பொழுதில்விராமன் வியன்கதையைக் கவியாய்த்
தொகுதிகள் செய்திலை களிவையாறு புகப்பெய்து துன்னுறுநாள்
தகுதியின் விஞ்சினர் தாமுற லொடு தழைத்துறு சாதார்வாழ்
பகுதியின்வீறு சிவாஜியெனும்பதி பரவினன் வேட்டமரோ (௱௩)

பரவினன்யாம மோர்மூன்றுறுகாறு மலைந்து பசித்தவனாய்
விரவிலவாய வொர்பக்ஷி விலங்குகளொன்று மிகுங்களையோ
டிரமிலனாய் வரும்பொழுதொரு சாரவையுற்றன மொய்ப்பனவாய்த்
திரமிகுதாச ரிருந்ததுநோக்கின னின்று திகைத்தனனே. (௱௪)

ராமநமை நவின்றியனவி னலங்கிளர் மாபுருடர்
ஆமவர்தேசுறு மேனியைநோக்கின னச்சரியங்கிளரா
மாமறு மார்பின னடியரிடத்தணி வந்தனை செயவெணினன்
தீமயவெம்புலி யாதியகண்டிடை சேரநடுங்கினனே. (௱௫)

நின்றவிடத்தி னொடுஞ்சரணஞ்செய்து நின்மலனைத் தனியான்
இன்றய நேறக்குற வாய்ப்புள தாகிய வித்தின நற்றினமே
அன்றயர் மெய்த்தவம் யாதுகொலோவென வன்புமிகுத்தவனாய்
என்றடை யப்படு காறும்விலங்குத லின்றவ னின்றனனே. (௱௬)

இவரருள் யானுற லென்றுகொலோவென வெண்ணி மனத்தினுளே
அவரடியங்கு நினைந்துபணிந்து தனகனகரண்மியுறு
துவரருள் கூடுவ தெங்ஙனமென்னவு சாவியி ராமுழுதும்
கவர்துயில் கொண்டிலன் விடியவெழுந்துறு கரும முடித்தனனே. (௱௭)

சிலபடை கொண்டுமு னெய்துமிடத்தயல் சேர்ந்து பழம்படியே
அலகறுவந்தன மவரைநினைந்தினி தாற்றியொர் யாமமுறு
உலகமளந்தவ னிவரருள்கூர வுஞற்றுவ னென்றுகொலோ
குலவுமெனக்கென வருபொழு தெழுதிலை கொண்டொரு வன்படர்வான் (௱௮)

அதிலுளதொடர்பு படிப்பதுகேட்டர சன்களி மிக்கனறாய்
நதிவரு மிலைபல வுங்கொணர் கென்ன நவின்றன னூழியர்பால்
பதியுமையின்படி படரிலைமுழுதுமெ டுத்தன ருப்பவெலாம்
எதிரொருபுத்தக மாகவமைந்தன னினிதுபடித்தனனே. (௱௯)

கவியினரும்பொருள் கண்டுவியந்து கடைக்கணுறும்பெயர் தோந்
தவிர்புவி காடியொ டமர்பவர்தா மிவரருள் பெறவேண்டுவதே
புவியிலரும்பொரு ளெனநனிபுந்தி பொருந்தின னம்புவியாள்
சவிதவிர் நெஞ்சொடு தினமவர் சாரயல் சார்ந்தெதிர் தாழ்வுறுவான். (௱௰)

இவ்வகையரச னடக்கவமைச்சர்க ளெண்மரு மெய்திநிதம்
அவ்வகை செய்திற லரசனைநோக்கின ரையபிரா கிருதத்
துவ்வகையான கவிக்கண்மயங்கியொர் ஞாதியி லுங்கலைவா
தெவ்வகை யோபயில் வோரிடமேக விழுக்கு நமக்கலவோ (௱௰௧)

திடவுபதேச நலம்பெற வேண்டுதல் செய்வதொனிற் றெளிவாய்க்
கடவுளர் பாவைத் தெரிந்தவராய்மறை கருது நலத்தினரா
மடபதியாயவ ரிங்குளர்பற்பலர் மற்றவர் தம்மிடைநீர்
மிடலுபதேச நலம்பெறவேநலம் விடுக வனத்தினரை. (௱௰௨)

என்றுகணக்கிலி தங்களுரைப்பவெ லாமர சன்செவியிற்
றுன்றுதலின்றி முனஞ்செலுமப்படி யேதின முந்தொடர்நாள்
ஒன்றுறுதாச ரிடத்தடன் மாருதி யொருதின முறவவருக்
கின்றுதிசெய்து பணிந்துறுபோதர சவ்வழி யெய்தினனே. (௱௰௩)

எய்தியமாருதி மேனியின் விசொளி யிருவிழி களுநிறையப்
பெய்துறு பேரொளி யால்விழிகூசி முகிழ்த்திறை பேர்ந்தயினர்
ஐதடலவீர ரகன்றனரவ்வர சக்கம்விழுத்தெதிர் பார்த்
துய்திறம்வேண்டின னஞ்சலிசெய்கர மேருடவ ணுற்றனனே. (௱௰௪)

பற்பல நாளர சிப்படி யெய்து தலைப்பர மற்கடியார்
நற்பரி வோடு தெரிந்தரு கெய்த நயந்து பணித்திடலும்
பொற்பமர் கோனரு கெய்தி வணங்கல் புரிந்து புகழ்ந்தனன் யான்
இப்பவ வேலை கடந்துய நன்குபதேச மியம்பு கெனா (௱௰௫)

அருள்பெற வேண்டினன் முகமதைநோக்கி யனுக்கிர கம்புரிவோர்
பெருகர சாளுறு பெருமையை நீயொரு பேய்வழி வேனிடையோ
மருவுபதேச நலம்பெறப் பெற்றுறில் வையகம் யாவுநகை
தருமலவோபல தரணியர்சூழ்வுறு சபையில் வணங்குவையோ. (௱௰௬)

என்னைவணங்க விலச்சையுறிற்பர மார்த்தம தெப்படிநீ
நன்னர்விளங்க முடிப்பதுனக்கிசை வாகநலந்தருசீர்
மன்னுறுதேசிக னைச்சரணெய்தி வழுத்துபதேசமுறீஇ
இன்னரசாளுதல் யாவரு மொப்புற வெய்துமி தன்றிமனே. (௱௰௭)

கோவண மன்றியி லாதெவை யும்புவி யேருளிர் மெத்தையதாய்த்
தூவணவஸ்திர மம்பரமாக மரஞ்செறி சோலை யெலாம்
காவணமாக விலங்கொடு பக்ஷிகள் காதல் செயுங்கிளை யாய்த்
தாவணவுங்கவி போலுளவென்னயி னீயடை யத்தகுமோ (௱௰௮)

ஒரியருளா லரசாண் டவர்போ லரசாளுவதிற் குறைவென்
புரிதலை நன்கினியுனதர சென்வயினிற் புக வுய்த்தனையேல்
உரியதுனக் கெனதேவ லுஞற்றுத லினியுனதா ரணுகித்
திரிதலிலா தரசாள்வ துதக்கதுசெய் கென வேவினரே. (௱௨௬)

தேசிக ரிவ்வகை செப்பலு மன்னவர் சேவடியைப்பிரியா
நேசமுறுதவ னாகியு மவர்நிய மித்ததை நீக்கிலனெய்ப்
பாச மிகுந்திரு கண்களி னீர்பெருகப் பதபங்கயமென்
பூசிர மேற்கொடு தான்வளரும்பதி சென்று புகுந்தனனே. (௱௨௭)

அன்று நகர்க்க ணிருந்து துயின்றரு ணோதய மாம்பொழுதே
நன்று விழித்தநு பத்திரபுட்ப நலங்கிளர் சந்தனமே
மென்றுகில் பூடண வர்க்க முடன்கொடு மேளமுழங் கவிராய்த்
துன்றுறு சேனை தொடர்ந்துற மாநதி சென்று துனைந்தனனே. (௱௨௮)

ஆடியகன்புன லானபினன்குண வாயவை யுய்த்தனையும்
நாடியுடன்கொடு தேசிகர் தம்முழை நண்ணி வணங்கியபின்
நீடியவஸ்திர பூடணம்யாவு நிரப்பின னிற்கவெலாம்
சூடிய தேசிக ரரசனை நோக்கினர் சொல்லுதலுற்றனரே. (௱௨௯)

மன்னவ நீயிவை யாவுமெனக்குவ குப்புதிளிற் பிரியம்
துன்னலன் வேண்டல னினியிவை செய்திட றன்றுக வென்றுமினி
என்னலும் வேந்த னியம்பிய சற்குரு வின்முக நோக்கினன்,
பன்னரு நும்மது சேவையிலாதுப சிக்கமு துண்கிலனே. (௱௩௰)

ஆகிய விவ்விர தத்தைமுடிப்பது மருளென நாள்கபொறு
எகியொர்பூசை யியற்றின னுறு லிவர்தின மிப்படியே
வாகியன்மன்ன னியற்றுவதற்கு மனத்திசை யின்றியுமே
யோகிய னென்சொடு வஸ்திர பூடண மொருவி யகன்றனரே. (௱௩௧)

மிகவெகுதூர மகன்றுவனத்தொரு வெற்பிடை யேறியருந்
தகமகிழ் ராமதி யானமுடன்பெரி தங்குற லாயினர் பின்
நகருறுகோ லுதயத்திலெழுந்துமு னண்ணுதல் போற்குருவை
ககனம தெய்தின னங்கவரைத்தனி கண்டிலன் பின்னரவே. (௱௩௨)

நாடினன் வஸ்திர பூடணமவ்வழி நண்ணுதல் கண்டனிக
வாடின னெய்திய சேனையுடன்செறி வனமுழுதுங் குருவைத்
தேடின னேர்க்கில னிவ்வகைமூன்று தினம் பகலும் மிரவும்
காடியல்வோரை யெதிர்ந்தில னுயிருகண்கள்க லுழ்ந்தனனே. (௱௩௩)

என்றுகொலோகுரு சேவைகிடைக்குமெ னுமெலி வெய்துயினிச்
சொன்றி கொளேனவர் சேவைகிடைப்பள வென்றுதுணிந்தனனாய்
நின்றியல் கின்ற தறிந்துகனிந்துள நின்மலர் நேடரசன்
முன்றனி யெய்தினர் கண்டுமெகிழ்ந்தடி முந்தி வணங்கினனே. (௱௩௪)

அடியில் விழுந்து புலம்பினனுகை வகங்களி கொண்டவனைக்
கடிதுத மார்பொ டணைத்தழுகண்களி னீர்களை யுற்றுறுபோ
தொடிவறு மன்பின் வருபயப்பத பூசை யுஞற்றினையேல்
நெடிதும சேவை தினந்தொறும் யான்பெற நீயருள் கென்றனனே. (௱௩௫)

தாயுமவ்வாறு தன்பாற் சலித்தெதி ருரைக்கவேணு
பாயி யென்றனக்கு வாய்த்த பதியிறந்ததனா லன்றோ
மீயுயர் கதியை வேண்டி விமலசற்குருவைப் போற்ற
லாயின னிதனாலே துபழியுள தாகாதென்றாள். (சஉ௲)

தந்தைதாய் மகள் சொல்வார்த்தை தனக்கிசை யாதுசால
நிந்தையா முன்னா லெங்கட் கெனமகணி ராகரித்தென்
சிந்தையில் விளங்கும் ராமனேதந்தை சீதையே தாய்
முந்தையே யெனவுட் கொண்டேனு மக்கென்னே மொழிவதென்றாள். (௫௲௧)

அன்னது கேட்டதாயு மப்பனுமி வளிப்போதியாம்
சொன்னதற் கிசைவுறா தாற்றணிந்து கொல்வது நன்றென்று
துன்னு தற்கரிய நஞ்சுண்டிய்ச்சுறக் கொடுத்தாருண்டு
நன்னுதன் மயங்கித் தேர்ந்து நயந்து சற்குருவை யெண்ணி (௫௲௩)

இப்பொழு தெனக்கபாய மியைந்தசா லெதிர்ந்து நீரோ
தப்பறக் காக்கவேண்டு மெனமனந் தளர்ந் திறந்தாள்
அப்பழு தறிந்து தாசராங்குவந் தருளிநோக்க
வெப்பகன்று யிருண்டாகி விழித்தெதிர் குருவைப் பார்த்தாள். (௫௲உ)

உடனெழுந்தவர் தம்பாத முவந்து சேவித்துச்சாயி
விடதங்கி யிறக்கச் செய்ததாய் தந்தை வேண்டா ரன்றோ
மடனென்று மவரை நீக்கி நுமக்கியான் வழிபாடாற்றல்
கடனென்று தொடர்ந்து சாம்பள் காட்டெனு நகரஞ் சார்ந்தாள். (௫௲௩)

வசதி யுற்றிருந்த ராமதாசர் பால்மருவுஞ் சீடர்
முசளருத்திர ராமாஜ்முது நலத்தேவதாச
ஜசவந்ததி வாகரப் பானுஜ் யெனத்தகு கோசாமி
இசைவுறும் பெயரினோ ராதியர் சிலர்க்கினிமை கூறி (௫௲௪)

தந்த மூரனுகச் செய்து தாமளா காவதிக்கு
வந்தனர் நீங்குறா மன் மருவுறு சீடரோடும்
இந்திராயணி நீராடி யேத்தரு ஞான தேவர்
சுந்தர சமாதிக்கெய்தித் தொழுதவர் தமைப்பூசித்து (௫௲௫)

மூன்றிராவ வணிற்றங்கி முயலரிகீர்த்தனங்கள்
சான்றவர் வினவப்பாடிச் சார்ந்தனர் கங்காதீரத்
தான்றமை யேகநாத ரடிநிலே யமைத்து நாளும்
தோன் றாசெனும் விருக்கந் துன்னினர் தொழுது வாழ்த்தி (௫௲௬)

அங்குமூன் றிரவிராம கதைகளே யருளிச் செய்யத்
தங்குமவ் வேகநாதர் தாசர்முன் னெதிர்ந்துதோன்றிப்
பொங்கு மானந்தத்தோடு புல்லினர் விடையுநல்க
எங்கு நீடவரங் காபாத்தெனு நகரதனைச் சேர்ந்தார். (௫௲௭)

நண்ணலு மாங்கிராமி ராமதாசெனு நல்லோராம்
அண்ணனார் சீடரோடு மதுகக்கண்டவரைப் போற்றி
எண்ணரு மவ்வூர் நீங்கியேகும் போதினிற்சிவூர்வாழ்
பண்ணியப் பயினாபாயி புரிதர் செய்கதையைக்கேட்டு. (௫௲௮)

நெடிதுறு பாசமெல்லா நீங்கினன் விரக்திஞானம்
படிவுறலாகித் தாசர் பாதத்தைப்பணிந்து போற்றிக்
குடிவளர் தன்னூர் மேவக் கொடுசென்று வதியச்செய்து
ஓடிவுறு சோடசோப சாரமு முயன்றுசெய்து (௪௩௯)

எனக்குப தேசநல்க வேண்டுமென் றிரந்து நிற்க
மனப்பரி சுத்தந்தேர்ந்து மகிழ்ந்துப தேசநல்கி
இனத்துட னவடன்வீட்டி லொன்பது நாளிருந்து
கனத்தரி கதைகள்செய்து டாங்களி நகர்கலந்தார். (௪௪௰)

அயிடை யனுமார்கோயி லடைந்துபூ சித்துப்போற்றி
மேயபஞ்ச வடிக்கெய்தி மேவிராம குண்டந்தோய்ந்து
சாயன ராமமூர்த்தி தான்வளர் கோயில் சார்ந்து
ஏயசோட சோபசார முஞ்செய்து தொழுதார் மன்னோ. (௪௪௧)

அங்கணே சஞ்சுலோக மமைத்துக்கீர்த் தனங்கள்பாடிப்
பாங்குளோ ரெவருங்கேட்டுப் பரவசமாகச் சாமம்
நான்கினு முதயகால நண்ணுறு போதுசாமிக்
கோங்குமா ரதிசெய்தியார்க்கு முறுபிரசாதந் தந்தார். (௪௪௨)

இப்படிக் காகமூன்று நாள்வரை யிருந்துசாமி
மெய்ப்படித் தழுவிப்போற்றி விடைபெற்றுத் தம்மைத் தேடும்
ஒப்பிலாச் சிவாஜிராஜ னுத்தியா னத்தைச்சேர்ந்தார்
தப்பில்பல் வியங்களேங்க வனுமகே தனந் தழைக்க. (௪௪௩)

வேறு.

தனது தேசிகரெய்து சேதிசிவாஜிதா னறிவுற்றுடன்
அனகர் பாலணிகங்கள் சூழ்வர வடிகளா னடையாகவே
வனநெருங் குழியனும நன்கொடி வளர்தல் கண்டு வணங்கிவந்
தனலருந்தவ யோகர்தாளிடை யுற்று வந்து வணங்கினான். (௪௪௪)

பூசையாவு மியற்றி நீணிழல் பொருக ளிற்றனி யாதனத்
தாசைகூர விராமதாசரை யமர வைத்தழ காகவெ
ணசை நீடிய பல்லியங் களொடு மமைச்சர்க ளெண்மரும்
மேசை மேவிய தானும் வெண்கவரிக் குலங்கை சிறக்கவே. (௪௪௫)

கொண்டு வீசி நகர்க்குள் வந்து குலாவு வீதியு லாவியற்
கண்டு தன்னரண் மனைகொணர்ந் தொருகவின் மணிப்பொல ஞசனத்
தண்டிறும் படிசெய்து சோட சவகைகளா முபசாரமும்
மண்டு மாறு புரிந்து போன கவகையு முண்ண வழங்கினான். (௪௪௬)

தாசர்தம்மொடு கூடலாகிய சதுமறைக் குலர்தம்முடன்
நேசமோடினி துண்டிராயி னிகழ்த்தினு ரரிகீர்த்தனம்
தோசரா முதயத்தி லாரதி செய்து தீர்த்தனே வாழ்த்திபுல்
லாசமாக வெவர்க்கு நன்பிரசாத நல்கின ரமையவே. (௪௪௭)

உடனெழுந்துறு சிடரோடு வனத்துறைந்து சிறைள் கழித்
தடனெருங்கிய சாம்பள் கோரெனு மூர்புகுந்து தழைக்கநீள்
அடன்மிகுந் தளராம மூர்த்தியை யங்கமைக்க நினைத்துடன்
றிடனிலுறங் ஞானவாயு மைந்தனை யெண்ணினாருள் செய்யவே. (௪௪௮)

வேறு.

அக்காலமதிற் சீர்திகழ் பாகா நகரத்தில்
தக்கா ரெனவுள ரானவர் சாந்தம் பெறுசீலர்
மிக்கார் வயிராகத் திடைமிகு ஞானமொ டன்பும்
தொக்காரவர் பெயர் கேசவ சாமியெனச் சொலவே. (௪௭௯)

அன்னா ரினதாசர்க் குளவாகும் பெருமைகளைப்
பன்னாளும் விழைவிற் பயபக்தித் திறமேவி
என்னா லவரைப் போய்த்தரி சிக்கப் பலவீனம்
தன்னாலமை யாதே யெனத்தளர்ந்தா ரொருதாமே. (௪௮௦)

உலகந்தனை யுய்யச் செயவொளிர் சற்குரு சேவைக்
கிலகுந் தவமில ரூகிய யான்செய்வதெ னென்னைப்
பலவுங் கருதின ராகியொர் சீடன்றனைப் பார்த்து
நலசாம்பவ கோர்வாழ்வுறு நயசற்குரு பானீ (௪௮௧)

சென்றீந் திறைவரு வாயெனத் தேரத்து விதமசாய்
ஒன்றும்படி விண்ணப்பம் வரைந்தொன்றுட னுதவித்
துன்றும் வழிச்செலவுக் கரைப்படி தண்டுலந்துன்ன
அன்றங் கவனுக்கீந்தனுப் பப்போந்தனனன்னோன். (௪௮௨)

சம்மாற்புரி சாஷ்டாங்க வந்தனஞ்சொல் கெனச்சாற்றச்
சும்மா நகரொருநாள் பதினைந்துந் தருமரிசிக்
கெம்மாறு மில்லாமற் பெறலெய்தித்தடை யிலனாய்
இம்மா நகர் வந்தாரியரிருக்கும்பதி சேர்ந்தான். (௪௮௩)

சீராடி நனியமங்களு நிறை வேறினராகிச்
சீராமன தியர் கோயிலிலுறு போதவன் சேர்ந்து
பாரோர்வுற வட்டாங்கமு மிகுமன்பொடு பணிந்தான்
நேராயுத வியபத்திரமுனம் வைத்தெதிர் நின்றான். (௪௮௪)

நின்றான் முகநோக்கிப்புகு நீராருதவியதார்
என்றாரெதிர் நின்றானலனேய் கேசவசாமி
தன்றாசனடைந்தேனவர் தருபத்திர மிதுநும்
பொன்றாளடி களுக்கன்பொடு புகன்றார் பணிவென்றான். (௪௮௫)

ராமன்பத நேயத்தினர் நனி நன்றெனவதனிற்
றாமன்புறவரை வுற்றிடு தகவின்புற வோர்ந்து
நாமன்பதியிடை முத்தினமவன் வைகுறச்சொல்லிப்
பூமன்னவனுகிப்பணி புரிவோற்குறப்பு கன்று. (௪௮௬)

வருவேதியன் மகிழப்பல வஸ்திராபரணங்கள்
தருமாபுரிந்தே பத்திரந்தாமொன்றெதி ரெழுதி
ஒருகேசவசாமிக்கினி தெதிர்வந்தன முரைத்தின்
அருளாலொரு வேளைக்குணுமது தந்தனுப்பினரே. (௪௮௭)

விடைபெற்றுறு மவ்வேதியன் மிளிர் கேசவசாமி
புடையுற்றிவர்புரி வுற்றன யாவுந்தனி புகலா
இடையற்றில தொரு வேளையினுண வீந்தது மென்றான்
அடைவுற்றனர் மிகுமாமகிழ்க் கேசவ்சாமி. (௪௮௯)

வேறு

தாசரருள் பெற்றறிவ தின்குகிர்ஷ்ணஜி
நேசமொடு நாவிதர் நெடும்பக லுமையம்
கூசமில தேற்றினிதி னுண்டுகுறி கொண்டு
மாசகல வன்பர்கள் வழுத்திவரு போதம். (க.ஆக)

ஆகிய கிரந்தமதை யத்தியய னஞ்செய்
யோகியவர் தம்பெருமை யோர்ந்தவொரு பார்ப்பான்
நாகில்ஜய ராமனெனு நாமனவ யாவும்
போகியுயர் பண்டித னடுத்திது புகன்றான். ([illegible])

உம்மிலுயர் ஞானிய ரிலாமையுணர் வுற்றும்
சம்மிலுறு வேனறிவு தங்கவுபதேசம்
செய்ம்மினென நாவிதனை வந்தனைசெய் தற்குந்
இம்மிகை தகாதென விணங்கில ரிசைப்பார். (சகச)

நானிழி குலத்திலுறு நாவித னெனைச்செம்
மானுரிகொ ணூலணியு மார்பினர் குலத்து
ஆனிர்பணியத் தகுவதன் றதுவுமன்றி
யானுமுப தேசமரு ளத்தகுவ தன்றால் ([illegible])

எனதுகுரு வாகியியல் கின்றவ ரிடத்தில்
மனமொருமை யாயடி வணங்கியுப தேசம்
கனமதுற நீர்பெறுக வென்றுகனி வாகப்
பனவனிடை யோதினர் பலாதவ னுவைபபான். ([illegible])

திரிகரண சுத்தியொடு தேசிகரின் மிக்க
பெரியர்நுமை யன்றியிலை யென்றுமடி பேணிப்
பரிவதிலை யாகிய வெனன்புபிறர் பக்கம்
புரிவதுறு மோவெனலு நாவிதர் பொருந்தார். ([illegible])

யாதினி யியற்றுவ தெனச்சிறிது ளெண்ணி
வேதியனை ராமனடி யார்தமுழை மேவத்
தீதில தழைத்தருகு சென்றுகுரு நாதர்
போதிலினி தாகியவர் பொன்னடி வணங்கி. ([illegible])

பண்டிதன் மனத்திலுறு பாவமதை யோதக்
கண்டிதென வேதியர் கணிற்பெருவ தன்றித்
தண்டிலுப தேசமிகு தாழ்வின னிடத்தோ
அண்டியுறல் வேதியர் குலத்தவத ரித்தோய் ([illegible])

வெகுஜன் விரோதமிது வென்றுசில நீதித்
தருதிமொழி கூறினர் தடுப்பதை விஞவான்
தொகுதரு நலன்பொடு திருத்தடி பிடித்து
நெகுகருணை யோடருள னீரருளு கென்றான். (ச[illegible])

அவனது மனத்திட மறிந்துகுரு நாதர்
உவமையறு நாவிதனை நோக்கியுப தேசம்
இவனுற வளித்தியினி தென்றனரு டன்றாம்
பவனமுற வேதியனொ டேகினர் பணிந்தே. ([illegible])

நண்ணிவிதி யாயினிதிராமனடி பூசை
பண்ணியுப தேசமறை யைப்பகர்தல் செய்தார்
எண்ணிமுதிர் பண்டிதனி ணங்குகுரு சேவை
கண்ணிய னுள்பரக திக்கணவர் சென்றார். (சகூகூ)

நாவிதகொ சாமியுயர் நற்கதியை நண்ணத்
தாவில்ஜய ராமனவர் தாந்தகன மாகத்
தீவிதி முடித்துவிதி செய்கைக ளுமுற்றி
மேவியவ ணிற்றுளவ நந்தனம்வி ளைத்தார். (ருா)

அவர்விரவு பாதுகையை யவ்வயி னமைத்தத
தவர்திதியொ டாதிபல சற்கிரியை முற்ற
எவர்வயினு மையம தெடுத்தெவையு மெய்த
இவர்வது புரிந்துகுரு நாதரிடை யேகி (ருாக)

வந்தனை புரிந்தெனது வண்குருவி னுக்கு
முந்துதிதி செய்யவருள் கென்றுமொழி யக்கேட்
டந்துமறு பேரறிஞர் நீயயர்தல் கண்டால்
நிந்தனைசெய் வார்பனவர் நேருணவு வேண்டார். (ருாஉ)

ஆயினு மிராமனரு ளானிறைவ தாகும்
ஏயினதி னன்புகொடி யற்றலிக வாமல்
போயினி தியற்றுகென வின்னருள் புரிந்தார்
மேயின னியற்றுமிடை வேதியர்வி ராவி. (ருாங)

உண்டிதுகர் கிற்கவரு கென்னமறை யோரும்
மண்டின ரிருப்புழி மடைச்செயன் முடித்துக்
கொண்டினிது தன்குரு குலாவுறுச மாதிக்
கண்டிவிதி யோடுபுரி பூசைசெய லானார். (ருாச)

ஆனது தெரிந்துமறை யந்தணரொலாரும்
ஞானகுரு ஜீவனொடு நண்ணிவிவன் யாவர்க்
கூனமறு நற்றிதி யுளுற்றுதலெ னுவங்
கீனமில தெண்ணுபொழு திற்சில ரிசைப்பார். (ருாரு)

நாவித னிடத்திலுப தேசமிவ னண்ணி
ஆவியவன்விட் டதனி லன்னவனை யெண்ணித்
தாவிலது புண்யதிதி தன்னையியல் கிற்க
மேவியது போலுமென மெய்யெனவெ லாரும் (ருாசா)

இந்தமறை யோன்மிகவி ழிந்தகுல வீனன்
நந்தமை யுணர்குவரு கென்றவிது நன்றே
வந்தது தகாதென வெழுந்துசெல மற்றவ்
வந்தண நினைந்துதன தாரியனை யெண்ண (ருாஎ)

அவ்வயி னறிந்துட னடைந்துகுரு நாதர்
எவ்வமற நிற்கமறை யந்தண ரொலோரும்
இவ்வயினி வந்தண னியற்றுவது நன்றே
செவ்வயினி ரொன்றுமுறை செப்பினர் சினந்தே (ருாஅ)

யாமிவ னகத்திலுண வெங்கள்விழி காணத்
தோமிலொரு மெய்ச்செயல் விளங்கிலது தொட்டு
நாமிசைவ மென்றனர் நயந்துகுரு நாத
சாமியிரு மென்றக நுழைந்துஜய ராமன். (௫௱௯)

தன்னொடு புறத்துவர லுந்தசர தன்சேய்
துன்னுஜய ராமனது தோளிடை துலங்க
மன்னுகுரு தம்மிடையின் மாருதி விளங்க
நன்னர்விழி கண்டனர் நயந்தனர் வியந்தே (௫௱௰)

மாலையுடன் மாருதியை வந்தனைசெய் துற்ற
மாலையொழி வித்துள மகிழ்ந்துதிதி தானும்
மாலையுற முற்றியபி னுண்டுமகிழ் கந்தம்
மாலையடை தக்கணை வழங்கமகிழ் வுற்றார். (௫௱௰௧)

வேறு

பின்பிராம தாசர்சீடர் பெரிதுமேவ வொருவனத்
தின்பினோடு சென்றுநாளும் ராமநாம மிடைவிடார்
அன்புகொண்டு மேவுநாளின் மீனமாத மதனினோர்
முன்புவார மமரபக்க மொழிசதுர்த்த சித்திதி (௫௱௰௨)

ஆவதாக வைகறைக்க ணடிநீ ரமர்ந்தபின்
மேவலான நீரிலாடி மேவல்கண்டு பாயியென்
றேவல்செய்யு நங்கைமீண்டு மேன்புனற்க ணடிநீர்
தேவரீ ரெனப்பணிந்து நிற்கவீது செப்புவார். (௫௱௰௩)

என்ன தண்ணரின் றிராம னெழிலடிக் கண்மேவினார்
அன்னதைக் குறித்துவேத மறையு நீதிவழுவுறு
துன்னி மீண்டுமாடி யைந்திரண்டு நாளுமுறைகுவேன்
மன்னு சூதகத்திலென்னும் வேலைமன்னன் வந்தனன். (௫௱௰௪)

வந்திராமதாசர்தாள் பணிந்துநிற்க மன்னவா
முந்தெனண்ணர் பரமதான மோக்கமேவி னாரதால்
ஐந்திரண்டு நாளதான சூதகம் மடுத்துளேன்
இந்தநீவி ரினிதுசென்று சாம்பன்கோமா னகரிலே. (௫௱௰௫)

நயரதேய னவமியுற் சவஞ்செயச் சமைந்துநன்
கயர்திர்முற் றுறுந்தினத்தி லடைவெணங்கி யானென
நயமதாக விடைகொடுக்க நன்றுநன் றெனவிரைந்
துயர்குணத்தி னடியரோடு நிருபனூரு ளுற்றனன். (௫௱௰௬)

நண்ணுமேவ் லாளர்கூட நவமியுற்சவந்தனைப்
பண்ணுநாடி னந்தினம் பராவுவேதியர்க்குண
உண்ணுகின்ற வதிலுமற்றை யெதிலுமொன்றும் வழுவுறு
தண்ணு மாவி யற்றிமுற்று மளவின்மேவி னாரரோ. (௫௱௰௭)

மேவிராம தாசர்கண்டு லலிதமா விழாவயர்த்
தோவில் சற்சனர்க்கெலா முகந்துபோக விடைகொடுத்
தேவிமேவு வேந்தனுக்கும் விடைகொடுத் திருந்தனர்
தாவின்மன்ன னென்றுசிந்தை தனினினைந்து போயினன். (௫௱௰௮)

வேறு.

பரளிக டெனுமலை யதனிற் பண்புசால்
குரவருக் கொருமடங் குறித்துக் கட்டினான்
விரவினரிருக்க மற்றவரின் மேவினான்
வரவினி தழைத்தனன் ஞசர் மன்னவர். (ருஙக)

வனத்துறல் வேண்டிய வென்னை மாநகர்
தனிற்புரி மடத்துற வேண்டறக்கதோ
எனப்புரவலன் பணிந்தெனதுளத்தவா
வினத்தை யானடைய நீரியற்றல் வேண்டுமே.. (ருஉ0)

என்றினி தேத்தின னிசைந்த தாசனா
நன்றவ னுறக்கொடு நண்ணிவெற்பிடை
ஒன்றநல் லரியணை யுயர்த்திப் பூசனை
மன்ற வெண்ணிரண்டுமே வகுத்துப் போற்றினான். (ருஉக)

இலக்கம் வேதியர்க் குணவினிதி னீந்திராக்
கலக்கமா தாசர்கால் பிடிக்கக் கண்டுயில்
விலக்கின ராசனை நோக்கி வேந்தநீ
தலத்துயர் தவகுணத் தடியர் தம்மொடும். (ருஉஉ)

தேகுவாழ் வுறுந்துகா ராமர் சேர்வுற
வாகுடனழைக்கென மன்னன் முன்னமே
போகுறத் தூதனைப் போக்கினேனென
யோகுறு பெருந்தவ ருடனிருந்தனன். (ருஉங)

அருந்தவத்துறு துகாரா மவன்பரும்
பெருந்தவர் தமைக்கண்டு போற்றப்பேணினர்
இருந்தபன் னூல்வரோ டெழுந்து பின்னரும்
வருந்திருமாலடி யாருமன்னவே. (ருஉச)

காவலன்றெரிந் தெதிர்கொண்டு கண்டவர்
யாவரும்வர வுபசரித் தின்பாகவே
மேவருந் தாசர்பா லழைத்து மேவலும்
தாவருந் தவத்துகா ராமர் சார்ந்தரோ. (ருஉரு)

ராமதாசனை யெதிர்நோக்கி நன்கவர்
தாமகிழ்வாகச் சாஷ்டாங்க வந்தனம்
காமரு தாள்களிற் புரியக் கண்டுடன்
மாமரு மார்புற மகிழ்ந் தணைத்தனர். (ருஉசு)

இவ்வகை வந்தசா துக்களுக்கெலாம்
மெய்வகையுறத் தழீஇ வியந்திருந்துழிச்
செய்வகை திருந்து மண்டபத்துச் சேர்ந்துள
பொய்வகை தவிர் மறைய வர்க்குப் போஜனம். (ருஉஎ)

தந்த பின் சுங்குல்வாய் தவறில் வேந்தனை
அந்த மிலருந்த வத்தறிஞர் நோக்கி நீ
முந்தரி கீர்த்தன மொழி கென் றோதினார்
வந்தது நினைத்த தென்று வந்து மன்னவன். (ருஉஅ)

நெடும் பகனினைந்தது நிறைய நேமகத்
திடங்குரு நாதரை யெதிர் சத்துக்களை
ஒடுங்கலி லன்பொடு பணிந்து கந்தெழீஇ
நடம்படி சதங்கைகள் காலினணைவே. (௫௨௧)

வினைந்தனன் மிருதங்கந்தாளம் வாய்ந்த யாழ்
புனைந்தெதிர் நின்றரி புகழ் விரித்தனன்
நினைந்தது வினவினரவச நேர்ந்தனர்
கனைந்துறப் பாடலைக்கண்டு தேசிகர். (௫௨௨)

வேந்தனை போரிடத்திருக்க நல்விடை
ஈந்தனர் வேணுபாயியை யழைத்தவண்
வாய்ந்தரி கதை செய வகுக்க மற்றவர்
ஆய்ந்தரி கீர்த்தனத்தவச மாக்கினார். (௫௨௩)

புலரியிலாரதி புரிந்தெலோருக்கும்
நலனுற நற்பிரசாத நல்கினார்
மலர் மறுதினத்திராமருவு மண்டபம்
குலவக்காபாயியைப் பாடக் கூறினார். (௫௨௪)

அந்தமாபாயி கீர்த்தனஞ் செய்தானந்த
பந்த மூழ்குறச் செயப்பகிரூ பாயியை
முந்து கீர்த்தனஞ்செய மொழிந்துவாமன
மைந்து கோசாமியை வகுக்கச் செய்தனர், (௫௨௫)

வைகறையாரதி நிரப்பி மற்றைநாள்
எய்துறு நிம்பராஜரை யிசைத்தனர்
ஐதரி கீர்த்தன மயரச்செய்து பின்
மெய்தரு ரங்கசாமி கோசாமியையே. (௫௨௬)

திருமகள் கேள்வனைப் புகழச்செய்து பின்
வரு ஜயராம கோசாமி வாழ்த்தலாய்
அருள் கலியாண கோசாமி யன்புடன்
பெருகுறக் கீர்த்தனம் புரியப்பேசியே, (௫௨௭)

மேமநாபா கொசாமி சொலவுஞ்சிவ
ராமகோசாமியு நவிலச்செய்து பின்
பாமடிய வரெலாம் பாடச்செய்து பின்
நாமராகிய துகாராமசாமியை. (௫௨௮)

ஹரிகதை புரிகென வருளவன் பினிற்
பெரியவர் சமர்த்தரைப் பணிந்து பேசினார்
தெரியரி கீர்த்தன மவசஞ் சேரவே
விரிபுகழ்த் தாசரோ யாதிமேவினோர். (௫௨௯)

தாமுமப்ப ரவசந் தனிற்புகுந் தொளி
மாமுத லெழுந்தது மறந்து கீர்த்தனம்
காமுத லுறகனி நவின்று நின்றனர்
ஆமுதற் காரண னங்குத் தோன்றினன், (௫௩௰)

சகுண ரூபத்தொடு சார்ந்த ராமனும்
சகு குணத்துயர் துகாரா மனைத் தழீஇ
மிகுநலத் துனது கீர்த்தனம் விளைவிநேர்
புகுபொழு துணர்ந்தில னுனும் போந்தென. (௫௩௯)

விளைவினி லாரதி புரிய மெய்தழீஇ
உளைசெய்து மறைந்தன னுணர்த்தி யாவரும்
களை செயர் கருமகிழ்க் கடலின் மூழ்கினர்
புளைதெற புகழ்த்து காராமர் போற்றினர். (௫௪௰)

மங்களா ரதிதனை வகுத்துத் தாசனை
நன்கடி பணிதலுந் தழுவி ராமதாஸ்
அங்கவரிடைப் பெரிதன்பு சான்றனர்
தங்கெவர்க்கும் பிரசாத நல்கினர். (௫௪௧)

நண்ணிய மறுதினம் ராமதாசரோ
புண்ணிய ஹரிகதை புகன்று நின்றனர்
தண்ணிய மலரயனுதி தாவிலா
விண்ணினர் பரவசந் தாமு மேவவே. (௫௪௨)

நண்ணிய வுதயத்தி னுதற் காரதி
பண்ணினராய்ப் பிரசாதம் பாத்தனர்
எண்ணினர் தினந்து காராமரின் புறப்
புண்ணிய கீர்த்தனம் புகலச் சொல்லினர். (௫௪௩)

மதிவளை துதிது காராமர் மாண்புடன்
துதி ஹரிகீர்த்தனஞ் சொல்லி வாழ்ந்தனர்
பதியெதிர் சாதுக்கள் பாதபூசைசெய்
ததிமகிழ் வுறவணி யாடை நல்கினன். (௫௪௪)

சாது சற்சன ரெலாந் தழுவலாகிய
சதுசற்சனக டென்றெய்தும் பேர்வைத்தார்
போதுவோர் தெரிவுறப் புகன்ற தாசர்பால்
கோதுறச் சாதுக்கள் விடைகொண் டேகினர். (௫௪௫)

சகலரும் புகழ்த்து காராம சாமிதாம்
மகிபதி தருத குவரிசை தேர்ந்தனர்
மிகுபொருணம் வயின் விரும்பி நல்குவான்
தகுவதன்றெனச் சொலார் தேவுசார்ந்தனர். (௫௪௬)

தாரபதி வருது காராம சாமியை
விராவிடை நாடினன் விழியிற் கண்டிலன்
பராவுறு சற்குரு பதங்களைப் பணிந்
திராது போயினர் செயலியம்பு கின்றனன். (௫௪௭)

பற்பல வஸ்திரம் பணிபொன்னுதியா
நற்பயன்றரு நிலநல்க வேண்டினேன்
பொற்ப வென்னிடத் தவர்புகல் கிலாது போய்ச்
சிற்பர னுறைதிருத் தேவு நண்ணினர். (௫௪௮)

என்றனன் வினவிய விராம தாசரும்
நன்றவர் கருத்தென நனிகயந்துவேந்
தன்றனை நோக்கினர் சகலசித்தியும்
ஒன்றரு முத்தியு முவப் புறுமலே. (௫௪௯)

பாண்டு ரங்கன் புகழ்பன்ன வேண்டுவோர்
ஈண்டு நீதருவதை யேற்பரோ கொலோ
வேண்டுறு தேகினவொன்று வேந்தநீ
பூண்டுள நினைவொழி கெனமொழிந் தனர். (௫௫௰)

தரணி காவல னவர்தகவை யெண்ணினன்
சரணிடைப் பணிந்து தன்பதிக்குச் சார்ந்தனன்
அரணியத் தடைந்தனர் தாசராதரித்
திரணிய சற்சனவி ரவிக் கெய்துவார். (௫௫௧)

வேறு.

வனத்திற் செல்லுதன் மீண்டு சற்சன கடுவருதல்
மனத்துக் கொத்தன படியவர் வருமொரு நாளில்
கனத்த சற்சன கடின் முகட்டுறைபுமோர் காளி
உனத்தரும் பெருந் தவரிடை நடுநிசியற்று. (௫௫௨)

எதிரி னின்றன டாசர் கண்டன்னை நீயாரோ
வதிவதெவ்விடத் தெனவ னாதிமா மாயை
அதிநலத் தினிம்மலையில் யானிருப்ப திங்கைய
மதிநலத்தினி ரொத்தனை தரமிவண் வந்தும். (௫௫௩)

திரும்பி யென்முகங் கண்டிலிர் கொயிலிற் சேர்ந்து
விரும்பி யென்மிசை நீர்சொலுங் கவிவின வுவதில்
அரும்பு கின்றது காதலென்றனக் கறைகென்னக்
கரும்பு நேர்கவி நாவலர் கட்டுரைக் கின்றார். (௫௫௪)

அம்மை நின்கழுத் தணிமணி மாலையி னொன்று
வெம்மையின் மணிகொண்டெனக்குச் செவிமேவ
செம்மை சேர்கடுக்கன் செய்திட்டனை யெனிற் செவ்வே
இம்மை யேகவி செப்புவ னின்மிசை யென்ன. (௫௫௫)

மாயை நானையான் புரிவனென்றுரைத் தனள் மறைந்தாள்
ஆய நாவலர் மறுதினத் தல்லிலம் மாயை
கோயின் மேயினர் கும்பிட்டு நிற்றலுங் குறையா
நேயமோடினி திட்டனள் காதுகணி ரம்ப. (௫௫௬)

விளங்கக் காதணி கொண்டெதிர் நின்றந்த விமலை
உளங் களிக்க நன்கவி சொலிவிடை பெற்றுறுமவோர்
களங்க மற்றதம் மடத்துறக் காலையர்ச் சகர்கள்
வளங் கதித்த வச்சத்தி கோயி லினகம் வந்து. (௫௫௭)

திறந்து பொற்கத வினையக நோக்கினர் செவ்வே
நிறந் தயங்கிய மாலையினித்தில நான்கு
குறைந் திருந்தன பயந்துபோய்க் கோன்வயிற் கூற
அறந் திருந்திய வரசன் மற்றவ ரிலையுற்றான். (௫௫௮)

காவல் வாய்ப் புகக்கடுகின னிருக்க வக்கங்குல்
மேலோ யரசன் கனவினிற் கவி விரும்பும்
ஆவலாய்க் கழுத்தணி மணிமாலை யினன்கு
தாவ லாமணி கொண்டு தாசர்க்குக் காதணி நான், (ருருக)

இட்டுக் கேட்டனன் கவியர்ச் சகரை மிகவிம்சை
தொட்டுச் செய்திடே லெனத்திரி சூலிசேர் சொல்லி
விட்டுச் சென்றனள் விழித்துக்கோன் சஜ்ஜன வெற்பில்
நெட்டுக் கொண்டுறை நிமலர் பாலுடன் வந்து சேர்ந்து. (ருசுய)

கண்டு தாசர்தங் கடுக்கனைக் களியுளங் கலந்து
கொண்டு நின்றெதிர் வணங்கினன் கூறினன் கனவை
அண்டு சற்சனர் தமக்கெலாம் வியந்தன ராக
மண்டு மன்பொடு விடைபெற்று மாநகர் வந்தான். (ருசுக)

வேறு.

பின்பொரு வைகல் பெருந்தவ மெய்யர்பிழைப் பெய்தா
அன்ப ரொடண்ண விருக்க விராமன தவதாரத்
தின்பரி சோதினர் வெற்பிலி ருப்புழி யிவர்தாசன்
பொன்பயில் வாணிக னொருசவுதாகிரி பொருநீர்மேல். (ருசுஉ)

கப்பலின் வர்த்தக முற்றநெடுந்திசை காறேகிச்
செப்பமுடன் செய்து மீள்வுறுபோது தெறுங்காலால்
அப்ப தனிற்கல மூழ்குதலாகிய தப்போதில்
எப்படி யென்று மயங்கி வருந்தி யினைந் தானாய். (ருசுங)

தன்னி லியற்று முயற்சியினுவது தானின்றி
மன்னிய தாசரை வந்தனைசெய்து மனத்தெண்ணிப்
பொன்னிறை கப்பலமூழ்ந்தலி லாதுபுகக்கோடு
நன்ன ரளித்திடி னுங்கிலோர் பாகநல்குவெ னென்றான் (ருசுச)

என்றவன் வேண்டலறிந்தனர் பேரருளேய் தாசர்
அன்றது போது கலத்துற லாயதை யாழாமல்
துன்றவருங் கரைசெய்தனர் கோடுதனித்தாசர்
நின்றன ரீரநெடுந் துகிலோ டவ்னோர் கண்டான். (ருசுரு)

கரையி விழிந்தவர் கான்மிசை வீழ்ந்து களித்தானாய்
வினைவினி னைந்துள வேலையெழுந் தெனையே காத்த
புரையி னெடுங்குரு நாதவெனப் புகழ்போற் றுற்றான்
உரையின் மறைந்தன ரினிதுவியந்தன னுறுநவ்வான். (ருசுசு)

வேறு.

ஒருகணத்திலே யுடைநனைந் தொழுகுநீ ரோடு
பெருகுமன் பர்யாவரும் வியப்புறப் பிறங்கினராய்
மருவ நேர்கண்டு வாமனசாமி மாதவத்திற்
பொருவில் சாமி நுந்துகில் புரம்புனல் பொதிவ தெனே, (ருசுஎ)

கணத்தின் முன்னிலை யிங்ஙன மெங்ஙனங் கலந்தீர்
உணர்த்துமின்னென வாணிக னொருவனன் குயர்ந்த
குணத்தினேன் சவுதாகிரி கப்பல் மூழ்குறுகால்
புணர்த்து வேண்டினன் புணரியிற் போய்ப்புறங் காத்தேன். (ருசுஅ)

கரலை நீரிடை நினைந்தன னுடலுடை நானென்
றிரலை பின்ஜெடர் கின்றவன் றுசரங்கி யம்ப
நிரலை நன்குள சாதுக்கணி மிடத்தி லிவர்போய்
வரலை யாரறிந்தே மெனவியந்தனர் மதித்தார். (ருக௯)

மறுதினத்தந் தவர்த்தகன் வேண்டிய மாழை
தெறு புலத்தினர் பாற்கொடு வந்து சேவித்து
நறு நலத்துயர் சற்குருநாதரே நான்போற்
றுறுகலத்தினை நீர் புகாது ஞற்றினிருற்றீர். (ருஎ0)

கண்டுகான் மிசைப்பணிந்தெழீஇ நோக்கினேன் காணேன்
விண்டு மேவினீருமக்கு நான் வேண்டு காணிக்கை
கொண்டு வந்தனன் கொண்மினென்றுன்றலை குனிந்தான்
மண்டு மன்பர் கண்டிவர் மகிமைக் கொருவரம்போ. (ருஎக)

எனவியந்தன ரிருப்புழி ராமதாசெதிர்ந்த
கனதனங்களை யுத்தம பாத்திரங்களிலே
மனகிரம்புறச் செலவுசெய் தின்னும் வர்த்தகனே
தனநிரம்புவை யெனவிடை தந்தனர் சார்ந்தான். (ருஎ௨)

வேறு

பின்புசில நாட்கழிய வவரங்க பாக்ஷாவின் பெருகுஞ்சேனை
பொன்பிரமு நெடுமுகட்டுச் சஜ்ஜன கடைனு மலையைப் பொருந்தத் தம்பால்
வன்புகொடு கவரவெண்ணிப் பலவுபாயங்கள் செய்தும் வாய்ப்புறுமல்
முன்புவெடி விடுகுண்டு வாயிரும்பை யெதிர்மலையின்முகட்டி லேற்றி. (ருஎ௩)

பலகோடி யுருமினங்கள் பாய்ந்தவென வெடிகுண்டுப்படலை தூற்றி
அலர் பானுவருபுகையின் மறைய நெடு முழக்கங்க ளயரவத்தால்
நலனீடு மலையிடைப்பன் மனைகள் சிதைவுற்றனவந் நலிவைத்தாசர்
புலனுடி மாருதியை நினைக்கவுடன் வானரங்கள் புகுந்து நேர்ந்த. (ருஎ௪)

தசமுகன் போருறுகளை கடகர்த்த நெடுங்கரங்களிற் குண்டு களைத்தாக்கி
வசமிருந்து வருகுண்டு வாய்முழை யெல்லாந்தகர்த்து மாற்றித் தூற்றும்
விசைமிகுந்த கன்மழையால் வீராணியுடை பட்டு வெருண்டு மாய்ந்த
தசைசிதைந்து விழுசேனைத்தலைவனது தனையுணர்ந்து தரிக்கலாற்றான். (ருஎ௫)

சீசகங்களெரி கிரிக்குப் பிழைப்பரி தென்றுறத் தெரியக்கிளத்தலான
வாசகங்கள் வரைந்து தங்கள் மன்னவனுக்கனுபபினும் வலிமைதேற
மாசகங்கடொழு தேத்து மிந்துபகீரம்மலையில் வளருஞ்சீரும்
மூசகங்கள் வழிவுறவாய் முழக்கு நெடுங்குரங்குகள் செய்முழக்குந் தேர்த்தான்.

தெரிந்து தெளிந்த வரங்க பாக்ஷாவச்செய்தி யெல்லாந்திருந்து சீர்த்தி
அருந்தவத்தினிந்துப கீர்தமை வணங்கித் திரும்புகென வறிக்கை செய்தான்
பொருந்திய சேனைத்தலைவன் ராமதாசடியில் வந்து புகழ்ந்து போற்றிப் [றுன்
பெருந்தவத்திரெமைப் புரக்கவேண்டு மென விடைபெற்றூர் பெயர்ந்து போ

இதுதெரிந்து சிவாஜியண்ணலின் பினுக்கோர்களை காணுதெழுந்து போந்து
மதுவிரிந்த துழாய் நெடுமாலடியரது மகிமைதனை வியந்து வாழ்த்திக்
கதுவினின்றுன் பதம்வணங்கி ராமதாசவன் முகத்தைக் கனிந்து நோக்கிப்
பொதுவிகந்ததனி யிடத்திற் பகவமைக்குக்கொடு போந்து பகலுகின்றார். ()

சிவாஜி நீ ஸ்ரீ ராமன்சரணார விந்தத்தைச் சேர்வதாக
அவாவியகாலஞ்சமீ பித்ததனுல் விவகாரமனைத்து நீத்துத்
தவாது திடச்சித்தனாய் ராமரூபந்தன்னைத் தரித்து நெஞ்சில்
துவாதசத்தோடொன்று செறியக்ஷரத்தைப் புரன்றிருத்தி யென்று சொன்னூ.

பேசுமுனே பிரமானந்தங்கிளர்ந்து பெருகியண்ணல் பெரியோர் போற்றும்
தேசுசெறி சற்குருவை வணங்கியுடல் பொருளாவி தத்தஞ்செய்தேன்
வீசுமருள் பெறுமுன்னே நுமதருளின்படி நடக்க மேவுகின்றேன்
மூசுபாதந்திரனுயெனப் பணிந்து விடைபெற்றூர் முடுகிவந்து. (௫௮௦)

பலதான தருமங்கள் புரிந்து குருநாதனூற் பணித்த நாளில்
சலம் யாவுஞ் சமபாஜி யெனுந்தனை யன்றனக்குதவி முடியுஞ் சார்த்திப்
பொலன் மேவுமே காந்தத்தலத்திலொரு புடையிருந்து பொன்மனுளன்
நலனுருந்திருமேனி தனைநினைந்து ராமனடி நண்ணி வாழ்ந்தான். (௫௮௧)

வேறு

அன்னலான சம்பாஜி தனக்கதுக்
கென்னலான வினை யெல்லாஞ் செய்து
நண்ணலாயினன் சற்குரு நாதர்பால்
பண்ணலாயினன் பாதம் பணிதலே. (௫௮௨)

தந்தை தன்னை நினைத்துத் தளர்ந்தனன்
அந்தவேலை நல்லாரியர் மற்றவன்
சிந்தை தேறத்தெருட்டி யுலகியல்
விந்தை கூறி மெய்ஞ்ஞானம் விளம்பினூர். (௫௮௩)

அருள் செறிந்த நல்லாரியராலுளம்
தெருள்வதான சம்பாஜி சிவாஜிபோல்
மருளொழிந்து தன்னூர் வயின் மன்னினுன்
பொருளுணர்ந்துறை மாசவபுங்கவர். (௫௮௪)

தம்மை நேர்வுறு தாசவர்க்கங்களை
அம்மை மேவவழைத் தவர் தேர்வுறச்
செம்மையே யுரைசெய்தனர் மாகமாம்
சொம்மை தேய்மதி கூடு நவமியில். (௫௮௫)

மத்தியானப் பகலில் வைகுந்தமாம்
முத்தியானுற முந்திய தாதலால்
சித்தியான பினண்ணர் தஞ்சேயின் சேய்
பத்தியான கங்காதரப் பண்பனே. (௫௮௬)

கூவி யென்பத மேவக்குறிக் கொளீஇத்
தாவிலாவ பிஷேகந்தனைச் செய்தென்
னீவில் சாம்பிரதாயம் விளங்குற
நீவிர் செய்திரொனு நியமித்தனர். (௫௮௭)

அந்தவப் பொழுதே யடியா ரொலாம்
முந்தவங்கு முயன்றுந் தமையனூர்
சொந்த நன்மனைக் கேவினர் தூதரா

கூடினருடன் சற்ஜன கோருற
நாடினர் குருநாதனைக் கண்டுதான்
சூடினவை துன்னுறத் தாசர்தாம்
நீடினர் முட்டோம்நி மித்துவார். (ரு௲௯)

அரிதன்னுமம் விடா மலமைந்து நீர்
சொரிவ பிச்சை கொண்டுண்டு அமர்ந்து நீ
சரிர முள்ளவனை யுஞ்ச குணமாம்
பரியகோல வருவைக்கரு துவீர். (ரு௲௰)

பூசை நீதி யியற்றிப் புரிகுவீர்
ஆசையாக விராம நவமியும்
தேசை மேவனு மந்த ஜெயந்தியும்
ஏசை யோவிய தாசரிங் கெய்துறில். (ருகக)

அன்பி னுதரித்தா ருயிர் மாட்டருள்
இன்புசெய்து விராக மிசைந் திரும்
துன்பமாய பற்றற்றச் சுதன்புகழ்
என்பயனவர் சொன்னலும் வினவியே. (ருகஉ)

நேசமேமிக நீருநிகழ்த்தியே
தாசபோத கிரந்தத்தையுமே
மாசடா நியமக்தொடு வாசித்துத்
தேசநாடத் தினந்தினந் தேறுவீர். (ருக௩)

சாதிநீதி தவறுதலின்றியே
நீதிராம நன்னும நிசம்த்தா
மேதினிக் கணவ்வாறு விராவிலு
பாதிநைந்தி ராமன்பதம் பற்றுவீர். (ருகச)

என்று கூறினர் யாவருங் கேட்டனர்
நன்று நன்றென நண்ணி வணங்கினர்
நின்றுநேர் பொழுதிற் பருடைகம்
ஒன்று தேயத்திருந் தொருவுத்தமர். (ருகரு)

சீதைராம னிளையவன் வாதசேய்
ஆதலாகிய மூர்த்திகளைக் கொடு
போதலாயினர் கண்டு பொருந்தரும்
காதல் மேவினர் கட்டளை கேன்றனர் (ருக௬)

இந்த மூர்த்திகளை யெழிற்பெட்டியில்
பந்தனஞ் செய்துவை யின்பயன் படும்
பிந்த வென்றுரை பேசினர் மாதவத்
தந்த சேர்ஙியாண கோசாமிக்கே. (ருகஎ)

நாமஞ்சோதி நலங்கிளரும் பரந்
தாமமேவிய பின்புச மாதிசெய்
யாம லிவ்வுடலைத் தகனஞ் செய்து
வேமங்கே யொருகோயில் விளக்கியே (ருக௮)

நான்கு மூர்த்தியு நன்குநிலைப்பறத்
தீங்குறுது செய்கென் றருள் செய்தனர்
ஆங்கு நின்று வினவுமனை வரும்
பாங்கு மாடவ மரபக்கத்திலே. (ருகக)

ஆதியாந் திதிதொட்டுறு மட்டமித்
தீதிலாத் திதிகாறுஞ் சிறப்புற
வேதியர்க்குப் பகலின்மிதவையும்
சோதி ராவி லரிகதை சொல்லலும். (கூ௱)

சேர வுற்சவஞ் செய்து நிரப்பு நாள்
சாரலான சம்பாறியுந் தாழ்ந்துற
ஆரமேவுஞ் சகாப்த மெ ாயிரம்
சேரிரண்டு மூந்நூறு செல்லாண்டிலே. (கூ௱க)

வற்சரந்துன் மதிமா வத்தியத்
திற்சிறந்த நவமிதி நியிலே
சற்சனக் குருநாத சமர்த்தர் தாம்
விற்செறிந்து விடிபொழு தெய்தலே. (கூ௱உ)

சீரின்மூழ்சி நிறம்பது மாசனம்
சார்வதாகித் தயரத ராகவன்
ாரின்மேனி ருந்துறைண்டு தொண்
டார்வமேவி நடுப்ப ாவே (கூ௱ங)

வீமனை மிதிலாபுரி சோன்மகள்
காமனைக்குருளுநிதியேமு.
சோமனை மினிர் சோதித்திருவுரு
ராமனை யிங்கு நண்ணியென் கண்முனே. (கூ௱௪)

நின்று சேவை நிரப்பி நெடிது நீ
நன்று நின்னடி நண்ணப் புரிதியென்
றொன்று போற்பல வோதினர் மெய்த்துதி
அன்று ண்டுரனடுத்தனன் ராமனே. (கூ௱ரு)

கண்டுராமனை நண்ணனி கூர்ந்தனர்
தொண்டு நேர்குரு நாதசுவாமி தான்
அண்டு ரடியாமலரைச்சிரம்
சொண்டு நேர்வடி வச்சகுணத்திலே. (கூ௱சு)

ஜயஜயரகு வீரசரணென
இயல்வதாயின ரெண்டிசைப் பாலரும்
மயலிலாத பல்வான வருந்துதி
முயல மேவுமுனிவரு முந்தினர். (கூ௱எ)

மலரின் மாமழை பெய்தனர் வாழ்த்தினர்
அலறவாத்தியம் யாவு மற்றவ்வயின்
நிலவநின்ற நன்னேயருடலினைப்
பருந்தாங்கியொர் பாங்கு வைத்தாரரோ. (கூ௱அ)



# மண்டலீகராஜன் சரித்திரம்.

இந்துஸ்தான மெனப்புக றேசத்தில்
முந்துபேர்மண்ட லீகனெனமொழி
தந்துபோற்றவோர் வேந்துதழைத்தனர்
மைந்துசேருஞ் சலக்ஷணி மாதுடன். (க)

மண்டலீசர் மதுவை மனைவியார்
விண்டுபக்தியின் மேவிவருமவர்க்
குண்டிநல்கி யேகாதசி யென்றுளை
கொண்டநாளுப வாசங்குறித்துளார். (உ)

இடையருந்தரி சீர்த்தனத்தின்புறு
நடையராயுறு வாரவர் நாயகர்
அடையவேதுமி லாதரிநாமருள்
ஞடையராயுறு வார்செயலோர்கிலார். (ங)

கொண்டகேள்வனை நோக்கிக்குறித்துநீர்
விண்டுபூசனை செய்திடவேண்டுமென்
றண்டியன்பொ டுரைக்கவரசனோர்
ஒண்டொடிப்பன்னி யாரிதுரைசெய்வார். (ச)

புலனெலாந்திரி புந்தியுடையன்யான்
நலனுலாவுபத் திக்குநல் லேனல்லேன்
குலனுலாவுமின் னேயெனக்கோதிலா
மலர்மின்னரசனை யாருநாமாழ்கினோர். (ரு)

இன்னவாறுற வோர்தினமேந்தலார்
துன்னுநித்திரைப் போதுறு சூரிதாம்
மன்னலாய் ராமாவென வாய்சொல
நன்னரோர்ந்தனர் நாயகியாரரோ. (சு)

மிகுகளிப்புடன் மேவியுதயத்தில்
வெகுசிறப்பொடு விண்டுவைப்பூசித்துத்
தொகுபிராமண போஜனஞ் சூழ்ந்துமால்
நகுவிழாவு நடத்தத் தொடங்கினர். (எ)

தானஞ்செய்துற்ச வஞ்செய் தலையவர்
கோனறிந்திது செய்வதென் கூறென
ஞானராமநன் னமநும் வாய்வரல்
ஆனதின்று துயிலிடை யன்பரோ (அ)

என்றுநம்முடை வாய்வழி யெய்திடா
தின்றிராமநன் னமமெழுந்ததால்
நன்றுநான்மகிழ் கொண்டுந டத்தினேன்
மன்றலார்துளை வோனுற்ச வமென்றார். (கூ)

சக்கிரிபூசை செய்யாமற் சாப்பிடார்
தக்கபூசைப் பெட்டிதா னில்லாமையால்
மிக்கன ருளம் பரிஇ நேர்ந்த பின்னவன்
பக்கலா ளுய்த்தனர் பேழைபற்றியே. (௬)

அன்னவன்றேடி நோக்கினன் மற்றஃ தெங்கே
துன்னியதோ வெனச் சொல்லி விட்டனன்
மன்னிய வைந்துநாள் வரையும் பூசியா
இன்னலி னீருமுண் ணு திருந்தனர். (௭)

அனையர் தந்திட நிலையறிந்து ஸ்ரீதரன்
நினைவுறு கனவினி னேர்ந்தோர் வேதியன்
புனைவுருக் கொண்டவர் பூசைப் பெட்டியை
இனைவறத் தந்தனன் விழித் தெழுந்தனர். (௮)

பார்த்தனர் பெட்டியைப் பரிவு தீர்ந்துடன்
சேர்த்த மாடினர் தினஞ் செய்யும் பூசையைச்
சீர்த்த மாறனக் கினிதாகச் செய்துபின்
போர்த்த முதருந் தினர்பிழைப் பின்றாகவே. (௯)

இப்பரி சறிந்தன னிளைய தம்பியும்
தப்பு றவுருளோர் சாற்றத் தன்னுளே
மைப்புட னுறுத பித்திந் தக்கையற
வெப்படிக் கியற்றினே னென விளைந்தனன். (௰)

வந்து தன்றமை யனைவணங்கியான் செய்த
நிந்தனைப் பிழையினை நீபொறுக்கென
மைந்துற வேண்டின னுறவு மன்னியே
சிந்தையொன் றாய்த் தமக்கையிடஞ் சேர்ந்தனன். (௰௧)

நான்புரிபிழை பொறுத்தருள்க நன்றெனத்
தான்பணிந்த வரனுக் கிரகந் தங்கமுன்
றேன்படி பெற்றன னுகந்து நித்தியம்
வான்பணி செய்திருவரு மகிழ்ந்தனர். (௰௨)

பிளாபாயி திருவடிகளே சரணம்.

ஆகச்சரித்திரம் ௨௰௫-க்கு செய்யுள் சதுரா௮௰௪

முற்றிற்று

## ராமாபாயிசரித்திரம்.

வேறு.

காசியிற் சந்த்ராஜ னென்றோர் காவலன் சாதுக்கள்
பூசைசெய்வதின் மிக்கன்பு பூண்டுளோ னவனுக்கோர் பெண்
தேசுறு மிரமாபாயி மணம்புரி செவ்வி சேர
எசிலா மணஞ்செய் வித்தா ளொருவனுக்கியல் வதாக. (க)

மணமக னாகிவந்தோன் மாலரி பக்தி யின்ன
வணமென வறியான் செங்கண்மால் பெயர்நாவில் வையான்
புணர் விஷயங்களிற் செல்புந் தியனாகக் கண்டு
குணநலத்திர மாபாயி யாரனார் கொள்வதானார். (உ)

முன்வினை யின்னவாறு முடிந்த தென்றனுத பித்து
மன்வெகு நாட்செல் காலை ரமாபாயி வயிற்றோர் மைந்தன்
தன்றுசத் குணனாய் வந்து தோன்றி னன்றோன்ற வீன்றோர்
பொன்மகிழ் காந்தன்றன்னைத் தியானித்தெப்போது முற்றோர். (ங)

அருடரு கமலச் செங்கணையனே யெனக்கு வாய்த்த
தெருளிலாவ பக்தனுக்குன் சீர்தனைத் தெரியக் காட்டி
மருளறச் செய்து நின்சீர் மலரடிக் கன்பனாக
வருநலஞ் செய்வதென்றே வெனப் பிரார்த்தித்து வந்தார். (ச)

ஒருதினங் கணவன்றன்னை நோக்கியுத் தமர்க ளாக
ஒருவயிணவர் சாதுக் கடமை மனத்த லக்ஷியாமல்
கருதுயிர் வதைசெய்யாமலி ருத்தனற் கருமமாகும்
மருவதை செய்தான் மீளாநரகமே வாய்க்கு மென்றோர். (ரு)

மனைவி யாரவ்வாறோ தமற்றவ னுணர்ந்து கொள்ளா
நினைவுட னரிதினத்தோ ராட்டினை நேடிக் கொண்டு
யினைகொலை புரியவீட்டின் மேவின னதனைநோக்கி
இனைய இன்றயர் தனன்றன் றென ரமாபாயி சொன்னார். (சு)

சொன்னதுட் கொள்ளா தூனின் சுவைதனக் கின்பு கூர்ந்து
நன்னர் சேர்தயை யில்லானாய் நனிதுராசாரன் கொன்றான்
பன்னியா ரதனைக்கண்டு பரிந்திதற் கென்னை செய்வோம்
என்ன மிக்க ஏருண்டாகி யெண்ணினரினை யசெய்வார். (எ)

இந்தவூர்தனின் மாலன்ப ரெய்திய திலையோ வென்னச்
சிந்தை செய்தங்கோர் கோயிற் செறிந்திருந்தது தெரிந்து
நந்தல் செய்விடத்தைக் கொண்டு நந்தனுக் கூட்டித் தொட்டில்
முந்துறத் தூங்கவைத்தாருடன் மகன்முடிந்து போனான். (அ)

மகனிறந்த தனையத்தான் மார்க்க ளுகியர் தெரிந்து
முகமிகவாடிக் கோவென்றல றினாரழுது முந்தத்
தகவுறு தாயேயான ரமாபாயி தளர்வுறாமல்
ஜகபதி நாமநாவிற் செப்பியங்கிருந் தாராக. (௧)

கண்டவ ரவளைநோக்கி யுன்மனங் கலங்குறாமல்
அண்டின விதனை நோக்கிலாச் சரியந்தா னென்று
மண்டின ரழுதுசொல்ல மற்றவ ரழிவதான
பண்ட மென்றேனு மாயும் பரிந்தழிற் பயனென்னுரும். (௨)

எனவவர் கணவனுரேனிச் சிறுவயதிற் சாதல்
உனின் முறையாமோ வென்னவதற் கவருண்மை யானும்
பனகமெல்லணை சேர்கின்ற பரனருள் வானதற்கு
மனநல ரானசிர் சான்மாலரி தாசராமேறோர். (௩)

நம்மனைக் கெய்துவாரோ னன்னு மித்துயரந் தீரும்
செம்மலே யென்ன வெவ்வாறெ னவவன் வினவச் சேர
லும்மன நல்லோரைக் கூய்வந்தவர்க் குபசாரங்கள்
விம்முறப் புரிந்தன்னோர் தம்பாதத்தின் விமலதீர்த்தம். (௪)

மைந்தன் வாய்ப் பெய்தானந்த மகன்பிழைப்பா னென்றோத
முந்தவன் வியந்து சென்று முகுந்தன் வாழ்கோயிற் சார்ந்த
நந்தலி லடியார் தம்மையழைத்தக நண்ணச் செய்து
வந்தவர் தமைப்பூசித்து வந்தித்துப் பாததீர்த்தம். (௫)

சேயதுவாயிற் பெய்யவுட னந்தச்சிறுவன் றூக்கம்
மேயவன்போ லெழுந்து விளங்குற வியந்து கண்டு
போயதெம் பொருமலென்றன் பயந்தந்தப் பரிதர் தம்பால்
ஆயது பக்தி யன்றற்க கன்றது சேயசெய்கை. (௬)

அதுமுத லவனல்லோ ளுயனுதினம் பஜனைசெய்து
மதுவிரி துளவோன் பூசைசெய்வதில் வழுவுறாமல்
முதுநலச் சாதுசேவை முன்னின னரிதன் காதை
கதுவுற வினவி மாறன் ருசனுய்க் கலந்து வாழ்ந்தான். (௭)

ராமாபாயி திருவடிகளே சரணம்.

ஆகச்சரித்திரம் ௱௩-க்கு செய்யுள் [illegible]

முற்றிற்று.



# ராமராஜர் சரித்திரம்.

பரமசாத் துவிகராய் யிராமவுபா சகருமாய்ப் பகலுமல்லும்
தாமிகுமீ ராமசரித் திரங்கேட்டுஞ் சதுரராம் ராமராஜர்
அரண்மனையிலே ராமாயணம் படிப்போ ரிராமருக்கோ ரஞர்நேர்வான
த்ரம்யினவி லரசனிடர்ப் படலறிந்தி ராமஜெயஞ் செப்புகிற்பார். (க)

ராமவிஜயங்கேட்டுச் சந்தோஷித் துவருவார் நண்ணுநாளில்
ராமதனைத் தினம்படிக்கும் புராணிகரோர் நாளொயா யரசர்தம்பால்
ராமருளும் புதல்வனைப்போய் ராமஜயந் தனைமட்டுஞ் சாற்றுகென்று
நேமகஞ்செய் தனுப்புவிக்க மகன்ருதை சொன்னதனை நினைப்புறாமல். (உ)

பஞ்சவடி தனிவிளைய பெருமாளுஞ் சானகியும் பனிநீருண்ட
மஞ்சனநன் னிறத்தாளும் வதியுங்கான்மா ரீசன்மா னென்ருகிக்
கஞ்சமலர்த் திருமுன் போக்கண்டு வியந்திது தன்னைக் கவர்ந்து நல்கென்
றஞ்சனவண் ணனுக்குரைக்க வவன்றொடர்ந்து சென்றம்மா னகப்படாதால்.()

மாயமிம் மானென மதித்துவா யம்புதொடுத்திட மற்றதுதான்பட்டு
காயம் விழும்போதி லக்குமணாவென்று கதறிவிழக் காதிற்கேட்டு
நேயமிகு ஜானகியுன் றமையனுக்கே தோவவல நேர்ந்ததானீ
போயங்கே கண்டுவரு கெனவிளையோன் மறுத்துமவள் புகல்கேளாதால். (ச)

கூய்விழுந்தா னைவிவழியே தேடியகன் ருனந்தக் கொடியமானை
எயவன்ஜா னகிபால்வந் தினிமை சொல்ல விசையாட னியல்பு தேர்ந்து
பாயபன்ன சாலையொடு மண்ணகழ்ந்து தேரேற்றிப் படர்ந்தா னென்னும்
ஆயசமயம்படிக்க வரசர்கேட்டு ளங்கொதித்தா ரவசமாகி. (ரு)

படர்கின்ருன் றனைத்தொடர்ந்து பற்றுதற்குச் சதுரங்க படையுங்கூட்டித்
தொடர்கென்று மந்திரிக்குச் சொல்லவவ னவ்வாறே தொடர்தலாக
அடர்கின்ற சேனையுட னரசருந்தென் கடலளவு மடைந்துமுந்நீர்க்
கடலொன்றித் தனிச்செல்லு மரசர்மன நிலைதெரிந்து காகுத்தன்ருன். (சு)

ஜானகியுட னெதிர்வந்து தராபதியை நோக்கியிவட் களவுசெய்த
மனதில்வஞ்ச கனைக்கொன்று மீட்டுவந்தேன் போகற்கமன்றுவென்னச்
சினமிகந்து வேந்தர்திரு நாதனுடன் மீண்டுகளை சேர்ந்து நாதன்
றனதுபதங் களைவணங்கி நனிபுகழ்ந்து விடைபெற்றுச் சார்ந்தார் தம்மூர். (எ)

சார்ந்துமுன்போ லிராமசரித் திரங்கேட்டு வேந்தர்நகர் தங்குநாளில்
அர்ந்தநல்லன் புடனரியைத் தியானித்துப் பஜனைசெய்வா ரவர்நாமஞ்சீர்
சேர்ந்தநர ஹரிதாசர் தியானிக்கும் போதெல்லாந் திருமால்வந்து
நேர்ந்துதரி சனங்கொடுக்கு நிலைபெற்ருேர் நெடுமாற னவதாரங்கள். (அ)

ஒவ்வொன்றுந் தாம்வேட முறிற்சிட ரதற்கேற்க வுருவங்கொள்ளும்
செவ்வியராய்த் துணைசேரப் பல்லியங்கண் முழங்கடன்ற செய்வாரோர்நாள்
வெவ்வியதோர் நரசிங்க வேடங்கொண் டாரவர்பான் மேவோர் சிடன்
வவ்விநின்ற னிரணியனாய் மற்றொருத்தன் மகனாக வாய்த்தபோது. (௯)

மகனொ டிரணியன்வாது செய்விட்டுத் தூணுள்ளே வதிந்தார் தாசர்
மிகமுனிந்தெங் கணுமிருப்பா னென்னஹரி யித்தூணுண் மேவுவானோ
தகவுடனென் றிரணியனு ரேன்வினவி யெதிர்தூணைத் தாக்கவத்தூண்
அகமிருந்து வந்தகன கன்வயிற்றைக் கிண்டுகுட லனைத்தும் வாரி. (௰)

கழுத்திற்கு மாலையிட மெய்யேமாண்டான் கனகனென்றனைந்த
முழுத்தத்தை யனைவருங்கண் டோமென்று கூயலற முடிந்தோற் குற்றோர்
கிழித்தத்தை யரசிடஞ்சென் றுரைப்பமற்றங் கேனிர்முக நோக்கிவேந்தர்
கழித்தந்தச் சவந்தன்னைப் பின்புநீர் வருகென்று கழறக்கேட்டோர். (௰௧)

அவ்வாறு சவந்தன்னை மயானத்திற் கொண்டுபோ யனலுக்கீந்தார்
வெவ்வாறு தனைவிலக்க நரஹரிதாசனைக்கூவி வேடங்கொள்வீர்
செவ்வாறு தனைநடத்துந் தசரதராய் நுற்சிடர் சோகவேடம்
தவ்வாறு நடவாத ராமனுங்கை கேசியுமாய்ச் சார்கின்றோர். (௰௨)

அப்படியே வேடங்கொண் டார்கூத்துச் செயம்போதி லடவிராமற்
கொப்பின்முடி சூட்டுங்காற் கைகேசி தந்த்துயனைத் துரகசெல்லச்
செப்பியிரா மனையனுப்ப வாத்தாலே யதுதெரிந்து தசரதர்தாம்
இப்படியா யிற்றேயென் றிராமபிரான் றனக்கிரங்கி யினைந்துரைத்து. (௰௩)

மகனேரா மாவுன்னைக் கான்விடுத்திங் குயிர்வாழ மாட்டேனென்று
முகமனுங்கி மூர்ச்சித்தா விழைவிடுத்தார் நரஹரிப்பேர் முகுந்ததாசர்
தகவுடனக்கூத்தாடல் கண்டிருந்த பேரெல்லாஞ் சார்ந்து தாசர்
மிகவருந்தி யிறந்ததுமெய் யேயென்று சோகித்து விம்மலுற்றார். (௰௪)

மாடங்கொ ளயோத்திபதி ராமனுக்கா யிறந்ததனை வழுத்தக்கேட்டோம்
வேடங்கொண் டிராமனிடை மனம்வைத்துச் சாயுச்யத்தை மேயும்
பீடிங்குக்கண்டோமெய் யேயென்றங் கவர்பெருமை பேசலானார்
நீடன்பு கொடுராம ராஜருமா னுமங்க ணிசழ்ந்தி வாழ்ந்தார். (௰௫)

ராமானுஜர் திருவடிகளே சரணம்
ஆகச்சரித்திரம் ௩௪-க்குச் செய்யுள் ௪௱௯௰௪

முற்றிற்று





# ஓகரு சாவகார் சரித்திரம்.

———:○:(o):○:———

தீங்குறுத நன்ஞான மும்பிரேமை யுஞ்சிறக்க
ஓங்குசத் குணத்துத்தம ரோகருவென்போர்
நீங்குறுதரிபஜனை செய்நேயர் நல்வணிகர்
தாங்குலாவுறுமனைவி யார்கற்பி னிற்றழைத்தோர். (௧)

அந்தவம்மனை யார்வரு சாதுசஜ்ஜனரை
முந்துபூசனை செய்குனர் மோகமா மமதை
சிந்தைவிட்டியி ரனைத்திலு மிகுதயை சிறந்தோர்
இந்தமற்றிரு வரும்ஹரி நினைவினரொன்றும். (௨)

ஏழையாங் குடிகளை மிகக்காவல் செய்தென்றும்
தாழ்வுறுதுறு தினந்தொறும் பத்துப்பேர் தமக்கு
வாழ நல்லன்ன மிட்டுவெந் தீவினை வாரா
ஈழமீட்டுந ராயிரு வருமினி திருந்தார். (௩)

இன்னவாறிவ ருறுபொழு தொருதினத் தெம்மான்
அன்னவாமவர் தமைப்பரி சோதிக்க வமர்ந்து
மன்னனாகிய சாதுரூபங்கொடு நண்ணி
மன்னுமோகரு வெங்கென்றா னவர்மனையாரை. (௪)

சந்தைக்கெய்தினர் வருவரிங் கிருமெனத் தாழ்ந்து
முந்துற்றாசனந் தந்தன ரதுவிருய் முகுந்தன்
நொந்துற்றேன்பசி யாலிடு வீரென நும்மை
எந்தத்தேசத்து மியம்பிய தாலிவணென்றான். (௫)

என்றபோஜன மிடுகென வாசனத்திருந்தான்
அன்றுதம்மனை யகத்தரிசியி னொடுபருப்பும்
ஒன்றுமின்மையா லோர்ந்து தாத்தினைக் கொண்டு
சென்று நீள்கடை தன்னில் விற்றது கொண்டு சேர. (௬)

வேண்டுறும் பொருள் கொண்டு தம்மனை யகமேவி
ஈண்டு போனகஞ் செய்துவந்தோற் கன்னமிடலும்
ஆண்டிருந் தன்ன முண்பவனுன் வெகுநாளாய்த்
தூண்டு வெம்பசி யாற்றொலை வுற்றனன்று வண்டேன். (௭)

அன்னை நீயிடும் போனகத்தாற் பசியனைத்தும்
நன்னர் நீங்கின வெனச்சொலி நனிவயிறார
முன்ன ருண்டனன் கால்கரஞ் சுத்தி முற்றியற்றிப்
பின்ன ரம்மனைக் குட்புகுந் தடுக்கெல்லாம் பிறங்க. (௮)

தன்றிருக் கரத்தாற் றொட்டென் பசிதெறுதாயே
இன்று தொட்டுன தடுக்கலில் வேண்டுவ வெல்லாம்
சென்று தொட்டனையே யூறுமென்றுரை செப்பி
நன்றிருத்தி நல்லோர்க்க முதிட்டென நடந்தான். (௯)

மறுதினத் திற்றம் பதிவரக் கண்டிவண் வந்தார்
செறு பசிக்குண வீகென வொருபர தேசி
பெறுமடைக் கென்றனத்தை விற்றுப்பெறல் பெற்றே
அறுசுவைச் சொன்றியிட்டனெ னருந்திய பின்னர். (௰)

சாது நம்மனை புகுந்தடுக்கனைத்தையுந் தன்கை
மீதுறத் தொட்டெப்போது நீவேண்டுவ பொருள்கள்
கோதுறு துறுமடுக்கின் மற்றப் பொருள் கொண்டு
போது சர்ச்சனர்க் கனமிடு கென்றனர் போனார். (௰௧)

என்ன வோகரு வியந்தன ரிருக்கமே லோர்நாள்
மன்னி னாகஞ் சாதுசர்ச்சனர் பலர்வரலும்
அன்ன மீவதற்கேது மில்லா மறன்ன கத்துட்
டுன்னுசாது சொன்னதை யறிவோ மெனத் துணிந்து. (௰௨)

அடுக்கிற்கை யிடவிரா கன்மொக ராசில வனுக
எடுத்துக் கொண்டுவந் ததுகொடங் கெய்தினர்க் கெல்லாம்
கொடுத்துப் போனக முண்டவர் போனபின் குறித்துத்
தடுப்பி றம்மனை வியர்முக நோக்கினர் தாமே. (௰௩)

நானிலாதபோ தெய்தினர் சாதென நாடேல்
ஞானநாயக னேயுன்மு னனுகின னங்காய்
ஊனமின்றியுன் முன்வந்த வுத்தம னென்முன்
ஏனடைந்தில னெனப்பரி தபித்தன ரிரங்கி (௰௪)

பத்தபாலனு கோவிந்த வுயர்பரந் தாமா
மெய்த்த சீர்க்கரு ணாநிதியேயென வேண்ட
மைத்த சோதியுன் றனைத்தரி சிக்குமா நயனம்
மெத்தவும் பசித்துள தெனத் தோத்திரம் விளைத்தார். (௰௫)

அந்தவோ கருவன்பின்மிக் குடைமையை யறிந்து
நந்தகோன் மகன்சங்கு சக்கரத்தொடு நாற்றோள்
விந்தைசேர் பொலனம் பரமேவு கிரீடம்
முந்துறு புராதிகள் விளங்குற முன்னர்வந்தான். (௰௬)

மயிலெருத் துறழ்மேனியன் முன்வரக்கண்டு
செயிரறுத்தவர் மாயவன் றிருவடி தாழ்ந்து
நயமுறுத்து சோடச வுபசாரமு நல்கி
மயர்வறப் பலதோத்திரம் வகுத்தனர் மாதோ. (௰௭)

மற்றவர்க் கபயந்தந்து மாயவன்மறைந்தான்
சொற்ற வோகரு தம்மனை துன்னுவோர்க் கெல்லாம்
நற்று போனக நல்கினன் ஞானநாயகனை
உற்ற தம்மனை வியரொடு பஜனை செய்தூற்றார். (௰௮)

ஓகரு சாவ்கார் திருவடிகளே சரணம்

ஓகச்சரித்திரம் முடிக்கு செய்யுள் சஅ

முற்றிற்று

# ஹரி அனந்தவைஷ்ணவர் சரித்திரம்

அரியனந்த வைஷ்ணவரெனும் பெயரருளின் விஞ்சும்யதி பதிமுனே
புரிய நின்றநிய தியினி ணங்கிவரு புனிதரன் பின் மிருபத்தியிற்
பெரியர் விண்டு நிலை வினர்நிலம்படி பிராணிதோறு மருள்பெருகிமாற்
குரிய பூசையினை விடுதலின்றி யியலுறுவ ரெங்குளவு முணருவோர். (க)

தங்கியர் பூசை புரிதலின் முயன்றுறுவர் ஜனரநேகர் கடமக்கிதம்
மங்கிய நின்ற பிரபத்தி நிஷ்டையருள் வலியராய்ப் பலரும் வரல்செய்தார்
அதிலொருத்தனவருக்கு மிக்க பிரியத்த சேவைபுரி பவனவூர்ப்
பக்கமொன்றியில் பிச்சைமாவொரு படிப்பேறீ இத்தினமும் வந்தரோ (உ)

சற்குருத்தனது சன்னிதானமுற வைக்கமற்றவர் தயாமிகும்
பொற்கணிற்பெருகு பார்வையிற் பெருகிமா வெவர்க்கு நிறைபோனகம்
நிற்கமற்றசவ நாளநேக நெடிதுற்ற தாகிபுற வோர்தினம்
நிற்குணத்தர் தெரிராமவின்பர் பல சீடரோட நகர் சேர்ந்தனர். (௩)

அந்த வூரிலொரு புறமிருக்கு மளவரியனந்தரொரு சீடன்மா
வந்தவீடு மிடவந்த போதிலவண் ராமவின்பரை யெதிர்ந்து நன்
குந்து மன்பொடு பணிந்தனன் அவனையுற்று நோக்கினருணர்ந்திவன்
சந்த தங்குருவின் விஞ்சு சேவை புரிசத்குணன் குருதனக்கிதன் (௪)

நாளை நேரு முதயத்திறந்து படு மற்பவாயுடனை நண்ணிறன்
றளவாயுனில னென்றறிந்தனரதைத் தெரிந்து விடை நேர்ந்து போய்
அளநின்றதன தாரியன் சரணடைந்திராம நலரன்று சொல்
கோளைவந்தனையுடன் கிளத்தியுயர் குருபணிக்குறைவு கொண்டுளேன். (௫)

என்று நும்பணியியற்ற வெண்ணியுள வெற்கிவாறெதிர் வதாயதே
நன்ற பாக்கிய மொரத்தனைப்பெரிது நனி வெறுத்தழுதிரங்கிறன்
அன்றவண் சொலுமை ரரியனந்தர் பெருமாணிறைந்த வருளாலுனக்
கொன்று மில்லை குறையொன்றுரு மரண நாளையென்றுறுதியோதியே. (௬)

மறுதினத்துதய மாருமுன்னெழுதலாகி வண்புனல் படிந்து நன்
குறுகியுற்றுவரு சீடரங்கொருத மருகிருக்கவுரை செய்துளே
நிறுவலுற்று நெடுமாலை யுற்றனர் நிலாவு வெள்வளை யொடாழிபொன்
அறுவைகுண்டல கிரீடநூபுரமனைத்து மேர்பெற வணைந்தனன். (௭)

கருநிறங்கொளரி யெய்த வச்சகுண வடிவையன் பொடவர்கண்டு கொண்
டுருகிமற்ற வடிவிடையயித்துள முறைந்த போதிலெ திருற்றனன்
மருவு சீடனுயிர் கொளுவதற்கு நமன் மாலுமன்பரு மனங்களித்
தொருவுரு துறலு மாழிமேலுழல் வதுந்தெரிந்து நெடிதுற்றனன். (௮)

யாமநேரமவணுற்று மங்கமய நேரிடாம லயர்வெய்தியே
போமதாயின னெழுந்திடர் தரியனந்தர் யோகிடை பொருந்தல் கண்
டேமமாயரு கிருந்த சீடனுயிரே குகாலமிகழ் வெய்தி நாற்
சாமமாயினது சாமியென்றுரை சரத்தெரிந்து கண்விழித்தனர். (௯)

கண்டிறத்தலு மெழுந்து சீடனவர் காலுறப்பணிவு செய்தவண்
அண்டுறப் பிறகு மறுதினத்து தயமான காலையிலெழுந்துடன்
பண்டெனக்கடி திரக்க வெய்தினது பார்த்திராம நலரதிசயம்
கொண்டிறப்பில தெவ்வாறெனத்தனி விறைவலுங்குரு வினருளினால். (ய)

யானகன்ற னனிறப்பை யென்றினிதினே கினன்பிற கெழுந்து சீர்
ஞான நன்குடைய வரியனந்தரிடை நண்ணராம நலர் நன்குசேர்
மோனர் முன்பணிய விவரும் வந்தனை முடிக்க நேருடன் முயங்கினர்
ஆனபின் பரியனந்தரேது முடையன் பினுக்க வதியில்லையால். (யக)

உமது சீடனுயிர் காத்திர் நேரொருவரும் முமக்கிலை யெனத்துதித்
தமராம நலரேயெலாம் வினையுமாழி மாலருளு மருளினால்
நமரிலென்வினையு மென்னராம நலர் நன்றெனத்த மிடை நண்ணினர்
தமருடன்றிரு மணளனுமை நனி சாற்றியிங்கிவர் தழைத்துளார். (யஉ)

ஹரியனந்தவைணவர் திருவடிகளே சரணம்.

ஆகச்சரித்திரம் ருரு க்கு செய்யுள் சநுகூாசயசு

ரு ௱ ௬ ௱ ௬

# ராமசந்த்ரா பட்டர்சரித்திரம்

வேதசாஸ்திர நிபுணர் நிரபேக்ஷர் மண்பொன்கன் மணிவே றென்னார்
கோதறுமக் கினிதோத்திரம் புரிவா ரரிபஜனை குறைவதில்லார்
மேதகுதாசரி பியென்று நதிக்கரையி லமளநே ரெனவிளங்கும்
தீதறு பூரதனில் ராமசந்திர பட்டரெனும் பேர்திகழ வாழ்வார்- (௧)

அவ்வூரி லரசனுக்குக் குலகுருவாய்த் தாமிருந்து மருந்தல் பிச்சை
தவ்வாதா ராய்வரு நாளரசனது மனைவியவர் தமக்கே தேனும்
செவ்வாகப் பொருளுதவ நினைத்தவர் தந்தேவியரைச் சேரக்கூவி
ஒவ்வாத விலைபெறு நன்மணி யணிகளு தவியுவப்புடன் வணங்கி. (௨)

இன்றடி யேன்றருவ தினீர் வெறுப் பின்றிக் கொளல்வேண்டுமென்னவேண்டி
நன்றுமனைக் கறுப்புவிக்க வவர்மீண்டு தம்மகத்தினண் ணக்கண்டு
துன்றுபட்டரிந்த வுபாதியை யேதுக்காக நீசுமந்து வந்தாய்
ஒன்றுமில னமைந்திரு மாலிப்பொருள் கடமிலாசை யுளத்துண்டானால். (௩)

என்றுதிரு மாலடி யாரிவை கூறமகிழ்நர் சொல்வ திதமே யென்ன
அன்று கொணர் பூஷணங்க ளனைத்தையுந் தம்மகத் தோமகுண்டத் தாழ்த்தித்
துன்றுமுபா திரகிதராய்ப் பத்தினியா ரிருக்கு நிலைதுலங்கக் கண்டு
நன்றுமகிழ் வுடையராஞர் பட்டரிப் படிக்கு நடந்த செய்கை. (௪)

அரசனறிந் துடன்றனது குலகுருவாகிய பட்டரகத்துக் கெய்தி
விரைவி லடி வணங்கியமக் களித்த வணிகளெல்லா மீட்டு மீகென்
றுரைசெய்ய வருளாளாய்த் திருமாலை வேண்டுதலு முடனேயங்கு
வரைசெய் துறுமோ மகுண்டந் தனிலிருந்து புறப்பட்ட மணிப்பூ ணெல்லாம்.

சாந்தரு போதிருந்ததினுஞ் சகைமிகையா யவ்வணி கடயங்கக் கண்டு
வேந்தன் வியந்த வடியிற் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து மேவ
வாய்ந்த வரசனைப் பார்த்துப் பட்டருன தணிகளெல்லா மகிழ்விற்கொண்டு
சார்ந்திடு னதகத் தென்னக் கொடுத்தது கொள்ளே னென்று வேந்தன் சாற்ற.

பட்டரந்த வூரிலுள விரவலர் களையவரைப் பரிவிற் கூவி
இட்டமுட னரசனுத வணிகளெல்லா மினிதளித்து மகிழ் வியற்றி
வட்டமதிக் குடையாற்கு விடைகொடுத் துபாதி யிலராகி வாழ்ந்தார்
அட்டமகிஷிகளோடு மறுபதி னுயிரர் மகிழ் நற்கன்பு கூர்ந்து. (௭)

ராமசந்திரபட்டர் திருவடிகளே சரணம்

ஆகச்சரித்திரம் ருசு-க்கு ...

முற்றிற்று

மழைகனத் துவரு ஷிக்க யாவரும்
தழையுளத் தொடத்தாசரை நோக்கியே
குழை வதற்றுக் கொண்டாடின ராகவீ
ரொழுதினத் தளவும் பெய்ததே மழை. (௨௰)

பகலும் ராவும் விடாது பயோதரம்
தகவ தாயந்த நாடுதழைப் புற
மிகவும் பெய்த துகண்டந்த வேந்தன்வந்
திகழ்விலுத் தமரைத் தொழுதேத்தினன். (௨௧)

ஐயயான்றரு கின்றதை யாதரம்
செய்து கொள்கெனச் செப்பினன் வேண்டலும்
மெய்யர் யாதொன்றும் வேண்ட லில்லெனினி
பொய்ய தாமுடல் போக்குற வேண்டினேன். (௨௨)

ஆதலாலடை வாகச்ச மாதியில்
காதலோடுற வேகுழி கல்லியே
நீதரற்கு நினைகென வேந்தனும்
கோதறக்குழி கல்லிக்கொடுத்தனன். (௨௩)

தாசர் ஸ்ரீ ஹரிதன்னைத் தியானிக்க
நேசமாய் நெடுமாலு முன்னெய் தினன்
ஆசறத் தந்தனன் அபயந்தரச்
தேசம் யாவுந் தெரிந்தவண் மேயின (௨௪)

வந்தெலோரு மலரொட நீரப்பொழி
சிந்த நின்றனர் சேர்ந்துள சாதுக்கள்
முந்து தாளமிர்தங்க முழங்கயாழ்
தந்திதை வந்து தண்ணிசை பாடினர். (௨௫)

ஸ்ரீ தரன்றிரு நாமஞ் செழிப்புற
ஓதுபாட லொடாடின ராயுறத்
தாதர் வந்த ஜனங்களை நோக்கி யென்
றிதிரீக்ஷை கொள்வோர் ஜன்மந்திர் வராம். (௨௬)

என்று சொல்வதை யாவருந் தேர்கிலர்
நின்ற போதொர நாதனெடிது வந்
தொன்றி யெற்றுபதேச முறைக்கென
அன்றவற்குபதேச மளித்தனர். (௨௭)

மூக்கிற் குத்தினர் நத்தை முயங்குற
ஆக்கித்தங்கை வளையுமவன் கையிற்
சேர்க்கப் பெய்தன ராசியுஞ் செப்பினர்
ஊக்கத்தோடு சமாதியிலுற்றனர். (௨௮)

வளையுநத்தும் வனைதுகிலுங் கொண்டு
களைகளையவர் சீடர் பொன் காதலன்
வளைவிறமம் வழுத்தினர் வாழ்த்தனர்
விளைவதாயிற்றின்றும் மந்த மெய்ம்மையே. (௨௯)

ஸஹக்ஷா பக்தர் திருவடிகளே சரணம்

ஆகச்சரித்திரம் ருஎக்கு செய்யுள் சஅகூாஅ௰

முற்றிற்று



# பன்ஹாஜிரசபுத்திரர் சரித்திரம்

குஜராத்தி தேசத்தில டோகர பூரெனு மூர்க்குக் கோவாயேதும்
பிசகாத குமான் சிங்கு தனக்குமிகு பிரியராய்ப் பெயர்கிலாராய்
வசிஞான பன்ஹாஜி ரசபுத்ரர் ஸ்ரீ ஹரியை மனத்துட்கொண்டு
முசியாமற்றிரு நாமமொழி வாராய்ப் பொய்யிலராய் முயங்கு நாளில். (க)

வந்துள தீபாவளியினிர விற்றீ போற் சவத்தை மன்னன் செய்தான்
முந்தரசனிடத்திருந்த பன்ஹாஜி நள்ளிரவின் முயன்றெழுந்து
தந்தணிவில் கஞ்சுகத்தை கசக்குதலு மரசனது தன்னைக் கண்டேன்
இந்தவகை யிப்போது செய்கின்றீரெனக் கேட்கவிவர் சொல்கின்றார். ()

துவரைதனிற் றீபோற்சவந் திகழ்கின்றது திழாய்த் தொங்கலானுக்
கவணுளவர்ச் சகராடை பூண்களால லங்கரித்தாரதி செய்போதில்
உடமையிலா னங்கிதனி னெருப்புற்ற ததுதீர வுஞற்றல் செய்தேன்
தவலருஞ்சீ ரோயென்றா ரதுகேட்டாச் சரியமிகத்தழைந்து வேந்தன். (௩)

இப்போதக் கண்ணனெந்த விதத்தாடை யுடுத்திருக்கின்றான் சொல்கென்ன
மெய்ப்போதர் பச்சையுடுப் பெனவிளம்ப ராவடா வூர்க்கு வேந்தன்
அப்போது இலிகிதனை சட்டகனுதவின வனுற்றான் றேர்வானாய்
அப்போ தேவரைந்துய்த்தான்றுவனைக்கோ யிலினேதாச் சரியமென்ன. (௪)

சட்டகனங் கெழுதியுய்த்ததைத் தெரிந்து கண்ண பிரான்றனக்குத்தேகத்
திட்டது வோபச்சை யுடுப்பதிற் கருப்பூரத் தீபமியற்றும்போது
பட்டது தீயதைக் கசக்கிய வித்தனன் பன்ஹாஜி யென வரைந்து சேர
விட்டனன் மற்றது கண்டு குமான் சிங்கு மிகவியந்து விளம்புகின்றான். (௫)

இங்கிருந்து மங்குளதை யறிய வல்லீர் நீர் திருமாற்கேற்ற தாசர்
உங்கள் பெருமையைத்தெரிய வல்லேனே யானென்ன வுவந்து கூறித்
தங்குமவர்க்கிரண்டு கிராமந்தந்துஞ் சேவை தினந்தருதல் வெண்டும்
எங்களுக் கென்றினிதோ தஹரி நாமமோது கவெப்போது மென்றார். (௬)

வேறு.

என்ற சொற்படி யேந்தலும்
நன்று நாம நவின்றவூர்
ஒன்றினேன் புகலுத்தமர்
துன்றினார் துவரைக்கணே (எ)

பன்ஹாஜி ரசபுத்திரர் திருவடிகளே சரணம்.

ஆகச்சரித்திரம் ருஅ க்கு செய்யுள் சதுசூளஅடஎ

முற்றிற்று



# ஜயமல்லராஜர் சரித்திரம்.

———:○:(o):○:———

மேடமெனு மூர்க்கரசர் விண்டு பூசை யிற்றினமும்
சோடசோ பசாரமுடன் பூசித்துத் தொழுது துதி
நீடவொரு ஜாமபரியந்த மொரு நினைவினராய்
மாடெவரும்பூ ஜாகாலத்தில் வராதுற வுருத்தார். (௧)

ஜயமல்லராஜ ரெனத்திரு நாமந்தான் விளங்கப்
புயலென்னுந்திரு மேனிப் பொன்று தன்றிரு நாமம்
நயமன்ன வெப்பொழுது முச்சரித்து நனிவருவார்
தயைமன்னு மற்றவர்க்கோர் தம்பி தனக்கிராச் சியத்தில். (௨)

சமபாகம் பெறவேண்டித் தானவ்வூர் விட்டயலில்
அமர் வாளைச் சேனைபல வமைவாகச் சேகரித்து
தமயன் விண்டு பூசையிலே தானிருக்குஞ் சமயத்தில்
சமர் செய்து கோட்டை தனைத்தான் பிடிக்க வெண்ணினான். (௩)

சதுரங்க சேனையுடன் றான் வந்து கோட்டை தனை
முதிர்கின்ற சினத்தோடு முற்றுஞ் சுற்றியும் வளைந்தான்
அது கண்டு ஜயமல்ல ராஜருடன் மந்திரியர்
எதிர் சென்றத்தளத்துடனே ற்றிக லதிகமாய்ச் செய்தான். (௪)

வந்த வெதிரிகளடங்கார் மேற்கொண்டு வலிந்தார்
அந்த விறலினை யறிந்து மந்திரியு மரசரையும்
தந்தவன்னை தனக்குறைப் பத்தாய் பகைஞர் செய்வலியும்
இந்த வமையத்தென்னை செய்வதென யினைவுற்று. (௫)

அரசர் தமக்கறிவிக்க வேண்டிய தென்றதை நினைந்த
விரைவுற்ற மந்திரி யிவ்வேளையவர் பூசையிலே
பரவுற்றுரைசச் சொல்லத்தாய் பரிவினுடன் வந்து
புரவலர்க்குத் தெரிவிக்கப்பூசை புரிந்திருந்தவரும். (௬)

தாய்க்கு மறுமொழி சொல்லார் சாமனென்றே சொன்னார்
வாய்த்த கருணை நிதியு மிவனம்மை மனத்திடைவைத்
தாய்க்கொன்றுங்கூறு மல மர்கின்றான் மனந்திரும்பான்
எய்த்தியலும் பூசை முடிவளவு மெனவே யெண்ணி. (௭)

உடன் சகுண ரூபங்கொண்டொரு குதிரை தனிலேறி
அடர் செங்கை வாளுடனே யாயுத மெல்லாந் தரித்துத்
திடமன்று கோட்டை வாயிற்கதவைத்திறந்து கொண்டு
படர்கின்ற சேனைதனிற் பாய்ந்தினை வரையும் பகைத்தான். (௮)

சேனைவிரைந் தோடினவச் செய்கையெல்லாங் கோட்டைமதில்
மேனிறைந்த நகரார்கள் பார்த்துவியந் திவ்வீரன்
தானொருவன் யாரெதிர்த்த தளங்களையெல் லாஞ்சாடிக்
கானவழி விரைந்தோடக் கலக்கின னென்றுறப் புகழ்ந்தார். (கூ)

வாசிமேற்கொண்டிருந்த வயவீரன் ஜயமல்ல
ராஜனொரு தம்பிதனை நனிசாடி யுறப்பிணித்துத்
தேசுமிகு கோட்டைக்கு வந்துசெறிந் தமைச்சனிடை
யாசறத் தந்தனன்மறைந்தா னவனையவன் சிறைப்படுத்தான். (௰)

பூசையுடை வேமுடித்துப் புரவலனார் புறம்வந்து
நேசமிகு மந்திரியை நோக்க வவனிகழ்த்தினன்
தேசுமிகு சாமளரு பத்துடனோர் திறல்வீரன்
ஆசையுடை யுடுத்தினறு யாயுதங்கள் பலதரித்து. (௰௧)

குதிரையின்மே லேறிவந்து கோட்டைவா யிலைத்திறந்தங்
கெதிர்நின்ற சேனையெல்லா மிரியச்செய் தானபின்பு
முதிர்கின்ற கோபமுடன் முடுகியதம்பியைப் பிணித்துப்
பதிரின்றென் னிடைத்தந்து பெயர்ந்தனன் மற்றவனெவனோ. (௰௨)

தெரிகிலேன் றம்பிதனைச் சிறைப்படுத்தி னேனென்ன
அரசர்பிரான் றிகைத்திருசா மளன்செய்கை யெனவறிந்து
பாரியவென் பொருட்டாயிவ் வளவுபரி வுறக்கொண்டான்
பிழைசெய் தழுவாயின னென்றுமிகுந் துயரமேற்கொண்டு. (௰௩)

சாமளரு பங்கொண்டோன் றனைக்குறித்துப் பலவிதமாய்
நேசமாவ ராய்ப்புலம்பித் துதிகள்பல நுவன்றுதம்பிக்
காமளவு சேவைதந்தா யானென்ன வபராதம்
சேமமளமேய்த் தோய்செய்தேன் சேவையெற்குக் கொடாதொழிந்தாய். (௰௪)

என்றரசர் புலம்புதலு மிவர்நினைவெல் லாந்தெரிந்து
குன்றுநடை கொண்டோன்ச குணரூபங் கொடுதோன்றி
நன்றரசர் வணங்கவப யந்தந்து நேர்மறைந்தான்
பின்னறையவர் தம்பிதனை வரவழைத்துப் பிணிப்பவிழ்த்தார். (௰௫)

தம்பிபட னவர்தாளிற் ருழ்ந்தெழுந்துந் தகைதெரியேன்
வெம்பியென தறியாமை யால்விளைத்த மிகையெல்லாம்
நம்பிபொறுத் தருள்கவென நயந்துருக்கு மணிநாதன்
எம்பியுன்மு னெய்தினனே லெவருனக்கு நிகராவார். (௰௬)

நீவாய்த்த பாக்கியமே பாக்கியமென் றுறநிகழ்த்தி
மேவாத பத்திமொடு வியன்மார்பத்துற வணைத்தார்
தாவாத வன்புகொடு வயிரமின்றித் தாம்வாழ்ந்தார்
மேவாம லிருவருந்தா மோதரனை வழுத்தியுற்றார். (௰௭)

வேறு.

உற்றகா லந்தன்னி லொருதச்சன் றன்னோன் முன்னோர்
பெற்றநாற் படியேகோயி றுலங்குயர் வாகக்கோலி
மற்றது தனக்குக் கர்ப்பக் கிரகமா மணியினாலும்
முற்றவுந் தங்கத்தாலு முதிர்சிறப்புள தாச் செய்து. (௰௮)

அதிலொளிர் முகுந்தன்றன்னை யன்பொடு பிரதிட்டித்து
எதிர்செலும் வாயிலின்றி யெவருஞ்செல் லாமலோங்கும்
மதில்சுல வுறநூலேணி வழிவயிற் றூனுட்சென்று
கதிதருமமலன்றன்னைக் கண்டுபூ சித்துப் போற்றி. (௰௯)
சன்னிதி முன்னேயோர்சார் தங்கிவாய் மோனமாக
மன்னிநா ரணனை யுள்ளம் வதிதரக் கொண்டென் னுள்ளே
துன்னுமா தவனேயைவர் தூதனே துளவமார்பா
என்னித யத்துக்கெய்து மிப்படி யென்கண்காண. (௨௰)
வெளியிலு மகிழ்ந்துகாண வேண்டுமென் றேதுதிக்க
களிகொடு முகுந்தனோ கம்புசக் கரங்கட்கம்வில்
ஒளிதரு கதைகொண்டொண்ணூ லொடுமணி பதுமத்துப்பொன்
மிளிர்தரு மார்பு செங்கேழ் விடுமணிக் குண்டலம்பூண். (௨௧)
பொன்னுடை துலங்கப்பாதம் பொலிசிலம் பொலிக்கச்சென்னி
மின்னுறு கிரீடம்பொற்ப விளங்கினன் விளங்கக்கண்டு
தன்னுளத் தடங்காவின்பந் தானுற முகுந்தன்பாதம்
மன்னுசெங் கரத்தாற்பற்றி மயிர்புள கித்துக்கண்ணீர். (௨௨)
வார்ந்தவ சத்தனாகி மணித்தவி சதனிலேற்றிச்
சார்ந்தசோ டசோபசாரந் தனித்தனி நிரம்பச் செய்தங்
கார்ந்தபின் பரியங்கத்தி லமையக்கண் வளர்த்திப்பாதத்
தோர்ந்துகை வருடியென்போ லுளர்கொலோ வொருவரென்று. (௨௩)
எண்ணினன் சாமியோக நித்திரை யியல்வதாக
கண்ணிய வரசன்முன்போ லனுதினூலேணிமார்க்கங்
கண்ணிய வரண்மனைக்குட் கலந்துபின்னிவ்வாறுகப
பண்ணினன் பலநாளாகப் பலருமஃ தறிவுறாமல். (௨௪)
மற்றொரு தினத்துட்சென்று வந்த நூலேணிதன்னை
அற்றைநா ளெடுத்திடாம லயர்ந்துபோய்ச் சன்னிதிக்குள்
உற்றரி சேவைதந்தங் குறைந்தன னாகவன்னான்
செற்றமின் மனைவிவந்து செறிந்தநூ லேணிமார்க்கம். (௨௫)
சென்றங்கு நோக்கக்கண்டாள் செறிபரி யங்கமீது
மென்றுயில் புரியுஞ் சாமி மெல்லடி வருடக்கொண்டு
முன்றங்கு கணவன்றன்னை முகுந்தனைப் பணிந்துள்ளன்பு
துன்றுற வவசமாகித் தோத்திரம் பலவுஞ்சொன்னாள். (௨௬)
அவளன்பும் பணிவுந்தேர்ந்த வாரியன் மனமிரங்கித்
துவளரு கருணைநோக்கஞ் சூழ்தலு மரசன்கண்டிங்
கிவளெவ்வா றெய்தினாளென் றெண்ணிமற்றவளை நோக்கி
குவளையொண் கண்ணாயெவ்வா றெய்தினை யென்றுகூற. (௨௭)
இன்றுநூ லேணிதன்னை யெடுத்திடா தெய்தினீர்நீர்
நன்றது கண்டுள்வந்து நானிந்தப் பேறுபெற்றேன்
என்றனள் வணங்க நன்றென் றிருவருந்தினந் தோறெய்திக்
கன்றது குணிலாக் கொண்ட கண்ணனைச் சேவித்தார். (௨௮)

ஜயமல்லராஜன் திருவடி நமோசரணம்.

ஆகச்சரித்திரம் ௬௰க்குச்செய்யுள் ௪௲௫௱௮௬

முற்றிற்று

# ஸ்ரீ தரபண்டிதர் சரித்திரம்.

யாவரிடத்திலு மேவி சுவாச மியன்றோராய்
ஒவறுகால மெலா மரிபஜனை யொருவுகில்லா
தேவரு வாரவர் பத்தினி கற்பினிலே மிக்கார்
தாவறு நிர்மல சித்தமுடன்றனி தாம் வாழ்வார். (௧)

ஆயவர் ஸ்ரீ தரபண்டித ரென்றினிதா நாம
மேயவர் யாரும் விகற்ப முரைக்கினு மெய்யென்னும்
தூயவரோர் தினம் யாத்திரை மேவுறணிந்தாரா
யேயவர் பத்தினியார் பரிமேலுற வெய்துற்றார். (௨)

வாசியை யோட்டி யோராரணியந்தனில் வருபோது
மாசிழை சோரர்கள் வந்து தொடர்ந்தனர் மார்க்கத்தே
ஆசிலர் பத்தினியார் தொடர் வுற்றடை வாரைக்கண்
டேசிதர் வுற்றனர் நெஞ்சு துணுக்கெனவே சொல்வார். (௩)

பொழுது மறைந்தறு போழ்து வனத்திடை புக்குற்றோம்
பழுதுற மென்று பயந்தன னென்றவர் பத்தாவைத்
தொழுது திரும்புவம் வந்தவழிக் கொடெனச் சொல்லக்
குழுமின சோரர்கள் யாந்துணை யென்றுகுறிக்கொண்மின். (௪)

அஞ்சலிரென நீருரை செய்வதினுலச்சம்
மிஞ்சுதநீர் நிலம்யாமி வணுஞ்சொலின் விசுவாசம்
நெஞ்சுறவே பிரமாண மியம்புறினோர் வோமென்
றெஞ்சலிலாஹரி நேயரியம்பலுமே சோரர். (௫)

உம்முடனெம்மிலு மோவகிலாதுறை யோர் சான்றாம்
செம்மலிராமனறிந்துற வெம்மிடை சிதகில்லை
யம்மினெனச் சொலலுஞ்சதி புருஷர் மனந்தேறித்
தம்பினடந்தனர் பண்டிதரோடவர் சார்வாராய். (௬)

துறைவில் பரம்பொருளாகிய வார்த்தைகள் கூறுற்றோர்
சிறை தொக வந்தவர் பண்டிதர் தந்தலை சேதித்துத்
தறையுறலுங் கலனைடை யெலாங் கொளருஞ் செய்தார்
பிறைநுதலார் பரி நிலவினராயது பின் பார்த்தார். (௭)

பதிவிழு மோசை தெரிந்து திரும்பினர் பார்த்தாரைச்
சதிபுரி சோரருன்றனை வெங்கொலை தான்செய்தோம்
வதியிடை நீயதை நோக்கினதாற் பயன் வாராதென்
றதிர்குரலாயுரை கூறலு மாதரசானார் தாம். (௮)

நீர்கரி யென்றுரை யான் மகிராமனு நேர்ந்தானே
சார்கிலனோ வென நோக்கின னென்றவர் சாற்றுமுன்
சீர் கொளிராமனெனேந்தனுவைக் கொடு சேர்ந்தங்குள
நேர்களர் யாவரையுங் கொலை செய்தனனி மிடத்தே. (௯)

ஸ்ரீ தரபண்டிதர் தம்மிடை வந்தருள் சேர்கண்ணால்
மேதக நோக்க வெழுந்தனர் சான்றென மேவுற்றோன்
ஆதர மோடிவனைய்தினனம்மை யளித்தற்கென்
றோதினர் பத்தினியோடு வணங்கிட வுறுராமன். (௰)

அவ்விருவர்க் கபயந்தரல் செய்தவர் பின்பாக
வெவ்வன நீங்குறு காறும் வழித்துணை யாய்மேவி
எவ்விதமோமறை வாயினன் மற்றி வருந்தீர்த்தம்
செவ்வயினுடின ரரிபஜனஞ்செய்து திகழ்வுற்றார். (௰௧)

## ஸ்ரீ தரபண்டிதர் திருவடிகளே சரணம்.

ஏகச்சரித்திரம் கூட்டுக்கு செய்யுள் ௪௬௭

முற்றிற்று

# ஹரிபாளதாசர்சரித்திரம்

சாதுசஜ்ஜனர்க்குப் பூசை தகச்செய்தங்க வருக்காடை
ஒதன முதலதான முஞற்றரி பாள ரென்போர்
மாதனர் கால மெல்லா மாதவனுமந் சொல்வோர்
நிதறுதானத் தாலே பொருளெலாஞ் செலவு சேர. (௧)

ஆயினு மிவர் தங்கீர்த்தி ஹரியடியார்கள் கேட்டு
மேயினராக மற்றோர்க் குதவுற வெறுக்கையில்லா
தேயினே வுறலாயில்லை யென்பதந் திசைதிலாராய்
மீயுயர் பொருள் கவிட்ட வேண்டினர் இருடர்களாம். (௨)

கொண்டனர் மார்க்கஞ் சொல்வோர் கொடு வருபொருள் களைந்தும்
மண்டினர் பயமுறுத்திக் கவர்ந்தனர் ஒரு சாதுக்கட்
கண்டுறு திருத்தி செய்வ தாயின ரானபோதும்
விண்டடியார்கள் யான் செய்வதில் விருப்புறுத லொன்றே. (௩)

எனக்குறுபயன் மற்றீவ தெவர் பொருளோவவர்க்கே
தனத்தகுந்தரும மென்று துணிந்தபி மான மின்றி
வனத்துழாய் மார்பன்றொண்டர்க் குதவினர் மருவு நாளோர்
தினத்திவண் வருஞ்சாதுக் கட்கீய தொன்றிலதைத் தேர்ந்து. (௪)

அம்புவிலங் கைகொண்டோராரணியத்திற் சென்று
பம்பியிங்கெவர் நேர்வாரோ வெனவழி பார்த்திருக்க
நம்பு மவ்வழியில் யாரு நடப்பதில்லாமை கண்டு
வெம்புவர் பசியாலின்று வீட்டின் மேவுறுஞ் சாதுக்கள். (௫)

என்செய்வது மெனத்துன்பத்தின் மூழ்கினரிருப்பத் தேர்ந்து
மின்செய் பொன் மார்பனங்கோர் தனவணிகன்வேடத்தை
மன் செய்து மனைவியோடு வஸ்திரபூடணஞ் சிறக்க
நன்செய் பண்டியின் மீதேறி நடத்தியவ்வழி வந்தானால் (௬)

வருவதை நோக்கி நின்ற மாலரி பாளருள்ளம்
பெருகின வின்பம் வில்லிற் பிறங்கனலம்பைப் பூட்டி
அருகடைந்தவரை நோக்கி நுங்களாபரண மெல்லாம்
தருகிலீரேற் கொல்வேன் யானெனவுருத்த தட்டச்சார்ந்தோன். (௭)

தீனபாவத்தைக் கொண்டெங்களைக் கொல்லேற் சினமுங் கொள்ளேல்
யானென்ன இல்லாள் பூணேடி யாவையுந் தருகின்றேனென்
றானாதிலணி களெல்லா முதவினனவை யெல்லாங்கொண்
டாரதம்மனைக்கு வந்து சாதுக்களருந்தச் செய்தார். (௮)

இங்கரிதன்னை நோக்கி யிலையிலுந்தாசன் மெத்த
வுங்கள யோக்யனம்மை வெருவல் செய்துடைமை யெல்லாம்
அங்கை கொண்டற நிர்வாண மாக்கினன் போறேனென்று
செங்கமலத்தாள் சொல்ல ஸ்ரீ தான் சிரித்துச் சொன்னான். (௯)

அவன மக்கியற்றலான வுதவியை யறிகிலாமல்
நவன மற்றின்ன சொன்னாய் கழறுதல் சரியன்றென்னப்
புவனரக்ஷகிய தேது புகன் மெனப்பூமி தேள்வன்
இவன மக்காவி தந்தவுதவி யெண்ணலை நீ யென்றான். (௰)

நம்பெயர் நினைக்கலானை நாடின னவிந்து மற்றோர்
தம்பொருள் பறித்து நம்பேர் சாற்றுவோர்க் குதவி செய்தான்
என்பதையுந் நீயெண்ணு யென்னவு முரைக்கக் கேட்டு
அம்புயத் தமருந் தேவியவன் கருத்தறிவோ மென்றாள். (௰௧)

இருவருஞ் சாது வேடமிணங்குறக் கொண்டு தாசர்
மருவகம் வந்து சீதாராம வென்றுரைக்க மற்றோர்
உருகினர் காதிற்கேட்டங் கோடிவந்துற வணங்கித்
திருமனைக் கழைத்துச் சென்றாசனந் தந்திருக்கச் செய்தார். (௰௨

சோடசவுப சாரஞ் செய்திரு வர்க்குஞ் சுவைச் சோறிட்டுத்
தோடவிழ் நறும் பூவோடு சுகந்ததாம் பூலந்தந்து
நீடவர்தம்மை யேத்தி நீர்வரத்தவ மென் செய்தேன்
நீடமர் நமக்குவேண்டும் பொருளோது பேசுகென்றார். (௰௩)

நானொரு வணிகனிந்த நங்கையோடங் கோர் காட்டில்
போனவப் பொழுதோர் சோரனெம்முடைப் பொருள்களெல்லாம்
தானா பகரித்துக் கொண்டானது தன்றால் வருத்தஞ் சார்வுற்
றானதிவ்வேடம் வந்தோ நும்மிடை யென்றானையன். (௰௪)

பத்தருங் களது சொத்தைப் பறித்தவ னெங்குற்றாலும்
சித்தமாய்க் கொணர்வ னென்ன ஸ்ரீ தரன் மனையோ டுற்ற
வர்த்தக வடிவங்காட்ட மற்றவர் நோக்கி யின்னோர்
சொத்த பகரித் தோன்யானே யெனமனத் துணுக்கங் கொண்டார். (௰௫)

நாணுறீஇ யனுதாபித்து வைகுண்ட நாதனேயிந்
நீணிலம் பாதந்தோய நின்றன னென்று தேர்ந்து
காணுதற் கரிய கோலங்கண்டனெ னென்று கண்ணிற்
பாணிமிக் கொழுகநின்று பரிந்தனர் பகர லானார். (௰௬)

தேவர்தந் தேவனை தீனபந்தோ செங்கண்ணா
ஆவயினு மதுசொத்தைய பகரித்தவன் யானே யால்
மேவருஞ் சாமித்துரோகி யாயினே னென மெலிந்தென்
தீவினை பொறுத்தி யென்று திருவடி வணங்கி நின்றார் (௰௭)

நல்ல வர்தமைப் பூசிக்க நனிநயந்துனது புத்தி
அல்லது நலதென் றெண்ணாதது திருடற் காயிற்றுச்
சொல்லது பிசகென்றோதிச் சுரந்தரு டுளும்ப நோக்கி
வல்லதன் சகுண ரூப மற்றவர்காண நல்கி. (௰௮)

தழுவியின்றாதி சோரந்தனைச் செயே லுனது பக்கல்
வழுவறு சித்தியெட்டும் வைகுறு மவற்றைக் கொண்டு
குழுவு சாதுக்கள் பூசைகுறைவறவியற்றுகென்று
பழுதிலா னுரைத்துப்போனா னவருமப்பணி யினின்றார். (௰௯)

ஹரிபாளதாசர் திருவடிகளே சரணம்

ஆகச்சரித்திரம் கூக-க்கு செய்யுள் சஉ௱௱சஎ௰)

முற்றிற்று

# ஜம்புதாசர்சரித்திரம்.

ஏனறுஞ் சீதானறன்னைத்தியா னித்து
நின்று சாதுக்கடம் மிடைத் தோமிலா
நன்றி சாலன்பு நண்ணினர் ஜம்புவென்
றொன்று நாம முடைக்குடி யானவர். (க)

உழுது நற்பயி ரோம்பிப் பசித்து ளோர்
பழுதுறா துணவிட்டுப் பவனத்துட்
குழுவினே டொரு கூடியுண் டுற்றனர்
வழுவிலா தவர்வை குறுநாளிலே. (உ)

ஒருதினத் திரவுற்றவர் தாமுழும்
எருதி ரண்டையுங் கொண்டன ரோகினர்
சருவசோரத் தன்மை தெரிந்தனன்
கருணை சேர்கமலக் கண்ண னென்பவே. (௩)

தன்னிடத்தன்பு சார்வுறு ஜம்புதான்
இன்ன லுற்றயர் வானொரு தின்றியே
என்னவுன்னி யெருதிரண்டுஞ் செய்து
நின்று மத்தொழு வத்திடைத் துற்றனன். (௪)

விடிந்தபின் னெருதைக் கொடு மேவினர்
படிந்த கொல்லை யுழுதுறப் பத்தர் பால்
அடைந்து கண்டன ரந்த வெருதினை
மிடைந்த விங்கெவ்வி தத்தி லென்றெண்ணியே. (ரு)

அவ்விற் கொண்டவம் மாடுகளுள்ளவோ
இவ்விற் கண்ணில்லையோ வென வேகினர்
புல்லக் கண்டனர் போதவியந்தனர்
மல்லற் சோரர் மறுதினந் தன்னிலும். (௬)

கங்குல் சென்றந்தக் காளைகடம்மையும்
தங்கை கொண்டு தம்மில்லிடைச் சார்ந்தனர்
செங்கண் மால்பினுஞ் சேரச் செய்தான் விடை
அங்குச் சம்பு கொண்டன் றென வேகினர், (எ)

பூட்டியங் குழப்போந்தனர் கண்டனர்
ஓட்டு சோரர் மிகவியந் துற்றனர்
நாட்டு மிவ்வகை நாள்பலவுஞ் செய்தும்
மீட்டுஞ் சம்புவின் மேவவிடை கண்டார். (அ)

இந்தச் சம்பு வென்போரரி தாசனென்
றந்தச் சோரர் நிந்தவர் தம்வயின்
முந்திக் கண்டுமை மோசஞ் செய்தே மிக
மைந்துற்றும் விடைகொண்டென வாழ்த்தினர். (௯)

திருமடிச்சென்ற வெஞ்செய்கை பொறுத்துநம்
அருளுக் கேற்றபடி யெமை யாக்குமின்
தெரு ளுற்றீரெனச் சேவடி தாழ்ந்தனர்
மருளுற்ற ரவர்சொன் மனங் கொண்டனர். (ய)

மனதில்யான் கொண்டமாடேகள் வேறெனத்
தினமுமைய முறைவகை செய்தனை
நினைவருங் கருணாநிதியே யென
அனகமாலை நினைத்தழு தேங்கினர். (யக)

என்பொருட்டின வாறு நடத்துறத்
துன்பு றுத்தின னிற்கெனச் சொல்லியே
அன்பரிப் படியேத்தவனைத் தனன்
முன்பு பின்பு நடுவின் முதல்வனே. (யஉ)

ஜம்புகண்டரி தாளைப் பணிந்திட
நம்பு மாற பயந்தந்து நண்ணினன்
பின்பு சோரற்கருள் செய்து பேதுறு
தின்பின்மால்பெயரோத்தி யிருந்தனர் (யங)

ஜம்புதாசர் திருவாகனை சரணம்.

ஆகச்சரித்திரம் கஉ-க்குச்செய்யுள் ௨௲௬௱௨௰௬

முற்றிற்று.

# தனுசாடர்சரித்திரம்.

தாரணி தனிற்றனு சாட்டெனும்பெய
ரார்குடி யான வரவர்க்கு மெய்வய
ரோடொழு கிகழ்வுறு போதிலுற்றனர்
முரரி பத்தர்கள் மனைக்கட் சேரவே. (௧)

மற்றவர் தஞ்சரண் வணங்கி மாலரி
நற்றனித் தாசர்க ளானஞ்செய்து சீர்
க்ற்றசாளக் கிராமத்துக் குள்ளன்பு
பெற்றனர் பூசிக்கப் பெரிது கண்டனர். (௨)

கண்டவரடி பணிந்தியானுங் கண்ணென்றன்
மருண்டெனப் பூசிக்கவருள் சுரந்து நீர்
விண்டரு வாயதை யருளுமின் னெனத்
தண்டவில்லாதரி தாசருன்னினார். (௩)

பருவியனே சிறுவயதுள் ளானெனக்
கருதிற மானதோர் கல்லைத் தந்தனர்.
தருதலு மதைத்தனு சாட்டுவப்புடன்
இருகரங்களினு மேற்றினிது பூசிப்பான். (௪)

தினமு மாடு சடமை மேய்க்கச் செல்லுறும்
வனமதிலொரு புறம்வைத்து நானஞ் செய்
தினிய நன்மலர் பறித்தெய்தியர்ச் சித்துப்
புனிதராய்த் தாமுணுங் கட்டுப்போனகம். (௫)

கருதையங் கண்ணனே கனிவொடுண்கெனப்
பெருகுமன்பொடு நிவேதிக்கப் பேரருட்
டிருமகள்நாயகன் சிறுவானபினுக்
குருகினன் றினந்தொறு மகிழ்வினுண்டனன். (௬)

இருவருந் தினந்தினஞ் சேடமுண்டனர்
மருவுற வளர்ந்தனர் வாழ்வின் வைகினார்
பெறுவய விடைவிதை பெய்யவோர்தினம்
குறுகுறு போதரி தாசர் கூடினார். (௭)

அரிதனக் கன்பர்சிரா தலாலனம்
பெரியவர் தமக்கெலாம் பெரி தளித்துளீர்
விரிபசி யெமக்குநீர் தீர்த்தல்வேண்டுமென்
றுரிமையி னுரைத்தன ருவகை நோக்கியே. (௮)

மாலடியாருரை மைந்தர் கேட்டுநம்
பாலவிதை யன்றியே தில்லை பார்ப்புறில்
சால்பினர்க்கிவ் விதை தன்னிற்போனகம்
வல்வகைசெய்து மென்றுள்ளத் தெண்ணினார். (௯)

வருமரிதாசரை யழைத்து வம்மெனக்
கருதியபடி யகங்கலந்து போனகம்
பெருகுறச் சமைத்தனர் பேணியிட்டனர்
தருமுண வுண்டனர் பசிதணிந்தனர். (ய)

நீரொமதுறு பசிநீக்கி னீரதாற்
சீரரி நும்வயிற் சேர்ந்திருக்கென
நேர்மகிழ்கொடு மிகவாழ்த்தி நீங்கினார்
பேரரி தாசர்கள் பெயர்ந்த பின்பரோ. (யக)

இல்லற மினிதுற நடத்தியல்ல வோ
சொல்லரி தாம் பரமார்த்தந் துய்ப்பதிந்
நல்லவருள விதையனைத்து நல்கினார்
எல்லையிற் பயிர்செய்வதெனவென்றேசினார். (யஉ)

யாவரு மிவ்வகையியம்பக் கேட்டவர்
தாவர நிலத்திடு வதிலுஞ்சங்கம
ராவயினிடலழகியது மற்றதில்
மேவரிதாசரில் விடுத்த னன்றெனு. (யங)

ஹரிதிரு நாமங்க ளறைந்து முன்புதாம்
புரிதரு பூசையும் புரிவ தாயினர்
தெரிதிரு மாலவர் செறுவில் வித்துகள்
சொரிதரல் செய்தவை துலங்கச் செய்தனன். (யச)

ஏசினயாவரு மிவர்வயற்கணே
தேசுறு முளைமிகச் செழித்தல் கண்டனர்
கூசினர் வாய்மிக வியப்புக் கொண்டனர்
பேசிலீதரி யருளென்று பேணினார். (யரு)

மாலருளாற் பயிர்வளர்ந்து கோதுமை
மேல்விளை வுற்றதைக் கண்டு மெய்யவென்
றுலிது செய்வதிங் கேற்கு மோவெனாச்
சால்பெருந் தோத்திரஞ் சாற்றிப் போற்றினார். (யசு)

முன்விளை வதின்மிக விளைந்து முற்றிய
அன்னவை தமைக்கொணர்ந் தரிதன் முசருக்
கின்னமு தட்டுண விரும்பி யிட்டனர்
பன்னக சயனனைப் பரவி வாழ்ந்தனர். (யஎ)

## தஞசாடர் திருவடிகளேசரணம்.

அகச்சரித்திரம் ருகு-க்குச்செய்யுள் சஅளாஎயிறு.

முற்றிற்று.



# சுகாநந்தர் சரித்திரம்

ஹரிதன்னுமங்க ளனுதினஞ் சொல்பவராகிப்
பெரியமா லடியார்களை யன்புடன் பேணிக்
கரியமால்பிர சாதமீவாரெனிற் கைக்கொண்
டுரியதுள்ளுக்கீ தென்றினிது வந்தனருண்பார். (௧)

சுரசுரீ யெனுமனைவி யோடுறு சுகாநந்தர்
பரமபாவன ராய்வருவார்பதி விரதா
சிரமணித்தம தன்பருக் கேய்வன செய்து
விரவுசாதுசஞ் ஜனரையும் பூசிப்பார் விரும்பி. (௨)

இன்னதன்மய ராயிருவருமன மிசைந்து
துன்னுநாட்சுகா நந்தரைச்சோதிக்க வேண்டி
மன்னுதுர்ச்சனர் சிலரிலட் டுகவர்க்கம் வாங்கி
நன்னர் மால்பிர சாதமீ துண்கென நல்க (௩)

உகந்து கொண்டினி துண்டனர் சுகாநந்த ருண்ணை
இகழ்ந்து நீர்கடை யியல்வதை யுண்டிர்வே தியரோ
தகுந்தசெய்திலீ ரெனநகைத் தனர்பிராய்ச் சித்தம்
வகைந்து செய்கிலி ரோற்குலக் கேடினி வாய்க்கும். (௪)

என்றுரைப்பவர் தம்முன்னோர் நாழிகை யிகக்க
மென்றுதின்றவெல் லாம்பழம் படியுறு மேவத்
துன்றுவாயினின் றெடுத்தளித் தனர்சுகா நந்தர்
அன்றதைக் கண்டதுர்ச் சனர்பயந் துள மயர்ந்தார் (௫)

வியந்துமற்றவர் தாளிடைப் பணிந்துவீழ்ந் தெழுந்து
நயந்துமக்கலர் மேன்மங்கை நாயகன் கருணை
இயைந்திருக்கின்ற தியாஞ்செய்த பிழைபொறுத் தருள்க
உயர்ந்துளீரெனத் துதிபல வுரைத்தனர் போனார். (௬)

சிலதினங் கழிந்தபின் பொருதினஞ்சுகா நந்தர்
உலவும் யாத்திரை செல்வதற்குன்னினர் மனைவி
திலகவாண்முக நோக்கிநீ நம்மனை செறியும்
நலவருக்குமுங் கரணமுஞ் சுத்தியாய் நாளும் (௭)

பூசை செய்தவர் சேவைகொள் கெனநனி புகன்று
மாசில் யாத்திரை சென்றனர் சாதுபோல் வடிவத்
தேசிலான் ரக்கண்டனர் சுரசுரீயென்போர்
நேசமிக் குறப்பூசிக்கக் கண்டுள நெகிழ்ந்து. (௮)

நினது ரூப சுந்தரத்திடை மூழ்கின னீயென்
மனதுங்கிடப் போகதானங்கொடு மாதே
எனலுங்கற்புடை யார்மனத் திரங்குத லின்றி
அனகரோபுசித் தருள்க போகதா னம்பின்பாக. (௯

உம்மதெண்ணமென் றறுசுவைப்போனக முடனே
செம்முவேடதா ரிக்கிட வுண்டனன் சிறக்க
நம்மதெண்ணமுற் றிற்றெனக் காமத்தை நயந்தான்
அம்மனைக்கணே யிருந்தனன் பொழுதத்தமிக்க. (௰)

யாமமொன்றுசென் றபின்பந்த வினையில் கற்புடையார்
தாமமர்ந்துறு பள்ளியிற் சயனநன் கமைத்துள்
ளேமணந்தவ ரடியிணைக் கமலங்க ளெண்ணிக்
காமம் விஞ்சின கசடனுள் வரவழைத்தனரோ. (௰௧)

வேடதாரி யுட்சென்றனன் மாதவமின்னார்
ஆடல் வெம்புலி யாகத்தன் கண்களுக்கமைய
நீடலர்ந்ததி பத்தொளி யிற்கண்டு நில்லா
தோடவெம்பய முடையனாய் வெளிப்புறத்துற்றான். (௰௨)

பொன்னி னாரமென் றெடுத்தது புயங்கமாகியதும்
நன்னர் நல்லமு தாயது நஞ்சதாகியதும்
என்ன நெஞ்சுற வெண்ணின னடுக்கமுற் றிருந்தான்
பன்னு பள்ளியி னின்றுரு முழக்கொடு பார்க்க. (௰௩)

அஞ்சினான்வெளிப் புறத்திலே நின்றுகொண் டன்னே
விஞ்ச நிற்கப ராதியாகிய வென்றன் மிகைதான்
எஞ்சுறப் பொறுத்தருள்க வென்றெதிர் நின்றுவணங்கித்
துஞ்சினான்மிகு தூரத்தே வந்தொரு சூழல். (௰௪)

மறுதினத் தருணோதயத் தெழுந்தந்தமாதர்
குறுகிவாயிலிற் சாணத்தைக்கொண்டனர் தெளிக்க
உறுவதாயின போதுகண்டனன் வெளியுற்றோன்
நறுமலர்ப்பதம் வணங்கினன் றுதித்தன னயந்தான். (௰௫)

பிழைபொறுத் தருள்கெனப் பிரார்த்தித் தனன்பெரிதும்
குழைவுறக்கண்டு கொமளக் கோம்ப ரன்னாரும்
தழைவுறச் சமாதானமாய் நன்றென்று சாற்றத்
தொழுது மற்றவன் காமமாதிய வெலாந்தொலைத்தான். (௰௬)

ஊழியஞ் செய்தங்குற்றனன்றிங்கனான் கொழிய
ஆழிமாலன்ப ராகிய சுகானந்தரடைந்தார்
கேழிலாதவர் தமைக்கண்டு வேடமேற்கிளர்ந்தோன்
வாழியென்றடி பணிந்தன னிகழ்ந்தன வகுத்தான். (௰௭)

நன்றெனச் சுகாநந்தருமபய நல்கினராய்த்
துன்ற வன்றனக்கின்னருள் சுரந்து நாடோறும்
மன்றலந்துழாயவனடி வழுத்தினர் வாழ்ந்தார்
ஒன்றி மற்றவனும் மரிதாசனா யுற்றான். (௰௮)

## சுகாநந்தர் திருவடிகளேசரணம்

ஆகச்சரித்திரம் ௯௪க்கு செய்யுள் ௪௲௭௱௯௰௩

முற்றிற்று

# மாதவதாசர்சரித்திரம்.



வேதசாஸ்திர நிபுணர் மிகுவிரக்தர் பிரபஞ்ச விவகாரத்தில்
காதலிலாதில் வாழ்க்கை தனிவிருந்து பல்காலங்கழிந்த பின்பு
மாதர் மனைவியர் பரமபதஞ் சென்றாரன்றே மாதவரென்பேரார்
கோதகுசம் சாரபந்த மற்றதெனச் சமாதான நுனித்துக்கொண்டு. (௧)

மனையிலுள தனதான்ய பாத்திர வஸ்த்திர முதலாம் வகைகளெல்லாம்
கனநேயத்தொடு மறையோர்க்குத் தத்தஞ்செய்து பாதிகள் கழிந்து
தனைநேரில் ஜகநாத யாத்திரை சென்றார் சென்று சமுத்திரத்தில்
நனர் நானஞ்செய்து ஜகநாதன் சன்னிதி சென்று நமஸ்கரித்து. (௨)

சகுண ரூபங்கண்டு தேவாதி தேவாவை குண்ட நாதா
மிகுபந்த மறுபட்டவெனக்குச் சுஜனபுத்ரர் மனைவிமித்ரர்
வெகுதனந் தாய்தந்தை குருதெய்வ நீயேயல்லால் வேறொன்றில்லை
தகுவாய்மை யாகவென்று சாதனமு நின்பஜனை தான்வேறில்லை. (௩)

என்றரியின் பாதார விந்தங்களைச் சிரத்திலேந்திவேண்டி
நின்றபொழு தர்ச்சகன் கண்டேன் சுவாமியை நலிவு நேர்கின்றாய்நீ
ஒன்றுமிலாக் கையொடுற்று விழுந்து விழுந்தே கும்பிடுகிறாயுன்னி
நன்றுபுறஞ் செல்கென்று தள்ளிவிட்டான் மாதவரு நனிகலங்கி. (௪)

தனியிடஞ் சென்றங் கிருந்துசாமியுன்றன் சகுணரூ பத்தைக்காண
நனிவிரும்பு கின்றேனீ வந்தருள்வா யெனமூன்று நாளிருந்தார்
புனலு முண்ப தில்லாம லரிதியானஞ்செய்த வசந்தாம்பூண்டு
மனவுருக்கு மணிகாந்தற் கருள்பிறந்து தேவிதனை மகிழ்ந்து நோக்கி. (௫)

இன்றுநீ சகுணரூ பங்கொண்டு மாதவதா சன்முன்னேகி
நன்றுபோனக மிடுக வெனவுடனே லோகமாதா நன்றென்று
துன்றுசுவை யோதனமோர் பொற்கலத்தினிறைத்தங் குத்துன்னி முன்னே
நின்று தியானித்திருக்குந் தாசர் தமை யெழுப்பியுண்க நீ யென்றோத. (௬)

துயிலுணர்ந்து ஜகன்மாதா வடிவழ கெல்லாங்கண்டு துணுக்கென்றஞ்சி
மயிலனையதாயே நீயார் சொல்லு கெனவுருக்கு மணித்தாயைய
செயிரற நீயாரைத்தியானிக்கின்றா யோவந்தச் செல்வன் மார்பில்
உயிரனையளாயமரு முருக்கு மணியானுனக்கிங்குணவு நல்க. (௭)

பரம புருஷன்றந்தான் விடை யெனக்குன்றனக்குஞ் சில்பகலிலீவான்
வரமருளுஞ் சகுண ரூபத்தை நீவிரைவிலுண்டு மகிழ்தியென்று
திரமொடுரை செயத்தாசர் தேவியடிகளில் வணங்கி யுண்டல் செய்தார்
கரமொடு கால்சுத்தி செய்யப் புனலுந்தந்தாள் கருணைக்கடலே யன்னாள். (௮)

பொலன்றட்டத்துடன் மணிகள் பொதிந்த வகப்பையுமங்கே புகக்கிடத்தி
நலந்திகழ் கோயிற் சென்றாள் மாதவரங்கவற்றை நனி சுற்றஞ் செய்தத்
தலந்தனிலே வைத்துக்கொண்டுறங்கினார் பின் பருணோதய காலத்தில்
வலந்தரு கோயிற் கதவைத்திறந்துள்ளாரதி செய்வோர் வந்து நோக்க. (௯)

கனகத் தட்டினைக்காணார் களவாயிற்றென்று நனி கலங்கித்தேட
மனம் வைத்தாராய் வெளியில் வரும்போது மாதவர் தம்மாடுகண்டு
சினமுற்றிங்கிவனுலு நாளாகக் கொக்கைப் போற்றி யானங்காட்டி
அனகச்சொத்தினைத் திருடினனென்று பிணித்தனர்போயறைக்குள் வைத்தார்.

அன்றிரவிற்சக நாதனர்ச்சகர் தங்கன விடைவந்தந்தத்தாசன்
நன்றெனக்குப் பிரியமுள்ளோன் மூன்று நாளுபவாச நண்ணலானன்
சென்றுருக்குமணி தன்னைப்போன கந்தந்தருள்க வெனச் செப்பினேன் யான்
மன்றன் மலரவளங்கே மறந்திட்டாளவனை யென்னீர் வருத்து கின்றீர். (௰௩)

விடுகவெனச்சொலி மறைந்தானர்ச்சகர் கண்விழித்தெழுந்து வீணேயன்றே
கடுமை செய்தோம் பத்தரை யென்றனுதபித்து மாதவரைக் கட்டவிழ்த்து
நெடுநயஞ் செய்தடி வணங்கியறி யாமற் செய்தபிழை நீர் பொறுக்கென்
றடுசுவைச் சோறிட்டவன் பாற்கொடு வந்தாலிங்கனஞ் செய்யச்செய்தார்கள்.

பின்பு கண்ணன் பிரசாதமுந் தந்தாரன்று முதற்பேணி யன்பற்
றின்பு செய்து பிரசாத மீந்து வந்தார் மாதவதா சென்போரங்கே
மன்பிரசாதத்தையுண்டு வாழ்ந்திருந்தாரிப்படிக்கு வரும்போதோர் நாள்
அன்பொடிர வினிலிறையை யர்ச்சித்துக் கர்ப்பகிரகத்தைப் பூட்டி. (௰௪)

தங்கண் மனையடைந்தனரர்ச்சகர் வெளியிற்றங்கிய மாதவதா சென்போர்
செங்கணெடு மாறியானத் துடனே தூங்குதல் செய்திருக்கும் போது
அங்க நடுங்குறக் குளிருண்டாயததனைத் தெரிந்த வமலன்றன்மேல்
பொங்கு நெடும்போர்வைதனைக்கொடு வந்து தாசருக்குப் போர்த்திப்போனான்.

அருணோதயத்திடை வந்தர்ச்சகர் பொற்கதவு திறந்தங்கு நோக்கக்
கருணாநிதியின் போர்வை காணாராயதி சயித்துக் கலங்கித் தூங்கும்
தெருண் ஞான மாதவர் பாலோடி வந்து போர்த்திருக்கத் தெரிந்திவர்க்கு
மருணீவு கண்ணபிரான் முழுதன்பு கொண்டுற்ற னெனவணங்கி. (௰௫)

துதிசெய்தா ரவ்வூரிலரசனிவர் பெருமை தனைச்சொல்லக் கேட்டான்
அதிநேயங் கொண்டிவர் பாலடைந்து நமஸ்கரித்துத் தோத்திரமுஞ் செய்ய
மதிஞான மாதவர் கண்டிவ்வளவு நமக்கேதுக்கென மறுத்தப்
பதி நீங்கிவடமதுரா நகரடைந்து கண்ணபிரான் பதிக்குட்சென்று. (௰௬)

கர்ப்ப கிரகத்திடைப் போய்ப்பிரானடி சேவித்து நிற்கக் கண்டங்குற்றோர்
சர்ப்ப சயனத்தனரு குறத்தகுமோ வென்று வெளிதள்ளி விட்டார்
பிற்பணிய வந்த தொண்டரங்கு நின்றும் வேறொரு பாற்பெயர்ந் திருந்து
பொற்படியுந் திருமார் பன்றனை யுள்ளங் கொண்டு புகழ்புகலும் போது (௰௭)

கனவாள னெனுமொருவ னிவர்கண்ணன் றாசனெனக் கருதியுண்பொ
ஜனசாமக் கிரியை யெல்லாங் கொடுவந்தட்டுண்க வெனச் சாற்றத் தாசர்
அனயாவும் பாகஞ்செய் தடலரியைத் தியானிக்க வப்போதே மால்
வனமாலை கிரீட குண்டலங்கள் சங்கு சக்கரங்கள் வயங்க வந்தான். (௰௮)

பீதாம் பரந்துலங்க வெதிர்நின்றோன் றனைநோக்கிப் பெயரா வன்பர்
பாதா ரவிந்தத்திற் பணிதலுந் தாசனை யெடுத்துப் பரிந்தணைத்து
நீதானென் பிராண சினேகித னுன்னைத் தள்ளிவிட்டார் நீதிதேரார்
மேதாவி யானவுன்னைத் தேடிவந்தே னென்று விழிகளி னீர்விட்டான். (௰௯)

தாசர்தாமுங் கண்கணீர் பெருகவழுது சாப்பிடுக வென்று
போசனமிட் டிருவரு முண்டானபின்பு கால்கைசுத்தி பொருந்தச் செய்து
வாசவனத் திருமார்பன் கோயில்வந்தபின் பங்குவைக் கூறும்
நேசமுடன் பூசிப்போர் நிவேதனங் கொண்டெதிர் சாரநிமலன் கண்டு. (உ௰)

இப்போதுதான் யான் மாதவதாசருட னுண்டிங் கெய்தினே னீர்
கைப்பாகஞ் செய்துதரும் போனகம் வேண்டாம் பசியகட்டிலில்லை
மெய்ப்பான வெனதுமாதவ தாசர்தமை வெளியில்வெருட்டி விட்டீர்
அப்போதேயவர் கோபம் கொண்டய லோரிடந் தனிலே யமர்ந் திருந்தார். ()

ஆதலா லவரைச் சமாதானஞ் செய்தழைத்து வந்தாற்றான் யான்
ஓதனமுண் பேனன்றே லுண்ணே னென்ற சரீரியா யுரைக்கப்
போதவியந்துந் திகைத்துந் தெளிந்து மாதவதாசர் புறம்போய்க் கண்டு
மேதகவாய்ச் சமாதானஞ் செய்தழைத்துவந் தனரர்ச் சகர்விரும்பி (உஉ)

வந்தமாதவ தாசர் வடமதுரா புரிதனிலே நான்கு மாதம்
விந்தைய ரிபஜனைசெய்து விடைபெற்றுக்கோ குலபிர்ந்தா வனத்தின்
முந்தியரு ளூரனைச் சேவித்துப்பின் ஜகநாத முடுகிச் சென்று
கந்தமலிதுள வோனைக்கண்டு சேவித்திருந்தார் கழிந்த சின்னாள். (உ௩)

அதிசார நோய் கூடவதனாலே மிகவ சக்தராய் நடக்கக்
கதுவாமல் மெள்ள மெள்ள நடந்துபோய்க் கடலின துகரையைச் சார்ந்தார்
மெதுவாக வடிக்கடி போய்ச் சவுச்சியஞ் செய்யக் கூடா மெலிவு கண்டு
மதுவா ருந்துழு ப் நெடுமால் சகுண ரூபங்கொண்டு வந்துமாதோ. (உ௪)

கலசத்தி னீர்மு க்கு கொண்டுவந்து கொடுக்கிற துங்கலே துவைத்தங்
குலரவைத்து கொடுக்கிறதும் பின்னும் வேண்டிய பணிகளுஞ்சூற்றல்செய்தும்
நலமுறுத் தற கண் டூழியஞ் செய்ய நண்ணினையே நாதா நீதான்
அலமுறுத்திந் நோய் தீர்க்க வல்லையல்லையோ வென்னவமலன் கூறும். (உ௫)

உடலிற்கு பிராரப்த முள்ளதெதோ வதைத் துய்த்தே யொழிக்க வேண்டும்
குடலுற்ற விந்தநோய் தனைத்தீர்க்க வெனக்கியாதோர் குறையுமில்லை
தொடலுற்றநோய்துய்த்துத்தொலைக்காமல்யான்றொலைத்தாற்றொடரும்ஜன்மம்
படலுற்ற நோய்ச் சேஷந்துய்ப் பதனுக் கினிநான்கு பகல்கழிந்தால் (உ௬)

விட்டேகும் வெய்யவினையா ரோக்கியம் பிறக்கு மென விளம்ப
முட்டாத நெடுநேயர் நன்றென்று நாளுன்கு முடிந்த பின்பு
தட்டாதா ரோக்கியம் பெற்றுச் சிலநாள் கழிந்த பின்பு தர்க்கந் தேர்ந்தோன்
மட்டாருந்துழாய் முடியோற் கன்புறு மாதவதாசர்வயின் வந்தானல் (உ௭)

வந்துகண்டு நீரோமா வேதாந்திநும் முடனே வாது செய்யப்
புந்தி கொண்டு வந்தேன் யானென்று சொல்ல நன்றென்று புகன்று தாசர்
இந்தவமயங் கொல்லைக்கேகி நான்வருகின்றே னிருமென்றோதி
உந்து திரைக்கடற் கருகே சென்றுவந்தோன்றனை யுன்னியுணர்வ தானார் (உ௮

வாதஞ் செய்போதவனுக் கவமான நேரிட்டால் வருவ தென்னே
மாதங் கந்தனைக் காத்தவை குந்தா விதனையெந்த வகையிற் றீர்ப்பாய்
நீதங் கொண்டென வேண்டியிருக்கும் போதினை யில்லா நிமலன் றோர்ந்து
போதங் கொண்டியர் தாசர் வடிவங்கொண்டு தர்க்க வேதியன்பாற்போந்தான்

அவனெடு வாதித்து வென்று மறைந்தான் பின்று சரவண னுகக்கண்டு
தவபண்டிதன் வணங்கித் தலமெல்லாம் ஜயித்துவந்தேன் றர்க்கத் தாலே
இவனெருன்று நீவிரொரு வார்த்தையா லெனைவென்றீ ரொன்று கூறப்
புவனங்களுண்டவன் செய்புதுமையிது வென்றவற்குப் புகன்றூர் தாசர். (ருய)

பண்டிதனுந் திரிகரண சுத்திகொண் டாறுய்த் தாசர் பதம் வணங்கி
அண்டு மெனக் கனுக்கிரகஞ் செய்தருள வேண்டு மெனவன் பினேத்த
வண்டுளவோனடித் தாசரருள் செய்தார் பக்தி மார்க்கத்தை வாய்ப்பக்
கொண்டவனு முத்தரிக் கவிவரு மரிபஜனை செய்து கூடிவாழ்ந்தார். (ருக)

மாதவதாசர்திருவடிகளேசரணம்.

ஆகச்சரித்திரம்சுரு-க்குச்செய்யுள்சுகூஅாஉயச

முற்றிற்று

# ஹரிவியாசர் சரித்திரம்.

புரியுளே புகழ்பொருந் துவடமாம துறைவாழ்
கரியன் முந்துகருணா கரனை நெஞ்சுகவர் வோர்
தெரியுநான்மறை துணிந்தபொருள் சிந்தை திகழ்வோர்
ஹரிவியாசர் தெருளன் பினர்சிறந்த வறவோர். (க)

சகலஜீவர்களை யுந்தமது ஜீவனெனவே
முகமனன்குடையர் முன்னினர் சிறக்க வொருகாற்
றகவினீடு ஜகநாத மதுசார வுடனே
இகலிலாததம சீடருடனே குமளவில். (உ)

புனிதமான வொரு பூம்பொழிலை நோக்கியவிடத்
தினிதிறங்கினர்க ளெய்தின தொர்காளி பதிதான்
தனியொர் சூத்திர னடைந்தொர் தகரைப் பலிசெய்தான்
மனியகாளி வயினன்னது தெரிந்து மதியோர். (ங)

ஜீவவெங்கொலை திருந்து மிவணெய்து தறகா
ஓவல் செய்கென வெழுந்துதம சீடருடனே
ஆவயின் சமயல் செய்வது மொழிந்தகல்வுறு
மேவலாயினர் மிகுந்ததுயர் கொண்டன ரரோ. (ச)

இனையதே சமியல்கின்ற ஜனர்தீமை யியல்வோர்
அனையசோலையி லிருந்தது மரும்பவமெனு
நினைவினோர் பசிநிரம் புறநடந்த கல்வுறப்
புனைவுசேர் குமரிகண் டயர்வு கொண்டு புகல்வாள். (ரு)

எனைநி கர்த்தபல சக்திகளுமே வல்புரியப்
புனையுமச்சுத னடிக்கினிய புண்ணியர்பசித்
தினையலுற்றி வணகன்று நெடிதே கறகவோ
அனையரப் படியுறிற் பெருமையெற் கமையுமோ. (சா)

அன்றியும் பெரிது சாருமப சாரமெனவே
சென்றுமற்றவர் முனின்றுபல செஞ்சொல் பயிலா
நின்றுதாளிணை வணங்கியரிநேய நிறைவீர்
ஒன்றுகேண் மெனநி றுத்தின ளுணர்த்தினளரோ. (எ)

நீயிரென் வயினடைந்து பசிநீட நெறிமேற்
போயிலென்னது தெய்வத் தகுதிபோ மதனிலென்
கோயின்மேவி யமுதுண்டு குளிர்கொண்டடை மெனுத்
தீயின்மேய கொடியிற்று வளல்செய்துறை செய (அ)

தாசர்நிகொலை விரும்பு தறவிர்ந்து றுதியேல்
நேசமோடடை வஂீயுறுதி சொல்லுதி யெனக்
கூசமின்றி யுயிர் வெங்கொலை கொளே னிதுதிடம்
வாசமேவ வினிவாரு மெனவந் தனரரோ. (கூ)

வந்து சோலை புனிதம்பெற வகுத்தடை வுடன்
முந்துறுஞ் சமயல்செய்து முறையிற் பசிதெற
அந்தவீரி யனகர்க்கரசன் மாடிரவி லேய்
தந்துறுங் கனவி லேயது தனைத்தெரிவுற. (௰)

ஓதியிந் நகருளா ரொனையுனிக் கொலைசெயா
நீதிசெய்தியினி நீயிது செயாதமை வுறில்
காதியுன்னை யெனின் மேவுகணனுக் கிறை செய்வேன்
தீதிலிந் நகருளா ரொடென வோதல் செயவே. (௰௧)

அவனுணர்ந்து துயில்மந்திரி வரக்கடி தழைத்
திவணடைந்த கனவைப் பயமுடன் றனியிசைத்
தெவனுமின்று முதல்வெங்கொலை செயாதியல் கெனக்
கவன மாயதனை யாருமறியக் கழறினன். (௰௨)

காளிகோயி லிடைமேவு மரிதாசர் கழலின்
மீளியா னவசசெய்தி விரைவிற் பணிவுறா
ஆளினென்னை யனுகச் செய்துபதேச மருள்கிந்
நாளி னென்ன வவர் ஜீவவதை நாடுற லென. (௰௩)

செப்பிமால் பஜனை செய்யவுபதேச மருள
ஒப்பி யன்னவர் தனூர் புகவழைத் துடனடைந்
தப்பதிக் கணுறுதிங் களளவு மவருறத்
தப்பில் பூசனை புரிந்து தழைவித் தனனரோ. (௰௪)

அந்தமா நகருளா ரெவருமால் பஜனையில்
முந்திவாழ்வுற முயன்றொரு மடம்புனைதல் செய்
தெந்த யோகியரு மெய்தும்வகை செய்தவ ணுறத்
தந்தசீடர் சிலர்தங்கும் வகையுஞ் செய்தனரோ. (௰௫)

ஆனபின்பு ஜகநாத மடைவேயடை வுறீஇ
ஞானநாயகனை நன்குதரி சித்தடி தொழாத்
தீனபாவமொடு நின்று துதிசெய் பொழுதிலச்
சான கிரமண னன்புட னெய்தித் தழுவினன். (௰௬)

அபயநல்கி மறைவா கவரிதாச ரரிதன்
உபய பாதமிக வுன்னினர் வணங்கி யுடனே
இபமு னெய்து மவனெய்தும் வடமா மதுரைபோய்
நிபமி லானடி நினைந்தினி துறைந்தன ரரோ. (௰௭)

## ஹரிவியாசர் திருவடிகளேசரணம்.

ஆகச்சரித்திரம் ௬௬-க்குச்செய்யுள் ௪௬௮௪௰௧.

முற்றிற்று.

# திரிபுரதாசர் சரித்திரம்.

வேறு.

மதுரா நகரரசானவன் மதிமந்திரி யாகிப்
பொதுநீவுதல் புரிவார் திரிபுரதாச னெனும்பேர்
அது நீடினர் நலதேசிக ரருளானது பெறவே
முதுஞான மிருந்தார் துறவது சேரமுயன்றார். (க)

உளவாகிய தனதானிய முதல்யாவையு மூரார்
கொளையே கொளவிடல் செய்தனர் குறையா நிறையொடு சீர்
வளையா நெறிபுகு பத்தினி யுடனே வரமதுவார்
துளவார் வனமதில் வந்தனர் துயர்தீர் வுறலானார். (உ)

அங்கே வளர்வுறு கண்ணனை யானந்த முடன்கண்
டிங்கே யுறுவது நன்றென வெண்ணங் கொடவன்றன்
பொங்கேழ் புகழ்பலவா யவைபுகல் கின்றன ருற்றார்
சங்கேய் கரமனையார் முகநோக்குற்றனர் தாசர். (௩)

கண்ணற் கொருகலை நல்குறு கருத்தேய்ந்த தெனக்கென்
னெண்ணப்படி செயல்வேண்டின னெனச் செப்பின ரோர்நாள்
நண்ணற் கருநல மிக்குயர் ஞானத்திரு வன்னார்
அண்ணற் கணவனை நோக்கின ரன்போ டிவையறைவார். (௪)

நம்பாலொரு பொருளும் மிலைநாளுமெ தேனும்
அன்பா லயலா ரீவதிலடு வெம்பசி தீர்வேம்
கொம்பா நடுமலர் மாமகள் கொழுநற்கெது குறைவு
வன்பார் கலையொடு பூடண வகைபற் பலவுளவால். (௫)

நீரோன வனுக்குக் கலைதருமா நினைவுற்றுச்
சோர்வாகிற தென்னத் துணைவியை நோக்கினர் சொல்வார்
நேர்வாயொரு மின்னே யிவணீ சொல்வது மெய்தான்
சேர்வான தென்னுள்ளத் ததுதெரியே னதுசெய்வேன். (௬)

எனவே தமதில் லத்துறுமசிக் கூட்டினை யெடுத்து
மனநேய மொடெய்திக் கடைமருங் கின்விலை செய்தங்
கனதால் வருமீ ரொட்டென ணவைக்கொடு கொண்டார்
உனலாகிய கலைகொண்டுடனே கோயிலை யுற்றார். (௭)

சந்தக் கமலத்தார் தருதையற் கிறைதன் மேல்
இந்தக் கலைதனை யர்ச்சகரோ போர்த் தெனதுள்ளத்
துந்தக் கவலையை நீக்குதி ரெனவோதின ருவன்கை
அந்தக்கலைதனை நல்கிட வவ்வர்ச் சகனறைவான். (௮)

சாமிக்குடன் மேற்போர்த்திடத் தகவில்ல தனைக்கொண்
டேமிக் கவன்மேற் போர்த்தென வீந்தாயிலையோ நாண்
டேமிக்குறு துளவோற்கிது சிறப்பன்றெனச் செப்ப
நேமிக்கிறை வயினென்குறை நிகழ்த்தித் தனி நீரோ (௯)

ஒப்புக் கொளும் வகைசொல்லுதி ரென நன்கினி தோதித்
தப்புற் றிலர் போனாரது தன்னைத்தரை வீழ்த்திச்
செப்புற்ற தொர் பாயற்கினை செய்தேதுயில் செய்தான்
கைப்புற்றவ னுடனேகுளிர் கண்ணாற்குடல் கலந்த (௰)

நிற்கும் வகை கூடாதுற நடுக்கந்தர நின்றோர்
ஒற்கந்தர லேதோமிக வொளிகண்ணனுக் கென்ன
மற்கொண்டுறு கலையிற்பல வகைகொண்டுடல் போர்த்தார்
பொற்கண்டன துடனின்றில துறவுங்குளிர் பொங்க (௰௧)

தீச்சட்டியும் வைத்தாரத னாலுங்குளிர் தீரா
தாய்ச்சிட்டர் பிரானுக்குறு வதையர்ச்சக ரன்பால்
வாய்ச்சிட்டவர் முதலோரது கண்டார்மன மனுங்கி
ஏய்ச்சிட்டித னுக்கென்செய்து மென்றேகுலை கின்றார் (௰௨)

அடியார்தரு கலைமேற்றுயி லன்னான்கனவினிலே
நெடியோனுட னேசென்றென தடியானருள் கலைநீ
மடியா துறு குளிர்தீரவெ னுடல் போர்த்தென வருக்கத்
துடியா வவனெழுந்தேயய லுறுவோர்க்கது சொன்னான் (௰௩)

எல்லாரு முணர்ந்தக்கலை யினைநாதனுடன்மேல்
உல்லாசம தாகப்புனை வுறலுங்குளிர் தீர்ந்து
மல்லாரைவெல் கண்ணன்முனை வகையாயுறநின்றான்
நல்லார்பல ருங்கண்டனர் வியந்தார் நனிமாதோ (௰௪)

கலைநல்கிய வடியார்கனமே நன்றென மகிழா
உலைவில்லவர்பாற் சென்றவருபயக்க மூல்பணிந்து
நிலையுள்ளவர் தமக்கிச்செய லெல்லாநனி நிகழ்த்தத்
தொலைவில்லவ னடியாரது தெரிந்தே துதிசெய்து. (௰௫)

கோயிற்குள ணைந்தே யெதிர்குளிர் மாமலர் கொண்கன்
தாயிற்பரிவது செய்ததுதனை யெண்ணினர் கண்ணீர்
பாயப்பெரி தின்பங்கொடு பணிந்தார் பரந்தாமா
நேயத்திரு மகனாயக வென்றே துதிநிரப்ப. (௰௬)

தெருள்சேர் வுறுசகுணப் படிவச்சேவை செய்திடவே
அருளாழிய னெதிர்வந் தபயந் தந்தினி தகன்றான்
மருள் போயினராகித் திரிபுரதாசர் மகிழ்ந்து
சுருளார் முடியுறு மாதவன் பெயர் சொல்லினர் வாழ்ந்தார். (௰௭)

## திரிபுரதாசர் திருவடிகளே சரணம்.

ஆகச்சரித்திரம் ௯௰க்கு செய்யுள் ௪௲௮௱௫௰௮.

## முற்றிற்று

# லாடுபாவாசரித்திரம்

தொலைவிலாவளஞ் செறிந்துள தாகிய ஜோத்பூர்
இலகுகின்றவர் விரக்தர் தம்முயிரி னெவ்வுயிரும்
குலவ வெண்ணு கின்றவர ரிபஜனையிற் குறையா
துலவுமன் பினர் லாடுபாவா வெனுமுரவோர். (௧)

ளை செய்வதற்குத் தனித்தோர்ந்து
மார்க்கத் துள்ளமா லாலயங்களைக் கண்டு மகிழ்ந்தும்
கார்க்கருங் கடல்வண் ணன்றனடியரைக் கண்டும்
சீர்த்தி லாதகா வூனொனுந் தேயத்தைச் சேர்ந்தார். (௨)

உயிர்களுக் கன்புசெய்கில ராயந்த வூரார்
செயிர் தருஞ் சத்திதனக் குணவூன்மது செறியப்
பயிலும் பூசையார் புருடரையும் பலிவழங்கும்
இயலி னுரன்று பூசைக்கு நரபலி யின்றி. (௩)

தேடுகின்றவர் லாடுபாவா வரத்தெரிந்து
நீடுநால் வரும்பற்றினர் கொண்டுபோய்நிமலி
கூடுகோயின் முன்னிறு வினர்மூவர்கைக்கொள்ள
மாடு நின்ற மற்றொருவன் வாளுருவினன் வதைக்க. (௪)

மூவர் பற்றுற நின்றவர் முகுந்தனை முன்னி
யாவு மாகிய கண்ணன் கொன்றாலு நன்றன்றி
வீவிலாவகை செய்யினு நன்றெனவேண்டி
மேவி நின்றனர் திடத்துடனிற் கின்றவேலை. (௫)

கோரரூ பியாகிய சத்திகோயிலி னின்றும்
நேரதாகிய காதகர் நால்வரி னோர்ந்து
சாரவாரு யிருண்டுடன் சாந்தமாய்ச் சார்ந்த
தீரராகிய லாடுபாவாச் சரண் சேர்ந்து. (௬)

வணங்கி மாலடி யவனொனுமுமக கெனனாலவந்த
அணங்க தாம பராதத்தைப் பொறுத்தருள் கென்று
இணங்கு மாசொலி யுமக்கு வேண்டிய தியம்பு கென்று
குணங்களா லுயர்ந்தி ரெனவேண்டினள் கூற. (௭)

தாசர் கேட்டு நீயிதுவரை நரபலி தன்றே
டாசதா முயிர்வதைக் கிசைந்திருந் தனையனைய
மாசு தீர்ந்துறல் வேண்டு மற்றின்னமு முனது
தேசவாசிகள் கொலை விடுத்திருக்கவுஞ் செய்து. (௮)

ஹரிதன் றசரா யினிப்பஜனங்கள் செய்தமையப்
புரிதிவேறு வேண்டியதிலையெனக் கெனப் புகன்றார்
தெரிவதாகிய சத்திநன்றவ்வகைசெய்வேன்
பரிவினீ ரிவணிரு மெனப்பகர்ந்தனள்பின்பு. (௯)

அந்தவூ ரரசன் கனுவினி லெதிர்ந்தரச
முந்துன் னூருளோர் யாவரு மிற்றைநாண் முதலா
நந்துஜீவனை நலிவது தவிர்ந்தினி நான்வாழ்
மந்திரந் தனில்வந் துறைபவ ரடிவணங்கி. (ம)

அன்பராகுத லன்றியு மெனக் கெனயாரும்
முன்புசெய்கிற வுயிர்வதை முறைமையுந் தவிர்ந்து
துன்புறுவகை செய்துமற்றின் னசூழாயேல்
நின்புரந்தனை நாசஞ் செய்வே னென்று நிமலி. (மக)

மறையவேந்தல் கண்விழித் தந்தவூருளே வாழ்வோர்
முறையினிற் கொலைபுரிவது தவிர்ந்துசாமுண்டி
உறையுங் கோயிலி லுற்றவர் தமைச்சரணுறுமா
பறையறைந் திடச்செய் தடைந்தான் சத்திபாழி. (மஉ)

வந்துகாதகர் மாண்டுறல் கண்டதிசயித்துள்
நொந்துறப் பயங்கொண்டு மிக்கன்பொடுநுவன்றுன்
நந்துகால மெல்லா மநியாயமாய் நலிந்தோம்
முந்துஜீவனை யெனவனுத பித்தனன்முன்னி (மந)

அடியர் தஞ்சர ணடைந் தருளடைந்தன னப்பால்
முடிவிலா நகராரொலாம் வந்தடி முயங்கி
நெடிது பெற்றன ருளெந்தவுயிரி லுநேயம்
படியலா யரிபஜனைகள் பரவினர் பயின்றார் (மச)

அன்புமிக் கெகாதசி விரதமும் புரிந்த மர்ந்தார்
பின்பு லாடுபாவா வெனும் பெயரினர் பெருமான்
றன்பதங்களை வழுத்தின ரொளிர்பரந்தாமா
நின்பெரும் புகழினுஞ் சொலவெனைநியமித்தாய் (மரு)

இனியெனக்கு நின்சகுண ரூபந்தனையிலங்க
நனி தெரிந்திட வேண்டுமென் றுள்ளினர் நயக்கட்
பனிமலர்த்திரு நாயக னெதிர்ந்த பயந்தந்
தினிதி னேகினன் பின்படி யாரவணிகந்து (மசா)

உலகிலே யுளதீர்த்தங்கள் யாவையு முற்றுக்
குலவி யாடியங் கங்குள மால்பெருங் கோயில்
பலவுங் கண்டன ராகித் தம்பதி யிடைவந்து
சலச லோசனன் பெயர்சொல்லி வாழ்ந்தனர் தழைத்தார் (மஎ)

லாடுபாவா திருவடிகளேசரணம்.

ஆகச்சரித்திரம் கூஅக்கு செய்யுள் சதுஅாஎயகு

முற்றிற்று

# திரிலோசனதாசர்சரித்திரம்.

சாது சஜ்ஜனர் தஞ்சேவை தவிர்கில ரரிதியானர்
மேதகக் குடும்பத் துற்றும் விரக்தி மிக்கவர் தட்டாரொன்
றேதிரி லோசனப் பேரிசைந்தவர் பணிகள் செய்யும்
பீதம் வெள்ளியிலே தேனும் பெட்புறு தமைந்து வாழ்வார். (௧)

அவரின்னபடி யராக விருக்கு மூர்க்கரசன் வீட்டில்
நவமண முற்றதாக நரபதி யிவரைக் கூவித்
தவறிலே யென்று சொல்லத்தக்க நீமணிகு யிற்றி
உவமையில் ஜேகிரொன்னு மொன்று செய்து தவல் வேண்டும். (௨)

என்று பன்மணியு மிக்கவேமமு மீந்துமுந்நாள்
ஒன்று முன்றருக வென்ன வுத்தமர் கொண்டு வீட்டிற்
சென்று சேமித்துப் பின்பு வெளிவரத்திரண்டு சேர்ந்தார்
மன்ற லந்துள வோனன்பர் வரக்கண்டு மகிழ்வு கூர்ந்து. (௩)

தாழ்ந்து தம்மனைக் குண்மேவத் தந்தினி திருக்கச் செய்து
சூழ்ந்துள வுபசாரங்கள் சோடசத்துட னல்லுண்டி
வீழ்ந்துணச் செய்திரண்டு நாள்வரை வீட்டிருந்து
வாழ்ந்தனர் செல்லத்தாசர் மறந்தனர் பணி யியற்றல். (௪)

தினமொரு மூன்றதாகச் சேவகர் தம்மாற்கூவி
வினவினன் வேந்தன்றாசர் மிகுபய முடையராகிக்
கனகநல் லணியை நாளைக் காலையிற் றருவெனென்றார்
இனநிலே தவிரிற்றண்ட மியற்றுவ னென்றுசொன்னான். (௫)

சொற்படி தருவேனென்று சொல்லினர் மனைக்குவந்து
பொற்பணி யியற்றநான்கு தினம்வரை பொருந்துமேமற்
றெற்பணி யரசற்கெவ்வா றீவது நாளைக்கின்றேல்
வற்புறு தண்டஞ்செய்வான் மன்னவ னெனமயங்கி. (௬)

இல்விடை யிருத்தலாகா தென்றெணிக் கொண்டோர் காட்டில்
புல்வின னொருபுறத்திற் போக்கிருந் தலர்மேன்மங்கை
வல்லவன் றனைத்தியானித் துறவுருக் குமணிமார்பன்
நல்ல தன்றாசர் வார்த்தை நவையுறு தியற்றல் வேண்டி. (௭)

தாசர்தம் வடிவுகொண்டு தக்கவர் மனைக்குண் மேவி
ஆசையு மணியுங்கொண்டங் கமைத்தன னணியப்போதில்
காசுறு பணிகொண்டெய்தக் காவலன் கடுகிக் கூவ
ஈசனப் பணிகொண்டெய்தி யெதிர் சலாஞ்செய்து நின்றான். (௮)

பணிதரக் கொண்டு பார்த்துப் பார்த்திபன் மகிழ்ந்து நன்றிவ்
வணியென வெகுமானித்தா னளவறு பொருள்கள் கொண்டு
மணிநிறமாயன் மீண்டு மனைக்கண் வந்தடியர்க் கேற்ற
தணிவில் கற்பினர் தங்கை யிற்றந்தனன் பொருள்க ளெல்லாம். (௯)

இன்று நீசெய்ய வேண்டுஞ்சாது சஜ்ஜனருங் கேற்க
நன்று போஜன மென்றோத நன்றென வவருஞ் செய்ய
அன்று சாதுக்கள் சேர்ந்தார நேர்மற்ற வருக்கெல்லாம்
ஒன்றுறப் பாதபூசையு ஞற்றியோதனமு மிட்டான். (௰)

இருத்தி யாயவர்க ளெல்லாஞ் சென்ற பின்றானு முண்டு
பொருத்த முன்றனை தன்னிற் போனகம் பொதிந்து கொண்டு
கருத்திலே தன்னைக்கொண்டு காட்டுறைவோர் தம்பக்கல்
அருத்தி கூர்வேறோர் தாசவடிவுடனணுகினு னால். (௰௧)

கண்டவர் தம்மையிந்தக் காட்டுளே வழியெங்கேயான்
மண்டுறற் கென்னக் கேட்ட மாதவ ரிவர் மாலன்பு
கொண்டுள தாச ரென்று குறித்தடி வணங்கிப் போற்றித்
தொண்டர் நீராறு தீர்ந்தித் தூரமேன் வந்தீ ரென்றார். (௰௨)

இவ்வனந் தனையடுத்த வெழினகருறு தட்டானைச்
செய்வன பணிகள் செய்யத் தேர்ந்தவருன் போலில்லை
கைவினைவல்லோ யென்றுகாவலன் புகழ்ந்து கூறி
நைவறு பொருள்க ளீந்தா னணியவைகொண்டு போந்து. (௰௩)

கம்மியன் மனைக்குட் சாதுசஜ்ஜனர் கணக்கி லோரைச்
செம்முறக் கூவியின்றைத் தீஞ்சுவை யமுது தந்தான்
அம்மனை தனிலுண்போரில் யானுமுண்டகடு சால
விம்மினன் மயக்கந் தன்னால் விட்டன னெறியை யின்னும் (௰௪)

ஒருதரத் துண்டி வேண்டி யுதவுறக் கொண்டு போந்தேன்
மருவிய நீயுஞ்சால வருந்தினை பசியினென்று
கருதநின் முகஞ் சொல்கின்ற தாதலிற் கனிந்திதுண்டு
பருவர லொழிக வென்றான் றாசரும் பரிந்துண்பாராய். (௰௫)

வியந்தி யானிங்கே போதவேறென்பேர் கொண்டு செய்தார்
நயந்தியா ரொன்றையுற்று நல்லமு துண்ட பின்பு
பயந்தப வுரைத்தோர் தம்மைப் பதிக்கி னிதழைத்து வந்தங்
குயர்ந்த திண்ணையிலிருத்தி யுட்புக்குத் துணைவியாரை (௰௬)

பார்த்தின்று நிகழ்ந்த தென்னைப்பகர்தியென் றினிது கேட்கச்
சேர்த்தகற் புடைய ரானதேவியார் பதியை நோக்கி
நேர்த்துமக் கென்னைச் சித்தப் பிரமையோ நிருபற்கோதும்
வார்த்தை தப்பாமல் ஜேகீர் செய்து நீர்வழங்க லாலே. (௰௭)

மகிழ்ந்தர சுதவலான மாழைகொண்டிங்குப் போந்து
முகுந்தன தடியாரெல்லா மொய்ப்பவுற் சவஞ் செய்துண்டு
திகழ்ந் தினித முதுகொஞ்சந் தானையிற் பொதிந்து சென்றீர்
நிகழ்ந்ததை மறந்தீர் போலுநீர் வினவுதனன் றென்றார். (௰௮)

மறைந்துறை கானிலென்பால் வந்தொரு திருமாலன்பர்
அறைந்துள படியே யாயிற்றென வதிசயித்தன் றாரைப்
புறந்தனில் வந்து நோக்கிக் கண்டிலர் புந்தி செய்யச்
சிறந்தவை ரூண்டவாசி செய்தகித்திற மென்றோர்ந்தார். (௰௯)

கண்கணீர் பெருகிநாதன் கம்மியனுகி யெற்காய்
மண்கொளும் வேந்தற் கேற்கும் வகைசெய்ய லாயிற்றே யென்
றெண்கொடிவ் வபராதத்திற் கென்செய்து மெனக் கலங்கித்
திண்கொள் பாரளந் தான்றன்னைச் சிறப்பத் தோத்திரங்கள் செய்தார். (உ௰)

தெய்வ நாயகன் வந்தன்னுர்க்கருள் செய்து தீர்ந்த பின்னர்
அவ்வகை யறிந்தோ ரெல்லாமடியனைப் புகழ்ந்தார் நாதன்
செய்வகைப் படியே தாசர் செய்தனர் வருடந் தோறும்
மெய்வகை யுற்சவத்தை விரும்பினர் மகிழ்ந்து வாழ்ந்தார். (உக)

## திரிலோசனதாசர் திருவடிகளே சரணம்.

ஆகச்சரித்திரம் சுகூ-க்கு செய்யுள் சுரு௲அாகூ௰சு

முற்றிற்று.

# சஜ்ஜனகசாருகர் சரித்திரம்.

இல்வாழ்க்கை தனிலிருந்து மிகுந்தவயிராக்கிய ராயித யத்துள்ளே
செல்வாய்த்த திருமேனி ஹரிதியானத்தை யனுதினமுங் கொண்டு
கொல்வாய்த்த சாருகரிற் பிறந்துமது செய்யா தகுணத்த ரொன்னும்
சொல்வாய்த்த சஜ்ஜனர் தஞ்சுய ஜாதியாரில் விலைத்தூவு வாங்கி (க)

விற்பனை செய்ததில் வருமூதியங்கொண்டு குடும்பநடை விளங்கப் பேணும்
பொற்பினராய்ப் பொய்யிலராய் ஹரிதாசர் தமைக்காணிற் புகழ்ந்து போற்றி
அற்பொடு தம்மாலியன்ற வளவு முபகரிப்பவ ராயமருஞ் சீலர்
கற்பினரு மவர்மனத்துக் கிசைந்தவரா யொழுக நலங்கலந்து வாழ்நாள். (உ)

தசைநிறுக்குங் கல்லாகக் கோபாலனுகிய சாளக்கிராமம்
நசையுறக் கொண்டிருப்பபொரு தினத்தந்தவழிச் செலுநாள் மறையோனுடி
இசைபெருக்குங் கோபால னென்றறிந்து சஜ்ஜனர் பாலெதிர்ந்து நோக்கி
வசைதவிர்க்கும் வேதியர் பூசிப்பதை நீ பூசித்தல் வழக்கன்றாகும். (ஙு)

அன்றியுமத் தசையுளதை யூனிறை கல்லாக்கி யதையமைத்தல் கூடா
தின்றெனது வயினளித்தி யெனக் கேட்கவே ரென்று மியம்பா தீந்தார்
நன்றுகொடு போயந்த நான்மறை யோன்றனதில்லினனி நல்லோர்கள்
துன்றும் வகை செய்து கண்ணற் கபிஷேகஞ்செய் துபரி சுத்தமாக்கி. (ச)

முகமனெரு பதினறு நன்கியற்றிப் பூசித்து முகுந்தற் கேற்பத்
தகவுறமா நி வேதனமுஞ் சமைத்துத் தாபனஞ் செய்து தக்கோ ரெல்லாம்
நுகரவ முதளித்து மகிழ்ந்தரி திருநாமம் பலவு நுவன் றின்றுற்றான்
பகலொழிய விரவிலவன் கனவில் வந்து பரந்தா மன்பகர்வ தானுன். (ரு)

சாருகணுகிய சஜ்ஜனன் வீட்டிற் சுகமாகத் தனிவாழ்ந்தேனை
ஒருணர்வு மில்லாமலேன் கொண்டுவந்தாய் நீயுனது வீட்டில்
சேருற வோர்கணமு மெனக்குள மில்லையினி யென்னை நீயே கொண்டு [றான்
சீருறு சஜ்ஜன னிடத்திற் சேர்க்கா யேற்குலத்தொடுன்னைச் சிதைப்பேனென்

என்னலும் வேதியன் விழித்து மிகுபயங்கொண்டுறக்கண்ணன்றன்னையீந்தோர்
அன்ன கண்ண னகன்றது தொட்டள கபானமுமின்றிய ஞர்மிக் காகிச்
சொன்ன சாளக் கிராமத் தீர்த்தந்துய்க் காமற்றுய்ப்ப தெங்ஙன்
இன்னயினி யெனவருந்தி யிருப்பவர் பால்வை கறையிலெழுந்து பார்ப்பான்.

கனவி லுரைத்தருள் கண்ணன்றனைக் கொண்டுவந்து கண்டுகெங்குலான
தனது கனவினை யுரைத்து நான்ஜாதிய பிமானந்தனைக் கொண்டும்மை
மனம் வருந்தப் புகன்று கொண்டவ பாரதம் பொறுத்தருள்க மதியின் மிக்கீர்
உனலரிய வுமைப்பத் தசிரோ மணியென் றுணர்ந்தன னென்று வந்து கூறி. ()

நீர்தா மேயிந்தக் கண்ணனை நாளுஞ் சுகமாக நிறுவிப்பூசை
சீர்மேவப் புரிதிரொனத் தந்து சென்றான் சஜ்ஜனருஞ் செங்கை யேற்றுக்
கூர்காதலுறப் பூசித்துத் தீர்த்த முள்ளுக்குக் கொண்டு பின்பு
நேர்காதற் கற்புடை யாருடனுண்டு மகிழ்ந்திருந்தார் நெடுநாட் செல்ல. (௯)

ஜகநாதன் றனைக்காணச் செல்வோர்களுடன் கூடித் தாமுஞ் செல்ல
மிகலான வாதரங் கொண்டார் தமதுகண்ணனையும் விரும்பிக் கொண்டு
புகலானூர் வழிதோறும் பூசித்துப் பிச்சையுண்டு போயோ ரூரிற்
றகவாகப் பிச்சைகொள்ளச் சார்ந்தன ரங்கோர் வியபிசாரமாது. (௰)

இவர்தமைக் கண்டதிக காமாதுரையா யுபசார மினிதியற்றி
அவரை யழைத்துக் கொடுபோய்ச் சமையற் சாமக்கிரியை யனைத்துந் தந்து
தவரும் விரும்புறு நல்லீரட்டுண்டின்றிங் கிருத்தி ரொனத்தான் வேண்ட
உவரவுடன் மனையிலட்டுண் டினிதிரவி னிற்றுயி லவுவந் தீங்குற்றார். (௰௧)

நள்ளிரவி லெழுந்துவந்து சஜ்ஜனரை யெழுப்பிவரு நானின்றும்மை
உள்ளமுவப் புறப்புணர வேண்டினே னெனவனை யாளுரைக்க நல்லோர்
கொள்ளுமகிழ் நனைவிட்டுப் பரபுருஷன் றனைக்கூடல் கூடாதி யார்க்கும்
பிள்ளை மைதீர்ந்துன் புருஷனங்குற்றான வற்புண ரப்பெயர்தி யென்றார். (௰௨)

புருஷனுறுதலி னென்னை வெறுத்தனர்மற் றிவரென்று புருஷன் றூங்கும்
அருகினில் வந்தவன்றலையை யரிந்துகொண்டு சஜ்ஜனர்பா லணுகிக்காட்டி
மருவு புருஷன்போன னினியேனு நீர்புணர வருதிரென்ன
வெருவிலன் பேயேயென்று மனந்துணுக் கென்றுடன்ப டார்வெறுத்து நீத்தார்.

உமைப்புணர வேண்டியென் றன்புருஷனைக் கொன்றுற்றேனுக் குடன்படீரேல்
றுமைத்தடியும் வகைசெய்வேனிப்போதே காண்மினென்று றுவன்றாளாகி [கூவ
இமைப்பின் முன்னம்புறம் போந்தென் புருஷனைக் கொன்றானொருவ னென்று
அமைப்பருமக் குரல்கேட்டுப் புறத்துள்ளோரனை வருமங்கணுகிப் பார்த்தார். ()

வந்தவரெல்லார் தமையுநோக்கியொரு திருடனின்றென் மனைக்குள்வந்தான்
முந்துதுவாதச நாமமிட்டு நல்லசாது வெனமுனத் தக்கானாய்
இந்தவிரவினி லெனது புருஷனைக் கொன்றெனைக் கூடவிசை விக்கின்றான்
நொந்துபயந் தலறினேனினிக் கொள்ளை கொள்வனென னறுவன்றாள்மன்றோ. ()

நுவல்வது கேட்டவரெல்லா மவரைவிரைவி னின்மனைக் குனுழைந்து பற்றித்
தவலருமவ்வூ ரரசன்தனிற் கொண்டு போய்நிகழ்ந்ததைச் சொன்னார்கள்
பவமிலரசன் சஜ்ஜநரைப்பார்த்து நிகழ்ந்தவுண்மை பகர்கவென்னப்
புவனமளந் தவனடியார் போந்ததுவு நிகழ்ந்தனவும் புகன்றுநின்றார். (மகூ)

கொலைசெய்யா ரிவரென்று குறித்துமரசன் கொய்த தலையைக்கண்டு
தலைகொய்தா னிவனென்று சாற்றினதி லனுமானஞ் சார்வதாதல்
நிலைமெய்யேயெனி னீயேமற் றிவன்கைகளை யறுத்திடென நிகழ்த்திப்
புலைபொய்யே புகல்வாள் கைதனிற் கொலைவாளீந்து கைகள் போக்கிவிட்டான்

கரங்கடுணிவாகிய சஜ்ஜனர்மிகவுந்து யருழந்து தம்மைக் கண்டோர்
இரங்கிலர் மற்றிவன் சாதுவேடங் கொண்டே திருடற் கெய்தினனென்
றுரங்குலைய விகழ்வது கேளாராகி யாத்திரை செல்வோருட்கூடி
நிரந்தரமும் ஜகநாத னினைவுகொண் டவ்வூரருகு நெடிது சேர்ந்தார். (மஅ)

வேறு

யாத்திரைக் காரரோ டணைந்திறங்கின
தீர்த்தரைவளர் ஜகநாதன் றேர்ந்தனன்
ஏத்து மர்ச்சகர் கனவெதிர்ந் திவ்வூர்ப் புறம்
வாழ்த்து சஜ்ஜன ரெனைவணங்க வந்தனர்.. (மகூ)

அவரை நீர்விரைந்தெதிர்ந் தணிகொள் பல்லக்கில்
நவமுற வேற்றிநன் கழைத்துநண்ணுமின்
இவணெனவர்ச் சகர்விழித் தெழுந்துடன்
தவவியந்தியானத்தைக் கொண்டு சார்ந்தனர் (உ0)

புறநக ரிறங்கின புனிதசீல ரிற்
றிறமிகு சஜ்ஜனர் யாவர் தேர்கிலேம்
அறவினை யீரென வவரைக் காட்டலும்
மறவினை யிலர் வயின்வந்து சொல்லுவார் (உக)

எமையரு ளுதனுக் கினியிராதலால்
உமையிதி லேற்றியங் குய்க்கவென்றனன்
சுமைவருந் தவத்தினீர் சார்கவென்றலும்
அமைவதுகேட் டதிசயித்தி யாவரும். (உஉ)

கொலைசெய்துகை குறைபட்ட கோதினேன்
விலையறு பல்லக் கின்மீதி வர்ந்துற
நிலைபெறு நேமியோன ருணிரம்பினான்
மலைவிது வெனத்தமில் வசனித் துற்றனர். (உஙூ)

சிலரிவர் மனநிலை தெரிந்தன்றேவிரை
மலர் மகளுயகன் வழுத்தவர்ச் சகர்
குலவுபல்லக் கினைக்கொண்டு வந்தனர்
இலகுற விதுதெரியாம லென்னையே. (உச)

ஜகபதியடி யரிற்றவறு சொல்வதிங்
கிகழ்வதின் மிகுபவ மெய்து மென்றனர்
தகவுறு மர்ச்சகர் சஜ்ஜனர்க்கு முன்
முகமனுடிதிவர் கென மொழிந்தனர். (உரு)

வினவினர் யாரொரு மிகையுஞ் செய்திலேன்
எனகை கடுணிக்குற வேணியற்றினன்
கனமுகிலனை யவனென்று கண்களிற்
புனல்வர நெஞ்சிடைப் பொருமி விம்மியே. (௨௬)

தீனதயாளன நாதபந்து சேர்
வானதன்னடியர்க்கு வந்தவாபத்தில்
நானெனக் காப்பவ னென நவிற்றுவார்
ஞானநல்ல வரது நவையுண்டாயிற்றே. (௨௭)

பதிதபாவன னெனும் விருது பற்றினன்
எதுசெய வெனப்பல பிதற்ற வெம்பிரான்
முதுதயை யுடனவர் கண்முன் முந்தினன்
கதைசிலை சங்குசக்கரங் கட்கத் தொடே. (௨௮)

நான்கு தோளிலங்குற நளிர் கிரீடமும்
தோன்று குண்டலமும் பொன்னுடையும் பைந்துழாய்த்
தேன்றுளி மாலையுந் திகழக் காண்டலும்
சான்றவரி ருகையுங் குறைதவிர்ந்தவே. (௨௯)

மணிக்கரம் வளர்தலு மகிழ்ந்து சஜ்ஜனர்
அணித்துழாய் மார்பின னடியில் வீழ்ந்தனர்
துணைக்கரத்தவர் தமைத் தொட்டெடுத்து மார்
பணைத்தன னருட்கடலான நாதனே. (௩௰)

நன்கருள் செயும் ஜகநாதன் றன்னையேன்
புன்கண் யாவருக்கும் யான்புரிகிலாதுற
என்கரந் துணிக்கு மாவியற்று வித்தனை
நின்கருணை நலநிகழ்த்தற் பாலதோ. (௩௧)

வேறு.

என்னக்கேட்ட வெழிற் சகநாதனீ
முன்னர்க் காலமுது மறை வேதியன்
துன்னக்கங்கை துளைந்து கரையிடை
மன்னக்கொண்டனை யென்னை மனத்தரோ. (௩௨)

அந்தவேளையி லங்கோர் கசாருகன்
நந்துவெங்கொலை செய்து நவிவுறப்
பந்தனஞ்செய் பசுவறுத்துக் கொடு
வந்ததாகமற் றன்னது நாடியே. (௩௩)

கிட்டவந்துனைக் கேட்டன னோர்பசுக்
கட்டவிழ்த்துறக் கண்டனை யோவென
நிட்டை கொண்டு நெடுங்கை குவித்தநீ
சுட்டினாய் கையின் வாயிற் சொல்லாமலே (௩௪)

காட்டுகைவழி சென்றக்க சாருகன்
மாட்டைப்பற்றினன் கொண்டுவதை செய்தான்
வீட்டுமப்பசு மேவினதோர் பெண்ணாய்
நாட்டு சாருகனையக னாயினன். (௩௫)

இருவரும் புணரில்லுழைச் சென்றனே
மருவ நின்னே மகிழ்ந்து மகிழ்நனே
வெருவுறுட்லே கொய்தனள் வேண்டுரு
தொருவு நின்கையுங் கொய்வது ஞற்றினள். (சுரு)

முன்பவத்தி லெனேயுள முன்னியே
அன்புசெய் பொழுதந்தக்க சாருகன்
நின்புறத்துறக் கண்டனே நீயதால்
வன்புறுத்துக சாருகனுய் வந்தாய். (சுஎ)

காட்டுகைகுறை பட்டனே காசிதே
வேட்டெடன் பாலன்பு மிக்கதளவிலே
ஈட்டு நின்றவத்தெய்தினெனுன் முன்யான்
வாட்ட நீங்குதி யென்று மறைந்தனன். (சுஅ)

அன்னகாலே யிலங்குறுவோ ரெலாம்
மன்னுதாசர் கரங்கள் வளர்ந்ததிங்
கென்னேயென்னே யெனவியப் பெய்தினுர்
பொன்னினுதன் செயலெனப் போற்றினுர். (சுகூ)

வாடனீங்கி மனமகிழ் சஜ்ஜனர்
ஆடினுர் கடலாடியம் மான்றனே
நாடினுர் கண்டு நான்கு திங்கள்வரை
கூடி ஞரங்கு மால்பெயர் கூறியே. (எ0)

பின்பு தன்பதி யெய்திப்பிரான்வயின்
அன்பு மிக்கனராகி ஹரிபெயர்
துன்பறத்தினந்தோறுந் தொழுது சொற்
றின்புறப் பெருவாழ்வுற்றிருந்தனர். (எக)

சஜ்ஜனகசாருகர் திருவடிகளே சரணம்.

ஆகச்சரித்திரம் எய்-க்கு செய்யுள் சகூகாகூஎ

முற்றிற்று

# அங்கதபூபதி சரித்திரம்.

இன்றயி ராயசிங் கங்கத பூபதி யென்போர்
மூறை சகோதரர் பின்னவர் முயங்கு பத்தினியார்
தறை யளர்ந்தவற் கர்ச்சனை செய்து சஜ்ஜனர்கள்
குறைவில் சேவையும் ஹரி திருநாமமுங் குறிப்போர். (௧)

ஆகியச் சுதனடி யவரொருவர் பாலருள்கொண்
டேகமிக்கவராயின ரொருதினத்தவ்வூர்
வாகதாய்த் தனக்கரு ளியதேசிகர் வாய்ப்பப்
பாகுசேர் மொழியாரஃ தறிந்து பண்பாக (௨)

அவர் தமக்கு நன்குபசரித்திட வகத்தெண்ணி
இவர் முயற்சி செய்வதைப் பதியறிந்திக லெய்தித்
துவரிதழ்க் குலமகளிர்க்குத் தொழுகுரு தெய்வம்
எவரின்சத்தனர் புருடனை யன்றி வேறென்று. (௩)

உள்வெளிற்றெரி யெனக்கென வுருத்தன னுரைக்கத்
தளவமென்ன கையதற் கெதிர் சாற்றுறு தன்னம்
அளகமுண்டிடா தமர்ந்தனர் மூன்று நாளாகத்
துளவமால் மறுதினத்திர வினிலவர் துணைவன் (௪)

ஆனவங்கத பூபதி கனவிடை யருள்சேர்
ஞானநல் வடிவுட னெதிர் நின்றன னயந்து
தானவச் சுதன்றனை யன்பு கொண்டடி தாழ்ந்தான்
ஏனமானவ னங்கத பூபதிக் கிசைப்பான் (௫)

நீயுன் றேவியை நீவணங்கு றத்தகு தெய்வம்
ஆயதே தனைக் காட்டு கென்றனை யதனாலே
மேயினேன் கண்டு கொள்ளென விளம்பினன் மறைந்தான்
காயுமன்னவன் பயந்துட னெழுந்து கண்விழித்து. (௬)

மனைவி பக்கல் வந்துனது பத்திக்கு மான் மகிழ்ந்தென்
றனையறிந்து கொளென்று தன்வடிவு காட்டினனுன்
னினைவறிந்திடா தனை மிகமுனிந்தன னீதான்
இனைவதின்றியே பொறுத்தருள் கெனவினி திசைத்தான். (௭)

அன்னகற் பினர்க்கினி துபதேசித்த வாசான்
தன்னகத் துறத்தா னழைத்தினிதுப தேசம்
மன்னலாயினன் றானுந் தம்பதிகளாய் வணங்கிப்
பன்னிரண்டெட னன்குப சாரமும் பண்ணி (௮)

பூசித்தாரது முதலிருவரும் பணிபுரிந்து
நேசித்தார் விண்டு நேயமுஞ் சாதுசேவையுந்தாம்
வாசித்தார் தொடை ராயசிங் கென்பவன் மால்சீர்
ஆசித்தார் தருதம்பியைப் பகைவர் மேலாக (௯)

சிலதளங்களைச் சேர்த்துட னனுப்பினன் சென்று
வலதந்தெவ் விளை வென்றரண் கொண்டவண் வயங்கு
பல தனங்களு மணிகளும் வைணவர் பற்ற
நலதரத்துட னல்கினன வையறு குணத்தான் (௯)

விஞ்சுறும் பொருளனைத் தையுந் தம்பதிமேவச்
செஞ்செவே செலவுய்த்தன னதின்மிகு தேசு
மஞ்சுநீடிய வயிர மொன்றைக் கண்டு மகிழ்ந்து
தஞ்சமாம் ஜகநாதனுக் கர்ப்பணஞ் சமைக்க (௰க)

வேண்டுமென் றுகைக்க கொண்டு தன்னரண்மனைமேவி
ஆண்டிருந்திட வங்கத பூபதியுடனே
ஈண்டினோர் தமையன் புறஞ்சென் றிஃதிசைத்தார்
மாண்டகாதல ளுயது வாங்கி வம்மென்று (௰உ)

சிலரையேவின னங்குச் சென்ற வரதுசெப்ப
மலரினுந் தியான்றனக் கென்று வைத்தனன் வழங்கேன்
நலமு லாவிய வயிரத்தை யென்றன னவில
நிலமெலா முடையவன் வினவிச்சின நிமிர்ந்தான். (௰௩)

தனது தங்கையைக் கூயிந்த வங்கதன்தன்போ
சனமுடன் விடங் கலந்திட்டுக் கொல்கெனச் சாற்ற
அனமடந்தை யின்னேன் சொன்னபடிக் கொல்லேனுயில்
எனை யடர்ந்திடுவா னெனவஞ்சின ளேகி. (௰௪)

தமையனல் கியவிடத்தை யங்கதனுண் போசனத்தில்
அமைவு செய்திட வாயபோதச் சுதன்றன்னைச்
சமையவுள்ளத்திற் கொண்டன னந்தவோதனத்தை
இமையவர்க்கெல்லா மீசனுக் கர்ப்பண மென்று. (௰௫)

உண்ணலுற்ற போதவன் கருத்துணரு வானுன்னி
அண்ணலாம் ஜகநாதன தங்கைமே லாகி
நண்ணலான சோறிது நஞ்சுக லந்தது மிசைய
எண்ண லென்றனன் கேட்டந்தவங்கத னிசைப்பான். (௰௬)

அச்சுதன் றனக் கர்ப்பணமாகிய வன்னம்
நச்சியுண்டிடாதிரே னெனநனி நயந்துண்டான்
மெய்ச்சி யுண்டபின் மனைவி பான்மேவினன் விளைந்த
இச்செயற்கைகள் யாவையுந் தெரிவுற வியம்பி (௰௭)

இனியிங் கெய்துறத் தக்கதன் றெழில் ஜகநாதம்
துனிமுகுந்தனைச் சேவித்துத் துன்னுவோ மென்று
முனிவுகொண்ட தன்றமையன் முந்துத லறியாமல்
நனி விரைந்தனன் மனையொடு செலச் சகநாதம். (௰௮)

இவையெலாந் தெரிந்தன னந்தராய சிங்கென்பே
நவையிலாத தன்மந்திரி தன்முக நாடிக்
குவைகொள் சேனையோடேகிநீ யங்கதன் கெ[illegible]
அவை யிரந்தனைப் பறித்துவா வென்றனுப்பி[illegible] (௰௯)

அந்த மந்திரி தன்னுடைச் சேனையை யணிந்து
வந்தனன் விரைந்தங் கதபூபதி வழிக்கொண்
டுந்து தெண்டிரை யொருநதிக் கரைமருங் குற்றான்
முந்தினன் றொடர்ந்தெதி ருறவலைத்தனன்முடுகி. (௨௰)

அங்க தன்றெரிந்தான் வயிரம் பறித்தகல
இங்குவந்தனன் சேனையோ டமைச்ச னென்றெண்ணிப்
பொங்கு சோதிகொள் வயிரத்தைப் பொருந்தினோர் காணத்
தன்கை தோன்றுறக் காட்டி மற்றிது ஜக்நாதன். (௨௧)

தனக்குநன் கினிதர்ப்பண மென்றன் பிற்சாற்றி
மனக்குவந் தெறிந்தானந்த யாற்றின் மந்திரியும்
சினக்கொடுந் திறற் சேனையைச் சிந்து விலிறக்கிக்
கனத்தமா மணிதனைத் துருவுற்றனன் கவர. (௨௨)

தேடுவோர் தலைநோக்கி நீராற்றிடைத் தேடி
வாடுகின்ற திற்பயனிலை ஜகபதி மார்பிற்
கூடிநின்ற தென்வார்த்தை யிலையநீர் கொண்டால்
நாடி யென்னுடன் வருதிர்காட்டுவ னென நவின்றான். (௨௩)

நன்று காண்டு மென்றமைச் சனாதியர் நனிவிரைந்து
துன்றுமங்க தனுடன் வழிமூன்று நாடொலைத்துச்
சென்று சீர்ச்சக நாதன்வாழ் கோயிலிற் சேர்ந்து
நின்று கண்டனர் மாயவன் பதக்கத்தி னிலவல். (௨௪)

ஆற்றிலே யெறிந்தது ஜகநாதன் மார்பணுகித்
தோற்றுகின்ற தெவ்விதத் திதுபூசிக்குந் தொல்லீர்
சாற்றுமின்னென மந்திரி வினவலுஞ் சான்றோர்
நேற்று முன்னிரண்டாந் தினமிந்தமா நிமலன். (௨௫)

கனவி லெம்வயின் வந்து நன்பக லிலங்கத னும்
அனகவன் பினனெனக் கொருவயிர முய்த்தன னீர்
எனதுமார் பிடைத்தி கழ்வுறச்செய்மி னென்றிசைத்தான்
வினவியா மெழுந்துட னிங்குமேவி நோக்குறலும். (௨௬)

சன்னிதானத்தி லிவ்வயிரந் திகழ்தரக்கண்
டுன்னியிப்ப தக்கத் துறப்பதித் திங்ங னொளிர்வோன்
பொன்னின் மார்புறச் சார்த்தின முடனெனப் புகன்றார்
அன்னதாற்றிடை யங்கத னெறிந்ததே யென்று. (௨௭)

அமைச்சனாதியோர் தெளிந்திங் கிதற்புத மென்று
தமைச்செலச் சொன்னராய சிங்கென்பவன் றனக்குச்
சமைத்த செய்கைகள் யாவையுஞ் சடுதியி லெழுதி
இமைப்பின் முன்கடிதே கெனத்தூதன் கையீந்தார். (௨௮)

தூதனோடினன் விரைந்து சென்றது தரத்தோன்றல்
நீதமாயதைப் படித்ததி சயித்துடனேமி
நாதன் பொன்னடிக் கன்புசெ யெம்பியை நாடா
நோதல் செய்தன னெனவுள நடுங்கின னுடங்கி. (௨௯)

இனியை யாயினை நீ ஜகதீசனுக் கென்று
கனிதெரிந்திலேன் செய்துள நவையெலாம் பொறுத்துப்
புனிதனாகிய நினைக்கண்டி யானலம் பொருந்தத்
தனிநிலாம் ஜகநாதனை தானே சார்கென்று. (௩0)

எழுதியங் கதபூபதிக் கீகநீ யென்று
வழுவி றாதன்கை யீந்தனன் வாங்கினன் வந்து
தொழுது நல்கலும் வாங்கினன் மற்றதிற்சூ குத்த
பழுதில் செய்கை யெல்லாந் தெரிந்துணர்ந்தனன் பரிந்தான். (௩௧)

உலகநாத னென்றமையனுக் குறநல்லபுத்தி
இலக நல்கின னெனமிக வுவந்தன னிணையில்
சலசலோசனன் றாள்பணிந்தன்புடன் றுதிகள்
பலநவின்றனன் விடைபெற்றுத் தன்பதி படர்ந்தான் (௩௨)

வந்ததம்பியை மகிழ்மிகத் தழுவினன் மன்னன்
அந்தநாண் முதலரி பஜனையின் மிகவன்பாம்
சிந்தைகொண்டனன் றம்பியு மனுடன் சேர்ந்து
யிந்தைமேவுற மனைவியாரொடு விழைந்திருந்தான். (௩௩)

அங்கதபூபதி திருவடிகளே சரணம்.

ஆகச்சரித்திரம் ௭௧க்கு செய்யுள் ௪௩௯௱௭0

முற்றிற்று.



# குணவதிபாயிசரித்திரம்

மாதவ சிங்கென் கோன்மனை குணவதி பாயிக்
காதர முளமக்க ளிருவர் களுள ராஞர்
தாதிகள் பலராஞர் தமிலினி தொருதாதி
போதுகள் பலவெல்லாம் புவிபதி திருநாமம். (௧)

மெள்ள நவின்றுள் வாய்மினு மினுவென் கிற்பாள்
துள்ளுறு யிதழாளைத் தொகுகுண வதிகண்டுன்
விள்ளிதழ் பலகாலு மிகவசை கிறதென்னே
உள்ளது புகல்கென்னவவளி னிதுரை செய்வாள். (௨)

இக்கரு மசரீர மினிதினி யீடேறத்
தக்கநலரி நாமந்தனை யினிதுரை செய்வேன்
மிக்கந லெழின்மானே யெனவின வியமின்னார்
அக்கட வுனிஞம மருளுட னடைவாக. (௩)

நானினி துணர்கிற்க நவிலுதி யுபதேசம்
தானென நனிவேண்டத் தாதியும முதன்ன
மானென விழியார் தமன நிலைநனி கண்டு
தேனெனு மொழியாளைத் திம்புன வினிலாட்டி. (௫)

நியதியொ டிறைவைத்து நீனிற முறுகண்ணன்
நயமலி யுருவொன்றை நல்கினளது தன்னை
மயலிலள் பூசிக்கும் வகையு மிவகை யென்றே
அயர்வறு திருநாம மதனை யும்ருள் செய்தாள். (௬)

அருளிய படியந்தக் குணவதி ஹரிநாமம்
மருளற வெதுபோதும் வாய்வழுவுத லின்றித்
தெருளுட னினிதோதிச் செயும்வகை பூசித்துப்
பொருளுண ரரிதாசர் பூசையு மியல்கின்றாள். (௭)

கண்ணன தொளிர்பாத கமல நவிதயத்தில்
நண்ணுறும் வகைசெய்து நாடொறு நலம் விஞ்சி
எண்ணினர் பொழிகண்ணீரினின் முழுகின ராகி
மண்ணுறுவிவ காரமறவி யொடுறு நாளில். (௮)

மனைவியர் செயலெல்லா மன்னவ னறிவானாய்
இனையவ ளிடையே தோவெறி யணுகிய தென்று
வினைதெரி பவராலே விடும்வகை பரிகாரம்
தனைநனி புரிவித்துந் தணிகில தெனவெண்ணி. (௯)

குணவதிதனை நோக்கிக் குவலய விவகாரம்
புணர்கிலை வெறிகொண்டாற் போலெனை புரிகின்றாய்
உணர்வுற வுரையென்ன வுரைபதிதனை நோக்கி
இணர்விரி துளவோனு மிறைபரமான் மாவை. (௰)

எப்பொழுதுந் தியானித் திடுதலி னவனென்னைக்
கைப்படவசி வுற்றுங்கண் ணெதிருறு கில்லான்
அப்படி யவனின்னு மணைகில னதனாலே
இப்படியுறுகின்றே னென்றழுதனர் சொன்னார். (௰௧)

அவ்வகை சொலல் கேட்டவரசனு மிகுகோபம்
வவ்வின னொளிர்பல்லின் வகைநெறு நெறுவென்னக்
கவ்வி நயன மெல்லாங் கனலுக நனிநோக்கச்
செவ்விய செயலாருஞ் செறிபய மிகலாகி. (௰௨)

பதிமுக நோக்காத படிவிழிகளை மூட
எதிருன லுறுகண்ண னெய்தினன் மணிபொன் சேர்
மதுவிரி வனமாலை மார்பொடு படையைந்தும்
கதிர்முடி யொளிவீசக் காதணி நனிமின்ன. (௰௩)

பொன்னுடையொடு கோலம் பொலிவுறு முருவத்தை
நன்னு தலவர்கண்டு நமவென வடிமீது
துன்னுற வருள்வாரி துவளிடை தலைமீது
மன்னுறு கரம்வைத்து மனமயர் வுறன் மின்னே. (௰௪)

நானுறு பொழுதெங்ங னுறுகுவ தினவில்லை
மானுறழ் விழியாயுன் வசமுறை குவனென்று
தானுடன் மறைவுற்றான் றையலர் மகிழ் வுற்றுக்
கோனுடை முகநோக்கிக் கூசலொதிர் நின்றார். (௰௪)

மாலெதிருறலான வகைதெரியா மன்னன்
நாலெனு மிடையானை நோக்கி யிவகையே நீ
ஏலுறின் மிகுதண்ட மியல்வகை புரிவே னென்
றேலுறு குரல்காட்டி யுரைசெய்து புறமேகி. (௰௫)

இன்னவள் யாரோவோர் யதிமொழிவழி நின்றாள்
அன்னதினிவண்யாரு மணுகுற லாகாமே
மன்னுதிரினி யென்று வாயிலினுறு வோரிற்
பன்னின னுடனே தன்பரி ஜனமொடு கூடி. (௰௬)

மகரிரு வருமுந்த மந்திரிதனை நோக்கி
இகலுறு புலிவேட்டைக் கேகுவெ னிருவென்று
திகழ்வொடு வனமூடு சென்றன னிவணுற்ற
ஜகபதி பணிகொண்ட சத்குண வதிபாயி. (௰௭)

கண்ணனை மறவாது கருதின ரடியார்கள்
நண்ணுற வெதிர்கூவி நன்குற நனிபூசித்
துண்ணுறல் புரிவித் தங்குறுவது மிகலானார்
மண்ணுல கதையாள் வோன்மந்திரி யவைகண்டான். (௰௮)

பதிதன துரைவிஞ் சிப்பன்னியர் செயலாமோ
மதியின தலதென்று மன்னவ னுணர் கிற்கக்
கதுமெனவரை வுற்றுக் கானக முறவுய்த்தான்
அதுதெரி வுறலாகி யரசுள நனிசீறி. (௰௯)

காதகரொரு நால்வர் கடிது நணுகநோக்கி
மாதவடனை யின்னே வதைசெய்மி னெனவுய்த்தான்
போதரு மவருள்ளே புக்கவர் கொலைசெய்ய
நாதனை யுளம்வைத்தோர் பூசையினனு குற்றார். (௨௰)

அவ்விய லறிகண்ண னடுபுலி வடிவாகிச்
செவ்வி யினியல் பூசைத் திருவுரு வினினின்றுய்
வெவ்வியல் கொடுதோன்ற மினிர்குண வதிகண்டே
இவ்வியல் கொடுநீயின் றெய்திய தெனை யென்றார். (௨௧)

எதிர்மொழி தரவின்றி யெய்திய கொலையாளர்
முதிர்கொலை யுறநாடி முந்தினனி மிடத்தில்
அதிர் குரலது கேளாவணு கினரய லுள்ளோர்
கதிர்செறிவாளோடு காதகர் படல் கண்டார். (௨௨)

புலியக நிமிர்கின்ற பொருகுரல தினஞ்சி
மெலிவின ரொலிகொண்டு விம்முத லுறுபோது
கலிகடலன மேனிக் கண்ணனதியல் பூசை
பொலிவுற முடிவித்துப் போந்தனர் புறமன்னார். (௨௩

ஹரிதன தடியாரை யன்பொடு பூசித்தற்
குரியனை கொடுவெந்தோருவர் கொலையுறல் கண்டு
கரிய நன்முகில் போல்வாய் காதகர் படுதற்கோ
வரிசெறி புலியானு யெனமன மறுகுற்றார் (உச)

சாது நலோரொடு சார்ந்தவ ரெல்லோரும்
காதுற வந்தோரைக் கடுகியோர் புலிவந்து
தீதுற வதைசெய்த செயலதி சயமென்று
மாதுறு மணிமார் பனருளிய வகையென்றார். (உரு)

குணவதி பெருகன் பைக்கோதிலர் கொண்டாட்
அணவிய ஹரிதாசர்க் ககமகிழ்வொடு பேணி
மணமலி வனமார்பன் மன்னுற வுறலானார்
உணர்வுறவிவை யாவுமுட னெழுதின னுய்த்தான். (உசா)

மந்திரி வரைவுற்ற வகையர சறிவுற்றுப்
புந்தியின னியச்சம் பொதிவுற மதிமிக்காள்
நைந்திடும் வகைசெய்தேனு னெனை நலிவுற்றுச்
செந்திரு வினையாடான் செய்வன செய்கென்று. (உஎ)

வேறு

கமைப்பெருங்குணக் கணவிக்கேற்பவை
தமைக்கொணர்ந்துதந் துதவிச்சார்கென
இமைப்பின் முன்கடி தேகுதூதர் பால்
அமைச்சன்றேர் வகைவரைந்தனுப்பினுன். (உஅ)

பின்பு சூழ்வரும் பிழைப்பில் சேனையும்
தன்புறந் தொகுத்தனையருந் தொடர்ந்
தின்பு சேர்வுறவெய்து மார்க்கத்தின்
முன்பொராறு நீர் முடுகக்கண்டனன். (உகூ)

இடஞ்சேர்வகை யுளுற்றி மற்றதன்
ஊடமர்ந்து தானுறவு மோடந்தான்
நீடமா நதி நடுவினீள் சுழற்
பாடலைந்து பம்பர நிகர்த்தரோ. (கூ௰)

முழுகு மாசுழல் முடுகு காலையில்
குழுவியாவருங்கோனு மஞ்சினார்
வழுவிலாது போய்க்கரை மருங்குறக்
கெழுவுதந் திரங்கிடைப் புரமலே. (கூக)

மனநடுங்குறுங்காலை மன்னவன்
றனது பத்தினி தன்னை யுன்னினுன்
உனலு நீர்ச்சுழலுற்ற வோடம்வார்
புனலினின்று நீள்கரைக் கட்போந்ததே. (கூஉ)

அரசனனந்த மடைந்தெல்லோருடன்
விரசினனரண் மனைக்கண் மேவினுன்
உரைசெய் புத்திரரோடு தேவியைக்
கரைசெயற் கருங்களிப்பிற் கண்டனன். (கூகூ)

அன்புடன்றழீஇ யரிவை நீமுகுந்
தன்பெருங் கயிங்கரிய மேதழீஇ
இன்பு கூரு நின்னியற்கைதேர்ந் திலேன்
துன்பு செய்வதே துணிந்து சூழ்ந்தனேன். (௬௪)

உனது சீர்மை தானுரைக்கற் பாலதோ
நினது நாமமே நிகழ்த்தி நீணதிப்
புனலின் மூழ்குறேங் கரைக்கட் போந்தனேம்
இனமு நின்னில் வேண்டு வதியாதென்றான். (௬௫)

என்று பத்தினியாரை யேத்தினான்
அன்று தொட்டனை யாருடன் குலாய்த்
துன்றுறுஞ்சிறார் தொழும்பு செய்யக்கோ
நன்று மால்பெயர் நவின்று வாழ்ந்தனன். (௬௬)

## குணவதிபாயிதிருவடிகளே சரணம்.

ஆகச்சரித்திரம் ௭௨ க்கு செய்யுள் ௫௬௬.

முற்றிற்று.

# குபராபாயி சரித்திரம்.

சரவாகனன் பொருவி லரசாயவன்றனவை தவிராதுணர்ந்துறுதியாய்
வருகாரியம் புகலவலர் பால்வருந்தனையை குபராவெனும் பெயரினார்
திரமார் குழந்தை யெனும்வயதாதியன் பினொடு திருமால் பதந்தொழுதலோ
டொருகாதரம் பெருகி ஹரிநாமமின்புதரவுரை வாயுடன் குலவுவார். (௧)

அனையாரிளம்பரு வமதிலே மணஞ்செய்துற வமைவாகி யௌவனமுமா
யினபோதுணர்ந்து மணமகன் வீடு துன்றியவரிவர் போதுறும் படியெணு
மனைமே வலுந்துணையில் குபராவறிந்து மிகமனநோவொடுங் கருதுவார்
எனைமேவுறுந்தமர்கள் கொடுபோயின் விஷயானுபவமே யிசைந்துறுமரோ. (௨)

சந்தான மதனாலடைந்தான் மயற்கொண்டு சலியாததுயர் மேவுறும்
சைந்தார் பவஞ்சேரு நந்தாத ஹரிபத்தி நணுகாதவகை கூடுறும்
சிந்தாகுலஞ் சாலவருமாதலாலென்னை செயலென்று பலவாறெண
நொந்தாரிருந்தன்று நடுராவெழுந்தாரு நோக்காது புறமேவினார். (௩)

தனியாய் முகுந்தனையு ளிடையே நினைந்துருக தவிராது நகர் வாயிலூ
டினிதாக வருபோது கஜவான தெதிர் மூடியுற நோக்கியினை வாகியே
பனிமேவு துளவோனை நனிநாடி நினை போதுபவநாசனது போதிலே
நனியேழை வடிவாகி நனிமூடினதையோவி நலியாது செலுமா செய்தான். ()

அப்போது குபரா நலானந்தமாகி வெளி யாகித்த மேலிருந்த
ஒப்போதரும் பணிகள் யாவுங்கழற்றி மடி யுட்கொண்டு துளவார்வனத்
திற்போகிய முனைக்கணிசைவான சிரகாட்ட தென்கின்ற துறைவாய்படிந்
தெய்ப்பே துமிலரான சாதுக்களுக்குத்த மெழிலான கலனீந்தரோ. (௫

கோயிற்குளே வந்து கோபாலனைக்கண்டு குவிகின்றகை யோடு நின்
றுயிற்றயா மேவுதேவாதி தேவா நினடைதீன பந்தாயவா
நீயிற்றை நாண்மே வெனைச்சன்ம பந்தத்தினீக்கிப் புரந்தாள்கென
வாயிற்புகன்றே நல்வகை மேவு சாஷ்டாங்கமாகப் பணிந்தாரரோ. (௬)

பின்பங்கொர் புறமேவி ஹரியே நீ யென்சார்பு பெரிதான தயையேபுரிந்
துன்பைம்பொனுருவங் கொடென் கண்களாரஞ்சுக்க வுற்றென்றன் மயநீர்த்
றன்பங்கு மிகமூத்தினந் தங்கினர் மாதவன்றன்றியானத்திலே [தியென்
இன்பந்தருங் கண்ணனவரன் பிணிலைகண்டெதிர்ந்தன்னர் தலைமீதிலே. (எ)

கைவைத்து மின்னே நிகவலற்கவினி நீடு கவின்ராதை குண்டத்தடைந்
துய்வைக்கொடுறை கென்னவடிதாழ்ந்துகுபராவுடன் சென்றுரைந்தின்பமாய்
நைவைத் தவிர்ந்தார நவநீத மூண்கள் வனுனரு மினிதுண்டுறத்
துய்வைக் கொணர்ந்திய வுண்டாரிருந்தார் துலங்கத் தருந்தந்தையார். [அ]

மனைமேவுறக் கண்டிலா மற்றியங்கிப் பின் வழிதேடி யெங்குந்திரிந்
தினைவாகிராதா வெழிற்குண்ட மெய்திக்கணிற்கண்டு மகளைப்பொனே
அனையாதியனை வோரையும் விட்டு நீயிங்கனடைதற் கெனேகாரணம்
உனை மாமணஞ்செய்த கொழுநற்கெவன் சொல்லுதுமெனப் பினுங்கூறுவார்.

ருதுவான பின் பிங்ஙனுறலாகுமோ வெட்கமுறலாகுமே நங்குலம்
கதுவாத செயல் செய்தி யெனலும் பிதாவின் முகங்கண்டு குபராவறு
பதுவான வயதுற்று மரிநாம முறைசெய்து பவநாச மாக்காதினும்
சதுரோது மிலதான மனைவாழ்வு தனிலே சழக்குற்றிருக்கின் றீரோ. (௯)

மனைவாழ்வு கொடிதென்று கோபால நாமங்கள் வாயார நுவல்வுற்றியான்
இனைவேது மிலதாகி யிச்சென்ம மீடேற விவணெய்தி யுறைவேனையும்
புனைபாச பந்தத்தி லுறவே யழைக்கின்ற புரைதானுமக்கு முறையன்
றெனையோவி யினியேனு மரிநாம மினிதோதி யீடேறு கென்றாரரோ. (௰௧)

மகள்வாய்மை முழுதும் பிதாவாகி யவர்கேட்டு மகிழ்வாகி மகளார்திரு
முகமான மலர்கண்டெனை யேயெலாநன்று மூதிர்தாரு வளர்கானிலே
புகலாகி யுறைகின்ற விதுசால வினிதன்று புரமேவி நமதில்லிலே
ஜகநாத னதுநாம மினிதோதி யுளமேவு தகவாக வுறைநீயென (௰௨)

பலவாறு புகல்போது திருமாலு னதுதந்தை பகர்வாய்மைதனை யேவினய்
இலமேவி யெனதாய திருநாம நனியோதி யிருநாளு மூனையோவுறேன்
செலமேவு கெனும்வேலை குபராவும் வருதந்தை செறிவாக வுடனேகியே
நலமான வுயர்பூசை யகமான தமைவாக நலிவின்றி யதில்வைகவே. (௰௩)

வேறு

கண்ணனை நிறுவிநாளுங் கருதுசோட சோபசாரம்
நண்ணுறக் கரணமூன்று நனிசுத்தி யாய்ப்பூசித்து
விண்ணிரு ளிரவிஞம விமலகீர்த் தனங்கள்செய்து
தண்ணளி மிகுசா துக்கள் பூசையுஞ் செய்து சார்ந்தார். (௰௪)

தந்தைசொற் படியே யில்லந் தனிலிருந் தரிதன் கீர்த்த
னந்தனைப் பகர்ந்துமேவ நாட்டுளோர் யாருந்தேர்ந்து
வந்துகேட் டவசராகி மகிழ்கின்ற றொன்னும் வார்த்தை
அந்தவூ ரரசன்கேட்டுப் புரோகிதர் வரவழைத்தான். (௰௫)

ஃமதுக்கு மாரி மால்பே ரோதலிற் பிரிவை யாகி
அமைவரு பிரமானந்த மாய்ப்புகல் கின்றதாக
விமலர்க ளுரைப்பக் கேட்டு விரும்பினே னுமோர்நாள்
நுமதக மேவியின்ப நுகருவே னென்றுவேண்டி. (௰௬)

ஒருதினத் திரவின்மேவி யுவமையில் குபாராபோற்ற
மருவலங் காரத்தோடு வளர்திரு மான்முன்னாகக்
கருதுறு தாளம்வீணை மிருதங்க முழங்கக் காலில்
பரிபுரந் தரித்துநின்று பாடலோ டாடல்செய்து (௰௭)

பெருகவா னந்தக்கண்ணீர் பெயர்வில்சா துக்களெல்லாம்
உருகினர் வினவிச்சார்ந்தங் குற்றதும் பிறவுங்கண்டு
திருவன குபாராபாயி செவ்வியும் வயதுந் தேர்ந்து
பொறுவரு முகவிலாசப் பொற்பினி லீடுபட்டான். (௰௮)

காமமிக் கவனுய் மோகங் கலந்துமெய் மறந்தானாகி
நாமகீர்த் தனங்கள்செய்யு நல்லவை தனிவிருக்க
ஆமள வற்றதான வாறுகண் டக்கணைக்கண்
கோமளக் குபாரா விந்தக் கோலத்தோ டிருந்துகொண்டு (௰௯)

இக்கணை யிருக்குந்தன்னை யிகழ்ந்துகூஉய்ப் பாவிநீயென்
பக்கலிவ் வாறுநீந்திப் படர்கெனப் பகர்வதாக
அக்கணங் கனவுகண்டு துணுக்கெனவெருவியாங்குத்
தக்கதில் கனவென் னென்று தன்னுளே யாலோசித்தான். (௨௰)

நதிபவக் கடலேயாக நாட்டமக் கணையின் மேவி
வதிதரு குபாராபாயி மன்னுமிக் கணைய்தான
கொதிநர கத்தில்வீழ்ந்து குறைவுறு மெனக்குறித்துப்
பொதிபவக் கடலைநீந்திப் போதுக விரைவிலென்று. (௨௧)

அழைத்ததாய் நிச்சயிக்கு மளவின்மெஞ் ஞானந் தோன்றிக்
குழைத்தனு தாபங்கூர்ந்து பயபக்தி யுடனே கொண்டு
தழைத்தசீர்க் குபாராபாயி தாளிணை வணங்கி நும்பால்
பிழைத்தது பொறுக்கவென்று பேசினன் றுதித்து நின்று (௨௨)

இனிதுநீ ருபதே சஞ்செய் தென்னையீ டேற்றுகென்ன
வனிதையா ருபதேசிக்க மனமகிழ்ந் தினிது பெற்று
நனியுயர் கோயில்சார்ந்து நாடொறு நளின நாபன்
புனிதநா மங்களேத்திப் பொருவின்மா லன்பனானான். (௨௩)

குபாராபாயி திருவடிகளே சரணம்.

ஆகச்சரித்திரம் ௰௯க்குச் செய்யுள் ௩௱௨௰௩.

முற்றிற்று



# கிரிதரலால் சரித்திரம்

வரமிகுத்த பிருந்தை வனத்திலே
பரமபக்த சிரோமணி பன்னரும்
திரமுறுத்து மெஞ்ஞான முஞ்சீலமும்
விரவு முத்தமர் விண்டு வுக்கன்பரோ. (௧)

சால்பொருங்குறும் பூததயாவினர்
மால்பெறுஞ் சிந்தை மன்னுங் கிரிதர
லால்எனும் பெயர் நண்ணினர் சாதுக்கள்
பால்விரும்பு பசாரப் பரிவினர். (௨)

காலினூ புரங்கத் தக்கடல் வளர்
மாலிஞுடல் வருத்துச் சங்கீதத்தி
ஞலினீளன் பமைந்தரி கீர்த்தனம்
கோலிநாளும் வருதலைக் கொண்டோர் நாள். (௩)

கண்ணன் கோயில் கலந்துறு காலையங்
கெண்ணன் சாதுக்களீறிலர் கூடினர்
நண்ணுஞ் சீரமை ராசக்கி ரீடைநன்
கண்ணுங் கீர்த்தனஞ் செய்க வென்றாரோ. (௪)

கேட்டவாய்மை கிரிதரலா லென்போர்.
நீட்டு சந்நிதி முன்னெழுந்து நின்று
நாட்டுராசக் கிரிடைக்கு நல்லுடை
வீட்டி லுள்ளது வேண்டு மிப்போதென (௫)

சென்று கொண்டு திரிது மென்றாலிவன்
நன்றுசாலுஞ் செறுழிகை யென்செயல்
என்று கண்ணனே வேண்டி யெதிருற
ஒன்று பொன்னுடை வாளின்று குந்தவே. (௬)

எழுந்து நின்றிவ ரோத்து மிடத்தின் முன்
விழுந்து வேண்டிய பொன்னுடை மேவிய
செழுந்தண் சாதுஜனங்க ளெல்லாருங் கண்
டழுந்துமன் பினரன் பைவியந்தனர். (௭)

லால்விரும் பியங்கைக்கொடு நன்குதம்
மேல்விளக்கத் தரித்து விளம்பினர்
மால்வியந்துறக் கீர்த்தன மாண்பெலாம் (௮)

யாருங்கேட்டின்ப வாரியழுந்தினர்
சேருமற்றோர் தினத்துத் துவாதசம்
ஆருநாமந் தரித்தோர் பைராகியவ்
வூரின் சார்பிருந் தூற்றதைக் கண்டனர். (௯)

*சாதுபூசை தவிர்கில ராதலா*
*லோதுமற்ற தனுக்குப சாரமப்*
*போதுசெய்தடி பூசித்துப் பாதநீர்*
*கோதுறுது குடித்துக் குளிர்ந்தனர்.* (௰)

*கண்ட வேதியர் யாருங் கனன்றனர்*
*விண்ட வெம்பிணம் பட்ட வெள்ளத்தினை*
*உண்டதான் மறை யோதத் தக்காயலை*
*கொண்ட ஜாதி யொழுக்கங் குலைந்தனை.* (௰௧)

*என்றுகீழ்மை யியம்பக் கிரிதரர்*
*நன்றுபூமி நலம்பெற நல்லவர்*
*ஒன்றினாிறப் பும்பிறப் பும்மிலர்*
*பொன்றி னொன் றிகழ்தல் புலமையோ.* (௰௨)

*நீயிர் நிந்தித்த னீங்குக வென்றனர்*
*ஆயவந்தணர் ஞானம றைதலை*
*எயநம்பல மிங்கிறந் தோன்றனை*
*மாய்வு நீக்குறில் யாநம்பு வமென்று.* (௰௩)

*செத்ததைப்பிழைக் கச்செய்வ தில்லையேல்*
*ஒத்தஜாதிக் கிழிவுசெய் வோமென்றார்*
*மெய்த்தஞானம் விளங்குகி ரிதரர்*
*பொய்த்த மூடர்க்குப் புத்தியுண் டாகென்று.* (௰௪)

*தனிவிளங்குசித் தத்தொடு கண்ணனை*
*இனிதிரந்து நினைக்கவி றந்தவன்*
*நனிவிளங்கின னல்லுயிர் கொண்டுடன்*
*முனிவிகந்த கிரிதரர் முன்னரோ.* (௰௫)

*கண்டுபோற்றிக் கண்ணன்றிரு நாமமுட்*
*கொண்டு போயினன் றன்பதி கூடினோர்*
*மண்டிநன்கு வியந்து மதித்தனர்*
*அண்டுதாசனை யன்பொ டிறைஞ்சினார்.* (௰௬)

*போற்றினார்தும் பெருமையைப் பூமியில்*
*சாற்றஞானந் தழைந்தவர் தாமிலை*
*ஆற்றல்சால வமைந்தவர் நீளொனத்*
*தேற்றினார்தம் பதியிடைச் சென்றனர்.* (௰௭)

## கிரிதரலால் திருவடிகளே சரணம்.

ஆகச்சரித்திரம் ௭௪-க்குச்செய்யுள் ௫௲௪௱௰௬.

## முற்றிற்று



# பலக்புகார் சரித்திரம்

பலக்புகா ரொனுமவிந்த வரசன் பாரிற்
 பதினெட்டு லக்ஷகிளா குதிரையுள்ளோன்
அலமொழில்சே ரரம்பைதனை யனையமின்று
 ராயிரத்தொ டறுநூறு முடையாஸ்தி
விலகுதலில் லாதுசெங்கோல் செலுத்தித் தானுள்
 மேதினியி லோருயிர்க்கு மெலிவுநேரா
திலகுபல வுயிரிடத்துந் தயைமிக் குள்ளா
 னேனுமட வார்மோகத் திறங்கி நீங்கான். (௧)

இன்னபடி வருமரச னொருநாளிற்ற
 னெட்டுமந் திரிகளும் வரவழைத் தியான்றுன்
நன்னலச்சத் கதியடைதற் குபாயமேது
 நவில்கவென மந்திரிக ளாலோசித்து
மன்னுதனிக் காசிநகர் வளர்கபீரர்
 மாணடிசேர்ந் தானல்ல கதிசேர் வாகும்
என்னவொரு மொழியாய்ச்சொல் வியுங்கபீர
 ரிணையில்பெரு மையுங்கூற வேந்தல்கேட்டு (௨)

மனமகிழ்ந்தோர் நாள்காசி நகரந்தன்னில்
 வந்துகபீர் தாசர்வளர் மனைக்குள்ளேகி
வனமணிந்தோ னடியரைச்சாஷ் டாங்கமாக
 வணங்கியென்னைச் சன்மசா பல்யனுக்கிக்
கனமிருந்தகதி சேரச்செய்யவேண்டுங்
 கண்ணனடியவரே நீ ரென்னவேண்ட
அனகரந்தவரசனுக் கிராம நாம
 மந்திரத்தையடைவாக வுபதேசித்து (௩)

அதையனுஷ்டிக்கும் வகையுஞ் சொல்லி வேந்தற்
 கடைவுடனே விடைகொடுக்கவவன் வணங்கிச்
சிதைவறு தன்பதிக்கு வந்தவ்விதமேயாகச்
 செய்யானுய்ச் சிலநாள் சென்ற பினங்கோர் நாள்
ததைமலராற் சயன மவற்கலங்கரித்த
 தாசிகட்டிலின் படிமேற்றங்கலாகிப்
புதைமலர் மெல்லணை மீது தலையைச் சாய்த்துப்
 புந்திமறந்தினிது துயில்புரிவதானுள். (௪)

பின்பாயுள் படுக்கைக்கு வந்து தாசி
பேசாமற்றூங்குவதைக் கண்டு கோபம்
வன்புறக்கொண் டவளைச்சேவகராணுங்கு
மத்திகை துண்டிப்பளவு மாறிமாறித்
துன்புறச் சாடிக்குருதி பொங்கத்தாசி
துவக்கெல்லாஞ் சிவந்து மவடியராளாகி
இன்புறவே நகைத்தனள் மற்றதனை நோக்கி
யிறைவனதி சயித்தென்னே நகைத்தாயென்ன. (௫)

கினந் மலரணை யருகிற்றலை சாய்த்தேது
நினைவின்றித் தூங்கினதற்கிந்தத்தண்டம்
எனதுடலுக் குறுமானுன் மஞ்சத்தின்மே
லினிது துயிலுனதுடலுக்கே தாமோவென்
றுனதியலை நினைத்து நகைத்தேன் யானென்ன
வொன்றுக்கு மஞ்சாமலுரைப்பக் கேட்டு
மனது துணுக்கென்றரசன்றனக்கு ஞானம்
வாய்ந்துடனே மிக்கசம்பத்தெல்லாம் விட்டான். (௬)

தனியாகி நகரைவிட்டுச் செல்லும்போது
தனைத்தொடர்ந்து வந்தவர் கடம்மை நோக்கி
இனியாவையுந் துறந்து போந்தே னென்னை
யெய்தன்மின் போமினென வியம்பி வேந்தன்
நனிசான்ற சத்குரு நன்குபதேசித்த
ராமநாமந்தன்னை நாவிற்கொண்டு
கனிவாக ராமனடிக்கமல நெஞ்சிற்
கலந்துறப் பற்றிக் கொண்டோர் காடுசேர்ந்தார். (௭)

அங்கொரு பாற்பலக் புகாரொன்று ஙாமத்
தவர்நான்கு நாள் காறுமமர்ந் திருக்கச்
சங்கொடு சக்கரங்கொண்டதிருமாலன்னார்
தவஞான வைராகந் தம்மைத் தேர்ந்து
பொங்கொடுற மகிழ்வுகொண்டு சகுணரூபம்
பொலிவாக வெதிர்தோன்றிய பயந்தந்து
தங்கொருவர் முன்மறைந்தான் பின்பு நேருஞ்
சாதுக்கடம் மொடவர் சார்ந்து கூடி. (௮)

பசிதாகங்களைப் பொறுத்துத்திரு மாலுமம்
பற்பலவுங் குணானுபவ முங்கேட் டுற்றார்
நிசிதோறும் பின்பங்கோர் பகீர் வாழ்கின்ற
நிலைகண்டு சார்ந்தனரப் பகீர்தானுள்ளம்
கசிவாகி நெடுநாளாய் திருமால்பாதங்
கருதிய தானு தனிரண்டப் பங்கினை
வசிமேவு மிடத்தருளப் பெற்றுண்டங்கே
வாழ்கின்றேன் மற்றவர்தம் வரவு கண்டான். (௯)

நிலைநோக்கி யெத்தனை நாளாய் விராக
   நேர்ந்தீர் நீர்சொல்லுகென நிமலர் சொன்னார்
அலைமேற்கண்டு யில்வோனை நம்பிப்போந்த
   தஷ்டதின மாயிற்றென் றறையக் கேட்டு
நலைநீ யென்றி வனையகஞ் சேர்த்தோ மானு
   னமதிரண்டப் பங்களிலே நல்க வேண்டும்
இலைபோ வென்றெப்படிச் சொல்வ தென வெண்ணி
   யெய்துநீ நூதனப கீரோ யாதல். (௰)

இங்கிருக்க வொண்ணாது புறம்போ கென்ன
   விறைவர் நன்றென் றினிது புறம் போந்திருந்தார்
சங்கிருக்குந் தடக்கையா னெட்டு நாளாய்த்
   தவஞானம் பூண்டு பசிதாக நீத்துக்
கொங்கிருக்கு மலர்த்தாரா னெனை விடாமற்
   குறித்துக் கொண்டிருக்கின்றா னென்று மார்பில்
நன்கிருக்கு மலராளை நோக்கி நீ போய்
   நல்லமுதிட்டுறு கென்ன நவிலக் கேட்டு. (௰௧)

நவமணிப் பொற்கலத்த முதுகொண்டு சென்று
   நாடுறு பலக் புகாரை நோக்கி நங்கை
துவரிதழ்ச் செங்கனி வாயாலிந்த வன்னந்
   துய்த்திடு கென்றோத வவர் துலங்க நோக்கிப்
பவமகற்று ஜகமாதா வென்று தேர்ந்து
   பாதாம் புயம்பணிந்து பல்காற் போற்றி
அவனளித்த வமுதுண்டு பசிதீர்வாக
   வப்பகீ ரதுகண்டு மனம்பொறானாய். (௰௨)

எட்டுநாட் பகீருக்கின் னமுது தந்தா
   னிணையின் மணிப் பொற்கலத்தி லென்னே யானோ
மட்டி னூட்டவுஞ் செய்தேன் பெறவிரண்டு
   மாவடையுங் கீரையுந் தந்தமைவ தானான்
வட்டநேமிக்கரத்தோன் றனக்கிவ்வாறு
   வஞ்சனை செய்வது தகவோ வழங்கிவ் வப்பம்
தொட்டு நானுண்ணே னென்றுறுகண் கொண்டு
   துயிலுற்றா னாயிடைச்சு தரிசனத்தோன். (௰௩)

கனவிலொரு பகீராகி யெதிரோ நின்று
   காட்டியந்தப் பலக் புகார்தன்னை யின்னோன்
றனது சம்பத் தெல்லா நீத்தென் பாலன்பு
   தங்கிநிட் காமியனாகித் தியானித் துற்றான்
மனனாக நீகருதி யெனைப் பஜித்து
   வருகின்றா யதனாலே யவரவர்க்கு
னுரடையத் தக்கது செய்கின்றே னென்மே
   னனிவெறுப் பேன்கொள் கின்றாயென மறைந்தான். (௰௪)

உடனே பகிரொழுந்து வியந்து போந்தங்
குறுபலக் புகாரடி யிலுவந்து தாழ்ந்து
மடனே விப்பல படியாய்ப் புகழ்ந்தான் கண்ட
மற்றவரவ்வயி னீங்கிச் செல்லும் போதோர்
தடமேவு நகரைக் கண்டதனுட் புக்குச்
சார்ந்தவொரு மடத்ததனே கம்பகீர்கள்
இடமேவக் கண்டவரோ டிருக்கச் செல்ல
விருந்தபகீ ரொல்லோரு மிவரைக் கண்டார். (௰ரு)

கண்டிவன் பகீர்நிலைக்கு மேவுவானேற்
கையிலுறு ஜபமாலை முதல சின்னம்
கொண்டில ஞதலி னமது மடத்துண் மேவக்
கூடாதென்றே தடுக்கக் குறுகாராகி
அண்டியொரு பாலிருக்க வருளின் வாரி
யப்பகீர் களுக்கெல்லாந் தலைவனுகி
மண்டியந்த மடத்துக்குட் டனியனுக
வந்து பகீர்களை நோக்கி வழுத்த லானுன். (௰சு)

பலக் புகார்தனைப்போன் முக்கரணசுத்தி
பண்ணி நல்வை ராக்கிய சிலம்படிந்து
நிலவு நிட்டை ஜீவகாருணிய முள்ள
நின்மலர் மூவுலகத்து மில்லை நீயிர்
குலவு பகீர்க்குள்ள ஜபமாலை யாதி
கூடியுள வுள்ளத்திற் குறிமி னென்று
விலகின னவ்வார்த்தை தனைப் பகீர்க ளெல்லாம்
வினவியதி சயித்துடனே வெளியில் வந்து. (௰எ)

பார்த்தவரை யொன்ருன கடவுளேயிப்
படி வங்கொண்டுற்றதெனப் பக்திமேவிச்
சேர்த்த மடத்தழைத்து வந்து முகமனெல்லாஞ்
செய்துபல படிபுகழ்ந்தார் சிறப்புஞ் செய்தார்
நேர்த்த வன்று முதற்பலக் புகார்தாம் வேண்டி
நினைக்கும்போதெல்லாம் பொன்னிமலை கேள்வன்
கூர்த்த நண்பனைப்போல வந்துகூடிக்
குறித்தமனே ரதங்களெல்லாங் கொடுக்க வாழ்ந்தார். (௰அ)

பலக்புகார் திருவடிகளே சரணம்.

ஆகச்சரித்திரம் எரு க்கு செய்யுள் ருதகூச

முற்றிற்று.

# சேக்பரீத் தாசர் சரித்திரம்.

கொண்கனின் மடந்தை பெற்ற குழவிக்குச் சேக்பரீதென்
றெண்கொள நாமமிட்டு வளர்த்தன ளெழிற்குமார
வண்கிளர் பருவம் வாய்ப்ப வளர்ந்தவரொரு நாட்டாயைக்
கண்கொள நோக்கி யன்னே கடவுண்மெய் வடிவந்தன்னை. (க)

யான்றறி சிக்கும் வண்ணங்காட்டுக வெனலு மன்னை
ஈன்றதன் புதல்வன் றன்னை நோக்கி ளளியம்புகின்றாள்
தேன்றரு துளவமாலைச் செகபதியாஞ் சீமானை
ஊன்றகு விழியாற்காண்டற் கொண்ணுமோ வெளிதிலுன்னி. (உ)

தேவர்கடேவனான திருமகளு தன்றன்னை
மேவரக்காண வெண்ணிவிளைதரு காமமாதி
மாவயிரிகளைப் போக்கி வனத்தருந்தவஞ் செய்துற்றும்
தூவயிராகங் கொண்டு சுரந்தொறும் போய்த்திரிந்தும். (ங)

யோகங்கள் புரிந்து மான்மவிசாரணை தனை யூகித்தும்
மோகங்கொள்வாழ்வு மூனுமுனிவுற்றுத் திரிந்தும் பத்தோ
டேகங்கொடிதியேயாதி விரதங்களி யற்றியுஞ்சீர்
யாகங்கள் பலவுஞ்செய்து மெண்ணறு தருமஞ்செய்தும். (ச)

தன்னுயிர்போல வெல்லாவுயிரையுந்தனி நேசித்துப்
பன்னரு நெடியமாலைப் பஜித்துக் கீர்த்தனங்கள் செய்தும்
உன்னு முக்கரண சுத்தியொடு குருசேவை செய்தும்
இன்னமும் பலமார்க்கத்தாலீசனைக் காணலுற்றார். (ரு)

இவ்வகை களிலுனக்கே தேற்றதோ வதனைப்பற்றிச்
செய்வகை செய்தி யேலத்திருமகள் கேள்வன்றன்னை
மெய்வகை காண்டி யென்றாள் வினவிய சேக்பரீதங்
குய்வகை விராகங்கொண்டேண்டுறந்து காட்டுறுவதாகி. (சு)

ஈசனைக் காண்பேனீயோ ரடைசுட்டெற் கீதியென்ன
நேசநே ரன்னையன்ன நீக்குறு முனக்கேனப்பம்
பேசெனச் சேக்பரீது பிறழ்வுறு மெனது சிந்தை
மாசறு மளவும் வேண்டுமோரடை யென வகுத்தார். (எ)

நன்றெனத் தாயுநல்க நனியன்பு கொண்டு வாங்கித்
துன்று வஸ்திரத்திற் சேரச்சுருட்டினர் வயிற்றிற் சார்ந்து
நின்றுறப் பிணித்துக்கொண்டு நீங்கினர் பெருங் கானத்தில்
சென்றொரு மலையிலேறி யிருந்தனர் தியானஞ் செய்தார். (அ)

என்று தானுன் காண்பேனோ வீசனை யெனவிருக்கத்
துன்றுறு பசிநேரிட்ட போதடைதனைத் தொடாமல்
ஒன்றிய விருக்ஷத்துள்ள தழைகளைப் பறித்துண்டுற்றார்
[illegible]ன்றினபடியிருக்க நணுகின னங்கோர் செட்டி. (கூ)

சருக்கரைப் பொதிகள் குண்டை தமிலுற வேற்றிக் கொண்டவ்
விருக்கநேர் பழுவத்தூடு மேவினன் வருதல் கண்டு
திருக்கறு சேக்பரீ திங்கிவை யென்னை செப்பு கென்ன
நெருக்கி வந்திவை மண்ணென்று நிகழ்த்த வப்படியோ வென்றார் (ம)

ஏனனங் கூறியந்த வெருதுகடு ரந்து சென்று
மாளிகை வயினிறக்கி மற்றையப் பொதிக ளெல்லாம்
தாளற வவிழ்த்து நோக்கச் சருக்கரை யெல்லா மண்ணின்
தூளதா யிருக்கக்கண்டு துணுக்கென மனம் வெருண்டு. (மக)

துலுக்கப்ப கீருக்கங்கே சொன்னது மெய்யே யாகப்
பலித்தது பரிகாசத் தான்முடிந்தது பழுதே யாக
வலித்த நம்முதலுக் கென்று வருந்தின ராலோசித்துக்
கலக்குறு மனத்தான் முன்போற்பொதிகளைக் காளைகண் மேல். (மஉ)

ஏற்றினன் மீண்டுமெந்தப் பகீருறை யிடத்தின் மேவ
நோற்றிருந் தவரீ தென்னை நுவல்கெனக் கண்டு கேட்கச்
சாற்றின னிவைக ளெல்லாஞ் சருக்கரை யென்று செட்டி
தேற்றியப் படியா வென்றார் சேக்பரீ தெனும் பகீரே. (மங)

உடனந்தச் செட்டிமற்றைப் பொதிகளை யுடைத்து நோக்கத்
திடனுறு பொதிகளெல்லாஞ் செறிந்த சர்க்கரையே யாகப்
படர கந்தனில் வியப்புப் பரவுற வொரு பொற்றட்டின்
இடனிறைவாகவே சர்க்கரை தனையேந்திச் சென்று. (மச)

மற்றவர் பதம் வணங்கி மடன்றெரியா மற்சொன்ன
குற்றநீர் பொறுக்க வென்று கொண்டச் சர்க்கரையை வைக்க
நற்றவரிவ னீகின்ற நற்சுவை தன்னைக் காட்டிப்
பற்றறு மனமயங்கப் பணித்தியோ பரனே யென்று. (மரு)

அவ்வ யினதைவிட்டோடி யகன்றனர் பின்பு செட்டி
செவ்வயி னூர்போய்ச் சேர்ந்தான் சேக்பரீ தென்போர் முன்போல்
வெவ்வயினி ருந்தாராண்டு பனிரண்டு மேவுங் காறும்
துவ்வயினி யிலதாக விருந்துந் தோன்றிலனூற் கண்ணன். (மசு)

நாதனைக் காணுராகி மீண்டுதங் நகரமேவி
ஓதிய தாயைக்கண்டு வணங்கின ருளது கூற
மாதவ ளிவ்வாறன்றே மரத்திலே யுருவிற் றென்று
கோதறுஞ் சடையை யீர்த்துக் குலுக்கினள் குமரர் தம்மை· (மஎ)

ஈர்த்தனள் குலுக்க மற்றைச் சடைத்தலை யினைந்து வாடித்
தீர்த்தரு மன்னே சாலச்சிரம் வருந்துகிற தென்னச்
சீர்த்த வுன்சடையை யீர்த்தாற்சிரம்வருந்துகிற தென்றாய்
ஈர்த்த வவ்விலை மரத்துக் கில்லையோ வருத்த மென்றாள். (மஅ)

ஈராறு பருவந் தீர்ந்து மிறைவனைக் காண்கிலாத
காரண மிதுவே யென்னக் கருத்துற்றுச் சேக்பரீது
நேரரை தனிலசைத்து நிறுவிய வடையவிழ்த்துச்
சீரனை கையிலீந்து வணங்கினர் திரும்பிச் சென்றார். (மகூ)

மரத்திலை யுருவித் தின்னும் வகைவிட்டங் குதிர்ந்து சிந்தும்
தரத்திலைச் சருகுதின்று சார்ந்து மீசனைக்காணுராய்த்
திரத்தின் மிக்குள விராகஞ் செறிந்தொரு மரத்தின் கொம்பில்
உரத்தின் மிக்குள்ளதான கொடிகளை யுலவித் தேடி. (உ0)

காலினிற் பிணித்து மாட்டிக் கவிழ்த்தனர் தலையைக்கீழே
நாலுற விடுத்து நீண்டநாள் பல போக்க வற்றித்
தூலமெய்தூங்கக்கண்டு தொடர்ந்தன பறவை யெல்லாம்
மேலுறக் கொத்திக்கொத்தி விழிகளைக் கொத்த நேர. (உக)

பன்னக சயனன்றன்னைப் பார்க்கலாங் கண்களோவி
என்னக முழுதுங்கொத்தி மிசைந்து நும்பசி தீர்கென்ன
அன்ன வெம்பறவைக் கெல்லா மறைந்தன ரறையும் போதும்
துன்னரும் பறவையெல்லாஞ் சூழ்ந்து கொத்தின நோக்கத்தை (உஉ)

ஆயிடைச் சேக்பரீ தென்பாரருளாழி யானே
மீயுயரானை காத்த விமலனே நின்னைக் காணற்
கேயின விழிகளும் போயினவெனி லெங்ஙன் காண்பேன்
தாயினுந் தயையின் மிக்க தண்ணளியோ யேயென்றார். (உங)

என்னலுங்கமலை கேள்வ னெழிற்றிரு மகுட மோங்க
மின்னவிர் குண்டலங்கள் விளங்க வைம்படையு மின்னத்
துன்னருந் தோள்களுஞன் குந்தலங்கப் பொன்னுடையுந் தோன்ற
நன்னருந் துளவமாலை நலந்தர வந்துதோன்றி. (உச

தனது செங்கைகளான் மற்றவர் கழற்றனை யவிழ்த்துப்
புனிதர் தஞ்சரீர மெல்லாம் பொருந்துறத் தடவல் செய்ய
அனகர் திவ்விய சரீர மாயினரை யன்பாத
வனசமாமலர் வணங்க மாலினி தணைத்துக்கொண்டான். (உரு)

எனைத் தரிசிக்கு மாறிங் கிருபத்து நாலாண்டிங்ஙன்
வனத்தருந் துன்பமெல்லாம் வாய்த்தனை யினியுன்னூர் போய்
நினைத்ததெனைப் புகழ்ந்து கொண்டு நெடிதினி திருத்தி யென்று
தனத்த மற்றவர் சிரத்திற் சார்த்தினன் முசர்வாழ்த்த. (உசு)

மறைந்தனன் சேக்பரீது மாலருள் வடிவங் கண்ட
திறந்தம துள்ளஞ்சேர்த்திச் சென்றனர் தமதூரிற் போய்ச்
சிறந்த தன்றாயைக் கண்டு சேவித்துன்ன ருளாற் கொண்டல்
நிறந்திகழ் வோனைக்கண்டே னீங்கினேன்றுயர மென்றார். (உஎ)

தாயுநன்றென்று சாலமகிழ்ந்தனள் சேக்பரீதங்
கேயுமந்நாடொ டங்கியிறைவனை யினிதினேத்தி
வாயுநன்மனமு மொக்க வழுத்தினர் கீர்த்தனங்கள்
ஆயுநல்லறிவி லோரு மறி ஞராயமையச் செய்தார். (உஅ)

## சேக்பரீதுதிருவடிகளேசரணம்.

ஆகச்சரித்திரம் எசு க்கு செய்யுள் ருதுகூ0உ.

முற்றிற்று



# சக்குபாயி சரித்திரம்.

கண்ணவுந்தியணையிற் கரவீர மென்பதாய நகரத்தினிலேயோர்
அண்ணல் வேதியனிருந்தனன வனுக்கன்பு சால்மனை வியும்மகனும்பால்
நண்ண வெவ்வளவு மீவதிரக்க நன்குதீதுநவை நாடகிலாரோர்
பெண்ணணங்கை மகனுக்கணை வித்தார் பேசுசக்குவெனு நாமமுளாரை. (௧)

மாமிமாமன வளைக்கடி வாராய்வைது நாடொறும் வருத்தி மனைக்கண்
யாமமும் பகலுமிடை விடலின்றியே வலிற்கடினவேலை செயச்செய்
தாமுணவும் வயினுக்குதவாமலழிவு சால்பழி களத்தனையுஞ்சொற்
றேமுறும்படி யியற்றினராக விவரெதிர்ந்துரை செயாமலிருந்தே. (௨)

அயலுளோர்க் கறிவுறுத்தலிலாமலனுதினம் பணிய மைத்தது செய்து
மயலுறாது சுகதுக்கமனத்து வைத்திடாது கமைதயையொடடக்கம்
இயைவதாகவிடை விடுதலிலாமலென்றும் விட்டலனை யெண்ணியுளத்திற்
பெயர் விலாதுகொடு வைகுறயாரும் பெரிதறிந்திகழ்வு கண்டு பிணங்கி. (௩)

நீதியாவன வனைத்து மொழிந்தார் நெகிழ்வில் மாமியொடு மாமனுவப்ப
ஏதுமோர்கிலரிருந்தனர் முன்போ லின்னலேமிக வியற்றினராகத்
தாதுலாவுமலர் கமழுமையோதிச் சக்குபாயியவர் தம்மனதிற்றும்
யாதுதீவினை முனம்புரி வுற்றததுதனக்கி விலடைந்தினலுற்றேன். (௪)

இவ்விதத்ததுயரெய்த கிலாதே லில்லின்வாழ்வு மிகவின்பமதாகி
நவ்வியொத்த விழியாள்ரகுமாயி நாதனேயுனை நயக்கிலனென்றே
எவ்விதத்ததுயரும்பட வைத்தா யென்று விட்டலனை யேத்தினராகச்
செவ்வியுற்ற விவர்பாலயல் வீட்டாள் சேர்ந்து கண்டினிது செப்புவதானாள். ( )

இங்கு மாமிமனையிற் பல நாளாகியு முனன்னைமனை யெய்தகிலாது
தங்குகின்றனை யுனக்கனை தந்தை தாமிருக்கவிலையோ வுமதூரே
தெங்குரைத்தி ரெனவின்புசெய் பண்டரிப் புரம்மிரகுமாயி விடோபாப்
பொங்கு மூரொடனை தந்தை யெனச்சொற் புகறலாகிவிழைவின்றி யிருந்தார்.

பண்டரிக்கு வருவோரலை பொங்கிப் பம்புகண்ணநதி யின்கரை வந்து
மண்டியுற்றனரிறங்கி யிருக்கும் வாய்விராவிய யலார்மனையாளோ
டண்டுசக்குவு மடைந்தனர் நீர் முகக்கமற்றவளை நோக்கலு மன்னோர்
கண்டு சர்க்கரைய முதுகனி தேன்பால் கன்னலொத்த ஹரிகீர்த்தனைபாட. ( )

வினவியன் பினுருகித்தனி நின்று மேவுமேதின் மனையாடனை நோக்கி
இனையர் தம்பினுடனெய்துபு பண்டரிக் கண்மேவுரகுமாயி விடோபா
நனைவிரும் புகழுறுழ்குவலென்று நவிறல் செய்துன்மனை நண்ணுதியென்றங்
கனைவரும் பயிலிடந்தனை மேவியன் பினிற்றொழுதுளின் பொடமர்ந்தார். (௮)

அயல்மனைக் கணுறு வாளவரிற்சென்றங் கயர்ந்தவையனைத்து மொழிந்தாள்
பயன்விழைந்து தனியாகியசக்குபாயிதன் கணவன் வினவியுடன்று
கயிறிரம்பி யுயராற்றணை வந்து கண்டு மென்மயிர் கரங்கொடிழுத்து
நயமிலன் கடிதடித்துடன் மேவநங்கையாரொடு தமில்லமடைந்தான். (௯)

தந்தைதாயொடு தெரித்திட வன்னார் தாக்கிவைது நெடிதாகிய தம்பத்
தெந்தவன் கயிறுமெய்தவி சித்தாரேது மிட்டிலருணத்தின நங்கை
பந்த முற்றினிதி னுற்சவமெல்லாம் பார்த்திடற்கிசை விலாமையினந்தோ
நொந்துளத்தயர் தனிதெரியாயோ நுவலுமென்றனை யளித்தருள் செய்வாய் (௰)

என்றுவேண்டுதலை விட்டல னோர்ந்தங் கினைதல்கண்டு ரகுமாயி நியென்னுள்
இன்றுகன்றுத லெனக்கர வீரமென்னு மூரிலெனையே நினைவுற்றுத்
துன்றுகின்றவளை யவள்கணவன்றான் சூழ்ந்துகட்டின னடித்தன னங்கே
சென்றுமீட்டு வரவேண்டு மெனச்சொற் செப்பிவந் தனனிரா நடுவிற்றான் (௰௧)

சக்குபாயி யெனவே வடிவாகித் தங்குமுன்ன ருறலும்மவர்கண்டு
நிற்குநீயெவள் சொலென்று வினவ நிமலன்யா னெடிய பண்டரிசெல்வேன்
மிக்கவன்புள நினைக்கொடு போகவேண்டி யிவ்வயி னடைந்தன னென்றான்
தக்க நீயெனையுடன் கொடுசென்றாற் சார்ந்துடன் கடின தண்டனை செய்வார்.

ஆதலானு னுடனெங்ஙன நேர்வேன் யானெனப் பிணிய விழ்த்த வளைப்போல்
நீதமாக வணிற் பிணையுற்று நின்று நீ செலுதி பண்டரி யென்றான்
போதல் செய்பவ ரொடெண்பது கொண்டுபோனபின்பு பதினைந்து தினத்தும்
சாதலாம் வகை யிலாது தடிந்தார் சருவுநிரொடு தராம விளக்க. (௰௩)

மாமிமாமனை செய்வது கண்டு வந்து மற்றவள் மனாள னினைந்து
தோமிலாத விவளைக்கடி வுற்றாற்றுன்பு கொண்டிவ ளிறந்திடுவாளே
ஆமினானை நிகராயொருமனை வியாயி லெங்ஙனுறு மென்ன விரங்கி
நாமிவாறு செயனன்றல தென்றுநன்கு கட்டுகளை விழ்த்து விடுத்தான். (௰௪)

விட்டு நீயிவர்கள் செய்தல் பொறுத்து விரைவினீர் முழுகி யுண்டி சமைக்க
அட்டில் போதுகென முகமனியம்ப வன்ன தாகென வமைத்தினி திட்டாள்
இட்டமாய வருந்தின பின்னரில்லின் வேலைகளெலா முடிவெய்தக்
கிட்டராவ வளையுட் கொடுசென்று கிளரணைக்கண டிவருட விசைத்தான். (௰௫)

அருகுறும் பொழுதுமன் மதபாண மகத்தினிற் பதியமையன் மிகுத்துப்
புருடனை விவனவளை யணைக்கும் போதுவிட்ட லனுமவனை யணைத்துத்
தருதலான சுகமவன் மனைவி யிலுந்தாழ் விலாதுதவி விடியுமுனேகிப்
பெருகுகண்ண நதிமூழ்கி மனைக்குப் பெறுவதான புனல்கொண்டுடன் வந்து. ()

சமையல் செய்யும்வகை தாழ்வதிலாமற்றந்து மூவருமிசைந்திட நல்கி
அமைவதானபரி சாரகமெல்லா மடைவுடன் புரிதல்செய்தி வணிற்க
உமைதனு யகனுடற்கண்விளங்க லுற்றுலாவிவரு சந்திர பாகைக்
கமைய மூழ்கிவிட்டலன் திருநாமங் கனிவுடன் பகர்தல்செய்து கொடேகி (௰௭)

கோயில்சென்றவண் விளங்குவிடோபாக்கோலம்யாவும்விழிகுளிர்வுறநோக்கித்
தாயிலன்புடைய விட்டலன் மேவுஞ் சந்நிதிக் கெதிரில் வந்துவணங்கிப்
போயிலங் குதிருமேனியைநன்குபுல் விநின்று வளர்சேவடி பற்றி
வாயிலச்சுத முகுந்தவழாத வள்ளல்பச்சை முகில்வண்ண விடோபா. (௰௮)

என்றுதோத்திர மிசைத்து வலஞ்செய் தின்புமிக்கு வெளிவந்து கருடனார்
நின்றுநேரிலகு கம்பம்வணங்கி நெடியகீர்த்தன மனைத்தும் விளுவி
அன்றிராவிலொரு பாற்றயில்செய்வ தானபின்புமறுநாணகர் சூழ்ந்து
நன்றெலாவிப வமுழுவது நோக்கி நாதன்முன்பு நணவந்து வணங்கி. (மக)

உருவருபகுண விபவமவற்றுளுள்ளழுந்து மவராகி விடோபா
மருவு முன்றிருவடிக்கணிணங்க வைத்தியென்னை யெனவேத்தினராகிப்
பெருகுமன்பு செயவாவி விடோபாப் பெய்கழற்கணுற வீழ்ந்தது தேகம்
அருகிருந்த கிவளத்துறு பனவனதனை நோக்கியினை யாரினமொன்று. (உ0)

தேர்தலாய்த் தெரியுமறையவர் சில்லோர் சேரவே கொடு சவத்தை யெடுத்து
நீர்சுலாவி வருசந்திரபாகை நெடிய கூலமிசையுள்ள மயானத்
தார்தலாக மினிரங்கி கொளுத்தியான பின்பனை வரும்புனன் மூழ்கிச்
சார்வதாயமனை சார்ந்தனரானதகுதி தேர்ந்து ரகுமாயி யுளத்தே. (உக)

சக்குபாயி வருமளவு மெனுதன்முனவட்கு நிகராய வொர்பெண்ணு
கிக்குடும்பினி யெனத்தனியாகக் கிளரகத்திலுறிலென் செய்வதென்று
தொக்கு தாசனனில் வந்த விடத்திற்றுன்னி யென்பு முழுதுங்கருணைக்கண்
மிக்குமேவவ வணுக்குதல் செய்ய விரைவினிற் பழையவுரு வொடெழுந்தார்.

இந்த வுற்சவ முடிந்த பினியுனிட நடத்தி யென நோக்கி யிசைத்தாள்
அந்தநன்மொழி யுணர்ந்திவரன் பினடியில் வீழ்ந்து திருநாண் முடிவாக
முந்துமேவுகர வீரபுரத்தின் முன்னுறும் பொழுதுவிட்டல னிர்க்கு
வந்தனன்குட மெய்த்திவர் தம்மில்வருதல் கண்டு மனமகிழ் வுறவங்கே. (உ௩)

விட்ட லன்றிரு விழாமுழுதுஞ் சேவித்திரா வெுனவினுவலு மன்னார்
முட்டிலன்பு கொடுவீழ்ந்து வணங்கி முளரியொத்த திருவடிகள் பிடித்துக்
கிட்டி நின்றெனனையே யுனதருளாற் கேடிலுற்சவ மெலாந்தரி சித்தேன்
மட்டிலுன்ற லுபகார மதற்கு மாறுசெய்வதெது வென்று வழுத்தி. (உச)

இவ்விதத்தில் வருடந்தொறு மிந்தயாத்திரைக் குதவி செய்கெனவேண்ட
அவ்விதத் தருளுநேவெ னனவை யனவர் கையிற் குடமளித்து மறைந்தான்
நவ்வியொத்த விழியார் புனல்கொண்டு நன்மனைக் கணுறலாகி யிருக்கச்
செவ்வி பெற்ற கிவளத்துறு பனவன் சீர்கொள் சக்குமனை வந்து புகுந்தான். ( )

வந்து கண்டிவ ளிறந்தவளன்றோவாய்ந் ததிங்கு மிகவற்புதமாமென்
றந்தமாமனொடு மாமியை யுங்கண்டைய பண்டரி நகர்க்கிவள் வந்து
முந்தவிட் டலனை யன்பொடு கண்டு முடிவிலேய வணிறந்து விழுந்தாள்
நுந்த நன்மருகி யென்று தெரிந்து நொந்து கொண்டு தகனஞ்செய்துவிட்டேன்.

பின்பு நீவிரறியத் தெரிவிக்கப் பேணிவந்த பொழுதிவ்விடை கண்டேன்
துன்பிலீரிதென வதிசய மென்று சோர்வு மேவியவனின்றன னன்னார்
முன்பு நின்ற மருமகடனை நோக்கி முனிவின் வன்க யிறுகொண்டு பிணித்து
வன்பிறங்கு தறியிடை யிடுவித்தேம் வாய்ந்த பண்டரி நீயெங்ஙு னடைந்தாய்

சொல்லுசொல் லெனவுமாமியைநோக்கித்தூணிடைப்பிணிவுசெய்துளவன்றே
அல்லிலொல்லெனவவிழ்த்தெனைவிட்டாளாதரத்தொடெனையொத்தவொருத்தி
செல்லு மல்லல் செறிபண்டரி நீபோய்த்திரு முமவ்வளவு முன்னிலிருப்பேன்
வல்லே புல்லு கெனநானவனே கிவர்த யின்னவள் குடத்துடன் மேவி. (உஅ

கண்ணமாநதி யகன்கரை யென்னைக்கண்டு சேம மதளாவின ளென்கைத்
தண்ணறும் புனன் முகந்து கொடேகத்தன் குடத்தையுத விக்கண் மறைந்தாள்
நண்ணலும் புனன்முகந்துகொடிங்கே நானடைந்தன னெனப்பரிவுற்றுத்
திண்ணமிங்கிவட னன்மையுவந்து தெரிவையாகி விட்டலன் பிணியுற்ருன். ()

ஈதுமுன் றெரிகிலாம விஞளையின்னல் செய்தனமை யோவெனவேங்கி
தாதுலாவு குழன்மருகியி லன்புதந்து பின்புவருடந்தொறுமந்தத்
தீதில்பண்டரி யிலாடியுடன் கார்த்திகையுமேவியவ ணல்வருமன்பின்
ஓதுவிட்டலனை நன்குபணிந்தே யுட்களிப்பி னடியாரொனலாஞர். ௬௰)

சக்குபாயி திருவடிகளே சரணம்

ஆகச் சரித்திரம் எசுக்குச்செய்யுள் ருகூாஉ௰உ.

முற்றிற்று

# குபாகும்பார் சரித்திரம்.

மார்வாட தேசத்திற் சிதடமெனு மூரிலென்றும் வழங்கும்வாய்மை
சார்வாக க்ஷமைசாந்தி தயைவிராகம் பொருந்திச் சலிப்பிலாது
நேர்வான ஹரிபஜனை நடத்திவரு குபாகும்ப ரானநேயர்
சோர்வேது மிலாதபுரி யெனுமனைவி யொடுவொழ்வு துலங்குநாளில் (௧)

தினந்தின மொவ்வொரு பாண்டஞ்செய்து செய்தையாறு தினஞ்செல்வதாக
வனைந்தனர் முப்பது பாண்டஞ் சூளையிட்டு விற்றவற்றால் வைணவர்க்கு
மனந்தளரா தளித்துத்தாமும் புசித்துச்சுக துக்கமனத் தெண்ணாராய்
அனந்தசய னனைத்தியானித்து வருவோர்தம்மை யவ்வூர்வேந்தன். (௨)

வரியிவர்க்கு மீரைந்து பாண்டமுத வுறச்செய்தான் மதிமுற்றாகத்
தருமவற்றைச் சூளையினின்றும் பிரித்துத் தந்தனரதனைவிடோபாத்
தெரிவுகொடு மற்றிவர்தஞ் செலவிற்குப் போதாமை தேர்ந்தீரைந்து
புரிவுசெய்து சூளையிடைப் புகுத்துவித்தான் பாண்டமவை போல்வதாக. (௩)

இவர்சூளை தனைப்பிரித் தெண்ணும்போது முப்பதுமங் கிருந்ததாக
நவபாண் டங்களைக்கண் டற்புதமாகியிது நளினைநா யகன்செய்
தவறுமென் றறிந்தெனக்காகக் கண்ணன்றான் துன்பம்பட லாயிற்றென்
றேவமாய்க் கண்ணீர் பெருகவிருந்தனரவ் விட்டலனை யெண்ணிமாதோ. (௫)

அக்காலை தனில்விடோபாச் சாதுஜன ரிருநூற்றனநல்ல
தக்காரோ டெய்தினன் றானுங் கலந்திவ்வூர் தனிலே தகுந்தசீதா
இக்காலந் தனிலழிப்பார் யாருளரொன் றேவினவ வீழமிக்கோர்
தொக்காரராய்ச் சிறிதுமிரங் குதலின்றிக் குபாகும்பா ரிடைச்செல்கென்றார். ()

கூடவந்தோ ரொடுவிடோபா குபாகும்பா ரில்வாயிற் சென்று
நீடநின்றுசீதாரா மெனக்கூவ வுள்ளிருந்தோர் நெடிதுகேட்டம்
மாடுவந்து மிகக்களித்து மற்றவர்க்கெல்லாம்வணங்கி வம்மின்வம்மின்
பீட மைந்த நீவிர்வரயான் செய்ததவமே தென்றிறைஞ்சிப் பேசி (௬)

தேவரீ ரடியேனாற் செயத்தக்க வூழியத்தைச் செப்புமென்றை
ஆவலோ டுரைசெய்ய வடைந்தசா துக்களவர் தம்மைநோக்கி
மேவுமெங்கள் பசிதீர்க்க வேண்டுமெனக் குபாகும்பார் விரும்பிநன்றென்
றேவெளிவந் தித்தனைபே ருக்குமுண வியற்றுதற்கெவ் வாறென்றெண்ணி. (௭)

ஒருவணி கனிடத்திற்சென்றென் மனையிற் சாதுக்களூற் றிருந்தார்
அருமை பெறுமவர் களுக்கு வேண்டிய சாமக்கிரியை யனைத்து நல்கில்
தருவனதன் கிரயமெனலும் வணிகனீ ரோழை தரவல்லீரோ
கருதிய நீர்தரலாகும் பொருளுக் காக்கிண றொன்று கல்லல் வேண்டும். (௮)

செய்வ னென்றோர் திடஞ்செப்பிற்ற ருவனென வவர்தாமுந் திடமே செய்ய
மெய்வணிகன் வேண்டுவ வெலாங்கொடுக்கக் கொண்டுபோய்விருந்தோர்க்கீயக்
கைவசங்கொண்டவர் களவர்தமை நோக்கி நமக்கு மிகுகைத்துண்டாகி
மைவணன்சேவையுங்கிடைக்குமெனவாழ்த்திவைணவரும்வழிக்கொண்டாரால்

மறுதினந் தாமுந்துணைவியும் பானைமண்வெட்டி கூடை கொண்டு
செறிவணி கனிடஞ் சென்றங்கவன் செப்பும் வயிற்கிணறு செயத்தொடங்கி
உறுமண்ணெல்லாந் தோண்டி வெளிப்படுத்த மணலெல்லாநீருற்றுந் தோன்றப்
பெறுபோது குடவறை யாயடியற்றுப் பாரிடிந்து பெயர்ந்து வீழ. (௰)

உள்ளழுந்தி யிவரிருக்கக் கரைவெளியிலுறு மனைவியோ லமிட்டுப்
பொள்ளென மிக்கலறும் போதெல்லோரு மங்குவந்து புகுந்து கேணிப்
பள்ள முழுதுந் தூர்ந்து கிடப்பது கண்டறப் பதறிக் கிணற்றுட் பட்ட
தள்ளில் குபாகும்பாரை யெடுக்க வரிதா மென்று தளர்ந் தினைந்து. (௰௧)

அவர்தம் விதிப்படியா யமைந்த தென்று மனைவிதனை யன்பி னோக்கிக்
கவலைபடே லென்றுரைத்து மனைபுகுதப் போக்கிய பின்கலந்து ளோரில்
புவனமளந் தோன்றாசர்க் கிப்படியும வரலாமோ பொருந்தா தென்பார்
நவபாண்டம் புரிவோன்றான் கிணறுவெட்டற் குறலாமோ நவில்மி னென்பார்.

யானுஞ் செய்கருமமனு பவிக்கவேண்டு மென்பா ரவரிற் சில்லோர்
தூராத கடறூர்த்தோ னடியாருக்கு பகாரஞ் சூழ்ந்து ளோர்க்குப்
பேராத விக்கதிதான் வரலாமோ வெனப்பெரிது பேசுகிற்பார்
தீராதுயர் வரினுங் காத்தாள வல்லனன்றோ திருமா லென்பார். (௰௩)

இன்னபடி பலரும் பேசிக்கொண்டு தத்தமக்கா மிருக்கை சென்றார்
பின்னரொரு வருடஞ் செல்லத் தூர்ந்த கிணற்றுவழிப் பெயர்வார் வந்து
முன்ன ரிறங்கினர் சமைத்துண்டனராகி யிராமுந்த முதிர் நிலத்துட்
டுன்னுமிரு தங்கந் தாளம் வீணைதொனிக்க வரிகீர்த்தனங்கள். (௰௪)

வினவிக் கொண்டிரா முழுதும் வழிச்செல் வோரதி சயித்து மெய்ம் மறந்து
பனிதனக்குப் பகைவ னுதயஞ் செய்ய வெல்லோர்க்கு நடந்தபண்பை
இனிதுரைக்க வினவியவ ரெல்லோரும் வந்துணர்ந் தேந்தலுக்குக் கூற
அனகவரசனும் வந்துவினவி மிகவதி சயித்தானந்த மேவி. (௰௫)

தொனி கிளரு மவ்விடத்தைத் தோண்டு கெனவே வலராற்றோண்டி நோக்க
நனிமிளிருஞ் சங்கு சக்கரஞ் சார்ங்க நாந்த கந்திண் கதை நன்காகத்
துனிவளருந் தோளுன்குஞ் சோதிமகுடத்தொடு குண்டலமே யூரம்
பனிமலரும் பரிபுர பாதந்துலங்கப் பலபல வாபரணம் பொற்ப. (௰௬)

திருமுகந் தோற்றத் துலங்கு விட்டல மூர்த்திக் கெதிரே திகழ்ந்து நின்று
பொருவறு கீர்த்தனம் பாடு கின்றகுபா கும்பாரைப் பொருந்தநோக்கி
வெருவுறு நீள்குழியினின்று மூர்த்தியையுந் தாசரையுமேலெடுத்துப்
பெருகுறு மன்போடிறைஞ்சியிவர் மனிதரல்லரெனப் பெரிதுவாழ்த்தி (௰௭)

அங்கொரு சீர்மடமொன்று புரிவித்து விட்டலனை யவணிறுத்திப்
பொங்கு முபசாரமெல்லாம் புரிந்துபல வாத்தியமும் பொலிந்தியம்பத்
தங்கு குபாகும்பாருக்கரசரெடைவ்வூராருந்தாசராகி
எங்கும் விளங்குறக் கரையினிதி மடத்துக் கேற்பதாயிசை வித்தாரால் (௰௮)

வயிணவர்க்கு மதிதிகட்கும் போஜனமிட்டுப் பகலில் வளர்புராணம்
பயிலுறச் செய்திராத்திரியிலரி கீர்த்தனம்பாடும் பண்புண்டாக்கி
எயிலுயர் சீர்பண்டரி யூர்க்காடிக் கார்த்திகை யேகாதசி தோறெய்தி
மயிலெருத்தை நிகர்மேனிமா யோனைத்தரி சிப்பார் வருடந்தோறும் (௰௯)

குபா கும்பார் திருவடிகளே சரணம்.

ஆகச்சரித்திரம் ௭௪க் செய்யுள் ௫௲௪௱௰௧

முற்றிற்று.

# கமலாகரர் சரித்திரம்

தமர்நீடிய பண்டரிமேவிய தக்கோர்
கமலாகரர் தம்மனை கற்பினின்மிக்க
தொமிலார் சுமதிக்கொரு சூனுபிறந்தே
அமைவார்பது மாகரனை வயதாவார் (க)

அரிதாசரில் மிக்குளவன் பினராகி
வருதாயொடு தந்தையுமாதவனுமம்
பெரிதேயுனை செய்பவரிவ் விரும்பரில்
திரிபேது மிலார் கமலாகரர் செவ்வே (உ)

தினமுந்துயி லோவியபின்ன திசென்று
புனலின்முழுகிச் செயலாவ புரிந்து
மனைதுன்னிய வூர்வயின் மேவிவ திந்த
நினைவின்படி பிச்சை யெடுத்து நிரம்ப (ங)

தம்வீடுபுகுந்து சமைத்தவைதம்மைப்
பெம்மானடி யார்மிசையும் படிபெய்து
விம்மாதரவார் மனைசேயொடு மேவி
கைம்மானிடர் தீர்த்தருள் கண்ணனை யெண்ணி. (ச)

தாமும்மினி துண் டுறுவாரொரு நாடந்
தோமில்சுதனோடு பலிக்கொரு சூழற்
போமவ்வளவில் லரிகீர்த்தனை பொம்மச்
சேமஞ்செயுமவ் வொலி கேட்டது தேடி. (ரு)

வேறு

நிவர்த்தியு ஞானதேவு நீடுசோபான தேவும்
பவத்தகல்ஞான முக்தாபாயியு நாமதேவும்
துவக்கில் கோராகும் பாரும்சூழ்ச்சி சேர்சாங்கதேவுந்
தவத்துயர் கபீரராதி சாதுக்க ளாருங்கூடி. (சு)

திருமகள் காந்தனுமஞ் செப்பியோர் பாங்கர்மேவ
வருகம லாகரர்தா மகனொடு மவணடைந்து
பெருகுமா னந்தங்கொண்டு பேசுமச் சமுகமுன்னர்
அருகுறவீழ்ந்து தண்டனிட்ட னரன்புகூர. (எ)

துதித்தவர் தம்மைநோக்கித் துழாயுணி மார்பனுமம்
மதித்துரை யடிகேளுன் முன்மருவிய பிறவி தோறும்
விதித்த புண்ணியங்க ளெல்லாம் விளைந்தன நும்மனோரால்
சதுர்த்தரே நானிவ்வூரிற் சாலவுந் தீனனாகி. (அ)

மனைதொறும் பிச்சை யேற்றுவரும் பொழுதினிது நீவிர்
நனைமலர்த் துளவோ னுமநவில்வது வினவிவந்தேன்
இனைவது தவிர நீவிர் யாவரு மெனதில் வந்தித்
தனையனோ டெனையும் பாரிதனை யுமீடேற்று'மென்றார். (கூ)

அவ்வுரை யுரைத்தோர் தம்மை யனைவரு நோக்கிஐய
செவ்விது நமது சாதுத்திற மிகவெளியர் நீர்யாம்
அவ்விய மவித்ததூய ராயினும் பலரும் வீட்டுக்
கெவ்வியல் பாகநேர்வேம்யாது நீர்செய்வ தெல்லாம். (௰)

உமது பசாரத்தாலிங் குற்றயாந்திருத் தியானோம்
எமையழைத்துப் போயாங்கே யினைவுறல் வேண்டா மென்ன
அமைவு ளீரொனக்குத் தந்தையானவன் பாண்டுரங்கன்
கமைர குமாயி யன்னையாயுறக் கலக்க மூண்டோ. (௰க)

ஒருகுறை வேணுமில்லை யுற்றநீரும் மில்லாக
வருதல் செய்தியான் செய்பூசை மகிழ்ந்து கொண்டருளல் வேண்டும்
திருமகள் கணவனன் பீரொனத் தொழத்திரு மாலன்பு
பெருகிய விவரொல்லோரும் பெயர்த்துவே றுரைத்திலா ராய். (௰உ)

சுமதி நாயகரோ நும்மில் சோர்வுறு தடைதிர்யாங்கள்
தமதகம் புனலிற்றோய்ந்து சார்து மென்றுரைக்கக் கேட்டோர்
அமரு மில்லடைந்து தேவியார் தமைநோக்கி மின்னே
நமதகந் திருமாலன்பர் நண்ணுவரின்றைக் கன்னார். (௰ங)

அருந்தநல் லமுதுசெய்தற் கமைகெனச் சுமதிகேட்டுத்
திருந்தநன்றென்று கூறச் செவ்வியோர்க் கூவச்சென்றார்
பொருந்தயல் வீட்டில்வேண்டும் பொருளெலாங் கடன்கொண் டெய்தி
விருந்தினர்க் கடிசில் செய்துவேண்டு பாயசஞ் செய்போதில். (௰ச)

இந்தனம் போதாதாகி வேறொரு துணையுமின்றி
நந்தனையழைத்து நீபோய் நம்புழைக் கடையில் வைகும்
முந்தெரு முட்டைதம்மிற் சிலமுகந் தணைதியென்ன
வந்தனன்கு வையைக்கண்டு மற்றதிற்சில கொள்போது. (௰ரு)

அதிலொரு கடுவாய் நாகமடர்ந் தெழுந் தந்தச் சேயை
முதிர் சினத்தோடு கவ்வமுந் துறவலறக் கேட்டுக்
கதுமெனச் சுமதிவந்து கான்முளை தன்னை நோக்கி
எதுநிமித்தத் தாலிங்கே யலறினை யெனவிளுவ. (௰சு)

அம்மனே யிந்தத் தீயவர வெனைக் கவ்விற் றென்று
கொம்மெனக் கூறவன்னை கொடியவல் லரவை நோக்கிக்
கம்முறு பயங்கொண்டேங்கிக் கலங்கி மெய்மறந்து பின்னும்
தம்மக வதனைநோக்கத் தன்மிசைக் கிடந்த தன்றே. (௰எ)

ஈதென்ன விபரீதம் மென்றினைந் திடர்க்கடலி லாழ்ந்து
மாதவர் மதிகலங்கி மறுகினர் மணந்தெளிந்திப்
போது நாஞ்சுதனை நோக்கிப் புலம்புறின் மனைக்கண் மேவுஞ்
சாதுசற்சனர் களுண்ணு தகல்வரோ யெனச் சலித்து. (௰அ)

உரக முன்றீண்ட மாய்ந்த வுலோகி தன்றன்னைப் பெற்ற
வரமதி தயன்றன் பாவைமனத்துயர்க் கதிகமேனும்
தரமிகு சாதுபூசை தவிர்தல் கூடாத தென்று
சொலிகச் சேயைத்தூக்கிச் செறிவனைத் தோண்மேற் சார்த்தி. (௰கூ)

தெளிவுறல் கொடுதாயைச் சீக்கிர முணநன்னீர்
அளியென வுரைசெய்யவக் குரலினை கேட்டுக்
களிமகிழ் வொடுசென்று கான்முளை யினைத்தூக்கிக்
குளிர்வுறமுக முத்தங்கொடுநிற நனிசேர்த்தி. (௬௰)

தழுவின ரரிதாசர் சந்நிதி கொடுவந்து
வழுவறு மொருநாமர் மலரடி மிசைவீழ்த்தித்
தொழுதவரடிபற்றித் துணைவிழி வருநீரால்
கழுவியெமுழை மேவிக்காத்தருள் புரிந்தீரோ (௬௧)

உம்மது பெருமைக் கோரொப்பிலை யெனவோத
அம்மனை யுறுதாசரனை வருநீரீன்ற
இம்மகனுக் கென்னேயெய்திய தெனவன்னார்
தம்முன ருறலான தன்மையை யுரைசெய்தார் (௬௨)

அற்புதமிது வென்றுஹரியடி யவரெல்லாஞ்
சிற்பரன ருணும தேவர்தமுக நோக்கி
மற்பொருதிரு மார்பனே யொருவடிவாகி
பொற்புறலானு னென்றவர் நனிபுகழ் வுற்றார் (௬௩)

புகழ்வொடு மகிழ்வுற்றப் புதல்வனொடவ ரெல்லாம்
மிகுசுவை யமுதுண்டார் வெள்ளிலை பாகோடு
தருநறு மலர்சாந்து தரவடை வொடுபெற்று
மகனொடு தாய்தந்தை வாழ்வுறு மொழிதந்தார் (௬௪)

மூவரும் வருநாமர் மொழியுப தேசம்பெற்
றேவருமகிழ் கொள்ளவில்லறம் வழுவாமல்
ஆவயினரி நாமமனுதின நனியோதி
மேவுற வவரெல்லாம் விடைகொடு புகலானார் (௬௫)

## கமலாகரர் திருவடிகளே சரணம்

ஆகச்சரித்திரம் ௭௮க்கு செய்யுள் ருதுாஎ௰சு

முற்றிற்று



# துக்காராம் சுவாமிகள் சரித்திரம்.

தேகுவென்னுந் திருப்புரி யிற்குடி
ஆகுவோர்நன்ம ராடரி லானமெய்
ஓகுசேரநற் செய்கைகள் வாய்த்தவர்
போகுசாதுக்கள் சேவை புரிபவர் (௧)

இடைவிடாதிர வும்பக லுந்திரு
வுடையமார்ப னுளத்துற வெண்ணுறு
நடையர்பேர்விசு வம்பரர் நாடொறும்
மிடைசுடர்ப்பநிம் வேலைவந் தெய்துமே. (௨)

தாளம்வீணைமத் தாளமுங் கொண்டரி
ஆளமூசுறு மன்ப ரனேகர்முன்
நீளநீளரி கீர்த்தி நிகழ்த்தொரு
நாளனேந்தனே நன்மகற் கோதுவாள். (௩)

ஈண்டுறுங்குலத் தெய்திய முன்னவர்
பாண்டுரங்கன் பழம்பதி செல்லுவார்
ஆண்டுதோறு மவ்வாறுநீ செல்வதை
வேண்டுமென்ன விரும்பி யெழுந்தனர். (௪)

தாய்பதங்க டொழுது தனித்தரி
மேயபண்டரி யாத்திரை மேவுறத்
தூயதான பஜனை சொலிக்கொடங்
காயவன்பினர் தம்மொ டடைந்தனர் (௫)

துண்டமாமதி தோயம் படிந்துடன்
புண்டலீகனைக் கண்டடி பூசித்துப்
பண்டரிப்பிர தக்ஷணம் பண்ணிநீள்
யிண்டுகோயி லிடைவந்து மேயினர். (௬)

வினைதமைந்தனை யஞ்சனை மேனியை
தனர்வணங்கியங் குள்ளந லோர்சொலும்
புனிதகீர்த்தனங் கேட்டுத்தம் புந்தியில்
இனிதிறைஞ்சு மெய்ந்தியுள் ளெய்தினர். (௭)

இன்பவாரியை யென்று முணர்ந்தமெய்
அன்பர்தீவ வமுதை விமலனை
முன்புகண்டு முதிர்பர மானந்தம்
மன்பெருங்கடன் மூழ்கி வணங்கினர். (௮)

எண்ணிரண்டுப சாரமியல்புறப்
பண்ணியாலிங்க னஞ்செய்து பற்பல
வண்ணமாக வழுத்தி வணங்கினர்
நண்ணிறைந்து நாள்வரை நல்கவோ. (௯)

நாமகீர்த்தனங் கேட்டங்கு நண்ணினோர்
காமன்றாதை கழல்கள் வணங்கினர்
பூமகட்கொழு நன்விடை பெற்றுப்போய்
தாமகத்துறு தாயை வணங்கினார். (௰)

பண்டரிப்பெரும் பான்மை யெலாஞ்சொலிக்
கண்டமூர்த்தி கழற்க ணனைநளம்
மண்டுகின்றதெப் போதினி வாய்ப்பதென்
றண்டுகண்கணீர் வாரநின் றாரரோ. (௰௧)

தாயுந்தன்மகன் றன்குலத் தோர்செய்கை
மேயினையென வேண்டி மகிழ்ந்தனள்
ஆயபின்பொர் திணம்விசு வம்பரர்
போயினார்முன்பு போற்பண்ட ரீபுரம். (௰௨)

சென்றுசந்திர பாகையின் தீர்த்தத்தில்
நன்றுமூழ்கி நலங்கிள ரத்தனி
நின்றுவிட்டல மூர்த்தியை நேமமாய்
ஒன்றச்சேவித்தொ ருங்கு துதித்தனர். (௰௩)

தசமியோர்பொழு தாயுறச் சாப்பிட்டங்
கிசையெகாதசி யில்லுண வின்றியே
நிசியொர்நான்கு நிரம்பிய ஜாமமுங்
கசியுமன்பிற்கண் ணன்புகழ் கேட்டனர். (௰௪)

சேர்துவாதசிப் பாரணை செய்தங்கு
சார்தலாயினர் முத்தினந் தாழ்த்துப்பின்
கார்நிறந்திகழ் கண்ணனடியிணை
ஆர்வமோடுகண் டன்பின் வணங்கினார். (௰௫)

விடைபெறும்பொழு தில்விழி நீருகக்
கடையனேனுனைக் காண்பதெந்நாளென
அடையுநீர்வில கற்கரு மீனென
நடைகலங்கின னென்று நவின்றனர். (௰௬)

என்றபோ தெதிரிற் பிரசன்னமாய்க்
குன்றமேந்திய கோவலன் றோன்றிமுன்
நன்றுநின்னன்பு நன்றென மெச்சினான்
ஒன்றுவேனெங்கு மாதலி னேதுக்கேள் (௰௭)

நீயுன்னூரிருந் தென்னைநி னைப்பினும்
எய்வனின்வயி னன்பிக வேனெனச்
சாய்விலன்பர் சகுண வடிவையான்
நேயமோடென்றுங் காண நினைக்கின்றேன். (௰௮)

அன்றிவேறொன்று மாதரிக் கின்றிலேன்
என்றுமற்றிதற் கென்செய்வென் யானென்ன
நின்றகண்ணன்புன் மூர னிலைவுற
ஒன்றமார்பி லணைத்தவ ருச்சிமேல். (௰௯)

தனதுசெங்கம லக்கரஞ் சார்த்தித்தன்
புனிதநாமஞ் செவியிற் புகன்றனன்
இனிது நீ யெங்கிருந் தென்னை யெண்ணினும்
நினது கண்ணெதிர் நேர்வெனஞ் சேலென. (உ0)

ஊர்க்குப் போக விடைகொடுத் துய்த்தனன்
பேர்க் கொணுவன்பு கொண்டு பெயர்ந்தவர்
சீர்க்குங் கார்த்திகை தொட்டெட்டுத் திங்களும்
பார்க்க வந்தனர் பண்டரி மாயனை. (உக)

எட்டிரண் டென்றியம்பு மெகாதசி
விட்டிலார் பண்டரீ புரமேவினார்
எட்டிலொன்பது திங்களின் முந்திய
அட்டமித்திதியில் விசுவம்பரர். (உஉ)

இரவிலே துயிலுங் கனவெய்தினன்
அரவிலாடி யருளிய பச்சைமால்
உரவினீ யெட்டுத் திங்களென்னூர் வந்து
பரவி யென்னைக் கடனுறப் பண்ணினாய். (உ௩)

அதலானீயமரு முன்னூர் வயிற்
போதலாயினை னென்று புகன்றொரு
சூதநீள் பொழிற்றுன்னிய மர்ந்துறக்
காதல் கூரன்பர் கண்விழித் தாரரோ. (உ௪)

விழித்தவ் வூரில்விளங்கும் வயிணவர்
செழிப்புறத் தெரியச் சொல்லிச் சென்று நாம்
பழுத்தமாம் பொழில்வைகும் பாமனை
வழுத்தில் வூரில்வரச்செய்து மென்னவே. (உ௫)

சொல்லியாரொடுஞ் சூதப்பைம்பூம் பொழிற்
புல்லி நாடினர் கண்டிலர் பூவுறை
வல்லிநாதனை வாய்ந்தவ பீர்ப்பொடி
மெல்லி தழ்த்துளவம் விரை வீசவே. (உ௬)

தெரிந்து சென்றங்கு நோக்கத் திருத்துழாய்
விரிந்தவாசப் பொடியொடு மேவுறப்
பரிந்து கண்டுகளிப் பழுதின்றெனப்
புரிந்தெல்லோரும் வியந்தனர் போற்றினார். (உ௭)

ஆயபோதறைவார் விசுவம்பரர்
மாயன்றன்னை யிம்மண்ண கழ்ந்தாயினும்
ஏயக்காணுது மென்று மளவிலா
காயமற்றி வரன்பைக் கருதியே. (உ௮)

வேறு.

விசுவம்பரரோ தனிவிட்டலனும்
கசிவன்பது கண்டிவண் வந்தது மெய்
நிசியொன்று நிறத்தனி மாடுளனீர்
அசியின்றி யகழ்ந்து கொளத்தருமால். (உ௯)

இனிநம் வழிதன்னிடை யெய்துவனோர்
புனிதன்றிகழ் வைணவர் பூடணன்மே
தினியங்கவ ணிற்பெரு கித்திகழும்
கனிகன் கரிபத்தியெனு நவில. (௯௰)

வினவுற்றவர் யாரும் வியந்துகரம்
புனைவுற்றனர் கொட்டினர் பூமகள்கோன்
அனகத்திரு நாமமறிந்தவயிற்
றுணலுற்றனர் கைகொடு தோண்டினரோ. (௯.௧)

தோண்டத் துளவும் பொடியுந் துனலாய்
நீண்டத்தலே நேரிலு ருக்குமணி
வேண்டத்தகுவோன வளோடு விராய்க்
காண்டற் கினிதாயுறல் கண்டனரோ. (௯௨)

கண்டார் ஜயஜயவென நன்குகளி
கொண்டார் விசுவம்பரர் கொண்டனர்கை
வண்டார் துளவோனே மறைட்டியுடன்
கண்டார் வழுடன் கொடமா நகர்வாய். (௯௩)

சிந்தாமணி போற்றரிசிக்க வெலாம்
தந்தார்தர வேவெரு தண்ணெனு நீர்
இந்தாயணி யென்று நதிக்கரையில்
வந்தாவ யின்மன்ன நிறீஇ யினரோ. (௯௪)

வேதோத்தமர் தம்மின் விதிப்படியே
மாதூத்தமி யோடமர் மாதவனைச்
சீதோத்தம மஞ்சன நீர்சிரமீ
தேதோத்திரமோ டினிதாட்டினரோ. (௯௫)

எல்லாவணி யுந்திகழ் விச்செழில் சேர்
நல்லாடையு நன்கொளிரப் புனைவித்
தில்லாச மிணங்குப சாரமெலாம்
வல்லார் சொலும் வண்ண மியற்றினரே. (௯௬)

ஒருநாளிரவிற் பெரிதும் பர்தொழும்
திருநாயகன் முன்பெதிர் நின்று திகழ்க்
கருணையக வந்தணர் நாயகசேர்
கருநாயிறுபோலொளிர் கண்ணவென்று (௯௭)

துதிசெய்து திரும்பளவும் பொருவா
மதியில்லெளியேன் முனம் வந்தனை நின்
பொதியின்னருள்யான் புகழ்தற்கெளிதோ
விதியின்றிறமென்று வியந்தனரே. (௯௮)

அவசங்கொடு நிற்கவருட் குரியார்
கவசம்பொரு கண்ணன் மகிழ்ந்துமுகம்
நவசந்திரனென்ன விளங்கநணித்
திவசந்தனில் வேண்டுவ செப்புகென. (௯௯)

நாதாவுனதன் பிடை நானழுவா
மேதாவியெனும் படி வேண்டுவனென்
சாதாரணமாய் வருசந்ததியும்
ஆதாரநினம்புய மெல்லடியே. (௪௰)

பற்றிச் செலுமன்புபழுத்திளகப்
பெற்றுப் பெருகும் படிபே ரருள்செய்
கெற்றைக் குமெனு முனியம் பினர்மால்
நற்றப்படியே வரநல் கினனே. (௪௧)

அருள்கொண் டவனை யனேயிவ் விடைநீ
இருள்விண் டிடவென்று மிருக் கவெனத்
தெருள்கொண் டுபேணிந் தனர்சென் றனரில்
மருள்விண் டெநாள் சிலமாய்ந் தனவே. (௪௨)

வேறு

ஆயநா ளளவில் வைகுண் டத்தினின் றணிவிமானந்
தூயது கொண்டுவிண்டு தூதர்க ளெதிரிற் றோன்றி
நாயகனன்பின்மிக்கீர் நணுகும்வைகுண்டமென்ன
வேயது கேட்டவன்பர் பண்டரிக் கிறையைநோக்கி. (௪௩)

எனக்கிரு குழவி யோடில் லவளுமுண் டிவர்கண் மேனின்
மனக்கனி விருத்தல்வேண்டும் வைகுண்ட நான்செல்கின்றேன்
புனத்துழாய் முகிலேயென்று போற்றின ரேறிப்போனார்
கனக்களே பரத்தைவிட்டுக் கடன்முறை கழித்தபின்பு. (௪௪)

ஹரியென்று முகுந்தனென்று மமைசிறு ரோடுபெண்பு
தெரியமா பாயியென்னுந் தேவியார் திருமாளுமம்
பெரிதினி தியம்பல்செய்து குடும்பமும் பேணியெங்கும்
விரிபிரா ணிகளிலொத்த விருப்பின ராகிவாழ்நாள். (௪௫)

அன்னவ ரன்புக்காக வாண்டருள் பாண்டு ரங்கன்
றன்னருள் பெருகிச்சார்ந்து கனவினுந் தமக்குவேண்ட
லென்னது புகலுகென்ன வெம்பிரா னேழையேனுன்
பொன்னடி யன்றி வேண்டேன் பிறிதெனப் பூமிகேள்வன். (௪௬)

மகிழ்ந்தவர் தமைத்தழீஇப் போய்மறைந்த பின்கனவுதேர்ந்து
மிகுந்தவா னந்தங்கொண்டு மேவரி பஜனைசெய்து
திகழ்ந்தன ரிருக்கத்தந்த சேய்களா லோசித்துத்தாய்
அகந்தனி லடைந்துதாயே யகத்துள துமக்கிருக்க. (௪௭)

நாங்கள்சென் றரசன்றன்னை நயந்துசே வகங்கள்செய்ய
ஓங்கிய விச்சைகொண்டோ முதவுக விடையென்றோதிப்
பூங்கழல் வணங்கவன்னை பொருந்திலர் பற்பலாறு
நீங்கறத் தடுத்துங்கேளாத் திறத்தினுத் தரவுசெய்தார். (௪௮)

இருவருஞ் சென்றுவேந்த னிடத்தனி கங்கட்கேற்ற
பொருநராய்ப் பொலிவு பெற்றுப் போதுக தாயையென்றார்
அருளனே பாண்டுரங்கன் றனையெவ்வா றகல்வதென்று
கருதினர் கண்ணீர் மல்கக்கண்ணன் றன்கோயின்மேவி (௪௯)

பணிந்தனர் பற்பலாறு புகழ்ந்துபாண் டுரங்கா நின்னைத்
தணந்து செல்வகை யாயிற் றென்றனை யராலினி யான்போதல்
அணிந்தடி பணிவதென்றோ வருளுக விடையென்றேத்தித்
துணிந்துள மருகிமாரைக் கூய்க்கொடு சுதர்பாற்சென்றார். (௫௰)

சென்றுளந் தனைவிட்டோபாச் சேவடி சேர்த்திருக்கப்
பொன்றினசில நாள்பின் போர்தின மவர்கன விற்போந்து
மன்றலந் துளவமானீர் மகர்வயினன்பு கூர்ந்தங்
கென்றனைப் பிரிந்திரன்றோ யானுங் கடேகுவுக்கு. (௫௧)

வந்ததுங்களுக் காயன்றோ வாதலானீரு மக்கள்
பந்தம் விட்டிப் போதே யென்பால் வருகென்று போனான்
சந்த தமறந்திலாததையலா ரெழுந்திருந்து
நந்தரை யழைத்துன்றந்தை நயந்தவா நளினை நாதன். (௫௨)

நம்மதூர் நணுகினாளு நங்குலந்தனை யீடேற்றிச்
செம்மை செய்வதற்கமைந்தானின்றென்றன் கனவிற்சேர்ந்து
பொம்மல்சேர் தேருக்கென்னைப் போதுக வென்று போனான்
அம்மழை வண்ணன்றன் பாலடைவது வேண்டுமென்றார். (௫௩)

என்றலுஞ் சிரித்து மைந்தர்கனவு மெய்யாமோ வென்று
துன்றலைத் தடுத்து நான்கு தினந்தொலைவான பின்பு
நின்றதந்தாயை நோக்கி நேற்றளவினும் விட்டோபா
ஒன்றுமக்கென்னை சொன்னானென விகழ்ந்துற நகைத்தார். (௫௪)

நகைத்தவர் தம்மை நோக்கி நாதன் சொன்னதற்கு நீவிர்
மிகைத்திக ழன்மினென்று வெறுத்தெமாபாயி சொல்லப்
பகைத்தவர் கேளாராகப் பாண்டுரங்கனுக்குக் கோபம்
தகைப்பரிதாகி வந்து சார்ந்தனன்றாய் கனவில். (௫௫)

என்னிடம் வரவுமக்கியானிசைத்து நும்மகர் பால்வார்த்தை
துன்னிட வராதிருந்தீரல்ல வோநுஞ்சுதர்க்கு
மன்னிடு மரண நாளையிரண்டு ஜாமத் திலென்னப்
பன்னிடல் கேட்டுச்சாலப் பதறின ரழுதுசொல்வார். (௫௬)

ஐயனே யெனதுமக்க ளவிந்திடி லெனக்கியாவர்
செய்கடன் செய்வாரென்ன ஸ்ரீதரன் யானேசெய்வேன்
மொய்கட னுமக்கென்றோதி மறையுமு னெழுந்துமுந்தித்
தையலார் மகரைநோக்கி யான்முனஞ் சொலத்தடுத்தீர். (௫௭)

ஆதலாற்பாண்டுரங்க னகத்திடைக் கோபங்கொண்டு
போதலா யின்றிரண்டு ஜாமத்திற் புரள்வீரென்று
நோதலாம் வகையிராவிற் கனவிடை நுவன்றானென்னச்
சாதலா கின்றமைந்தர் தாய்க்கு மூப்பானதாலே. (௫௮)

பித்தமிக் காகிவாய்க்கு வந்தது பிதற்றுகின்ற
இத்தகையென்று தாயைநோக்கின ரின்று நாங்கள்
செத்தவிவது மெய்யே நுஞ்செங்கை யாலிடுக சோறென்
றத்தகை யவருரைக்க வழுதுதாயன்ன மிட்டார். (௫௯)

வெள்ளடை துவர்க்கா யீயும்வேளை யிலரச னேவப்
பொள்ளெனத் தூதர்வந்து பொருந்தலர் பொருவிற் சேனை
வெள்ளம் வந்தமர் நேரிட்ட வாதலானீர் விரைந்து
தள்ளருஞ் சமர்க்குச் செல்லச் சாற்றின னரசனென்றான். (௬௰)

என்றவர் சொல்லக்கேட்ட விவரிருவருஞ் சமர்க்கு
நன்றெனச் செலவமைந்து நால்வகைச் சேனையோடும்
சென்றளவறு போர்செய்து சிதைந்தடி பட்டு வீழ்ந்தார்
அன்றனை சொற்கேளா மலமலனை யிகழ்ந்த தாலே. (௬௧)

இறத்தல் வந்துற்றதென்ன வெண்ணின ரிபங்காந் தோனே
திறத்தயா நிதியே யிப்போதெம்மை நீகாத்தல் செய்கென்
றுறத்த பித்திரங்கி வேண்டவுட னெதிர்தோன்றிக் கொண்டல்
நிறத்தினன் றழுவிச் சென்மினீ ளொளிவிசும்பென் றுய்த்தான். (௬௨)

அம்மகரிறந்த செய்திய மாபாயி முதலோர் கேட்டு
விம்மலுற்றழுந்தத் துன்பவேலையின் முழுகுந் தெனினும்
செம்மறன் மனைவியாற்றாள் சஹ கமனஞ் செய்தாள்மா
லும்மவ ளுக்குங் காட்சியுத விவைகுண்டத் துய்த்தான். (௬௩)

றெரியென்போன் மனைவி கர்ப்பமாயிருந்தன ளென்றோர்த்
தெரியமாபாயி தேவுக்கழைத்தனர் கொண்டு சென்று
சுரிமுகச் சங்கமேந்தி கோயிலுட் சென்று தோன்றும்
கரிய மாறன்னை நோக்கிக் காற்றுணை யிறுகப்பற்றி. (௬௪)

குடும்ப நாசஞ் செய்கின்ற குடிலனே கொஞ்ச மேனும்
தொடும் பரிவின்றி நீயென் சுதர்பட விளைவித்தாயே
இடும்பை நீருனக்குத் தாசரென்பவர் குலத்தையெல்லாம்
கெடும்பரி சியற்றுகின்ற கேசவா யானென்செய்கேன். (௬௫)

மூப்புறு பருவத்தென்னை யாரினி முயன்று நின்று
காப்பவ ரென்று துன்பக் கடலிடை யாழ்ந்தில் வந்து
தாய்ப்பவனத்திற் சேரமருகியை விடுத்துத் தாழ்ந்தா
மேய்ப்பவன்றன்னை நெஞ்சில் விடுகில ராயிருந்தார். (௬௬)

அன்னவர் துயரை நோக்கியருணிறை பாண்டுரங்கன்
தன்னது சகுணரூபந்தனைக் கொடுமுன்பு சார்ந்தேன்
இன்னலி லழுந்துகின்றீ ரெங்தெந்தக் காலத்தேது
துன்னுமோவது வேதுன்னுந் துயருறிற் பயனென் றுன்னும். (௬௭)

இப்பொழுதுமக்குப் பிள்ளையுடனெது வேண்டினும்
சொற்படி தருவேன் வேண்டல்சொல்லு கென்றுரைப்பக் கேட்டோர்
ஒப்பறு முன்னையன்றி வேறொன்று முகவேன் யானென்
றப்பொழு துரைத்த மாற்றமயர்ப் புற்றுயானீ யென்றார். (௬௮)

என்னுமற்றவரை நோக்கி யினியுமக்கியான் செய்தோன்றல்
பொன்னுமக்குதவி செய்யும் புதல்வன்றன் மனைவியாகத்
துன்னுநும் பணியிலேதுஞ் சோர்வுறா தியல்வோமென்றான்
மின்னுமிழ் மணியும் பொன்னும் விளங்கெழில் மார்பினானே. (௬௯)

வினவெமாபாயி நன்றென் றிறைஞ்சிடவி மலன்முனத்
தினமுதலவர் தம்பேரனாகியே சேவை செய்தான்
வனமலர்த் திருவுமன்னோர் மருகியாய்ப் பணிசெய்துற்றாள்
அனகன் மற்றவரோடோர் பாத்திரத்துண்டு வருவதானான். (எ0)

சிலதினங் கழிந்தபின்பு செப்பெமா பாயிக்காயுள்
விலகுறு காலமாக விமலன்றன் குறங்கிற் சார்த்தி
இலகுறு மாவிதன்னை வைகுண்டத் தேறச்செய்து
பலவகைக்கருமம் யாவும் பண்ணியுத் தரித்தான் மாதோ. (எக)

மருகியார் மாமியார் போம்வகை தெரிந்தங்கு வந்து
பெருகியது யரத்தாழ்ந்து பிள்ளையுந் தானுமாக
உருகியென் மாமியாருக் குரிமைசெய்து தவகில்லேன்
அருகிலேனந்தோ வென்ன வழுதன ளயர்ந்தாள் மன்றே. (எஉ)

அயர்வது தெரிந்து சுற்றத்தாரொலா நீயுஞ் சேயும்
இயலுடனிருந்துதானே கருமஞ் செய்தீ ரொன்றோத
பெயரரி மனைவிகேட்டு வியந்தனள் பிள்ளையான
நயமிகு விடோபா தேர்ந்தானாரணன் செய்கை யென்னா. (எ௩)

தேர்ந்தவன் கோயில் சென்று தீர்த்தனை நோக்கி நின்னைச்
சார்ந்துறச் செய்கிலா தென்றந்தையர் சமைக் கொன்றாயே
நேர்ந்துள பிரகலாதனங்கத னென நிகழ்த்தப்
போந்தவர்தந்தை மாளைப் பொன்றிடச் செய்தாய் போலும். (எ௪)

தருமமோ நீசெய்கின்ற தகவுகளாத லாலுன்
அருகிலு மருவல்கூடா தெனத்தன்கையா யுதத்தால்
செருகித் தம்மார் பைப்போழ்ந்து தீர்தற்கு முயலக்கண்டு
மருவலர் துளவோ னோடிவந்தவன் கையைப்பற்றி. (எ௫)

கொண்டு வீணாயென் மேனீகோபங் கொண்டாவி நீக்க
மண்டு கின்றா யென்றோதித் தழுவிக் கண்ணீரை மாற்றி
அண்டுவதண்டும் போக்கலரி தெனப்புகன்று தேற்ற
விண்டவனாகிக் கோபம்விமலனைப் பணிந்து நோக்கி. (எ௬)

நாதநின் செய்கை தேராநயமிலேன் செய்த தீமைக்
கோதறப் பொறுத்தாள் கென்றுபோற்றலுங் கொண்டல் வண்ணன்
மேதகு கருணை கூர்ந்து நவவித பக்தி மேவ
ஓதலு முபதேசம் பெற்றுற்றனன் றாயுந்தானும். (எஎ

பாண்டுரங்கனைப் பூசித்துப் படர்தருங் காலத்தன்னாற்
கீண்டினன் பதாஜி யென்றோர் புத்திர னிவனும் பக்தி
நீண்டுறப் பூசித்துற்றா னிமலனை யிவனுக்கோர்சேய்
காண்டருங்கான் ஹயாசங் கரனெனத் தோன்றினானே. (எ௮)

தோன்றினன் று மவ்வாறுகவே சுருதிநாதற்
கேன்றன னடிமையாகிப் பூசித்தா னிவனுமோர் சேய்
ஈன்றனன் போளோபா வென்பவ னெழிற் பாண்டுரங்கன்
ஆன்றபூசனை செய்துற்றா னாண்டிருபத்து நான்கும் (எ௯)

தன்னுயிர்போற்ற யாவிற் றரணியி னுயிர்க ளெல்லாம்
மன்னுறச் சாதுபூசை மலிதரப் புரிந்து மெய்யன்
என்னுமதிழுக்காதே சாத்துவிகனாய் வருநாளோர் நாள்
துன்னுருத்திரன்மால் வேதாத் துயிலிடைக் கனவிற்றோன்றி. (௮௰)

உனக்கெதிலிச்சை யென்ன வுரைத்தலு மெதிர் வணங்கி
எனக்கு நன்மைந்தன் வேண்டுமெனச் சம்புதந்தே னென்றான்
கனக்கரு நிறத்தோன்றானுங் காசினிதனை யீடேற்றும்
மனக்கனி வானைத்தந்தே னெனமலரயனுந் தந்தான். (௮௧)

துயிலுணர்ந் தருகிற்றாய்க்குந் துணைகன காயியான
மயிலினை யெழுப்பிநாதன் வகுத்ததைச் சொலிமகிழ்ந்து
செயிரற வாழுநாள்கள் சிலசென்றபின்புதேவி
வயினிடைச் சிவன்வரத்தாற் சாம்பஜி யென்போன்வந்தான் (௮௨)

பச்சைமால் போபோபாவுக்கருளிய படியேநல்ச
இச்சைகொண் டடியரோ டிருந்துழி யாவன்பாரிற்
கோச்சைநீர்க் தறிவுமேவக் கொளுத்திநல் லொழுக்கத்தாக்கும்
விச்சைதேர்ந்தவ னென்றெண்ணி நாமதேவனை விளித்து. (௮௩)

நீயுலகத்தின்முன்னை நிமலனாய்ப் பிறந்தபோதங்
கேயுமென் பேரினாறு கோடியென் றியல்கிரந்தம்
வாயுமா செய்வேனென்று வகுத்தனை விரதமற்ற
சாயுறி … கோடி யையம்பத்தோ ரிலக்கமில்லை. (௮௪)

அல்லவை … யாக வமைக்கவுஞ் சிவகோடி
நல்லொழுக்கத்துமேவ நடத்தவும் போபோபாவுக்
கொல்லையின் மகனாய்மேவு கெனவுரைத் தருள நாமர்
சொல்லிய படியேசெய்வே னெனவடி தொழுதுபோந்தார். (௮௫)

மனைகன காயியென்பாள் வயிறுற்றுப் பிறக்கத்தோன்றும்
துணையறைப் பாண்டுரங்கன் சந்நிதிகொண்டுசென்று
வினைதேறு திருவடிக்கீழ் விழுத்தித்தா யோடுதந்தை
புனைமலர்த் துளவோன்றன்னைப் போற்றினர் வணங்கிநிற்க. (௮௬)

அடியருக் கிரங்குமண்ண லருளுருக் குமணிதன்னை
நெடிதுற நோக்கியிச்சேயினை நினது கையாற்
… செய் தெரித்தப் பெற்ற தோகைகை யிதியென்ன
வடிவினை யில்லாள்சொன்ன வகைதந்தா சீர்வதித்தான். (௮௭)

மற்றவர் கொண்டு நாதன் மலரடி வணங்கிச்சென்று
குறுமயி ரொட்டிவிட்டப் பெயர்வகை குறிக்குங்காலை
பொற்றவிப் பாவைபோக்கு புகழ்த்துகா ராமனென்று
நற்றுற நாமமிட்டுச் சடங்குகளை நடத்திச் சென்றார். (௮௮)

பின்னருஞ் சிலநாட் சென்ற பின்கன காயிதேவர்
முன்னருள் வரத்தாற் பெற்றாள் மூதுணர் கான்ஹயாவை
நன்னர் மூவரையும் பெற்றோர் நாடொறுநனிவளர்த்து
மங்களி யருளால் வாழ்வின் மகிழ்ந்தனர் பலநாள் செய்து (௮௯)

மகர்வளர்த்தனர் குமாரவயதுற விவாகஞ்செய்து
சுகமுறுகாளிற் றந்தைதனக் கதிமூப்புத் தோன்றத்
தகவுற மூத்தபிள்ளை தன்னைக் குடிக்குநிட்ட வாழ்க்கை
நிகழ்வுற நடத்துகென்ன நேர்ந்திலன் வணங்கிச்சொல்வான் (௧௦)

ஐயனேயுலக வாழ்க்கை தன்னிலாதர மில்லேன்யான்
செய்யமா ஞாலத்துள்ள தீர்த்தயாத்திரை செய்யற்கே
மையலுற்றேனதனு நின்னுரைவழுவிச் செல்லேன்
மெய்யருளதுவோவென்று விளம்பத்தா தையும்விறைவி (௧௧)

சிவனருள் வரத்திற்றோன்றுந் திறத்தினைத் தெய்வநீதிக்
கிவனுரி யவனென்றெண்ணித் துகாராமனைக்கூய்
அவர்வழி யொப்புவிக்க வவருநன் றென்றுதாங்கும்
உவகைகொண் டேற்றாகி வடவவ ருரிமைக்கந்நாள் (௧௨)

காசமோ கம்பிடித்துக் கவலுறக் கண்டுதந்தை
நேசமோ டாலோசித்து நிகழ்புறவினிலிருக்கும்
மாசிலப் பாஜியீன்ற ருக்மாயியை மணத்தல் செய்யத்
தேசுறு துகாரா மென்போர் சேர்ந்துவாழ்ந் திருந்த நாளில். (௧௩)

வேறு.

அன்னையும் பிதாவும் பந்துவுங்களிக்க வகந்தியா தொருகுறையுமின்றி
மன்றுமில் வாழ்க்கை நடத்திடுநாளு மாலரி பஜனையை விடாமல்
முன்செய்தனர் புரிவாராய் வருங்காலந் தந்தைதாய் முகுந்தன தாகம்
துன்னின ராகத் துயருழந் திருந்தார் தொலைந்தன சிலபகலுமுலைய (௧௪)

சாம்பாஜி மனைவிதானும் விண்ணடைந்தா ளர்ந்ததற்கு தாசனந்தாங்கி
மேம்படும் ஹரிநா மங்களைப்புகழ்ந்து வேண்டினார் தீர்த்தயாத் திரைக்குப்
போம்படிமுயன்று முத்திவாய்க்கின்ற புரங்களை யொடுபனி யெனமுடன்
றேம்புறுஜோதி லிங்கமும் புஷ்கராதி தீர்த்தங்களுமுற்றும். (௧௫)

காமமாதிகளைக் கடந்தொருகாட்டிற் கலந்துசா துக்களைக்கண்டு
நேமமாய்வரவா லான்மவிசார நிலைதெரிந் துணர்வுற்றுநிற்க
வாமமாமனையில் வாழ்துகாராமர் மாதவா பண்டரிநாதா
சேமமாய்த் தாய்தந்தைய ருறுமளவுஞ் சிந்திப்பதொன்றுமின் றிருந்தேன். (௧௬)

மற்றவரிட்டி வைத்துளபொருளுஞ் செலவினின் மாண்டமற் றினியான்
உற்றுளகுடும்ப ரக்ஷகமெவ்வா றுறுற்றுவே னெவ்வித முயற்சி
பற்றினுமன்னம் வஸ்திரஞ்செவ்வே பலித்திட லரிதெனப் பரிந்து
சொற்றனர்துணிந்தோ ராவணம்வைத்தங் கதிலுநட்டம் வரத்தொலைத்து (௧௭)

கண்ணனைநினைத்துக் கடன்கொடுபொதி யேற்றுறுதொழில்புரிந்து மற்றதிலும்
நண்ணுற நட்டமேவற்றிலும் பலியா நல்குரவுற்றுநாரணனை
எண்ணியான் செய்வதே தெனத்துக்கித்திருந் துழிகடன் கொடுத்தவர்தாம்
அண்ணினர் தடுத்தங்கிருக்க யாதொன்று மாற்றிலராய்த் துயரடைந்தார். (௧௮)

மித்திரரிரங்கிக் கடனெலாம்வகித்து வேண்டிய முதற்பொருள் கொடுத்துப்
பத்தியின்மிகுந்து ஸ்ரீதரனுமம் பகலுமல்லுஞ் சொலப்பயின்றார்
வத்திரமன்னங் கிடைத்தவரில்லை யாதலான் மற்றதை விடுதி
அத்திமுன்வந்தா னெனத்துதிப்பாயே லனரிடை மிகவுஞ் சுழிவாய். (௧௯)

மானிடவேடங்கொண்ட வூர்வந்து வாங்கினர் வயிற்சென்று விலைநீர்
ஏனினந்தாரா திருக்கின்றீர் விரைவினீகென வவரொலா நீயார்
தானினமிளகாய்க் காரனோ வெனலுந்தருதுகாராம் செட்டி கடையாள்
யானிவைகொண்ட நும்வயிற்றணடற் கெய்தினெ னென்றன னெம்மான். ( )

தூக்கியு மதித்துங் கொடுத்தனனோ நீ சொல்கெனத் தூக்கியே தரலால்
ஆக்கியதியற்பேரது துகாராமென்னலு மவன்றூக்கியே யளித்த
வாக்கினைப் புகல்கவென்னலுந் தூக்கி வழங்கியவகை வழாதுரைக்க
நோக்கினர் சரியென்றுறு விலையாருந்தந்தனர் நுவல்பொதி கொண்டோன். ( )

பாலடைந்துள்ள பணந்தரு கென்னவவன் யஜமானன் பாற்றருவேன்
ஏலநின் பாற்றரேனெனப் பணந்தந்தாலன்றியேகிலேன் போறைற
சாலவு முனிவாரெனத் தடுத்திருக்கச் சண்டியாய்த் தருகிலேனென்றான்
மாலவன்றன்னை விலைதராயாகின் மாய்வனின்னகத் தெனவலிய. (௱௰௨)

அவனிதேதஞர் வந்தடித்ததென்றுனது பொதியைக்கொண்டகல்கெனவம்மான்
புவனியிற்சாக்கைக்கொண்டுபின்றிருப்பல் பொருந்துறுதெனவவன்பொருளைய்
எவண நீ பணங்கொள்வாயெனக்கடிக்க வெம்பிரானங் கொருதாம்பைக்
கவர்தல் செய்தகத்துத்தரத்திடைப் பூட்டிக்கழுத்திடைச்சுருக்கிடக்கனன்றான்

அவ்வயினலம் பல்யாவருந் தெரிந்தங்கடுத்தளாய்ப் பணந்தாரயாகில்
இவ்வயினிறப் பானிவனிதாலெய்து மிரும்பழி யென்று கொண்டோனைக்
கவ்வயினுரப் பிப்பணந்தருவித்துக் கழுத்திடு சுருக்கையு நெகிழ்த்தார்
செவ்வயி னெண்ணிப்பணங்கொடுதுகாராம்செட்டி பாற்சென்றனன்றிருமால்.

அங்குறு பொழுதவ்வூர் விசாரிப்புக்காரனைப் பொருளெலாமளிக்க
இங்கு நீ பணந்தந்தாயிதே தென்றாரிந்தவூருள்ளவர் யாரும்
நுங்குறும்பொருள் கொண்டதன்விலை தராமனுகர்வது முறையலவென்று
தங்கு நும்பொருளைத்தருகெனச் சந்தார் கொடு வந்தேனென்று மால்சாற்ற. ( )

ஒப்பினர் கொண்டோர் பணத்தைமற்றவன் கையுதவி நெய்வாங்கிவாவென்றார்
தப்பிலன் சென்றோர் செம்பது நிறைவுதரக்கொடு வந்துடன் கொடுக்க
மெய்ப்புறு துகாராமவிவினைய்கொண்டு மேவினனெனமிக மகிழ்ந்தித்
துப்பினு சோறுண்டேகு நீ யென்னத்துளவ மாறுய்ப்பதற் கிசைந்தான். ( )

சதாசிவனப் போததி தியாயங்குச் சார்ந்தெனக் கிவ்வளவன்னம்
உதாரி நீதருகவெனலு மவ்விருவருடன முதுண்டனர் துகாராம்
அதான பின் சென்றாரிருவருந் செல்லவந்தவூரிற் சிலர்வந்து
நிதான மில்லாதோர் பொதி மிளகாயை நீ யொருதுட்டன் பாலீந்து. (௱௰௭)

பின்னுனக்காளாம் விடோஜி யென்பானைப் பெறுவிலை வாங்கி யாவென்று
துன்னுற விடுத்தாய் துடடனீ யாதாற்றொடர்ந்தவன் கழுத்தினிற் சுருக்கிட்
டென்னதாவியை நீப்பேன்றரா யென்னிலென்று தூக்கிடு பொழுதியாங்கள்
மன்னியே தடுத்துப் பணந்தருவிக்க வாய்த்ததுன்றனெ வகுத்தார். (௱௰௮)

அந்த வூரார் சொல்வதும் பணமெல்லா மண்மியதும் முனாத்தாய்ந்திங்
கிந்தமா செய்கை யியன்றதும் விடோபா வெழில் விளையாட்டெனத் தெரிந்து
நந்தலில் கண்ணனென் பொருட்டிங்ஙனடத்த நேரிட்டதே யென்று
நொந்தனர் புகழ்ந்தாரது தெரிந்தாரு நுவறுகாராமனைத் துதித்தார். (௱௰௯)

ஆங்கு நின்றவர் தம்மூர் புகவெண்ணியதர் வருபோதொரு மோசத்
தீங்கு செய்வஞ்சன் பித்தளைக் காப்பிற் செம்பொன் மேற்பூசியே திகழ்வித்
தோங்கியது காராஞ்செட்டிபாற் காட்டியுனக்கிது தருகின்றேன் விலைக்கு
வாங்குதியாநீ யென்னலும் பார்த்து மற்றிதற் குறுவிலை யில்லை. (௱௨௰)

என்னிடத் தென்ன வுன்னிடத் துளதை யீதிமேற்றக் கதையுன்பால்
மன்னியான் வாங்கிக்கொள்ளுவே னென்னமற்றிதற் கொப்பின ருள்ள [ர்
பொன்னினைமுழுதுங்கொடுத்தந்தக்காப்பைக்கொண்டுதம்மில்லிடைப் புகுந்தா
துன்னிய கடன்றந்த வன்றனக் கதனைக்காட்டிநீ தொகுவிலை செய்து. (௱௨௧)

கடன்பொருள் கொண்டு மிகுந்ததை யெனக்குத் தருகெனக்கை தரக்கண்டு
திடந்தெரிவானுய்ச் சிரித்து மற்றெவர்க்குந் தெரிவுறச் செயவவர் துணைவி
உடன்று தன்றலைமே லெற்றினளாகி யுன்னைப்பண்டரி புரத்துள்ளோன்
மடன்பெறச் செய்தானன்றி மற்றில்லை மற்றவன் றன்னை நேசித்து. (௱௨௨)

திரிகிலா யென்றேன் கேட்கிலை யிந்தச்செயல் வரச்செய்தனை யிதனில்
மரிவது நன்றிங் கிருந்தென்னை பயனு மடிந்தது குடும்ப மென்செய்வேன்
தெரிகிலை சிறிது மென்றுரைப் புதலுஞ் செறிகடன் காரனுஞ் சென்றுன்
எரிசினச்சி ஜாயிகுடும்பர க்ஷணைக்காயெய்தின ளொருவணி கன்பால் (௱௨௩)

வாக்குநாணயமாய்ச் சிலபொருடருக வெறனள் மற்றவ னிவளுக்
காக்கமுள்ளோர்கள் சகோதர ரென்னவறிந் துனக்கெவளவு வேண்டும்
நோக்கி நீசொல்க வென்றன னிரண்டுநூறு பொன்றரு கெனக் கொண்டு.
சீக்கிரத்தில்லின் மேவிநாயகனை நோக்கினள் செப்புகின்றுளால். (௱௨௪)

நீயினியேனு மோசம்போகாமனிலைத் துவாணிபஞ் செய்தி யென்று
மேயின பொருளைத் தந்தன ளுப்புவிற் பவரொடு விராய்த் துகாராம்
ஏயினபொதியிற் பிடித்தெரு தேற்றியெய்தினர் பாலே காட்டெனு மூர்
போயினர் விற்றப் பணத்துக்கு வெல்லங்கொண்டு விற்றுப்பொருளெல்லாம்.()

கொண்டனர்திரும் பிவணிகரோ டெய்தக்குறுகினன் வழியிலோர் குடும்பி
மண்டு சங்கிலியின் மரத்திழை கலப்பைமாட்டிய கழுத்துடை யவனுய்
அண்டிய வணிகர் முன்னெதிர்ந் தியானுேரந்தண னரசிறைக்கி லாமல்
விண்டெனுரிரக்க வேண்டினன் வந்தே னென்றனன்வணிகர்கள்வெறுத்தார்.

வெறுத்தபின்று காராம்பாலடைந்தையவேண்டுபொன்னிரண்டுநூற்றைம்பான்
மறுத்திலை தரிலென் குடும்பமும் வாழுமாட்டிந்தத் தண்டமுந்தீரும்
பொறுத்தருள் செய்க வென்றிரந்தனனப் போதவர்க்கருள் மிகப்பொங்கித்
தெறுத்த தண்டந்தீர்வகை யிருநூற்றைம்பது பொனுந் தந்தனர் செவ்வே. ( )

கண்டசெட்டிகளெல்லா மிவர்தம்மைக் கடுத்தின்னபடி செயத்தகுமோ
கொண்டவுன்மனைவிக்கென்சொல்வையென்றுகூறினர்பிரிந்து முன்சென்றுர்
மண்டிவரெடு சேரத்தகா தென்று மற்றிவர ரசிறை செலுத்தித்
தண்டமுந் தீர்தியென்றவன் குடும்பந் தாமுணச் செலவுக்குந் தந்தார். (௱௨௮)

அம்மறையோன் கொண்டடை வொடுதுய்த்தங் கருடுகா ராமனைநோக்கி
உம்மை நேரான வுபரிதனக் கன்பருலகத்தி லில்லை யாதலினும்
தம்மையெஞ்ஞான்றும் ஜகபதிகாக்கத் தகுவனென்றுசி சாற்றினனவ்
வெம்மை தீர்ப்பதற் கென்பொரு ளுதவியதே யென்றுள மகிழ்ந்தனர் விரும்பி.()

இல்லிடை மனைவிக்கென் சொல்வதென் றங்கெண்ணினாிருத்தலும் விடோபா
நல்விய லன்பன் முதலையுங்கிடைத்த லாபத்தையுஞ் செலவழித்தான்
புல்லியவணிகர் போய்மனைவிக்குப் புகலின் மற்றவள் வெறுத்திவனை
அல்லல்செய் கிற்பாளே யெனத்துகாரா மாகிமுன் சென்றனனம்மா. (௲௯௰)

சென்றுமுன்கடன்றந் தவனிடை வட்டிசேர்த் திருநூறு பொன்செலுத்தித்
துன்றுபொன் னைந்து ஜிஜாயிபாற் றருகவெனத் தரவவன் சொலுநீயே
நன்றுபோய்த்தருக வென்றன னதற்கு நான்வெகு நாட்சென்று வந்தேன்
என்றுகோபிப்பா ளாதலா னீயே யீதியென்றீந்து போயினனே. (௲௯௧)

அவ்வணிகன் கொண்டவரிலாள் பாற்சென்றைந்து பொன்னுந்தந்தங்கனைத்தும்
செவ்வயி னுரைத்தா னவளவரெங்கே செப்புக வெனவெங்கே யேனும்
திவ்விய ஹரிநாமஞ் சொலித்திரிவான் சினந்திடே லென்றவன் சென்றான்
ஒவ்விய மறுநாள்வீடு வந்துற்றா ருதவரி பஜனைசெய் துற்றார். (௲௯௨)

உற்றபோ துடன்வந் துற்றனர் வணிகரோதினர் ஜிஜாயிபாலனைத்தும்
மற்றவள் கேட்டுவியந்து பொன்செலுத்தின வன்றிருமாலெனமதித்துப்
பெற்றதன் கணவனொடு பிணங்காமலிருந்தன ளாள் சிலபெயரச்
செற்றதவ்வூரிற் பஞ்சமிக்கதனுற்றீனியில்லா தெருநிறந்த. (௲௯௩)

அன்னவஸ்திர நோராதனரிடை யேயழுந்திபுங் கடன்கிடையாதும்
துன்னுவெம்பசிக் குக்கனைகளட்டுத் துய்த்தும் வெம்பசி தொலையாமல்
இன்னலின் மூத்தமனை விநோயாலு மிறந்தனள் யாவருமெய்தி
மன்னியது காராமென்பவர் தம்மைநோக்கினர் சிற்சிலவதுப்பார். (௲௯௪)

தாங்கரு மின்னலரி பஜனத்தாற் சாருமென் றுரைத்தனமதனை
நீங்கலைவிடா யேற்றுன் பமேன்மேலு நேரிடுமினி யெனுநீக்கில்
ஓங்கியசுகத்திலுறுதி யென்றுரைத்தா ரோது பாண்டுரங்கனைப் பழியார்
தீங்கிலரோசா கார்களோ நீவிர்செப்புதல் செவ்விதன் றென்றார். (௲௯௫)

கண்ணனுமங்கள் கனிந்தனர் புகன்றுகாலம் போக்குற்றனர் சிலநாள்
நண்ணியபின்பு மூத்தகுமார னுமஞ்சந்தோபா வென்பானும்
விண்ணுலகடைந் தானவ னிடத்தன்பு மிக்கனராதலான் மிகவும்
எண்ணருந் துன்பத் தழுந்தினர் கொடிதேயிப் பிரபஞ்ச வாழ்க்கையென்று.

இசிலிருந்தி யாரீடேறினர் சீச்சீ யிதைவிட்டுத் தொலைப்பதே யினிதென்
றதில்வெறுப்புள ராயெனக்கொரு பதின்மூன்றாண்டு நேர்காலத் திற்பாரம்
பொதிதலாய்ப்பதினேழாண்டிற்றாய்தந்தைபொன்றினர் பதினெட்டிற்றமைய
முதிர்வெறுப் புற்றுவனத்திடைச் சென்றார்முந் திருபஃதெனு மாண்டில். [ன்

மனைவியுஞ் சேயுமிறந்த னரின்னமனை யறஞ்செய்வதால் வருதல்
இனைவதேயன்றி வேறிலையினியா னெப்பொழுதினுந் திருமகள் கோன்
நினைவிலே காலங்கழித்திடல் வேண்டு மென்றெணி நெடியபோ பநாதென்
றனைவரும் புகலும் வரைமிசை யேறியமர்ந்தனர் விழிகண் மூடினராய். (௲௯௮)

வேறு.

ஸ்ரீதரசந் நிதியுனைத் தியானித் தெவ்வாறு
சேவித்தல் வழுத்தலெத்திறத்தி லெதிர் நோக்கல்
மாதவனே யெனப்பஜித்துச் சலமுணலுந் தவிர்ந்து
வதிந்தேழுநாள் வரையும் வரையிடத்தே யிருக்கும்
போதமல னரவாகித் துகாராமர்ச் சூழ்ந்து
பொதி கோரங்கொடு சீறிப்பொருந்தி யதுதெரிந்தும்
நீதறு கண்டிற வாமற்சிறிது மச்சமின்றித்
திருமா ஞமங்களையே செப்பின ராயிருக்க. (௱௩௯)

அசரீரி பூமகள்கோ னரவாகி யுன்பா
லடைந்தன னென் றதுகேட்டுத் துகாராமரரியே
நிசமாகி லரவுருவை விடுத்துப் பாண்டுரங்க
நிமலவடி வாய்வந்தா னேசமுற்றுப் பார்ப்பேன்
இசைவாயென் றரிநாமங் களையோதியிருக்க
விவரது நிச்சயபாவந்தனைத் தேர்ந்து கண்ணன்
நசைமேவிப் பொன்னுடையு மைம்படையும் விளங்க
நான்கு புயங்களு முடியு நன்கொளிர் குண்டலமும். (௱௪௰)

பொலியவெதிர் தோன்றியென்னைக் காணவுள்ளத்தன்பு
பொருந்துதுகா ராமா காவெனன் றினிதுபுகல
மலியவொளிர் பரஞ்சோதி மயமாகிநின்ற
வடிவுகண்டானந்த மிகப்புளக முடல்பொங்கத்
துலியவடி விடையொன்றி யிருந்தனரிங் கங்கே
துணைவனெனுங் கான்ஹையா தமையனைக்காணமல்
மெலியவுட லிவர்மனையை யொழிந்தனராய் வெளியே
மேவிய நாளாதி ஜலபானமு மில்லாமல். (௱௪௧)

ராமவியோ கத்தாலே பரதாழ்வான்வருந்தி
நாடிவந்தாற் போனகரு நாடுநெடுங்காடும்
ஆமயலெல்லாந்தேடி யம்மலைமேலேறி
யணைபோதங் கமலனையுந் தமையனையு நோக்கி
ஏமமிக மெய்மறந்தோர் முயற்சியுமில்லாம
லெழிலரியைக் காணும்வகை யெனக்கியன்றதென்று
தோமறுகண்ணீர்பெருகிச் சாஷ்டாங்கமாகத்
தொழுதனரப் போதுடனே சுதரிசனக் கையன். (௱௪௨)

தழுவியெடுத்துத்துகா ராமரைத் தன்மருங்கிற்
றங்கவைத்துக் கொண்டுநினக் கென்வேண்டுமென்ன
வழுவிலன்னை தனைமறவாக் குழவியென நின்னை
மறவாமல் யானிருக்கும் வகையருளு கென்றூர்
நழுவவிடா துங்களுக்கா யிவ்வகை யாம்வடிவு
நான்கொள்வே னின்விழைவு நல்கினன் மற்றினிநீர்
பழுதறுநம் மூர்புகுந்து பஜித்திருமி னும்மைப்
பகுத்திரோ னெனலுமிடைப் பக்கலி னின்றிறங்கி. (௱௪௩)

எட்டுறுப்பும்படியக் கீழிற் பணிந்தார்தம்பி
யெனுங்கான்ஹை யாவுமிறைஞ் சப்பரமன் மறைந்தான்
மட்டறுமப் பொருப்பினிடைப் பரமனின்றபாத
மலர்ச்சுவ டின்னமு மிருக்கின்றன பின்புதுகாராம்
கிட்டிடுதம் மிளவலொடு மூர்புகுந்தங்கருகே
கிளருமிந்திராயணி தீரத்திருந்தார் பொழுது
பட்டிரவு விடிந்தபின்பு நீராடி நியமப்
படியுமுடித் தெட்டாநாள் பாரணையுஞ்செய்தார். (௱௪௪)

அமலனருள் பெருகவருந் துகாராமசாமி
யதிகநனி விரக்தராய்க் கான்ஹையாவான
விமலவிளவலை நோக்கி நமதுதந்தைக்குதவ
வேண்டுகடன் சீட்டையெல்லாம் விரைந்துகொண்டுமேவக்
கமலமுக மலர்ந்தருளிச் செய்தவை வந்த பின்பு
கடன் வாங்கினோர் களிந்தக் காலத்தெத்திறத்தோ
தமலமறத்தருவாரோ தருகிலரோ நீவிர்
தகநிர்ப்பந்தஞ் செய்து தரக்கேட்பீரதனால். (௱௪௫)

வரவேண்டும் பொருட்கான சீட்டெல்லாமிந்த
மாநதியில் விடுப்பது நன்றென்னலுங் கான்ஹையா
உரவோர்நீர் விரக்தரா யினிர்யானோ குடும்பத்
துள்ளவ னெவ்வாறு பிழைத்துய்யும் வகையென்னத்
திரமாகவ வாவறுத்த துகாராமசாமி
சிறிதுன்னி யவற்றையிரு பங்காகச்செய்து
தரலான வொருபங்கைத் தம்பி கையிற்றந்து
தமதுபங்கை யாற்றிலிட்டுத் தம்பிக்கீதறைவார். (௱௪௬)

ஒருவரையும் வருத்தாமற் பொழுதுபோக் குறுகென்
றுரைத்துமனைக் கேகும்வகை யுரைத்தருளிப் பின்பு
திருவுறையு மணிமார்பன் கோயிலுக் குட்சென்று
சேவித்தா ராண்டுகொண்ட பாண்டுரங்கன்றன்னைத்
தருவுறையுங் கானிடைச்சென் றுணவு பெற்றதுண்டு
தம்மூர்க்கு மூன்றுகோசளவுறு பாண்டார
அருவரை மீதேறி ஹரிநா மங்கள் புகன்றே
யனுதினமும் விட்டலனை யகத்தமைத்துக் கொண்டு. (௱௪௭)

அங்குறைந்தோர் சார்புபொழு தத்தமித்தபின்பூ
ரணுகியிராமுழுது மருளமலனொளிர் வடிவம்
பொங்குளத்தும் புறத்தும் விளங்குறக்கண்டும்புகழ்கள்
புகன்றுதுயில் கிறதின்றிப் பொழுதளவு நடித்துக்
கங்குல் கழிகாலை யிந்திராயணிக்கு வந்து
கலந்தாடிப்பூசை செய்து கான்வரை மீதேறித்
தங்குமொரு புறத்திருந்து மால்பஜனை சாற்ற
றவிராதிப்படி நாளுஞ்சரித்து வருமோர் நாள் (௱௪௮)

தினமுமுழுகுறு நதியினீராடிப் பூசை
செய்து கரைதனிலிருந்து விட்டலனாமத்தை
அனவரதம்புகல்வது போற்பஜித்திருக்கச் சமீபத்
தாயவொரு சோளக்கொல்லைக்காரன் பயிரிட்
டினையதற்குக் கதிர்தோன்றும் பருவமணித் தாயிற்
றென்றதற்குக்காவல் வைக்கவேண்டு மென்றங்கெண்ணி
மனமுழுந் துகாராமசாமி வயின்வந்து
வாளாகாலம் போக்கேல் வருகவென் பாலென்றான். (௱௪௯)

என்றனது கொல்லையிற்புள் ளிலங்கு கனைக்காப்பா
யேலுனக்கு முடிவிலனை மணங்களிப்பே னென்ன
நன்றெனச் சொன்னார் யாவரேது செயச் சொலினு
நன்றென்றுந் துகாராம சாமிதனை யழைத்துச்
சென்றெனக் காய்ச்செய்த பரணிதிலேறி யிருந்து
செய்தபயிர்கண்டு முதலா மளவுங் காத்துத்
துன்றெனச் சொல்லிப்போ னான்று காராமசாமி
சொன்னபடி சோளக்கொல்லையிற் காக்கத் துணிந்தார். (௱௫௰)

பரணிருந்து விட்டலனாமங்களெல்லாம் புகழ்ந்து
பஜித்திருக்கும்போதுவந்து பக்ஷிகள் பாற்சோளம்
முரணிலது தின்பதனைக் கண்டு துகாராமர்
முகுந்தனெங்குநிறைந் திருக்கின்றான தறிவற்றை
இணை முறக்கடவோ மேற்பாவ மெனக்கடியா
திருந்து நின்று வயிறுநிறை பக்ஷிகளை நோக்கித்
திரள்மிகு புள்ளினமே நீருகமினிப் பருகச்
சென்மினென்பார் தினந்தோறுந் திருமாலைப் பஜிப்பார் (௱௫௧)

மனையிலுறுஜி ஜாயிகணவனைக்காணா தலைந்து
மகனைப் பார்த்தெனக்கோ மிக்கதுபசி நானன்னம்
அனைய வருக்கிடாம லுன்னை யவனைப்போய்த் தேடி
யழைத்து வருகெனக் காசிபாயி யெனுமூத்த
தனையை பலவயின் றேடுந்தோடிப் போய்த்துகாராஞ்
சாமியிருந்துழி கண்டு தந்தாய் சாப்பிடற்கு
நினைவிலையோவருக வெனக்கொல்லை தனைக்காக்க
நியமித்த முதலாளி யஸ்தமிக்குங் காறும். (௱௫௨)

கொல்லைதனை விடாதிருக்க வென்றன னெவ்வாறு
கூடும் வரவுனதனைக்குப் போய்ச்சொலென்று சொன்னார்
வல்லமனைக் கணுகித்தன் றாய்க்குத்தன் றாதை
வகுத்ததுரை செய்யவவள் மருளா ருண்ண வன்னம்
ஒல்லையி லுய்த்தவ ருண்டபின் பறித்து கொடுதா
னுண்டன ளிவ்வாறு தினந்தோறு மீவாகக்
குல்லையணி பாண்டுரங்கன் றனைச் சேவித்தேகிக்
குறித்த பரணிருப்பாரோர் மாதவரையாக. (௱௫௩)

காவல்வைத்தோன் கொல்லை விளைந்தது காணவந்து
கண்டனன் பார்த்தன வெல்லாம் வெறுங்கதிராயிருக்க
ஒவறு கோபங்கொண்டு காப்போனை நோக்க
வுவர்விடல ருமம் வாயுனைப்ப வுறுபரண்மேல்
மேவலைக் கண்டியா னுன்னை விசுவசித்துக் காக்க
வேண்டினதற்குக் கொல்லைவிளைவு கொள்ளை யிட்டுத்
தாவறு மென்குடி முழுகச் செய்தனையே யென்று
தவைது மங்கவனைத் தாளிழுத்துச் சென்றான். (௫௱௪)

அந்தவூர்த்தலைவனிடத் துய்த்துமுன்னே நிறுத்தி
யவன்காண வயிற்றிலெற்றிக் கொண்டுளது சொன்னான்
முந்தநின்ற துகாராமர் தமைநோக்கித் தலைவன்
முயன்றது நீயென்னை யெனமுழுமுதல்வனடியார்
இந்தமுதலாளி யென்னைப் பரணின் மீதேறி
யெய்து பக்ஷிகளைக் காக்கவிசைத்தன னவ்வாறே
வந்தபக்ஷிகளைக் காத்துவைகினேன் போகா
வகைபோக்கினே னென்றால் வருத்ததண்டம் பெறுவேன். (௫௱௫)

புள்ளினந்தம் வயிறுநிறையப் பொசித்ததன்றிப்
புகன்றபடி குறைசெய்து போயின தொன்றில்லை
கள்ளமில்லை மெய்யிதெனக் கேட்டன ரொல்லோருங்
கலகலென நகைத்தன ரத்தலை வனதுகண்டங்
குள்ளவர் முன்பயிரிட் டோன்றனை நோக்கியுண்மை
யுனைத்தியுனக் கானகொல்லை யெவ்வளவு விளையும்
கொள்ளவென மணங்கது நாற்பது விளையுமிதற்குக்
குறையா தென்றான் பயிர்செய்குடியா னென்றனே. (௫௱௬)

பறவைகளுண்ணக் கொடுத்தபடி யானீதானே
பழுதுசெய்தாயுழுது பயிரிட்டவன் சொற்படியே
பெறவளித்தல் செயவேண்டு மெனத்தலைவ னுரப்பிப்
பேசியளிப்பதற் குனக்குப் பெரிது பொருளில்லை
உறவதற் காதர வெழுதிக்கொடுக்க வெனத்துகாரா
முடனெழுதிக்கொடுத்தனர் பின்புறுதி செய்த தலைவன்
அறவழிந்த கொல்லைதனை நாம்போய்பார்ப்போமென்
றங்குள்ளோரொடு கூடியடைந்த தனைப்பார்த்தான். (௫௱௭)

பார்க்கவரு முன்கொல்லை யளவில் விளைவாகப்
பாண்டுரங்க னியற்றின னப்படி விளைவுபார்த்துச்
சீர்க்க வியந்தனர் கொல்லைக்காரனுங் கண்டெனக்குச்
சேரவிவை செயிலெழுதுஞ் சீட்டை யளித்திடுவேன்
நேர்க்கவெனத்தலை வனிந்தத் துகாரா மன்றிருமா
னினைவுளனுதலி னிவற்கு நெடுமால் செய்யருளால்
தீர்க்கவிளைவாய துனக்குளது கொள்கவென்று
செறிந்து விளைந்ததை யறுத்துச் சேர்க்கவுனைசெய்தான். (௫௱௮)

மலிந்துகுறைவைசெய்தது மூந்நூற்று நாற்பானு
மணங்களவு கண்டு கொல்லைக்காரனுக்கு நாற்பான்
பொலிந்த வளவுள கொடுத்துக் கடன்சீட்டைக் கிழித்துப்
பொருந்து துகாராம் சாமிமுக நோக்கிக் காவல்
நலிந்துசெய்தபடியாலே மனமிரங்கி நாத
னன்றளித்த தென்றுமிருந்தன வெல்லா நல்கப்
பலிந்தவிந்தச் சோளத்தி லொன்றேனு மாசைப்
படாதிருக்க விளைந்ததிந்தப்படி யெல்லாங் கொண்டால். (ாறுக)

எவ்விதந்துன்பத்துக் காளாக வியற்றுறுமோ
வென்றனக்கு வேண்டா மென்றனர் தலைவன் கேட்டுச்
செவ்விதென மகதாஜி பண்டிதர் தம்மகத்திற்
சேர்த்து வைத்தான் மிருந்துள சோளங்களெல்லாஞ் செவ்வே
அவ்விதங் கண்டானந்தங்கொண்டு துகாராம
ரரிபஜனை செய்து கொண்டு வருநாளிலொரு நாள்
திவ்விய விடோபாவின் கோயில் பழுதாகித்
திகழ்வது கண்டது திருத்தச்சிந்தை கொண்டுமுயன்று. (ாசுய)

மண்குறைழுந்துக் கோயிலின் மேற்றட வியுடன் மிகவும்
வருந்துதலைத் தெரிந்து விடோபாவுக்கவ்வருத்தம்
எண்குறைழக்க மகதாஜி கனவிற்போயினியுன்
னிடத்திருக்குந் தானியமெல்லா மெனது கோயிற்
கண்டுறைழந்த வழியெல்லாஞ் செவ்வை செய்கவென்னக்
கண்விழித்தவ்வூரார்க் கக்கனவதனைச்சொல்லி
விண்குறைழந்த சங்கொலியான் கோயிலுக்கெல்லோரு
மேவிவந்து துகாராமர்வேலை செய்யக்கண்டார். (ாசுக)

கனவு நிகழ்ந்ததற்கிது வேகண் கூடென்றறிந்து
கற்சாந்து முதலவெல்லாங்கொண்டு பழுதகற்ற
முனர் நவ்வாய் வைத்துள தானியங்களெல்லாஞ் செலவாய்
முற்றின பின்புனித நலமுடிப்பதில்லாதிருக்க
அனகதுகாராம் சாமி வருந்துதலைத் தெரிந்தா
னகளங்கன் மகதாஜி கனவிடைப்போய் முன்னர்ப்
புனமுடையோன் காத்ததனுக்கறை மணங்குச்சோளம்
புகன்றபடி தராது கொண்டு போயினன் மற்றவன்பால். (ாசுஉ)

அரைமணங்குங் கொண்டென் கோயிற் புனிதமாக
வமைக்கவெனவது தெரிந்தங்கவைருக்கும் பகன்று
வரையளவு தரவாங்கி யூரிலுளோர்க்கெல்லாம்
வரிவைத்துப் பொருடிரட்டி மாதவன் கோயிலுக்குப்
புரைதவிர்த்துப் புனித நலம்பொருந்துறவே செய்யப்
பொருவிறுகா ராம்சாமி யளவிலின்பம் பொருந்தி
நிரைமுமை மேய்த்தவன் கோயிற் சபாமண்டபத்தி
னின்றரி கீர்த்தனம்பாடி நிகழ் நடனமாடி. (ாசுந)

காமதேவொடு ஞானதேவாதி நல்லோர்
நவின்றசாயித்தியம் ராமாயணம் பாரதமென்
ருமதாகிய முத்திக்கடைவான கிரந்த
மனைத்துஞ் சேகரித்துக் கொண்டந்தப் பாண்டார
வாமவரை தனிலேறி யிருந்துகொண்டு நாளு
மனனஞ்செய் துவந்தனர் மற்றவர் மனைவி தினந்தோ
றேமவரைக்கணுகி ரொட்டிசுரைக்குடுவை நீர்தந்
தினிதருத்திப் பின்பகத்துக்கெய்தி யுண்பதியல்பே. (௱௬௪)

வேறு

ஆயவர் வருந்தி முன் விசுவம்பரர் கடவுளாகத்
தேய்வறு குலத்தை நாசஞ்செய் கருங்குறளன்றன்னை
எய்வுற விவ்வூர் வைத்தாரி வனிலென் கணவருக்கு
மாய்வறு பித்தங்கொண்டு மயங்குதலாகி நாளும். (௱௬௫)

இடைவிடாத வன்றன்மை மிசைத்தனர் திரிசுலாலென்
னுடைமை கண்முழுதுந் தோற்றேனுணவு மில்லாமனாளும்
நடையுறு மக்கடாமு நலிவுறும்படி நன்றாக
அடையுமென் குடும்பமெல்லா மயர்வுறலாயிற்றந்தோ (௱௬௬)

இப்படிக்கியற்றி நின்ற விவனையுந்தெய்வ மென்றியாம்
எப்படிக்கருது கின்ற தினிக்கண்ணாலும் பார்ப்பதோ
தொப்பறப் பகலெல்லாங்காடிடலைந்திடை யிராவில்
மைப்படிக் கியல்வோன் கோயில்வந்து வைகறையாமட்டும். (௱௬௭)

கூத்தியல் கின்ற கொண்கர் குலவ்வந்து புசிப்பதின்றி
ஏத்தினர் வரையிலேறி யிருத்தலாற்றினந் தோறேக
வாய்த்தது கால்கணொந்து வருந்தினேனி னியெவ்வாறு
மாத்திரள் வரையிலேற மாட்டுவேனென வருந்தி. (௱௬௮)

அப்பமு நீருங்கொண்டங்கணு குழிவெயிலில் வாடி
வெப்ப முற்றடிகணொந்து விரைவுறச் செல்லும் போதோர்
சர்ப்பவள்ளெயிறு போலத்தைக்கவோர் கூர்முட்காலில்
வைப்பதில் வருந்தி வீழக்குடுவை நீர் கவிழ்ந்து வார்ந்த. (௱௬௯)

மயங்கி மெய்மறந்து சற்றுநேரம் வாய்ந்ததன் பின்தேறி
உயங்கியகாலை நோக்கவுதிர நீர் பெருகலாகத்
தியங்கியம் முள்ளை யீர்க்கச்செறிந்து வாராமையாலூர்
தயங்கிய கரியகுள்ளன் சமைத்த தென்றுளத்திலோர்ந்து. (௱௭௰)

முன்பந்தக் கரியகுள்ளன்றனக்கியான் முடித்த தென்றோ
வன்பு கொண்டிவ்வாறெல்லாம் வருக்கின்றானெனக்கென் செய்கேன்
என்பனவுரைத்துச் சாலவினை வுழியிரங்கிக்கண்ணான்
தன்படிவத் தோடங்குச் சார்ந்தனன் சாரக்கண்டு. (௱௭௧)

இவனிங்கேன் வருகின்றான் மற்றிவன்முக நோக்கலாகா
தவனியிலென்று வாராவத்திசை முகந்திரும்ப
நவனிதக்கள் வனந்தத்திசை முனு நண்ணக்கண்டு
புவனியில் வேறோர் திக்கை நோக்கவு மங்கும் போந்தான். (௱௭௨)

எங்கும் வந்துறுகின்றானென்றிணை விழியிருகமூட
அங்குளந்தனிலுந் தோன்ற வறிந்து நான் வேண்டேனைகப்
பொங்குறு வயிரங்கொண்டு போந்தென்னை வருத்துகின்றான்
கங்குலினிறத்தானென்று கருதி நிந்திக்கலாக. (௱௭௩)

அம்மனையென்று கூயங்கருகில் வந்தருளின்வள்ளல்
செம்மலிவ்வளவில் கோபஞ்செய்வதேனென் மேலென்று
விம்மவட்கினிமை கூறி வெறுத்திடேலென்றுட்காந்து
கம்மலரன்ன வன்றாள் காலைத்தன்றுடை மீதேற்றி. (௱௭௪)

அணுவள வேனுந்துன்ப மின்றியம்முள்ளை வாங்கி
நணுசருட் கண்ணுறேறக்க நங்கைதன்றுன்ப நீங்கி
எணுளுறை பவனை நன்று யெதிருற நோக்கி நின்னை
நணுகறி வகத்துக்கொண்ட நோன்பினென் கணவரின்னும். (௱௭௫)

உண்டியில்லாமலுற்றா ருங்கியான் செல்கின்றேனென்
றெண்டிருமாலுக் கோதியே கப்பினெம்பிரானும்
அண்டினன் செல்ல வோங்கலமர் துகாராமசாமி
கண்டிருவரையு நீருங்கனலுஞ் சேர்ந்துறுதல் போலும். (௱௭௬)

நண்ணருமமுது நஞ்சு நணுகி நண்ணுவதுபோலும்
கண்ணனும் ஜிஜாயிசானுங் கலந்துறுகின்ற தென்றங்
கெண்ணரிதி சயித்திருக்க விருவரு மருகுசார
வண்ண நன்முகிலின் பாதம் வணங்கினர் நிற்கவள்ளல். (௱௭௭)

தழுவினன் மகிழ்ந்து பேசத்தரு துகாராமசாமி
வழுவலின் மனையை நோக்கி மருவுவிட்டலனுக் கன்னம்
பழுதறப் படைத்தி யென்னப் பரிந்தப்பமொன்றை யெங்ஙன்
குழுவிருவருக்கு முண்ணக் கொடுப்ப தென்றிலச்சை கொண்டு. (௱௭௮)

கணவருண் கின்றதின்மண் கலக்கவிக்கரிய குள்ளன்
அணவினன் வயிறுகால நிரம்பினனகை வந்தோ
இணைர்விரி துளவினானுக் கென்பசி யொருவரோனும்
உணவயிற்றுக்குப் போதாதோரப்ப மெனவுள் ளெண்ணி. (௱௭௯)

அச்சுதன் முன்னர்வைக்கவ மலனுண்டவள் கலத்தில்
மெய்ச்சு நல்லன்னவர்க் கமிக நிறைத்தாளைமூடி
வைச்சனன் றுகாராம் சாமிவாய்ந்துணச்சி ஜாயியென்பாள்
இச்சையிற் கலத்திறனுடையே தெனத்திறந்து பார்த்தாள். (௱௮௰)

பலவகைச் சுவைசெயன்னம் பாத்திரத்திருத்தல் கண்டென்
குலதெய்வங் தொழுநற்காக வமைத்த தென்றுளத்திற்கொண்டு
நலதிழை கண்டேயாவோ பவானியோ நன்மைசெய்ய
வலபயிரவரோ விந்தவகை செய்த தெனவணங்க. (௱௮௧)

நீவணங்குகின்ற தெய்வமேதது நானே நின்முன்
அவன கலத்திலாக வமைத்தன னென்ன வையன்
மேவல் செய்யாளா யன்னமேவிரு வருக்கு நல்க
நூவுறவுண்டார் நன்னி ருணச்சுத்தமு மூற்றவேட்டார். (௱௮௨)

மலையினீ ரெங்குமில்லாவகை தெரிந்து தவும் வள்ளல்
உலைவி னீயிங் கேகையாற் றேண்டி னீருறு மென்றான்
அலைவி லாதையன் காட்டுமவ்விடத் தகழ்ந்தாள் கையால்
தொலைவி னீரூறக்கண்டு வியந்தன டோகைபோல்வாள். (ாஅங)

வெறுங் கலத்தன்ன மேவப்புரிந்த வனிவனே மெய்யாம்
உறுங்கருங் குறளன் மாயமந்திரமு ணற்றவல்லன்
பெறுங் கணவனையும் பிச்சேற்றி னன்றன் கைவசமும் பெய்தான்
இறுங் கவளவையுங் கொண்டா னென்னிவன் செய்கை யென்று. (ாஅச)

சுரந்தநீர் கொடுவந்துண்ணக் கால்கைகள்சுத்தி செய்யத்
தரந்தர நல்கிப்பின்பு தானுநல்லன்ன முண்டாள்
நிரந்தரந் தனைப்பஜிக்கு நிமலனை நோக்கி நீண்டு
பரந்த வெற்புறிற் சிஜாயி படர்மிகும் வந்துமீள. (ாஅரு)

இன்று தொட்டினி யிவ்வெற் பிலிருந்திடே லெனமால் சொல்லத்
துன்றுபொற்பதம் வணங்குந் துகாராமர் தமைத்தழீஇ மால்
சென்றுறு கோயில்சேர்ந்தான் சிஜாயி யோடினிது தம்மூர்
ஒன்றுறலாகி மால்பே ரொழிகில ருறைத்திருந்தார். (ாஅசு)

வேறு.

சாதுக்கள் சேவைசெய்து சகலதீர்த்தங்களுஞ் சாதுக்கள் பாதப்
போதுற்ற தீர்த்தமெனப் புனைந்தாடிச் சாதுக்கள் புகழ்தலாகி
மீதுற்ற கீர்த்தனங்கள் கேட்கவருவோ ரங்குவிடு செருப்பை
மூதுற்றோர் போம்போது முன்னெடுத்து வைத்தடியின் முடிவணங்கி. (ாஅஎ)

உத்தம மிக்குறு குணங்களுடையராய்த்தயை சாந்தியுளத்தின் மேவும்
வித்தகராய் வருநாளி லொருநாள் வாழ்மனையின் வெளித்திண்ணை மேவி
நத்தமருஞ் செங்கரத்தா னுமனவின்றிருக் கமனை நண்ணும்பாரி
சுத்தமுறத்துகி லுரிந்தோர் சுவரில் வைத்து நீராடத் துகாராம் சாமி. (ாஅஅ)

பக்கலிலோ ரேழைப்பார்ப் பனிவந்தெற் குடுத்தவொரு படாமு மின்றி
மிக்கது யருறுகின்றேன் மானங் காப்பாற்ற மடிவேண்டுந் தந்தாற்
றக்க பலனுமக் குண்டு தருகென் னச்சுவரில் வைத்ததானை தன்னைக்
கைக்கவர்தி யென்றவட்குக் கண்காட்டப் பார்ப்பனியுங் கைக்கொண்டாளாய்.

உம்புண்ணியத்தினுக் கோரள வில்லையுருக்குமணிவர னுமக்கு
நம்புந் தண்ணளி புரிவானனி யென்னக் கூவாமனங் காய்போதி
வெம்புந் துன்பற வென்று குறிப்பித்து விரைந்தேக விடுத்து வேணி
பம்புந் தண்புனலாடிக் கரையிலிருந்தரி நாமம் பஜித்திருந்தார். (ாகூ0)

ஈங்கவர் தமனைவி யுடனீராடி யுடுத்த மடியிடத்தைப் பார்க்க
ஆங்கவணில்லா ததுகண்டறத் திகைத்தென் கருமத்தை யார்க்குச் சொல்வேன்
தாங்கவுறு மோராடை தனையு மெவரோ கொண்டு சார்ந்தார் வீட்டின்
பாங்கர் பணிபுரியும்பு பாயியுஞ் சாணங்கொண்டு படர்வான் போனாள் (ாகூக)

பெரியமகனை மகாதேவன் பின்னவனை விடோபாவோடு
தெரியநதிநீராடச் சென்றான் காசிபாயி பகீரதி கங்காவூ
வரியலு கின்றனர் வாசற்புறத்திருக்க வெவர்கொண்டு மறைந்தாரோ வென்
றரியதுன்பத் துடனிரைச்சலிடும் போதிற்றாது லாவயல் வீடுள்ளான். (ாகூ௨)

அவ்விரைச்சல் கேட்டுச் ஜிஜாயிகேட்கும் படியந்தணி யொருத்தி
செவ்விதிற்று ணுடுத்திட வஸ்திரமில்லை யென்றுரைக்கச் செவியிற்கேட்டேன்
எவ்விதமாய்ப் போயிற்றோ வென்றனன் மற்றது கேட்டுச் ஜிஜாயிபித்து
வவ்வியவென் னுயகரே யார்க்கேனுங் கொடுத்திருப்பார் மற்றிலென்று. (௱௯௩)

வருந்துறு போதிடைச் சம்பந்தி கடங்கண்மனை நடக்கு மணத்தைச் சொல்லப்
பொருந்தினர் ஜிஜாயி ஜிஜாயீ யெனக் கூய்க்கொண்டு புருந்தன ரவ்வார்த்தை
திருந்துறக் கேட்டுத் தனது மானரக்ஷணைக் காகச்சிந்தை செய்தாள்
அருந்துயருஞ் சினமுமிகுத்துத் தத்தளிக்க வுருக்குமணி யாய்ந்து. (௱௯௪)

தனக்குரிய தானபழந் தானைதனை யெடுத்த வடன்றலை மேலிட்டாள்
மனத்தஞர்கொள் ஜிஜாயிகண்டு வியந்திதுதா மானிடர் வஸ்திர மன்றந்தக்
கனத்தகரு நிறக்குறும்பன் செய்கையென்று நிச்சயித்துக் காத்தான்மானம்
இனித்தவர்மு னென்று மகிழ்ந்தந்த வஸ்திரத்தை யுடுத்திடையிற் புக்காள் (௱௯௫)

அந்தவஸ்திரத்தி னொளி வீடெல்லாங் காந்திசெய வடைந்தோர்கண்டு
முந்தவியந்தனர் மணத்தை மொழிந்து போயினர்பின்பு துகாராம்சாமி
நந்தமனைக் கேகின்மிகக் கோபிப்பாள் ஜிஜாயியென நண்ணுறுமல்
கந்தமலர்க் கான்புகுந்தார் கண்ணனடி கருதியிராக் கடிகைநான்கும். (௱௯௬)

சென்றபின்பு கோயில்வந்து விடோபாவைச் சேவித்துச் செங்கைகூப்பி
நின்றுவெண் கற்கைக் கொண்டொளா மௌனமானும நிகழ்த்தலானார்
ஒன்றுமவர் குரற்கேட்டு மகள்கயிலப்பங் கீரையுசலி யுய்த்தாள்
அன்றவர் துய்த்தரிநாமம் பழம்படியே பாடித்திருந்தா ரானபோது. (௱௯௭)

துயின் மேவக்கண்க சக்கிக்கொடு பாடப்பின்னு மிக்கதூக்கமேவப்
பயிலிதென்ன சங்கடமென் றுன்னினர்தங் குடுமிதனிற் பாசம்வீக்கி
வெயின்மணித்தூண்மிசைப் பிணித்து விடிவளவுந் தூங்காமல் விமலநாமம்
குயிலுதலோர் நான்கிரவிற் றுயில்சோம்பு கூடாமற்குறைத்து நாளும். (௱௯௮)

யாத்திரைசெல் வோருக்குக் கால்பிடிப்பாரரிநாம மியம்புவோர்க்கு
வேர்த்திடிற்கை விசிறிகொண்டு வீசுவரங் கவர்சொல்லும் வேலைசெய்வார்
சீர்த்தவெயிற் காலத்தில் வழிநடப்போர்க்குத் தாகந்தீர்ப்பாரந்த
ஊர்த்திறத்தி லெவரோது சொல்லினுமப்படி மகிழ்வுற்று கிற்பார் (௱௯௯)

இன்னபடி வருநாளி லொருகிழவேதியன் றடியூன்றிக் கொண்டோர்நாள்
மன்னுசிரமத்துடனே வீதிவழிவரக்கண்டு மனம்பொறாராய்த்
துன்னுமவனிடைச் சென்று தூயவரோ நீர்நடக்கத் துயர் கூர்கின்றீர்
என்னதொரு முதுகிலேறிக் கொள்ளுநீர் மேவுமிடங் கொண்டுய்ப்பேன். (௨௱)

என்றலுமவ் வேதியனான் விளக்கு நெய்வாங்கப் போகின்றே னென்றோத
நன்றுமதிற் கேகுமெனப் பணத்தையும் பாத்திரத்தினையு நல்கக் கொண்டு
துன்றுகடைக்கு வந்ததனைக் கொண்டு மறையோன் வீடுதுன்னித் தந்தார்
சென்றசிலநாட்குப்பினக் கிழவேதிய னூரார் தெரியச்சொல்வான். (௨௱௧)

எட்டுநாளைக்கு வருநான்வாங்கும் விளக்கு நெய்யிந்தத் துகாராம்
இட்டிவாங்கித் தந்தநெய் பலநாட்காய திதுகிளர்வியப்பு
மட்டிலென வதுதெரிவான் மற்றொருவனும் மவரால் வாங்கித் தேர்ந்து
முட்டில் வியப்பினுகை யாருமவரால் வாங்கமுயல் வதாகி (௨௱௨

பாத்திரமும் பணமுந்தந்தனராகத் துகாராமர் பரிவிற்கொண்டு
போய்த்தருக வெனவணிகன் முன்பரப்பிப்பாத்திரத்தைப் பொருளுறநற்சச்
சீர்த்தவணிகன் றெரிந்தேப்பாத்திரத்தி லெவ்வளவு செறிப்பதென்னத்
தீர்த்தரந்தவகைதெரியாதுனக்குத்தோற்றினபடியேசெறித்தியெனருள். (உரு)

வணிகனவைத்தவர் கொடுத்தபொருளுக்குத் தக்கபடி வழுவுறாமல்
அணியின் வைத்தபாத்திரங்க ளனைத்தினு நெய்தோற்றினவாறுகப் பெய்தான்
மணிநிறத்தான்றுசரந்தப்பாத்திரங் கடமிலுள நெய்வழிவுறாமல்
திணிசுருக்கிட்டொருகோலிற்செறித்துத்தோளிடைத்தாங்கிச்செல் ... ( )

அவரவர் தாந்தரு பொருளுக்கமைவாக வவர்பாத்திரத்தி னெய்தான்
சுவர்கில வொன்றவ ரவரு மொப்பும் வகை கலனுறநெய் கண்ணன் செய்தான்
இவரு மவரிடைச் செல்ல வவரவருந் தங்கலந் தேர்ந்தினிது கொண்டார்
உவர் பரமன் கோயிலுக்கு வந்தரி நாமம் புகன்றங் குறைவதானூர். (உ௱ரு)

இத்திறத்தூரா ரெல்லாந் தன்பதி பாற்றினந் தினமூழியங் கொள்கின்ற
அத்திறம் ஜிஜாயிதெரிந்தென்பயித்தியகாரபதி யாலேவேலை
நித்தலுங் கொள்கின்றதன்றியோ ரொருத்தின் சுமைதாங்க நிரப்புகின்றார்
தத்தமக்கேற்றபடி யெனவிளைந்து வைதறனைக் கேட்டுத்தையலார்கள். (உ௱சு)

உனதுபதியாரிடத்து மூழியஞ்செய்வதற் கொப்புமுதனலன்றே
மனதொரு மித்தவரி டத்தூழியங் கொள்கின்றாரதற்கு வையலாமோ
எனலுமதனைக் கேட்டுச் ஜிஜாயிநீர் சொல்லுவது மியல்பேயென்று
தனதுமனம் பொறுத்திருந்தாள் பின்பொருநாட்ஜிஜாயி துகாராமசாமி. (உ௱எ)

முகநோக்கி யுமதுபிதாத் தனக்கின்று புண்யதிதி முடிப்பதற்குத்
தகவான தொன்றுமில்லை யென் செய்வதென் றுரைக்குமது தன்னைக்கேட்டு
மிகயான் போய் வனத்தடகு பறித்து வந்து தருகின்றேன் வேகவைத்துத்
தொகலான பிதுர்க்களுக்குத் திருத்திசெய்கென்றரிநாமந்துதித்துச்சென்றார். ()

அவ்வயிறோர் கொல்லைதனிற் பயிரிட்டு விளைந்த கோதுமை யறுத்துச்
செவ்வை செய்வோன் றுகாராமர் வரக்கண்டு நீயுங்கொய்சேர்ந்தென்றே த
ஒவ்வினராய்க் கூலியாளுடன் சேர்ந்துவிட் டவனையுளங் கொண்டுற்ற
கௌவை மறந்தறுத்துக் கொண்டிருக்க வவர்தங்கணவி காளுளாகி. (உ௱கூ)

சிறிவைது கொண்டிருக்கப் பாண்டரங்கன் றுகாராம ராகிச்சென்று
மாறிறிதிக் கானவெல்லா மூட்டைசெய்து தலைமீது வைத்துக்கொண்டு
தேறும்வகை மனைபுகுந்து ஜிஜாயிடைத் தந்துநீ சீக்கிரத்திற்
சோறுகறி சமைத்தியெனச் சொல்லியுடன் கடைநோக்கித் துன்னினுறல். ( )

தருமூட்டை தனையவிழ்த்து நோக்கவதில் வேண்டுவன சமைதல்கண்டு
கருதுளத்திற் களிதூங்க நானஞ்செய் துடனடற்குக் கடுகலானள்
மருவுகடைக்குப்போனேன் பாத்திரமும் வஸ்திரமும் வகைந்துகொண்டு
தெருவுதொறுஞ் சென்றுறவோர்க் கின்றுதிதிவருகவெனச் செப்பக்கேட்டோர்.

யாவருமங் கதிசயித்துத் துகாராம னின்றுதான கக்குடும்பம்
மேவலுற லாயிற்றெனனக் களித்தாராய் மேவ விளைந்துவந்தோர்க்
காவலுட னுபசரித்தாசனங்கொடுத்துப் பூசித்தங் கமரச்செய்து
தாவறு புரோகிதரும் வரவிருத்திப் பவித்திரமுந் தரித்துக்கொண்டு. (உகஉ)

வேதவிதி வழுவாமற் றிதிமுடித்தா யினபின்பு மெவுமுற்றோர்க்
காதரவோ டிலையிலறு சுவையன்னம் படைத்துச் சங்கற்பதீர்த்தம்
மேதகவிட் டெல்லோருந் திருத்தியுடன் சாப்பிடுமோ விரும்பிச்செய்து
பாதமத்தஞ் சுத்திசெய்யப் பாணிதந்தா யினபின்பு பதியிருத்தி. (௨௧௩)

சந்தனம் புஷ்பந் தாம்பூலந்தந்தான் ஜிஜாயிமுகந் தன்னைநோக்கி [டான்
வந்தவர்களினிக் குடும்பச்சுமையுனக்கென் றெவையுமுன்றன் மணாளன்கொண
முந்தவென்ற ரதுகேட்டுச் சிஜாயியுந்தன் மனத்துவகை முதிர்வதாகி
இந்தவகை நம்பிக்கையில்லையெனக் கென்றுசொல்ல வெழிலிவண்ணன் (௨௧௪

மற்றும்வந்த யாசகர்க்குச் சோறிட்டுச் சமையல்செய்ய வாங்கிவந்த
பற்றுளபாத் திரங்களெல்லாஞ் சுத்திசெய்தங் கவரவர்பாற் படுத்திவந்து
துற்றுவன் போனகமென்று சொன்னபடியேசேர்த்துத் தோன்றுனான்
நற்றுறு கோதுமையறுத்தோர்க்குக் கூலிநா லரிசை நல்கப்பெற்றார். (௨௧௫)

பெற்றதுட னுடம்பெல்லாந் தூளிமொய்க்க மனைக்குவந்து பெறுகென்றீந்து
மற்றிதுகொண் டுறுபிதிர்க்குத் திருத்திசெய்கென் றில்லாட்கு வருக்கக்கேட்டு
முற்றினிருந் தாதை திதியிங் கிருந்தன்னமு மிட்டீர் முந்தினோர்க்குச்
சொற்றவிது பயித்தியமோ தூளிமொய்க்கச் சுமைசுமந்தீர் சொல்லுமென்றாள்.

வினவுதுகா ராம்சாமி தினைத்துவிழி நீர்பெருக விட்டலாசிர்
அனகபத்த பாலனக ருணநிதேசீ வந்தென் னகத்துண்மேவி
எனதுபிதாத் திதிமுடித் திடேற்றிட யான்செய்த தவமேதோவென்று
மனதினகி யுடனிருந்திங் குண்ணமற் போனதற்கு வருந்தலானார். (௨௧௭)

நீவந்தென்னுட னுண்டாலன்றி யுண்ணேனென் றிருக்கநிமலன் றேர்ந்து
மேவுந்தன்னுருக் கொண்டு கிரீடகுண்டலங்க ளுடன் விளங்கக்கண்டு
கோவிந்தா வெனவணங்கிச் சுவாமியுந்தந் நடுவிருக்கச் சிஜாயிகூடத்
தேவுந்தம்முட னுண்ணவுண்டு மகிழ்கொண்டு மனந்திருத்தி யானார். (௨௧அ

திருந்துதன தடியவரைத்தழுவி விடோபாத்தனது கோயில்சேர்ந்தான்
பொருந்துதுகாராம் சாமிஹரி நாமமிடைவிடார் புகல்வாராகி
இருந்தவொரு நாளொருநா ளிரவில் விடோபா வவர்மு னெதிர்ந்துநோக்கி
அருந்துதிசெய் நாமதேவாய் நீமுன்னவ தரித்தவக் காலத்தில். (௨௧௯)

சத[illegible] [illegible]ஞ் செய்கிறே னென்றெனன் மேலீ நிச்சயித்துச் செய்போ
துதவியாய் [illegible]ழுத வொருவருமின்றென்று நான்வரைந் தேனன்றே
அதனிலஞ்சு கோடியே யைம்பத்தோ ரிலக்கமுள குறையதாக
இதமுடனே யின்றுதொட்டுக் கவிசெய்கென் றருளநன்றென் றிறைஞ்சிநிற்க.()

கருணையார் கவிகடாக்ஷித் தாலிங்கனஞ் செய்து கரக்கச்சால
அருள்பெறுதுகா ராமசாமி வேதவியாசரந் நாட்சொன்ன
பெருமைபெறு பாகவதத்திற் றசமஸ் கந்தத்திற் பின்னைகேள்வன்
மருவியபா லக்ரீடை களைப்பிரா கிருதத்தில் வனைவதாக. (௨௨௧)

கவிகள்செய்து மிடைவிடாதரி நாமம்புகன்று மரிதினங் கலந்தால்
சவியசுடர் மறைந்தவுடன் ஜாம நான்கிலு மரிகீர்த்தனங்கள்செய்தும்
புவியிலவர் புகழ்விளங்கச் சிஞ்சுவடி மம்பாஜி பாவா வென்போன்
குவிவறுசீர் தேகுவுக்குக் கோசாயிப் பிராமணனுய்க் குறுகியாங்கே. (௨௨௨)

மடங்கட்டித் தனது குடும்பத்தொடு மாணுக்கரொடு மன்னுகின்ருன்
இடம்பெற்ற துகாராமர் புகழ்க்குமனம் பொருதவனுய்ச் சிறியின்ருேன்
இடம்பெற்ற நாம்பார்க்கப் பாடங்கள் படித்தவன் சூத்திரனேஜாதிக்
குடம்பட்டு வேதியரு மேவல்செய்தா சிருதர்களா யுழல்கின்ருர்கள். (௨௨௩)

மறையவனும் மகிமைபெற்ற வென்னேயொரு வருந்திரும்பிப் பார்ப்பதில்லே
இறையளவுமிவனேமெய்ச்சுமிதற்கிவன்பாற்பெருமையென்னவிவனேயோர்காற்
குறைவுபெற வவமதித்து நம்புகழை மிகுதிசெய்து கொள்ளவேண்டும்
தறையிலெனத் துகாராம சாமிகீர்த்தனநாளுஞ் சாற்றுஞ் சார்பில். (௨௨௪)

தினமும்வந் தன்னவனை யவமானஞ்செய்யச் சமயந் தேர்வோ னேர்நாள்
அனகஹரி தினத்திரவி லரிபஜனே செய்துறு சாதுக்களோடு
கனகவிமா னத்தைவலம் வரும்போது முட்களவர் காலிற்றைக்க
மனதொரு மித்தூன்றி வைத்தான் றுகாராமசாமி யந்தமார்க்கமேவி. (௨௨௫)

வரும்போது பதத்திலொரு முட்டைக்க வந்தமுள்ளே வாங்கிவீசி
ஒருங்காக வினிவருஞ்சா துக்களடி முட்டைக்கு மென்ன வுன்னிப்
பொருங்கூர்மு ளனேத்துமங்குச் சோதித்தொன் றில்லாமற் போக்கக்கண்டு
மருங்கோர்சா ரிருந்தவிகன் மம்பாஜி முனிந்தொருமுட் டடியைவாங்கி. (௨௨௬

வந்தோடி யடிக்கவந்தத்தடி முறியமற்று மொருதடிகைவாங்கி
நொந்தாக மெலியவடித்தானதுவு முறியமற்று நோக்கி நேர்ந்த [ன்
கொந்தார்முட்டடிமுழுதுங்கொண்டடித்துக்கைசலித்து மடம்போய்ச்சேர்ந்தா
நந்தாத வன்பரடிக் கயராதுந் தைத்தமுட்கு நலிவுருதும். (௨௨௭)

அடித்தவனே முனியாதுஞ் சற்றேனுந் துயராதும் ஹரிதன்னைமம்
படித்துவலம் வந்துவிட்டலனேக்கண்டு தொழுதவனேப் பார்த்தியாவும்
நொடித்தெனேயே னிவ்விதஞ்செய் தனேயென்று மூன்றபங்க நுவலத் தீர்த்தன்
வடித்தகண்ணீ ரினறுனு னிதுதெரிந்து ஜிஜாயியங்கு வந்துகண்டு (௨௨௮)

அன்பருடம் பினிற்றைத்த முள்ளெல்லா நோவாம லாய்ந்துவாங்கி
முன்புதெரிந் தோரோடு நிற்கவிடோ பாவருட்கண் மூழ்கலாலே
வன்புபத்தி ரவந்தீர்ந்து துகாராம சாமிமன மகிழ்ந்துநின்று
பின்பரிகீர்த் தனஞ்செய்யப் பாகவத ரெல்லோரும் பெரிதுகூடி. (௨௨௯)

நிறைவுறலுந் துகாராம சாமியந்த மம்பாஜி நேரா தோர்ந்து
முறையி னின்றேன் மம்பாஜி வரவில்லே யழைமினென முதுவோர்க்கோத
அறையுமுன ரொருவன்போய்க் கண்டுடம்பு சுகமில்லேயென் றதனேக்கேட்டுப்
பொறை மனத்தன்பருக் கோதவுடனவன் வாழ்மடம்போந்து புகுந்துகண்டு. ()

அடித்தகர நொந்தனவோ வதனுலே யுடம்பெல்லா மயர்வாயிற்ருே
முடித்ததவத் தினர்க்கென்று முன்னியவ னடிபணிந்து முகத்தைநோக்கிப்
பிடிப்பெ னருர்தீர வென்றங்கவ னுடம்பெல்லாம் பிடித்துப் பெரியோரோநீர்
துடிப்பிலிராய்க் கோயிலுக்கு வருகென்று துகாராம சாமிசொன்னுர். (௨௩௧

அடியேன்மே லிவ்வளவு கோபங்கொள்வது தகவோ வடைகவென்றும்
நெடிதான சிரமமுறவபராதியாக யானேர்ந்தேனென்றும்
கொடிதேது மிலதாகக் கூறுவன மம்பாஜி கேட்டுக்குன்றி
ஒடிவாகா நாணுடனே வருகீர்த் தனேக்கென்றங் கவரோடேற்ருன். (௨௩௨)

வந்தபின்பு துகாராமசாமி சொல்லுங்கீர்த்தனத்தில் வழுவுண்டாவ
தெந்தவிடத்தென்று கேட்டவெண்ணத்தோடங் கிருந்தா ஸிணையிலன்பர்
சந்தகைத் தாளம்வீணை மிருதங்க மினிதொலிக்கச் சாதுவானோர்
முந்தவைக்கட் பரவசராய்ப் பாடிக்கொண் டிருந்தனரன்முடிவுகாண. (௨௯௩)

மனையில்வந்து ஜிஜாயி துயிலுறு போதிலிரண்டுகள்வர் வந்து முன்னே
அனையவப்பா ஜிகுளவேஜி ஜாயிக்கு வாங்கியன்பி ளளித்தகாரான்
றனையவிழ்த்துக் கொடுமேற்கு முகமனை நாழிகைவழிதாஞ் சாரக்கண்ணன்
நினைவுபர வசமாகித் துகாராமர் கீர்த்தனங்க ணிகழ்த்துகின்றார். (௨௯௪)

இங்கில்விற் றூங்குகின்றா ளிவன்றேவி நாஞ் சும்மா விருந்தோமாகில்
சர்குல்கழிந்தாற் றுகாராமனை வீணேவருத்திக் கடிவாளென்று
யுங்ரவிடைத் தண்டொருகைக் கொண்டவர்போ மார்க்கத்திற்கோரரூபம்.
பொங்குற நேர்ந்தடிக்க வருவான் போலாகக் கண்டு போகுங் கள்வர். (௨௯௫)

அஞ்சிவழி யிடையேதோ பூதம் வருகிறது நம்மை யடிக்கவோவென்
றெர்பிலந்த வழிவிலகிக் குறுக்கிலொரு வழிநோக்கி யேகவங்கும்
விஞ்சிவரக் கண்டுமிகு பயங்கொண்டெவ் வழிமேவு வேமென்றெண்ணி
நெஞ்சி லெண்டிக் கையுநோக்க வங்கங்கு முன்பெனவே நேர்ந்துநிற்க (௨௯௬)

பூதமேவிது பிரமரக்ஷசோபசா சோநேர் புகுவதென்று
கோறலா ... ர்வாங் ... றவ ருளத்திஞேக்கியீதுக்
கேதுபாயஞ்செய்து மெனுயந்த துகாராம னரிதன்ஞமம்
ஓதுவா ஞதலின் மற்றவள் மாட்டை நாங்கொள லாலுளம் பொருளுய். (௨௯௭)

விட்டலனோர் பூதத்தை விடுத்தனனீ துண்மையென்று மிகவுமஞ்சிக்
கட்டவிழ்த்துக் கொடுவந்த மாட்டையங்கே யுய்க்கோமேற்கவரு மாவி
துட்டநெடுங் கூளியென வதுதொட ர மீண்டுசென்று மனையிற்றுன்னிக்
கொட்டமிட்டுப் புறம்போந்து ரம்மூர் நோக்கிப் போகக் குறுகும்போது. ௨௯௮

முன்பெனவே ... றியி ... திர் நின்றடிக்க வரக்கண்டு முகந்திரும்பித்
துன்புடனீ தெங்குறினும் விடாது நம்மைத் தொடர்வதுக்கென்செய்துமென்று
அன்புடன்கோ யிலினின்று விடிவளவுங் கேட்பவர்க ளனைவோருக்கும்
என்புருகப் பாடுமெவ ரிடத்துரைத்தா லன்றியிது விடாதென்றெண்ணி. (௨௯௯)

கோயிலுக்குள் வந்து துகாராமரடியிணை பணிந்து குறுகிநின்று
வாயி ... க்காளையரேயாஞ் சோரர்நு மதுதிருமனைக்குளின்று
போயினை ... த்த கட்டவிழ்த்துக்கொடுசென்றேமெருமைதனைப்போமார்க்கத்தில்
தீயினுக்கு நிகர் பங்கிப்பெரும்பூத மொன்றெதிர்ந்து செங்கைத் தண்டால். ( )

எற்றவந்தது கண்டெத்திசையுறினும் விடாதடிக்க வெய்தலாலே
பற்றலுற்ற வெருமைதனைக்கொடு போந்தும்மனையில் விட்டுப்பரிந்து மீண்டு
சுற்றலுற்ற பூதமடியா தென்றெம்மூர் புகுதத்துன்னும் போதும்
கற்றவரே விடாதடிக்க வருகின்றததனாலுங் கண்வந்தோதில். (௨௪௧)

பூதமெதிர்தடாது செய் ... ன்றடைந்தோ மெனச்சோரர் புகன்றுவேண்ட
மாதவருஞ் சபையிலுள்ள மற்றவரு மாச்சரிய மனத்துட் கொண்டார்
மேதகுஞ் சீர்த்து ... ராம ... விழிமூடி விட்டலனைத் தியானஞ்செய்யப்
போதவுற்ற வனிருக்கச் சோரர் சொல்லு வதுமெயென்று புந்திகொண்டு ( )

பாண்டுரங்காவாபதனைப் பற்றறச்செய்தினை பந்தா பதுமநாபா
ஈண்டு நின்றெம்பஜனைதனை வினவாமலெங்க ணின்றுயிளங்காலத்தில்
வேண்டு பசுபாலனத்தை விரும்பியின்னம் பாலிக்க மேவுற்றாயோ
தூண்டு பரித்தேரிரவி வருபோதா கியுமார்த்தி கொளத்தோன்றாயோ. (௨௪௩)

என்று நனிவேண்டு பொழுதெதிர்ந்தனன் கைத்தடியொடு பாண்டுரங்கரூபம்
நன்று விளங்குறக்கண்டு துகாராமர் சோரர்தமை நயந்து நோக்கி
இன்றுமக்க வெருமை வேண்டுறிலினி நீர் கொண்டு செல்லு மிகலின்றென்றார்
அன்று நின்ற சோரரெமக்காவி தந்ததே போதுமென வகன்றார். (௨௪௪)

சோரர் வந்து சொல்லியதுந்தடியொடு பாண்டுரங்கன்றோன்றியது மன்பர்
சாரநின்ற சோரருக்குச் சாற்றியது மவர்போன சமைவுந்தேர்ந்தங்
காரவொன்றி னோரெல்லா மதிசயத்தாஹாகார மாயானந்தம்
நேரநன்று துகாராமசாமிதனைக் கொண்டாடி நெகிழ்ந்தார் நெஞ்சம். (௨௪௫)

இன்னவை யெல்லாங்கண்டமம் பாஜிதானுக்கென்ன வியந்து வெள்கி
நன்னரிந்தத் துகாராமசாமி மிகுமகிமை கொண்ட நலத்தாலன்றோ
பன்னகந்தாங்கும் புவியிலித்தனை சீர்த்திகளெல்லாம் படைத்தாரென்று
உன்னலுறுவானாகிச் செருக்கழிந்தானுலகளந்தோற் கார்த்தி செய்தார். (௨௪௬

வேறு

புலரி கண்டபின் பன்பரிந் திராயணி போந்து
அலரின் மூழ்கியாராதனை நாதனுக்காற்றி
நலரி கீர்த்தனஞ் செய்து கொண்டிருந்தனர் நண்ணச்
சிலரி ராநிகழ் செய்கையைச் சிஜாயிக்குத் தெரித்தார். (௨௪௭)

இன்றிராநிகழ் செய்கையிப்படி யதோவென்று
நன்றுநன்றென வினவுமுன் வியந்தந்த நங்கை
நின்றமாடு முன்பிணிப் பின்றி நிற்பதுங்கண்டு
தன்றுணைப்பதி தன்னிடத்தன்பு மிக்கனளாய் (௨௪௮)

அடகுமப்பமும் பாலொரு வள்ளத்து மமைத்துத்
திடமனத்து நல்லன்பரில் லம்புகத் தேடிப்
படரவந்தவர் தமையுபசரித்து முன்பரப்பி
உடன்விரைந்துண்ணு மென்றனளன்பருளுன்னி (௨௪௯)

என்றுமில் லுபசாரமின்றேதெனவியந்து
நின்றபாரியை நோக்கினர் நிகிரிகரணம்
ஒன்றவுண்மகிழ்வொடு தினமொரு வள்ளத்திற்பால்
நன்றளித்தி யேல்விட்டலன் றனக்கு நல்குவனென் (௨௫௰)

என்னுமுன்னொரு செம்பினிற் பானிறைத்திந்தாள்
அன்னதைக்கொடு போய்விட்டலன் றனையருத்திப்
பின்னரெய்தியுண் டிருந்தனர் நாடொறும்பேணிப்
பொன்னிநாயகன் பருகப்பாலளித்துப் பினபுசிப்பார். (௨௫௧)

இப்படிச்சிலநாள் கழிவெய்திடச் சிஜாயி
கைப்புளத்துற மனைக்குப்பாறயிரின்றிக் கையிலோர்
செப்புறச் செறிபால்கொடு தினந்தொறுஞ் சென்று
மைப்படிக்கரு நிறத்தினற் களிப்பதுவழக்கோ. (௨௫௨)

என்ன வெண்ணின டந்தை பின்றினந் தொறுமெய்தும்
கன்னியானபா கிரதி தன்னைநீ கண்ணன்
நன்னர் நல்கியபால் குடிப்பது மெய்யோ நவிறி
என்னலு மகள் குடித்திறை யெந்தைக்கு மீவான். (உருங)

கண்ணனு டொரு மென்றனளது தெரிகருத்தால்
நண்ணி நான்றருவேனென நாதற்கு நவின்று
தண்ணுறு வொரு செம்பு பாறுக்கிட்டுச்சார
எண்ணிறனுளத் தெங்கணு நிறைந்துள விறைவன். (உருச)

நம்பிடத் திறையேனு மன்பி லளிவணல்கும்
வெம்மை மிக்குள பாலையும் பருகுதல் விதியோ
செம்மை யன்றென மறுக்கிற் றன்பதி தனைச்சினந்து
பொய்மை சொல்லினை யெனவெறுத்தின லுறப் புரிவாள். (உருரு)

யாதுசெய்வ தென்று றுமளவெய்தினள் ஜிஜாயி
வேதுகொண்டுறு பாலையக் கண்ணன் வாய்வெதும்பும்
கோதுதேர் கிலனாய்க் குடிப்பித்தனள் குடித்துத்
தாதசேர்துள வோனிதழ் கொப்புளந் தயங்கி. (உருசா

அனல்பொருன் றலையசைத்த விற்கண்டமு மனுங்கித்
தனிலொதுங்குறச் சார்ந்தது கோணமோர் சார்பு
வனிதைபால் குடித்தது கண்டு கல்லதாய் வயங்கும்
இனதுக்கின்னுயிரும் முளதேயென வியந்தாள். (உருஎ)

பாண்டுரங்கன்றன்மு கன்றனைப் பார்த்தனளிதழில்
ஈண்டு கொப்புளங் கண்டிதுவும் மதியமென்
றூண்டு நின்று போந்தனள் மனைக்கன்பர் தம்மகத்தில்
வேண்டு விட்டலன வர்மனத்தெய்தினன் விரைந்து உருஅ)

நீயின்றுன் மனையாள் கொடுபால்வர நேர்ந்தாய்
காயும் பால்கொடு வந்தெனைக்குடிப் பித்தாள் கந்தி
வாயுங்கொப்புள மாயினதுலகியன் மறந்து
நேயமென்னிடை வைத்தனையாதலானினையான். (உருகூ)

மயக்கினேனென நாடொறு மென்னிடை வயிர்த்து
நயக்கிலாப் பகையாயெனை வைவது நாளும்
துயக்கிலீ தெரிந்திருந்து மற்றவள் வரத்தொடுத்துக்
கயக்கிறையென வன்பர் சிந்தனை மிக்கலங்கி. (உசாய)

பன்னிதன் முகநோக்கி நீ வெம்மை சால்பாலைப்
பொன்னிறைதனுக் காற்றுறு தளித்தவன் புழுங்க
இன்னல் செய்தனையோ வெனச்சிறாயி நீ றென்றும்
மன்னு கோயிலிற் கீர்த்தனஞ் செய்துறும் வகுப்பில். (உசாக)

பன்னிரண்டி யோசனையனற் பரப்பினை விருந்தை
என்னு மவ்வனத்தாண்டன னென்றனிரவனுக்
கின்னபால் வெம்மை யேற்கிலதாய்க் கொப்புளிமையயில்
முன்னரேரதியவது பொய்யே யாமென மொழிந்தாள். (உசாஉ)

அது பொயென்பதற்கின்று நீர் சென்றறி கென்றுள்
முதுமெயன் பரக்கதற் கொன்று மொழிந்திலர் முடுகி
மதுவுலாந்துழாய் மார்பினன் கோயிலுண் மன்னி
விதுவைவென் முகத்திதழ் வெதும்புறு கொப்புள் கண்டார். (உசுரு)

சாலவுந்துயர் கொண்டனர் விழிகணீர்ததும்ப
ஞாலமுண்டவ னிக்கிது நண்ணிற்றே வென்று
ஓலமுற்றழு திரங்கினர் பற்பலாறனைந்திங்
கேலமற்றிதற்கென் செய்கேனென்றனர் புலம்ப. (உசுச)

ஆயபோதி தழாகிய கொப்புளமாறி
எயகண்டங் கோணிய தின்றுஞ் செவ்வையாகாமல்
மேயதாயது கண்டன் பருள மகிழ்மேவிப்
போயினார் தமதில்லிடைப் பல்வகை போற்றி (உசுரு)

ஹரிதன்றுமமே யனுதினம் பஜிப்பவராகிப்
புரியு நாளொரு நாளிடைச் சாங்கணே புறவம்
மருவினுரவண் மசகங்கண் மொய்ப்பதின் வருந்திப்
பரிவிலாரிவையுணப் பயனுயதே படிவம் (உசுசு)

பிறவுயிர்க்குண வாவதிற்பயன் பிறிதில்லை
அறவு நன்றிது வென்று கொண்டாடினரவற்றைத்
தெறல்செயாதினல் சேர்கிலராகித் தஞ்சிந்தை
பறவை வாகனன் பால்வைத்துப் பஜித்தன ிருந்தார். (உசு)

அதுதெரிந்தன னல்வழிச் செல்பவனுகி
மதுவுலாந்துள வத்தொடை மார்பினன் வந்து
கதுவிநீந்துறு தோகையைக் கைக்கொடு கலந்தும்
கொதுகெலாஞ்செல நிசிமுற்று மோட்டிக் கொண்டிருந்தான். (உசுஅ)

விடிந்தபின் பன்பர் தேருவை மேவினர் விரிநீர்
படிந்துபூசனை யாற்றினர்ப ஜித்தனர் பகல்போய்
முடிந்தபின்றிருக் கோயிலின் முகுந்தனை முன்னி
வடிந்துகண்புனல் வார்தர வணங்கினர் வாழ்த்தி. (உசுக)

அன்றிராவெலாங் கீர்த்தனஞ் செய்து நாலாகத்
துன்றுசாமத்தின் மங்களாரதி செய்து துதித்தார்
நன்றிருக்கமா தேவன் முன்னவன் விடோபாபின்
என்றமக்களில் மூத்தவன் கல்லடைப் பெய்தி. (உஎ0)

வருந்தல்கண்டதற் காவளியாகிய மாதா
திருந்தவேண்டுப சாந்தியோ டௌடதஞ்சேர
அருந்தல்செய்வித் துந்திர்கில தாய்ப்பிணியாகப்
பொருந்த நோக்கவுஞ் சகிக்கில ளாய்மிகப் புலம்பி. (உஎக)

அன்னமெவ் வளவுஞ்செ லாதிம் மகனயர்தல்
உன்னுகின்றில ரொன்பதி மதிமயக் குற்றார்
என்னைசெய்குவே னெனவயன் மனையவ ளிடத்திற்
சொன்ன போதவள் வந்துபார்த் [illegible]னைவர். (உஎஉ)

என்றுவிட்டலன் பஜனைசெய்வதி லியன்றுரோ
அன்றுதொட்டுமக் கெய்தின வின்னலோ டனைத்தும்
நின்றுநீதுய ருறிலென்னை பயனென நிகழ்த்தத்
துன்றுமாவளி யாகிய ஜிஜாயியுஞ் சோர்வாய். (உஎங)

கடுஞ்சினத்தொடு நெறுநெறு வெனப்பல்லைக் கடித்து
வடிஞ்சகள்ளுண்டு வெறிகொண்ட மர்க்கட மதைத்தேள்
சுடுஞ்சினத்தொடு கொட்டிய தெனவயற் றேறுகை
நெடுஞ்சொற் கேட்டுடனி மிர்ந்தனள் கொடுஞ் சொற்கணி ரம்ப. (உஎச)

எனதுநாதனைத் தன்வசப்படுத்தி னனிதன்றிக்
கனநிரம்புமென் குடும்பமுங் கலங்குறக் கண்டான்
மனதில் வஞ்சம்போற் கருநிறக்குள்ள வடிவன்
எனவிகழ்ந்தனள் பலபடி வைதனளிருக்க. (உஎரு)

நீரிறங்கிலதாய் வயிறுப்புத னிரம்பிச்
சோர்வுகொள் சரங்காலொடு நினைவுமுட் சுருங்கித்
தேர்வுறு நிலைமகற் குறவந் நிலைதெரிந்து
சார்வதாகிய கோபமுந் துன்பமுந் தாங்காள். (உஎசு)

மகன் பிழைப்பதில் மடிவதே நிச்சய மெனத்தன்
முகங் கடுத்தனள் பிள்ளையை யீர்த்தவன் முன்போய்
அகந்துணுக்குற வெறிவனென் றதிர்ந்தன ளாகிச்
சகம் பழிப்புற மகற்கொடு கோயின்முன் சார்ந்தாள். (உஎஎ)

பகைவனே யெனத்தனை யெண்ணித்தன் முனைபடர்வாள்
வகைதெரிந்தரி நோக்கினன் மலர்மகள் வதனம்
மிகையி னெய்தியென் மேற்கொணர் மகன்றனை வீசி
அகைவு செய்துயிர் கொல்வளேற் பழியெவர்க்காகும். (உஎஅ)

சொல்லென் செய்வதிவ் வேலையென் றேத்துற சுருண
வல்லவன்முக நோக்கி யெங்கணு நிறைவடிவோய்
அல்லலேனுனக் கிலமு மமைத்தளித் தழிப்பாய்
புல்லிலுன்னருள் விழுமகற் குயிர்பொருந் தாதோ. (உஎகூ)

கங்குல் போக்குறக் கனவி யெண்ணுவ தெனக்கருதி
இங்கு நீயெனைக் கேட்ப தென்னெனு மளவெய்திப்
பொங்கு கோபத்தின் மிக்கவச் சிஜாயிமுன் போந்து
மங்குல் வண்ணன்மேன் மகனைவீ சற்கண்மி வந்தாள். (உஅ0)

மீதுவீசுறே னில்லென வோருரை விளம்ப
மோதுவான்வரு வாள்விறு யம்மொழி முன்னிப்
போதுநிக்கையுஞ் சுற்றையு நோக்கினள் புகல்வ
தேது கல்லலநியாருள ரிங்கென வெண்ணுங்கால். (உஅக)

உலக சுந்தரி யுன்மகன் றனக்கனுகூலம்
நிலவலாயது நீகொண்டு செல்கென நிகழ்த்தக்
குலவுமைந்தனை நோக்கின ளேயெலாங் குறைவாய்
இலகிமிக்கது பசியென மகன்சொல வினிதாய். (உஅஉ

கல்லும் பேசின பிள்ளையும்பேசின கண்டேன்
எல்லுங் கங்குலு மிங்குறு மிவனுக்குப் பழிதான்
புல்லுமென்னுநான் விசுமுனுயிர்தந்து புரந்தான்
செல்லுஞ் செல்லுமென் மகிழ்நனை மயக்கற்குத் தினமும். (உஅங)

இவனுக்கின்னது செய்கிலனே லிவனிரங்கான்
அவனிக்கண்ணிவன் மாயை வல்லானென வறைந்து
கவனித்துத் தனதரும்பெறற் புதல்வற்கைக் கொண்டு
பவனத்செய்தி யூட்டினனூனை யின்பொடு பரிந்து. (உஅச)

இன்னசோர்ந்தன ரன்பர் பாண்டுரங்கனுக் கென்னே
துன்னுறச்சிரமம் புரிந்தனனெனச் சூழ்ந்து
பன்னருந்திருக் கோயிற்குப் பகல்சேவைப் படர்ந்து
நன்னர்நின்றுள பாண்டுரங்கன் பதாரடி, (உஅரு)

சேவைசெய்தனர் கீர்த்தனம் பாடினர் செறிய
ஆவயிற்புகு மொருவர்கங் காறிமவாளர்
தேவையன் பரெவ்வளவு சாயித்தியஞ் செயினும்
யாவையுந் தெரிந்தெழுது வோருடனிசை யிசைப்போர். (உஅசு)

சாங்கணம்மெனு மூரில்வாழொரு வர்சந்தாஜி
ஓங்கும் வாணிகர் வேதியரான மற்றுவரோ
டாங்கு வந்துமெய் யன்பரிற் கலந்து பாடமவர்
நீங்குமூர்தின மிருவரு மன்புள நிரம்ப. (உஅஎ)

பொன் பிறங்கிய மார்பினன் புகழ்துகா ராமர்
பின்பு நின்றிரு வருந்தொடர் கூட்டிசை பேச
அன்பு பின்றள யாவரும் வந்துகேட் டகத்துள்
இன்பு மூந்துறச் சந்ததம் பரவச மெய்த. (உஅஅ)

நாமகீர்த்தனங் கேட்டலி ஞதனு மகிழ்ந்து
சாமநான்கினு மடிக்கடி யன்பரைத் தழுவப்
போம தாயிருள் புலர்தரு போதிலா ரதிசெய்
தேமகிழ்ந்தனர் யாவருந் தம்மிலே கினரால். (உஅகூ)

வேறு.

பின்புருக்குமணியை நோக்கிப் பிள்ளைதன்
அன்பனெ னன்பனுக் கருளல் வேண்டுமால்
இன்புப தேசமென் றியம்பக் கேட்டவப்
பொன்பதி மொழிக்கெதிர் புரிந்து கூறுவாள். (உகூ0)

ஆதியில் வீடண னனும னென்பவர்
சோதி நின்னித வுபதேசத் தூய்மையால்
மேதினி யழியினும் விளிவுறாநிலை
மீதியல் கின்றனர் மெய்ம்மை மேவியே. (உகூக)

அப்படிக்குத் துகா ராமனுகுவான்
ஒப்பறு நின்னருட் குரியனுயினல்
செப்ப மொடினிதுப தேசஞ்செய்கென
மைப்படி நிறத்திரு மாலு நன்றெனு. (உகூஉ)

மாக சுத்த சசமி வியாழ வாரத்தில்
ஆக நித்திரை செயுமன்பர் சொப்பனத்
தேகனத்திரை பாப்பிந்தி ராயணி
வேகநற் றீர்த்தத்தில் விரும்பி யாடியே. (உகூ௩)

மட்டலர் சுகந்தமாய் மாலைகைக்கொடு
விட்டலர்க் கணிசெய மேவு போதிலோர்
முட்டறு மறையவ னொருமுன்வந்தான்
கட்டறு மன்பரங் கவனைக் கண்டனர். (உகூச)

பரவச ராயுளம் பழுத்தவன்பினால்
கரதலத்தொடை யவன்கழுத்தி விட்டனர்
சிரனில னுறப்பணிச் சேவித்தேத்தினர்
வரமறை யவனுள மிகமகிழ்ந்தரோ. (உகூரு)

அன்பர் தஞ்சிரத் திடையங்கை வைத்துநன்
கின்புறச்செவியிற் றன்று மமெய்த்துற
வன்புறவித வுபதேச மேல்வரு
துன்பற வருளினன் பின்னுஞ் சொல்கின் றான் (உகூசு)

இந்தமந்திரந்தனை யிந்நிலத்திலுஞ்
சிந்தனைக்குகந்தவர் தமக்குச் செவ்விதிற்
றந்தருள் குருபரம்பரை தவாமலே
வந்தனை தரச்செய்தி யெனவு மற்றவர். (உகூஎ)

நல்லதேசிக மறையவனை நாடியென்
இல்லமேவிப்ப வித்திரஞ் செய்தியான்றர
வல்லதைச் சமைத்துண்டு மகிழ்கவென்றனர்
சொல்லவவ்வேதியனின்னிறுன்னுவேன். (உகூஅ)

எனக்குணவிற்குக் காற்சேர் நெய்யீதியோ
மனக்கு வப்புறவென மகிழ்ந்து நன்றென்று
கனக்கரு நிறத்தனைக்கடி தழைத்தனர்
மனைக்கு வந்தில்லவள்வதன நோக்கியே. (உகூகூ)

நமதின் மேவினர் மறைநாதர் மற்றவர்
அமுதுணற் காவனவளித்துச் சேரொர்கால்
நிமிர்தர நெய்யுநீ நேர்தியென்றனர்
கமையறு சினமிகீ இக்கணவி கூறுவாள். (௩௱)

இம்மறை வேதிய னெங்குத் தோன்றினன்
மெய்ம்மையா யிவனுக்கு வேண்டு நெய்யொடு
செம்மையா யுணவிற்குத் தக்க சேகரித்
தின்மையால் வருந்தும் யானெங்ஙனீ குவேன் (௩௱க)

பித்தளைப்பாத்திரவகையும் போந்தன
ஒத்தனவிற்றுநாளுதவற் கோடுகள்
மொய்த்தன வன்றிவேறில்லை முந்துவார்
எத்தனை பேர்க்குண வீவதென் செய்கேன். (௩௱உ)

மக்களும் யானுமே வயின்வளர்ப்பது
மிக்க துர்லபமதாய் விளைந்திருக்கவென்
பக்கல்வந் திப்படிப் பலிக்கு நேர்வது
தக்கதோவென மனஞ்சலித் துரப்பினுள். (௬௱௩)

உரப்பது கேட்டவ னுற்றவேதியன்
இரப்பது கிடைப்ப தின்றென்ன வேகினன்
வரப்பறு தவத்துகா ராமர் மந்திரம்
தரப்பெறு நினைவுடன் றும்விழித்தனர். (௬௱௪)

உத்தம குருவெதி ருற்றென் ஜன்மவா
பத்தறக் கடத்தின ரவர்பதத்தினுக்
குத்தக வினவுநெய் யுதவப பெற்றிலேன்
இத்தனையோவென தன்பென் றெண்ணினர். (௬௱௫)

கேசவசைதன்யனெனக் கிளத்தினர்
மாசறு தன்பெய ரும்வகுத்தெனக்
காசறு மிதவுப தேசமுந் தந்தார்
ஏசற வெனக்கவி ஞூன்றியம்பினர். (௬௱௬)

உயர்வற வுயர்ந்தவா னந்தமுற்றரி
பெயர்பல வோதினர் பின்புதம்வயின்
அயர்வறு மன்புகொண் டடைகின்றார்கட்கு
மயர்வற வம்மறை வகுத்து வந்தனர். (௬௱௭)

இன்னமு மம்மறை யவரிடத்திலே
நன்னயத் தொடுபெற நாடுவோர்களுக்
கன்னவர் தம்முருக் கொண்டடைந்துளம்
மன்னுறு கனவிடை வழங்கி வாய்ந்துளார். (௬௱௮)

வேறு.

பின்புதம்மனை யாள்களுவிநு நன்மைபேசலில் பெற்றியாள்
என்பதாலிவ ளைத்துறந்திடி லின்பமெய்துவ மில்லையேல்
பொன்புமானடி யார்திறத்தப ராதமாதல் பொருந்துமென்
றன்ப ரவ்வயி னின்றுநீங்கியோ ரரணியத்துற லாயினர். (௬௱௯)

பகலெலாம்ஹரி பஜனைசெய்தன ராகியேபகல் பட்டபின்
நிகரிலானுறை கோயிலெய்தியோர் யாமநான்கு நிரம்பவே
தகவதாகிய கீர்த்தனஞ்செய்து தபனனீ டுதயத்திலே
சுகமுலாநதி வந்துதோய்ந்துறு சோலையெய்துவர் நாடொறும். (௬௱௰)

யாவராயினு முணவளித்திடி லதனிலேயிறை யயில்வதாய்
மேவலாயினர் மதியிரண்டு மனைக்கண்மேவுத லின்றியே
நோவலானறி ஜாயியிங்கய லாளொருத்தியை நோக்கியென்
பாவமோபதி பித்துறீஇப் பதியெய்தியும் முறைபதிபுகார். (௬௱௰௧)

திங்களான திரண்டுசென்றுமென் வதன நோக்கிலர் திருமியும்
எங்களின்மையை யிறையுமெண்ணில ரோனுமெம்மொடு முன்புபோல்
தங்கலாவது மில்லையிற்க ணெனத்தயங்கினள் சாற்றினள்
அங்கணோர்தின மிந்திராயணி யனுகினள்புன லுக்கரோ. (௬௱௰௨)

நீருண் மூழ்கினர் நின்றதன்பதி தன்னைநோக்கின ணீவிரொன்
சாருமாத மிரண்டதாகியும் வந்துசார்கிலிர் சார்மனை
நேரும் யானுமென் மக்களும்பசி நிமிர நும்வயி னிறைவதோ
வாரும் யாஞ்செலும் வகைதனைச்சொலு மென்றனர்மடி பற்றினள். (௫௧௩)

பற்றவன்பரு மக்குறுந்துணை பாண்டுரங்க னுடன்பொனும்
பெற்றதந்தையொ டன்னையென்று பிறங்குபத்தி பெருக்கினால்
உற்றநுங்கட மக்குநேர்குறை யொன்றுமின்றென வோதினார்
மற்றநங்கையு நன்றுநீர்மனை வாருமென்ன வழைத்தனள். (௫௧௪)

யானுரைத்த படிக்கு நீயினி வாவெனென்றொரு சூளுறிற்
றானுனக்கியை வாகவெய்துவனென்ன மற்றவள் சாற்றினள்
கோனுளப்படி மனைவரக்கொடு போயினாளவர் கொண்டலை
மானுமெய்த்திரு மாறனாமம் வழுத்தியுற்றனர் மாறிலார். (௫௧௫)

முன்றிலார் துளவப்பொழிற் கணிருந்து கங்குன் மொழிந்திடு
கின்றமாதவனாமமேவிய கீர்த்தனம் வினவற்கவண்
துன்றநேகரையுஞ் சிஜாயி கடுத்து மற்றிவர் தொடர்வதென்
என்றன்மாமனை யென்றுசீறுமுனன்பர் கண்டிதமே சொல்வார். (௫௧௬)

ஹரிதனாமம் வினவவென் வயினடையு மற்றிவராலுனக்
குரியவொண்பொருள் குறைவதென்ன வருவதேநல மெனவுனாய்
பெரிதுசீறினை டனையின்வேலை விடுத்துவந்தின பேசினாய்
அரிவைநிற்கிது தகுவதன்றென வவளடங்கிய மைந்தனள் (௫௧௭)

இன்னதாகலி னங்கொருத்தரு மேகவஞ்சியிருந்தனர்
மன்னுகின்ற ஜிஜாயி யாலதறிந்தவன் பர்தமனைவியை
முன்னியென்னரு கெய்தியானினி மொழியுமாலரி கீர்த்தனம்
தன்னிலுன்மன மொன்றிநீவின வென்றுரைத்தனர் தையலுன். (௫௧௮)

இவருரைப்படி வினவுறுதுறில் யான்முனோதிய வாசகம்
தவறுமென்றரு கெய்தமற்றவ டனிமைகண்டுறு தையலே
எவமதேதரு மிவ்வுடற்றிரமில்லை யாதலிருளெலாம்
அவமதாகவுறுமலுள்ளதனைத்திலும் விழைவற்றுநீ. (௫௧௯)

மக்களுந்நம தென்றுளத்தின் மதித்திடாம லனைத்துமால்
பக்கலாவ தெனத்துணிந்தொரு பாண்டுரங்கனை யேபிதாத்
தக்கதாய்குரு தெய்வமென்று சலிப்பின்முக்கரணங்களும்
ஒக்கநிற் கவவன்சரண்டனை யொழியுறுதுள முன்னியே. (௫௨௰)

வரிலிகத்திலுனக்குறும் புகழ்மறு பிறப்பும் வராதுமாம்
பெரியமெய்ப்பத மெய்துமாதலி னினியுணவுடை பேணியிங்
கிரிவலக்கணு றேலெகாதசி யின்றுநாளைது வாதசிப்
பரிதிபற்றற லிங்கிராயணி படிதலாய் மனைபற்றியே. (௫௨௧)

உள்ள சொத்துகள்யாவு மாலடியார் பெறும்படியுதவிநம்
வள்ளல் விட்டலனைக்கருத்தின் மதித்திருத்தி வலிந்தெனத்
தெள்ளு மிப்பொருள் பத்தொடொன்றுறு செய்யுளிற் றெரியச்செய்தார்
எள்ளில் பூரணபோத மென்றதனுக்கு நாமமியைந்ததே. (௫௨௨)

அதைவிஞ்வினரனைவரும் விரைவாய் விரக்தியடைந்துடன்
சிதைவிலாமதி நலமுறும்படி செய்வதாம தனைச்சிஜாய்
இதையமேவவுரைத்து மாறனை யேத்தியாபதி செய்தனர்
உதையமாகு முனதைவிஞ்யினருக்கு ஞானமுலாயதே. (௯௨௩)

இறைவிரக்தி பிறந்து வைகறை யிந்திராயணியாடிமா
மறைகளைத் தெரிவோரை மாமனை வரவழைத்துள பொருளெலாம்
நிறைவுளத்தொ டளித்துவிட்டொரு நெகிழ் பொளற்கலை நீர்பழந்
துறையு ளூற்றபி னிடையுடுத்திட வுளிவெயிற்க ணுலர்த்தினுள். (௯௨௪)

அன்னவேலையி லமுதுகித்தவ ளொருபுலச்சி யுருக்கொடங்
கின்னதிருமெ யன்பர்பக்க லெதிர்ந்தொர் வஸ்திர மீதிரேல்
நன்னராகிய புண்ணியம்பெரி தெய்து நம்வயி னல்கெனச்
சொன்னபோதி லெழுந்துபோயுலர் துகில்கொ டுத்தனர் சொல்லுவார். (௯௨௫)

நானளித்தன னென்றுநீபிறர் தெரியுமாறு நவின்றிடேல்
மீனெனத்தகு விழியினுய்வினா வாகியேகென விட்டனர்
பானணித்துள மக்கள்கண்டித மம்மனைக்கது பகரலும்
கோனுரைத்த தயர்ந்துமாயை குலாவுகோப மிருந்துளாள். (௯௨௬)

எனது வல்லவ ரொன்றின்மேவ வழைத்துவந்தவ ரிசைவுறப்
பனல்விஞ்வியோர் கரியனாகிய பாவிபாத நினைக்குமுன்
மனஇன்மாளிகை யளதெலாந்துடை பட்டதாயத மாவடை
உனலின் மேவுறு மிடியெலாமென வுருரைத்துள தன்மையே. (௯௨௭)

என்னிடத்துள தாயதென்றொரு பெரியகல்லை யெடுத்துநான்
முன்னுகாலை முறிப்பனென்றுடன் முனிவுகொண்டதின் மோதவே
உன்னி யெய்தினள் கோயிலுக்குமு னுறலும்விட்டல னுடலெலாம்
துன்னடிக்குட னுருநுறந்துனை விக்குநேரிது சொல்லுவான். (௯௨௮)

என்செய்வேனிவள் கல்லெடுத்தென திருபதத்திலு மிடவெதற்
கஞ்சுறுதிவ ணெய்துகின்றன ளறிதியென்னலு மலருளாள்
வெஞ்சினங்கொடு மோதவஞ்சிலள் மேவுகின்றதை நோக்கிநீ
நஞ்சின் வெஞ்சின முடனெனுதனை நலிகுவான்வர லேதென. (௯௨௯)

வினவிவந்த ஜிஜாயிராத்திரி மேவுமென்பதி விரகுடன்
சொனதிருவிறை யுன்னினேனிவ னடியைவைகறை துன்னுமுன்
எனதிலுள்ளவெ லாமழிந்ததொர் மாறுமென்கலை யும்மிலா
தினல் விளைந்தத னுதினமெண்ணுறில் யாவைமேவகி லாதவே. (௯௩௰)

ஆதலாலிவ னடிகளைச்சிதை வாக்கவெய்தின னென்னலும்
போதுலாவிய மங்கைநன்கு பொருந்துன் வாழ்வை நினைத்துநீ
நோதன்மேவலை யென்றுபைம்பொன் விராகனாறொரு கச்சுநன்
மேதகுங்கலை யுங்கைதந் தனள்மேவு மின்பொடு கொண்டனள். (௯௩௧)

சந்தமென்கலை தனைபுனைந்தினள் சாமிகோயிலை [illegible]
முந்தி [illegible]
திந்தமெய் [illegible]
வந்தவாறு [illegible] (௯௩௨)

என்னிடத்தினி தன்புகொண்டிவ ணெய்திஞேன் முடிவெய்துமேல்
உன்னிடத்தினி தன்புளேனுமு யேன்முடிப்பெ னென்னுயிர்மலர்ப்
பொன்னிடத்தொளிர் மணிதிகழ்ந்துள பொற்ப சிற்பரபூரணு
மின்னிடத்திகழ் சக்கரக்கர வேலையிற்றுயில் விண்ணவா. (ருசரு)

என்றுமுன்படியே விரும்பியி யம்பலாயினர் கீர்த்தனம்
துன்று வாயிலின் வந்தடர்ந்து துலுக்கவீர ரகத்துளோர்
பொன்றுமாவகை செயிலலாது பொருந்துவோரிறை காட்டிடார்
இன்றுமுன்பென வார்க்கவிட்டல னெய்திஞனர சுருவொடே. (ருசச)

வெளியில்வந்து படாணிகட்குமுன் விரவுகின்ற சிவாஜியான்
ஒளிவிளங்குமெ னூர்செல்வேனென வோதியோர்பரி யேறியே.
களிதுளங்கு கடுப்பினங் கவர்காண வாசி கடாவிஞன்.
விளிவு கொண்டு தொடர்ந்து சென்றனர் வீரரத்தனை பேருமே. (ருசரு)

தொடரு வோரையு முன்பு செல்கிற தோன்ற றன்னையு நோக்கியூர்
அடருவோர் பலரா லகப்படலாகி மாள்வன வரசெனு
இடரின் மூழ்கினர் பற்று பற்றென வேகுகின்றவர் யாவரும்
படருமித்தனை பேரிலே யொருவன் கைபட்டிலனேவெனு. (ருசசு)

விரைவு கொண்டு தொடர்ந்து சென்று டனேக மாட்டிலர் விட்டனர்
கரையறுங்களை கொண்டு நின்றனர் கண்டு மற்றிவர் களையமால்
புரையுறுங் களையாற விட்டிடில் பொருள தன்றென முன்புநேர்
உரைவழங்கினன் வரவறிந்தன ருற்றுடன்றனர் பற்றவே. (ருசஎ)

கிட்டுபோதுற முட்களெங்கு நெருங்கியே கெழுமுற்றகான்
நெட்டுறும் பரல் பட்டழன்றுறு நிலவரைப்பிலு நெடிதவர்
கெட்டு ழன்றிடவேகடுப் புடனேகிஞ னிவர்கின்றமா
பட்டுருண்டிட வுடல் சிதைந்தனர் பட்டுமுண்மரமோதவே. (சசஅ)

கால்களிற்றனர் கைகளிற்றனர் கண்டமிற்றனர் கைக்கொளும்
வேல்களிற்றனர் வாள்களிற்றனர் வெரிநுமிற்றனர் மிக்கவெங்
கோல்களிற்றனர் குந்தமிற்றனர் கொண்டகைக் கடிவாளநீள்
வால்களிற்றன பரியொடுற்றனர் மண்ணிலிவ்வகை வயவரே. (ருசகூ)

இன்னமும் பலதுன்பமெய்தின ரிருளிலே வழிதெரிவுறு
தன்னரஞ் சிடவங்கு விட்டரியன்பர் பக்கலடைந்திவண்
டுன்னரும் படைவீரர் யாவர்களுந் தொலைந்தனர் சூழ்கலார்
நின்னருங்கவி கூறுகென்று நிகழ்த்திஞ னடமாடிஞன். (ருருõ)

ஆடுகின்ற வனறைதருஞ் சொலையன்பர் கேட்டக மகிழ்வுடன்
கூடுகின்ற சவைக்கணுற்றதோர் கோனைநோக்கினர் குறையெலாம்
ஓடுகின்றதை யுற்றதாலென வுண்மை யென்று சிவாஜியும்
நீடுகின்ற களிப்பினேடுறெ நேயவன் பருநிறையவே. (ருருக)

புலரிநேருறு மளவுமாலரி புகழ் நிகழ்த்தின ராயுடன்
குலவுமாரதிசெய்த பின்னுறுகோ னெழுந்து வணங்கியே
கலகமின்றருள் விடையுடன் பிரசாதமுங் கொடுகடுகியூர்
செலநினைந்தெழு போதுகண்டவர் செப்புகின்றனர் தெரியவே. (ருருஉ)

அரசனின்னை யடர்க்கவந்த படாணிகட்கு மினசுவமேல்
விரசியேகினை நிற்றொடர்ந்தவ வீரர்போய தெவ்விதமிவண்
பரசுகீர்த்தனம் வினவவந்த தெவ்விதமெமக்கது பகரெனப்
புரசையானைவி ளுறைப்பது புதுமையென்றரி செயலென (௯௫௩)

ஓதிமாலடி யுட்கொளன் பரையுறவியந்து புகழ்ந்துகொண்
டாதிமாமுறைப் பதற்கரிதா மெனப்பெரு கன்புடன்
நீதிசேர்தன நார்புகுந்து நிலைத்திருந்தன னெடியகான்
பாதிராவிடை பின்றொடர்ந்த படாணிவீரர்கள் பதறினர். (௯௫௪)

பலருமெத்தினமும் படாதனபட்டுழன்று பயத்துடன்
செலவனுப்பின கோனிடத்துள செப்பினர் பதிசென்றுளார்
அலகிலன்ப ரிடத்தடைந்தது மங்குநேரதி சயமுநன்
கிலகவுள்ளிடை யெண்ணி யெண்ணியெழிற் சிவாஜியுமிதுசெய்வான். (௯௫௫)

வேறு

பிரிவிலன்பர்சம தருமைகண்டு பொருள் பெரிதுகொண்டு தரில வைபெறார்
திரிவிலுண்பொருள் கடரிவிசைந்து கொள்வர் தெரிவமென்று பொதிசெறியநெ
பெரியருண்டை முதுகுறநிறைந் துருவுபிறிது கொண்டவர் பிறங்குமூர் [ல்
உரியநன்பவன மணுகிநெற் பொதியையு வண்விழுத்திய வரருகுநீஇ. (௯௫௬)

அடிவணங்கிநு மதமுதினுக்கிது வமைக்கவென்று மிகுமன்புடன்
நெடிதிரந்து சொலிய கலவன் பரர செனவறிந்திதை நெகிழ்ப்புறில்
ஒடிவிலன்பி னுளநெடிதனுங்கு மெனவொன்று மோதுகிலராகியே
கடிதுதந்துலைவி வரவழைத்தவர் கருத்திணங்குவகை கழறுவார். (௯௫௭)

நின்றுநீதிகொள் சிவாஜியா மரசனுய்த்த செந்நெலிதி னீநினக்
கின்றுவேண் டுவன கொண்டுமிக்கதை யிரப்பவர்க்குதவி நாளையென்
றொன்றும்வேண்ட கிலையாயிருத்தி யெனவோத மற்றவ னுரப்பியே
கன்றுகின்ற சினமோடு கைதலைபுடைத்து வெம்பியிது கழறுவாள். (௯௫௮)

இன்றயாசித மதாகிவந்ததனை யானெனம்மக்களுட னுண்பதற்
கொன்ற நீசிசைகிலீர் பிராமணர்க ளுண்ண நல்குகென வோதினீர்
நன்றதேநு மதுபுந்தி யென்றவை யனைத்து நன்மனை புகப்பெய்தாள்
அன்றுமற்றொரு தினத்திலன்பரரி கீர்த்தனஞ்செய் துறுமமைதியில். (௯௫௯)

தாளம் வீணை மிருதங்க மின்னிசை தரப்புகன்றுறு தறனிலவர்
நீளநாளும் வருவனையல் விற்பவனினைந்து மேவுறுமந் நேரினில்
லாளவன்றனை விலக்கிநோயின் மகனரிது தப்பலுயிராதலிந்
நாளவண்செலலை யொழிகவென்னவ வணவிலலைச்சிறிதும் வினவுறான். (௯௬௰)

மேவியன்பர்புரி கர்தையிற்சுக மிருந்து கேட்டுறும வேளையில்
ஆவிபோயினது குழவியில்விலனை யலறியோவென வரற்றியங்
கோவிறுன்பமொடு செத்த பிள்ளையை யுரத்தின் மீதுற வெடுத்தனைத்
தேவியன்கதை செயுஞ்சவைக்கணடு வெய்திமண்ணுற விழுத்தியே. (௯௬௧)

அன்பர்[illegible] நோக்கி நும்மிலெனருங் குழந்தையிற லாயதெம்
முன்புபோரி[illegible] ம்விறுவுகிலர் மொழியு மிக்கள[illegible] முறைதப
இன்புபோலெனது பதிமயங்குற வியற்றியிக்கதை விளைவிட
வன்புசெய்ததினி றந்ததென்குழவி யென்றுவன்பழி சுமத்தினாள். (௯௬௨)

அன்னவாறவ ளுரைத்தபோதி லரிகதை தடைப்படு தலாயதங்
குன்னலாய்வினவு வோரெலாமுள முயங்கி ஞாறுசு வைத்ததாம்
அன்னமுண் பொழுதில் மண் விழுந்ததென வவளைநோக்கி யரிகதைசெய்து
மன்னலானவிடை நீ பிணங்கொடுவரத்தகாதென வழுத்துவார் (௬௬௩)

இங்குநீ யிதனை யிட்டதாற் பயனெனுகுமிக் கதையியற்றுவோர்
மங்கலான வுயிர் வரவியற்றுமொர் மருந்துவைத் துறுகிறுர்கொலோ
தங்குகிற் கிலைபொபோ பயித்தியமுயங்கு தையலென வன்பர்கண்
டங்குறைந்தவொலார் முகங்களையுநோக்கி யொன்றுசொலலாயினர். (௬௬௪)

ஹரிதனுமவமுதிற்கு மற்றையமு தானதெச்சிலென லாகுமால்
தெரிகிலாரமு துணிந்திராதி பல தேவர் நாமவ முதின்சிறப்
புரியநீரது தெரிந்து தேற லுறிலோது மின்விடல நாமமிங்
கிரியல் போனவுயிர் வருமெனச் சொலலுநாமம் யாவருமியம்பினர். (௬௬௫)

ஆயநாமவொலியான் மிர்தங்க முதலறிவிலா வெவையுமவ்வகைத்
தேயவாய்விடல நாமமோத வெதிர்யாவும் விட்டலன துருவமாய்
மேயபோதிலுயிர் பெற்றெழுந்தது மடிந்தபிள்ளையும விட்டலன்
தூயநாம மொழியத் தெரிந்தெவரு மதிசயித்து மகிழ்துன்னினர். (௬௬௬)

வாமநன் பெயரையோதி யங்கமரும் வனையில் விற்பவளுமகனெழீஇ
நாமமோது தலுணர்ந்து மிக்கமகிழ் நனுகியன்பரடி நண்ணிநன்
னேமமோடுடன் வணங்கியன்பொடெதிர் நின்று நல்லறிவிலேன் செயும்
தோமதைக்கமை செய்தருளுகென்று மகனைச்சுமந்து மனைதுன்னினுள். ௬௬௭

ஈதுகண்டவரெலாம் வியந்தரி தனுமமே யமுதின் மிக்கதென்
ஞேதுகின்றவர்களாகி நாமவலியுணருமன்பரை வணங்கிறர்
ஏதுமக்கரிய தென்று தோத்திரமியம்ப வன்பர் திருமாலடிப்
போது போற்றுத லொடாரதிச்செயல் புரிந்திருந்தனர் பொருந்தவே. (௬௬௮)

இன்னதன்மை யவரினையில் பத்தியினதுண்மை கண்டு தினமெழிலியை
அன்னவண்ணனவர் தம்மொடன்றுமுதல முதுசெய்து வரலாயினன்
நன்னரின்னவண நாரணன் விரவி நன்கயின்று வரனுடெலாம்
பன்னலான பிரசித்தராகிமிகு புகழ்படைத்தனர் பராவவே. (௬௬௯)

எஞ்சில் சிஞ்சுவடி யென்னு மூரிடையிருந்த வேதியரெலார்களும்
விஞ்சுமன்பர் புகழ்வின வியாமொருவி நாயகன்றனது பாசனை
அஞ்சு நேமமுடனனுசரித்து வரலாயினே மதில்வி நாயகன்
நெஞ்சிரங்கி வெளியாகவில்லையொளி நிறநிரம்புருவ நின்மலன். (௬௭௰)

சீலமேது மிலையான சாதிவரு சிறியனேடு முணல் செய்வனே
ஞாலமானதுரை செயினு நாமதனை நம்பியுண்மை யெனலாவதோ
ஏல நாமவனை வரவழைத்தறிது மென்ற வேதியர் கடலைவனும்
கோலமே வியவனங்கொராளொடு குறித்து மேவுறவுணர்த்துவான். (௬௭௧)

யாமெலோருநுமை நோக்குறக் கருதினே மெனக்கழறியேதுகா
ராமனைக்கடிது கூவிமேவென நவின்றனுப்பினனயந்துசிந்
தாமணிப்பன வனுய்த்தவாள் வருமுனே தெரிந்தனர் சழக்கிலா
நேமநீ டியமெயன்பர் சிஞ்சுவடியூர் குறித்து நெறிமேவினர். (௬௭௨)

விரைவின் மேவுறுமவாள் வழிக்கணெதிர் மேவு மன்பரை.வியந்துகண்
டுரைசெய்தானறியவுற்ற செய்கைதனை யன்பர் நன்றென வுரைத்துடன்
வரைவிலூர் வயினடைந் தழைத்துளவ மறையவன் பதியுள் வந்தனர்
புரையில் மற்றை யவனீரின் மூழ்கியியல் பூசை செய்புரை பொருந்தியே ௧௭௩

மானசத்தினியல் பூசைசெய் பொழுது மருவுறுந் தனது நந்தனம்
தானசுத்த முறலால சுத்தமிலதாக நீ நனிசமைத்திலாய்
எனெனப் பணியி யற்றுவோன் வயினெறுப்பவேகின மனந்தனைக்
கூனலற்றுற நிறீஇவி நாயகனதுரிய பூசைகுறைவற முடீஇ. (௧௭௪)

வெளியில் வந்தவுட னன்பர் கண்டினிதின் மேவு மஞ்சலி விளைத்தலும்
தெளியவொன்றினவ னவரையெப்பொழுது சேர்ந்ததிங் கெனவினவினன்
களிகொளன் பரக வயினிருந்து கணபதியைமுன்னலுறு காலைநீர்
சுளிவுகொண்டு மலரடவி சென்றபொழுதி வணடைந்தனனெனசசொனர். ()

வினவுவேதியன் வியந்து மற்றிவரை விபுலை மெச்சுவது மெய்யெனு
வனகிரம்பு மணிமார்பன் மற்றிவரோடினிதருந்துவது மாத்திரம்
நனரறிந்து கொளல்வேண்டு மென்றுமறை நவிலு நாவரது பந்தியின்
முனரருந்தொர் கலமிடலு மன்பர் முரஹரியு மென்றுடன்முயங்கியே.(௧௭௬)

உண்ணவெய்துவன வற்குமோரிலை பரப்புமின் னெனவுரைத்தனர்
அண்ணலுக்கு மறையோர்க ளோரிலை பரப்பியன்னவரை நோக்கிநீ
நண்ணுறு ஜாதி யுமிழ்ந்த தொள்ளி திலைசிலமுந் தவறுநாடிலுன்
பண்ணடைந் தரியெவா றருந்துவ னெனக் கடிந்தி வுரை கழறினர். (௧௭௭)

சிலமுந்தவறில் ஜாதியுங் கொடி சிறந்து ஸ்ரீதரனைநம்வசத்
தேலவென்றுத லொனுது நாடொறு மியன்ற சித்தமிகு சுத்தியின்
பாலதாக நிவொழிதலின்றிவரு பத்தியிற் புகுவன் விட்டலன்
நாலறிந்தவர்களேயெனச்சொல நுநவல்வதோர்துமொனநொடிமுயே (௧௭௮)

இலைபரப்பி யருசுவையி னுண்டியிட வடிவு காணும் வகையின்றியே
நிலைகுறைத்தனுறு போனகத்தை யவர் நெடிது கண்டு நிஜமெனவுணர்ந்
துலையொழுக்கமுள ஜாதியீனன் வயினுலக முண்டவரி யுண்பனேல்
தலைமை பெற்றகுல சீலராகமது சார்பு சார்கிலனேறைவங்கரன். (௧௭௯)

என்று தங்குணிலெய் செருக்கு மிகவெய்துமெளவிய மொடைங்கரன்
துன்றுதம் மொழிவெண்ணி யவ்வயினடைந்து தோத்திர மிகச்சொலி
ஒன்றுமின்றிலது கண்டு நாணி ஹரியன்பர் மேவும் வயினுற்றுநீ
நன்றுமாலென வழைத்தி யைங்கரனையுண்ண வென்றுடனவின்றனர். (௧௮௦)

அன்பரன்னது வினவி நன்றென வமைந்து சற்றினி திருந்தனர்
முன்பு துன்றுமறை யோரெனிவர வழைத்திலாயெனலு மூடிகத்
தின்பினேறு மவன் விக்ரகத்திலிலை யிந்தவேளை கடலெய்தினன்
துன்பமேவொரு வனெய்துறுந்துயர் தொலைக்க நீர் பொறுமினென்று பின். ()

வந்து விக்கிரகமேவி நின்றவொர் மருப்பினனிலை தெரிந்தவற்
குந்து தோத்திரமியம்ப விட்டவிலையுற்று மற்றைய முதுண்டனன்
தந்தி மாவதனனன்றருந்துவது தனையறிந்து கொண்மினென்றனர்
முந்து மெய்யடியரிலையிலோதன முறக்குறைந்துறுதன் முன்னினர். (௧௮௨

முன்னியையங்கர னுறைந்தகோயிலிடை முந்திவஸ்திர நனைந்துறத்
துன்னல்கண்டிதென மாயமென்றதிச யித்துமுற்றுநனை தூசினிர்
தன்னையங்கைகொ டுறப்பிழிந்திது சமுத்திரத்தினது ஜலமெனு
மன்னும் வாயிலதை யூற்றியோர்ந்துவெளிவந்துளைத்தவனைநோக்கியே. ௬௮௩

இன்னதெய்வரக சியமுணக்குவெளி யாயதெய்வித மெனுவினு
அன்னவேதியனை நோக்கியன்பனொடு யாண்டபாண்டுரங்க னருளினன்
நன்ன ரோர்ந்தன னெனப்பிராமணர்க னன்றுநன்றுதுகா ராமநீ
சொன்ன சோதிபிர மாதிகட்குமறி வரிதுநிற்கெளிது துன்னலே. (௬௮௪)

ஆதலாலுனது பத்தியைத்தெரியி லளவிலுன்பெருமை கட்குநேர்
ஓதலாவதினி யொன்றுமின்றெம தொழுக்கமுங் குலமுமுன்னியாம்
மேதகுங்கருவ முற்றுநன்பய னடைந்திலோமென விளம்பினர்
நோதலேதுமில ரானவன்பரி கதையநாளவனு வன்றுபின் (௬௮௫)

காலையேக விடைகேட்க வின்னமொருகா லிவண்புகுதல் கருதுசென்
றேலையேயு மறையோ ருரைக்க நலதென்ன வுத்தம ருரைத்துபின்
வேலைமேவுபதி யருகிலோர்கழை விளைத்து விற்பவன் விரும்பியே
மாலையேநினையு மன்புகொண்டு வருவானை நோக்கினன் வணங்கினான். (௬௮௬)

சாமியென்குடிசை மேவியன்னது தனைப்பவித்திர மியற்றிநீர்
போமினென்றுமிக வேண்டவன்பர்நல தென்றவன் குடிசை புக்கபோ
தேமிகுங்களி கொடங்கொ ராசனம் விரித்திருத்தியெளி யேனிடைத்
தோமினீர்புகுத வெத்தவஞ் செய்துளனென்று மிக்கதுதி சொல்லினான். ( )

பரமவின்பரச மனுதினம் பருகுபண் பருக்குவிளை கன்னலின்
இரதமும்பருக வன்பினீயவவ ரிச்சைமற்றதி லிலாயினும்
தரநயந்தவவ னன்புகண்டது தனைக்குடித்து மகிழ்தாக்கினர்
விரவுமன்பின னோர்கட்டு வேழமனை மேவுமக்கள்பெற நல்கெனு. (௬௮௮)

வேண்டிநல்கின னதைத்தடாது புயமேற்கொடோர் புகுதமேவுபோ
தாண்டுகண்டுவிளை யாடுபாலரனை வோருமீகென வடுத்தடுத்
தீண்டுகின்றவர் களுக்கெலாமிலை யெனுமலீந்து வரமிக்கதோர்
நீண்டகன்னல்கொடு மேவினார்பதியி னிசழ்வெலா முணர் ஜிஜாயிதான். ( )

ஒருசுமைக்கழையி லொன்றுதானேமிக வூற்றதென்று நனிசீறியே
தருகரும்பவர் கரத்தினின்று மெதிர்தன் கரங்கொடு பறித்தனள்
வெருவுறும்படி யதைக்கொடோங்கி வெரிநமீ தடித்தனள் விழுந்ததீழ்
இருகுறுந்துணி யிருந்ததோர் துணிகை யிறுவதாகிமனை யெய்தினேர். (௬௯௦)

கண்டுகோபமில ராகியேமனை விகடுமை கொண்டமுக நோக்கிநீ
கொண்டுநின்ற துணியொன்றுனக் கவனிகுறுகி ரண்டுதுணி தம்மிலொன்
றண்டுமெற்கொர்துணி மக்களுக்கென வமைத்தல் செய்தன னம்விட்டலன்
உண்டுண்மேவு மகிழென் றுரைத்தன ருரைத்ததுட்கொடு ஜிஜாயியே. (௬௯௧)

உலகின்மேவும் விவகாரம் யாவையு மொழித்து வெட்கமு மொழித்தினைத்
திலகுசாந்தமுட னெய்தலற் புதமெனத் தெளிந்தின குணத்தொடேய்
வலவர்தம்மைய நியாயமாய் முதுகின்மோதினே னிதிலென்வரு மோவென்
றலமருந்துயர் கொடன் பரைப்பிழை பொறுக்கவென்றடி வணங்கினாள்.

வேறு

நேசமிக நாயகர்க்கு நெடிதுதினந் தோறுமிகு
பூசனைசெய் திருநாளிற் புட்பவதி யாயினர்கள்
காசிபாசிரதிகங் காவென்று மூவர்களும்
மாசின்மணக் குரியவராய் வளர்தல்கண்டு மாதாவும். (௬௯௩)

மனம்வருந்தி நாயகரை நோக்கிவது வைக்கிசைந்த
கனம்பொருந்து புதல்விகட்குக் கலியாணம் புரிந்தருளா
தினைந்திலிர்வா ளாவிருத்த லீதியோ நிரப்புமெனப்
புனஞ்செறிபைந் துளவனடி போற்று மன்பர் புந்திகொண்டு. (௬௯௪)

புறம்போந்து தமது சுஜாதியிற் பிறந்த புத்திரரிற்
சிறந்தோங்கு மணம்புரியத் தகுந்தவர் மூவரைத்தேடி
அறஞ்சேர்ந்த தமதுமனைக் கழைத்துவந்தங் குறவிருத்தி
நிறந்தேங்கு மறையவரு முறமணத்தை நிரப்பினராய். (௬௯௫)

பாலொடன்னந் தம்பதிக ளருந்தும்வகை யப்பகலில்
ஏலவிட்டு வைத்திருந்தா ரினையசெய்கை மணமகளோ
மேலளித்த தாய்தந்தை மாரறிந்து நமையினொ
சாலமணம் புரிந்ததென்ன தகவென்று மறுதினத்தில். (௬௯௬)

வரிசையுடன் மனைக்குவந்து மணம்புரியும் வகையிலொன்றும்
துரிசதிலா தொருநான்கு நாட்சடங்குந் தொகவியற்றி
கரிச றத்தம் பதிகளைத்தம் மனைக்கழைத்துக் கொடுகலந்தார்
ஹரிசௌரி திருநாம மறைந்துகொட ன்பருமிருந்தார். (௬௯௭)

வேறு.

பீடபர கணமென்னு மூரிலுறு மொருவேதி யன்பிறழ்வில் பண்டரியிலே
நீடவளர் தேவகிதன் மாமதலை கோயிலிடை நேயமுடனே மேவினேன்
ஆடரவிலேகடன மாடமலனேயிகப ரச்சுகமெனக் கருளுகென்
றீடமரடத்தினுட லைந்திருபகற்பொழுது மூவிலதிருந்தனனரோ. (௬௯௮)

ஐந்திருபகற்பொழு தகன்றிடவிடோபா வன்கனவில் வந்தரிதினை
ளிந்தியென முந்துபதி யேகியமர் ஞானபதி யின்கணில வன்புறநியேல்
முந்துமவர் தந்திர முறைப்பனென வோதிடலு முன்னின னிந்தியெனுமூர்
வந்துறு சமாதிமு னிருந்தன னிராறுதின மடையிலது திடமுடனரோ. (௬௯௯)

அன்னவன வாறுறதி யாயுணவிலாமலமர் கின்றதை யறிந்தருசாய்
இன்னவ னினைத்தபடி யெய்தலரிதாரும்விதி யில்லையென வேயினையிலாப்
பின்னமறு ஞானபதி யன்னவனுடைக்கன வெதிர்ந்தனர் பிராமணனேநீ
நன்னர்மிகுதேகுவெனுமூரில்வளரன்பரிடை நண்ணிநினைவைச்சொல்லுதியேல்.

வேறு.

அத்துகா ராமருன் னகத்துளுன்னலைச்
சித்தமாய் முடிப்பரீ சேறியென்றனர்
வித்தகம் வேண்டிய வேதியன்விழித்
துத்தன துள்ளத்தி லுரைத்த தோர்ந்தனன். (௭௱௧)

சூத்திரன் றன்வயிற் றுன்னிற்றேமறை
வாய்த்திக பரச்சுகம் வழங்க வல்லனோ
எத்துணா னெசரிங் கியம்பிற் றென்னெனு
மாத்தளர் வொடுவந்தான் மன்னுதேகுவே.. (௭௱௨)

வந்துமெய்யன்பரைக் கண்டுமாறிலார்
முந்துமுன் னடந்தவை மொழியக்கேட்டவர்
மைந்துறு பகடுமா மறைசொல் வித்துமேல்
நந்துறு சுவரொதிர் நடக்கச்செய்தவர். (சா௩)

செயற்கருங் காரிய மென்னிற் சேர்வதோ
நயத்தகு மிதுவென வியப்பு நண்ணியே
மயற்கறை கடந்தவ ரனுப்பவந்தவற்
கியற்றுவ தென்னிலேதது செய்வேனென. (சா௪)

பதினொரு பங்கங்கள் பாடிமற்றதற்
கெதிரறு முத்தமஞான மென்றுபேர்
விதிமுறை வைத்ததனோடு மேவுறக்
கதிதரு முப்புடைக் கனியுந்தந்தனர். (சா௫)

இக்கனிதனை யுடைத்தினிது தின்றுநீ
மிக்கதாம் பதினொரு பங்கமும் விழைந்
தொக்கமெய்யன் புடனுணர் தியேலுறத்
தக்கநின்னினை வெலாந்தழைக்கு மென்றனர். (சா௬)

என்றவரீந்ததை யேற்றவ் வேதியன்
துன்றருமிக பரசுகத்தை வேண்டியான்
நன்றிவண டைதரநவில் பிராகிர்தத்
தோன்றியகவி தரினுதவு மோவென. (சா௭)

ஆயிடையே விழுவெறிந் தனுப்பிய
மாயிருஞான தேவிடத்து வந்தனன்
மேயினபழம் படிவிரும்பி யுற்றனன்
போயினன் விதிதனைப் புலத்தி லுன்னினர். (சா௮)

இங்குற நடந்ததை யேமொழி டாறெனப்
பொங்குறு கவிகளிற் பொருத்தி ஞானதேத்
தங்குறு சமாதியிற் சாற்றவுய்த்தனர்
எங்குநீடுறு ஜகதீச னன்பரோ. (சா௯)

அன்னதை யவரிடத் தறியச்சாற்றினர்
மன்னபங்கங்களை வாங்கிப்போனவர்
உன்னவங் கொருவனு வேசனுயுற்ற
இன்னவ னிழுக்கின னெனவெருட்டியே. (சா௰)

அங்குநின்ற கல்வகை யகற்றப் போயினன்
தங்குறுதந்த வேதியன்பின் சௌரியைப்
பொங்குறப் புகழுமெ யன்பர்தம்புடை
இங்குவந் தணுகினன் பதிகனென்னவே. (சகக)

வேறு.

சிவாஜியெனும் வேந்தனிடைப் புராணம்வாசிக்கிறவற் கேவல்செய்வோன்
ஓவாதநெடு மூர்க்கன்பேரோ கோடோபா முரடனொழிவின் ஞானம்
தவாததுகா ராமனைக்கண் டடிவணங்க வவன்வணங்குந் தகவுநோக்கி
அவாவறுவோ ரவனிடைப்பேரளிகூர்ந் துதாமெழுதுத் தமஞானத்தை. (சகஉ)

தென்பழநேர டந்தார்மற் றவனவற்றைப் பழுதில்லாச் சிரத்தையோங்கும்
அன்பொடு கொண்டப்பழத்தையுடைத்தருந்திப்பதினொருபாட்டையும்வாசித்து
மன்பெறப் பாடம்பண்ண மறுவிலா ஞானபத்தி யுடனேவாய்ந்தான்
இன்பமிக மூன்றும்தா பாத்திலுறும் வணிகனியன் ஞானேசர்க்கு. (௪௧௩)

தனதுநினை வுறமுடிந்தா லிலக்கம்பொன் றருவதற்குச் சமைந்திருக்க
அனகரரு ளானினைவு முற்றுதலாய் ஞானேச ரகத்திற்சென்று
கனகமனைத் தாங்குவிக்க வொருவனுவேசிதனைக் கனகமெல்லாம்
மனநலத் துகாராம ரிடைச்செலுத்துகென வருளின்வழங்கக்கேட்டு. ௪௧௪)

அவ்வணிகன்றுகாராமரருகுவந்து நிகழ்ந்த செயலனைத்துங்கூறி
எவ்வமறப் பொருளனைத்து மீந்தவர்த மடிவணங்கி யேத்திப்போனான்
செவ்வணந்தப் பொருளனைத்துங் கோடோபா தமையடைந்தசெவ்விநோக்கி
வவ்வுகென வவற்களித்தார் மற்றவன் வேதியன்வேண்டல் வாய்ப்பதானான்.

கோடோபா யானடைந்த காலத்திப் பொருள்வந்து கூடிற்றென்று
நீடாதரத்தொடுதன் பதிபோய்ச்சேர்ந் தனனிந்தநிகழ்வனைத்தும்
பீடாரு சிவாஜியெனும் வேந்தனுணர்ந் தறிவில்லாப் பேதைக்கிங்ஙன்
வாடாத நலமளித்த துகாராமர் தமையின்னும் வணங்கவோர்கால். (௪௧௬)

வேண்டியிருந்தனனேக லோகமெனு மூருறை வேதியர்களெல்லாம்
நீண்டியல் வாமனனன்பர் தமையழைத்துக்கொடு போந்து நிமலரோத்தற்
கீண்டிய கீர்த்தனமெல்லாங் கேட்கவொரு திங்களளவிருத்திக் கொண்டு
தூண்டிய வன்புடனிருக்கத் துகாராமர் கீர்த்தனங்கடுதித் தங்குற்றார். (௪௧௭)

அப்பதியிலெளிமை கைம்மை முதுமையுறு மொருபிராமணியங்கோர் நாட்
செப்பமிகு துகாராமர் தமைநோக்கி நான் வேண்டுந்தினத்திலென்னில்
ஒப்புவந்து வந்துபோன கமருந்திக்கீர்த்தனங்களுரைத்தல் வேண்டும்
தப்பறு சீர்ப்பாண்டுரங்கன்றனதடியரே யெனமற்றவர் நன்றென்றார். (௪௧௮)

எளிமைதனிலே சிறந்த முதுமைப்பார்ப்பினி பின் பீரைந்து பேர்க்குத்
தளிகையிற் போனக மமைக்கத்தக்க வைக்குத்தகப்பணிகடாஞ் செய்திட்டு
அளியின் மிக்க துகாராமர் தமையழைக்க நாளேக்கு மளவில்வானம்
துளிசெறியப்பெய்து குடியிருக்கு மனைச்சுவர் சாய்வு தோன்றிற்றாக. (௪௧௯)

கண்டு கிழப்பார்ப்பனி தான்றுகாராமசாமிவயிற் கடுகிவந்து
மண்டுவிழி நீர்பெருக வழுதுகொண்டு பாண்டுரங்கமாலுக்கன்பிற்
றொண்டு செய்யு முங்களுக்காராதனஞ் செய்வதற்காகத் தொழும்புசெய்து
கொண்டு வைத்தகலப்பை யெல்லாமழிவுற வென்மனைச்சுவருங்குலைந்துசாய

மழைபெய்து பழுதுவந்து வாய்த்ததென் செய்வேனென்று மாழ்கிச்சொல்லிக்
குழைவெய்துவதைக் கண்டு துகாராமரழே லெனக்கை யமைத்துக்கூறித்
தழைவெய்த நின்னகத்தி லினிதுவந்து நீயிடும் போனகஞ் சாப்பிட்டு
விழைவெய்தப் பாண்டுரங்கன் கீர்த்தனஞ்செய்வோம்வெளியின்மேவுங்காறும்

பித்திவிழாதருள் செய்வான் பாண்டுரங்க னென்னவவள் பெரிது நம்பித்
தத்தினியின்றென்று மனமகிழ்வொடு தன்னகஞ் சார்ந்தாளாக வூரார்
இத்திறமாய்ச் சாய்ந்த சுவரொப்படி வீழாதிருக்கு மிதுவிழாதேல்
சித்திரமேயவர் வந்து போமளவுமெனத் தம்மிற் செப்பிப்போனார். (௪௨௨

ஈரிரண்டு தினங்கழிந்த பின்பந்தப் பார்ப்பனி தன்னில்லத் தட்டுச்
சாரமறை யோருடனே துகாராமர் தமையழைத்துச் சௌரிநாமம்
ஆரநெடுங்கீர்த்தனஞ் செய்தானபின் புவந்தவர்களனைவருக்கும்
நேரவுபசரித்துப்போனக மருத்தித்தானு முண்டு நிரம்பலாக. (௪௨௩)

அமைவு செய்த துகாராமர் பார்ப்பனியை நோக்கியினி தம்மேயுன்னிற் [ங்
சமைவுசெய்தபொருள்களெல்லாய்கொண்டு வெளிவருகவெனச்சாற்றக்கேட்ட
கிமையளவி லவள்கொண்டு வெளியில் வரச்சாய்ந்தசுவரிடிந்து வீழ்ந்த
துமையறு சீரன்பரவ்வூரதிகாரிக்கில்லமைத்தன்று தவச்சொன்னார். (௪௨௪)

அன்பர் சொன்னபடி யவ்வூரதிகாரி வீடுடனே யமையச்செய்து
துன்பமறப் பார்ப்பனிக்குத் தந்தவவிலினிது பரிசுத்தமாக
இன்பமிகு துகாராமராலரி கீர்த்தனமொரு நாளியம்பச் செய்தான்
பின்பவ்வூர் வாழ்வோராலன்பர் விடைகொண்டு தம்மூர்ப்பேணி வந்தார். ( ° )

வேறு

வந்துநாம கீர்த்தனஞ் செய்தாருறலும் வாகோளி
முந்திவாழ் பவரூறுசாஸ்திரங்களில் முதல்வன்
மைந்துசேர ரசன்றன்சன் மானமும் வாய்த்தோன்
பந்திமேவிய நாமம் ராமேச்சுர பட்டன். (௪௨௬)

சாதுவாந் துகாராமெனு மன்பர் சத்கீர்த்தி
ஓதுவோர்சொலப் பலபடி கேட்டுத் தன்னுளத்தில்
மாதுவேஷ முண்டா யவர்தமை யவமானத்
தீதுசெய்வதற் கெண்ணின னரசன் பாற்சென்று. (௪௨௭)

சூத்திரன்று காராமென்போன் றேகுவிற்றேன்றி
மாத்திரம்பெறும் வேதசாரங்களை வாயால்
தாத்திரிக்கணே யாவர்க்கும் வெளிபெறச் சாற்றிச்
சீர்த்திசேரரி கீர்த்தன நாடொறுஞ் செப்பி. (௪௨௮)

வேதவேதியர் தமையுமோகிப் பித்து விராய்த்தன்
பாதமன்பொடு வணங்குறப் பண்ணிப்பற் பலவாய்ச்
சாதமேவிய தருமங்கள் யாவையுந் தவிர்த்துச்
ஸ்ரீ தரன்றிருநாமமே பெரிதெனச்செப்பி. (௪௨௯)

யாரு நாமகீர்த்தனஞ்சொல வியற்றினனதனால்
சாரு நால்வருணத்தருந்தந்த மக்கியல்வாய்
நேரு நல்லறம்யாவையு நீத்தனர் நிருபா
ஒரு நீயென வுரைத்தனனரசுடன்படவே. (௪௩௰)

வேந்தன் கேட்டுடனப் படியோவென வெகுண்டு
சார்ந்தவூரகல் வுறத்துகாராமனைத் தவிர்த்தி
நேர்ந்து நீ யென்றவ்வூரதிகாரிக்கு நிருபம்
ஓர்ந்து செய்வகை யுய்த்தனனவனதை யுணர்ந்து. (௪௩௧)

வெருவியன்பர் பால்வந்ததைக் காட்டலு மெய்யன்
பொருவிலாதவர் விட்டலனுறைதருங் கோயில்
மருவியோர பங்கஞ்சொல்லி வாழ்த்திவா கோளி
தருவியேகினர் பட்டனைக் காணவுட் சூழ்ந்து. (௪௩௨)

பலரும் பட்டனு மெனைநனி யிகழ்தரப் பார்ந்தே
அலரும் பூமக ளுயகனேயென வழுது
புலருநெஞ்சொடு போற்றினர் கோயிலின் புறத்தா
மலருநந்தன வனம்வந்தோர் பாறையில் வதிந்தார். (௪௪௩)

ஊனுறக்கம்விட் டரிதிருநாமங்களோதிக்
கோனுளத்தொடு கிடந்தனர் சாதுக்கள் குறித்து
மானுறத்தகு மன்பர்பால் வந்துப சரித்தங்
கேனுறத்திருத்தியு மனமிசைகில ரிருந்தார். (௪௪௪)

பரிவு செய்துவா கோளிவாழ்வுறு கின்றபட்டன்
ஹரிதன்னன்பருக் கிவ்வகை யரந்தைசூழ்ந் ததனல்
இரிதலாயின வவன்செய் நற்செய்கைக ளெல்லாம்
பிரித லோர்கிலன் பெயர்ந்தனன் புனற்சிவ பெருமான். (௪௪௫)

தனைவணங்குறப் பரிசன முடன்வரச் சார்ந்தான்
அனைய நற்றினந் துவாதசி யாதலி னங்கே
வினையிலாவன கடசித்தர் மேவுபூந் தோட்டம்
இனையதென்றுணராததி லுறைதடத்தெய்தி, (௪௪௬)

நீரிலாடல்செய் போதந்த நின்மலசித்தர்
யாரிவன்றடத் தெய்தியேதோசொலித் தினம்யான்
கோரியேநிமா சுச்செயுங்குளத் தினைக்கெடுத்தான்
நேரிலென்றுறச் சீறியோர்சா பத்தைநிகழ்த்த. (௪௪௭)

அனையசாபத்தி லெய்திய தழற்றுறு சாபம்
இனையநுகத்தி லெய்தலு மதுபொறு னினைந்து
தனையிணங்கினர் எனையுறுவோர்தமை நோக்கி
எனையழற்றுவதென்னிது தெரிகிலே னென்ன. (௪௪௮)

இந்த மாத்தட மிப்பகிர்நிமா சினிதியற்றச்
சொந்தமாதலி னீர்வந்து துனைதலைப்பொறுமல்
எந்தமாச்செவி கேட்குறச் சாபமிட்டானீர்
வந்தமாபகிர் தனைவணங் குறிலது மாயும். (௪௪௯)

எனலும் பட்டன்யா னுத்தமவேதிய னிவனை
மனமிணங்குற வணங்கிடேனென் றந்தவாவிப்
புனலி னீங்கியே புறம்வந்து நனைதுகில் போர்த்தும்
அனலனுங்குறு தழற்றுறப் பரிசனர் யாரும். (௪௫௰)

நீர்முகந்துமேன் மேலவன்றலை மிசைநிரம்பச்
சார்வுசெய்துமத் தழறணியாதுடற் றழற்றத்
தீர்வுவேண்டினன் றிகைத்தனன் றன்னிற்சேர்ந் தோரைப்
பார்வை செய்தியான் பிழைப்பதிங் கரிதெனப் பரிந்து. (௪௫௧)

பிறந்த நாண்முதல் யான்செய்த தவமும் பேரறமும்
வறந்தவாயிந்தத் துயர்வந்து வாய்த்துத்துன் மரணம்
சிறந்த தாயதென் செய்வதென் றூர்செலத் திரும்பி
மறந்து மெய்மிக வருந்தினன் புலம்பினன் வந்தான். (௪௫௨)

காணுநீரெனலுந் துகாராமர் கண்விழித்து
மாணும்புத்தகம் யாவையு நோக்கினர் வருந்திக்
கோணும் வேதியன் சொன்னதுட் கொண்டுபுத் தகங்கள்
ஏணுறும்புன லிட்டனன் காத்தனை யிதுவோ. (சசங)

ஏழுமாறு மாகிய தினமளவு மூணின்றிச்
சூழுநித்திரையுந் தவிர்ந்தேனை யுந்தொக்கில்
வாழுமாவுயிர் காத்தனை யிங்கினி வருத்தம்
தாழுமாசெய்த வென்பிழை பொறுத்தி தண்ணளியால். (சசச)

என்றெரேழ பங்கங்களிற் ரேத்திர மியம்பி
மன்றலந்துள வணியும் வைகுந்த மாதவவென்
றென்று நேயமிக் குறைந்தன ரிருக்க ஞானேசர்
துன்றுகின்ற பொற்கோயிலின் புறத்தொருசூழல். (சசரு)

தங்குகின்றரா மேச்சுர பட்டநேய் தாங்கான்
பொங்குமிக்கலி யுகந்தனிற் புவியையுத் தரிக்க
இங்குநின்றெழுக் தருளுஞானேச வென்றேத்த
அங்குமற்றவன் கனவில்வந் தருளுட னறைவார். (சசசா)

நீதருக்கினை யாய்நெடு மாலடி நேயர்க்
கேதமுற்றப ராதநீயியற்றினை யிதனால்
காதல்செய்த துன்னுடலினைக் கடுங்கனல் கதுவி
ஆதலிற்றுகா ராமரையினிச் சரணடைதி. (சசஎ)

அடைதியேலுன தங்கமெல்லாங் கொளுத்தனல் போய்
இடைதலேயன்றிப் பவக்கடல் கடத்தலு மெய்தும்
மிடைதுழாயவ னன்பரின்மிகை மிகச்செய்வோர்
குடையுந் தீர்த்தத்தும்பணிதெய்வத் துங்குற்றங் குலையார். (சசஅ)

பிழையியற்றிடப் பட்டவப்பெருந் தகையோரே
குழைவுறுந்துயர் கண்டருள் கூர்ந்தந்தக் குற்றம்
ஒழிவுறச்செய்வ தன்றிமற்றெருவர்க்கு மொண்ணு
தெழுகமற்றவ ரிடத்தென்று ரினிதுஞானேசர். (சசகு)

துயிலொழிந்துஞா னேசர்சொற்படி யுடன்சூழ
இயலு நெஞ்சின ளுகியுமன்பர்மு னெதிரப்
பயமுளங்கொடங் கவர்புகழ் பற்பல படியாய்
மயலகன்றெழுதி னன்றனதளுர் முற்றுமாற்ற. (சஎ0)

எழுதியொற்றன்யா லீந்தனன் செலவிடுத் திட்டான்
பழுதிலார்வயிற் கொடுத்தனன் கொண்டுடன் படர்ந்தோன்
முழுதுநோக்கின ரங்கதை முற்றுணர் பட்டற்
கழியி நோய்வர லாகுமோ வெனத்தளர் வடைந்தார். (சஎக)

பகைகட் பாம்புலி சர்ப்பமெல் லாந்துயர்பண்ணு
அகைவுசெய் நஞ்சமமுதமாந் துன்புமின்பாகும்
புகையு மக்கினி சீதளமாமனம் புனித
வகைய தாமெனில் ஸ்ரீதரன் கருணையும் வாய்க்கும். (சஎஉ)

எனவபங்க மொன்றெழுதினர் பட்டனுக்கீய
மனமொருங்கின ருய்த்தனர் வரக்கண்டு பட்டன்
அனவபங்கத்தை நோக்கலும் பகீரறை சாபம்
தனதுடம்பை விட்டகன்ற தாரோக்கியஞ் சார்ந்தான். (௪௭௩)

களிதுளங்கினனுய்த் துகாராமனைக்காண்பான்
எளிதினெய்தினன் வருவதை யினிதறிந் தன்பர்
ஒளிநிரம்பு வேதியனை முன்காண்ப துத்தமமென்
றளிவிளங்கிய மனத்தினரா யெதிரடைந்தார். (௪௭௪)

அடைந்தவன்பரைக் கண்டடிபணிந்தனன் பட்டன்
மிடைந்தவன்பினீர் புவியையுத்தரிக்க மேவினிர்நீர்
உடைந்த புத்தியி னேனுமை மதிக்கிலே னுயர்ந்து
ருடைந்து வெப்புறப் பட்டுனேன்கொடுமையுட் கொண்டேன். (௪௭௫)

யான்செய் வெம்பிழை யாவையும் பொறுத்தருள் கிற்பீர்
தேன்செயுந்துள வோன்றிருவடிக் கன்புசிறந்தீர்
மான்செய் கண்ணினர் மயலுறும் வாழ்வினில் வல்லீர்
ஊன்செயும்பொறை வெறுத்துளீ ரெனத்துதி யுரைத்தான். (௪௭௬)

என்றுரைத்திடக் கேட்டமெய் யன்பரந்தோயான்
குன்றுறத் தகுங் குலத்தினே னடிமிசைக் குனிதல்
நன்றுமக்கிதோ வெனப்பட்ட னயந்தன னலலீர்
இன்றெனக்கெழுதி யகவிநோக்கு முன்னேயான். (௪௭௭)

புனிதனுயினே னும்மடித் தாசனுய்ப் போந்தேன்
இனிதிறும்மடி வணங்குறத் தக்கதே யெனக்குக்
கனிவினும்மடி பிரிகிலே னெனவடி கலந்தான்
தனியடைந்தவன் றன்னொடு தம்பதி சார்ந்தார். (௪௭௮)

இன்னவன்பர்முன் சொன்ன வபங்களெல்லாம்
மன்னுதண்புன லிடைநனையாததும் வருந்தச்
சொன்ன பட்டனுக் கெய்துசா பந்தொலைந் ததுவும்
உன்னியாவரு மன்பரைப் புகழ்ந்தன ருற்றூர். (௪௭௯)

வேறு.

அனகடசித்தர் தாமுமிச்செய்கை யறிந்தியா னிட்டசாபம் போக்
கினமகாபுருடர் தாமுறுஅூர்போ யினிதுநாங் காண்டு மென்றெண்ணி
வனமிருபுறவை விட்டடன்மேவு மார்க்கத்தி லுறுஞ்சிஞ்சு வடியூர்
தனதிடைமேவி யந்தவூர்த்தலைவ னெனசிந்தாமணி தன்னில். (௪௮௦)

முன்றிலி னின்றுதங்கையின் மடக்குமுழுதுறப் பிச்சைபெய்கென்ன
ஒன்றியசிந்தா மணிமறையோன்பா லுற்றகா ரியஞ்செய்வோ னுடனே
துன்றியம் மடக்கிற் போனகக் கலப்பை சொரிதர வதுநிறைவுறுதல்
இன்றிமற் றின்னு மிடுவனவெல்லா மேற்றுமற்றது நிரம்பிலதாய். (௪௮௧)

உற்றதுகண்டு மிகவியந்தளவில் பொருளுடைத் தலைவன்மா டுற்று
மற்றதை மொழிய வருமதிதிகட்கு வாட்டமே வாவகை யனையார்
நற்றிய பொருள்க ளனைத்துள வனைத்து நல்குதி யெனவவ னயந்திற்
பெற்றதானியங்க ளனைத்துமற் றதனிற் பெய்தனன் கொடுவந்து பெய்தும். ()

மடக்கது நிரம்பா வகைதெரிந்தகத்துண் மறையவன் பால்வந்து வழுத்தச்
சடக்கென மறையோன் கணபதியுபாசனத் ததுநிரம் புறச்சமைத்தான்
இடக்கொடுபின்பவ் வனகடசித்த ரெய்தினர் தேசுவென் றியலூர்
அடக்கரும் பொறிக ளடக்குமெயன்ப ரகத்துமுன் றிலின்வந்து நின்று (௬௮௫)

எனதுகை மடக்கிற் பிச்சைபெய்கென்ன வேற்றலுஞ் சிஜாயிகேட் டின்றென்
றனதகத்தேது மில்லையா யிருக்குஞ் சமயத்தெச் சழக்கனே சார்ந்தான்
இனவிரப்பவனுக் கென்செய்வேனென்ன வேற்றவற்குப்பிச்சை யிடாமல்
சினவனன் றன்றென் றெண்ணியங்கிருந்த சிறுவிகங் காவகஞ்சேர்ந்து.(௬௮௬)

பானையிலிருந்த மாவிலோர்பிடிகை பற்றினள் வெளிவரும்போது
மானையே யுங்கட் ஜிஜாயிகண்டவளை மறித்துக்கை திருகினள் வாங்கப்
போனவைபோகக் கையிலொட்டியமாவைப் பகிர்கடிறையிற் புகுத்தத்
தானது நிரம்ப வனகடசித்தர் தாங்கண்டு மிகவியப்பெய்தி. (௬௮௭)

பிச்சைகொண்டிடு கங்காமுக நோக்கிப் பெயர் துகாராமரோ நீர்தாம்
நிச்சயம் சொல்லுகென்றனர் கங்காநீ பித்துகொண்டவன் றனைப்போல் [ர்
இச்சொல்சொல்லுகின்றாயெனைப்பெண்ணென் றறியாயென்பிதாவேதுகாராம
நிச்சலுமுதயத்தாடு நீராடி நெடியமால் கோயில்போய் நேர்ந்து (௬௮௮)

ஹரிதிரு நாமஞ்சொல்லி யங்கிருக் கின்றாரெனவனகடசித்தர்
தெரிவைசொற் படியே சினகரத் தெய்திச் சேர்துகா ராமனைநோக்கப்
பெரியசிற்சொருப வொளிவடிவாகப் பிறங்குறக் கண்டடிபணிந்தார்
துரிசின்மெய்யன்ப ரவர்க்குப சரித்துத்தோ மறவிருக் கெனச்சொன்னார்.௬௮௭

சொன்னவர் தம்பா லிரண்டுநாள் வரையுந் தோமிலாக் கீர்த்தனங்கேட்டு
நன்னரானந்த பரவசராகி நயந்தவர் பால்விடைபெற்றுப்
பின்னரு ரடைந்தா ரனகடதாசர் பின்றுகா ராமர்தாம் பேசும்
இன்னிசை நாம கீர்த்தனநாளு மினிதுகேட் டின்பிடை மூழ்கி. (௬௮௮)

வேறு.

காமமேவிக் களித்தகத் திற்றுகா
ராமசாமியை நன்குபுணர்ந்தினி
தேமமெய்துற வெண்ணின ளாலகிற்
றாமமேய்குழ லாளொரு சுந்தரி. (௬௮௯)

அமைய நோக்கின ளாய்வரு நாளிலக்
கமையுளத்துகா ராமரோர் காலத்தில்
தமைய விட்டலன் றாளிடைச் சேர்த்திவன்
சுமை துறந்திருந் தாரொரு சூழலில். (௬௯௦)

ஏகமாயவ ரெய்திய தோர்ந்துமுன்
மோகமேவிய மொய்குழல் சுந்தரி
யாகமேய மெய் யன்பரைக் கண்டுநும்
போகமேவப் புகுந்தனன் யானென்றாள். (௬௯௧)

பின்னும் பேசுகின்றாள் பெரியீருமை
மன்னுங்காதலினுள் பலவைகினேன்
துன்னுகாலந்தொடர் கிலதின்றியான்
உன்னுஞ் செவ்விவந் துற்றதென் றாளரோ. (௬௯௨)

அடுத்துநாரி யறைந்ததுகேட்டுடல்
நடுக்கலாகிமெய்ஞ் ஞானநல்லோரெனை
எடுத்ததாயென வெண்ணுகின்றேனுன்னை
விடுத்தி நின்னினை யென்றுவிளம்பினார். (சுகூங)

அந்தவார்த்தை யனையவள் கேட்டுநீர்
இந்தமாற்றமி யம்பிவெறுப்பிரேல்
முந்தவென்னை முயங்க வலித்திரோன்
றுந்தமேற்பழி யுய்த்திரோ வேனென்றாள். (சுகூச)

என்றபோதிரையே லென்னிடையுறு
கின்றமூவிரு வைரியுங் கேசவற்
றுன்ற நீத்துத் துறந்துறு வேனைநீ
ஒன்றவோர்திவைக் கோல்கொண் டுறுகென்றார். (சுகூரு)

சொன்ன தோர்குவ னென்றச் சுடர்த்தொடி
அன்னவை யினைநாடிக் கொண்டன்பர்முன்
துன்னத் தம்முடன் மீதிடச்சொல்லினார்
பன்னுமாறிடப் பற்றியெரிந்ததே. (சுகூசு)

கண்டுகாரிகை யஞ்சிக் கலங்கினாள்
விண்டுநீங்கி வெளிப்புறம் போயினாள்
பண்டுபோலரி நாமம் பகர்வது
கொண்டு நாளுங் குறைவின்றிருந்தனர். (சுகூஎ)

ஆகவிப்படி யன்பர் செயுங்கதை
லோகமென்னுமவ் வூரிலுள்ளோர்வினாய்
ஏகவெம்முழை யென்றவர் வேண்டலிற்
போகவெண்ணிப் புறப்பட லாயினார் (சுகூஅ)

வேறு.

கனிவுற்றுட னிசைபாடுறு கங்கா ஜிமவாளும்
தனிமுற்றுறு கவிகீறுறு சந்தாஜி வணிகரும்
இனிதத்துட னுறுபட்டரு மியல்மிக்கபி னவரும்
துனிமொய்ப்புற நனிமொய்த்தவர் சொலுமூரரு குற்றார். (சுகூகூ)

அருகெய்திய தறிந்தூரிலு ளவர்யாவரு மெதிர்கொண்
டுருகன்பொடு பணிவுற்றுட னூர்க்குட்கொடு சென்று
வருமொவ்வொரு மனைதன்னிலும் வழுவாதுறு மறையோர்
மருவுஞ்சுவையுறு போனகமகிழ்ந் துண்டுற வகுத்து. (ருா)

ஹரிதன்கதை யகந்தோறுநன் காகச் செயவமைத்துப்
பெரிதின்பொடு வருநாள்வழி பெய்தற் கமைவாகப்
புரிகின்ற சிவாஜிப் பெயர்புனை வோன்கதை புரிவோர்
தெரியின்சுவை தெரியாமனிந் தித்துத்தனி திரிவான். (ருாக)

எளியோனெனி லுந்துட்டனெனுஞ் செய்கையி லியல்வோன்
களிமூழ்குறு கதைசெய்துறு கடைகண்டருள் காணுன்
விளிவோடுறு மவனைச்சவை மேவாவகை யென்னென்
றளிநீடுறு முறவோர்தின மாராய்ந்தனர் கேட்பார். (ருாஉ)

வினவுற்றவ ருணரக்கதை வினவற் கழைத்தாலும்
மனமொத்திலன் வருகின்றில னென்றூரவண் வாய்ப்போர்
இனரிப்படி யுறுநாளிடை யொருவேதிய னென்போன்
கனமிக்குறு கடனாலுளம் வருந்தித்தனி கரைவான். (௫௱௩)

ஞானதிபர் தாமேவுழி நணுகித்துதி நவின்று
தானுறுமதிக் காலமதாகக் கடைசார்ந்து
மேனாளுறு கடன்றீர்வகை வேண்டுற்ற வன்கனவில்
ஆனாதநலஞ்செய்ப வரணுகித்தனி யறைவார். (௫௱௪)

நீசென்றுது காராமரினினை வைப்புக லுதியேல்
ஆசின்றவர் கடன்றீர்வகை யருள்வாரென வவனும்
நேசங்கொடு லோகப்பதிநிகழ் வோர்வயின் வந்தான்
மாசொன்றிலர் தெரிந்தப்பதி யதிகாரியை வாய்த்து. (௫௱௬)

இவ்வேதியர் கடன்மிக்க வரிவர்க்கும் பதியோர்க்குத்
தவ்வாவரி வைத்துச் சரிதரு வோனையுந்தவிரா
தெவ்வாறெனினுஞ் செம்பொரு ளீட்டிக்கடன் றீர்த்துச்
செவ்வேபுரி கென்றூரவன் றீர்த்தற்குடன் பட்டான். (௫௱௭)

ஊர்முற்றிலும் வரிவைத்தவ ருதவும்பொருள் கொண்டு
நேர்கைச்சரி புரிவோன் வயினேர்ந்தும் பொருள்வினவச்
சோர்வுற்றிருகாசங் கவனுதவக் கொடுசொன்னர்
சார்புய்த்தன னவைகண்டெதிர் சரிவிற்ப வன்காசை. (௫௱௮)

கையிற்கொடோர் சிறுகற்கொடு கீறிக்கனக மெனச்
செய்துற் றவனுக்குக் கடன்றீரும் பொருள்சேர்த்துப்
பொய்யற்ற வருதவக்கொடு போனன்மறைபுகல்வோன்
உய்யச்சவை யுள்ளோரனை வருநோக்கினர்வியந்தார். (௫௱௮)

இத்தன்மை யுணர்ந்தான் வளைவிற்குந்தொழி லினன்வந்
தத்தன்மை புரிந்தோர் வயினமரும் பரிசக்கல்
எத்தன்மை புரிந்தேனும தேற்பேனென வெண்ணிப்
பொய்த்தன்மை யிலன்பர்க்கனு தினமும் பணிபுரிந்தான். (௫௱௯)

ஆண்டோரளவுங் கீர்த்தன மறையுந் தொறுங்கேட்டற்
கீண்டாதரத்தொடு மேவிய வவன் வாங்குறவீயம்
தூண்டேறு களேற்றிக்கொடு சுமந்தெய்தினவிறக்கிப்
பூண்டார் பொதிய விழ்த்துள்ளுறு பொருண் முற்றவுநோக்க. (௫௱௰)

எல்லாமிரசிதமாக விருக்கத்தெரிந்தான் யரன்
சொல்லாவிரசித முய்த்தனனென்னே யெனத்துணுக்குற்
றல்லாவிவையுய்த்தோன் வயினுய்த்துப்புகல் சீருள்
வல்லேகொடு வருகென்றுறு பொதிகார ரில்வருத்தான். (௫௧௧)

பொதிகாரர் களவற்றைக்கொடு போய்த்தந்தவனிடைமீண்
டதிறும் வகையறையும் பொழுதவன் யானளித்தது தான்
விதிசீருள யன்றிப்புகல் வெள்ளிக்குவை யன்றென்
றெதிரோதினன் மீண்டேகுற விடுத்தான் பொதியெல்லாம். (௫௧௨)

மீட்டுங்கொடுவேளை விற்பவன் பாலெய்தினர் விளம்பக்
கேட்டங்கவன் வியப்பெய்தினனுகிக் கிளரன்பர்
மாட் டின்னனவறிவித்திடமண் ணுண்டருண்மாறுன்
கூட்டுறுசெயலிதுகின் விதிகொள்கென்று குறிப்பார். (ருகங)

எய்தும் பொருள்யாவுஞ் சகதீசன் றனதடியார்
கைதந்தவர் வேண்டும் பலகருமங்களு மியலச்
செய்துன்புறாதிர் கல்வழிசேரப் புரிகுவையேல்
நொய்திணிக பரமேய்சுக நுனக்காமெனச் சொன்னர். (ருகச)

அருளும்படி கேட்டன் னவனரிதன் னடியார்பால்
மருவும் பணிபுரிவோமெனில் வாயாதனவாய்க்கும்
பொருளின் னிசைபுரிந் துற்றது புன்மைச் செயலென்னுத்
தெருள்கொண்டு விராகத்தொடு செறியும்பொருள் யாவும். (ருகரு)

கலமேவிய வழியே செலகல்கிப்பலநாளும்
புலமேவிய வன்பர்க்குறு பணிசெய்துடன் பொருந்த
இலமேவிய மனையாள் பதிதனை யெல்லியி லரிதன்
வலமேவிய கதை கேட்கவும் பகலிற்றனி மாயோன் (ருகசு)

பெயர் சொல்லவு மிவ்வாறு றுபித்தேற்றினன் றன்பால்
முயல்வாயுறு பணிசெய்துற முடித்தா னிவனென்று
மயலேது மிலாவன் பரைமதியாண் முதிர்கோபச்
செயலேகொடு கொலை செய்வது சிந்தித்தொருதினத்தில் (ருகஎ)

ஒருகொப்பரை நிறையப்புனல் வெப்பம்பெற வுளுற்றி
மருவப்பர ணேற்றித்திரு மாலன் பரில்வந்து
பெருகத்துதி செய்தில் வரப்பேசிக் கொடுவந்து
தருகொப்பரை யுறுசார்புற வைத்துத் தவிசிடையே. (ருகஅ)

வெப்பப்புனன் முழுதும்மவர் மேல்வீழ்வுறப் பெய்தாள்
செப்பப்புனல் விழலும்மவர் தேகம்மிக வெந்து
கொப்புட்பெற லாகத்திருமகள் கொண்கனைக் குறித்தோர்
மெய்ப்பற்றுறு கவிசொல்லினர் விமலற்கினி தன்பர். (ருகக)

உடனேயுட லுறுபுண்முழு தாறிச்சுக மூறத்
திடமேவின ரொழுந்தந்தவிடந் தீர்ந்தவண் முற்றம்
படர்நீளவரைப் பந்தரிற் களமேவியபடலைத்
தொடர் மேவுற வீசித்த மதிடமேவினர் சூழார். (ருஉ0)

அன்னாள் செயலறு கண்டுடனரி சீறுதலாகி
மின்னாளவளுக்குச் சுரநோய் மேவுற வமைக்கத்
துன்றுயது தன்னுன்மிகு துன்புற்றுயி சோர்வாய்
என்னாளும் விடா நோவுடனிருந்தாள் பெரிதினைந்தாள். (ருஉக)

அப்போது சிவாஜிப்பெய ரான்வந்தவ ணக்கண்
டிப்போதிவளுக்கித்துய ரெவ்வாறணுகிற்றென்
றெப்பாதயலெங்கும்பர வுறநோக்குறு போது
தப்பாதவரைப் பந்தரிற்றூழ் தொங்கலைக் கண்டான். (ருஉஉ)

இம்மாலை யிராவிற்கதை யியற்றுந் துகாராமர்
தம்மார் பிடைத்துயல் வுற்றது தானென்றதை யோர்ந்து
நம்மாரியர் தமையில்லுழை நணுகக்கொடு போந்திங்
கெம்மாசுசெய் தாளோவிதற் கென்செய்வதென் றினைய. (௫௨௩)

கூடப்புகுரா மேசுரபட்டப்பெயர் கொண்டோர்
நீடப்படு சேருகிய நிலமென்னென நினைத்தால்
நாடத்தகு நந்தேசிகர் நண்ணுற்றிவணன்னீர்
ஆடப்படலாற்சேறுள தாயிற்றெனல் போலும். (௫௨௪)

அதனாலிவ ளழன்மேனியி லளறப்புறின் வெம்மைக்
கிதனாமெனவுடனேயவ னச்சேற்றினை யெடுத்துக்
கதனார்கொடி யாண்மேனியிற் கதுவும்படி செய்தான்
உதனாலவ ளுடல்வெப்பமொ ழிந்தாள்சுக முற்றாள். (௫௨௫)

சுகமேவிவி யந்தேஹரி தொண்டர்க்குறுதுயரம்
மிகவேபுரிந் தேனேயென விதனத்தொடு நாளும்
தகவேதுகா ராமர்செயுஞ் சரிதத்திடை யன்பு
தொகவேவின விப்பல் பணிதொடர்ந்தே செயலானாள். (௫௨௬)

வேறு

இப்படிக் கிவரிங் கெய்த விதுதெரிசிவாஜிராஜன்
தப்பறு லோகமென்னும்பதி வந்து சார்ந்தவ்வூரில்
ஒப்பிலன்புடையராயெல் லாரும்வாழ்வுறுதல் கண்டு
செப்பருமின்ப மேவித்திகழ் துகாராமர் தம்பால். (௫௨௭)

மேவி மந்திரிகளோடு விளங்கவர் பதத்தட்டாங்கம்
ஆவியல் புறப்பணிந்தங் கவர்களத் தலங்கல் சார்த்தித்
தாவின் மெய்த்துதிகள் சாற்றத் தங்குகென் றுபசாரத்தோ
டேவின படிகேட் டங்கே யினிதிருந்தின்பு கூர்ந்து. (௫௨௮)

அன்பர் செய்தெய்வத்தன்மையான கீர்த்தனங்கள் கேட்டங்
கின்புடனிருக்கும் போதி லெழிற்றுகாராமசாமி
பொன்பதி தன்னை நோக்கிப் புகழடியேற்கு நீயே
மன்பெருந்தந்தைதாய்தே சிகன்சினே கிதனல்வாழ்வு. (௫௨௯)

ஜீவரக்ஷக மெல்லா நீ யாதலால் வேறோர்தெய்வ
பாவனை யுளத்திற் பண்ணேனெனப்பலதுதி பகர்ந்து
மாவவையிருந்து கேட்போர் வதனங்களுேக்கி நீவிர்
தாவமர் குடும்பந்தன்னைச் சற்றேனு நம்பல் செய்யீர். (௫௩௰)

விட்டலன்றன்னை நாளும்விரும்பியே பஜிப்பீராயில்
மட்டறுபவ முந்நீரைக்கடந்து வாழ்வுறுவீரென்று
கிட்டருவிரக்தி மார்க்கங் கிளத்தினர் கதைசெய்கிற்க
இட்டமாய் வினவிவேந்தனெய் தினன் மிகுவிரக்தி. (௫௩௧)

மங்களாரதி செய்காறு மருவின னிருந்து பின்புத்
துங்கராமன்பர்க்கன்பு தொடர்ந்துற வணங்கிக்கொண்டு
பொங்கவா வரசினீத்துப் போந்தொரு வனத்துண்மேவிச்
செங்கண் மாறுமனாவிற் சிறந்திடப் பஜித்திருந்து. (௫௩௨)

கங்குலாமள விலன்பர்கதை செயுமிடத்தின் மேவிப்
பொங்கு மானந்தங்கொண்டு புகலுங்கீர்த்தனங்கள் கேட்டுத்
தங்குதலாகி மந்திரிகடமை நோக்கிச் சாரீர்
இங்கு நீ ரொன்பாலென் றுவிகழ்ந்தனனியலு நாளில். (௫௩௩)

மந்திரிமார்களுன்னி மருவு சங்கதிகளெல்லாம்
சிந்தில தெழுதியன்பர் தேவிபாற் சிவிகையோடு
முந்திட வுய்த்தார்தேவி முழுதுணர்ந்தின்றுகாறும்
தந்திரமாக வொவ்வோர் குடிகெடச் சமைத்து வந்தார். (௫௩௪)

இனியர சியல்களெல்லா மீறுறக்கெடுக்க வேண்டித்
துனிவரு சிவாஜியென்னுந் தோன்றலைக் கெடுத்தாரீதால்
நனிவரும் பழியென்றெய்துஞ் சிவிகைமேலேறி நண்ணிப்
புனிதராம் பதியைக்கண்டு போற்றினள் வணங்கி நின்று. (௫௩௫)

மலர் விழிகளினீர் மார்பில் வார்ந்துகக் கையின் முன்றுனை
அலர்வுற வேந்திச்சீர் சாலன்பரோ யொருதாய்க்கோர் சேய்
நிலமுழுதாள் சிவாஜிராஜனை நிலை குலைத்திர்
உலகினையாளப் பிள்ளையொன்றுமின் றவனுக்காதல். (௫௩௬)

ஆசினைத் துறவாதாள வருள்செய்தங் கவற்குப்பிள்ளை
விரசவு மருள்செய்கென்று வேண்டினள் புலம்பிநிற்கப்
பரசுதல் கேட்டுமெய்யன் பர்க்கரு டோன்றிநன்று
புரைசமால் யானைவேந்தன் போதுவ னின்றிராவும். (௫௩௭)

வந்தபோ திதத்தைச்சொல்லி வாழ்விப்ப னவனையுன்றன்
சிந்தனைப் படியேயென்று செப்பின ரிருக்கக் கங்குல்
முந்தலும் வேந்தனன்பர் மொழிகதை கேட்கவந்தான்
நந்தவிலன்பரொன்று நவில்கதை நடத்தலானார். (௫௩௮)

பவக்கடல் கடப்பதற்குப் பழிப்பினல் வினையேமூலம்
துவக்குநல் வினையாதென்னிற் றொடர்குல நிலைகளுள்ள
எவர்க்குமுன் விதித்ததாக வியல்கரு மங்களேயாம்
அவற்றினை யொழித்துவேறொன் றழகிதென் றடைவா ரானல். (௫௩௯)

உலைபவக் கடலைநீந்த வொருவற்குங் கூடாதென்று
கலையெலா முரைக்குமெய்வா றெனிற்புனல் கலந்தமச்ச
நிலைசுவை யுள்ளதென்று நெய்யில்வீழ்ந் துலைதல்போல
அலைவரோ யன்றியின்ப மடைவுறா ரகிலநாதன். (௫௪௰)

உலகையுண் டாக்கிச்சேடனு லகினைத்தாங்கச் செய்தும்
சுலவுறுகடல்பேராமற் சூழ்வுறச் செய்தும்பானு
அலகுறு தாபத்தோடங் கவிர்வுறச் செய்துந்திங்கள்
நிலவுசீதளத்திறோடு நிவந்தவிண் விளங்கச் செய்தும். (௫௪௧)

மனிதரிற் சாதிநான்கு வகுத்துறு மறையோர் தம்மில்
இனிதுறு பிரமசாரி யியல்குரு வினுக்கொப்பாக
நனிபணி விடைகள்செய்து நான்மறை பயின்றுநாளும்
கனிவுறு நிலைக்குத்தக்க கருமங்க ளியற்றிக்கண்ணன். (௫௪௨)

தனக்கர்ப்ப ணஞ்செய்தாங்குச் சார்தரல் வேண்டும்பின்பு
மனைக்கண்வாழ் வுறுபோதாறு வகைக்கருமங்கள்செய்து
கனக்கரு நிறத்தோர்க் கர்ப்பணஞ்செய வேண்டும்பின்னர்
நினைக்கும்வா னப்பிரத்த ரைகுறிற் காமநீத்து (௫௪௩)

திருநெடு மாலைநாளுந் தியானஞ்செய் துறுதல்வேண்டும்
கருதுசன் யாசியான காலத்திற் சங்கற்பத்தை
ஒருவிநாரணன் றன்னாம மொழிவுறு தோதல்வேண்டும்
மருவுறும் பரமஹம்சம் வாய்ந்தபின் கருமஞ்சாதி. (௫௪௪)

தவிர்ந்துநா ரணன்றன்னாம மனுதினஞ் சாற்றல்வேண்டும்
நிவந்தகத் திரியனானோர்ந்தசத்துருவை வென்றங்
குவந்துயி ரொல்லாந்தன்ன துறுப்பெனப் புரத்தல்வேண்டும்
குவிந்தமுக் கரணசுத்தி கொண்டறஞ் செய்தல்வேண்டும். (௫௪௫)

நீதியில் வழுவுறாமல் விட்டலன் றனைநினைத்துத்
தீதிலாப் பஜனைநாளுஞ் செய்துறல் வேண்டுமற்றைக்
கோதில்வைசியனே யானாற் றுரோகமில் கொள்கைசேர
ஊதியமதிகம்வேண்டா வாணிப முஞற்றிநாளும். (௫௪௬)

ஸ்ரீதர னாமமோதித் திகழ்ந்துறல் வேண்டு நான்காம்
சாதியா னானுன்முன்னே சாற்றுமுக் குலத்துளார்க்கும்
தீதுதீரேவல்செய்து முழுதொழின் முதலசெய்தும்
மாதவன் றிருநாமங்கள் வாழ்த்திக்கொண் டுறுதல்வேண்டும். (௫௪௭)

இப்படிக் கீரிரண்டு வருணத்தி னருந்தங்கட்
கொப்புறு குலத்திற்கேற்ற வொழுக்கத்தி னிழுக்கலின்றித்
தப்பற ஹரிதன்னாமஞ் சாற்றினர் வருவராயின்
மெய்ப்பொரு ளானசெந்தா மரைமலர் விலோசனத்தான். (௫௪௮)

அவரவ ரிருப்பிடத்தே தரிசன மளித்துநாளும்
அவரவர் விரும்புகின்ற வவையெலா நிரம்பச்செய்வான்
அவரவர் தெரிந்துகொண்மி னென்றுரனேக்தமாக
அவரவர்க் கியலும்வண்ண மறைந்தனர் கீர்த்தனங்கள். (௫௪௯)

யாவருங் கேட்டானந்த மடைந்தன ரரசனுங்கேட்
டோவறக்கண்க ளின்னீ ரொழுகுற வவசனாகி
மேவரும் பரமானந்த மேவினன் மெய்சாலன்பர்
தேவதே வனுக்குமங்க ளாரதி சிறப்பச்செய்து. (௫௫௦)

உற்றவ ரொல்லோருக்கு முறுபிர சாதமீயப்
பெற்றன ருகந்துசென்றார் பிறகுசீ வாஜிராஜன்
கற்றமெய் யன்பர்வார்த்தை கடைப்பிடித் துலகையாண்டு
பற்றற ஹரிதன்னாமம் பகர்வதே பணியென் றோர்ந்தான். (௫௫௧)

அவன்கருத் தறிந்தன்னான்ற னன்னைமெய் யன்பர்பாதம்
உவந்தனள் வணங்கிநீர்செ யுதவிக்கு முதவியுண்டோ
பவந்தெற பரமற்கன்பீ ரொனமக னுடுபடர்ந்தாள்
தவந்தனிற் சிறந்தோர்காதை சாற்றுழி விரும்பிக்கேட்டு. (௫௫௨)

நாவஜி யெனும்பேர்கொண்ட வொருகுடி யானநல்லோன்
ஓவிலன் புடையருகி யுறுதுகா ராமசாமி
மாவியல் வதனநோக்கி யடிகணீர் வருந்தா வண்ணம்
மேவிநன் னடனஞ்செய்கின் றேனது விளக்குங்காறும். (ருரு௩)

பொறுத்திளைப் பாறுமென்று புனிதநன் னடனஞ்செய்து
மறுத்திரு மார்பனுமம் வழுத்தின னிளைத்த பின்பு
நிறுத்தின னிருக்கப்பின்பு நிமலமெய் யன்பர் முன்போல்
வெறுப்பறுங் கீர்த்தனங்கள் விளம்பினர் வியப்பயாரும். (ருருச)

அதுமுதனடனஞ் செய்தோனங் கடைபவருக்கெல்லாம்
மதுவிரி மலரின் மாலைவகுத்தனன் சார்த்திவந்தான்
முதுமறைதெரியு மன்பரவன் முகங்காணுந்தோறும்
நீதுசிர மபரிகாரி நண்ணினனெனச் சொல்கிற்பார். (ருருரு)

வேறு

நான்மாத மளவுமவ்வூர் நண்ணிப்பின் றேருவெனு நகர்க்குவந்து
மாமார்பன் கீர்த்தனங்கள் வழங்கிமரு வினர்துகா ராமசாமி
பீமாசங்கரதல யாத்திரைபோகப் புனுவுறு பேரறிஞரோடு
தேமாறிற் சிஞ்சுவடி வாழுஞ்சிந் தாமணிவேதியன் பெயர்ந்து. (ருரு௬)

வழியிலுறு தேகுவுக்கு வந்தனனுகைத்துகா ராமசாமி
மொழியுமவனைக்காண வருமளவில் விரைந்தெதிர்போய் முந்நூன்மார்பன்
றழுவினன்மற் றிருவருஞ்சந் தோஷித்தார்பின்பு துகாராமசாமி
வழுவின்முகந் தனைநோக்கி யொருமறையோன் றனக்குணவு வழங்குகென்றான்

நன்றெனமெய் யன்பர்மனை தனிற்சென்றங் கொருவருக்கு நல்கத்தக்க
தொன்றுறக்கண்டதையெடுத்துக்கொண்டுவரயாத்திரைக்குற்றோரொல்லோரும்
இன்றெமக்குந் தருகவெனத் துகாராம சாமியில்லை யென்னமாட்டா
தன்றுமனம் வருந்தித்தே வாதிதேவாமலர்மே லமலைக்கன்பா. (ருருஅ)

இங்குறும்யாத்திரைக்கார ரெல்லோர்க்குந் திருத்திசெய்தற்கென்செய்கேன்யா
பொங்குநின தருள்புரிய வேண்டுமென நினைப்பளவிற் புவனிநாதன் [ன்
தங்குதிரு வருளாலே யொருவருக்குத் தக்கவது தானெல்லொர்க்கும்
பங்குபிரித் துதவும்வகை பெருகுதல்கண் டெல்லோர்க்கும் பகுத்தளித்தார்.( )

அளித்ததுகண் டுறுசிந்தா மணிமறையோன் முதலானோ ரதிசயித்துக்
களிப்புறுசிந் தையினோடு துகாராமர் தமைப்புகழ்ந்து களிவினுண்டு
தெளித்தவர்சொல் கதைபிரவிற்கேட்டுமகிழ் சிறந்தவராய்ச்செய்யவெய்யோன்
வெளிப்படுபோ தன்பரிடை விடைபெற்றி யாத்திரைக்கு மேவினரோ. (ருசு0)

அக்காலத் தொருமறையோன் ஞானதேவமர்சமாதிக் கணண்மித்
தக்கோரோ யெனக்கேம நல்குகெனப் பணிந்துதுதி சாற்றிமேவ
முக்காலந் தெரிஞான பதிமறையோன் கனவினிடை முந்திநீபோய்
மிக்காரின் மிக்கதுகா ராமரிடை நின்கருத்தை விளம்புகென்றார். (ருசுக)

துயிலுணர்ந்தவ் வாறுதுகா ராமரிடைத் துன்னியுற்ற கனவைச் சொன்னான்
பயின்மறையோ னதைக்கேட்டு மெய்யன்பர் மனம்வருந்திப் பாண்டுரங்கா
மயில் வடிவா நானேதுரப் பலநினை னடிக்கடியிவ் வகையாந்துன்பம்
செயிலெனக்கென்செய்வதெனத்தொழுதேத்திமறையோர்க்குச்செப்புகின்றார்

சிவாஜியெனும்வலேயல்விற்போனிடைச்சென்றுநின்கருத்தைச்செப்பியன்றான்
எவாறுதவுகின்றனனோ வதைப்பெறுக நீயென்ன வெய்தும்பார்ப்பான்
அவாறுலோ கப்பதிக்கண் மேவிவலே விற்பவன்பா லடைவைச்சொல்ல
தவாதவனு நான்கிரும்புப் பாளத்தைத் தந்துசென்று சாற்றுகென்றான். (௫௬௩)

அப்பனவ னவற்றைத்தன் சிரமேற்கொண் டெனதுமிடி யகலவேண்டிச்
செப்பறுஞானேசரிடைச் செப்பினதற் கிவ்வாறு சேர்ந்ததேயென்
றொப்பில்விதி யெனத்துன்புற் றுறுபோதிற் சுமைதாங்கா துயர்கோண்ஹோர
வெற்பிடை முப்பாளத்தைக் கிடத்தியொன்றைக் கொடுதேகு மேவினனாய். ( )

மெய்யன்பர்தமைக் கண்டுநிற்கவவர் கிடைத்ததென்னே விளம்புகென்ன
ஐயவிதேகிடைத்த தெனக்காட்டலு மெய்யன்பரதை யருளினோக்கச்
செய்ய செழும்பொன்னாகக் கொடுவந்தோன் வியப்பெய்தித் துன்பந் தீர்ந்தான்
துய்யரவன்றனே நோக்கினானதே வருளுனக்குச் சாந்தமென்று. ௫௬௫

உன்குடும்பந்தனேக் காக்கவினிப்போதி யென்றுரைத்தா ருடனேபார்ப்பான்
நன்கதனேக்கொண்டு சென்றுகோண் ஹோரவெற்பினிடை நண்ணிப் பார்க்க
முன்பிடுமுப் பாளமுங்காணுனுகி நமக்குவிதி முடிவீதென்று
தன்பதிபோய்ச் சேர்ந்துமிடி தீர்ந்து நாடோறு மகிழ்தழைப் பதானுன்

முளாவொடு பீவராவென்னு நதிகளுறுஞ் சங்கமத்தின் மூழ்குங்காலம்
வளாவுதலாற்றேகுவென்னு மூரிலுள்ள சிலர்மூழ்க மருவும் போதில்
அளாவியன்பருஞ் சென்றார் மார்க்கத்திலோர் பெரியவரணியத்தின்
உளாகியதாட்டுக்கிடைமற்றதி லுலவுங்கொடிய செய்கையுடையவோர்நாய். ( )

அவ்வழிச் செல்வோர் மிடற்றைக் கடித்திரத்த பானஞ் செய்வது வாயார்க்கும்
செவ்வனடங்காதது மாகியதன்பர் செல்வுழிக்கண் டுறச்சினந்து
கவ்வமிடற் றினைநேரோ வரக்கண்டு துகாராமர் கலங்குறாமல்
இவ்வகிலத் துறுஜீவ ரிடத்துவெறுப் பில்லேன்மேல் வெறுப்பே னென்றார். ( )

என்னுமள வேசாந்த மெய்தியதந் நாய்பின்ன ரவணிகந்து
துன்னுநதிச் சங்கமத்தி னிடைமூழ்கிப் பாண்டுரங்க னேத்துதித்து
மன்னினர்பின் பிடையரந்த நாய்குரையா தொருவரையும் வாய்க்கொள்ளாமல்
முன்னுறு சாந்தங்கண்டு கிடைக்குத வாதாயிற்றே யெனமொழிந்தார். (௫௬௯

ஆனந்தத் தொடுபஜித்துக் கொண்டிருந்த துகாராமர் மத்தியானம்
தான்வந்த போதுடனே ராஞ்சணவூர் தனிலொருவே தியனிற் சார்ந்தார்
பானந்த பாணியடி யாரொன்றப் பனவனறிந் துடன்பாங்காக
ஞானந்த ஞுயர்ந்த மெய்யன்ப ருணச்சோறு நல்கிப்போற்றி. (௫௭௦)

எட்டுவருஷஞ்சென்று மிக்குழந்தை பேசாம லூமையாகித்
தட்டுதலா யினன்வேதந் தானோத வுபநயனந் தானெவ்வாறு
கிட்டுவதென்றுறு துயராக்கிளத்தலுந் துகாராமர் பேசகில்லா
முட்டுறுமச்சுதனேத் தம்மருகழைத்து விட்டலன்பேர் மொழிகவென்றார். ௫௭௧

சொன்னவுடன் விட்டல விட்டலவென் றச்சுதன்சொல்லச் சூழ்ந்துநின்ற
அன்னேயொடு தந்தை வியந்தானந்தங் கொண்டரிதனன் பராலே
மன்னிய நம்மகன் பேசலாயிற்றேயென வவரைவாழ்த்திநன்கு
துன்னுறத் தம்மனேயில் வைத்துக்கொண்டு சுதற்குப வீதமணஞ்சூழ்ந்தாரே. ( )

அங்குநின்று மீண்டுவரும் போதிலன்பர் தமைநோக்கி யாட்டுக்காரன்
எங்கள் கிடைக்குதவாதாயிற் றிந்தநாய்நீர் கொண்டேகுமென் னத்
துங்கமிகு துகாராமர் நாயைவாவென்று பின்னே தொடரக்கொண்டு
தங்குதம்மூர்வர வேகாதசியன்றுண்ணாதரி பேர்தனைக் கேட்டந்நாய். (ருஎக

இருக்கவொரு நாளிலெலவடவூர்மால் ஜீயங்கே யெய்தியன்பர்
திருக்கமலமுக நோக்கி யானித்த நியமஞ் செய்யும்படிக்குப்
பெருக்கவருள் செய்கென்னத் துகாராம ரவனிலைமை பெரிதுதேர்ந்து
சுருக்கில் பகவத் கீதைதினமும் பாராயணஞ் செய்கென்று சொன்னார். (ருஎச)

அப்படியேயவனூர் போய்த்தினமும் பாராயணஞ் செய்த மருநாளில்
ஒப்பறு சீர்ப்பாண்டுரங்கனுகந் திருந்தானதற்கொரு நாள் கேடமென்று
செப்புறு மூர்ச்சோசியனங் கெய்திமாலஜி செய்யுஞ்செய்கை நோக்கித்
தப்புற நீ படிப்பதனாலுனக்கு நரகங்கிடைக்கு மென்று சாற்ற. (ருஎரு)

அவன் சொல்லுவதை நம்பித்தினமும் பாராயணஞ் செய்வதனை விட்டான்
இவன்கேடமெனுமூர் வந்திருக்கப் பாண்டுரங்கனவன் கனவிலெய்தி
உவன் பாராயணஞ்செய்யுமதின் மகிழ்ந்து நானிருக்கவு வனைச்செய்யா
தெவன்விரோதஞ் செய்தாய் பழயபடியவன் வாசிக்கச் செய்யாயேல். (ருஎசு)

உனக்காபத்துக் களினியுறவரு மென்றுரைக்க வவனுதயத்தேகி
மனக்கானபடி முன்போல் வாசியெனமாலஜியான் வழுவினேதேன்
எனக்காயாம்பூ நிறத்தோன் சம்மதமாயெனக்கு நியமித்தானென்னத்
தனக்கானபடி முன்போல் வாசித்துத் தினந்தோறுஞ் சார்வதானன். (ருஎஎ)

மெய்யன்பரான துகாராமர் கண்ணன் பாலலீலைகளை வேண்டிச்
செய்யபங்கங்களை யிராமேச்சுரபட்டன் பார்த்துத்திருத்தல் செய்து
மையன்றாய் வேறுவகை வாசிக்கலாயினன் மற்றதனை நோக்கித்
துய்யன் சீர்ப்பாண்டுரங்கன் பட்டன்முன்னே கனவில்வந்துசொல்லுகின்றான்.

பட்டாநீதுகாராமன் சரியாய்ச் சொன்னதைப் பழுதென்றறத்திருத்தி
இட்டாய் மற்றதெனக்குச் சம்மதமன் றெனலுமவன் மிகவியந்து
நெட்டார்வங் கொடுதுகாராம ரிடைத்தெரிவித்து நிகழ்ந்தவன்று
தொட்டாங் கன்னவர் சொல்லும்படி யெழுதிவாசித்துத் தொடர்ந்திருந்தான்()

இப்படியாய்ச் சில தினங்கள் கழிந்த பின்பு கங்காஜிமவாளே யென்னும்
சொற்பெறு வேதியரோடு சந்தாஜிவாணி பருந்தொடரக்கூவி
ஒப்பறு மாதீர்த்த யாத்திரை போகக் கொண்டன் பருறு மார்க்கத்தில்
தப்பறு கோதளேச்சுரமாமலையொடு சிங்கணப்பூருஞ் சார்ந்தவூரில். (ருஅ0)

சரோவரமென்றுறு தடங்கண்டதின் மூழ்கிக் கூடவந்தோர் தம்மை நோக்கி
ஒரோ நால்வர்க்கோதன மிங்குறல் வேண்டு மென்னவவருடனே செய்ய
ஓரோபவனென்றும் மலையிலுறுஞ் சம்பு நக்கனனுயடைந்துலோக
வரோதயர் பாற்சடா மகுடத்தொடு பூதியுடம் பெல்லாம் வயங்கக்கையில். ( )

பலிவாங்கு பாத்திரங்கொண்டெதிர் நின்றிங்கும்மை நெடும்பகலாய்க்காண
மலிவோங்கு காதலுட னுபவாசங் கொண்டிருந்தேன் வந்தீரின்றென்
நலிநீங்கப் போஜனந்தந்திடல் வேண்டுமெனலு மன்பர் நயந்திருக்கப்
பொலிவோங் குமா சனந்தந் திருத்தியுபசார மிகப்புரிந்துபோற்றி (ருஅஉ)

சமையல் செய்தபின்பு கங்காஜி மவாளை நோக்கி யிங்கியாந் தங்குகின்ற
அமைவில் வந்தவதிதிக்குப்போனகந் தந்தானபின்ன ரமுதுசெய்வோம்
கமைவினென்னக் கங்காஜி யப்படியே போனகமோர் கலத்தமைக்க
உமைகொழுன னல்வருக்குமுள்ள போனகமெல்லா முண்டுதீர்த்து. (௫௮௩)

காசுத்திசெய்து கொண்டு தாம்பூலமும் பெற்றுக் கண்ணனன்பர்
வரசுத்த முகநோக்கி யாசிசொல்லித் தானுறையு மலைபோய்ச்சார்ந்தான்
பரசுற்றுக் கங்காஜியன்பரோ நீர் சொன்னபடியே நன்று
விரசுற்றுநாமுஞ் சாப்பிடிலெய்து மதிதி பசிவீயாதென்று. (௫௮௪)

பாத்திரங்களிடையீ மொய்யாதபடி மூடிவைத்துப் பகருர்சார்ந்து
சீர்த்திரச் சாமக்கிரிகை சேகரித்துக்கொடு வந்துசமையல்செய்யப்
போர்த்திருந்த பாத்திரத்தைத் திறக்கவவற்றிற்கறி போனகம்பொருந்த
நேத்திரத்திற் கண்டு வியப்பெய்திய ரனதிதியாய் நேர்ந்தானென்று. (௫௮௫)

தெரிந்தன்பர் சேவைதன்னாற் சிவனுருவங் கண்காணச்சேர்ந்ததென்று
விரிந்தமகிழ் கொண்டந்தப் போனகத்தை மூவருந்தாம் விரும்பியுண்டு
திரிந்துபல தீர்த்தமுஞ் சென்றுடியங்குச் சிறந்தசினகரத்துஞ்சேவை
புரிந்துபின்பு தேகுவெனு மூர்க்குவந் தச்சுதனுமம் புகழ்ந்திருந்தார். (௫௮௬)

வேறு.

ஒருதினங்கதையு ஞற்றுறுபோதிலு வணகேதன னுமமகத்வம்
பெருகவோதுவதினை நடந்தும் பேசிலொவ்வரடி பேர்ப்பதனுக்கோர்
அருமகப்பல னடைந்திடுமென்று ரன்னவாறெவரு மறைவுறலுற்றார்
கருதுமோர்திரு நனுமமுனைத்து க்கைக்கயிற்றின் முடிகட்டிநடப்பார் (௫௮௭)

இன்னவாறு பணிரண்டு மதிக்காறியலுந்நாளிலொருவன் றினைநாளும்
துன்னுறும் பிரமரக்ஷசுதானே தொலையுமாறரி ஹரோச்வரமுற்று
மன்னுசேவை செய்துவந்தனனோர் நாள்மருவு மப்பிரமரக்ஷசவற்கு
முன்னமொய்தி யொருயக்ய பலத்தைதமுந்தெனக் குதவிலுன்னை விடுத்தே.(௫௮௮)

முத்தியெய்துவனெனச் சொலவந்த மொழிவினவி மறையோனதுசிந்தை
மெத்தவுங் குலைதலாயினியக்ஞ வினைமுடிக்கும் வலியின்றென வேபின்
எத்திசைக் கணுமலைந்த விடங்களெய்துறும் ஜனனைநோக்கி யெனக்கோர்
சுத்தயக்ஞ பலனீதிரொனுமுன் சொல்லியும் மொருவருந்தரலின்றி. (௫௮௯)

லோகமென்பதி யடைந்த விடத்திலுற் றுளோரையும் வினவவொருத்தன்
யாகநன்பல னளிப்ப னெனுமானுமமோதி முடியிட்டதி லொன்றை
வேகமா யுட னறுத்ததிலேநீர் விட்டுவந்தமறை வேதியனுச்சி
ஆகவப்புன றெளித்தலுமேவியமர்தரும் பிரமரக்ஷசுமுத்தி. (௫௯௰)

எய்தலுற்றதது வெய்தியபார்ப்பா னிருநிலத்தில் விழலாகி யெழுந்தியான்
உய்த லுற்றனனெனக் களிகூர்ந்தா னுற்றவர் செயலறிந்தவர் யாரும்
செய்தவப்பெருமையான் மிகுமன்பர் செப்புநாமவலி யிப்பொழுதிங்கு
மெய்தழைக்க விழிகண்டனமென்று மெத்தவுங் களிவிளங்கினர் மாதோ. ௫௯௧

நண்டுதேண் மதியினன் னரிநாளினண்ணு பண்டரிநணுது மெயன்பர்க்
கண்டுறுங்குளிர் சுரத்துட லெய்ததாக யாத்திரை தவிர்க்கு மிதற்கென்
கொண்டுதீர்துமெனவே யனுருள்ளங் கூடவாமதிமுகிற் புனல்காணு
தெண்டுளங்கலுறு கன்றுசகோரமோர் கொள்சாதகம் வகுலியெனவன்பர் (௫௯௨)

பாண்டுரங்கனடி கண்டிலராகிப் பரிதபித் துறுதலாயி னரந்நாள்
ஈண்டுமீமொழு சதக்கருடன்மீ தெழுதுறுங் கொடியினோர் திரளெய்திற்
றூண்டுவாழ்வுறு மெயன்பரையுங்கூ உயணிகொள் பண்டரியடைந்திடுதற்கு
நீண்டுகூறுமரி நாமம்வளருள்ளே நிறைவுறத் தெரிதலாகி மெயன்பர். (௫௯௩)

வருமவர்க்கு மரியாதைகள் செய்ய மனைவிடுத்துவெளிவந்தெதிர்கொண்டு
பெருகுமவ் வவர்தமக் குறலான பெருமைசெய்து துதிபேசினராகி
மருவுகண் களிடை நீர்பெருகச் சீர்மன்னு பண்டரி நன்மாலை நினைந்து
கருதுமன்பின னொலோருமெதிர்ந்துன் கமலபாத மலர்கண்டுகளிக்க. (௫௯௪)

யானொருத்தனு மெதிர்ந்தடி காணுதிங் கிருக்கவினை யென்செய் துளேன்முன்
மீனிருத்து துவசத்தனை யீன்றவிட்டலாவடி யென்மேன்முனிவேனீ
தானருட் கண்மலர்கொண்டெனைநோக்கிற்சாருமிங்கிவரொடெய்தியுனைக்கண்
டானமெய்ப் பரவசத்துடனின்பி னுடல்பாடல் புரிகிற்கிலனேயோ. (௫௯௫)

என்றுபற்பல விதத்தினை வாகியிருப தோடிணை யிரட்டியபங்கம்
நன்றுநிட்டிய வணண்ணுறு வோர்பானல் கிவிட்டலனிடத்திதுதந்து
துன்றுமென்குறை யுநன்கவ னெண்ணச் சொல்லுகென்று விழிநீர் சொரிதந்து
நின்றுமற்றவர் தமக்குப சாரநேய முந்தழுவலுஞ்செய்துநின்றார். (௫௯௬)

நிற்கயாத்திரை செல்வோரிவர் நேரா நிலைதனக்குளம் வருந்தினராகிச்
சொற்கைவீணை மிளிர்தாள மிருதங்கத் தொனிமுழங்கஹரிநாமமொழிந்து
எற்கவின்குலவு பண்டரியெய்தி யெதிரும்வைணவரொடின்புபொருந்தி
ஒற்கமின்றுபணி வுற்றுவிராவியொருவருக்கொருவர்தழுவிநீராடி. (௫௯௭)

புண்டலீகரடி நண்ணிவணங்கிப் போற்றியோங்குறு புரத்தைவலஞ்செய்
தண்டமேவ நிமிர்ககபதி கம்பத்தரு கணைந்துபணிவுற்றரிநாமம்
கொண்டபாடல்பல கூறினர்மேவிக் கோயிலிற் குலவுவிட்ட லனைக்கண்
கண்டகங் களிதுளும்ப வணங்கிக் கவினுடற்றழுவியன்புகனிந்து. (௫௯௮)

குளிர்சுரத்தோடுறு மன்பர்கொடுத்த குறைவில் பாடலடிமுன்னுறவைத்துத்
தெளிவினின்னெதிரடைந்து வணங்கத் திறமிலாமலுனதன் பரிரங்கித்
துளிகணீரோடுறுசெய்கைநினக்கேதோன்றுநாங்களெதிர்சொல்வதுமுண்டோ
அளிநிரம்பு கருணாநிதியே யென்றனைவருந்துதி புரிந்தனராக (௫௯௮)

விட்டலன் சொலல் விரூவுமுனுள்ளம்விதிர்விதிர்த் தலரின் மின்னினை நோக்கி
மட்டிலென்னது மெயன்பனடந்து வருவதற்கு வலியின்றி வரைந்து
இட்டவென்கண் வரவிட்ட வபங்கங் கெழுமல் கண்டெனுள மினைகிறதாதல்
பெட்டவன்பனிடை நாமடைவுற்றுப் பெரிதுனுனிலை யுசாவுதல் வேண்டும். (௬௱

என்றனன்வின வியொண்கமலப் பெண்ணினை விலாயுனை வணங்கவனேகர்
துன்றுகின்ற தினமின்ற வணெய்திற்று களினின் சகுணவடிவு துலங்க
நன்றுசேவைசெய நாடினர்காணுர் நலிவுமேவுவ ரொனச்சொலி நாதன்
பொன்றதும் புசிறையொன்று விகங்கபூபதிக்கண் விழிபோக்கியுரைப்பான். ( )

ஈதுகண்டவுட னென்வயின் வல்லேயெய்து நீகருடனேறியெனுவங்
கோதுறுங்கடித மொன்றெழுதித்தந்து வணவேகி நகருற்றது காராம்
சாதுதன்வயி னளித்திது தன்னைத்தக்க நின்பிடரி லேறுறவேற்றிப்
போதுகொண்டவனை யென்னலு மந்தப்புட்கு நாயகனுடன் கொடுபோனான்()

ஒருகணத்தி லுயர் தேகுநகர்க்கு ளுற்ரூர் பண்டரியுறுந்திசைநோக்கிக்
கருதிவிட்டலனையே பரவசமாய்க் கண்கணீருக விருந்ததுகாராம்
அருகுவந்தவர் தமக்கு நினைப்புண்டாகவே யினிதியற்றிய நந்தன்
திருமுகந் தனைவழங்கி மெயன்பீர்தேக நன்கிலது தேர்ந்துமையின்றே. (௬௱௩)

[க

முதுகிலேற்றி வருகென்றெனைவிட்டான்மொய்துழாய்முகில்விரைந்துமைநோ
கதுமெனப் பிடறிலேறுக வென்னக் கருடனோதுத றெரிந்து துகாராம்
எதுகுலன்றிரு முகத்தைவிழிக் கண்ணினித லைணத்ததையவிழ்த்துடனோக்க
முதுவைகுந்த முறுமளவும் விலங்காமுந்துமாயுள்பெறுகிற்க துகாராம் (௬௱௪)

இன்னுமென்னிரு விபூதிகளுக்கு மிறைவனாகவினி நீயெனிடத்தின்
மன்னிநோக் கவலியின்றி யிருக்கும் வகையறிந்துன் வயின்வந் துனைநோக்க
உன்னிலீண்டுமெகிழுற் சவகாலமுற்றதா லவனுறற் கொழிவில்லை
பன்னுமெற் கதுதனுலி விகங்கபதியை யுய்த்தனனவன் பிடர்மேனி. (௬௱௫)

ஏறியிங்கு விரைவிற் புகுகென்ன வெழுதும் வாசகமனைத்துமுணர்ந்து
பாறுதம்பதியை நோக்கினரைய பரமனேறு திருவாகனமான
மாறினின் முதுகில்யானினிதேற வாய்க்குமோவிது தகாதினியுய்த்த
நாறுபைந்துளவனின் முதுகேறி நண்ணல் வேண்டு மிவனுன் மகிழ்வெய்த. ( )

என்றடிக்கடி பணிந்தன ரிவ்வாறியலுகின்ற செயல் யாவுமுணர்ந்து
துன்றுபுட் பதிவிரைந்தனர் மீண்டுஞளவினனடி யடைந்துவணங்கி
நன்று சென்றது நடந்ததுமெல்லா நவிலலுந் திருவினாயகனுள்ளம்
கன்றிமென்மலரினங்கையைநோக்கிக்கடுகியாம்புரிவதேதினியென்ருன் (௬௱௭)

என்னலுங் கமலமங்கைமனுளா வினியெனே புரிவதவ் வயின்யாமே
நன்னருற் சவமுடிந்த பினேகிநன்கு கண்டுவருவோ மெனநாதன்
அன்னவாபுரிது மென்றமர்வாக வடைவினனங்கு தினமானபின்வந்து
துன்னும்வைணவர்கள் பண்டரியென்னுந் தூயவூர்தொழுதுபின்புதொடர்ந்தார்

பழுதில்வெண்ணெய் விளையாடல் செயக்கோபால மாபுரமடைந்து பயின்று
முழுதுமின்பினிடை மூழ்கினராகி முற்றுமாலரிதனும மொழிந்து
வழுவில்விட்டல னினல்விடைகொண்டு வந்தவூர்புகவழிக் கொடுபோனுர்
அழிவிலின்புபெறுகின்ற துகாராம வரினேவுமவரவர் வயினுற்ருர். (௬௱௯)

உற்றபோதிலவர் பண்டரி நோக்கியுன்னி நின்றபடியே யசைவின்றி
நிற்றல்கண்டனர் வியந்திவர்தீர நீணிலத்திலெவருக் குறுமென்று
மற்றையன்பரை மகிழ்ந்துவணங்க வந்தவர்க்குமரியாதையொடன்பர்
முற்றுமன்பொடு தழீஇனரோத்த முந்தினேர்கள் பிரசாதமளித்தார். (௬௱௰)

தந்தசாமி பிரசாதமருந்திச் சாமிபொன்னினுடனே சுகமேயோ
இந்தவுற்சவமு நன்குவிளங்கிற்றே கொலோவினிது கண்டுறுநீவிர்
முந்துரைத்திரென வுற்சவ நன்றேமுடி விலாமுதல் வனுஞ்சுக மென்று
சிந்தையிற்களிதுளும்ப விசைத்துச்சென்று கூடினர்செலுந்தமதூர்க்கே. (௬௧௧)

பண்டரிக்கு ளுறைபங்கயமென்கட் பரமனெண்முடியின் மீதுகிரீடம்
குண்டலஞ்செவிகளிற் கவின்மேவக்கொண்டு கைகளில் விளங்குறுசங்கம்
மண்டழற்றி கிரிதண்டொடு வல்வில் வலியகட்க மிலகப்பொனினுடை
தண்டழைத்துளவொடொண் மணிமார்பிற்றழைவுறப்பலகலன்கடயங்க(௬௧௨

பெண்களுக்கழகு தந்துவிளங்கிப் பெருகுறுந் திருவுடன் கருடன்மேல்
கண்களிப்பவிவர் கின்றனருகிக் கருதுதேகு நகர்வந்து துகாராம்
எண்களிக்கமுன ரெய்திமெயன்பர்க்கின் புறத்தழுவவெய்தவசம் போய்
விண்களிக்க வமுதந்தரு மொண்சீர் விமலன் வந்தனனெனக்கண்விழித்தார்.( )

கண்டுபொன்னடிவணங்கலுமண்ணிற்கவிழ்குழந்தயை யெடுத்தணை தாய்போல்
கொண்டுமார்புற வணைத்தனனையன் குளிர்வுகொண்டுள மகிழ்ந்து துகாராம்
சண்டனிந்து பயிறம்மக மேவச்சௌரி செங்கைமலர்பற்றினரோகி
விண்டுபொன்னொடு விளங்க விருத்திமிக்கசீர்பல விழைந்து துதித்தார்.(௯௧௪)

துதிவிரும்பி யுறுகண்ணன் முனின்ற தொண்டனைப்பரிவுகொண்டுடனோக்கி
மதியினாய் பசிமிகுந்த தெமக்குவருக வுண்டியெனமற்றதுகேட்டுள்
வதிதருந் துணைவி தன்முகநோக்கி வல்லையாகவுணவென்றுவகுத்தார்
பதியுறைந்தமக ளப்பமமைத்துப் பற்றிலைக்கறி கடைந்து படைத்தாள். (௯௧௫)

அமுதுசேவருண வன்றருளை யனப்பமோடி னிதிலைக்கறி துய்த்தான்
குமுதவாய்மலர் மினோடுகை சுத்திகொண்டுபின்னரவணின்றதுகாராம்
தமதுளங் களிதுளங் குறவார்த்தை தந்துபற்பல பினவர்விடைபெற்றுச்
சமமிலொண் கருடன் மிதுயர் பொன்னுந் தானுமேறியுறு பண்டரிசார்ந்தான்.

வேறு

ஒருமறையோன்விவேகசிந்துவெனுங்கிரந்தந்தனைப்பாராயணஞ்செய் தோர்ந்து
தெருளுறுவான் றுகாராமர் பெருங்கீர்த்தி தனையெவருஞ் செப்பக்கேட்டுக்
கருதுளத்தில் வைகுந்தவாசன் வாசத்தலமாய்க் கலந்தபோது
வெருவலுறுங் காடுமோடுகளெல்லா மலைவானேன் வீணேயென்று. (௯௧௭)

அன்னவனை மதியாமல் விவேகசிந்துதனைக் கேட்கிலமையு மெய்ம்மை
என்னவுன்னித்தேகு நகர்வந்திந்தி ராயணிதீரத்திருந்து
பொன்னமர் மார்பன்றிரு நாமம்புகன்று வைகுமவர்தம்பாற்போந்து
நன்னரளாய்த் துகாராமர் தமைநோக்கி வினயமொடு நவிலுகின்றார். (௯௧௮)

ஸ்ரீமுகுந்த ராஜனாற் செயப்பட்ட விவேகசிந்துதனையத்திரத்
தாமளவு படிக்கின்றேனீர் பிரியத்துடன் கேட்கலா வீரென்ன
நாமமொனுந் துகாராமர் நன்றெனன் றோர்கம்பளத் தமற்றலை யுடம்பு
தாமெல்லா மறைவுற மூடிக்கொண்டம்மறையவற்குச் சமைவுசொல்வார்.(

உலகிலுறு சராசரங் கடமைநோக்கிக் கொண்டுவினவுறிலெனக்கு
விலகுமனம் வேறாகு மாதலாற் போர்த்தல்செய்து மேவுகின்றேன்
சொலவலநீர் சொல்லுமென்ன மறையவன்மெய்தானென்றுசொலத்தொடங்கி
அலகில்பொரு ளொருஜாம வரையுந் தான்படித்துச் சொன்னானங்கம்மா (௯௨௦)

சொலுமளவுந் துகாராமரோ தொன்றும் பேசாமற் றுடிப்புறாமல்
உலைவின்றி யுறல்கண்டு மறையவன் கம்பளத்தை விலகுறுத்துண்ணோக்க
நலவன்பரிரு செவியுமிருவிரல் கொண்டுறப்புதைத்து நாமமோதிச்
சலசவிலோசன னடியைத்தியானித்துக் கொண்டிருந்தார் தவறாமல்.(௯௨௧)

அன்ன வகைதனைக்கண்டு மறையவன் சிந்தாகுல முயனவிறாரம்
தன்னிலிருந் திங்குவந்தோர் ஜாமமளவும் படித்துத்தளர்ந்தேன் வீணே
என்ன வருந்துறுபோதிற் றுகாராமரவன் முகத்தையேறநோக்கி
மன்னு கருமுகி னிறத்தோன் சகுணவடிவிடை மனத்தை வைத்தேனுதல்.(

வேறேயொன் றிலுமுருசி தோன்றவில்லை யெனக்காக மிருவருத்தப்
பேறுகாதும தூர்க்குத் தயவுசெய்து செல்லுமெனப் பேசக்கேட்டுக்
கூறுதொன்றும் பின்பு துகாராமர் தனைநோக்கிக் குருசுவாமி
மாறேது மிலாதவரி மலரடியை யான்காண வருக்க வென்று. (௬௨௩)

அடியின்மிசை நெடி துவீழ்ந் தழுதிந்த விவேகசிந்தை யநேக நாளாய்ப்
படியின்மிசை யான்படித்துப் பயனென்றுங் காணது பலர்பாற் சென்று
கொடியனியான் கூறியா ணவமீறித் திரிந்தும்பாற் குறுகியிந்நாள்
கடியமனத் துடன்பரிட்சை செயவந்த பிழைபொறுத்துக் காத்தல்வேண்டும். ()

அருளுடையீர் பாண்டுரங்கற் கன்புடையீர் அடியர்களுக் கனுக்கிர கிக்கும்
பொருளுடையீர் மருளுடைய புலையர்தமை யீடேற்றும் பொருவிலாத
தெருளுடையீர் சீவகாருணியமுடை யீரொன்று செப்பி யுள்ளத்
திருளுடைய விதோபதே சஞ்செய்க வெனவேண்ட விரங்கி யன்பர். (௬௨௫)

அன்னவனை யருகழைத்துச் சிரமீது கரகமல மமைத்தி லங்கும்
பொன்னவளை யுரத்துவைத்தோன் றிருநாம மந்திரத்தைப் போதஞ்செய்து
நின்னதூர் தனக்கேகிப் பஜனைபுரிந் திருத்தியெனப் போக்கி நேய
மன்னுதுகா ராமர்தம தில்வந்து திருமாலை வழுத்தி வாழ்ந்தார். (௬—)

வேறு

மற்றொரு தினத்தயலி லோகமெனவாழூர்
உற்றவர்கள் கீர்த்தன முளுற்றுவதுகேட்க
நற்றினர் மெயன்பரை யழைத்து நகர்நண்ணித்
துற்றவினிதாகிய சுவைப்பத மமைத்தார். (௬௨௭)

யாருமினிதாயுண வயின்ற பினிராவில்
சீரினரிகீர்த்தன மியம்புதல் செய்வித்துச்
சாருமுதயத்திலியலராதி சமைத்து
நேரின் மகிழ்வுற்ற பினிரம்பிய மெயன்பர். (௬௨௮)

ஒருவருமுறுமலு வருற்றவொரு வாவிப்
பொருபுனலிலாடியரி பூசனை புரிந்தார்
வருமளவிலாடு புனல்வாவி யுவர்மாறிப்
பருக நலவின்புனல் பரந்துளதெநாளும். (௬௨௯)

பின்பொரு தினத்திரவு தன்னிலரிபேரோ
மன்பொருவில் கீர்த்தன மகிழ்ந்தனருரைக்க
அன்பினளவில்லவரடைந்தனர் விஞவி
இன்பின் மிகுபோதிருவ ரெய்தினர் துறந்தோர் (௬௩௰)

அத்துறவினோரிரு வருந்தனி மெயன்பர்
ஒத்துரை செயுங்கதையிலோது திருநாம
பத்தியை நிறீ இப்பழகு சாதனைகளிற் சீர்
உத்தம நன்மால் பெயருரைப்பதெனவோதி. (௬௩௧)

எக்கருமமுஞ் செயவியன்றதுவுமாகி
முக்கியமதாகு நமுகுந்தனதுநாமம்
தக்கதொரு நான்கு வருணத்தினர் தமக்கும்
மிக்கபவ நீந்த வெளிதாகவும் விளங்கும். (௬௩௨)

விண்டு பெயரோதுவதின் மிக்கதிலை யென்று
கொண்டுரை செய்கின்றது குறித்துறு துறந்தோர்
மண்டுசின மாயவனெறிஇ வெளியில் வந்து
தண்டுதவிலாத நகராடலை வனிற்போய். (௬௩௩)

நீடுலகம் யாவுமனு நீதிபுரிதாது
கோடு வெறு மன்னவ குலத்திழிதலானேன்
மாடுதிரு நாமம் வினவத்தகுவ தோமால்
பீடுரை செயத்தகுவ தோவிழி பிறப்போன். (௬௩௪)

சாது ஜனராகியியல் சத்கருமமேசெய்
வேதியரை மால் பெயர் விளம்பும் வகைசெய்து
ஆதியிலவர்க்குரிய காரிய மனைத்தும்
தீதென விடுக்கும் வகை செய்தனன் மயக்கி. (௬௩௫)

கருமவழி ஞானவழியைக்கடிதல் செய்து
மருவுமறை யோர்தனை வணங்குறவி யற்றி
குருவென வுயர்ந்து வழிபாடு கொளுகின்றான்
ஒருவனிழி சூத்திர குலத்துறு துகாவே. (௬௩௬)

திருமறையோரென நிலாவுதல் செய்கின்றீர்
சீருறுபுரைவிலின செய்கை தெரியீரோ
சாரும்வகை கூலியவனுக் குரியதண்டம்
நேரும்வகை செய்வதிலை யேலுயிரை நீப்பேம். (௬௩௭)

என்றனர்க மண்டலமு மேந்து திரிதண்டும்
நின்றநிலையே விழவெறிந்து நிமிர்சீற்றம்
துன்றியிவை சொல்லுமளவில் வினவுதோன்றல்
நன்று பொறு மென்றவரை நோக்கிநவில்கின்றான். (௬௩௮)

தீவிரனசெய்து புகழ்சேடுறு துகாராம்
மேவும்வகை செய்வனிவண் மேவுறில் விவாதம்
ஓவிலது செய்பொழுது தோல்வியுறு வோருக்
கேய்வதொரு தண்டமதி யற்றுறுவனென்றே. (௬௩௯)

லோகநகருற்ற மறையோரொடு துகாராம்
வேகமொடு மேவும்வகை பத்திரம் விடுத்தான்
ஆகவருபத்திர மறிந்தவ ரெலோரும்
ஏகின்முடிவாவதெவனோ வெனவினைந்தார். (௬௪௰)

அன்னவர்வருந்துத லறிந்தனர்துகாராம்
என்னவரினுந் தடையியற்றிட விடோபா
நன்னருறுகின்ற பொழுதே னலிவதாவீர்
இன்னல்விடுகென்ற பயமீந்தன ரெழுந்தார். (௬௪௧)

தாளமுடன் வீணைமிருதங்க மொலிதங்க
ஆளரித நைமயரா தறைதல்கொண்டு
நீளவருவோரொடுநிறைந்துறுபுரைவின்
காளமுகின்மேவு பொழிலெய்தினர் கலந்தார். (௬௪௨)

ஊரருகிலுற்ற பொழிலுற்றபுனன் மூழ்கித்
தீரமதிருந்துபுரி பூசைசெய்த பின்பு
நாரணனுமை நவில்கீர்த்தன நயந்தங்
கார்வமொடு செய்துற வறிந்தன ரவூரார். (௯௪௩)

கீர்த்தனம் விளைவமகிழ்கின்ற நினைவோடு
சீர்த்திறம தாயபொருள் செங்கைகொடுவந்து
தீர்த்தனடியா னெதிர் சிறப்பு மிகவைத்து
கூர்த்ததிறலன் பரடிகும்பிடுதல்செய்தார். (௯௪௪)

நாடுறு மெயன்பருற நண்ணியதுதாது
கோடுவெனு மன் னுணர்தலாகி யெதிர்கொள்வான்
பீடுறுசுமங்கல மொடெய்த விகல்பெற்று
நீடுதுறவோ ரிருவரும் வழியினேர்ந்தார். (௯௪௫)

சூத்திர குலத்துறுதலாகிய துகாராம
பேர்த்திய னடக்கைகள் பெருந்தகை நமக்கு
வார்த்தை பலவாக முன் வகுத்ததை மறந்து
சீர்த்திரமதாக வெதிர்செல்வதெனை யென்றார். (௯௪௬)

என்றவர்சொலும் பொழுதிலேந்த லுலகியாரும்
சென்றெதிர் கொளும்பரிசி யானுமெதிர் செல்கைக்
கொன்றுவன் விவாதமதி லோரமதிலாமல்
நன்றுநடுவே புரிவனென் றெதிர்நவின்றான். (௯௪௭)

அன்பரிடை யெய்தியெதிர் பூசனையமைத்து
முன்புறவணங்கி மொழிகீர்த்தன முயன்றுள்
இன்புறப லோரொடு மிசைந்தினிது கேட்டு
மன்புள கரும்பிய வசத்தொடு வதிந்தான். (௯௪௮)

அந்தவமையத்தொரு ஜடாமுனியனாகி
சுந்தரதி கம்பரன் விபூதிமெய்துலங்க
வந்துதிகழன்பனை வணங்கி யுமைநோக்க
முந்துநெடு நாணனி முயன்றுகொ டிருந்தேன். (௯௪௯)

இன்றுநிறை வேறின மனோரதமெனக்கென்
றன்றவனை நன்குதழு விக்ககன மண்மித்
துன்றின னிருந்தவெவ ருங்களி துளங்கி
நன்றிவ னடைந்தவிவ னரிபதிதானே. (௯௫௰)

மூர்த்தியெனு மூவருரு வாகிமுயலுந்தத்
தாத்திரைய ரோவென வியந்தனர் தழைக்கக்
கீர்த்தன முடிந்தவுட னரதிகிளர்த்திச்
சீர்த்தபிர சாதமெவ ருக்குமருள் செய்தார். (௯௫௧)

அன்னபொழு தங்குமறை யோர்திலகனனை
மன்னனொடு மாலடி யர்தங்கழல்வணங்கி
என்னதுபதிக்கினிதி னெய்தியெமை நீவிர்
தன்னர்புரி கிற்கென நயந்தினி துரைத்தான். (௯௫௨)

நன்றென நகர்க்குளுட னண்ணினவரோடு
சென்றன ரிருக்கவர சீந்தவுழை சேர்ந்தங்
கொன்றினரொ லாருமினி துண்டபினர் மாலை
துன்றுமளவிற்றுறவி ரோரிருவர் துன்ன. (௬௫௩)

வைத்தரச னீரிருவ ரும்பொரு துகாராம்
மெய்த்தகதை செய்யுமள வாகியவிவ்வேளை
ஒத்தன விவாதம துளுற்றுமி னுளுற்றில்
எய்த்தவரை யொத்தபடி யிப்பொழு தொறுப்பேன். (௬௫௪)

தப்பவிடு கின்றில னெனக்கடிது சாற்ற
ஒப்பியிரு வோருமு னுடற்றிவனை வெல்வோம்
இப்பொழுதுபாருமென வெய்தினர் துகாராம்
அப்பொழுது கீர்த்தனையி லன்பினுரை செய்வார். (௬௫௫)

வேறு

வான்மீகி யஜாமேளன் பிரகலாதன் கணிகைவன் கஜேந்திரன்
ஊன்மேயுந் தவனேதுரு வன்றிரௌ பதிமுதலோ ருண்மையாக
மான்மேவுந் திருநாமம் வழுத்தியந்த மகிமையாலன் றேவானம்
தான்மேவி னரிதனில் வேறில்லை சாதனங்க டாமுண்டென்று. (௬௫௬)

சொல்பவனின் மூடனில்லை யெனநாம சித்தாந்தத் துணிவுகூறி
எல்லவரும் விட்டலன்ற னுமமேபஜியுங்க ளென்றுசொல்ல
நல்லவவை தனிலிருந்தோர் யாவரும் விட்டலனுமை நவின்றுதத்தம்
வல்லவுடன் மறந்துவிடோபா மயமா யசைவற்றுவதிதலானார். (௬௫௭)

எதிரிருந்த துறவினர் தாமிருவருந் துகாராம சாமிபாதம்
முதிருமன்பு கொண்டெழுந்து சாஷ்டாங்கத்தொடு வணங்கிமுகுந்தனுமம்
துதிபுரிந்தா ரதுகண்டு தாதுகோடெனு மன்னன்றுற வோரோநீர்
மதிமிகுந்த துகாராமை வெல்லவந்திங்ஙனம் வணங்கல் வழியன்றுதல். (௬௫அ)

உமைவேட தாரிகளென்றுன்னு கின்றேனி னித்தண்ட முமக்கு ளுற்றச்
சமைவுறுகின்றே னெனலுஞ் சந்நியாசி களரசே துகாராம்சாமி
இமையவருங் காண்பரு நாராயணனுய்ச் சங்குசக்கரங்கை யேந்தி
அமைவருந்தோனுன்கொடுதோன்று தலாலேவணங்கினம்யாமெனவறைந்தார்.

அறைவதுகேட் டரசனி வரரிபஜனைக் காகாதாராத லாலே
சிறையிடைவைத் தொறுப்பலெனச் சீறுதலுந் துகாராம சாமிதேர்ந்து
முறைபுரிவோ யிவரையினி முனியேலென் றமைவு செய்துமுகுந்தற் காங்கே
நிறைவுறமங்க ளாரதிசெய் தெல்லோர்க்கும் பிரசாத நிரப்பல் செய்தார். ( )

ஆனபின்புமுன் பிவர்தமருள் பெறுகோடோபா வென்பான் பிராடா
தானெனு மூர்போய்ச் சேர்ந்தான் புராணம் வாசித்தங்குச் சார்தலாக
ஞானமகாபண்டிதர் சூழ்ந்தொரு சுலோகத்துக்கு நன்கருத்தம்
ஊனமுறவுரைப்பது கேட்டுப் பிசகென்றுள்ள பொருளதற் குரைத்தான். ( )

வேறு

வினவியாரும் வியந்தின்ன மூடனுக்
கினைநன்ஞான மியைந்த தெவ்வாறென
மனதிலெண்ணிப் பொருள் சொல்லும்வல்லமை
எனவிதத்துனக் கெய்திய தெ...றனர். (௬௬௨)

என்னலுந் துகாராம ரினிதருள்
மன்னிவாய்த்துள னென்றனன்மற்றவர்
பொன்னின்மார்பனைப் போற்றுகின்றோரருள்
துன்னில்யாவுந் துலங்குமென்றாரரோ. (௬௬௩)

அன்பர்தம்மரு ளாலிவனெய்திய
இன்பஞானத்தி னைச்சிஞ் சுவடிவாழ்
மன்புவிச்சுரர் கேட்டுமகிழ்ந்தவர்
நன்புரத்துற நாடியொருவனை. (௬௬௪)

போயழைத்து வருகெனப்போக்கினர்
ஆயவன்றுகா ராமரணுகிடம்
மேயநாளவர் சொல்லும்வியன்கதை
தூயசிந்தையிற் கேட்டுடன் றுன்னினன். (௬௬௫)

விழித்தகண்கள் விழித்தபடிக்குறச்
செழித்த வன்பின வசஞ் சிறந்தவண்
பழுத்த வின்னிசை பாடுகின் றோரொடும்
தழைத்தெல் லோரொடுந் தானுமயங்கினன். (௬௬௬)

யாரு மெய்ம்மறந் தெய்துமப் போதவண்
சாருநாதன் றலத்தில் விளக்கிடை
நேருந்திச்சுடர் நேர்ந்து விதானத்திற்
சேரும் யாவுஞ் சிதைத்திட லாயதே. (௬௬௭)

அன்னகாலத் தணிமிகு கோந்தியா
வென்னுமூரிடை யெய்துந் துலுக்கரில்
மன்னுசக்கிலிச் சேக்கு மஹம்மது
முன்னுஞான முதிர்ந்து விளங்குவோர். (௬௬௮)

அனைவரும் வந்துகேட் டங்கிருக்கமா
மனைமுனிந்தவன் மாக்கதை செய்துகொண்
டினைவதின்றி யிருந்தவர் தாமெழீஇப்
புனைவிதானத்தைப் போக்கித் துடைத்தனர். (௬௬௯)

துடைத்து முன்பிடந் துன்னுதல் கண்டவர்
அடைத்த வைம்புலத் தீரிவ் வமையத்திற்
கிடைத்துச் செய்ததெ னென்று கிளத்தலும்
படைத்தசெய்கை பகருகின் றாரரோ. (௬௭௰)

ஓங்குதேகு வெனப்புக லூரிடைத்
தீங்குதீரரி சேவடி வாழ்த்துவோர்
ஆங்கு மால்புகழ் செப்புமப் போதரி
பாங்கு மேற்கட்டி தீப்பற்றிற் றுயதே. (௬௭௧)

அந்தத்தீயை யவித்துத் துடைத்திவண்
வந்தற்றேனென மற்றதுகேட்டவர்
முந்துற்றார்தெரிந் தாற்றில ரோமுகிர்
உந்தத் தீயினை யென்ன வுசாவினர். (௬௭௨)

சில மெய்க்கதை செப்புகின் றோருடன்
மாலிறும மகத்துவங் கேட்டவண்
சால யாவருந் தம்மெய் மறந்தனர்
ஏலும் வெந்தழ லெய்தலறிந்திலர். (சுஎங)

ஏனலு மங்குறை யீசனே யாயினும்
அனலவித்தருள் செய்கில ரோவென
வினவினோரவ் விமலன் மெய்யன்பர் தம்
மன நிலாவி மயங்கின னென்றனர். (சுஎச)

வினவி னோரந்த மெய்யறி வேமெனு
அனைய தேகுக்கோ ராளையனுப்பினர்
துனைவுடன் சென்று சோதித்து வந்தவன்
இனையர்தேற வியம்பினன் மெய்யெனு. (சுஎரு)

தேறி யாவருஞ் சேக்கு மஹம்மது
வீறு ஞானம் வியந்து கொண் டாடியே
மாறின் மற்றவர் தாள்கள் வணங்கியங்
கீறிலின்பத் தழுந்தின ரென்பவே. (சுஎசு)

முன்பு சிஞ்சுவடி நின்றுமுந்தினோன்
அன்பின் மூழ்கி யவசத்த னாயன்பர்
இன்புநீட வியற்றுங் கதைவினாய்த்
துன்பி லாதவண் டுன்னின னாளுமே. (சுஎஎ)

அனை யேவு மவரவன் மீள்கிலா
தேவ னென்றமற் றொருவனை யேவினார்
அவனு முன்புவந் தோனென லாகமற்
றெவனென வுய்த்த யாவரு மெண்ணினார். (சுஎஅ)

எண்ணினோர் குலவேற் றத்தை விட்டுநாம்
அண்ணி யன்பரைக் காண னன்றுமென
உண்ணினைந் தங்கொரு வியெல்லோர்களும்
நண்ணுறுந் துகாராம ரறிந்தனர். (சுஎகூ)

தாமெதிர்ந்து தரிசிக்க வேண்டுமென்
றேமனங்கொ டெதிர்வரக் கண்டனர்
நாம நான்மறை வல்லவர் நண்ணினோர்
நேமமாக வணங்கினர் நின்றனர். (சுஅ௰)

உம்மைக்காண வந்தோமெளி தாகவே
நும்மை யிவ்வழி நோக்கின மென்றவர்
தம்மை நன்கு தழுவி மகிழ்ந்தனர்
செம்மை யன்பரை நோக்கினர் செப்புவார். (சுஅ)

கலிவழங்குறு காலத்திலே நும்மால்
பொலிவதான புதுமை கண்மிக்கன
நலிவதின்றி நடத்துறுநீவிர்யார்
வலியிலேமுன்வழங்குகவென்றனர். (சுஅஉ)

என்னவன்ப ரிவர்க்கொரு சோதனை
முன்னர்க்காட்ட முயன்றன ராகியே
நன்னரூரு வைக்கிறினர் நாடுக
மன்னுநான்மறைவல்லவரோயென்றார். (௯௮௩)

ஈறுமவ்வழி நோக்கக்கிளர்ந்தன
வீறுபஞ்சு நிறம்புறமேதரு
பேறுசாலும்பிரமகுலத்தினர்
ஈறுகாணரு மீசனிவனொறு (௯௮௪)

உன்னியீச னுலககுருவென
மன்னினுனெனமற்றவர் சேவடி
துன்னியாருந் தொழுதனர் தோத்திரம்
பன்னினு ரவர்க்கன்பர் பகருவார். (௯௮௫)

பிருகுவென்னும் பிராமணன் காலுதை
மருவு ஸ்ரீ வச்சலாஞ் சனமற்றிதென்
றருள்சிறந் தெனதையன் வகித்தனன்
தெருள்சிறந்தனிர் செய்யத்தகுவதோ. (௯௮௬)

இழிகுலத்திலுற்றேனை வணங்குதல்
பழி நமக்கெனப் பார்த்திலிரோபுவி
தொழுகுலத்தினி ரொன்றுதுதித்தனர்
வழுவிலன்பர்க்கு மற்றவர் கூறுவார். (௯௮௭)

ஜாதியீன சண்டாளரோ யாயினும்
ஆதிநாம மனாகுவ ராயிலிம்
மேதினிக்குண்மிகச் சிறந்தோர்க்குறு
ஓதிலாக்குலத்தோ ரெனத்தேர்ந்தனம். (௯௮௮)

ராமநாம மியம்பியன்றோ வனத்
தாமதோர் புற்றமர்ந்தவ ளுதியோர்
சேமமெய்திச் சிறந்தனர் ஸ்ரீஹரி
நாமகீர்த்தனத்தா லுயர் நன்மையீர். (௯௮௯)

உம்மையாங்க ளுகந்து தொழுதுயர்
செம்மை பெற்றன மென்றுறச் செப்பிநீர்
எம்மையும்மடி யாரென வெண்ணுமென்
றம்மைநீ ரன்பரைத் தழுவிக்கொண்டார். (௯௯௰)

எங்களூருக்கெழுக வெனக்கொடு
தங்களூ ரிடைச்சார்ந்து தினந்தொறும்
செங்கண்மால்புகழ் செப்பவினவினர்
திங்களொன்று செலச்சேவை செய்தரோ. (௯௯௧)

அன்ன காலத்திலோர் குடியானவன்
மன்னவவ்வூ ரிடைவாசி யென்றேறிமீத்
துன்னுறக்கத்தொடு செலத்தோமிலார்
பன்னுபண்டரி நின்றொரு பத்தர்தாம். (௯௯௨)

மேவுபோதவனைக் கண்டுவீரநீ
தாவு வாசியிற் றூங்கினை சார்கின்றாய்
யாவதுன் செயலென்ன வினவினார்
வாவுவாசியில் வந்தவன் சொல்கின்றான். (௬௰௩)

வளமிகுந் துயர்தேசி நகரில்வாழ்
அளவிலன்பரரி கதைகேட்டனன்
உளநிரம்ப வொருமதி காறும்யான்
இளயிரா முழுதுந் துயில்கெட்டனன். (௬௰௪)

அதனினித்திரை யென்னையமிழ்த்திய
திதனில்வேறிலை யென்று விளம்பினான்
மதனனைத் தருமாலடியார் வினாய்
எதனிலெய்துவதிங்கென வெண்ணுவார். (௬௰௫)

நீரியற்கை நிரம்புறு தேசிவாழ்
சீரியற்கு முனைப்பொருள் செப்பியிவ்
வூரினிற் பெறலோங்குசன் மானம்யான்
சூரியற்கு முன்மின் மினிதுன்னுமோ. (௬௰௬)

ஆதலா லிவ்வநகர் துன்னுத
லோதகாதெனவூர்ப் புறத்தேகினார்
ஈதுதேர்ந்து மெயன்ப ரொழுந்தவர்
போதுநீ ணெறிபோக விரைந்தனர். (௬௰௭)

சென்றுகண்டவரைத் தழுவிச்செவே
நின்றபோதவர் நேசமுடன்றழீஇ
ஒன்றலாகி மெயன்ப ரொளிர்முகம்
நன்றுநோக்கி நவிலுகின்றாரரோ. (௬௰௮)

இடபமா மதியில் லென்மகனுக்குக்
கடிமணஞ் செயக்காதலித்தேனது
முடியநீரருள் முற்றுகென் றோதலும்
திடமெய்யன்பர் நன்றென்றவர் சேரவே. (௬௰௯)

அழைத்துக்கொண்டு வந்தங்கவர் சேர்ந்துறத்
தழைத்தவோரகந் தந்து தினந்தொறும்
செழித்த கீர்த்தனஞ் செய்துறச்செய்தனர்
இழைத்த மற்றவரோர் மதியெய்தவே. (௭௰)

பண்டரிப்பரமன் பதம்பற்றிய
தொண்டரோ யினியென்பதி துன்னுற
மண்டுநல் விடையீகென மாறிலா
ஒன்றபோதன ரூரினர்க்கோதுவார். (௭௰௧)

இந்த நல்லவர்க்கியாவருஞ் சேர்ந்தொரு
வந்த மாய்வரி வைத்து மணப்பொருள்
தந்து செல்ல விடைதருவீரென
அந்த வூரினரவ்வகை செய்தனர். (௭௰௨)

தந்த வொண் பொருடானமை யாதென
வந்த தாசர் மனந்திருந்தாததைச்
சிந்தை கொண்டு மெயன்பர் திருந்தலூர்
அந்தணாளனை நோக்கியறைகுவார். (௭௱௩)

உம்மில் யாவர்வரி வைத்துதவுறுர்
தம்மை யோதுகவென்னலுஞ் சாற்றினார்
செம்மை தீரொரு வன்பட்டு நூல் செய்வோன்
எம்மொடொத்தினி நீகிலனென்னவே. (௭௱௪)

சகலான்வயி னேகிமற்றி யான்சொன்ன
தாகவேண்டு திரின்னு மம்பொன்னென
வேகமோடவர் சென்றுற வேண்டினார்
போகநீர்பொரு ளின்றெனப் பொங்குவான். (௭௱௫)

காமம்வேரறக் கட்டவன் போற்றுகா
ராமநீகுமென நனிராவெலாம்
தாமரற்று கின்றுனது தன்னினீர்
ஆமறப்பய னென்றடைந் தென்றுமே. (௭௱௬)

செய்யுஞ் செய்கைவிடுத் தறத்தேம்பினீர்
எய்தினீரொனையுங் கொடுத்தற்கென
வையக்கேட்டவன்றன் மனையாள்வந்து
வெய்யதன்கண வற்குவிளம்புவாள். (௭௱௭)

பெருமையிற் சிறந்தோர் சொலைப்பேணியுன்
அருகிலெய்திய வந்தணனைக்கடிந்
தொருவுகின்றனை யொள்ளிய தன்றிதால்
வருநமக்கினி மாற்றருந் துன்பங்கள். (௭௱௮)

ஆதலாருனக் காமள வீகெனக்
காதலாள் சொலலுங் கடுகிக்கனன்
றோதுமாதர வொண்பொருளேதுள
பேதையே யெனலும் மந்தப்பெண்கொடி. (௭௱௯)

தாகச்செம்பு தனைக்கொடு தந்தவர்
போகச்செய்தனள் போற்றினள் பொள்ளென
ஆகக்கொண்டவ ரன்பர்முன் வைத்தனர்
காகுத்தற் கன்பர்கண்டு கைக்கொண்டனர். (௭௱௰)

பட்டுநூலிழை பண்புடை யோனிவண்
மட்டிலீகையன் மாழைச்செம் பீந்தனன்
முட்டிலென்ன முன்னூன் மறையோரிது
கிட்டுபித்தனை யென்று கிளத்தினார். (௭௧௧)

நன்றுசோதித்து மென்றெழு நாக்கொணர்
கென்றுமூட்டி யதிலிட்டுக் காய்ச்சினர்
கன்றுசீற்றங் கடிந்த மெய்யன்பினர்
அன்றுபித்தனை யம்பொலனுயதே. (௭௧௨)

கண்டி யாரும் வியந்தனர் கைதொழு
தெண்டிசா முகந்தன் னிலுமிங்கிவர்
கொண்டசீர்க்கு நிகரொவர் கூறிடில்
அண்டமீது மின்றாமெனப் போற்றினார். (௭௧௩)

பொன்னஞ் செம்பினைப் போற்றரிதாசர்கை
மன்னநல்கியிம் மாநகராருமக்
கென்ன நல்கினு மேற்றமெனக்கொடு
துன்னுகென்று சொன்னார்துகாராமரோ. (௭௧௪)

வந்தனஞ் செய்து தந்தை மற்றவர்
சிந்தையிற் களிகொண்டுடன் சென்றனர்
முந்துபண்டரி பின்பம் முதுநகர்
அந்தணாளரி லன்பர்விடைபெற்றார். (௭௧௫)

சென்று லோகமெனும் பதிசேர்ந்தவண்
நன்று கீர்த்தனஞ் செய்துறு நாளிலே
ஒன்றநல்லரு ளுற்றவரோடு பின்
நின்றுபாடு நெறியுறு கின்றவர். (௭௧௬)

வேறு.

ஆகிய கோ டோபாவென் பவர் துகாராமர் தம்மை
வாகுற நோக்கித் தீர்த்த வகைபல வாடுதற்குப்
போகுதறனிலே யாசை பொங்கின தெனக்குநேரே
ஏகுறு வழிக்கு வேண்டுஞ் செல்வுக்கின்றென் செய்கிற்பேன். (௭௧௭)

எனாமிக வேண்டுகின்றோர்க் கிரங்கித் தாமிருக்கும் பீடத்
தினது கீழொரு விராகனிருந்ததை யெடுத்து நல்க
அனகனை நோக்கிப் பூமியதிலுள்ள தீர்த்தமெல்லாம்
இனிதுகொண்டெவ் வாறுடலியற்றுவே னெனவினாவ. (௭௧௮)

அதற்கு மெய்யன்பர் சொல்வா ரளித்தவிவ் விராகன்றன்னை
இதத்துடன் மாற்றி நல்லோர்க் கீந்தினி துண்டு நீயும்
மிதத்தொரு காசுமுன் றனையின்மிக முடிந்துசெல்லும்
பதத்திடை வேண்டுங்கான் மற்றதுதனை யவிழ்த்துப பார்த்தால். (௭௧௯)

யானுதவின விராகனாகவே யிருக்கு நாளும்
ஈனமில்லாது வேண்டுஞ் செலவு செய்துகொண்டு சென்று
ஈங்கினை தீர்த்தமெல்லா நெடிதினி தாடிமீண்டு
நானருள் விராகன் றன்னை நல்குதி யென்கணென்றார். (௭௨௦)

அவர் நலதென்றுள்ளே மிக்காச்சரியங் கொண்டுண்டே
இவர் சொனதறிதல் வேண்டுமென்று தன்மனையிற்சென்று
கவர் விராகனை மாற்றுற்றோர் காசினை முடிந்துகொண்டு
அவர்தமக்கீந்து தாமுஞ் சட்சுவையொடு சாப்பிட்டு. (௭௨௧)

மறுதின முடிந்தகாசை யவிழ்த்தனர் நோக்கமாயம்
தெறு துகாராமர் தந்ததேசிக விராகனாக
உறுவதுகண்டு மிக்க வுவப்புடனன்பர் பால்வந்
திறுதியி லன்பரோ நீரிசைத்தது பழுதின்றென்றார். (௭௨௨)

ஒருவருந் தெரியாவண்ண மொளித்திமற் றிதனையென்று
கருதுறும பங்கமூன்று பாடிக்கை தந்துகாசி
மருவிசுவேசற் கொன்றும்வரு கங்காதேவிக்கொன்றும்
திருமகட் கினியமார்பன் சேவடிக் கொன்றுமாக. (எ௨௩)

நிவேதித்து வருதியென்ன நிமலனை வணங்கித்தீர்த்தம்
தவாதுற்று நானஞ்செய்யச் சார்ந்தனர் முன்னேகாசி
அவாவுற்றுச் சென்றுகங்கை யாடிமற் றதனைநோக்கி
ஒவாவுள நதிகளெல்லா முனக்கெனப் பெருகுகிற்போய். (எ௨௪)

பண்டரிப் பரமனன்பர் பத்திர முனக்குத் தந்தார்
கண்டுகொள் ளெனலுங் கங்கை கங்கணக் கரத்தை நீட்ட
மண்டவி ரொளிக்கை கண்டு மயங்கினர் நிற்கவாங்க
அண்டின யாருங்கண்டாச் சரியங்கொண் டந்தக்கையில். (எ௨௫)

பொன்னெளிர் தாலிகச்சு புடைவையே யாதியான
நன்னர்செய் பொருள்களெல்லா நல்கினர் பூசித்தேத்த
முன்னுறு கோடோபாவு முதுமொழிக் கவிஞர் நாவாற்
பன்னுறு கவியை நல்கப் பற்றுகை பயத்தாழ்ந் தன்றே. (எ௨௬)

கண்டவர் துகாராம்சாமி கவிக்கிந்தக் கங்கையன்பு
கொண்டுகொண்டாளே யென்றுவியந்து கொண்டாடலுற்றூர்
அண்டுகோடோபா காசியமர் விசுவேசன் பாற்சென்
றெண்டிகளன்புசால விறைஞ்சினர் வழுத்திச்சொல்வார். (எ௨எ)

எனதுதேசிகருனக் கோரின் கவிதந்தார் கேளென்
றனகவொண் கவியைப்பாடவ லருகத்தலை யசைத்தான்
மனநெகிழ்ந்து விசுவேசன் மற்றது தெரிந்தியாரும்
கனகவிபாடி னேனைக் கணக்கறப் புகழ்தலானூர். (எ௨அ)

பின்புகோடோபா நான்குதிங்களங் கிருந்துபே
மன்புகழ் கயைக்குவந்து மாலடி வணங்கிப் பாதத்
தின்புடன் கவியைவைத்தங் கெழிற் றுகாராமர்தந்த
பொன்பெறத் தக்கோர்க்கீந்து பிதுர்க்கடன் பொலியச் செய்தார். (எ௨௯)

காசொன்று முடிந்துகொண்டங் கவனெரி இக்கருதுந் தீர்த்தம்
மாசொன்று மின்றியாடி மகிழ்ந்தனர் மீளும்போது
தேசொன்று மன்பர்தந்த சொம்பொனும் விராகன்றன்னை
ஆசொன்று மிலர்பானல் காதகத்து வைத்திட நினைத்து. (எ௩௰)

மனைவந்து புகுந்துபின்புமாண்டுகா ராமர்பாதம்
தனைவந்து வணங்கிநிற்கத் தகுந்துகா ராமசாமி
இனைவந்த வுனக்குமுன்னே யானல்கப் படுவிராகன்
முனைவந்து கொடாததென்னே மொழிகென முறுவல் பூத்தார். (எ௩௧)

கைதப்பிப் போயிற்றந்தக் கனகநல் விராகனென்று
மெய்தப்பி யுரைத்தார்கோ டோபாவது விமலர்கேட்டங்
கைதப் படியேயவென் னுவறைவதொன் றிலராயுற்றூர்
கொய்தப்ப டிறுசொற்கோ டோபாமனைநுழையமீண்டார். (எ௩௨)

வந்தகத்திருந்துமுன் முன்றுனையில் முடிந்துவைத்தி
ருந்தபொற் காசுதன்னை நோக்கலும் வெறுமையாய
மைந்தனைத் தெரிந்துசால மயங்கின ராகியந்தோ
இந்தவென் விதிக்கென் செய்கேனென மனம்வருந்தி னைந்து. (எகூகூ)

யான்சொல்பொ யெனக்குத்தானே பலித்தது மெய்யாயிற்றால்
வான்செறி குருத்துரோகம் வந்ததுமன்றி நாளும்
ஊன்செறி யுடம்புபோற்றுங் குடும்பர க்ஷணையுமோய்ந்த
தேன்செம்பொ னாசையாலன் றேவென வேங்கியுற்றார். (எகூச)

அப்பதிதனிற் றுகாரா மரிகதை நடத்து மோர்நாள்
ஒப்பறு பாண்டுரங்க னுருவத்தின் மனம்பதிந்து
தப்பறுமவ சத்தோடச் சநார்த்தனன் கதைசெய்துற்றார்
மெய்ப்படி கேட்டுற்றோரு மெய்ம்மறந் தோவம் போன்றார். (எகூரு)

அவ்வமயத்திற்றீப மனைத்திற்கு நெய்வாக் குற்றுச்
செவ்வைசெய் வோருந்தேக மறந்தன ரிருக்கத்தீபம்
கவ்வழலவிந்ததாகக் காரிருள் பரவாதன்பர்
மெய்வழங் கொளிவிளக்கிப் பகலென விளங்கிற்றம்மா. (எகூசு)

ஜாமமூன் றளவுமன்பர் தாழ்வுறார் பாண்டுரங்கன்
நாமநன்குரைத்துச் சாமநான்கிலா ரதிசெய்தேத்தித்
தாமவணி ருந்தபோது சரீரத்திற் காந்தியோய்வ
தாமள வாகித்தேகத் தடங்கின தியாருங்கண்டார். (எகூஎ)

இருளுற லாகயாண்டு மெரிவிளக் கனைத்துந் தீர்ந்து
தருநெயுந் திரியுந்தேய்வு தானின்றிப்பாத்திரத்தும்
திருவிளக்கிடத்து முற்றதிறந் தெரிந்ததி சயித்துப்
பொருவருஞ் சோதியன்பர் புரமென மகிழ்வுபூத்தார். (எகூஅ)

வேறு

இவ்வாறு லோகமெனு மாப்பதி யெய்தி யுற்றுத்
தவ்வாத கீர்த்தித் துகாராமமொன் சாமிமீண்டு
மெய்வாழ்வு சேருந் தமதூர்வயின் மேவியாண்டுச்
செவ்வாய் முகுந்தன் றிருக்கோயிலிற் சென்றுநின்று. (எகூகூ)

தொழுதார்வமோடு படிவீழ்ந்தெழீ இத்தோன்ற நோக்கிப்
பழுதேது மில்லாப் பரந்தாம வெம்பாண்டு ரங்கா
முழுதாகெனக் குமகிமைத்தனை மேவமூட்டி
வழுவாதெவர்க் கும்பிரியந் தரவாய்ப் பதாக்கி. (எசம)

சுவையாறுபெய் சோறுதுய்த்துச் சுகந்துன்னலாகி
நவைமேவிய சோம்பொடு நித்திரை நன்குமேவி
இவைமேவலாறு னெழினும சங்கீர்த்தனஞ் செய்
பவையோவலாகு மெனநான்பயம் பற்றிநின்றே. (எசக)

இனைவாகி நிற்குமெளி யேனிலை தன்னையேதும்
நினையா திருக்கை நினக்குத்தகு நீதியாமோ
முனைவாவெவர்க்கு மினியேனு மென்மேன் முயன்று
வினைவேரறுத் துன்பதமேவுற வேண்டுமென்றார். (எசஉ)

அக்காலையில் விட்டல மூர்த்தி நன்காய் நகைத்துத்
தக்காயுனிட்டந் தருவேன்விரைந் தின்னருங்கேல்
இக்காலையென்று தழுவப்பணிந் தேத்தி யன்பர்
புக்கார்மெய்ஞ்ஞான பதிமேவு பொற்கோயிலம்மா. (௭௪௩)

வேறு

கோயிலிற் சபாமண்டபத் திடைநின்று குறித்துத்
தாயிலன்புடை ஞானதேவரைத் தனிதாழ்ந்து
வாயிலின்புறப் பலவகைத் தோத்திரம்வகுத்து
மேயினு மொருபாலுற மீளுறுபோது. (௭௪௪)

வழியிலே யிரையெடுத்துறு பக்ஷியின் வகைகள்
பழியிலன்பரைக் கண்டன பறந்தன பார்த்து
முழுவதும் பிராணிக ளிடத்தபேத முன்றைது
தழுவியானுறப் பேத மிப்பக்ஷிக டமக்கேன். (௭௪௫)

என்னை நோக்கிமற் றிவைகளோடுவதை யெண்ணியக்கால்
நன்னராகில தெனதுள மென்பதை நவிலும்
இன்ன வென்னுளம் பரிசுத்த மெய்தள வீங்கே
துன்னலே நல னென்னப்பாண் டுரங்கனைத் தொழுது. (௭௪௬)

மனனஞ்செய் தசைவற்றுச் சித்திரமெனவாய்ந்து
கனலொர் நான்கு நிற்றலும் விடோபா மனங்கனிந்து
தனதுமெய் யன்பரிடத்திலெவ் வுயிர்களுஞ் சார்ந்து
பினமுறுதுற வருளின னவ்வயிற் பேதம். (௭௪௭)

இன்றி நிர்ப்பயத் தெய்திய பக்ஷிகளெவையும்
துன்றியன்பர் தந்தோளினுந் தலையினுந் துன்னி
நின்றிருத்தலுஞ் சரித்தலு மரமென நிரம்பி
நன்றியன்றன தெரிந்தசை வுற்றனர் நண்ண. (௭௪௮)

பயந்துறந்தன பக்ஷிகள் சரித்தன பார்த்து
நயந்திப் போதுதான் சமபுத்தி யெனக்குநல்கினன்சீர்
வயந்தனைத் தருமாலென மனமிக மகிழ்ந்து
பெயர்ந்து ஞானதே முன்னின்று கீர்த்தனம்பேசி. (௭௪௯)

நண்ணினுரிவர் பின்புறத் துற்றுநா டோறும்
பண்ணினுர்கவி பாடவுந் தாளமும் யாழும்
மண்ணினுர்மிரு தங்கமும் வாசிக்க வுந்தாம்
திண்ணினுர்பதி நான்குபே ரன்பரைத் தேடி. (௭௫௰)

வந்து கண்டனர் நிர்ப்பயத் தொடுபக்ஷி வகைகள்
முந்துகின்றன வியந்தியம் வாசித்து மொழிந்தார்
பிந்துநின்றன்ப ரொடுபல கீர்த்தனம் பின்பு
தந்துமங்களா ரதியறி வீசரைத் தாழ்ந்து. (௭௫௧)

விடைகொண் டீண்டினர் தேகுவென் றுரைபதிமேவ
நடைதொடர்ந்த சங்கதிபலருஞ் சொலநாடி
மிடைவுறும் புள்ளின்மெய் யுடையன்பரை வியந்தங்
கடைய வேண்டினர் சிஞ்சுவடியிலுள வறவோர். (௭௫௨)

ஒருவன் றன்னையே வினரவ னேடிவந் துரைப்பான்
பெருகுமன்பர் கீர்த்தனம்பல பேசிக்கொண்டிருந்தார்.
மருவுங் கீர்த்தனங் கேட்டுமற் றவரொடு மயங்கித்
திருநன் றுமமே செவிமடுத்திருந்தனன் சேர. (௭௫௩)

சொல்லவந்ததை மறந்திராப்பக லங்குத்துன்ன
வல்லவந்தனர் மூன்றுநாள்வரை வரானுடி
யல்லைமுந்துத லென்றுதாமேவர வெண்ணி
யல்லையொன்றினர் மெய்யன்பரறிந் தனரிதனை. (௭௫௪)

எதிர்ந்துநாந் தரிசித்திடல் வேண்டுமென்றெண்ணி
முதிர்ந்தநான் மறையோர் வருவழி யிடைமுந்தப்
பொதிந்தபுள்ளுட லன்பரைப் பொருந்துறநோக்கி
அதிர்ந்துரைத் தனர நிசயமிது வெனவருகே- (௭௫௫)

மேவி மெய்யன்பரவர் தமை வணங்கலும் விரும்பித்
தாவிலந்தணரன்பரை வணங்கினர் தழுவிக்
கூவி மேவினர் தம்மதூர் குறைவற முந்நாள்
நாவில் கீர்த்தனங்கேட்டு பசரித்தனருறைய. (௭௫௬)

வேறு

அந்தணாள் சமகத்து நல்விடை
தந்ததாக மெய்யன்பர் தம்மதூர்
முந்தலாயுதன்றம்பி கோயின் முன்
வந்தமால் பதம் வணங்கிப் போற்றினர். (௭௫௭)

காளமேக கோர்கரிய தீனத
யாள கோகுலர்க் கெளிய விட்டல
நீள நின்மல நிசியிலும்மலர்
தாளமேவு சீதரதயாபர. (௭௫௮)

பாண்டுரங்க செம்பது மலோசன
நூண்டுதேர் வலசு முகசுந்தர
கண்டு வெங்கலியினி துலாவமால்
பூண்டுபாவமும் பொய்யும் பொங்கின. (௭௫௯)

ஆதலாலெனை யெதனுக்காகவோ
பூதலந் தனிற்பொருந்த வித்தனை
நீதமாயது நிரம்பிற் றென்னையுன்
பாததாமரையடையப் பண்ணுவாய். (௭௬௰)

இனிவிரைந் தெருவேத்தி வேண்டிடக்
கனிவுகொண்டுடன் கமலலோசனன்
துனிவிணைந்திடேற் சோமவாரநேர்
பனிதெறுங் கதிர்பரவு காலையே. (௭௬௧)

நீதினைத்த வாநிரம்ப முற்றுவேன்
நானெனச்சொல நளினநங்கைதன்
கோன்முகத்தினை நோக்கிக் கோவலா
யானிமைப்ப தொன்றினிது கேட்டியால். (௭௬௨)

பத்தர்தஞ்சிகா மணிக்குப்பாலையே
ஒத்தவிந்திராயணி யதோரத்தில்
மெய்த்தநின் பதம்போலும் வீடமைத்
தத்தலத்தி லுன்னடியர் யாரையும். (௭௬௩)

ஈட்டியன்ன ரோடிவற்கின் போனகம்
ஊட்டிநின் பதத்துய்த்தல் செய்யவென்
மாட்டியன்றதோர் காதல்வாமனு
வேட்டியென்ன மாதவனும்வேண்டினுன். (௭௬௪)

விசுவகருமனை மேவக்கூவிநீ
கசியுமின்னதிக்கரையிலே திகழ்
தொசிவறும் பரமபதமொத்ததாய்
வசிவுறும்புதுமனை யொன்றுக்கென்றான். (௭௬௫)

அத்தினத்தன தாகவட்டமா
சித்தியாவையுந் தந்துசேர்வுற
முத்திமேவுநன் முதல்வர் முத்தர்மா
வித்தியாதரர் வீணைநாரதர். (௭௬௬)

சனகராதியோர் சுகர்செழுந்தவர்
அனகருத்தவரம்ப ரீடர்மா
கனகனற்சுதர் கருதுமக்குரர்
இனகணக்கிலோரொவரு மெய்தினார். (௭௬௭)

விட்டலன்றுகாராமர் மேவினோர்
கட்டடங் கவுங்கலந்து வைகுற
மட்டலர்ந்த பூமங்கை செங்கையால்
இட்டமாய்ப் பரிமாறற் கெய்தினாள். (௭௬௮)

ஈதுநோக்கி யிந்திரனை யாதியோர்
சாதுவாந் துகாராமர் தந்தவம்
ஏதுநேர் கணக்கில்லை யென்றுவான்
மீதுநின்று பூமழை விழச்செய்தார். (௭௬௯)

பொற்கலத்துறப் போனகம் புசித்
தெற்கலந்த வெல்லோரு மின்புறீஇ
நற்கரங்களாய்ச்சுகந்தநன்மலர்
ஒற்கமெல்லிலையு தவப்பெற்றனர். (௭௭௦)

தாசராந் துகாராம சாமியை
நேசநாமகீர்த்தன நிரம்புறப்
பேசவேசெய்துபெருகுமின்பநீர்
மூசமூழ்கினார்முழுதும்யாவரும். (௭௭௧)

பாற்குணப்பரிசுத்தம்பற்றியே
நோற்கும்பன்னென்றாய்நுவலுறுந்திதி
ஏற்கப்பூரணையெய்துங்காறுமம்
மாற்கத்தெய்தினார்மகிழ்சிறம்பவே (௭௭௨)

ஐந்துநாள்வரையாக யாவரும்
முந்துமுற்சவமுடிவதானபின்
வந்துகூடுமுற்றிதி கொண் மாலையில்
நந்துமேவுசெங்கை யனல்குவான். (௭௭௩)

நன்றநீதுகாராமநாமனே
இன்றிராவருயாமநான்கிலும்
ஒன்றுகீர்த்தனமுறைத்துக்காலையில்
துன்றுவைகுந்தந்தொக்கிறேனென்று. (௭௭௪)

சழுவிறன்றுகாராமசாமியும்
வழுவின்மாலடிவணங்கியின்பமா
நழுவில்வாரியுண்மூழ்கிநண்ணிரா
முழுதும்பாடினார்முகுந்தன்கீர்த்தனம். (௭௭௫)

யாருமோவியச் செய்தக்காலையில்
நேருமங்களாதிநிரம்பினார்
ஈருபண்டியை யுதைத்தவுத்தமன்
சேருமன்பரை நோக்கிச் செப்புவான். (௭௭௬)

உலகத்தைத் திரி யுத்தரித்தனை
பலகற்றென்புகழ் பாடிவாழ்ந்தனை
நலவுற்றெய்தவி மாணநின்று
குலவுற்றெய்துகென் றினிதுகூறினன். (௭௭௭)

வேறு

உடன்விட்டலன் றனிருதாள் வணங்கியுறு மன்பர்தம்மின் மருவும்
மடமிக்க வட்குவழு வாவைகுண்டமரு வற்கியாணிவமயம்
கிடமுற்று மேவுநிற தாலுனக்கு முனநன்கு செப்பு திறநீ
விடுக்கிற்கி லாதெனுடன் மேவுகென்று விரைவுற்றெராரனை விடலும். (௭௭௮)

அவ்வான் விரைந்து மனைமேவியன் பரைவாசகங்க ளறைய
ஒவ்வாமலெந்து மதிமேவுகர்ப்ப முளஞனிதன்றி மனையில்
சவ்வாகநந்து வருமேதியோடு தகவானபிள்ளை களையும்
எவ்வாறிகந்து வருவெளியேலே யிசையாதெனப் புகலவே. (௭௭௯)

அச்செய்கை யன்பருள நன்குதேறவாள் வந்துகூறவினவித்
தற்செய்கைமாறு கிலனின்னமீது தவிராட ஞுதுவிதியை
எச்செய்கைகொண்டு தெறுவிப்பதில்லை யெதனாலு மென்றுதமது
முற்செய்கையென்னை யெனமேவுசீடர் முதலோரை நோக்கிமொழிவார். ( )

இப்போதியான் வைகுந்தத்தை மேவுகிறதாலொருங் குமினிநீர்
தப்பார்குடும்ப முடனேவிலாம ஓளநிச்சலங் கொடுறவே
எப்போதும் விட்டலனையே பஜிப்பதியல் வாயினிக்கலியுக
வெப்போவி நல்ல விபவத்தின் மேவிமீளாத வீடுபெறுவீர். (௭௮௧)

என்றங்கணுள்ள பெரியோரொவர்க்கு மினிதானவந்தனமுடன்
துன்றுஞ்சனங்க ளனைவர்க்கு மங்களமு நன்குசெய்து சொல்லி
நன்றின்பமாக வெல்லோருநல்கு விடைபெற்று நண்ணிவெளியே
ஒன்றாப்புகூற ஹரிநாமமோதி யுறுபோதுகண்ட வெவரும். (௭௮௨)

